24-2

உ

ஓம் :

பரப்பிரஹ்மணே நம:

ஸ்ரீ நிச்சல தாசர் இயற்றிய

# விசார சாகரம்




இது

முதல் ஐந்துதாங்கங்கள் கோவிலூர் மடாலயம்

ஸ்ரீ சிதம்பர ஞாந தேசிக ரவர்கள் மாணுக்கர்

சிதம்பரம் மடாலயம்

ஸ்ரீ பொன்னம்பல ஞாநதேசிகர் அவர்களாலும்,

பின் இரண்டுதரங்கம் கோவிலூர் மடாலயம்

ஸ்ரீ வீரசேகர ஞாநதேசிக ரவர்கள் மாணுக்கரும்,

பரசமய கோளரியாரும், மண்டலேஸ்வரரும்,

உபய பாஷா வேதாந்தப் பிரவர்த்தகாசார்யரும் ஆகிய

திருப்பூவண மடாதிபதி

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்

அவர்களாலும்,

தமிழில் வசன வடிவமாக் மொழிபெயர்க்கப்பட்டு

மங்கலம் - ஷண்முக முதலியாரால்

சென்னை

சச்சிதாநந்த அச்சியந்திர சாலையிலும்,

நோபில் அச்சியந்திர சாலையிலும் அச்சிடப்பட்டது.

1923.

 [ரூபாய் 2.

24-2

# முகவுரை.

---

இப் பூலோகத்தில் மனித ஜன்மம் எடுத்தவர்களால் அடையத்தக்கது அநர்த்த நிவர்த்தி ஆநந்தப் பிராப்தி ரூப மோக்ஷ மொன்றேயாம். அந்த மோக்ஷத்திற்குச் சாதநமாகவுள்ள சாஸ்திரம் வேதாந்தமாம். அவ்வேதாந்த சாஸ்திரம் பல பெரியோராலும் பல பிரகாரமாகச் சம்ஸ்கிருத முதலிய பாஷைகளில் இயற்றப்பட் டிருக்கின்றது.

இவ் விசாரசாகரம் என்னும் கிரந்தம் ஹிந்திபாஷையில் நிச்சலதாசர் என்பவரால் செய்யுள் ரூபமாகவும் அதற்கு உரை ரூபமாகவும் இற்றைக்கு 200 வருடங்கட்கு முன் இயற்றப்பட் டிருக்கின்றது. இதன் அருமை நோக்கிக் கோவிலூர் மடாதிபதி ஸ்ரீ சிதம்பர ஞாந தேசிக ரவர்கள் மாணுக்கர் சிதம்பரம் ஸ்ரீ பொன்னம்பல ஞாந தேசிக ரவர்கள் இற்றைக்கு 50 வருடங்கட்கு முன் முதலிலுள்ள ஐந்து தரங்கங்களையும் வசந வடிவமாகத் தமிழில் மொழி பெயர்த்து விட்டுப் பாக்கியா யுள்ள இரண்டு தரங்கங்களையும் மொழி பெயர்க்காது விதேக முத்தியை யடைந்து விட்டார்கள்.

பின்னர்ச் சில சாதுக்களும் யானும், கோவிலூர் மடாதிபதி ஸ்ரீ வீரசேகர ஞாநதேசிக ரவர்கள் மாணுக்கரும், மண்டலேஸ்வரரும், பரசமய கோளரியாரும், உபய பாஷா வேதாந்தப் பிரவர்த்தகாசாரியாரும் ஆகிய திருப் பூவண மடாதிபதி ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகளை, பாக்கியுள்ள இரண்டு தரங்கத்தினை மொழி பெயர்த்துக் கிரந்தத்தினை முற்றுவிக்க வேண்டு மென்று வேண்டிக்கொள்ள, சுவாமிகள் அங்ஙனமாம் எனச் சம்மதித்து ஆறு ஏழு தரங்கங்களையும் மொழி பெயர்த்து உதவினுர்கள்.

முற்றுவித்த கிரந்தத்தை அச்சிட ஆரம்பித்து இற்றைக்கு எட்டு வருடங்களுக்கு மேலாகியும் இப்பொது தான் அது முடிவு பெற்றது; மத்தியில் பல இடையூறுகளால் அஃது அச்சிட்டு முடிவு பெருது இருந்தது.

பிரஹ்மஸ்ரீ சிவராவ் என்பவர் இந்நூலைப் பீதாம்பர பண்டிதரின் டிப்பணத்தோடு பின்னர் மொழி பெயர்த்து மும்முறை அச்சிட்டிருக்கின்ரு ராயினும் அதில் மொழி பெயர்ப்புப் பிழை பல மலிந்து கிடக்கின்றன. அதனை இந்நூலோடு ஒப்பிட்டுப் பார்ப்பவர்க்கு அவை நன்கு புலனும். இப் புத்தகம் வெளிவரின் யாவருக்கும் மிகுந்த உபகாரமாம் என்று கருதி இதனை அச்சிட்டு வெளியாக்கினேன்.

1—5—1923. ம. ச.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 3 | 25 | யேடனே | யேடணே |
| 13 | 10 | கர்த்துரு | கர்த்ரு |
| 15 | 3 | கொள்ளள் | கொள்ளல் |
| 19 | 9 | ஒருவர்க்கும | ஒருவர்க்கும் |
| 20 | 18 | ஆருடாரா | ஆரூடாரா |
| 24 | 16 | சாமங்ய | சாமாங்ய |
| ,, | 24 | சர்பமு | சர்ப்பமு |
| 30 | 14 | பிராய்ச் | பிராயச் |
| 35 | 16 | பூம | பூமா |
| 36 | 29 | சுகபிராப்தி | சுகப்பிராப்தி |
| 42 | 3 | சுபம் | சுப |
| ,, | 23 | பாபத்ஞுதி | பாபத்திஞு |
| 45 | 8 | சாஸ்சிர | சாஸ்திர |
| ,, | 29 | யெனல் | உண்டெனல் |
| 52 | 19 | பத்யைச் | பத்தியைச் |
| 53 | 14 | தர்மர் | தர்மா |
| 54 | 15 | திருஷ்டி | சிருஷ்டி |
| 56 | 17 | அத்தியாசத்திற் | அத்தியாசத்திற்கு |
| 59 | 8 | காராண | காரண |
| ,, | 29 | யக்ஷருப | யக்ஷரூப |
| 60 | 10 | ஞற் | ஞல் |
| ,, | 14 | ருப | ரூப |
| 65 | 23 | திஞல் | தியிஞல் |
| ,, | 26 | திஞல் | தியிஞல் |
| 67 | 19 | பட்து | பட்டது |
| 70 | 33 | லெளின் | லெணின் |
| 71 | 22 | செப்ய | செய்ய |
| 76 | 17 | மறுத்தின | மறுதிந |
| 77 | 8 | நிரு | நிரூ |
| 79 | 27 | சமானத்தை | பிரஹ்மசமபாவத்தை |
| ,, | 32 | ததல் | த்தல் |
| 82 | 19 | தொழி | தொழிதி |

| | | | |
|---|---|---|---|
| 83 | 14 | மற்ருெரு | மற்ெருரு |
| ,, | 22 | ன்னர்க் கிடைக் | ன்னர் வரக் |
| ,, | 23 | கப்பெறுவாஞயின் | காண்பாஞயின் |
| 84 | 26 | வென்று | வென்பதைத் |
| 85 | 9 | ஆத்மா | ஆத்ம |
| ,, | 34 | த்திலில்லை | த்திலுமில்லை |
| 86 | 32 | க்ஷிணிக | க்ஷணிக |
| 88 | 4 | நேரத். | நேத் |
| ,, | 9 | த்தாற் | த்தால் |
| ,, | 31 | பிரதீதியாக | பிரதீதியுமுளதாதல் |
| 89 | 2 | முள்ள | முள்ளசர்ப்பாதிகளின் |
| ,, | 23 | யாதார் | யதார் |
| 91 | 31 | ஞானமும் | ஞாநங்களும் |
| 92 | 7 | கண்னு | கண்ணு |
| ,, | 8 | அவித்தையா | அவித்தியா |
| ,, | 31 | அவித்தையா. | அவித்தியா |
| 94 | 31 | மில்லை'' | மில்லை |
| 97 | 31 | காசிக்கின்றது | காசிப்பிக்கின்றது |
| 98 | 1 | பிரகாசிக் | பிரகாசிப்பிக் |
| ,, | 2 | மாத்திரத்தின் | மாத்திரம் |
| ,, | 7 | மாய்ச் | மாய |
| 99 | 2 | அதன்ஞா | ஞா |
| 100 | 13 | பிர—லும் | (பிர—தலும்) |
| 101 | 11 | யின் | யில் |
| ,, | 16 | மாம் | முள |
| 106 | 27 | சிக்கின்றது | சிப்பிக்கின்றது |
| 109 | 5 | டத்திற் | டத்தில் |
| ,, | 14 | மேகத்திற் | மேகத்தில் |
| 111 | 29 | ஜவஞ | ஜீவஞ |
| 115 | 26 | யெனப்படும் | உண்டு |
| 117 | 31 | தோடு | தோடும் |
| 121 | 2 | மென்று | மென்றும் |
| 124 | 9 | ணுவிண் | ணுவின் |
| ,, | 23 | யிற்ஸாக்ஷி | யில்ஸாக்ஷி |
| 126 | 18 | ஞ்சிற்று | ஞ்சித்து |
| 131 | 31 | கரண | காரண |
| 133 | 13 | சமாநாகர | சமாநாகார |
| ,, | 32 | நீலக | நீலக்க |

| | | | |
|---|---|---|---|
| 135 | 6 | வாதித் | வாதத் |
| 138 | 4 | சஹித | (சஹித) |
| 139 | 18 | நேததிர | நேத்திர |
| 143 | 31 | துவக்கே | துவக்கி |
| 149 | 5 | மற்ற | மற்றைய |
| 151 | 29 | மற்ற | மற்றைய |
| 155 | 2 | வஸுக்கன் | வஸுக்கள் |
| 156 | 23 | சோன்னபடி | சொன்னபடி |
| 159 | 13 | நகரத்தின் | நரகத்தின் |
| 173 | 22 | சங்கேக்ஷப | சங்க்ஷேப |
| 179 | 26 | ஈஶ்வரவன் | ஈஶ்வரன் |
| 181 | 15 | உற்பத்திக் | உற்பத்தி |
| 202 | 13 | நீர்க்குண | நிர்க்குண |
| 203 | 32 | பிரஹ்ப | பிரஹ்ம |
| 228 | 10 | சந்திப்பு | சந்திப்பும் |
| 229 | 32 | வொருந்துவ | பொருந்துவ |
| 256 | 17 | பகிர்முகப் | பகிர்முக |
| 291 | 12 | கர்மக்தினுல் | கர்மத்தினுல் |
| 294 | 7 | ஞாந | ஞானத் |
| 298 | 6 | நிவிருததி | நிவிருத்தி |



ஆத்மாநு சந்தாநக் கிரமம்.

# நிர்வாண சதகம்.

ஓது மண்ணிலை யுதக மிங்கிலை யொளிருந் தேசிலை காலிலை
பூத விண்ணிலை யிந்தி யமிலை புகன்ற வைகளின் றிரளிலை
யேது மேவிப சார மேவி யிறப்ப தாலிச் சுழுத்தியில்
மீதி யாயுள பூரணா னந்த மேனி யான சிவோகமே. 1

சாதியு மிலை யாச்சிரம மிலை சாதி யாச்சிரம தருமமா
நீதியு மிலை தாரணை யிலை நிதித்தி யாசன யோகமே
யாதியு மிலை கற்பனை யப வாத வாசிரய மாதலாற்
சோதி யாய்நிலை நின்ற பூரண சுத்த ரூப சிவோகமே. 2

தந்தை தாயிலை தேவரு மிலை தங்கு லோகங் களுமிலை
சந்த வேதங்க ளில்லை யாகங்கள் சகல தீர்த்தங் களுமிலை
தொந்த மற்ற சுழுத்தி யிற்றொட ராது நீங்குத லான்மகா
நந்த பூரண சத்திய கேவல ஞான நித்த சிவோகமே. 3

பன்னு சாங்கிய சைவமு மிலை பாஞ்ச ராத்திர முமிலை
யுன்னு சைனமீ மாஞ்சை யுமிலை யுலகுண் மற்ற மதமிலை
துன்னு ஞானிக ளனுப வப்பிர சித்த தூய சொரூபமாய்ப்
பின்ன மேயற நின்ற பூரணப் பிரம மென்ற சிவோகமே. 4

பகரு மேலிலை கீழி லைப்பா வுள்ளி லைப்புற முமிலை
யகல மேநடு வில்கு றுக்கிலை யாகி ழக்கிலை மேற்கிலை
ககன மென்ன நிறைந்த கண்டசிற் ககன கேவல ரூபமாய்ச்
சுகக னச்சுவ கதாதி பேத விகீன சுத்த சிவோகமே. 5

வெள்ளை யுமிலை கருமையு மிலை வேறு பீத சிவப்பிலை
குள்ள முமிலை நெடியது மிலை குறை பருத்தலு மில்லையே
தள்ளி யித்தனை ரூப முந்தவி ராத சோதி சொரூபமா
யுள்ள பூரண ஞான வின்ப வுபாதி கீன சிவோகமே. 6

சாத்தி ரந்தனைப் போதிப் பானிலை சாத்தி ரம்படிப் பானிலை
சாத்தி ரமிலை பாடமு மிலை சாற்று நீயிலை நானிலை
சாத்தி யாதி சகத்தி லைச்சல மற்று மிஞ்சுத லான்மகா
சாத்தி ரப்பொரு ளான பூரண சாந்த போத சிவோகமே. 7

சாக்கிர மிலை சொப்பன மிலை சார் சுழுத்தி யிலையிதிற்
றொக்கு விசுவனிற் றைசத னிலை தங்கு பிராக்ஞனு மில்லைமூன்
றொக்கை யுமிலை யவை யவித்தை விகார மாதலி னவிவை
நீக்கி நின்றிடு துரிய பூரண நித்த போத சிவோகமே. 8

அதிவி யாபக மாதலா லழி வற்ற தத்துவ மென்றதாற் [ராததாற்
சொதசித் தப்பொரு ளான தாற்றனில் வேறொன் றைத்தொட
சுதத மாயுள சிவனெழிந் திஙன் சகமெ னும்பொரு ளேயிலை
யதுவி தென்றுரை செய்வ தற்கரி தாம கண்ட சிவோகமே. 9

இல்லை யேக மெனுஞ்சொ லுமிரண் டென்று சொல்லுவ தெங்ஙனே
யில்லை கேவல மோட கேவல மில்லை சூனியா சூனிய
மெல்லை யற்ற வகண்ட சிற்சுக வேக பூரண வத்துவாற்
றெல்லை வேத முடிப்பொரு டனைத் தோன்ற வெப்படி யோதுவாம்.()

---

## விவேக சட்கம்.

அனித்திய பூதத் தேகநா னன்று இந்தியத் தரங்கநா னன்று, நனித்தவாங் காரப் பிராணவர்க் கங்க ளன்றுநற் புந்தியு மன்று, தொனித்திடுந் தார மனைசெல்வங் களுக்குத் தூரமாஞ் சாட்சிநா னென்றுந், தனித்துநித் தியமாப் பிரத்தியகான் மாவாந் தற்பதப் பொருளதாஞ் சிவோகம். 1

உற்பவன் விருத்த னன்றுநா ஞேர்கா லத்தினு நசிப்பவ னன்று, அற்பமாந் தேக காரிய மான வவையெலா மகங்கரத் தல்லாற், றற்பத வடிவாஞ் சின்மய மான வெனக்கிலை சகள நிட்களமா, யெப்புறத் தேனு மெல்லையற் றிருக்கு மின்பசிற் சொரூபமாஞ் சிவோகம். 2

சத்திய ஞானு னந்தமாம் பிரமத் துதித்திடு மாயையிற் சனித்த, மெத்துமிவ் வுலகஞ் சேதனத் திடையே நசிக்கும தேதென விளம்பிற், றத்துசொப் பனமுஞ் சுழுத்தியி லசத்தாந் தன்மைபோற் சத்திலா திருக்குஞ், சுத்தபூ ரணமாய் நித்திய மாகித் துலங்கிய சொரூபமாஞ் சிவோகம். 3

பழுதை தன்னிடத்திற் பாம்புதோன் றுதல்போற் பரப்பிரமத்திடை யதனிற், கழிதரு மஞ்ஞா னத்தினுற் சீவ னுதித்திடக் கண்டவ னொருவன், பழுதையென் றதனுற் சர்ப்பமோ கழும் போய்ப் பழுதையாய்க் கண்டது போல, அழிவிறே சிகனுர் சீவனீ யன்றென் றறைந்திட வாகினேன் சிவோகம். 4

எமக்குமன் னியமா முலகமொன் றில்லை யெவ்வுல கங்களெம் மிடத்திற், சமித்துவுற் பவமா மாதலான் மாயை வடிவம தேதெனிற் சாற்ற, அமைத்தகண் ணுடி விம்பமா நிழல்போ லடங்கியெம் மிடத்தினில் விளங்குந், தமத்துவ மில்லாச் சச்சிதா னந்த தற்பத விமலமாஞ் சிவோகம். 5

சாக்கிர மதனி லிந்திரி யங்க டமக்குமேற் சாட்சியாஞ் சிவோகம், தேக்குசொப் பனத்தி லுலகரூ பமதாய்ச் செய்ம்மனச் சாட்சியாஞ் சிவோகம், தாக்கிய சித்த நாசமாஞ் சுழுத்தி யவத்தையிற் சாட்சியாஞ் சிவோகம், நீக்கமி றுரியா னந்தமாஞ் சர்வ நிர்மல சாட்சியாஞ் சிவோகம். 6

# ஸ்ரீ நிச்சல தாசர் சரித்திரம்.

பஞ்சாப் தேசத்தில் தணுநா என்னும் பெயரினை யுடைய கிராமத்தில் ஜாட் ஜாதியில் முக்தஜீ என்னும் பெயரையுடையவரும், அவரது பத்நியும் வாழ்ந்துகொண் டிருந்தனர். அவர்கட்கு விக்ரமார்க்க சகம் 1849, சிராவண மாசம், கிருஷ்ணுஷ்டமி அன்று ஓர் ஆண்பிள்ளை பிறந்தது. அந்தப் பிள்ளையின் நிச்சலதாஸ் என்னும் இயற் பெயரே காரணப் பெயராக வழங்கி வரலாயிற்று.

முக்தஜீ என்பவர் தம் பத்நி இறந்தபின், தமது ஊரில் ஜீவநம் நடைபெருமையின், குழந்தையைத் தோளில் வைத்துக்கொண்டு, ஜீவனத்தின் பொருட்டு ஊர்தோறும் சுற்றிக் கொண்டு தாதுபந்திகளின் ஸ்தாநமிருக்கும் டில்லிக்கு வந்து சேர்ந்தனர்; அந்தச் சமயத்தில் தாது பந்தியின் அதிபதியாக அமாதாஸ் என்னும் பெரியா ரிருந்தனர்; அவரது சரணுரவிந்தத்தில் நமஸ்கரித்து தம் பிள்ளையை அங்கு வைத்துச் சாதுவாகத் தீக்ஷை செய்யவேண்டுமென்று பிரார்த்தனை செய்தனர். அந்த முக்தஜீயின் வார்த்தையினைக் கேட்டு அமாதாஸ் என்னும் பெரியார் குழந்தைக்குத் தீக்ஷை செய்து அதனைச் சாதுவாக்கி நிச்சலதாஸ் எனப் பெயரிட்டுச் சிஷ்யக் கூட்டத்தோடு சேர்த்துக் கொண்டனர். நிச்சலதாசர் அங்குப் பதினான்கு வருஷம் வித்தியாப்யாசஞ் செய்துகொண்டும் குரு சேவை செய்துகொண்டு மிருந்தனர்.

நிச்சலதாசருக்கு வித்தையி லிருக்கும் விருப்பத்தினை ஏனையோர் பார்த்து "நிச்சலதாசர் வித்தியாசாகரர் ஆய்விடுவார்" என்று அநுமாநஞ்செய்தனர்; அவ்வாறேஅவர் ஈசுவரகிருபையினுல் ஆகிவிட்டனர். அச்சமயம் நிச்சலதாசரின் ஜநந ஊராகிய தணுநாக் கிராமவாசியாகிய ஸ்வரூபாநந்தர் என்னும் பரமஹம்சரை டில்லியில் நிச்சலதாசர் சந்தித்தனர். இருவருக்கும் பாலும் நீரும் போலச் சிநேகம் உண்டாயது.

இருவரும் "இவ்விடத்தில் வித்தை நிரம்பாது, வித்தையா பீடமான காசி க்ஷேத்திரத்திற்குப் போய் அப்யாசிக்கின் வித்தை

பூர்த்தியா''மெனச் சங்கல்பம் செய்துகொண்டு காசி க்ஷேத்திரம் வந்து சேர்ந்தனர்; வந்ததும், நிச்சல தாசருக்குக் காசியிலிருக்கும் அவித்துவான்களோடுகூடச் சமமாதல் வெளியூரிலிருக்கும் வித்வான்களுக்குக் கடினமாமென்னும் ஞானமுண்டாயிற்று; அதன் பின் அவர் விசுத்தாநந்த ஸ்வாமிகளின் ஆசிரமத்தில் சாஸ்திர சிரவணஞ் செய்யச் சென்றனர்; அங்குள்ள சத்ஜந சங்கத்தால் இது வரையில், நமக்குச் சாஸ்திர சிரவணம் செய்ய அதிகாரம் வரவில்லை, நாம் சாஸ்திரத்தைப் படித்தல் எங்ஙனம் ஆமென விசாரஞ் செய்து, ஆத்மபுராண வியாக்யாநம் செய்த காகாராம பண்டிதரிடம் ஆரம்பத்திலிருந்தே அத்தியயநஞ் செய்துவந்தனர்;

முதலில் காகாராம பண்டிதரின் சிஷ்யரிடம் கோசம்—வியாகரணம் முதலிய கிரந்தங்களைப் படித்தனர். இவரது அசாதாரண தாரண சக்தியைப் பார்த்துக் காகாராம பண்டிதரும் நிச்சலதாசர் மீது கவனம் வைத்தனர்.

அப்பொழுது காகாராம பண்டிதரிடம் அநேகம் சிஷ்யர்களுக்கு ஆறு சாஸ்திரமும் பாடமாக நடந்து கொண்டிருந்தன. அதனைச் சிரவணித்துச் சிரவணித்து நிச்சலதாஸர் சாவசாஸ்திர பாரங்கத ராய்விட்டனர்; தாமோதர சாஸ்திரிகளிடம் நியாய சாஸ்திரம் படித்தனர்.

காசியில் பண்டிதர்கள் கூடிய ஒரு சபையில் சாஸ்திர விஷயமாக ஒருவரும் சமாதாநம் சொல்லல் முடியாதிருக்கும் சமயத்தில் நிச்சல தாசர் சாஸ்திர சம்மதமான சமாதாநத்தினைக் கூறினர்; அது கொண்டு அவர் குருவாகிய காகாராம பண்டிதருக்குக் கீர்த்தி அதிகமான தென்று உலக வழக்கச் சொல் உலவுகின்றது.

காசியில் ராமபக்தராகிய துளசிதாசர் செய்த வேதாந்தப் பிரசங்கத்தில் சிலர்கேட்ட கேள்விகட்கு நிச்சலதாசர் துளசிதாசருடைய ஆஞ்ஞையின் மீது தக்க சமாதாநங் கூறினர்; அது கொண்டு யாவரும் மிகுந்த சந்தோஷமடைந்தனர் என்றும் கூறப்படுகின்றது.

காசியில் வித்தை பூர்த்தியானதும், தேச சஞ்சாரம் செய்ய வேண்டுமென்று நிச்சலதாசர் எண்ணினர்; அவ்வாறே, குரு முதலியோர்களிடம் ஆசீர்வாதம் பெற்றுக்கொண்டு ஜநங்களை அஞ்

ஞாந சமுத்திரத்தினின்றும் தாண்டுவிப்பதற்காகத் தேச சஞ் சாரம் செய்து வந்தனர்.

நிச்சல தாசர் படிப்பதில் எவ்வளவு சாமர்த்திய முடையவரா யிருந்தாரோ அவ்வாறே உபதேசிப்பதிலும் சாமர்த்திய முடையவ ராக இருந்தனர்;

நிச்சலதாசர் ஆறு சாஸ்திரங்களையும் படித்தும், அவர்க்குப் பரம புருஷார்த்தத்தை அடைவிப்பது வேதாந்த சாஸ்திரம் என் னும் கொள்கை இருந்தமையின், அவர் யாவர்க்கும் நாடோறும் காலையில் வேதாந்த சாஸ்திர உபதேசஞ் செய்து வந்தனர் ;

தேசசஞ்சாரம் செய்து கொண்டு டில்லியில் குருவினதுமடத் தில் வந்து சேர்ந்தனர்; ஆண்டுள்ளாருக்கு வேதாந்தத்தினை உப தேசஞ் செய்தனர். அவர்கட்குக் கிரகிக்கும் சக்தியின்மையின், நிச்சலதாசர்க்கு அவ்விஷயத்தில் இச்சை உண்டாக வில்லை.

குருவின் பெயரிலும் குருஸ்தானத்திலும் நிச்சலதாசருக்கு மிகுந்த பிரியமிருந்தது; அதனால்,அவர் தாது பந்திசாதுக்களை உயர் த்தவேண்டுமென்னும் இச்சையினாலும், அவர்களிடத்தில் ஞானம் விருத்தியாக வேண்டுமென்னும் இச்சையினாலும் அநேகம் பிரயத் நம் செய்தனர். சுந்தர விலாசத்தின் கர்த்தாவாகிய சுந்தர தாசரும் நிச்சலதாசரும் தாதுபந்தியின்மகிமையை விருத்தி செய்துவந்தனர்.

நிச்சல தாசரிடம் படிப்பவர்கள் அநேக மார்க்கத்தைச் சார்ந் தவர்களாக இருந்தனர் ; அதனால், அவர்களுள், கலகம் ஏற்பட்டு விட்டது. தாதுபந்தியில் உள்ளசாதுவைப் பார்த்து "உன் குரு கோழிபோன்று இருக்கின்றனர்" என்று ஒரு சிஷ்யர் கூறினர். இவ்வார்த்தை தாதுபந்தியிலுள்ளவர்கட்குச் சகிக்கக் கூடாததாம். உடனே தாதுபந்தியிலுள்ள சாதுபோய் நிச்சலதாசரிடம் அதனைக் கூறினர். அதற்கு நிச்சலதாசர் சிரித்துக் கொண்டு "அவர் கூறி யது சத்யமாம்; கோழி நித்திரையினின்றும் எல்லோரையும் விழிக் கச் செய்வது போல, தாதுவும் அஞ்ஞாநிகளை மஹா நித்திரையி னின்றும் விழிக்கச் செய்கின்றனர். ஆனதால், கோழிபோன்று என்பது பொருத்தமுடையதா" மென்று கூறினர்.

நிச்சலதாசரின் வியுத்பத்தியும் உபதேசஞ் செய்யும் சக்தியும் உலகத்தில் மிகப் பிரசித்தமாக விளங்கின.

பூர்தி ராஜதானியில் உள்ள ராஜஸிம்மராஜா நிச்சலதாசரை அழைத்து வந்து அரண்மனையில் வைத்துக் கொண்டு அவரது உபதேசத்தினைக் கேட்டு வந்தனர்; ராஜகுடும்பத்தார் யாவரும் அவர்க்குச் சிஷ்யராய் விட்டனர்; ராஜாவோ நிச்சலதாசருடைய ஆஞ்ஞையின்படி நடந்தனர். ராஜசிம்மராஜாவும் நிச்சலதாசரிடம் கல்வி கற்று வித்துவான் ஆகி வித்வத்சபையில் சம ஆசனத்தி லிருக்கும் யோக்யதையுடையவ ராகிவிட்டார்.

ராஜசிஹ்ம ராஜாவும் ஏனைய சிஷ்யர்களும் செய்த பிரார்த்தனையின் மீது சர்வோத்கர்ஷ்டமான கிரந்தங்களை லோகோபகாரமாகச் செய்ய நிச்சலதாசர் ஆரம்பித்தனர். அவரது வித்தையின் மகிமையால் அவரது கிரந்தங்கள் உலகத்தில் சிரேஷ்டமாக யாவராலும் கொண்டாடப் படுகின்றன. நிச்சலதாசர் இயற்றிய கிரந்தங்கள் ஹிந்தி பாஷையில் யுக்திப்பிரகாசமும் - விசாரசாகரமும் - விருத்திப் பிரபாகரமும், சம்ஸ்கிருதத்தில் கடவல்லி உபநிஷத்தின் வியாக்யாநமும், வைத்தியத்தில் ஒரு கிரந்தமும் ஆம்.

நிச்சலதாசர் 27-லக்ஷம் சம்ஸ்கிருத சுலோகம் சங்கிரகம் செய்து கிஹடோலி கிராமத்தில் குருத்வாரத்தில் வைத்திருக்கின்றன ரென்று கூறுகின்றனர்.

நிச்சலதாசரிடம் யோகவாசிஷ்டம் முதலிய கிரந்தங்களைச் சிரவணஞ்செய்ய வருபவர் பிரஹ்மாநந்தாமிருதத்தில் மூழ்கித் திளைத்த பின்தான் செல்வது வழக்கம். அவர் பாடம் சொல்லும்போது அதனை மேகம்போல் மாரியாகப் பொழிவார். நிச்சலதாஸது சரீரம் கிருசிரமாயிருக்கும். அவர் பஞ்சகேசம் வைத்திருந்தனர். அவரது முகம் நீண்டு உருண்டிருந்தது. அவர் சரீரத்தில் ஸ்வரத்தின் உபத்திரவம் உண்டு. தோட்டிமுதல் தொண்டமான் வரைக்கும், பண்டிதன் முதல் பாமரன் வரைக்கும் அவர் சமமான பார்வையினையுடையவராயிருந்தனர்; எத்தனை சிஷ்யர்களிருப்பினும் எல்லாக் காரியங்களையும் தம் கையாலே செய்து கொள்ளுவார்; எப்பொழுதும் கிரந்தம் பார்ப்பதன்கண்ணே காலங்கழித்து வந்தனர்.

இவ்வாறு வருங்கால், விக்கிரம சகம் 1919—20—சிராவண கிருஷ்ண 30-மத்யாநத்தின் பின் நிச்சலதாசர் தமது 70-வது வயதில் டில்லியில் குரு ஆசிரமத்தில் விதேக கைவல்யம் அடைந்தனர்.

2-6-1923. கா.—ஸ்வாமிகள்.

ஓம்
ஸ்ரீ கணேசாய நமஃ.
ஸ்ரீ நடேசாய நம:.
ஸ்ரீ குருவே நம:.

# விசாரசாகரம்.



## பாயிரம்.

ஆட கத்தனி யம்பலத்
தேட லர்க்கொடி யின்புறு
நாட கத்திரு நாண்மலர்த்
தாட லைக்கொடு தாழ்குவாம். 1

வன்னி நீழல்வாய் வளர்களி றடிமலர் போற்றி
பன்ன ரும்புகழ் முருகவேள் பதமலர் போற்றி
யென்னை யாண்டருள் கொற்றவா ளிறைகழல் போற்றி
தன்னை நேர்நெல்லை யருட்டிருத் தாண்மலர் போற்றி. 2

பத்து நான்கும் பதைப்பொழிந் தேகிடச்
சுத்த ஞானச் சுகோததி மூழ்கிட
முத்து ராம முனைவன் றிருப்பத
நித்த நாண்மலர் நெஞ்சத் திருத்துவாம். 3

இந்த வாக்கையிற் றியமன மகமித மனைத்து
மெந்த வொண்சுட ராவிருந் திலங்கியே யின்பா
மந்த மெய்யறி வின்பமே யருள்வடி வாகி
வந்த நற்சிதம் பரகுரு மலரடி பணிவாம். 4

தாதுரா மப்பெரியோன் மரபுதித்தோன் றண்ணருளே வடிவா யுள்ளோன், மூதுணர்வோர் கொண்டாடு நிச்சலநா மம்புனைந்த முனிவன் சொன்ன, தீதிலா விசாரசா கரநூலைத் தமிழ்மொழியாற் செப்பு தற்குப், போதுமறி வுடையனலே னென்னினும்யான் புகுந்ததிறை யருளா னன்றே. 5

**பாயிரம் முற்றும்.**



ஓம்
தத்சத்
பரப்ரஹ்மணே நமஃ.

# விசாரசாகரம்.

## முதற் றரங்கம்.

## அநுபந்த சாமாந்ய நிரூபணம்.



### 1. * வஸ்து நிர்த்தேசரூப மங்கலம்.

நித்த மாய்விபு வாகி நிகழ்வதாய்
மத்த நாம வுருமன் னிடமதாய்ச்
சித்த நண்ணலற் றேசெறி யும்பரி
சுத்த வெல்லையி லாச்சுக மேயகம். 1

இந்து ஞாயிறு மகபதி யீசன் விண்டொடு நான்முக
னந்த கன்றன பதியருட் சத்தி யைந்து கரத்தினன்
சந்த வானவர் நாகர்கந் தருவர் தானவர் தரையுளோர்
சிந்து ரூபவ பாரமாய்த் திகழு மென்னுடை யலைகளே. 2

முற்றறி பவனை யநாதியை யாதோ ரருளுடை முதல்வனை
முனிவர், நற்றவத் தியானத் தாற்றரித் திடுவர் நளினமென்
மலரகத் திடையே, மற்றவன் றன்னைப் பிரிவிலா தென்று
மருவிடு முபாதியா லென்பா, லுற்றனன் பான மித்தையா
யோரி லுரைப்பரு மருத்தல நீர்போல். 3

நாரி னரவென யாதினை
யோர்கி லாமையி னுளசகந்
தேரி னன்னதிற் சிதைதரூஉ
மாரு மவ்வடி வேயகம். 4

எவ்வி ராமனை யேடனை யின்றியே
செவ்வி ஞானவி ருப்புடன் சேவிப்பர்
அவ்வி ராம னெனதுரு வாதலின்
கவ்வி யாரைப் பணிவன் கருத்திலே. 5

---

* 1 சுகமாயும், நித்தியமாயும், பிரகாசமாயும், விபுவாயும், நாமரூபங்களுக் காதாரமாயும், புத்தி யறியாததாயும், புத்தி யறிவதாயும், சுத்தமாயும், அபாரமாயு மிருப்பது எதுவோ, அது நான்.

## 2. கிரந்த மகிமை.

வேதசித்தாந்தமாகிய சலத்தினுற் சம்பூர்ணமாய் அதி கம்பீரமாயுள்ள விசாரசாகர மென்னுங் கிரந்தமானது என்னுற் சொல்லப்படுகின்றது. இதனைத் தீரர் (அதிகாரிகள்) நன்குணர்ந் தால் ஆநந்தமாவர். சூத்திர, பாஷ்ய, வார்த்திக முதலிய சம்ஸ் கிருத கிரந்தங்க ளநேக மிருக்கப் பாஷையிற் கிரந்த மியற்றுவதா லுளதாகும் பலம் என்னையோ வெனின், மந்த புத்தியுடைய புருடர்க்குச் சம்ஸ்கிருத கிரந்தங்களாற் போதம் உண்டாகாது; மற்றப் பாஷாக் கிரந்தங்களால் மந்த புத்தியுடைய புருடர்க்குப் போதம் உண்டாகாநிற்கும். இதனுல் பாஷாக் கிரந்தத்தின தாரம்பம் நிஷ்பல மன்று; பின்னென்னெனின், சம்ஸ்கிருத கிரந்த விசாரத்தின்கண் புத்தியின் வலியிலராவார் யாவர் அவர்கள் நிமித்தம் பாஷாக் கிரந்தத்தின தாரம்பம் சபலமாம்.

3. ஆயினும், பாஷாக் கிரந்தங்கள் இன்ருே வெனின், அநேகம் உள. அங்ஙனம் உளவேனும் விசாரசாகரமன்றி ஏனைய பாஷாக் கிரந்தங்களால் ஆத்மவஸ்துவின்கண் சந்தேகம் நீங்காது. அஃதேனெனின்,

அநேகர் சிரவணஞ் செய்து பாஷாக் கிரந்தங்க ளியற்றி னர். அவற்றின் பிரக்கிரியை (பிரகரணுர்த்தம்) சில அம்சங்களில் சாஸ்திராநுசாரமாம்; மற்றும் எவ்வம்சத்தில் சிரவணஞ் செய் தும் அர்த்தம் யதார்த்தமாகக் கிரகணஞ் செய்யப்படவில்லையோ அவ்வம்சத்திற் சாஸ்திரங்களோடு விருத்தமாம். ஆதலால் கேள்வியுடையோரியற்றிய கிரந்தங்களினுற் சந்தேக ரகித போத முண்டாகாது.

---

2. அபாரமான எனது சொரூப சமுத்திரத்தில் விஷ்ணு, மகேசன், பிரஹ்மா, சூரியன், சந்திரன், வருணன், இயமன், சக்தி, தனேசன், கணே சன் என்பவர்கள் அலைகளாயிருக்கின்ருர்கள்.

3. எந்தக் கிருபாநிதியாகிய சர்வஞ்ஞன முநிகள் இருதயத்திற் றரித்துத் தியானஞ் செய்கின்ருர்களோ, அவர் என்னிடத்து உபாதி யினுல் மித்தையாக விளங்குகின்ருர்.

4. எதனை யறியாமையால் ரஜ்ஜுவிற் சர்ப்பம்போல ஜகத்துத் தோன்றுகின்றதோ, எதனை யறிவதனுல் அந்தச் சர்ப்பம்போல ஜகத்து நசிக்கின்றதோ அந்த நான், தானே தான்.

5. புண்ணியவான்கள் எந்த ராமனை ஞாநேச்சையால் நிஷ்காம மாகப் பஜிக்கின்ருர்களோ, அந்த ராமன் எனது ஆத்மாவா யிருத்தலின், யான் யாரை நமஸ்கரிப்பேன் ?

மற்றுஞ் சிலர் கிஞ்சித் சாஸ்திரம் படித்துப் பாஷாக் * கிரந்தங்க ளியற்றினர். அவற்றானுஞ் சந்தேகரகித போத முண்டாகாது. அஃதேனெனின், அவற்றில் வேதாந்தப் பிரக்கிரியை சம்பூர்ணமாக வின்மையாலாம். இத்தகைய கிரந்தங்கள், இந்துஸ்தானி பாஷாரூபமாயுள்ள பஞ்சபாஷை, ஆத்மபோத முதலியனவாம்.

இவ்விசாரசாகரக் கிரந்தத்தில் சம்பூர்ணப்பிரகரணார்த்தங்களுள; அவை வேதாந்தாநுசாரமாயே யுள்ளன; ஓரிடத்தும் விருத்தமன்றாம் ; மற்றும் ஆத்மஞானத்தில் உபயோகமுடையனவாய் எப்பதார்த்தங்களுளவோ, அவற்றினிரூபணம் இதன்கண் விரிவாய்ச் செய்யப்பட்டுள்ளன. இதனால் ஏனைய பாஷாக் கிரந்தங்களோடு இந்தக் கிரந்தஞ் சமான மன்றாம்; மற்றோ, சர்வ பாஷாக்கிரந்தங்களினும் இந்தக் கிரந்தம் உத்தமமாம்.

4. அதிகாரி முதலிய கிரந்தத்தின் அநுபந்தத்தை அறிந்தாலன்றி விவேகமுடைய புருடர்க்குக் கிரந்தத்திற் பிரவிருத்தி யுண்டாகாது; ஆதலின், எவ் வநுபந்தத்தை யறிந்து கிரந்தத்தைக் கேட்கப் புகுவரோ, அவ்வநுபந்தத்தை யினிக்கூறுதும். அநுபந்தமாவது அதிகாரி, சம்பந்தம், விடயம், பிரயோசனம் என நான்காம்.

5. அதிகாரி வர்ணநம்.

அந்தக்கரணத்தில் மலம், விட்சேபம், ஆவரணம் என்று மூன்று தோடங்களுள. அவற்றுள், நிஷ்காம கர்மத்தால் அந்தக்கரணத்தின் மல தோடம் நீங்கும்; உபாசனையால் விட்சேப தோடம் நீங்கும்; ஞாநத்தால் ஆவரண தோடம் நீங்கும். நிஷ்காம கர்ம உபாசனைகளைச் செய்தமையால் மல விட்சேப தோடங்க ணீங்கிச் சொரூபத்தின் ஆவரண மாத்திரம் எவனுடைய சித்தத்தின்க ணிருக்கின்றதோ மற்றும் எவன் நான்கு சாதனங்களையும் உடையவனோ அவனே அதிகாரியாவன்.

6. நான்கு சாதனங்களின் நாம வர்ணநம்.

நான்கு சாதனங்களாவன:—விவேகம், விராகம், சமாதி சட்சம்பத்தி, முமுட்சுத்துவம் என்பனவாம்.

---

* கிரந்தம் பிரபந்தம் சாஸ்திரம் என்பன பரியாயச் சொற்களாம்.

### 7. [1.] விவேக லக்ஷணம்.

இவற்றுள் விவேகமாவது, ஆத்மா அவிநாசியும் அசலமுமாம் (அவிநாசி - நாச ரகிதம்; அசலம் - கிரியா ரகிதம்); சகத்து ஆத்மாவினும் விபரீத சுபாவ முடையது, அது விநாசி சலமா மென் றிங்காயாநின்ற மநமறி ஞாநமாமென்பர். இந்த விவேகமே சர்வ சாதநங்களுக்கும் மூலமாம். எதனாலெனின், முன்னர் விவேக முளதாயின், வைராக்கிய முதலிய உத்தர சாதநங்க ளுளவாம். விவேக முளதாக வில்லையேல், உத்தர சாதநங்க ளுளவாகா. இதனால் வைராக்கியம், சமாதிசட் சம்பத்தி, முமுட்சுத்துவம் என்னு மிவற்றிற்கு விவேகம் ஏதுவாம்.

### 8. [2] வைராக்கிய லக்ஷணம்.

வைராக்கியமாவது, பிரஹ்மலோக பரிபந்தம் எந்தப் போகங்கள் விரும்பப்படுகின்றனவோ, அவை யனைத்தையுந் தியாகம் பண்ணுவ தென்று வேதார்த்தத்தை யறிந்த முநிகள் கூறுகின்றனர்.

### 9. [3] சமாதி ஆறன் நாமம்.

சமாதிசட்சம்பத்தியாவது, **சமம்**, **தமம்**, **சிரத்தை**, **சமாதாநம்**, **உபராமம்**, **திதிட்சை** என அறுவகைத்து.

### 10. (i-ii) சம தம லக்ஷணம்.

இவற்றுள், **சம**மாவது விஷயங்களினின்று மநத்தை அடக்குவதா மென்று சுதீரர் கூறுகின்றனர். **தம**மாவது, இந்திரியங்களை அடக்குவதா மென்று வித்வத் சிரேஷ்டர் கூறுகின்றனர்.

### 11. (iii-iv) சிரத்தா சமாதாந லக்ஷணம்.

**சிரத்தை**யாவது, வேதவாக்கிய குருவாக்கியங்கள் சத்திய மென்னும் விசுவாசமாம். **சமாதாந**மாவது, மநத்தின் விட்சேபத்தை நாசம் பண்ணுவதா மென்று கூறுகின்றனர்.

### 12. (v) உபராம லக்ஷணம்.

**உபராம**மாவது, சாதநசகித கர்மங்களனைத்தையுந் தியாகஞ் செய்வதும், விஷயங்களை விஷ சமானமாகக் கண்டு, அவற்றினின்று ஓடுவதும், ஸ்திரீகளைக்காணிற் சித்தத்தின்கண் அருவருப்படைவதுமா மென்பர்.

## 13. (vi) திதிக்ஷா லக்ஷணம்.

திதிட்சையாவது, வெயில் சீதம் பசி தாக முதலியவற்றைச் சுபாவமாகச் சகித்துக்கொள்வதா மென்று பண்டிதராகிய முநிசிரேஷ்டர்கள் கூறுகின்றனர். இவ்வாறான சமமாதி ஆறனது சம்பத்தி என்னும் பிராப்தி யாது, அஃது ஒரே சாதநமா மென்று பெரியோர் ஒப்பினமையால், சாதநம் ஒன்பதல்ல, நான்கே யென்று கொள்க.

## 14. [4] முமுக்ஷுத்வ லக்ஷணம்.

பிரஹ்மத்தின் பிராப்தியும் அநர்த்தத்தின் நிவிருத்தியும் மோட்சத்தின் சொரூபமாம்; அதன் இச்சை முமுட்சுத்துவமா மென்று முநிசிரேஷ்டர்கள் கூறுவர்.

விவேகாதி நான்கும், சிரவண மநந நிதித்தியாசந மூன்றும், தத்பதார்த்த துவம்பதார்த்தத்தின் சோதந மொன்றுமாய வெட்டும் ஞாநசாதநமாம்.

## 15. அந்தரங்க பகிரங்க சாதநம்.

முற்கூறிய விவேகாதி எட்டும் அந்தரங்க சாதநங்களாம்; யக்ஞாதி கர்மங்கள் பகிரங்க சாதநங்களாம்.

அவற்றுள், பகிரங்கசாதநத்தை முமுட்சு தியாகஞ் செய்க; அந்தரங்க சாதநத்தைத் தரிக்க. சிரவணத்தில் அல்லது ஞாநத்தில் யாது பிரத்தியட்ச பலமாயுள்ளது அஃது அந்தரங்கசாதநமாம். விவேகாதி நான்கும் சிரவணத்தில் உபயோகமாயுள்ளன. அஃதெதனாலெனின், விவேகாதி யின்றிப் பகிர்முகனுக்குச் சிரவணம் சித்திப்ப தில்லை. அங்ஙனமே சிரவண மநந நிதித்தியாசநங்கள் ஞாநத்தில் உபயோகமாயுள்ளன. சிரவணாதி யின்றி ஞாநமுண்டாவ தின்று. அங்ஙனமே தத்பதார்த்த துவம்பதார்த்தங்களின் ஞாந மின்றியும் அபேத ஞாநம் உண்டாவ தில்லை. இவ்வாறு விவேகாதி நான்கு சாதநங்களுஞ் சிரவணத்தின்கண் உபயோகமாயுள்ளன. மற்றுஞ் சிரவணாதிக ணான்கு சாதநங்களும் ஞாநத்தின்க ணுபயோகமா யுள்ளன. இதனால் இவ்வெட்டும் அந்தரங்க சாதநமாம்.

16. எது ஞானத்தில் அல்லது சிரவணத்தில் பிரத்தியட்ச பலமாயில்லாமல் அந்தக்கரணத்தினது சுத்திமாத்திரத்தில் பலமாயுள்ளது, அது ஞானத்திற்குப் பகிரங்கசாதநமென்று சொல்லப்படும். இத்தகையன யக்ஞாதி கர்மங்களாம். யக்ஞாதி கர்மங்கள் சம்சாரத்திற்குச் சாதநங்களாகையால் அவற்ருல், அந்தக்கரண சுத்தியும் உண்டெனல் கூடாது. அங்ஙன மாயினும், அவை சகாம புருஷனுக்குச் சம்சாரத்திற்கு ஏதுவாம்; நிஷ்காமபுருஷனுக்கு அந்தக்கரண சுத்திக்கு ஏதுவாம். இவ்வாற்ருல் நிஷ்காமபுருஷனுக்கு அந்தக்கரணசுத்தி வாயிலாக (யக்ஞாதிகள்) ஞானத்திற்கு ஏதுவாம். இதனுல் இவை பகிரங்க சாதநமென்றும், விவேகாதிக ளந்தரங்க சாதநமென்றுங் கூறப்பட்டன.

தூரமாயுள்ளது பகிரங்கமாம்; சமீபமாயுள்ளது அந்தரங்கமாம். யக்ஞாதி கர்மங்களேயும், அவற்றின் சாதநமாகிய ஸ்திரீ புத்திர தனுதிகளேயும் தியாகஞ் செய்பவன் ஞானுதிகாரியாவன். ஞானுதிகாரியின்கண் யக்ஞாதிகளின் சம்பவ மில்லே; இதனுலவை தூரமாம்.

17. விவேகாதிகட்கு அந்தரங்க சாதநத்தன்மை.

விவேகாதிகள் ஞானுதிகாரியின்கண் சம்பவித்துள்ளன; இதனுலவை சமீபமாம். இவற்றினும் பேதமுள. அவை யெங்ஙனம்? விவேக முதலியவற்றி னுபயோகஞ் சிரவணத்தின்கணுள்ளது; மற்றுஞ் சிரவணுதிகளி னுபயோகம் ஞானத்தின்கணுள்ளது; ஆதலால் விவேகாதிகளின் அபேட்சையினுற் சிரவணுதிகளந்தரங்கமாம்; அவற்றின் அபேட்சையினுல் விவேகாதிகள் பகிரங்கமாம். ஆயினும், விவேகாதிகளேயும் ஞானத்திற் கந்தரங்க சாதந மென்றே சர்வ சாஸ்திரங்களிலுங் கூறியுளர்; பகிரங்கமாயுரைத்திலர். அங்ஙனமாயினும், விவேகாதிகளின் பிரத்தியட்ச பலம் ஞானசாதநமாகிய சிரவணத்தின்க ணுள்ளது. மற்றுஞ் சிரவணுதிகள் போல விவேகாதிகளும் ஜிஞ்ஞாசுவாற் கொள்ளற்பாலனவாம்; யஞ்ஞாதிகள் போலத் தள்ளற்பாலன வன்ரும். ஆகலான் அந்தரங்க மென்ருர். மற்றும் யக்ஞாதிகளே அபேட்சித்தும் அந்தரங்கமாம். இதனுனும் (விவேகாதிகளே) அந்தரங்க சாதநங்களிற் சேர்த்துக் கூறினுர்.

### 18. ஞாநத்தின் முக்கிய அந்தரங்க சாதந (மகாவாக்கிய) சிரவண மநந நிதித்தியாசநங்களின் லக்ஷணம்.

விசாரத்தினுற் பார்க்குங்கால் ஞாநத்திற்கு முக்கிய அந்தரங்க சாதநம் தத்வமசியாதி மகாவாக்கியங்களாம்; சிரவணுதிகளுமல்ல. அஃதெதனு லெனின், யுக்தியினுல் வேதாந்த வாக்கியங்களினது தாற்பரிய நிச்சயம் சிரவண மெனப்படும்; ஜீவப்பிரஹ்மங்களினது அபேதத்தின் சாதகமும் பேதத்தின் பாதகமுமாகிய யுக்திகளால் அத்விதீயப் பிரஹ்மத்தைச் சிந்தித்தல் மநந மெனப்படும்; அநாத்மாகார விருத்தியின் * வியவதாந ரகித பிரஹ்மாகார விருத்தியின் ஸ்திதி நிதித்தியாசந மெனப்படும். நிதித்தியாசநத்தின் பரிபாகாவஸ்தையினையே சமாதி என்பர். இதனுல் சமாதியும் நிதித்தியாசநத்தில் அந்தர்ப்பாவமாம்; வேறு சாதந மன்றும். சிரவண மநந நிதித்தியாசந மென்னும் இவை ஞாநத்திற்குச் சாட்சாத் சாதந மல்ல; மற்றென்னவெனின் புத்தியின் தோடமாகிய அசம்பாவனை விபரீத பாவனைகளி னுச ஏதுவாம். சம்சயத்தை அசம்பாவனை என்பர்; விபர்யயத்தை விபரீதபாவனை என்பர்.

### 19. சிரவணுதிகட்குப் பரம்பரையால் ஞாநத்திற்கு ஏதுவாந்தன்மை.

சிரவணத்தால் பிரமாண சந்தேகம் நிவிருத்தியாம். மநநத்தால் பிரமேய சந்தேகம் நிவிருத்தியாம். வேதாந்த வாக்கியங்கள் அத்விதீயப் பிரஹ்மத்தைப் பிரதிபாதிக்கின்றனவா? அல்லது அந்நிய வர்த்தத்தைப் பிரதிபாதிக்கின்றனவா? என் றிங்ஙனம் பிரமாணத்தின்கட் சந்தேக முண்டாகுமாயின், அது சிரவணத்தால் நிவிருத்தியாம். மற்றும், ஜீவப் பிரஹ்மங்களின் அபேதம் சத்தியமா? அல்லது பேதஞ் சத்தியமா? என்றிங்ஙனம் பிரமேயத்தின்கட் சந்தேகம் வரின் அது மநநத்தால் நிவர்த்தியாம். தேகாதிகளுஞ் சத்தியம்; ஜீவப்பிரஹ்மங்களின் பேதமும் சத்திய மென்னும் ஞாநத்தினை விபரீதபாவனை என்பர்; அதனையே விபர்யயமென்பர். அதனை நிதித்தியாசநம் நிவர்த்திக்கும். இவ்வாற்றுல் சிரவணுதிகள் மூன்றும் அசம்பாவனை விபரீதபாவனைகளின் நாச ஏதுவாம். அசம்பாவனை விபரீதபாவனைகள் ஞாநத்தின்

* வியவதாநம் - மறைப்பு.

பிரதிபந்த ஏதுக்களாம். ஆதலால் ஞாநத்திற்குப் பிரதிபந்த ஏதுக்கள் யாவை, அவற்றை நசிப்பிக்கும் வாயிலாய்ச் சிரவணுதிகள் ஞாநத்திற்கு ஏதுவெனப்படும்; நேரே ஏதுவன்றும்.

### 20. அவாந்தர வாக்கியம் பரோக்ஷ ஞாநத்திற்கும், மகாவாக்கியம் அபரோக்ஷ ஞாநத்திற்கும் ஏதுவாந்தன்மை.

ஞாநத்திற்குச் சாட்சாத் சாதநம் சுரோத்திர சம்பந்தி வேதாந்த வாக்கியமாம். அவ்வேதாந்த வாக்கியமும் அவாந்தர வாக்கியம், மகாவாக்கியம் என இருவகைத்து. பரமாத்மாவின் அல்லது ஜீவனின் சொரூபபோதகமாகிய வாக்கியம் அவாந்தர வாக்கியம் எனப்படும்; ஜீவ பரமாத்மாக்களின் ஏகத்துவ போதகமாகிய வாக்கியம் மகாவாக்கிய மெனப்படும். அவாந்தர வாக்கியத்தால் பரோட்ச ஞாந முளதாம் ; மகாவாக்கியத்தால் அபரோட்ச ஞாந முளதாம். பிரஹ்ம முண்டென்னும் ஞாநம் பரோட்சஞாநமாம் ; பிரஹ்மமாக நான் உளன் என்னும் ஞாநம் அபரோட்சஞாநமாம். நீ பிரஹ்மமென் றுசாரிய ருச்சரித்த வாக்யங் கேட்பவனுடைய சுரோத்திரத்தோடு சம்பந்தமாகவே நான் பிரஹ்ம மாகின்றேனென் றபரோட்ச ஞாநம் கேட்பவனுக்குண்டாகாநிற்கும். கேட்பவனது சுரோத்திரத்தோடு வாக்கியத்திற்குச் சம்பந்தமாகி னல்லாமல் ஞாந முண்டாகாது. இதனுல் சுரோத்திர சம்பந்தி வாக்கியமே ஞாநத்திற் கேதுவாம். சுரோத்திர சம்பந்தி அவாந்தர வாக்கியம் பரோட்ச ஞாநத்திற் கேதுவாம்; சுரோத்திர சம்பந்தி மகாவாக்கியம் அபரோட்ச ஞாநத்திற் கேதுவாம். . மகாவாக்கியத்தா லனைவர்க்கும் அபரோட்ச ஞாநமே உண்டாகும் ; பரோட்சஞாந முண்டாகாது.

### 21. வேதாந்தத்தின் ஏகதேசியினது மதம்.

(கேவல வாக்கியத்தால் பரோக்ஷஞாந முண்டாம் எனல்.)

வேறே ஏகதேசியின் மதமிதுவாம்:—சிரவண மநந நிதித்தியாசநசகித வாக்கியத்தால் அபரோட்ச ஞாந முண்டாகும் ; கேவல வாக்கியத்தால் பரோட்ச ஞாந முண்டாம் ; அபரோட்ச (ஞாந) முண்டாகாது. கேவல வாக்கியத்தானேயே அபரோட்ச ஞாந முண்டாகுமாயின், சிரவண மநந நிதித்தியாசநங்கள் வியர்த்தமாம். சித்தாந்தமதத்தில் கேவல வாக்கியத்தால் அபரோட்ச ஞாந முளதாம்; சிரவணுதிகளால்

அசம்பாவனை விபரீதபாவனைகள் நாசமாம். இதனல் சிரவணுதிகள் வியர்த்த மன்றும்; அங்ஙனமாயினும், எந்த வஸ்துவினது அபரோட்ச ஞாந முளதாமோ, அதன்கண் அசம்பாவனை விபரீதபாவனை யொருவர்க்கு முளவாகா. இதனல் கேவல வாக்கியத்தால் அபரோட்ச ஞாந முண்டா மென்னும் வாதியின் சித்தாந்தத்தில் தத்துவமசியாதி வாக்கியங்களாற் பிரஹ்மத்தின் அபரோட்ச ஞாந முண்டானதன் பின்னர், அசம்பாவனை விபரீதபாவனை சம்பவியாமையாற் சிரவணுதி சாதநம் வியர்த்தமாகாநிற்கும். கேவல வாக்கியத்தால் பரோட்ச ஞாந முளதாம். சிரவண மநந நிதித்தியாசநஞ் செய்வதால் அபரோட்ச ஞாந முளதாமெனு மதத்திற் சிரவணுதிகள் வியர்த்தமாகா. இஃது அநேகக் கிரந்தக்காரருடைய மதம். அங்ஙனமாயினும், இம்மதம் நன்றன்று. எதனு லெனின்:—

22. கூறிய ஏகதேசியினது மதம் நலமுடையதாகாதேனல்..

சப்தத்தின் சுபாவ மிதுவாம். எந்த வஸ்து வியவகிதமாயிருக்கின்றதோ, சப்தத்தாலதனது பரோட்ச ஞாநமே யுளதாகும்; ஒருவாற்றானும் சப்தத்தால் வியவகித வஸ்துவினது அபரோட்ச ஞாந முளதாகாது. அஃதெங்ஙனம்?வியவகிதமாகிய சுவர்க்க, இந்திராதி தேவதைகளினது ஞாநம் சாஸ்திரரூப சப்தத்தாற் பரோட்சமாகவே யுளதாகாநிற்கின்றது. எந்த வஸ்து அவ்வியவகிதமாமோ அதனது பரோட்ச ஞாநம் அபரோட்ச ஞாந மிரண்டும் சப்தத்தால் உளவாம்.

யாண்டு அவ்வியவகித வஸ்துவினைச் சப்தமானது அஸ்திரூபத்தாற் போதிக்கின்றதோ, ஆண்டு அவ்வியவகிதத்திற்கும் பரோட்ச ஞாந முண்டாகின்றது. அஃதெங்ஙனம் ? தசம புருஷனுள னென் றிவ்வாறு அஸ்திரூபத்தாற் போதித்த சப்தத்தால் அவ்வியவகித எத்தசம னுளனே, அவனது பரோட்ச ஞாநமே உளதாகின்றது. மற்றும்,

யாண்டு அவ்வியவகித வஸ்துவினை இஃதிருக்கின்றதென் றிவ்வாறு சப்தம் போதிக்கின்றதோ ஆண்டு, சப்தத்தால் அவ்வியவகிதத்தினது அபரோட்ச ஞாநமே யுளதாகின்றது ; பரோட்ச ஞாந முண்டாகின்ற தில்லை. அஃதெங்ஙனம்? தசமன் நீ என் றிவ்வாறு சப்தமானது போதித்த எந்தத் தசம னுளனே, அவனது அபரோட்ச ஞாநமே யுண்டாகின்றது.

அங்ஙனமே பிரஹ்மம் சர்வத்திற்கும் ஆத்மாவாயிருத்தலால், அத்தியந்தம் அவ்வியவகிதமாம். அதனை அவாந்தர வாக்கியம் அஸ்திரூபத்தால் போதிக்கின்றது. இதனுல் அவ்வியவகித பிரஹ்மத்தினது ஞானமும் அவாந்தர வாக்கியத்தால் பரோட்சமாகவே உண்டாகின்றது.

மற்றும், நீயே தசமனென்னும் வாக்கியம் போல, சுரோதாவினுடைய ஆத்மசொரூபமாகப் பிரஹ்மத்தை மகாவாக்கியம் போதிக்கின்றது. இதனுல் மகாவாக்கியத்தால் அவ்வியவகித பிரஹ்மத்தினது பரோட்ச ஞானம் சம்பவியாது ; பின்னையோ, அபரோட்ச ஞானமே யுளதாம்.

23. அன்றியும், எவ்வஸ்துவினது அபரோட்ச ஞான முண்டாமோ, அதன்கண் அசம்பாவனை விபரீதபாவனைகளுளவாகா; ஆதலால் சிரவணுதிகள் நிஷ்பலமா மென்றுகூறின், அச்சங்கை பொருந்தாது; அஃதியாதினு லெனின், இராஜாவிற்குப் பர்ச்சுவினது அபரோட்ச ஞானம் நேத்திரத்தா லுண்டாகாநின்றும், விபரீதபாவனை யெங்ஙனம் நிவிருத்தியாகவில்லையோ, அங்ஙனமே மகாவாக்கியத்தால் பிரஹ்மத்தின தபரோட்ச ஞான முதியாநிற்கும். ஆயினும், எவருடைய புத்தியில் அசம்பாவனை விபரீதபாவனை யென்னுந் தோடங்களுளவோ, அவரது தோடரூப களங்கத்தோடு கூடிய ஞானமானது பலத்திற்கேது வாகாது ; தோட நிவிர்த்தியின்பொருட்டு அவர்கள் சிரவணுதி செய்யவேண்டும். எவருடைய புத்தியிற் றோட மில்லையோ அவர்கள் (சிரவணுதிகள்) செய்யவேண்டுவ தில்லை.

இந்த ரீதியினுல் ஞானத்திற்குச் சாதநம் மகாவாக்கியமாம்; சிரவணுதிக ளன்றும். ஆயினும், ஞானத்தினது பிரதிபந்தங்களாகிய தோடங்களை(சிரவணுதிகள்) நாசஞ்செய்கின்றன. இதனுல் சிரவணுதிகள் ஞானத்திற் கேது வெனப்பட்டன. சிரவணுதிகட்கேது விவேகாதிகளாம். இதனுல் விவேகாதிகள் ஞான சாதநமெனப்பட்டன. விவேகாதி நான்கு சாதநத்தோடு கூடிய புருடன் யாவன், அவனே அதிகாரியாம்.

## 24. சம்பந்த வர்ணநம்.

(அதிகாரி வர்ணிக்கப்பட்டது ; இனிச் சம்பந்தம் வர்ணிக்கப்படுகின்றது).

கிரந்தத்திற்கும் விஷயத்திற்கும் **பிரதிபாத்திய பிரதிபாதக பாவ** சம்பந்தமாம். கிரந்தம் பிரதிபாதகமும், விஷயம் பிரதிபாத்தியமுமாம். எது பிரதிபாதநஞ் செய்கின்றதோ அது பிரதிபாதக மெனப்படும். எது பிரதிபாதநஞ் செய்தற்கு யோக்கியமாமோ அது பிரதிபாத்திய மெனப்படும்.

அதிகாரிக்கும் பலத்திற்கும் **பிராப்பிய பிராபகபாவ** சம்பந்தமாம். பலம் பிராப்பியம்; அதிகாரி பிராபகன். எந்த வஸ்து பிராப்தமாமோ அது பிராப்யமெனப்படும்; எவனுக்குப் பிராப்தியாகின்றதோ அவன் பிராபக னெனப்படுவன்.

அதிகாரிக்கும் விசாரத்திற்குங் **கர்த்துரு கர்த்தவ்வியபாவ** சம்பந்தமாம். அதிகாரி கர்த்தா; விசாரம் கர்த்தவ்வியம். யாவன் செய்பவனுவனே, அவன் கர்த்தா வெனப்படுவன்; யாது செய்ய யோக்கியமாமோ அது கர்த்தவ்விய மெனப்படும்.

கிரந்தத்திற்கும் ஞானத்திற்கும் **ஜந்நிய ஜநகபாவ** சம்பந்தமாம்; விசாரத்துவாரா கிரந்தம் ஞானத்திற்கு ஜநகமாம்; ஞானம் ஜந்நியமாம். எஃது உற்பத்தி செய்கின்றதோ அது ஜநக மெனப்படும்; எஃதுற்பத்தியாமோ அது ஜந்ய மெனப்படும். இவை முதலிய மற்றைய சம்பந்தங்களையு மறிந்து கொள்க.

## 25. விஷய வர்ணநம்.

(சம்பந்தம் வர்ணிக்கப்பட்டது. விஷயம் வர்ணிக்கப்படுகின்றது).

ஜீவப்பிரஹ்மங்களினது ஏகத்துவம் இந்தக் கிரந்தத்திற்கு **விஷயமாம்.** எது பிரதிபாதநஞ் செய்யப்படுகின்றதோ அது விஷய மெனப்படும். இந்தக் கிரந்தத்தின்கண் ஜீவப்பிரஹ்மங்களினது ஏகத்துவம் பிரதிபாதநஞ் செய்யப்பட்டுள்ளது; ஆதலால், அந்த ஏகத்துவமே கிரந்தத்திற்கு விஷயமாம். இந்த ஏகத்துவத்தினை சர்வ வேதவாக்கியங்களும் பிரதிபாதநஞ் செய்துள்ளன. ஆதலால் எப்புருடர் ஜீவப்பிரஹ்மங்கட்குப் பேதங் கூறுவர் அப்புருடர் ஜடரும் வேத விரோதிகளு மாவ ரென்க.

## 26. பிரயோஜந வர்ணநம்.

(விஷய வர்ணநஞ் செய்யப்பட்டது. இனிப் பிரயோஜந வர்ணநஞ் செய்யப்படும்).

பிரபஞ்சத்திற்குக் காரணமாகிய அஞ்ஞாநமும், பிரபஞ்சமும் ஜந்ம மரண ரூபமாகிய துக்கத்திற் கேதுவாம்; ஆதலால், அநர்த்த மெனப்படும். அவ்வநர்த்தத்தி னிவிர்த்தியும் பரமாநந்தத்தின் பிராப்தியும் மோட்ச மெனப்படும்; அது கிரந்தத்திற்குப் பரமப் பிரயோஜநமாம். மற்றும் அவாந்தரப் பிரயோஜநம் ஞாநமாம்.

எதன்கண் புருஷனுக்கு இச்சையுண்டாமோ அது பரமப் பிரயோஜந மெனப்படும் ; அதுவே புருஷார்த்த மென்றுங்கூறப்படும். அவ்விச்சை, துக்கநிவிருத்தி சுகப்பிராப்தியின்கண் அனைவர்க்கு முண்டாகின்றது ; அதுவே மோட்சத்தினது சொரூபமாதலால், பரமப் பிரயோஜநம் மோட்சமாம்; ஞாந மன்றும். எதனு லெனின், ஞாநம் சுகப்பிராப்திக்குந் துக்கநிவிர்த்திக்குஞ் சாதநமாம் ; ஆயினும், சுகப்பிராப்தி துக்கநிவிருத்தி ரூபமாகவில்லை; ஆதலின், ஞாநம் அவாந்தரப் பிரயோஜநமாம்.

எந்த வஸ்துவாயிலாகப் பரமப்பிரயோஜநம் பிராப்தமாமோ அஃது அவாந்தரப் பிரயோஜந மெனப்படும். இவ்வாறுள்ளது ஞாநமாம். எதனு லெனின், கிரந்தத்தால் ஞாநவாயிலாக முக்திரூபமாகிய பரமப்பிரயோஜநம் பிராப்தியாகின்றது; ஆகையால், ஞாநம் அவாந்தரப் பிரயோஜநமா மென்க.

### 27. பிரயோஜநத்திற் சங்கையும் சமாதாநமும்.

அநர்த்த நிவிருத்தியும் பரமாநந்தப் பிராப்தியுங் கிரந்தத்திற்குப் பிரயோஜந மென்று முன்னர்க் கூறப்பட்டது; அது பொருந்தாது. அஃதேனெனின், சர்வவேதங்களும் ஜீவனைப் பரமாநந்த சொரூபமாக வர்ணித்திருக்கின்றன ; நீங்களு மதனை யங்கீகாரஞ்செய்கின்றீர்கள். எவ்வஸ்து அப்பிராப்தியாயுளது அதன் பிராப்தி பொருந்தும். சதாப் பிராப்த வஸ்துவின் பிராப்தி எப்பொழுதும் பொருந்தாது. ஆதலால், சதாப் பரமாநந்த சொரூபமாகிய ஆத்மாவிற்குப் பரமாநந்தப் பிராப்தி சொல்லுதல் சர்வப் பிரகாரத்தாலும் பொருந்தா தென்று சிலர் சங்கியாநிற்பர்.

28. அச்சங்கையைக்கேட்டுக் கிரந்தத்தின் பிரயோஜநத்தில் விசுவாசத்தினை விடலாகாது. மற்றென் செய்வ தெனின்,

ஆத்மவித்தையினை உபதேசித்தருளாநின்ற குருவினது கிருபையினாற் சங்கைரூபமாகிய குதர்க்கத்தினைத் திருஷ்டாந்தத்தினால் நிவிருத்திசெய்து கொள்ளள்வேண்டும்.

29. அந்தத் திருஷ்டாந்தங் கூறப்படுகின்றது:—ஒருவனது கரத்தின்கண் கங்கண மிருக்க அவனுக்கு என்னுடைய கரத்தின் கங்கணம் நழுவிவிட்டதென் றிங்ஙனம் பிராந்தியுண்டாகிப் பின்னர் ஒருவன் வார்த்தையினால் எனது கரத்தின்கட் கங்கண முளதென்று கங்கணஞாந முண்டாகுமாயின், அப்போதவன் என்னுடைய கங்கணங் கிடைத்ததென்று கூறுநிற்பன். இவ்வாற்றால் பிராப்தமாயுள்ள கங்கணமும் பிராப்தமாயிற்றென்றே எங்ஙனங்கூறப்படுகின்றதோ, அங்ஙனமே பரமாநந்த சொரூபமாகிய ஆத்மாவின்கண் அவித்தையின் பலத்தால் இவ்விதப் பிராந்தியுண்டாகின்றது:— ஆத்மா பரமாநந்த சொரூப மல்ல; பரமாநந்த சொரூபம் பிரஹ்மமாம். அந்தப் பிரஹ்மத்திற்குமெனக்கும் வியோகமாய்விட்டது. இனியுபாசனைசெய்து அந்தப் பிரஹ்மத்தை நான் அடைவேனென்று இவ்வாறான பிராந்தி அநேக மூர்க்கப் பிராணிகட் குண்டாயிருக்கின்றது; அநேக பண்டிதரும் இங்ஙனமே சொல்லாநின்றனர். ஆயினும், அவர்களும் மூர்க்கரேயாவர். எதனாலெனின், ஜீவப்பிரஹ்மங்கட்கு வியோக மங்கீகரித்துளர் யாவர் அவர் மூர்க்கரென்று சொல்லப்படுகின்றனர். அப்புருடர்கட்கு உத்தம சம்ஸ்காரத்தால் ஒருபோது பிரஹ்ம ஞாநியாகிய ஆசாரியரால் வேதாந்தக் கிரந்தத்தினது சிரவணம் பிராப்தியாமாயின், அப்போது கேட்ட அர்த்தத்தை நிச்சயஞ்செய்து பரமாநந்தம் நமக்குக் கிரந்தத்தினாலும் ஆசாரியரது கிருபையினாலும் பிராப்தமாயிற்று என்று கூறுகின்றனர். இங்ஙனம் அவர்கள் சொல்லாநின்றதற் கபிப்பிராயம் இதுவாம்:—ஆத்மாவோ முன்னரும் பரமாநந்த சொரூபமே; ஆயினும்; எமதாத்மா பரமாநந்த சொரூபமென் றிவ்வாறு பாநமாகா திருந்தது; ஆதலால், பிராப்தமாகாததுபோ லாயிற்று; பின்னர் ஆசாரியர் வாயிலாகக் கிரந்த சிரவணத்தால் புத்தியின்கண் பரமாநந்தத்தினது பாநமாயிற்று; ஆதலால், பரமாநந்தம் பிராப்தியாயிற் றென்றனர்.

இவ்வாற்றால் பிராப்தியாயுள்ளதன் பிராப்தியும் பொருந்துவதால், பரமாநந்தத்தின் பிராப்திரூபமாகிய கிரந்தத்தினது பிரயோஜநம் பொருந்தும்.

30. எங்ஙனம் பிராப்தியாயுள்ளதன் பிராப்தி கிரந்தத்தினது பிரயோஜநமோ அங்ஙனமே நித்தியநிவிருத்தியினது நிவிருத்தியும் பிரயோஜநமாம்.

திருஷ்டாந்தம்:—இரஜ்ஜுவின்கண் சர்ப்பம் நித்திய நிவிருத்தியாயுள்ளது; மற்றும் இரஜ்ஜுவின் ஞானத்தால் நிவிருத்தியாகின்றது. அங்ஙனமே ஆத்மாவின்கண் சம்சாரம் நித்திய நிவிருத்தியாயுள்ளது; அதன் நிவிருத்தி ஆத்மாவின் ஞானத்தா லுண்டாகாநின்றது. ஆதலான் நித்திய நிவிருத்தியின் நிவிர்த்தியும், நித்தியப் பிராப்தியின் பிராப்தியும் கிரந்தத்தினது பிரயோஜநமாம்.

31. சங்கை:—ஒரு பதார்த்த (மோக்ஷ)த்தில் பாவம் அபாவ மிரண்டும் பொருந்தாதெனல்.

காரணத்தோடுகூட ஜகத்தின் நிவிர்த்தியும் பரமாநந்தத்தின் பிராப்தியும் கிரந்தத்தினது பிரயோஜந மென்று பூர்வம் சொன்னீர்; அது பொருந்தாது. ஏனெனின், நிவிருத்தி நாமம் துவம்சத்திற்காம். துவம்ச மென்பதும், நாச மென்பதும் பரியாய சப்தங்களாம். அந்த நாசம் அபாவரூபமாம். ஆதலால் மோட்சத்தின்கண் பாவரூபத்துவமும் அபாவரூபத்துவமும் ஆகிய இரண்டும் பிரதீதியாகாநின்றன.

அநர்த்தத்தின் நிவிருத்தியினைக் கூறுவதால், அபாவரூபத்துவம் பிரதீதியாகாநின்றது.

மற்றும் பரமாநந்தத்தின் பிராப்தியினைக் கூறுவதால், பாவரூபத்துவம் பிரதீதியாகாநின்றது.

அவ்விரண்டும் ஒரு பதார்த்தத்தின்கண் பொருந்தாவாம். ஏனெனின், பாவரூபத்துவம் அபாவரூபத்துவ மென்னு மிரண்டுந் தம்முள் விரோதிகளாம். விரோதி தர்மங்களாயுள்ளன யாவை அவை ஏககாலத்தில் ஏக வஸ்துவின்க ணிருக்கமாட்டா; ஆதலால், கிரந்தத்தினது பிரயோஜநம் பொருந்தா தென்று சிலர் சங்கை செய்யாநிற்பர்.

32. அச்சங்கையின் உத்தரம்.

காரணத்தோடுகூட ஜகத்தின் நிவிருத்தி அதிஷ்டானப் பிரஹ்மரூபமாம்; அதன் வேறாக வில்லை. எங்ஙனம் சர்ப்பத்தின்

நிவிர்த்தி அதிஷ்டாந இரஜ்ஜுரூபமோ அங்ஙனம் சகல கற்பித வஸ்துக்களின் நிவிர்த்தியும் அதிஷ்டாநப் பிரஹ்மரூபமாம் ; அதனின் வேறாக வில்லை. இது பாஷியக்காரரது சித்தாந்தமாம். ஆதலின் ஈண்டு அநர்த்தத்தி னிவிர்த்தி பிரஹ்மரூபமாம். எதனாலெனின், சர்வ அநர்த்தத்திற்கும் அதிஷ்டாநம் பிரஹ்மமாம். அப்பிரஹ்மம் பாவரூபமாம். ஆதலால் அநர்த்தத்தி னிவிர்த்தி பாவரூபமா யிருத்தலின், கிரந்தத்தினது பிரயோஜநம் பொருந்துமென்னு மிவ்வார்த்தை சித்தமாயிற்று.

(பிரயோஜந வர்ணநம் கூறப்பட்டது).

* ஓது வார்க்கிதை யுணர்வொடுந்
தீதில் வீடருள் செய்குதி
தாது ராமதண் ணருளுடைக்
கோதி லாக்குரு மூர்த்திநீ.

இங்ஙனம் அநுபந்த சாமாந்ய நிரூபண மென்னும்
பெயரிய
முதற் றரங்கம் முற்றிற்று.



* இந்த முதற் றரங்கத்தை எந்த ஜிஞ்ஞாசுவானவன் நிரந்தரமாகப் படிக்கின்றானோ, அவனைத் தீந தயாளுவான தாது குருவானவர் முக்தனாகச் செய்வாராக.

ஸ்ரீ கணேசாய நம꞉.
ஸ்ரீநடேசாய நம꞉.

# விசாரசாகரம்.

## இரண்டாந் தரங்கம்.

---

### அநுபந்த விசேஷ நிருபணம்.

சகல மாயுந் தனிப்பொரு ளாய்த்திகழ்
நிகரி லாநந்த நிர்த்தனை யுன்னுகேன்
புகல யானுந் துணிந்து புகுந்தநூ
விகலி லாம வினிது முடியவே.

(இதனது முதற்றரங்கத்தில் அநுபந்த விசாரஞ் செய்யப்பட்டது; இனி இரண்டாந் தரங்கத்தி லதனை விஸ்தாரமாய்க் கூறுகின்றேன்).

#### 33. காரணசகித ஜகத் நிவிர்த்தியின் இச்சை பொருந்தா தெனல்.

நான்கு சாதநங்களோடுங் கூடினவன் அதிகாரி யென்றீர்; அந்நான்கு சாதநங்களுள் முமுட்சுத்துவமு மெண்ணப்பட்டது. மோக்ஷ விச்சையினது நாமம் முமுட்சுத்துவமாம். காரண சகித ஜகத்தின் நிவிர்த்தியும், பிரஹ்மத்தின் பிராப்தியும் மோட்ச மெனப்படும். அதன்கண் காரணசகித ஜகத்தின் நிவிர்த்திருபமாகிய மோட்சத்தின தம்சத்தை ஒருவரும் இச்சிக்க வில்லை யென்று பூர்வபட்சி சங்கிக்கின்றான்.

#### 34. பூர்வபக்ஷி பிரதிபாதநஞ் செய்கின்றான். அதிகாரி கண்டநம்.

மூலாவித்தையோடு ஜகத்தின் நிவிருத்தியை ஒருவரு மிச்சிக்க வில்லை ; பின் னெதனை இச்சிக்கின்றார்க ளெனின், மூவகையாகிய துக்க நாசத்தையே விவேகமுடையவரான புருடர் இச்சியாநின்றனர். இதன் அபிப்பிராய மிதுவாம்:—

துக்கம் அத்தியாத்மம், அதிபூதம், அதிதைவ மென மூவகைத்து.

அவற்றுள், வியாதி, பசி முதலியவற்றால்வருந் துக்கம் அத்தியாத்ம துக்க மெனப்படும்.

சோர, வியாக்கிர, சர்ப்பாதிகளால்வருந் துக்கம் அதிபூத துக்க மெனப்படும்.

யக்ஷ, ராட்சசப், பிரேதக், கிரகாதிகளாலும் சீத வாத ஆதபங்களாலும் வருந்துக்கம் அதிதைவ துக்க மெனப்படும்.

இவ்வாறு மூவகையாகிய துக்க நாசத்தையே சகலரு மிச்சியாநின்றனர். துக்கத்தினும் வேறாய் எப்பதார்த்தங்க ளுளவோ அவற்றின் நாசத்தை விவேக முடைய புருடர் இச்சித்திலர். ஆதலால், அஞ்ஞாநசகித சகல ஜகத்தினது நிவிருத்தியின் இச்சை ஒருவர்க்கும் பொருந்தாது.

35. மேலும், சகல புருடருந் துக்க நிவிருத்தியை இச்சியாநின்றனர்; ஆயினும், அஞ்ஞாநத்தோடு சர்வ ஜகத்தின் நிவிருத்தியின்றித் துக்க நிவிருத்தி யுண்டாகாது; ஆதலால், துக்கநிவிர்த்தியின் நிமித்தம் அஞ்ஞாநத்தோடு ஜகத்தின் நிவிருத்தியையு மிச்சியாநின்றனர் என்று சித்தாந்தி இங்ஙனங் கூறின்,

36. அது பொருந்தாது. ஏனெனின், ஆயுர்வேதத்திற் கூறிய ஔடதங்களால் ரோக ஜந்நிய துக்கமும், போஜநத்தால் பசியினு லுண்டாகிய துக்கமும் நிவிர்த்தியாம். இவ்வாறே தத்தம் உபாயங்களால் சர்வதுக்கமும் நிவிர்த்தியாம். ஆதலால், அஞ்ஞாநத்தோடு ஜகத்தின் நிவிர்த்தி யின்றியுந் துக்க நிவிர்த்தி பொருந்தும். துக்கங்களின் நிவிர்த்தி நிமித்தம் அஞ்ஞாநத்தோடு ஜகத்தினது நிவிர்த்தியின் இச்சை பொருந்தாது. காரணசகித ஜகத்தின் நிவிர்த்தியும், பிரஹ்மத்தின் பிராப்தியும் மோட்ச மெனப்படும். அதன்கண் காரணசகித ஜகத்தின் நிவிர்த்திரூப மோட்சத்தின் முதலம்சத்திலு மிச்சை யொருவர்க்கும் பொருந்தா தென்னும் வார்த்தை முன்னர்க் கூறப்பட்டது.

### 37. பிரஹ்மப் பிராப்தி ரூப மோக்ஷத்தின் இரண்டாவது அம்சத்திலும் இச்சை ஒருவர்க்கும் பொருந்தா தென்னும் வார்த்தையைப் பூர்வபக்ஷி கூறுகின்றான்.

எவ்வஸ்துவின் ஞாந முண்டாயிருக்கின்றதோ அவ்வஸ்துப் பிராப்தியின் இச்சை யுண்டாகின்றது; எந்த வஸ்துவின் ஞாந முண்டாக வில்லையோ அதன்பிராப்தியின் இச்சை உண்டாகாது. எங்ஙனம் அந்நியதேசத்தின்கண் அநந்தபதார்த்தங்கள் அஞ்ஞாதமா யுள, அவற்றினது பிராப்தியின் இச்சை ஒருவர்க்கு முண்

டாகவில்லை. அதிகாரிபுருடனுக்குப் பிரஹ்மத்தின் ஞான மில்லை. எவர்கட்குப் பிரஹ்ம ஞான முண்டோ அவர்க ளதிகாரிக ளாகார்; பின்ன ரியா ரெனின், முக்தர்களே. அவர்கட்குப் பிரஹ்மப்பிராப்தியின் இச்சை பொருந்தாது. ஆதலால், வேதாந்த சிரவணத்திற்கு முன்னர் அஞ்ஞாதமாய் எந்தப் பிரஹ்ம முண்டோ அதன் பிராப்தியின் இச்சை பொருந்தாது. இந்தரீதியால் அஞ்ஞான சகித ஜகத்தின் நிவிருத்தியும் பிரஹ்மத்தின் பிராப்தியுமாகிய மோட்ச மியாது அத னிச்சை ஒருவர்க்கும் பொருந்தாது. ஆதலால், முமுட்சு ஒருவரு மில்லை.

38. முமுக்ஷுத்துவம் பொருந்தாமையால் வைராக்கியாதிகளும் பொருந்தா வெனல்.

வேறு விதத்தால் அதிகாரியின் அபாவத்தைப் பூர்வபக்ஷி பிரதிபாதநஞ் செய்கின்றான்.

அந்நிய ரீதியாக அதிகாரி யில்லை யென்று பூர்வ பட்சி பிரதிபாதிக்கின்றான்.

சகல புருடரும் விஷய சுகத்தையே யிச்சியாநின்றனர். வேறு சிலர் சகல விஷயங்களையுந் தியாகஞ்செய்து தபத்தின் கண்ணே ஆருடரா யுளர்; அவர்களும் பரலோகத்தின்கணுள்ள உத்தம போகங்களி னிச்சையினால் நாநாக் கிலேசங்களைச் சகிக்காநின்றனர். ஆதலால், இகலோகம் அல்லது பரலோகத்தினது விஷய சுகத்தையே சகலரும் இச்சியாநின்றனர். அவ்விஷய சுகமோ மோட்சத்தின்கண் இல்லை. ஆதலால், மோட்சத்தின் சாதநத்தினை ஒருவரும் இச்சிக்க வில்லை. இவ்வாற்றால், மோட்சத்தினது இச்சா ரூபமான முமுட்சுத்துவம் பொருந்தாது. சகல புருடர்க்கும் விஷய சுகத்தின்கண் இச்சை யிருத்தலால் வைக்கிராக்ய சம தம உபரதியும் ஒருவரிடத்தும் பொருந்தாவாம். ஆதலின், சாதந சதுட்டயசகித அதிகாரி இன்மையினால் கிரந்தத்தினது ஆரம்பம் நிஷ்பலமாம்.

(இங்ஙனம் அதிகாரி கண்டந பூர்வ பட்சமாம்).

விஷய கண்டநம்.

பூர்வ பக்ஷம்.

39. ஜீவப்பிரஹ்ம ஏகத்வம் பொருந்தா தெனல்.

பூர்வம் ஜீவப்பிரஹ்மங்களின் ஏகத்துவம் இந்தக் கிரந்தத்திற்கு விஷய மென்றீர். அது பொருந்தாது. ஏனெனின், பிரஹ்ம

மோ அவித்தை, அஸ்மிதை, இராகம், துவேஷம், அபிநிவேஸம் என்னுமிப் பஞ்சக்கிலேச ரகிதமா யுள்ளதும், விபுவுமாம். விபு வென்பது வியாபகமாம்; ஏகமாம்; சஜாதீய பேத ரகிதமாம். ஏதனு லெனின், பிரஹ்மத்திற்குச் சஜாதீயமாய் மற்றொரு பிரஹ்ம மில்லை. ஜீவனிடத்துச் சர்வக் கிலேசங்களு முள; மற்றும் அவன் பரிச்சிந்நமும், நாநாவுமாம். ஏதனு லெனின், எத்தனை சரீரங்க ளுள்ளனவோ அத்தனை சரீரங்களிலும் ஜீவர்க ளுளர். சகல சரீரங்களிலும் ஜீவன் ஒருவனேயாயின், ஒரு சரீரத்தின்கண் சுகம் அல்லது துக்க முண்டாயின், சர்வ சரீரத்தின்கண்ணுஞ் சுக துக்க முண்டாதல் வேண்டும்.

40. (அங்ஙனமன்று). சுகமுதலியன அந்தக்கரண தர்மங்க ளாம்; அவ்வந்தக்கரணம் நாநாவாதலால் ஒருவன் சுகி துக்கியாவ தால் சர்வருஞ் சுகி துக்கிக ளாகார். சாட்சி சுகதுக்க ரகிதமும், ஏகமும், சர்வக்கிலேச ரகிதமுமாம்; அதற்குப் பிரஹ்மத்தோடு ஏகத்துவம் பொருந்துமென்று வேதாந்தி கூறின்,

41. சாக்ஷி நாநாவாதல்.

அவ்வார்த்தை பொருந்தாது. ஏனெனின், கர்த்தா போக்தா வாகிய ஜீவனினும் பிந்நமாகிய சாட்சி வந்தியா புத்திரனுக்குச் சமாநமாம். மற்றும் சாட்சியை அங்கீகாரஞ் செய்யினும், அஃது ஏகமாகாது; நாநா சாட்சி அங்கீகரிக்க வரும்; ஏதனு லெனின், இது வேதாந்தத்தினது சித்தாந்தமாம்:—அந்தக் கரணமும், சுகதுக்காதி அந்தக்கரண தருமமும் இந்திரியத் திற்கும் அந்தக்கரணத்திற்கும் விஷயமாகா; சாட்சிக்கு விஷய மாம். ஏதனு லெனின், இந்திரியங்களோ பஞ்சீகிருத பூதங்களை விஷயஞ் செய்யாநின்றன. இதன்கண் இத்துணைப் பேத முள.

நேத்திரேந்திரியமோ ரூபமுடையவஸ்து யாது அதன் ரூபத்தையும், ரூபத்தின் ஆசிரயத்தையும் விஷயஞ்செய்யா நிற்கும். அஃதெங்ஙனம்? நீல பீதாதிகளையுடைய கடத்தினது ரூபங்களையும், அந்த ரூபங்களின் ஆசிரயமாகிய கடத்தையும் நேத்திரேந்திரியம் விஷயஞ் செய்யாநிற்கும்.

துவக் கிந்திரியமும் ஸ்பரிசத்தையும் அதனது ஆசிரயத்தை யும் விஷயஞ் செய்யாநிற்கும்.

ரசனை கிராணம் சிரவணம் என்னும் இம்மூன்றுமோ, ரச கந்த சப்த மாத்திரங்களை விஷயஞ் செய்யாநின்றன ; அவற்றின் ஆசிரயங்களை விஷயஞ்செய்யா. ஆதலால், இம்மூன் றிந்திரியங்க ளாலும் அந்தக்கரண ஞானம் பொருந்தாது.

மற்றும், நேத்திரத்தாலும், அங்ஙனமே துவக்காலும் அந்தக் கரணத்தின் ஞானம் பொருந்தாது. ஏனெனின், பஞ்சிகிருத பூதங் கள் அல்லது பஞ்சிகிருத பூதகாரியங்கள் ரூபமுடையன அல் லது பரிசமுடையனவா யிருப்பன யாவை, அவை நேத் திரம் துவக்குக்கட்கு விஷயமாம். அந்தக்கரணம் அபஞ்சீ கிருத பூதங்களின் காரியமாதலின் நேத்திரத்திற்கும், துவக்கிற் கும் விஷயமாகாது. இந்தக் காரணத்தால் அபஞ்சீகிருத பூதகாரிய மாகிய நேத்திரேந்திரியமும் நேத்திரத்திற்கு விஷய மாகாது ; பாஹ்ய வஸ்து இந்திரியத்திற்கு விஷயமாம். அந்தக்கரணம் இந்திரியத்தின் அபேட்சையால் ஆந்தரமாம்; இதனாலும் இந்திரி யங்களினது விஷய மன்று.

42. மற்றும், அந்தக்கரணத்தின் விர்த்திக்கும் அந்தக்கரணம் விஷய மன்றும். எதனாலெனின், அந்தக்கரணம் விர்த்தியினது ஆசிரயமாதலால் அந்தக்கரணம் தன் விர்த்திக்கு விஷயமா காது. எங்ஙனம் அக்கிநி தாஹத்திற்கு ஆசிரயமாம்; தாஹத் திற்கு விஷய மாகாது ; பின்னையோ அக்கிநியினும் பிந்நமாகிய காஷ்ட முதலிய வஸ்துக்கள் தாஹத்திற்கு விஷயமாம்; அங்ஙன மே அந்தக்கரணத்தினும் பிந்ந வஸ்துக்கள் அந்தக்கரண ஜந் நிய விர்த்திக்கு விஷயமாம்; அந்தக்கரணம் அன்றும்.

43. அங்ஙனமே அந்தக்கரணத்தின் தர்மமும் அந்தக்கரணத் தின் விர்த்திக்கு விஷய மன்றும். ஏனெனின், அந்தக்கரணத்தை விஷயஞ் செய்தற் பொருட்டு அந்தக்கரணத்தின் விருத்தி யுண் டாகுமாயின், அந்தக்கரண தர்மமாகிய சுகமுதலியவற்றையும் விஷயஞ் செய்யும். அவ்வந்தக்கரணத்தை விஷயஞ் செய்யும் விருத்தி அந்தக்காணத்தின் சந்முக மாகாது. ஆதலால் அந் தக்கரணத்தின் தர்மமும் அந்தக்கரணத்தின் விருத்திக்கு விஷய மாத லில்லை.

இது நியமமாம். விருத்தியினது ஆசிரயத்தின் கிஞ்சித் தூரத்திலிருக்கும் வஸ்து விருத்திக்கு விஷயமாம். எந்த வஸ்து

விருத்தியின் ஆசிரயத்தின் அத்தியந்தஞ் சமீபமாயிருக்கின்றது அது விருத்திக்கு விஷய மாகாது. எங்ஙனம் நேத்திரத்தின் விர்த்திக்கு ஆசிரயமாகிய நேத்திரத்திற்கு அத்தியந்தஞ் சமீபமாகிய அஞ்சநம் நேத்திரத்தின் விர்த்திக்கு விஷய மாக வில்லை; அங்ஙனமே அந்தக்கரணத்தின் விர்த்திக்கு ஆசிரயமாகிய அந்தக்கரணத்திற்கு அத்தியந்தஞ் சமீபமாகிய சுக முதலிய தர்மங்கள் அந்தக்கரணத்தின் விர்த்திக்கு விஷயமாக மாட்டா. இவ்வாற்றால், தர்மசகித அந்தக்கரணத்தினது பாநம் இந்திரியத்தால் அல்லது தன்னால் பொருந்தாது. மற்றெங்ஙன மெனின், சாட்சிக்கு விஷயமாம்.

44. அச்சாட்சி ஏக மென்று அங்கீகாரஞ்செய்யின், எங்ஙனம் ஓரந்தக்கரணத்தின் சுகதுக்கங்கள் சாட்சியினால் பாநமாகாநின்றன; அங்ஙனமே எல்லோரது சுகதுக்கங்களும் பாநமாக வேண்டும். ஆதலால் சாட்சி நாநாவாம். எப்போது நாநா சாட்சி அங்கீகாரஞ் செய்யப்பட்டது அப்போது தோஷ மில்லை. எதனாலெனின், எச்சாட்சிக்கு உபாதியாக எவ் வந்தக்கரணம் உளது, அச்சாட்சியால் தன்னுடைய உபாதியின் தர்மங்கள் பாந மாகாநிற்கும். ஆதலால், எல்லோருடைய சுக துக்கங்களும் பாநமாத வில்லை.

இவ்வாற்றான், நாநாவாகிய சாட்சிக்கு ஏகமாகிய பிரஹ்மத்தோடு ஏகத்துவம் பொருந்தாது.

(இங்ஙனம் விஷய கண்டநங் கூறப்பட்டது).

### பிரயோஜந கண்டநம்.

### பூர்வ பக்ஷம்.

### 45. மித்தையாய பந்தத்தின் சாமக்கிரி யின்மையால் அதன் நிவிருத்தி பொருந்தா தெனல்

அகங்காரமுதலிய அநாத்ம வஸ்துக்கள் பந்த மெனப்படும். அப்பந்தம் அத்தியாசரூபமாயின், ஞாநத்தால் நிவிர்த்தியாம்; அத்தியாசரூப மன்றாயின், ஞாநத்தால் நிவிர்த்தியாகாது. எதனாலெனின், ஞாநத்தினது சுபாவ மிதுவாம். எந்த வஸ்துவினது ஞாந முண்டாகின்றதோ அவ்வஸ்துவின்கட் டோன்றும் அத்தியாச அஞ்ஞாநங்களை அந்த ஞாநம் நிவிர்த்திபண்ணுநிற்கும். அஃதெங்ஙனம்? இரஜ்ஜு ஞாநம், இரஜ்ஜுவின்கட் டோன்றுஞ்

சர்ப்ப அத்தியாசத்தையும் இரஜ்ஜுவின் அஞ்ஞானத்தையும் நிவிர்த்தி செய்கின்றது.

பிராந்தி ஞானத்திற்கு விஷயமாகிய மித்தியா வஸ்துவிற்கும் பிராந்தி ஞானத்திற்கும் அத்தியாச மென்று நாமமாம்.

எதன்கண் எந்த வஸ்து மித்தையாக வில்லாமற் சத்தியமா வுள்ளது அது ஞானத்தால் நிவிர்த்தியாகாது.

அங்ஙனமே, ஆத்மாவின்கண் அகங்காரமுதலிய பந்தமானது மித்தையாமாயின், ஞானத்தால் நிவிர்த்தியாம். ஆத்மாவின்கண் மித்தியா பந்தத்தின் சாமக்கிரி யில்லை ; மற்றும், பந்தம் பிரதீதி யாகாநின்றது. ஆதலால் பந்தஞ் சத்தியமாம். அச்சத்திய பந்தத்தை ஞானத்தால் நிவிர்த்திப்பே மென்னும் ஆசை நிஷ்பலமாம்.

## 46. அத்தியாச சாமக்கிரி நிரூபணம்

சத்தியவஸ்துவின் ஞான ஜந்நிய சம்ஸ்காரமும், பிரமாதா தோஷம், பிரமாண தோஷம், பிரமேய தோஷம் என்னு மிம்மூவகைத் தோஷங்களும், அதிட்டானத்தின் விசேடரூப அஞ்ஞானமும், சாமந்யவடிவ ஞானமுமாகிய இவை அத்தியாசத்திற்குச் சாமக்கிரிகளாம். இவை யன்றி அத்தியாச முண்டாகாது.

அஃதெங்ஙனம்? இப்பியின்கண் வெள்ளியும், இரஜ்ஜுவின் கண் சர்ப்பமும் அத்தியாசமாகின்றன. அவை எவன் சத்தியமாகிய வெள்ளியையும், சர்ப்பத்தையும் பார்த்திருக்கின்றானோ, அவனுக்கே யுளவாகின்றன; சத்தியமாகிய வெள்ளி சர்ப ஞானம் யாவனுக் கில்லை, அவனுக்கு உளவாத தில்லை. ஆதலால் சத்தியவஸ்துவின் ஞான ஜந்ய சம்ஸ்காரம் அத்தியாசத்திற் கேதுவாம்.

மற்றும், இப்பியின்கண் சர்பமும், இரஜ்ஜுவின்கண் வெள்ளியும் அத்தியாசமாவ தில்லை. ஆதலால் பிரமேயத்தின்கண் சாதிரிசிய தோஷம் அத்தியாசத்திற் கேதுவாம்.

இவ்வாறே, பிரமாதாவின்கண் லோப பயாதி தோஷங்களும், நேத்திரமாதிய பிரமாணத்தின்கண் பித்தகாமாலை முதலிய தோஷங்களும் அத்தியாசத்திற் கேதுவாம்.

மற்றும், இப்பியினது இதம் ரூபமாகச் சாமாந்ய ஞான முண்டாகி, இஃது இப்பியென்னும் விசேஷரூப ஞானம் உண்

டாக வில்லையேல், அப்போது அத்தியாச முண்டாகாநிற்கும்; இப்பியென்னும் விசேஷரூபமாக ஞாநம் உண்டாகுமாயின், அப்போது அத்தியாச முண்டாகாது; மற்றும், சாமாந்யரூப மாக ஞாந முண்டாகாவிடினும், அத்தியாச முண்டாகாது; ஆதலின், அதிஷ்டாநத்தினது விசேஷரூப அஞ்ஞாநமும் சாமா ந்யரூப ஞாநமும் அத்தியாசத்திற் கேதுவாம்.

இவ்வளவும் அத்தியாசத்திற்குச் சாமக்கிரிகளாம். இவற்றுள் யாதானும் ஒன்றுளவாக வில்லையாயினும், அத்தியாச முளதாகாது. எங்ஙனம் குலால, சக்கர, தண்ட, மிருத்திகை என்பன கடத் தின் சாமக்கிரிகளாம்; இவற்றுள் யாதானும் ஒன்றில்லையேற் கடம் உண்டாகாது; அங்ஙனமே அத்தியாசமும் சர்வ சாமக்கிரிக ளாலு முண்டாகாநிற்கும்.

### 47. பந்த அத்தியாசத்தின்கண் சத்தியவஸ்துவின் ஞாந ஜந்ய சம்ஸ்கார மின்றெனல்.

பந்த அத்தியாசத்தில் ஒரு காரணமு மில்லை. எங்கே னும் பந்தம் சத்தியமா யிருக்குமாயின், அதன் ஞாந ஜந்ய சம்ஸ்காரத்தால் ஆத்மாவின்கண் பந்தம் மித்தையாகப் பிர தீதியாகும். ஆனால், சித்தாந்தத்தில் ஆத்மாவிற்குப் பிந்நமாக ஒரு சத்திய வஸ்துவு மில்லை. ஆதலால், சத்தியபந்தத்தின் ஞாந ஜந்ய சமஸ்காரம் இல்லாமையால், ஆத்மாவின்கண் பந்தாத்தியா சம் பொருந்தாது.

### 48. பந்தத்தின் அத்தியாசத்தில் பிரமேய தோஷம் சித்தியா தெனல்.

அங்ஙனமே ஆத்மாவிற்கும் பந்தத்திற்கும் சாதிருசியமு மில்லை; முரணுகத் தமப் பிரகாசங்கள்போல விபரீத சுபாவ முள.

ஆத்மா பிரத்தியக்காம்; பந்தம் பராக்காம். பிரத்தியக்கு எனும் நாமம் அகத்திற்காம்; பராக்கு எனும் நாமம் புறத்திற்காம்.

ஆத்மா விஷயியும், பந்தம் விஷயமுமாம். பிரகாசஞ் செய் வது யாது அது விஷயி யெனப்படும்; பிரகாசஞ் செய்யப்படுவது யாது அது விஷய மெனப்படும்.

பிரத்தியக்கினிடத்துப் பராக்கிற்கும், பராக்கினிடத்துப் பிரத் தியக்கிற்கும் அத்தியாசம் உண்டாகாது. எங்ஙனம் புத்திராதி களி னபேட்சையால் தேகம் பிரத்தியக்காம்; அதன்கண் புத்

திராதிகட்கும், புத்திராதிகளின்கண் தேகத்திற்கும், அத்தியாச முண்டாவ தில்லை.

மற்றும், விஷயத்தினிடத்து விஷயியினதும், விஷயியிடத்து விஷயத்தினதும் அத்தியாச முண்டாத தில்லை. எங்ஙனம் விஷயமாய கடாதிகளிடத்து விஷயியாய தீபத்தினதும், தீபத்தினிடத்து கடாதிகளினதும் அத்தியாச முண்டாத தில்லை.

அங்ஙனமே, சாதிருசயத்தின் அபாவத்தால் பிரத்தியக்கு விஷயிரூப ஆத்மாவின்கண் பராக்குவிஷயரூபப் பந்தத்தினது அத்தியாசம் பொருந்தாது. பிரத்தியக்கிற்கும் பராக்கிற்கும் விரோத முண்டு; விஷயத்திற்கும் விஷயிக்கும் விரோத முண்டு; சாதிருசிய மில்லை. ஆதலால், பந்தத்தினது அத்தியாசம் ஆத்மாவின்கண் பொருந்தாது.

### 49. பந்தத்தின் அத்தியாசத்தில் பிரமாதாதி தோஷங்களின் அசித்தி.

அங்ஙனமே பிரமாதா தோடமும், பிரமாண தோடமுமில்லை. எதனாலெனின், பிரமாதாமுதலிய சர்வப் பிரபஞ்சங்களும் அத்தியாசரூபங்களாம்; அவையே பந்தமாம். இது வேதாந்தத்தினது சித்தாந்தமாம். இந்த ரீதியினால் பந்த அத்தியாசத்திற்குப் பூர்வம் பிரமாதா பிரமாண சொரூபங்கள் சித்தித் தில; அவற்றின் தோடங்களுஞ் சித்தித்தில. ஆதலால், பந்தத்தினது அத்தியாசம் பொருந்தாது.

### 50. பந்தத்தின் அதிஷ்டானப் பிரஹ்மத்தின் விசேஷரூப அஞ்ஞானம் பொருந்தாதெனல்.

மற்றும், அதிஷ்டானத்தினது விசேஷரூப அஞ்ஞானமும் பொருந்தாது; எதனாலெனின், பந்தத்தின் அதிஷ்டானப் பிரஹ்மம் யாது, அது சுயம்பிரகாச ஞானரூபமாம். அச்சுயம்பிரகாச ஞானரூபப் பிரஹ்மத்தின்கண் சூரியனிடத்திற் றமம் போல அஞ்ஞானம் பொருந்தாது. எங்ஙனம் பிரகாசரூப சூரியனோடு தமத்திற்கு விரோதமோ அங்ஙனமே சேதநப் பிரகாசத்திற்குந் தமரூப அஞ்ஞானத்திற்கும் பரஸ்பர விரோதமாம்.

மற்றும், அதிஷ்டானத்தினது அஞ்ஞானம் அங்கீகாரஞ் செய்யினும், பந்தாத்தியாசம்பொருந்தாது. எதனாலெனின், அத்தியந்தம் அஞ்ஞாதத்தின்கண்ணும், அத்தியந்தம் ஞாதத்தின்கண்ணும் அத்தியாசம் உண்டாகாது; பின்னையோ, விசேஷரூபமாக அஞ்

ஞாதமாயும், சாமாந்யரூபமாக ஞாதமாயும் உள்ளதன்கண் உண்டாகாநிற்கும். மற்றும், பிரஹ்மம் சாமாந்ய விசேஷபாவ ரகிதமும் நிர்விசேஷமுமா மென்னும் இது சித்தாந்தமாம். ஆதலின், பிரஹ்மம் விசேஷரூபமாக அஞ்ஞாதமும், சாமாந்யரூபமாக ஞாதமு மன்றும்.

அத்தியாசத்தின் லோபத்தால் பிரஹ்மத்தின்கண் சாமாந்ய விசேஷபாவ அங்கிகாரஞ் செய்யின், சித்தாந்தத்திற்கு ஹாநி வரும்.

இவ்வாற்றான், நிர்விசேஷப் பிரகாசரூபப் பிரஹ்மம் யாது அதனது விசேஷ ரூபமாக அஞ்ஞாநமும், சாமாந்ய ரூபமாக ஞாநமும் பொருந்தாமையால், அதன்கண் அத்தியாசம் பொருந்தாது. ஆதலால், பிரஹ்மத்தின்கண் பந்தம் அத்தியாசரூபமென்று சொல்லுதல் பொருந்தாது; பின்னையோ, பந்தம் சத்தியமாம். அச் சத்திய பந்தத்திற்கு ஞாநத்தால் நிவிர்த்தி சம்பவியாது; ஆதலான், ஞாநத்தின் வாயிலாக மோட்சரூபப் பிரயோஜநம் கிரந்தத்திற்குப் பொருந்தாது. மற்றும், ஞாநத்தால் மோட்சப் பிரதிபாதகமாயுள்ள சித்தாந்தம் யாது, அது நன்றன்று; பின்னையோ, கர்மத்தால் மோட்சம் உண்டாகாநிற்கும். இக்கூற்று ஏக பவிக வாதியின் ரீதியால் பிரதிபாதநஞ் செய்யப்படுகின்றது.

51. கேவல கர்மத்தால் மோக்ஷத்தின் சித்தி சம்பவிக்கும் எனல். (ஏக பவிக வாதம்).

சத்திய பந்தத்திற்கு ஞாநத்தால் நிவிர்த்தியை அங்கீகரித்தல் யுத்தியோடு கூடின தன்றும்; பின்னையோ, அயுக்தமாம்; ஆதலால், முத்தனாக வேண்டினான் யாவன், அவன் நிரந்தரம் நித்திய கர்மஞ் செய்க. இத னபிப்பிராய மிதுவாம்:—

52. கர்மம் இருவகைத்து ; ஒன்று விகிதமும், மற்றொன்று நிஷித்தமுமாம்.

புருஷனது பிரவிர்த்தியி னிமித்தம் எதனது சொரூபத்தை வேதம் போதிக்கின்றதோ, அது விகித கர்ம மெனப்படும்.

புருஷனது நிவிருத்தி எதனால் போதிக்கப்படுகின்றதோ அது நிஷித்த கர்ம மெனப்படும்.

மற்றும், சுபாவசித்தமாகிய கிரியைகள் யாவை, அவை கர்ம மன்றும். எதனு லெனின், வேதங்கள் பிரவிருத்தி அல்லது நிவிருத்தி நிமித்தம் போதனை செய்தது யாது, அது கர்ம மெனப் படும்; உதாசீனக்கிரியை கர்ம மன்றும். ஆதலால், கர்மம் இருவகை யினதாம்; மூவகையின வன்றும்.

53. விகித கர்மம் - நித்தியம், நைமித்திகம், காமியம், பிரா யச்சித்தம் என நான்கு வகைத்து.

பாபநாசத்தின் பொருட்டு விதிக்கப்பட்ட கர்மம் பிராயச் சித்த மெனப்படும். எங்ஙனம்? சந்யாசிக்குப் பிரமாதத்தால் திரவி யத்தின் கிரகண ஜந்ய பாபம் யாது, அதன் நாசத்தின் நிமித்தம் திரவியத்தினது தியாகமும் மூன்று உபவாசமுமாம்.

பலத்தின் நிமித்தம் விதானஞ் செய்த கர்மம் யாது, அது காமிய மெனப்படும். எங்ஙனம்? மழை வேண்டினனுக்குக் காரீரி யாகமும், சுவர்க்க காமனுக்கு அக்கினி ஹோத்திர சோம யாக முதலியனவுமாம்.

எக்கர்மஞ் செய்யாமையால் பாப முண்டாமோ, செய்வதனுல் புண்ணிய பாப ரூபமாகிய பல முண்டாகாதோ, சதா எதனது விதான மில்லையோ, ஒரு நிமித்தத்தினுல் விதிக்கப்பட்டுளதோ, அக் கருமம் நைமித்திக மெனப்படும். எங்ஙனம்? கிரகண சிராத்தங் களும், அவஸ்தா விருத்தர், ஜாதி விருத்தர், ஆச்சிரம விருத்தர், வித்தியா விருத்தர், தரும விருத்தர், ஞாந விருத்தர் இவர்கள் வருங்காலத்தி லெழுந்து நிற்றலாகிய கர்மமுமாம். வித்யா சப் தத்தினுல் சாஸ்திர ஞாநத்தையும், ஞாந சப்தத்தினுல் அபரோட்ச ஞாநத்தையுங் கொள்க. பூர்வ பூர்வங் கூறப்பட்டவரினும், உத்த ரோத்தரங் கூறப்பட்டவர்கள் உத்தம ரென்று கொள்க.

எதனைச் செய்யாமையாற் பாப முண்டாமோ, செய்வத னுல் பல முண்டாகாதோ, சதா எதனது விதானமோ அது நித்திய கர்ம மெனப்படும். எங்ஙனம்? ஸ்நாந சந்தியாதிகளாம்.

இவ்வாறு நான்கு வகைத்தாய விகித கர்மங்களும், நிஷித்த கர்மமுஞ் சேர்ந்து கர்மங்க ளைவகைத்தாம்.

54. மோட்சத்தில் இச்சையுடையோன் காமிய நிஷித்த கர் மங்களைச் செய்தலாகாது; எதனுலெனின், காமிய கர்மத்தா லுத் தமலோக மடையப்படும்; நிஷித்தத்தால் நீசலோக மடையப்படும்.

ஆகையால், அவ்விரண்டனையுந் தியாகஞ் செய்து, நித்திய கர்மத்தைச் சதா செய்க. நைமித்திகத்திற்கு நிமித்தமெப் பொழு துண்டாமோ அப்பொழுது நைமித்திகத்தையுஞ் செய்க. எதனாலெனின், நித்திய நைமித்திக கர்மங்கள் செய்யாவிடின், பாப முண்டாகாநிற்கும்; அப் பாவத்தால் நீசயோநி யடையப் படும். ஆதலால், பாபத்தைத் தகைதற்பொருட்டு நித்திய நைமித்திய கர்மங்களைச் செய்க; நித்திய நைமித்திக கர்மங்கட்கு வேறு பல மில்லை; அவற்றைச் செய்யாமையால் எந்தப் பாப முண்டாமோ அஃதவற்றைச் செய்வதனா லுண்டாகாது. இது வே பலமாம். ஆதலான், முமுட்சு நித்திய நைமித்திய கர்மங்களை அவசியஞ் செய்க.

55. ஒருகால் பிரமாதத்தால் நிஷித்த கர்மமுண்டாய்விடின், அதனது தோஷ நிவிர்த்தியின் பொருட்டுப் பிராயச்சித்தஞ் செய்க. நிஷித்த கர்மங்களைச் செய்ய வில்லையாயினும், ஜந்மாந் தரங்களின் பாபங்களை நிவிர்த்திசெய்தற் பொருட்டுப் பிராயச் சித்த கர்மஞ்செய்க. ஆயினும், இவ்வளவு பேத முண்டு. பிராயச் சித்தம், அசாதாரணம் சாதாரண மென இருவகைத்து.

ஒரு பாப விசேஷத்தை நிவிர்த்தி செய்தற்பொருட்டுச் சாஸ் திரங்கள் விதானஞ் செய்துள்ள தியாது, அஃது அசாதாரணப் பிராயச்சித்த மெனப்படும். எங்ஙனம்? பூர்வஞ் சொல்லப்பட்ட உபவாசமாம்.

மற்றும், சர்வ பாபங்களையும் நிவிருத்தி செய்தற் பொருட் டுச் சாஸ்திரங்கள் விதானஞ் செய்த கர்மங்கள் யாவை, அவை சாதாரணப் பிராயச்சித்த மெனப்படும். எங்ஙனம்? கங்காஸ்நா நம், ஈஸ்வர நாமோச்சாரணமாம். இவை முதலிய மற்றுமுள் ளனவற்றை அறிந்துகொள்க.

இவ்வாற்றாற் பிராயச்சித்தங்க ளிருவகையாம்.

அறிந்து செய்த பாபமாயின், அப்பாப நாச நிமித்தஞ் சாஸ் திரங்கள் போதித்த அசாதாரணப் பிராயச்சித்தத்தைச் செய்க; ஜந்மாந்தரங்களில் அறியாமற் செய்த பாப நிவிருத்தியின் பொ ருட்டுச் சாதாரணப் பிராயச்சித்தஞ் செய்க.

எதனாலெனின், அசாதாரணப் பிராயச்சித்தத்தினது சுவ பாவ மிதுவாம். எப்பாப நாசத்தின் பொருட்டுச் சாஸ்திரங்கள்

எப் பிராயச்சித்தத்தை விதித்தனவோ, அப்பாபங்கள் அப்பிராயச் சித்தங்களால் நிவிர்த்தியாகாநிற்கும் ; ஏனையவை நிவிர்த்தியாகா.

எந்தப் பாபம் எந்தப் பிராயச்சித்தத்தா னிவிருத்தியாகா நிற்குமென் றிங்ஙனம் ஜந்மாந்தரத்தின் பாவம் அறியப்படாமையால், சாதாரணப் பிராயச்சித்தஞ் செய்க.

56. சாதாரணப் பிராயச்சித்தத்தாற் சர்வ பாபங்களும் நிவிர்த்தியாகாநிற்கும்; ஆயினும், கங்காஸ்நாந முதலிய எந்தச் சாதாரணப் பிராயச்சித்தஞ் சொல்லப்பட்டதோ, அது கேவலம் பிராயச்சித்த ரூப மன்று ; பின்னையோ, காமிய ரூபமும் பிராயச் சித்த ரூபமுமாம். எதனாலெனின், கங்காஸ்நாநத்தால் உத்தம லோகத்தின் பிராப்தி சாஸ்திரங்களிற் கூறப்பட்டுள்ளது; அங்ஙனமே ஈஶ்வர நாமோச்சாரணத்தாலும் உத்தமலோகத்தின் பிராப்தி கூறப்பட்டுள்ளது. ஆதலாற் காமியரூபமாம்.

பாபத்தை நாசஞ் செய்வதனால் பிராய்ச்சித்த ரூபமாம்.

எங்ஙனம் அஶ்வமேத(யாக)ம் பிரஹ்ம ஹத்தியாதி பாவங்களினது நாசகமாயும், சுவர்க்கப் பிராப்திரூப பலத்திற் கேதுவாயுமுள்ளதோ, அங்ஙனமே கங்காஸ்நாந முதலியவை கேவலம் பிராயச்சித்த மன்றாம். ஆதலாற் கங்காஸ்நாந முதலியவற்றா லுத்தம லோகத்தின் பிராப்தி யுண்டாகாநிற்கும். அதனை முமுட்சு வாஞ்சிப்ப தில்லை. ஆயினும், எவனுக்கு உத்தமலோகத்தின் வாஞ்சை யுண்டோ அவனுக்குக் கங்காஸ்நாந முதலியன, பாபங்களை நாசஞ் செய்து, உத்தமலோகத்தை அடைவிக்கின்றன; எவனுக்கு லோகத்தின் வாஞ்சை யில்லையோ அவனுக்குக் கேவலம் பாப நாசகமாயே யுள்ளன. ஆதலால், இச்சையோடு அநுஷ்டாநஞ் செய்யின், காமியரூபப் பிராயச்சித்தமாம்; லோகத்தி னிச்சை யின்றி அநுஷ்டாநஞ் செய்யின், கேவலப் பிராயச்சித்த ரூபமாம்.

எங்ஙனம் வேதாந்தமதத்திற் சர்வ கர்மங்களும் சகாம புருஷனுக்குச் சம்சாரத்திற் கேதுவாயும், நிஷ்காம புருஷனுக்கு அந்தக்கரணத்தைச் சுத்தி செய்து (ஞாநத்தின் வாயிலாய்) மோக்ஷத்திற் கேதுவாயு மிருக்கின்றதோ, அங்ஙனமே, ஒரே கங்காஸ்நாநமும், அங்ஙனமே ஈஶ்வர நாமோச்சாரணமும், சகாமனுக்குக் காமியரூபப் பிராயச்சித்தமாயும், நிஷ்காமனுக்குக் கேவலப் பிராயச்சித்த ரூபமாயு மிருக்கின்றன. ஆதலால், முமுட்சு சாதாரணப் பிராயச் சித்தத்தினைச் செய்க.

இந்த ரீதியாகச் ஜன்மாந்தரங்களின் சம்பூர்ணப் பாபங்களும் ஞாந மின்றியே நாசமாகாநிற்கும்.

57. அங்ஙனமே, ஜன்மாந்தரங்களின் காமிய கர்மங்களும் முமுக்ஷுவிற்கு மலடிக்குச் சமாநமாய்ப் பலத்திற் கேது வன்றாம். அஃதெதனு லெனின், எங்ஙனம் கர்மாநுஷ்டாந காலத்தில் புருஷனது இச்சை பலத்திற் கேது வென்று வேதாந்தமதத்தில் அங்கீகரிக்கப்பட்டுள்ளது. இச்சையோடு அநுஷ்டிக்கப்பட்ட கர்மங்கள் சுவர்க்காதி பலத்திற் கேதுவாம். நிஷ்காமமா யநுஷ்டிக்கப்பட்டன சுவர்ககாதி பலத்திற் கேதுவாகா ; இது வேதாந்தத்தினது சித்தாந்தமாம்.

அங்ஙனமே, கர்மசித்தியின் பின்னரும் புருஷனது இச்சை பலத்திற் கேதுவாம். அந்தப் புருஷனது இச்சை எப்போது புருடன் முமுட்சுவாயினன், அப்போது நிவிர்த்தியாகிவிட்டது. ஆதலால், ஜன்மாந்தரத்தின் காமிய கர்மங்களும் பலத்திற் கேதுவாகா. எங்ஙனம் ஒரு புருஷன் தநப் பிராப்தியின் இச்சையால் தநவானை ஆராதநஞ் செய்யின், அத் தநவானது ஆராதனையின் பின்னரும் தநத்தின் இச்சை நிவிர்த்தியாய் விடின், தநப் பிராப்திரூபமான பலம் உண்டாகாது, அங்ஙனமே முமுட்சுவிற்கு ஜன்மாந்தரங்களி லுள்ள காமிய கர்மங்களுக்கும் இச்சையி னபாவத்தால் பல னுண்டாகின்ற தில்லை.

இவ்வாற்றால் கேவலம் கருமத்தால் மோட்சம் உண்டாகா நிற்கும்.

58. வர்த்தமாந ஜன்மத்தின்கண் காமிய நிஷித்த கர்மங்களைச் செய்யாமையால், ஊர்த்துவலோக அதோ லோகங்களை யடைவ தில்லை. ஜன்மாந்தரத்தின் பிராரத்தமான நிஷித்த காமிய கர்மங்கள் போகத்தால் நாசமாகாநிற்கும். நித்திய நைமித்திகங்களைச் செய்யாமையால் உளவாகாநின்ற பாபங்கள், அவற்றினைச் செய்வதால் முமுட்சுவிற்கு உளவாகா. ஜன்மாந்தரத்தின் சஞ்சிதமாகிய நிஷித்தம் சாதாரணப் பிராயச்சித்தத்தால் நாசமாகா நிற்கும். ஜன்மாந்தரத்தின் சஞ்சிதமாகிய காமிய கர்மங்கள் முமுட்சுவிற்கு இச்சையி னபாவத்தால் பலனைக் கொடுக்கிற தில்லை. ஆதலால், முமுட்சு நித்திய நைமித்திக சாதாரணப் பிராயச்சித்த ரூப கர்மங்களைச் செய்க. மற்றும், வர்த்தமாந ஜன்

மத்தில் அறியப்பட்ட நிஷித்த கர்மமாயின், அசாதாரணப் பிராயச் சித்தத்தினைச் செய்க.

அல்லது, நித்திய நைமித்திகங்களைச் செய்க; பிராயச்சித்தத்தைவிடுக. அஃதெதனாலெனின், சஞ்சித நிஷித்த கர்மங்களும் காமிய கர்மங்களும் முமுட்சுவிற்கு நாசமாய்விடும். எங்ஙனம் ஞாநியின் சஞ்சித கர்ம நாசம் வேதாந்த மதத்தில் அங்கீகரிக்கப்பட்டுள்ளது, அங்ஙனமே நிஷித்த கர்மங்களைத் தியாகஞ் செய்து, நித்திய நைமித்திக கர்மங்களைச் செய்யும் முமுட்சுவினது சஞ்சித கர்மங்கள் நாசமாகின்றன; அல்லது சஞ்சிதமாகிய காமிய நிஷித்த மனைத்துங்கூடி ஒரு ஜந்மத்தை ஆரம்பிக்கும். ஆதலால், முமுட்சுவிற்கு வேறொரு ஜந்மம் உண்டாகும்.

அல்லது யோகிகளின் காய வியூகம்போல ஒரேகாலத்திற் சகல சஞ்சிதங்களும் அநந்த சரீரங்களை ஆரம்பிக்கும். அவற்றால் முமுட்சு உத்தர ஜந்மத்தின்கண் சர்வ பலன்களையும் அனுபவிப்பன்.

அல்லது, நித்திய நைமித்திக கர்மாநுஷ்டாநத்தால் எந்தக் கிலேசங்க ளுளவாமோ, அவை ஜந்மாந்தரத்தின் சஞ்சித நிஷித்த கர்மங்களினது பலன்களாம். ஆதலால் ஜந்மாந்தரத்தின் சஞ்சித நிஷித்த கர்மங்கள் வேறொரு ஜந்மத்தை ஆரம்பஞ்செய்யா. காமியமாகிய சஞ்சித கர்மங்கள் ஒரு ஜந்மத்தில் அல்லது ஒரு காலத்தி லநந்த சரீரங்களை ஆரம்பியாநிற்கும். ஆதலால் முமுட்சுவிற்கு உத்தர ஜந்மத்தின்கண் துக்கம் லேசமும் உண்டாகாது; கேவலஞ் சுகபோகமே உண்டாகாநிற்கும். அஃதெதனாலெனின், ஜந்மாந்தரத்தின் சஞ்சிதமாகிய விகித கர்மத்தால் சரீர முண்டாயிற்று; சஞ்சிதமாகிய நிஷித்தங்கள் நித்திய நைமித்திக அநுஷ்டாநக் கிலேசத்தாற் பூர்வ ஜந்மத்தின்கண் அநுபவிக்கப்பட்டன.

இவ்விதத்தினால் பிராயச்சித்தத்தா லன்றிக் கேவலம் நித்திய நைமித்திக கர்மாநுஷ்டாநத்தால் மோக்ஷம் உண்டாகாநிற்கும். இதனால் நைமித்திக கர்மத்தின் சமயத்தில் நைமித்திகாநுஷ்டாநஞ் செய்க; நித்திய கர்மத்தினைச் சந்ததம் அநுஷ்டாநஞ்செய்க. இம்மதத்தினைச் சாஸ்திரத்தின்கண் ஏக பவிக வாத மென்பர்.

## 59. பந்த நிவிர்த்தி ஞானவாயிலாய்க் கிரந்தத்தின் பிரயோஜந மன்றெனல்.

இதனுனும் பந்த நிவிர்த்தி ஞானத்தின் வாயிலாய்க் கிரந்தத்தின் பிரயோஜந மன்றும். எதனு லெனின், எந்த வஸ்து வேறென்று முண்டாக வில்லையோ அது முக்கியப் பிரயோஜநமாம். எங்ஙனம்? ரூபத்தின் ஞானம் நேத்திரத்தா லன்றி வேறென்று முண்டாக வில்லை; அந்த ரூபஞானம் நேத்திரத்தின் பிரயோஜநமாம். பந்தத்தின் நிவிர்த்தி கிரந்தத்தாலன்றிக் கர்மத்தா லுண்டாகின்றது; ஆதலால் பந்தத்தின் நிவிர்த்தி கிரந்தத்தின் பிரயோஜந மன்றும்.

இவ்வாற்றுல் கிரந்தத்தின் அதிகாரி, விஷயம், பிரயோஜநங்கள் பொருந்த வில்லை.

## 60. சம்பந்த கண்டநம். — (பூர்வ பக்ஷம்).

அதிகாரியாதிகளின் அபாவத்தால் சம்பந்தமும் பொருந்தாது. எதனு லெனின்,

விஷய மின்மையாற் கிரந்தத்திற்கும் விஷயத்திற்கும் பிரதிபாத்யப் பிரதிபாதகபாவ சம்பந்தம் பொருந்தாது. அதிகாரியும் பலமு மின்மையால் பிராப்யப்பிராபகபாவ சம்பந்தம் பொருந்தாது.

அதிகாரியின் அபாவத்தால் அதிகாரிக்கும் விசாரத்திற்கும் கர்த்துரு கர்த்தவ்யபாவ சம்பந்தம் பொருந்தாது.

ஞானத்திற்கு நிஷ்பலத்துவ முண்மையால் கிரந்தத்திற்கும் ஞானத்திற்கும் ஜந்நிய ஜநகபாவ சம்பந்தம் பொருந்தாது.

சபல வஸ்து ஜந்நியமாம்; பூர்வஞ் சொல்லிய ரீதியால் ஞானம் சபல மன்று.

மேலும், ஞானத்தின் சொரூபமும் அபாவமாம். இதனுனும் ஞானத்திற்குங் கிரந்தத்திற்குஞ் சம்பந்தம் பொருந்தாது. எதனு லெனின், ஜீவப்பிரஹ்மங்களின் அபேத நிச்சயத்திற்குச் சித்தாந்தத்தில் ஞான மென்று பெயராம். அவ்வபேத நிச்சயம் பொருந்தாது. எதனு லெனின், ஜீவப் பிரஹ்மங்களின் அபேதமில்லை யென்னும் வார்த்தை விஷய நிராகரணத்திற் பூர்வம் பிரதிபாதநம் செய்யப்பட்டது. ஆதலால், அபேத நிச்சயரூப ஞானம் பொருந்தாது. இவ்வாற்றுல் அதிகாரி முதலிய அநுபந்தங்களின் அபாவத்தினுல் கிரந்தத்தின் ஆரம்பம் பொருந்தாது.

### 61. அதிகாரி மண்டநம்.

#### இனிப் பூர்வ பக்ஷியினது கிரமமாக உத்தரம்.

#### 34—36 பிரசங்கத்திலுள்ள பூர்வ பக்ஷத்திற்கு உத்தரம்.

ஒருவர்க்கும் மோக்ஷத்தினது இச்சைபொருந்தாது என்று பூர்வ பட்சியினல் முன்னர்க் கூறப்பட்டுள்ளது. எதனு லெனின், மோக்ஷத்தின்கண் இரண்டம்ச முள.

ஓரம்சம் காரணசகித ஜகத்தி னிவிர்த்தி; மற்ருே ரம்சம் பிரஹ்மத்தின் பிராப்தி ரூபமாம்.

அவற்றுள், காரண சகித ஜகத்தி னிவிர்த்திரூப மோக்ஷத்தின் பிரதம அம்சத்தின திச்சை யொருவர்க்கு மில்லை; மற்றியாதுள்ளதெனின், மூவகையாகிய துக்க நிவிர்த்தியின் இச்சையே யாவர்க்கு முள்ளது. அவ்விதத் துக்க நிவிர்த்தி தத்த முபாயங்களா லுண்டாய்விடும். ஆதலால், மூல சகித ஜகத்தி னிவிர்த்தியின திச்சையுடைய முமுக்ஷு, அதிகாரி என்று கூறுவது பொருந்தாது.

### 62. அதற்குச் சமாதாநம் முன்னர்க் கூறப்படுகின்றது.

ஜகத்காரணமாகிய அஞ்ஞாநசகித ஜகத்து நாசமாயி னல்லாமல் மூவகையாயுள்ள துக்கங்கள் ஏனைய வுபாயங்களால் நாசமாகா. மற்றும், மூலாவித்தையினது நாசத்தாற் சர்வதுக்கங்களும், அவற்றிற்குக் காரணங்களாகிய ரோகாதிகளும், ரோகாதிகளுக் காசிரயங்களாயுள்ள சரீராதிகளும் நாசமாகாநிற்கும். ஆதலால், மூவகையாகிய துக்க நாச நிமித்தம் காரணசகித ஜகத்தி னிவிர்த்திரூபமாகிய மோக்ஷத்தினது பிரதம அம்சத்தைச் சகல புருடரு மிச்சியாநின்றனர்.

தாற்பரியம் இதுவாம்:—யாவர் சகல ஔடதாதி உபாயஞ் செய்வதில் சமர்த்தரோ, அவர்க்கும் துக்கம் நியமமாக நிவிர்த்தியாவ தில்லை. ஒரு புருடர்க்கு ரோகாதிகளால் ஜந்நியமான துக்கம் ஔஷதாதி உபாயங்களால் நாசமாகின்றது; மற்றொருவனுடைய துக்கம் ஔடத முதலிய வுபாயங்களா னாசமாவ தில்லை. ஆதலால், ஔடதமுதலிய வுபாயங்களால் ரோகாதி ஜந்நிய துக்கங்கள் நியமமாக நிவிர்த்தியாவ தில்லை. மேலும், எவனுக்கு ஔடதமுதலிய வுபாயங்களாற் றுக்கநிவிருத்தி யுண்

டாகின்றதோ, அவனுக்குந் துக்கத்தின துற்பத்தி மீண்டு முண்டாகின்றது. ஆதலால், ஔடத முதலிய வுபாயங்களாற் றுக்க மத்தியந்தம் நிவிர்த்தி யாகின்றதில்லை. எது நிவிருத்தி யாகி மீண்டு முற்பத்தியாவ தில்லையோ, அஃது அத்தியந்த நிவிர்த்தி யெனப்படும். ஔடத முதலிய வுபாயங்களாற் றுக்க நிவிர்த்தி நியமமாக வுண்டாகிற தில்லை. நிவிர்த்தியாகிய துக்கங்கள் மீண்டு முற்பத்தியாகின்றன. ஆதலால், அந்த உபாயங்களால் அத்தியந்த நிவிர்த்தி உண்டாவ தில்லை.

மற்றும், துக்கங்களினது சகல சாதநங்களும் நாசமாயின், சகல துக்கங்களும் நியமமாக நிவிர்த்தியாகாநிற்கும். துக்க சாதநங்கள் நாசமாகுமாயின், மீண்டும் துக்கங்க ளுண்டாகா. ஆதலால், துக்க நிவிர்த்தியின் நிமித்தம் துக்கசாதந நிவிர்த்தியி னிச்சை அனைவர்க்கு முண்டாம்.

63. அந்தத் துக்கசாதநம்—அஞ்ஞாநமும் அதன் காரிய (பிரபஞ்ச) முமாம். இவ்வார்த்தை சாந்தோக்கிய வுபநிஷத் திற் பூமவித்தைக்கண் பிரசித்தமாம். ஆண்டு இப்பிரசங்க முளது:—ஒருசமயத்தில் சநத்குமாரரிடத்து நாரதர் சென்று ஏ பகவன்! ஆத்மஞாநியாகிய புருஷன் யாவன்? அவனுக்குச் சோக முண்டாவ தில்லை; யான் சோகசகிதனு யுளன். ஆதலால், நான் அஞ்ஞாநியாயிருக்கின்றேன்; எதனுல் என்னுடைய அஞ் ஞாநம் நிவிர்த்தியாமோ, அவ்வித வுபதேச மெனக்குச் செய்ய வேண்டுமென்று பிரார்த்தித்தார்.

அப்போது சநத்குமாரர் நாரதரைப்பார்த்துக் கூறுகின் றார்:—ஏ நாரத! பூமா சர்வசோகரகிதமாயும், சுகரூபமாயு மிருக் கின்றது; பூமாவிற்குப் பிந்நமாகிய சகலமுந் துச்சமாயும் துக்கத் திற்குச் சாதநமாயு மிருக்கின்றன.

பூமா வெனும் நாமம் பிரஹ்மத்திற்காம்.

இவ்வாறு பிரஹ்மத்திற்குப் பிந்நமாகிய வஸ்துக்கள் யாவை, அவை சர்வ துக்கத்திற்குஞ் சாதந மென்பர். அஞ்ஞா நமும் அதன் காரிய (பிரபஞ்ச)மும், பிரஹ்மத்திற்குப் பிந்ந மாம்; ஆதலால் துக்கத்தினது சாதநங்களாம். அவை நிவிர்த் தியாகுமாயின், சர்வ துக்கங்களும் நியமமாக அத்தியந்த நிவிர்த் தியாகின்றன. ஆதலால், சகல துக்க நிவிர்த்தியி னிமித்தம்

அஞ்ஞாந சகிதப் பிரபஞ்சத்தின் நிவிர்த்திரூப மோக்ஷத்தின் பிரதம அம்சத்தின் இச்சை பொருந்தும்.

64. (37-38-ல் உள்ள) பூர்வ பக்ஷத்தின் உத்தரம்.

மேலும், எந்தவஸ்து அநுபவிக்கப் பட்டுள்ளதோ அதனை யடைய வேண்டு மென்னு மிச்சை உண்டாகாநிற்கின்றது. பிரஹ்மத்தின தநுபவம் ஒருவர்க்கு மின்று. ஆதலால், பிரஹ்மத்தின் பிராப்திரூபமாகிய மோக்ஷத்தின் இரண்டாவ தம்சத்தினது இச்சை ஒருவர்க்கும் உண்டாவ தில்லை யென்று முன்னர்ப் பூர்வ பக்ஷியாற் கூறப்பட்டது.

அதற்குச் சமாதாநஞ் சொல்லப்படுகின்றது.

சகல புருடருஞ் சுகத்தை அநுபவித் துளர். ஆதலால், சுகத்தினது இச்சை சகலர்க்கும் உண்டு. பிரஹ்மமானது நித்திய சுகரூப மென்று சாஸ்திரத்திற் கேட்டுள ராதலால், உத்தம விவேகிகள் சுகசொரூபப் பிரஹ்மத்தினது பிராப்தியை விரும்பாநின்றனர்.

65. சகல புருடரும் விஷயஜந்ய சுகத்தை இச்சியாநின்றனர். அவ்விஷயஜந்ய சுகமானது மோக்ஷத்தின்கண் பிராப்தமாவ தில்லை. பின்னை யெதன்கண் பிராப்தியாகாநிற்கின்ற தெனின், ஜகத்தின்கண் பிராப்தியாகாநிற்கின்றது. ஆதலான், மோக்ஷ இச்சையுடைய அதிகாரி இன்மையால், கிரந்தத்தி னதாரம்பம் நிஷ்பலமா மென்று முன்னர்க் கூறிய,

பூர்வ பக்ஷிகளை இங்ஙனங் கேட்கின்றோம்:—

(கிரந்தத்தின தாரம்பம் நிஷ்பல மென்றது) முமுக்ஷுவொருவரும் இல்லாமையினலா? அல்லது முமுக்ஷு விருந்தும் அவர்க்குக் கிரந்தத்தின்கண் பிரவிருத்தி யுண்டாகாமையினலா ?

முமுக்ஷுவே இல்லாமையினு லெனின், அது பொருந்தாது. எதனு லெனின், சர்வ புருடருஞ் சர்வ துக்கத்தினது நாசத்தையும் நித்திய சுகத்தினது பிராப்தியையும் விரும்பாநின்றனர். அந்தச் சர்வ துக்க நாசமும், சுகபிராப்திரூபமும் மோக்ஷமாம். ஆதலால், சகல புருடரு முமுக்ஷுவாம்.

மேலும், விஷய ஜந்ய சுகத்தையே யாவரு மிச்சியாநின்றன ரென்று கூறப்பட்டது.

அங்ஙன மன்று; சுகமாத்திர மிச்சியாநின்றனர். அச்சுகம் விஷயத்தா லுண்டாகுக; அல்லது, விஷய மன்றி யுண்டாகுக. விஷய ஜந்ய சுகத்தையே இச்சியாநின்றன ரென்றால், சுழுத்திச் சுகத்தின் இச்சை யுண்டாக வேண்டுவ தில்லை; சுழுத்திச்சுகம் விஷய ஜந்ய மன்று. ஆதலால், சுகமாத்திரத்தை (யெல்லோரும்) விரும்பாநின்றனர். கேவலம் விஷய ஜந்ய (சுக) த்தையே விரும்ப வில்லை; மாறாக ஆத்ம சுகத்தை விரும்பாநின்றனர். விஷய ஜந்ய (சுக)த்தில் விருப்ப முண்டாவ தில்லை. எதனா லெனின், சகல புருடர்க்கும் நியூந (குறைந்த) அல்லது அதிக விஷய சுகங்கிடைத்தே யுள்ளது; ஆயினும், எச்சுகம் ஒருகாலும் நாசமாகாதோ அப்படிப்பட்ட சுகம் நமக்குக் கிடைக்க வேண்டு மென்று இங்ஙனம் இச்சை சதா யிருக்கின்றது. இத்தன்மைய சுகம் ஆத்ம சொரூபமாகிய மோக்ஷமாதலால், சகல புருடரு முமுக்ஷுவாவர். முமுக்ஷு ஒருவரு மில்லை யெனல் பொருந்தாது.

### 66. முமுக்ஷுவின் சித்தியால் கிரந்தாரம்பத்தின் ஸபலத்தன்மை.

மேலும், முமுக்ஷு விருந்தும் அவனுக்குக் கிரந்தத்திற் பிரவிர்த்தி யுண்டாகாது. ஆதலால், கிரந்தத்தினது ஆரம்பம் நிஷ்பலமா மெனின், அவர்களை இங்ஙனம் கேட்கின்றோம்:—

கிரந்தம் மோக்ஷ சாதநமாகாமையினாற் கிரந்தத்தின்கண் பிரவிர்த்தி யுண்டாக வில்லையா?

அல்லது கிரந்தத்தின் வேறாகவுஞ் சில சாதநங்க ளுள. அவற்றின்கட் பிரவிர்த்தி யுண்டானமையாற் கிரந்தத்தின்கட் பிரவிர்த்தி யுண்டாக வில்லையா?

அல்லது, எந்தச் சமமாதிகளாற் கிரந்தத்தில் அதிகாரஞ் சொல்லப்பட்டதோ அச்சமமாதியை யுடைய ஞாந யோக்கிய அதிகாரி ஒருவரும் இல்லாமையினாற் கிரந்தத்திற் பிரவிர்த்தி யுண்டாக வில்லையா?

கிரந்தம் மோக்ஷ சாதந மல்ல வெனின், அவ்வார்த்தை பொருந்தாது. ஏனெனின், மோக்ஷம் ஞாநத்தால் நியமமாக வுண்டாகாநிற்கும். இது வேதத்தினது சித்தாந்தம்.

அந்த ஞாநம் சிரவணத்தால் உண்டாகாநிற்கும்.

சிரவணம் இருவகைத்து—ஒன்று வேதாந்த வாக்கியத்திற்கும் சுரோத்திரத்திற்குமுள்ள சையோக ரூபமாம்; மற்றொன்று வேதாந்த வாக்கியத்தினது விசாரரூபமாம்.

ஞாநத்திற்கு ஏது பிரதம சிரவணமாம் ; இரண்டாவதல்ல. ஏதனுலெனின், சப்த ஜந்ய ஞாநத்தில் இந்திரியத்தோடு சப்தத்தினது சையோகமே யாண்டும் ஏதுவாகையால், வேதாந்த வாக்கியத்திற்குஞ் சுரோத்திரத்திற்குமுள்ள சையோகரூப சிரவணம் பிரஹ்ம ஞாநத்திற்கு ஏதுவாம். அவாந்தர வாக்கியத்தின் சிரவணம் பரோக்ஷ ஞாநத்திற் கேதுவும், மகா வாக்கியத்தின் சிரவணம் அபரோக்ஷ ஞாநத்திற் கேதுவுமாம். இவ்வார்த்தை பூர்வம் பிரதிபாதநஞ் செய்யப்பட்டுள்ளது.

எவனுக்கு ஞாந முண்டாறுலும் அசம்பாவனை, விபரீத பாவனைக ளிருக்கின்றனவோ, அவன் இரண்டாவது சிரவணத்தையும், மநந நிதித்தியாசநங்களையுஞ் செய்க.

வேதாந்த வாக்கியத்தின் விசாரரூப சிரவணத்தால் வேதாந்த வாக்கியத்தின்கணுள்ள அசம்பாவனை நிவிர்த்தியாம்; வேதாந்தவாக்கியம் பிரஹ்மத்தைப் பிரதிபாதிக்கின்றதா? அல்லது வேறர்த்தத்தைப் பிரதிபாதிக்கின்றதா? என்னுஞ் சம்சயம் வேதாந்தவாக்கியத்தின் அசம்பாவனையாம்; அஃது அதனது விசாரத்தால் நிவிர்த்தியாம்.

மற்றும், மநநத்தால் பிரமேயத்தின் அசம்பாவனை நிவிர்த்தியாம். ஜீவப் பிரஹ்மங்களின் ஏகத்துவம் வேதாந்தத்தினது பிரமேய மெனப்படும். அவ்வேகத்துவஞ் சத்தியமா? அல்லது ஜீவப் பிரஹ்மங்களினது பேதஞ் சத்தியமா? என்னும் சம்சயம் பிரமேயத்தினது அசம்பாவனை யெனப்படும்; அது மநநத்தால் நிவிர்த்தியாம்.

விபரீதபாவனை நிதித்தியாசநத்தால் நிவிர்த்தியாம்.

இந்த ரீதியினுல், பிரதம சிரவணமோ ஞாநத்தின் வாயிலாக மோக்ஷத்திற் கேதுவாம்; விசாரரூப சிரவண மநந நிதித்தியாசநங்கள், அசம்பாவனை விபரீதபாவனைகளை நிவிர்த்தி செய்யும் வாயிலாய் மோக்ஷத்திற்கு ஏதுவாம். வேதாந்த மென்னும் நாமம் உபநிஷத்திற்காம். அஃது இந்தக் கிரந்தத்தினும் பிந்நமாயினும், அதன் சமமான அர்த்தத்தையுடைய

பாஷாவாக்கியங்கள் இக்கிரந்தத்திலும் உள்ளன. இதன் சிரவணத்தாலும் ஞானம் உண்டாகாநிற்கும். இவ்வார்த்தை மேற் பிரதிபாதநஞ் செய்யப்படும்.

இந்த ரீதியாக ஞாநத்துவாரா கிரந்தம் மோக்ஷத்திற்கு ஏதுவாம். இந்தக்கிரந்தம் விசாரரூபமாயும், மநநரூபமாயு மிருத்தலால், அசம்பாவனுதி தோஷங்களின் நிவிர்த்தி வாயிலாக மோக்ஷத்திற் கேதுவாம். ஆதலால், கிரந்தத்தால் மோக்ஷம் உண்டாகா தென்று கூறுவது கேவலம் ஹடமாத்திரமாம்.

67. கிரந்தத்தால் மோக்ஷமோ உண்டாம்; ஆயினும், வேறு சாதநங்களாலும் மோக்ஷம் உண்டாகாநிற்கும். ஆதலால், கிரந்தத்தின தாரம்பம் நிஷ்பலமா மெனின், அவனை யிவ்வாறு கேட்பாம்:—

வேறு சாதநம் யாது? எதனுல் மோக்ஷம் உண்டாகும்? உபநிஷத்து, சூத்திர பாஷ்யாதி சம்ஸ்கிருத கிரந்தங்கள் ஜீவப் பிரஹ்மங்களினது ஏகத்துவத்தைப் பிரதிபாதிப்பவைகளா யநேகம் உள்ளன. அவற்ருலும் ஞாநத்துவாரா மோக்ஷம் உண்டாகாநிற்கும். இதற்கு வேறே அதிகாரிகள் இல்லை. ஆதலால், இந்தக் கிரந்தம் நிஷ்பலமா மென்று கூறின்,

இவ்வார்த்தை சத்தியமாமாயினும், அவற்றின் அர்த்தங்களைக் கிரஹணஞ் செய்வதில் புத்திசமர்த் தில்லாத முமுக்ஷுக்களுக்கு அவற்ருல் ஞாநம் உண்டாகாது. ஆதலால், மந்த புத்தியையுடைய முமுக்ஷுக்களுக்கு அவற்றிற் பிரவிர்த்தி யுண்டாகாது; இந்தக் கிரந்தத்தினிடத்தே பிரவிர்த்தி யுண்டாகாநிற்கும்.

68. பின்னும், கிரந்தத்தால் மோக்ஷமும் உண்டாகாநிற்கும். சம்ஸ்கிருத கிரந்தத்தால் மந்த புத்தி யுடையோர்க்குப் போதமும் உண்டாகாது. முமுக்ஷுக்களும் உண்டு, ஆயினும், கிரந்தத்திற் பிரவிர்த்தி யுண்டாகின்ற தில்லை; எதனு லெனின், விவேக, வைராக்கிய, சம, தமாதியுடைய அதிகாரி துர்லபமாதலால் தம்மிடத்துச் சாதந மில்லாமையைப் பார்த்துக் கிரந்தத்திற் பிரவிர்த்திக்க மாட்டார்க ளெனின், அவர்களை யிவ்வாறு கேட்கவேண்டும்:—

அநேக அதிகாரிக ளில்லையா? அல்லது ஒருவருமில்லையா?

அநேக அதிகாரிக ளில்லை யெனின், அதனை நாமும் அங்கீகரிக்கின்ருேம்.

ஞானத்திற்கு யோக்கியமான அதிகாரிகள் ஒருவரும் இல்லை யெனின், அவ்வார்த்தை பொருந்தாது.

எதனுலெனின், அந்தக்கரணத்தின்கண் மூவகைத் தோஷ முள:—அவை மலம், விக்ஷேபம், சொரூபாவரணம் என்பன வாம்.

**மலம்** என்பது பாபத்திற்காம்.

**விட்சேபம்** என்பது சஞ்சலத்துவத்திற்காம்.

**ஆவரணம்** என்பது அஞ்ஞானத்திற்காம்.

சுபகர்மத்தால் மல தோஷ நிவிர்த்தியாம்.

உபாசனையால் விக்ஷேப தோஷ நிவிர்த்தியாம்.

ஞானத்தால் ஆவரண தோஷ நிவிர்த்தியாம்.

எவனுடைய அந்தக்கரணத்தின்கண் மலவிக்ஷேப தோஷங்க ளுள, அவன் அதிகாரி யல்லன்; ஆயினும், இந்த ஜந்மத்தின் கண் அல்லது பூர்வ ஜந்மத்தின்கண் செய்த சுபகர்ம உபாசனு நுஷ்டானத்தால் யாவனுடைய மல விக்ஷேப தோஷங்க ணுசமா யினவோ, அங்ஙனமே ஞான யோக்கிய அதிகாரியாயுளனே, அவ னுக்குக் கிரந்தத்திற் பிரவிர்த்தி உண்டாகும்.

### 69. பாமர விஷயி புருஷர்களின் லக்ஷணம்.

எல்லோருக்கும் விஷய சுகத்தின்கண்ணே அலம் (போது மென்னும்) புத்தி உளது; நித்திய சுகத்தை யொருவரும் இச்சிக் கின்ற தில்லை என்று முன்னர்க் கூறப்பட்டுள்ளது.

அது பொருந்தாது; ஏனெனின், பாமரன், விஷயி, சிஞ் ஞாசு, முக்தன் எனப் புருடர் நான்கு வகையினரா யுளர்.

(i) இந்த லோகத்தில் நிஷித்தமாயும் விகிதமாயு முள்ள போகத்தின்கண் ஆசத்தி யுடையவராய், சாஸ்திர சம்ஸ்கார ரகித மாயுள்ள புருடர் யாவர், அவர் பாமர ரெனப்படுவர்.

(ii) சாஸ்திராநுசாரமாய் விஷயங்களைப் போகிக்கின்றவர்க ளாய், பரலோகம் அல்லது இகலோகங்களிலுள்ள போக நிமித்தம் கர்மங்களைச் செய்யாநின்றோர் யாவர், அவர் **விஷயி** எனப்படுவர்.

## 70. ஜிஞ்ஞாசுவின் லக்ஷணம்.

(iii) எந்தப் புருடன் உத்தம சம்ஸ்காரத்தாற் சற் சாஸ் திரங்களைச் சிரவணஞ் செய்கின்றானோ, அந்தப் புருஷன் ஜிஞ் ஞாசு வெனப்படுவன். அவ்வுத்தமனுக்கு இப்படிப்பட்ட விவேக முதியாநிற்கும்.

விடய சுகம் அநித்தியமாம். எத்துணைக்காலம் விடய சுக மிருக்குமோ அத்துணைக்காலமும் யாதாயினுமொரு துக்கமவசிய மிருக்கும். பரிணாமத்தின்கண் நாசமுடையதாகிய சுகம் துக்கத் திற் கேதுவாம். வர்த்தமான காலத்திலும் (சுகம்) நசித்து விடு மென்னும் பயத்தினால் துக்கத்திற் கேதுவாம். இவ்வாறு விடய சுகம் துக்கத்தாற் கவரப்பட்டதாம்; ஆதலால் துக்க ரூபமாம்.

மற்றும், துக்க நிவிர்த்தி லௌகிக உபாயங்களா லுண்டா காது. அஃதேனெனின், யாவர் லௌகிக உபாயஞ் செய்கின்றன ரோ அவர்கட்கு மெல்லாத் துக்கமு நிவிர்த்தி யாவதில்லை; நிவிர் த்தியாயினும், மீண்டு முண்டாகாநிற்கின்றது.

எவ்வளவு காலஞ் சரீர மிருக்குமோ அது பரியந்தம் துக்க நிவிர்த்தி சம்பவிப்பதே யின்று.

அஃதெதனாலெனின், சரீரங்க ளெவ்வளவோ அவ்வளவும் புண்ணிய பாபங்களா லுளவாகின்றன.

மனித சரீரமோ மிசிர கர்மத்தினது பலமென்பது பிரசித்த மாம்.

தேவசரீரமு மிசிர கர்மத்தினது பலமே. தேவசரீரங் கேவலம் புண்ணியத்தின் பயனாகுமாயின், தம்மினு மதிகமா யுள்ள அந்நிய தேவதைகளின் விபூதியைப் பார்த்துத் தேவதை கட்குத் தாப முண்டாகாநிற்கின்றது; அஃதுண்டாதல் கூடாது. சர்வ தேவதைகளிற் பிரதாநமாகிய இந்திரனுக்கும் அநேக தைத்தியர், தாநவர்களின் பயஜந்ய துக்கம் சாஸ்திரத்தின்கண் கூறப்பட்டுளது. தேவசரீரங் கேவலம் புண்ணியத்தினது பலமே யாமாயின், தேவதைகட்குத் துக்க முண்டாதல் கூடாது. ஆத லால், தேவசரீரமும் புண்ணிய பாப மிரண்டினது பலமேயாம். மற்றும், சுருதியின்கண் தேவதைகள் பாப ரகிதரென்று கூறப் பட்டுளது; அதன தபிப்பிராயம் இதுவாம்:—கர்மத்திற்கு அதி

காரம் கேவல மனித சரீரத்தின்கண்ணே யுள்ளது ; பிறவற்றின்கண் இல்லை. ஆதலால் தேவசரீரத்தின்கண் செய்யப்பட்ட சுபம் அல்லது அசுப கர்மங்களின் பயன் தேவதைகட்கு உண்டாவ தில்லை. தேவசரீரத்திற்குப் பூர்வ சரீரத்தின்கண் செய்யப்பட்ட சுபாசுபங்களின் பயன் தேவசரீரத்தின்கண்ணு முளவாகா நிற்கும். இவ்வாற்றால், தேவசரீரம் மிசிர கர்மத்தின் பயனு யிருக்கின்றது.

மற்றும், திரியக்குப் பசு பக்ஷிகளினது சரீரமும் மிசிர கர்மத்தினது பலமாம். எதனாலெனின், அவற்றிற்குப் பிரசித்தமாகிய துக்கம் பாபத்தின் பலனும், மைதுநாதி சுகம் புண்ணியத்தின் பலனுமாம்.

உதரத்தா (வயிற்றினு)ற் கமநஞ் செய்வன திரியக் கெனப்படும்.

பக்ஷத்தாற் கமநஞ் செய்வன பக்ஷி யெனப்படும்.

நான்கு பாதங்களாற் கமநஞ் செய்வன பசு வெனப்படும்.

ஓரிடத்திற் பசு பக்ஷிகளுந் திரியக் கென்றே சொல்லப்படுகின்றன.

இவ்வாறு சர்வ சரீரமும் புண்ணிய பாவங்களாற் செய்யப்பட்டன வென்றே கொள்ளற் பாலதாம்.

சில சரீரங்கள் நியூந (சொற்ப) பாப, அதிக புண்ணியத்தாற் செய்யப்பட்டன ; அவை தேவ சரீரங்களாம். தத்தம் புண்ணியங்க ளெவையோ அவற்றாலேயே சர்வ தேவதைகளிடத்தும் பாபம் குறைவா யிருக்கின்றது. ஆதலால், நியூந பாபத்தினுலும், அதிக புண்ணியத்தினுலும் செய்யப்பட்டன தேவ சரீரங்களெனப்படும். இவ் வபிப்பிராயத்தானேயே சாஸ்திரத்தின்கண் கேவலம் புண்ணியத்தினது பலம் தேவ சரீர மென்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதலால் விரோத மில்லை. பிராஹ்மணர் மிகுதியாக வசிக்கும் கிராமம் பிராஹ்மணக் கிராம மெனப்படுவதுபோல, அதிக புண்ணியத்தினது பலமாகையால் தேவசரீரம் கேவலம் புண்ணியத்தினது பல மெனப்படுகின்றது; ஆனல் கேவலம் புண்ணியத்தினது பல மன்றாம்.

திரியக்கு, பசு, பக்ஷிகளினது சரீரங்கள் அதிக பாபத்தினுலும், நியூந புண்ணியத்தினுலும் ஆக்கப்பட்டிருக்கின்றன.

உத்தம மனிதரது சரீரம் தேவ சரீரத்திற்குச் சமானமாம்; நீசர்களது சரீரம் சர்ப்பாதிகளின் சரீரத்திற்குச் சமானமாம்.

இந்த ரீதியினுற் சர்வ சரீரங்களும் புண்ணிய பாபங்களா லாக்கப்பட்டனவாம். பாவத்தின் பலம் துக்கமாதலால், சரீர மிருக்கும் பரியந்தந் துக்க நிவிர்த்தி யுண்டாகாது.

அச்சரீரந் தர்மாதர்மத்தின் பலமாம். அவற்றி னிவிர்த்தி யின்றிச் சரீரத்தி னிவிர்த்தி யுண்டாகாது.எதனுலெனின், வர்த்தமான சரீரம் நிவிர்த்தியாயினும், புண்ணிய பாபத்தால் வேறு சரீர முண்டாகாநிற்கும். ஆதலால், புண்ணிய பாபத்தின் நிவிர்த்தி யின்றிச் சரீரத்தின் நிவிர்த்தி யுண்டாகாது.

அப்புண்ணிய பாபங்கள் இராகத் துவேடங்களி னுச மின்றி நிவிர்த்தியாகா. எதனு லெனின், வர்த்தமான புண்ணிய பாபங்கள் போகத்தால் நிவிர்த்தியாயினும், இராகத் துவேடங்களாற் பின்னும் புண்ணிய பாபங்க ளுளவாகாநிற்கும். ஆதலால், இராகத் துவேடங்களி னிவிர்த்தி யின்றிப் புண்ணிய பாபங்கள் நிவிர்த்தி யாகா.

அவ்விராகத் துவேடங்கள் அநுகூல பிரதிகூல ஞானங்களா லுளவாகாநிற்கும்.

எதன்கண் அநுகூல ஞாந முளதாமோ அதன்கண் இராக முளதாம்.

எதன்கண் பிரதிகூல ஞாந முளதாமோ அதன்கண் துவேஷ முளதாம்.

ஆதலால், அநுகூல பிரதிகூல ஞாநங்களி னிவிர்த்தி யின்றி இராகத் துவேஷங்கள் நிவிர்த்தியாகா.

அவ்வநுகூல பிரதிகூல ஞாநங்கள் பேதஞாநத்தா லுளவாகா நிற்கும். எதனு லெனின், எந்த வஸ்து தன் சொரூபத்தினும் பிந்நமா யறியப்பட்டதோ அதன்கண் அநுகூல ஞாநம் அல்லது பிரதிகூல ஞாந முளதாம். தனது சொரூபத்தில் அநுகூல பிரதிகூல ஞாநங்க ளுளவாகா.

சுக சாதநத்திற்கு அநுகூல மென்று பெயராம்.

துக்க சாதநத்திற்குப் பிரதிகூல மென்று பெயராம்.

தனது சொரூபஞ் சுகத்திற்காவது துக்கத்திற்காவது சாதநமாகவில்லை; சுகரூபமாயிருப்பினும் அது சுகத்திற்குச் சாதநமாக வில்லை. ஆதலால், சொரூபத்தினும் பிந்நமாக எந்த வஸ்து அறியப்படுகின்றதோ அதன்கண் அநுகூல பிரதிகூல ஞாநங்களுளவாகாநிற்கும். இந்த ரீதியினால் பதார்த்தங்களிடத் துளதாம் தன்னினும் வேறென்னும் ஞாநம் எதுவோ, அஃது அநுகூல பிரதிகூல ஞாநங்கட் கேதுவாம். அப் பேதஞாநத்தின் நிவிர்த்தியின்றி அநுகூல பிரதிகூல ஞாநங்கள் நிவிர்த்தியாகா.

அப் பேதஞாநம் அவித்யா ஜந்யமாம். எதனாலெனின், சர்வப் பிரபஞ்சமும் அவற்றின் ஞாநங்களும் சொரூபத்தின் அஞ்ஞாந காலத்தில் உள்ளன; இது சர்வ வேத சாஸ்திரங்களின் முரசாம். இந்த ரீதியினால் சர்வ துக்கத்திற்கு மேது சொரூபத்தினது அஞ்ஞாநமாம்.

அச்சொரூபத்தினது அஞ்ஞாநம் சொரூப ஞாந மின்றி நிவிர்த்தி யாகாது. எதனாலெனின், எந்த வஸ்துவின் அஞ்ஞாந மிருக்கின்றதோ அந்த அஞ்ஞாநம் அந்த வஸ்துவை யறிவதனால் நிவிர்த்தி யாகாநிற்கும். எங்ஙனம்? இரஜ்ஜுவினது அஞ்ஞாநம், இரஜ்ஜுவினது ஞாநத்தால் நிவிர்த்தி யாகாநிற்கும்; மற்றொன்றாலாகாது. ஆதலால், சொரூபஞாநமே அஞ்ஞாந நிவிர்த்தித் துவாரா துக்க நிவிர்த்திக்கு ஏதுவாம்.

சொரூப ஞாநத்தால் பிரஹ்மப்பிராப்தி யுண்டாகாநிற்கும். அப்பிரஹ்மம் நித்தியமாயும், ஆநந்த சொரூபமாயும், துக்க சம்பந்த ரகிதமாயு மிருக்கின்றது. ஆதலால், சொரூப ஞாநத்தால் நித்தியமும், துக்க சம்பந்த ரகிதமுமான பிரஹ்ம சொரூபாநந்தப் பிராப்தியும் உண்டாகும்.

இவ்வாற்றால் துக்கநிவிர்த்தி பரமாநந்தப் பிராப்திக்கு ஏது சொரூப ஞாநமாம். ஆதலால், சொரூபம் அறிதற்கு யோக்கியமா யுள்ளது.

இங்ஙனம் யாவனுக்கு விவேக முண்டாகுமோ அவன் ஜிஞ்ஞாஸு வென்று சொல்லப்படுவான்.

(iv) தூல, சூக்கும, காரண சரீரத்தினும் பிந்நமாகிய தனது சொரூபத்தைப் பிரஹ்ம சொரூபமாக அபரோக்ஷமா யறிந்துளோர் முத்த ரெனப்படுவர்.

## 71. கிரந்தத்தில் ஜிஞ்ஞாஸுவுக்குப் பிரவிர்த்தியுண்டாம்; முக்தாதி மூவர்க்கு முண்டாகா தெனல்.

இவ்வாற்றால், நான்கு வகையாகப் புருடருளர். அவர்களுள், பாமர, விஷயிகட்கு விஷய சுகத்தின்கண்ணே அலம் புத்தி (திர்ப்தி)யுளது. வேறு சில விஷயிகட்குப் பரமசுகத்தின் இச்சையு முண்டாகின்றது; ஆயினும், அவர் அதனை யடைதற்கு உபாய மில்லாததன்கண் உபாயபுத்தி செய்து பிரவிர்த்திக்கின்றனர். எதனாலெனின், உபாய ஞானமானது சத்சங்கம், சத்சாஸ்திர சிர வணங்களால் உண்டாகாநிற்கும். அவை அவர்கட் கில்லையாதலால், பாமரர்கட்கும் விஷயிகட்குஞ் சுகப்பிராப்தியி னிமித்தம் கிரந்தத் திற் பிரவிர்த்தி யுண்டாகாது. துக்கநிவிர்த்தி நிமித்தமும் அவ் விருவரும் அந்நியவுபாயங்களிற் பிரவிர்த்தியாநிற்பர்; அந்நிமித் தத்தாலுங் கிரந்தத்திற் பிரவிர்த்தி யுண்டாகாது. ஆதலால், (துக்கநிவிர்த்தி, சுகப்பிராப்திகளின் பொருட்டு) விஷயிகட்கும், பாமரர்கட்கும் கிரந்தத்திற் பிரவிர்த்தி யுண்டாகா.

மற்றும், முத்தனுக்கும் கிரந்தத்தில் பிரவிர்த்தி யுண்டா காது. அஃதேனெனின், ஞானவான் முத்தனென்று சொல்லப்படு வான். அவன்கிருதகிருத்தியன். அவனுக்குஒரு கர்த்தவ்யமுமில்லை. இது மேலே பிரதிபாதநஞ் செய்யப்படும். மற்றும் லீலையால் முத் தன் பிரவிர்த்திப்பானாயினும், முத்தனுக்குக் கிரந்தத்தின்கண் பிர விர்த்தியினால் ஒரு பிரயோஜநசித்தியு முண்டாகாது. ஆதலால், முத்த னிமித்தமுங் கிரந்த முண்டாகவில்லை.

ஆயினும், ஜிஞ்ஞாஸுக்கு விஷயசுகத்தின்கண் அலம்புத்தி யுண்டாகாது; அவனுக்குப் பரமசுகத்திலும், துக்கத்தின் அத்தி யந்த நிவிர்த்தியிலும் இச்சை யுளது. அப் பரமசுகத்தின் பிராப்தியும், துக்கத்தின் அத்தியந்த நிவிர்த்தியும் ஞானத்தா லன்றி உண்டாகாவென்று சத்சங்கத்தால் விவேகமுண்டானவனுக் குக் கிரந்தத்தின்கண் பிரவிர்த்தி உண்டாகும். இவ்வாற்றால் மோக்ஷேச்சையுடைய அதிகாரியெனல் பொருந்துகின்றது.

## 72. விஷய மண்டநம்.

### 39-44 லிலுள்ள பூர்வபக்ஷத்தின் உத்தரம்.

ஜீவன் இராகாதி கிலேச சகிதன்; பிரஹ்மம் கிலேச ரகிதம். ஆதலால், ஜீவப்பிரஹ்மங்களின் ஏகத்துவம் கிரந்தத்திற்கு

விஷயமா மெனக் கூறியது பொருந்தா தென்று பூர்வம் (39-ல்) கூறப்பட்டது.

இவ்வார்த்தை சத்தியமாமாயினும், இராகத் துவேஷ ரகிதமாகிய சாக்ஷி யாது அதற்குப் பிரஹ்மத்தோ டேகத்துவம் பொருந்தும்.

மேலும், கர்த்தா போக்தாவிற்குப் பிந்நமாகிய சாக்ஷி வந்தியா புத்திரனுக்குச் சமாநமா யசத்தா மென்று பூர்வங் கூறப்பட்டது.

அது பொருந்தாது; எதனாலெனின், கர்த்தா போக்தாவாகிய சம்சாரி யாவன், அவனது விசேஷிய பாகத்திற்குச் சாக்ஷி யென்று பெயராம். சாக்ஷியை நிஷேதஞ் செய்யின், சம்சாரியின் விசேஷிய பாகத்தினது நிஷேதமாவதால், கர்த்தா போக்தாவாகிய சம்சாரிக்கே நிஷேத முண்டாம்.

ஒரே சைதந்யத்தின்கண் சாக்ஷிபாவத்திற்கு அந்தக்கரணம் உபாதியாயும், கர்த்தா போக்தாத் தன்மைக்கு விசேஷணமாயு முளது.

விசேஷணத்தோடு கூடியது விசிஷ்ட மெனப்படும்.

உபாதி யுடையது உபஹித மெனப்படும்.

எந்த வஸ்து எவ்வளவு தேசத்தில் தானிருக்குமோ, அவ்வளவு தேசத்தி லிருக்கும் வஸ்துவை யறிவித்துத் தான் பிருதக்காக விருக்குமோ அஃது உபாதி யெனப்படும். எங்ஙனம், நையாயிக மதத்தில் கர்ணகோளகத்தி லிருக்கும் ஆகாசம் சுரோத்திர மெனப்படும். அக் கர்ணகோளகம் சுரோத்திரத்திற்கு உபாதியாம். அஃதெதனா லெனின், அக் கர்ணகோளகம் எவ்வளவு தேசத்தில் தானுள்ளதோ அவ்வளவு தேசத்தி லிருக்கும் ஆகாசத்தைச் சுரோத்ரரூபமாக அறிவித்துத் தான் பிருதக்காக விருக்கின்றது; ஆதலால், கர்ணகோளகம் சுரோத்திரத்திற்கு உபாதியாம். அங்ஙனமே, அந்தக்கரணமும் எவ்வளவு தேசத்தில் தானுள்ளதோ அவ்வளவு தேசத்திலுள்ள சேதநத்தைச் சாக்ஷி சமிஞ்ஞையாலறிவித்துத் தான் பிரதக்காக விருக்கின்றது; ஆதலால், அந்தக்கரணம் சாக்ஷிக்கு உபாதியாம்.

இதனா லிவ்வர்த்தஞ் சித்தித்தது:—அந்தக்கரணத்தி லிருக்கும் சேதநமாத்திரம் யாது அது சாக்ஷி யெனப்படும்.

73. தன்னோடு கூடிய வஸ்துவை யாது அறிவிக்கின்றதோ அது விசேஷண மெனப்படும்.

எங்ஙனம்,குண்டலமுடைய புருஷன் வந்தா னென்புழி, புருஷனுக்குக் குண்டலம் விசேஷணமாம்; எதனாலெனின், தன்னோடு கூடின புருஷன் வரவைக் குண்டலம் அறிவித்தது ; ஆதலால் விசேஷணமாம். நீலரூபமுடைய கடத்தை நான் பார்க்கின்றே னென்புழியும், நீலரூபம் கடத்தினது விசேஷணமாம்.

அங்ஙனமே, அந்தக்கரணமும் கர்த்தா போக்தாவாகிய ஜீவ சேதநத்திற்கு விசேஷணமாம். எதனா லெனின், அந்தக்கரண சகித சேதநத்தைக் கர்த்தா போக்தாரூபமாக அந்தக்கரணம் அறிவிக்கின்றது ; ஆதலால், சம்சாரிக்கு அந்தக்கரணம் விசேஷணமாம்.

இதனா லிது சித்தமாயிற்று:—அந்தக்கரணத்தின்க ணுள்ள சேதநமும் அந்தக்கரணமும் சம்சாரி யெனப்படும். இவ்வர்த்தத்தை விஸ்தாரமாக மேற் கூறுவாம்

74. இராகத் துவேஷ முதலிய கிலேசம் சம்சாரியின்க ணுள்ளது; சாக்ஷியின்கணில்லை. சம்சாரியிடத்திலும், விசேஷணமாகிய அந்தக்கரணத்தி லிருக்கின்றது;விசேஷியமாகிய சைதந்யத்தின்கணில்லை. அஃதெதனா லெனின், சம்சாரியினது விசேஷியமாகிய சைதந்ய பாகத்திற்குச் சாக்ஷியோடு பேத மில்லை.

எதனா லெனின், ஒரு சைதந்யமே அந்தக்கரணத்தோடு சம்சாரி யெனப்படுகின்றது.

அந்தக்கரண பாகத்தை விட்டுச் சாக்ஷியெனப்படுகின்றது.

ஆதலால், சாக்ஷிக்கும், சம்சாரியின் விசேஷிய பாகத்திற்கும் பேத மில்லை. விசேஷிய பாகத்தில் கிலேசத்தை அங்கீகாரஞ் செய்யின், சாக்ஷியினிடத்தும்(கிலேசத்தை) அங்கீகாரஞ் செய்தல் வேண்டும். சாக்ஷி சர்வக்கிலேச ரகிதமென்பது வேதத்தின் சித்தாந்தமாதலால், சம்சாரியின் விசேஷிய பாகத்திற் கிலேச மில்லை. பின்னை யெதன்கணுள்ள தெனின், விசேஷண மாத்திர அந்தக்கரணத்தின்க ணுள்ளது. இந்த அபிப்பிராயத்தினாற்றான், ராகத்துவேஷங்கள் புத்தியின் தர்மங்களாம் ; ஜீவனது தர்மங்களன்றென்று கூறப்படுகின்றது. இந்த ரீதியினால் அந்தக்கரண

விசிஷ்டனுக்குப் பிரஹ்மத்தோ டேகத்துவம் பொருந்தாதாயினும், அந்தக்கரணோபகித சாக்ஷிக்குப் பிரஹ்மத்தோ டேகத்துவம் பொருந்தும்.

75. 41-44 லிலுள்ள பூர்வ பக்ஷத்தின் உத்தரம்.

மற்றும், சாக்ஷி நாநாவாம்; பிரஹ்மம் ஏகமாம். ஆதலால், நாநா சாக்ஷிக்கு ஏகப்பிரஹ்மத்தோ டேகத்துவம் பொருந்தாது. மேலும், வியாபகமாகிய ஏகப் பிரஹ்மத்தோடு சாக்ஷிக்கு அபேதத்தை யங்கீகரிக்கின், சாக்ஷியும் சர்வ சரீரங்களிலும் வியாபகமாயேகமேயாகா நிற்கும், ஆதலால், சர்வ சரீரங்களின் சுகதுக்கமும் பாநமாக வேண்டுமென்று பூர்வம் சொல்லப்பட்டது. அச்சங்கை பொருந்தாது. எதனாலெனின், ஈஸ்வரசாட்சி ஏகமாம்; ஜீவசாக்ஷி நாநாவும், பரிச்சிந்நமுமாம்; ஆயினும், வியாபகமாகிய பிரஹ்மத்தோடு பிந்ந மன்றாம். எங்ஙனம் கடாகாசம் நாநாவும் பரிச்சிந்நமுமாயினும் மகாகாசத்தோடு பிந்ந மன்றாம்; பின்னையோ, மகாகாசரூபமே கடாகாசமாம். அங்ஙனமே நாநாவாய்ப் பரிச்சிந்நமாயுள்ள சாக்ஷியும் பிரஹ்மரூபமேயாம்.

76. பின்னரும், சுகதுக்கங்கள் அந்தக்கரண விர்த்திக்கு விஷயமன்றென்று பூர்வஞ் சொல்லப்பட்டது. அஃதசங்கதமாம்.

எதனாலெனின், சுகதுக்கங்கள் சாக்ஷி பாஸ்யமாம். அச்சாக்ஷி நாநாவாம். அங்ஙனமாயினும், எப்போது அந்தக்கரணத்தின் பரிணமம் சுகரூபம் அல்லது துக்கரூபமாகின்றதோ, அதே சமயத்தில் அந்தக்கரணத்தினது ஞானரூபவிர்த்தி சுகதுக்கங்களை விஷயஞ்செய்வதா யுண்டாகின்றது. அவ்விர்த்தியிலாரூடமாகிய சாக்ஷி அவற்றைப் பிரகாசிக்கின்றது. இந்த ரீதியினால் கிரந்தக்காரர் சுகதுக்கங்கள் சாக்ஷிக்கு விஷய மென்றனர்; விர்த்தியின்றிக் கேவல சாக்ஷிக்கு விஷய மன்றாம். இவ்விடத்தில் இஃது இரகசியமாம்:—ஆகாயத்தில் கடாகாயமென்னும் நாமமும் ஜலங்கொணர்தல் ரூபமாகிய காரியமும் பிரதீதியாகின்றன. அவை கடரூப உபாதியின் திருஷ்டியினால் பிரதீதியாகின்றன; கடரூப உபாதியின் திருஷ்டியின்றி கடாகாயமென்னும் நாமமும், ஜலங்கொணர்தல் ரூபமாகிய காரியமும் பிரதீதியாகா. பின்னையோ, ஆகாசமாத்திரமே பிரதீதியாகின்றது. ஆதலால், கடாகாசமும் மகாகாச ரூபமாம்.

அங்ஙனமே, சேதநத்தின்கண் சாக்ஷி யெனு நாமமுந் தர்ம சகித அந்தக்கரணத்தினது பிரகாசரூபமாகிய காரியமும் அந்தக் கரணரூப உபாதியின் திருஷ்டியினுல் பிரதீதியாகின்றன. அந்தக் கரணரூப உபாதியின் திருஷ்டி யின்றிச் சாக்ஷி யெனு நாமமும், தர்மசகித அந்தக்கரணத்தினது பிரகாசரூப காரியமும் பிரதீதி யாகா; பின்னேயோ, சைதந்யமாத்திரப் பிரஹ்மமே பிரதீதியா கின்றது. ஆதலால், சாக்ஷி பிரஹ்மமாம்.

இவ்வபிப்பிராயத்தினுல் சாக்ஷி ஏகமென்று புகலப்பட்டது. ஏனெனின்,

உபாதியின் திருஷ்டி யின்றிச் சாக்ஷியின்கண் நாநாத்துவ மும் பரிச்சின்நபாவமும் பிரதீதியாகா. அச்சாக்ஷி ஜீவபதத்தின் லக்ஷியமாம். இவ்வார்த்தையினை மேற்கூறுவாம். இந்த ரீதி யினுல் ஜீவப் பிரஹ்மங்களினது ஏகத்துவம் கிரந்தத்திற்கு விஷய மெனல் பொருந்துகின்றது.

77. பிரயோஜந மண்டநம்.

45-வது இலக்கத்துப் பூர்வ பக்ஷத்தின் உத்தரம்.
காரிய அத்தியாச நிரூபணம்.

பந்தம் சத்தியம்; ஞாநத்தால் அதனது நிவிர்த்தி பொருந் தாது. ஞாநத்தால் மித்தியா வஸ்துவின் நிவிர்த்தி பொருந்தும். ஆத்மாவின்கண் மித்தியா பந்தத்தின் சாமக்கிரி இல்லை; ஆத லால் பந்தஞ் சத்தியமாம். ஞாநத்தால் அதனது நிவிர்த்தி உண்டாகா தென்று பூர்வஞ் சொல்லப்பட்டது.

அவ்வார்த்தை பொருந்தாது. எதனுலெனின், பந்தம் மித் தையாம்; ஞாநத்தால் அதனது நிவிர்த்தி பொருந்தும்.

78. 47-48-ல் உள்ள பூர்வ பக்ஷத்தின் உத்தரம்.

மற்றும், வஸ்துவினது ஞாநம் சம்ஸ்காரவாயிலாய் அத் தியாசத்திற்கு ஏதுவாம். எங்ஙனம் சத்திய சர்ப்பத்தின் ஞாநம் சம்ஸ்காரவாயிலாய்ச் சர்ப்ப அத்தியாசத்திற் கேதுவாம்; அங்ஙனமே சத்திய பந்தம் உளதாயின், சத்திய பந்தத்தினது ஞாநம் உளதாம். சித்தாந்தத்தில், அநாத்ம வஸ்துக்களவை யுஞ் சத்திய மன்றும். ஆதலால், சத்திய வஸ்துவின் ஞாநம் சம்ஸ்

கார வாயிலாய் அத்தியாசத்திற்குச் சாமக்கிரியாம்; அஃதின் மையால், பந்தம் அத்தியாசரூப மன்று; பின்னையோ, சத்தியமா மென்று பூர்வஞ் சொல்லப்பட்டது.

அச்சங்கை பொருந்தாது. எதனாலெனின், அத்தியாசத்தில் சம்ஸ்காரவாயிலாகச் சத்திய வஸ்துவின் ஞானம் ஏது வன்றும்; பின்னையோ, வஸ்துவின் ஞானம் ஏதுவாம். அவ்வஸ்து சத்தியமா யிருக்குக அல்லது மித்தையா யிருக்குக. சத்திய வஸ்துவின் ஞானமே அத்தியாசத்தின்கண் ஏதுவாமாயின், ஒரு புருஷன் சத்தியமாகிய சிற்றீச்ச விருக்ஷத்தினைப் பாராதவனுய் வித்தையாடி கற்பித்த மித்தையாகிய அவ்வீச்ச விருக்ஷத்தினைப் பன்முறை பார்த்தும், அவ்வித்தையாடியினால் இது சிற்றீச்ச விருக்ஷ மெனக் கேட்டு முளனே, பேரீச்ச விருக்ஷத்தை யொருகாலத்தும் பார்த்தவனுங் கேட்டவனு மலனே, அவனுக்குப் பேரீச்ச விருக்ஷத்தினைப் பார்த்துச் சிற்றீச்ச விருக்ஷத்தினது அத்தியாச முண்டாகின்றது; அஃதுண்டாகலாகாது. எதனாலெனின், சத்தியமாகிய சிற்றீச்ச விருக்ஷத்தின் ஞானம் அவனுக்கு இல்லை. மற்றும், எம்முடைய ரீதியினானே வித்தையாடியினாற் காண்பிக்கப்பட்ட மித்தையாகிய சிற்றீச்ச விருக்ஷத்தினது ஞான முளதாதலால் அத்தியாசம் பொருந்தும். ஆதலால், சஜாதீய வஸ்துவின் ஞான ஜந்ய சம்ஸ்காரமே அத்தியாசத்திற்கு ஏதுவாம்.

அச் சம்ஸ்காரத்தினை யுண்டாக்கும் ஞானமும், அதனது விஷயமும் மித்தையாக அல்லது சத்தியமாக இருக்குக. சம்ஸ்கார வாயிலாக ஞானம் ஏதுவாம்.

மற்றும், ஞான ஜந்ய சம்ஸ்காரம் ஏது வென்று சொல்வதில், அர்த்தபேத மில்லை; ஒரே அர்த்தமாம். எதனாலெனின், சம்ஸ்கார வாயிலாக ஞானம் ஏதுவா மென்பதற்கு அர்த்த மிதுவாம்:—ஞானஞ் சம்ஸ்காரத்திற்கு ஏதுவும், சம்ஸ்காரம் அத்தியாசத்திற் கேதுவுமாம். ஆதலால், சம்ஸ்கார வாயிலாக ஞானத்திற்கு ஏதுத்துவங் கூறினும், ஞான ஜந்ய சம்ஸ்காரத்திற்கே அத்தியாசத்தின்கண் ஹேதுத்துவஞ் சித்தமாயிற்று.

79. மற்றும், கேவல வஸ்துவின் ஞானத்திற்கே அத்தியாசத்தின்கண் ஹேது வென்று கூறின், (அது) பொருந்தாது. எதனாலெனின், இது நியமமாம்:—எது ஹேதுவாமோ அது காரியத்

திற்கு அவ்வியவகித பூர்வகாலத்தி லிருக்கவேண்டும். எங்ஙனம், கடத்திற் கேதுவாகிய தண்டம் கடத்திற்கு அவ்வியவகித பூர்வ காலத்திலுளதோ அங்ஙனமே அத்தியாசத்திற்கு ஹேது ஞாந மென் றங்கீகாரஞ் செய்யின், அஃதும் அத்தியாசத்திற்கு அவ் வியவகித பூர்வ காலத்தி லிருக்கவேண்டும்.

அது பொருந்தது; எதனு லெனின், எப்புருஷனுக்குச் சர்ப்ப ஞாந முண்டாமோ, அவனுக்கு ஞாநத்திற்குத் திங்களி (மாச த்தி)ன் பின்னரு மிரஜ்ஜுவின்கண் சர்ப்பத்தின் அத்தியாச முண் டாகாநிற்கின்றது. அஃதுண்டாக வேண்டுவ தில்லை; எதனு லெனின், ரஜ்ஜுவின்கண் சர்ப்ப அத்தியாசத்திற்கு ஹேதுவாகிய சர்ப்பத்தின் ஞாநம் நாசமாய் விட்டது; ஆதலால், அவ்வியவகித பூர்வ காலத்தி லில்லை; பூர்வ காலத்தி லிருப்பினும், அவ்வியவகித பூர்வ காலத்தி லில்லை.

அவ்வியவகித மென்பது அந்தராய ரஹிதமாம்.

வியவகித மென்பது அந்தராய சஹிதமாம். அவ்வியவகித மென்பது திரோதாந மின்மைய தென்றுமாம்.

பின்னும், காரியத்திற்குப் பூர்வ காலத்தில் ஹேது இருத்தல் வேண்டும்; வியவகித பூர்வ காலத்தி லிருக்குக, அல்லது அவ்வியவகித பூர்வ காலத்தி லிருக்குக; காரியத்திற்கு அவ் வியவகித பூர்வ காலத்தின்கண்ணே ஹேது இருக்கவேண்டு மென்று இங்ஙனம் நியமம் அங்கீகரிக்கின், விகிதகர்மம் ஸ்வர்க்கப் பிராப்திக்கு ஹேது; நிஷித்தகர்மம் நரகப் பிராப்திக்கு ஹேது வென்னுஞ் சாஸ்திர வசநம் அப்பிரமாண மாய்விடும். எதனு லெனின், காயிக, வாசிக, மாநசிகக் கிரியை கட்குக் கர்மம் என்று பெபராம். அக்கிரியைகள் அநுஷ்டாந கால த்திற் கநந்தரம் நாசமாகின்றன. ஸ்வர்க்க நரகங்கள் காலாந்தர த்தி லுண்டாகின்றன. ஆதலால், ஸ்வர்க்க நரகப் பிராப்திக்கு அவ்வியவகித பூர்வகாலத்தில் விகித நிஷித்த கருமங்களின் ரும். எங்ஙனம் வியவகித பூர்வ காலத்தில் சுபாசுபகர்மங்கள் ஸ்வர்க்க நரகப் பிராப்திகட்கு ஹேதுவா யுள்ளன, அங்ஙனமே வியவகித பூர்வ காலத்தி லுள்ள சர்ப்ப ஞாநமும், இரஜ்ஜு வின்கண் சர்ப்ப அத்தியாசத்திற்கு ஏதுவா மெனின்,

அவ்வார்த்தை பொருந்தாது; அஃதெதனு லெனின், எங்ஙனம் நஷ்ட ஞானத்தானும், நஷ்ட கர்மத்தானும் அத்தியாசமும், ஸ்வர்க்க நரகப் பிராப்தியும் அங்கீகாரஞ் செய்யப்படுகின்றன; அங்ஙனமே, மிருதனுன குலாலனுனும், நஷ்டமான தண்டத்தானுங் கட முண்டாகவேண்டும். எதனு லெனின், எங்ஙனம் இரஜ்ஜுவின்கண் சர்ப்ப அத்தியாசத்திற்கு வியவகித பூர்வ காலத்தில் சர்ப்ப ஞானமும் ஸ்வர்க்க நரகப் பிராப்திக்கு வியவகித பூர்வ காலத்தில் சுபாசுபகர்மங்களும் உளவோ, அங்ஙனம் கடத்திற்கு வியவகித பூர்வ காலத்தில் நஷ்ட தண்டம் உளது; மிருதனுன குலாலனும் உளன். அந்நஷ்ட தண்டத்தானும் மிருத குலாலனுனும் கட முண்டாதல் வேண்டும்; அஃதுண்டாவ தில்லை. ஆதலால், வியவகித பூர்வ காலத்தி லுள்ள வஸ்து ஹேதுவாகின்ற தில்லை; பின்னையோ, அவ்வியவகித பூர்வ காலத்தி லுள்ள வஸ்து ஹேதுவாகாநிற்கும்.

மற்றும், சுபாசுப கர்மங்களும் காலாந்தரத்தில் வருவதாயுள்ள ஸ்வர்க்க நரகப் பிராப்திக்கு ஹேது வன்று; மற்றென்னையெனின், சுபகர்மமோ தனது அவ்வியவகித வுத்தர காலத்தில் தர்மோற்பத்தியைச் செய்கின்றது; அசுப கர்மம் அதர்மோற்பத்யைச் செய்கின்றது. அந்தத் தர்மாதர்மங்கள் அந்தக்கரணத்தின்கண்ணே யுள்ளன. அவற்றால் காலாந்தரத்தில் ஸ்வர்க்க நரகப் பிராப்தி உளவாகின்றன; அவற்றினனந்தரம் தர்மாதர்மங்களும் நாசமாகின்றன. இவ் வபிப்பிராயத்தானேயே சாஸ்திரங்களிற் சுபாசுப கர்மங்கள் அபூர்வத்துவாரா பலத்திற் ஹேது வெனப்படுகின்றன; சாக்ஷாத் ஏது வன்றாம். தர்மாதர்மத்திற்கு அபூர்வ மென்றும், அதிருஷ்ட மென்றும், புண்ணிய பாப மென்றும் நாமஞ் சொல்வர். ஓரிடத்தில் தர்மாதர்மங்களை யுற்பத்தி செய்யும் சுபாசுபக் கிரியைகளையுந் தர்மாதர்ம மென்று சொல்வர். ஒருவன் சுபக்கிரியை செய்வனேல் அவனை ஜனங்கள் இவன் தர்மஞ் செய்யாநின்றனன் என்று கூறுகின்றனர்; மற்றும் அசுபக்கிரியை செய்யாநின்றவனை இவன் அதர்மம் செய்யாநின்றனன் என்று சொல்லாநின்றனர். அச் சுபாசுபக் கிரியைக்குத் தர்மாதர்ம மென்று நாம மில்லை; பின்னையோ, சுபாசுபக் கிரியைகள் தர்மாதர்மங்களுக்கு ஜனகமாம். ஆதலால், கிரியைகளைத் தர்மாதர்ம

மென்றனர். எங்ஙனம், ஆயுவை விர்த்தி செய்யும் கிருதத்தைச் சாஸ்திரத்தில் ஆயு வென்றனர்.

இந்த ரீதியினல் அவ்வியவகித பூர்வ காலத்தில் ஏதுவானது உளதாகாநிற்கும்.

80. இரஜ்ஜுவின்கண் சர்ப்ப அத்தியாசத்திற்கு அவ்வியவகித பூர்வ காலத்தில் சர்ப்ப ஞாந மில்லை; சர்ப்ப ஞாநமானது இரஜ்ஜுவின்கண் சர்ப்ப அத்தியாசத்திற்குஹேதுவன்று;பின்னையோ, சர்ப்ப ஞாந ஜந்ய சம்ஸ்காரமே இரஜ்ஜுவின்கண் சர்ப்ப அத்தியாசத்திற்கு ஹேதுவாம். அங்ஙனமே, இப்பியின்கண் வெள்ளி அத்தியாசத்திற்கு ஹேது வெள்ளி ஞாந ஜந்ய சம்ஸ்காரமாம். இவ்வாறே, சகல சம்ஸ்காரங்களுமே அத்தியாசத்திற்கு ஹேதுக்களாம்.

மற்றும், வஸ்துவினது ஞாநம் சம்ஸ்காரத்திற்கு ஹேதுவாம். எங்ஙனம் சுபாசுப கர்ம ஜந்ய தர்மார்தர்மங்கள் அந்தக்கரணத்தின்க ணுளவோ, அங்ஙனமே, வஸ்துவின் ஞாந ஜந்ய சம்ஸ்காரமும் அந்தக்கரணத்தின்க ணுளது.

எந்தப் புருஷனுக்குப் பூர்வம் சர்ப்பத்தினது ஞாந முண்டாக வில்லையோ அவனுக்கும் வேறு வஸ்துவின் ஞாந ஜந்ய சம்ஸ்கார மிருப்பினும், இரஜ்ஜுவின்கண் சர்ப்ப அத்தியாச முண்டாகாது. எந்த வஸ்துவினது அத்தியாச முண்டாமோ அதன் சஜாதீய வஸ்துவின் ஞாந சம்ஸ்காரம் அத்தியாசத்திற்கு ஹேதுவாம்; விஜாதீய ஞாநத்தின் சம்ஸ்காரம் ஹேது வாகாது. சர்ப்பத்தின் சஜாதீயஞ் சர்ப்பமாகும்; வேறில்லை. யாவனுக்குப் பூர்வம் சர்ப்ப ஞாந மில்லை, அந்ய வஸ்துவின் ஞாந முண்டு, அவனுக்குச் சஜாதீய வஸ்துவின் ஞாந ஜந்ய சம்ஸ்கார மில்லை; ஆதலால், இஜ்ஜுவின்கண் சர்ப்ப அத்தியாச முண்டாகாது.

சூக்ஷுமாவஸ்தையினது நாமம் சம்ஸ்காரமாம். இவ்விதத்தினல், அத்தியாசத்திற்குப் பூர்வம் சஜாதீய வஸ்துவின் ஞாந மியாது, அதன் சம்ஸ்காரம் அத்தியாசத்திற்கு ஹேதுவாம்.

சத்திய வஸ்துவின் ஞாந சம்ஸ்காரமே அத்தியாசத்திற்கு ஹேதுவாம்; மித்தையா வஸ்துவின் ஞாந சம்ஸ்காரம் ஹேது

அவ்வார்த்தை பொருந்தாது; அஃதெதனு லெனின், எங்ஙனம் நஷ்ட ஞானத்தானும், நஷ்ட கர்மத்தானும் அத்தியாசமும், ஸ்வர்க்க நரகப் பிராப்தியும் அங்கிகாரஞ் செய்யப்படுகின்றன; அங்ஙனமே, மிருதனுன குலாலனுனும், நஷ்டமான தண்டத்தாலுங் கட முண்டாகவேண்டும். எதனு லெனின், எங்ஙனம் இரஜ்ஜுவின்கண் சர்ப்ப அத்தியாசத்திற்கு வியவகித பூர்வ காலத்தில் சர்ப்ப ஞானமும் ஸ்வர்க்க நரகப் பிராப்திக்கு வியவகித பூர்வ காலத்தில் சுபாசுபகர்மங்களும் உளவோ, அங்ஙனம் கடத்திற்கு வியவகித பூர்வ காலத்தில் நஷ்ட தண்டம் உளது; மிருதனுன குலாலனும் உளன். அந்நஷ்ட தண்டத்தாலும் மிருத குலாலனுலும் கட முண்டாதல் வேண்டும்; அஃதுண்டாவ தில்லை. ஆதலால், வியவகித பூர்வ காலத்தி லுள்ள வஸ்து ஹேதுவாகின்ற தில்லை; பின்னையோ, அவ்வியவகித பூர்வ காலத்தி லுள்ள வஸ்து ஹேதுவாகாநிற்கும்.

மற்றும், சுபாசுப கர்மங்களும் காலாந்தரத்தில் வருவதாயுள்ள ஸ்வர்க்க நரகப் பிராப்திக்கு ஹேது வன்று; மற்றென்னையெனின், சுபகர்மமோ தனது அவ்வியவகித வுத்தர காலத்தில் தர்மோற்பத்தியைச் செய்கின்றது; அசுப கர்மம் அதர்மோற்பத்யைச் செய்கின்றது. அந்தத் தர்மாதர்மங்கள் அந்தக்கரணத்தின்கண்ணே யுள்ளன. அவற்றுல் காலாந்தரத்தில் ஸ்வர்க்க நரகப் பிராப்தி உளவாகின்றன; அவற்றினனந்தரம் தர்மாதர்மங்களும் நாசமாகின்றன. இவ் வபிப்பிராயத்தானேயே சாஸ்திரங்களிற் சுபாசுப கர்மங்கள் அபூர்வத்துவாரா பலத்திற் ஹேது வெனப்படுகின்றன ; சாக்ஷாத் ஏது வன்றும். தர்மாதர்மத்திற்கு அபூர்வ மென்றும், அதிருஷ்ட மென்றும், புண்ணிய பாப மென்றும் நாமஞ் சொல்வர். ஓரிடத்தில் தர்மாதர்மங்களை யுற்பத்தி செய்யும் சுபாசுபக் கிரியைகளையுந் தர்மாதர்ம மென்று சொல்வர். ஒருவன் சுபக்கிரியை செய்வனேல் அவனை ஜநங்கள் இவன் தர்மஞ் செய்யாநின்றனன் என்று கூறுகின்றனர் ; மற்றும் அசுபக்கிரியை செய்யாநின்றவனை இவன் அதர்மம் செய்யாநின்றனன் என்று சொல்லாநின்றனர். அச் சுபாசுபக் கிரியைக்குத் தர்மாதர்ம மென்று நாம மில்லை ; பின்னையோ, சுபாசுபக் கிரியைகள் தர்மாதர்மங்களுக்கு ஜநகமாம். ஆதலால், கிரியைகளைத் தர்மாதர்ம

மென்றனர். எங்ஙனம், ஆயுவை விர்த்தி செய்யும் கிருதத்தைச் சாஸ்திரத்தில் ஆயு வென்றனர்.

இந்த ரீதியினல் அவ்வியவகித பூர்வ காலத்தில் ஏதுவானது உளதாகாநிற்கும்.

80. இரஜ்ஜுவின்கண் சர்ப்ப அத்தியாசத்திற்கு அவ்வியவகித பூர்வ காலத்தில் சர்ப்ப ஞாந மில்லை; சர்ப்ப ஞாநமானது இரஜ்ஜுவின்கண் சர்ப்ப அத்தியாசத்திற்குஹேதுவன்று;பின்னையோ, சர்ப்ப ஞாந ஜந்ய சம்ஸ்காரமே இரஜ்ஜுவின்கண் சர்ப்ப அத்தியாசத்திற்கு ஹேதுவாம். அங்ஙனமே, இப்பியின்கண் வெள்ளி அத்தியாசத்திற்கு ஹேது வெள்ளி ஞாந ஜந்ய சம்ஸ்காரமாம். இவ்வாறே, சகல சம்ஸ்காரங்களுமே அத்தியாசத்திற்கு ஹேதுக்களாம்.

மற்றும், வஸ்துவினது ஞாநம் சம்ஸ்காரத்திற்கு ஹேதுவாம். எங்ஙனம் சுபாசுப கர்ம ஜந்ய தர்மர்தர்மங்கள் அந்தக்கரணத்தின்க ணுளவோ, அங்ஙனமே, வஸ்துவின் ஞாந ஜந்ய சம்ஸ்காரமும் அந்தக்கரணத்தின்க ணுளது.

எந்தப் புருஷனுக்குப் பூர்வம் சர்ப்பத்தினது ஞாந முண்டாக வில்லையோ அவனுக்கும் வேறு வஸ்துவின் ஞாந ஜந்ய சம்ஸ்கார மிருப்பினும், இரஜ்ஜுவின்கண் சர்ப்ப அத்தியாச முண்டாகாது. எந்த வஸ்துவினது அத்தியாச முண்டாமோ அதன் சஜாதீய வஸ்துவின் ஞாந சம்ஸ்காரம் அத்தியாசத்திற்கு ஹேதுவாம்; விஜாதீய ஞாநத்தின் சம்ஸ்காரம் ஹேது வாகாது. சர்ப்பத்தின் சஜாதீயஞ் சர்ப்பமாகும்; வேறில்லை. யாவனுக்குப் பூர்வம் சர்ப்ப ஞாந மில்லை, அந்ய வஸ்துவின் ஞாந முண்டு, அவனுக்குச் சஜாதீய வஸ்துவின் ஞாந ஜந்ய சம்ஸ்கார மில்லை; ஆதலால், இஜ்ஜுவின்கண் சர்ப்ப அத்தியாச முண்டாகாது.

சூக்ஷுமாவஸ்தையினது நாமம் சம்ஸ்காரமாம். இவ்விதத்தினல், அத்தியாசத்திற்குப் பூர்வம் சஜாதீய வஸ்துவின் ஞாந மியாது, அதன் சம்ஸ்காரம் அத்தியாசத்திற்கு ஹேதுவாம்.

சத்திய வஸ்துவின் ஞாந சம்ஸ்காரமே அத்தியாசத்திற்கு ஹேதுவாம்; மித்தையா வஸ்துவின் ஞாந சம்ஸ்காரம் ஹேது

வன் றென்னும் நியம மில்லை; இவ்வார்த்தை ஈச்ச விருக்ஷத்தின் திருஷ்டாந்தத்தாற் (78ல்) பிரதிபாதநஞ் செய்யப்பட் டிருக்கின் றது. ஆதலால், மித்யா வஸ்துவின் ஞாந ஜந்ய சம்ஸ்காரமும் அத்தியாசத்திற்கு ஹேதுவாம்.

81. இது பந்த அத்தியாசத்திலும் பொருந்தும். எதனு லெனின், அஹங்கார முதலிய அநாத்ம வஸ்துக்களும் அவற் றின் ஞாநங்களும் பந்த மெனப்படும்.

அவ்வநாத்ம வஸ்துக்கள் இரஜ்ஜு சர்ப்பம் போல எப்போது பிரதீதியாகின்றனவோ அப்போதே யுள்ளன; பிரதீதியாக வில்லையேல், அப்போ தில்லை. இஃதெம்முடைய வேத சம்மத சித்தாந்தமாம். இக்காரணத்தாலேயே, சுழுத்தியின்கண் சர்வப் பிரபஞ்சாபாவம் பிரதிபாதநஞ் செய்யப்பட்டிருக்கின்றது. சுழுத் தியின்கண் ஒரு பதார்த்தமும் பிரதீதியாகின்ற தில்லை. ஆத லால், சர்வப் பிரபஞ்சங்களும் சுழுத்தியின்கண் லயமாகின்றன; இதற்குச் சாஸ்திரங்களில் திருஷ்டி திருஷ்டி வாத மென்று பெய ராம். இவ்வர்த்தம் மேல் (317-329ல்) பிரதிபாதநஞ் செய்யப் படும்.

இவ்வாற்றால், அநந்த அஹங்காராதிகளும், அவற்றின் ஞாநங்களும் உற்பந்நமாகி லயமாகாநின்றன. அஹங்காராதிகளும் அவற்றின் ஞாநங்களும் ஒரே காலத்தில் உற்பத்தியாகி லயமாகின் றன. எப்போது அஹங்காராதிகளின்பிரதீதியினுற்பத்தியாகின்ற தோ, அப்போது அஹங்காராதிகள் உற்பத்தியாகின்றன. பிரதீதி லயமாகுங் காலத்து அஹங்காராதிகள் லயமாகின்றன. அஹங் காராதிகட்கும் அவற்றின் ஞாநங்கட்கும் அத்தியாச மென்று பெயராம். இஃது அநிர் வசநீயக் கியாதியின் பிரதிபாதநத்தி லுரைப்பாம். அஹங்காரம் சாக்ஷி பாஸ்ய மென்று விஷயப் பிரதி பாதநத்தில் பூர்வம் சொல்லப்பட்டிருத்தலால், அஹங்காரத் தின் பிரதீதி சாக்ஷி ரூபமாம்; (ஆகவே), அதற் குற்பத்தி லயம் பொருந்தாது. அங்ஙனமாயினும், அஹங்காரத்தையும் விர்த் தியினாலேயே சாக்ஷி பிரகாசஞ் செய்கின்றது; சாக்ஷாத்தாக வி(பிரகாசிக்கின்றதி)ல்லை. அவ்விர்த்திக்கு உற்பத்தி லயம் உண் மையால், அஹங்காரத்தின் பிரதீதிக்கும் உற்பத்தி லயஞ் சொல்லப்படுகின்றன.

இவ்வாறு உத்தரோத்தர அஹங்காராதிகளி னுற்பத்திக்கும், அவற்றின் ஞானங்களி னுற்பத்திக்கும், பூர்வ பூர்வ மித்தியா அஹங்காராதிகளின் ஞான ஜந்நிய சம்ஸ்காரம் ஹேதுவாதல் பொருந்தும்.

82. பின்னும், உத்தரோத்தர அஹங்காராதிகளின் அத்தியா சத்தில் பூர்வ பூர்வ அத்தியாசத்தின் சம்ஸ்காரம் ஹேதுவாதல் பொருந்துமாயினும், பிரதமம் உற்பந்நமாகிய அஹங்காரத்திற்கும் அதன் ஞானத்திற்கும் சம்ஸ்காரம் ஹேது வெனல் பொருந்தாது. எதனு லெனின், அவற்றிற்குப் பூர்வம் வேறு அஹங்காரம் உற்பந்நமாயிருப்பின், அதன் ஞானத்தின் சம்ஸ்காரமும் உண்டாம். அப் பிரதம அஹங்காரத்திற்குப் பூர்வம் வேறு அஹங்காரம் உண்டாக வில்லை. அங்ஙனமே, சர்வ வஸ்துக்களின் பிரதம அத்தியாசத்திற்கு ஹேது சம்ஸ்கார மெனல் பொருந்தா தென்று கூறின்,

இச்சங்கையும் சித்தாந்தத்தின் ஞான மின்மையினு லுளதாம். எதனு லெனின், இது வேதாந்தத்தினது சித்தாந்தமாம்:— பிரஹ்மம், ஈஶ்வரன், ஜீவன், அவித்தை, அவித்தைக்கும் சைதந்யத்திற்கு முள்ள சம்பந்தம், அநாதி வஸ்துக்களின் பேதம் என்னு மிவ்வாறு வஸ்துவும் சொரூபமாக அநாதியாம். எந்த வஸ்து உற்பத்தியாவ தில்லையோ அவ்வஸ்து சொரூபமாக அநாதி யெனப்படும். இவ்வாறு (வஸ்துக்களு)ம் உற்பத்தியாகின்ற தில்லை; ஆதலால், சொரூபமாக அநாதியாம்.

மற்றும், அஹங்காராதிகட்குச் சுருதியின்கண் உற்பத்தி சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதலால், அஹங்காராதிகள் சொரூபமாக அநாதி யன்றும்; ஆயினும், பிரவாக ரூபமாகச் சர்வ வஸ்துக்களும் அநாதியாம். சர்வ வஸ்துக்களினது பிரவாகமும் நீங்குகின்ற தில்லை. அநாதி காலத்தில், இப்பொழுது ஒருகடமு முண்டாக வில்லை யென்று கூறத்தக்க ஒருகாலமும் பூர்வம் இருந்த தில்லை. ஆதலால், கடத்தினது பிரவாகம் அநாதியாம். இவ்வாற்றுல், சர்வ வஸ்துக்களினது பிரவாகம் அநாதியாம். பிரளய காலத்திலும் சுழுத்தி போலச் சர்வ வஸ்துக்களும் சம்ஸ்காரரூபமா யிருக்கின்றன.

ஆதலால், பிரபஞ்சத்தினது பிரவாகம் அநாதியாம் ; ஆகையால் பிரபஞ்சம் அநாதியெனப்படும். இவ்வித ஞானம் யாவனுக்கில்லையோ, அவனுக்குப் பிரதம அத்தியாசத்திற்கு ஹேது சம்ஸ்காரமென்னல் பொருந்தாதென்னுஞ் சங்கை உதியாநிற்கும். சித்தாந்தத்தில் எந்த அஹங்காராதி வஸ்துக்களினது அத்தியாசமும் சர்வத்தினும் பிரதமத்தி வில்லை; பின்னையோ, சர்வமும் தத்தம் பூர்வ பூர்வ அத்தியாசத்தினும் உத்தரமா யுள்ளன; ஆதலால், சங்கை பொருந்தாது.

இந்த ரீதியினல் சஜாதீயத்தின் பூர்வ ஞாந ஜந்ய சம்ஸ்காரத்தால் அஹங்காராதி பந்த அத்தியாசம் பொருந்தும்.

## 83. 49-ல் உள்ள பூர்வ பக்ஷத்தின் உத்தரம்.

மற்றும், மூவகைத் தோஷங்கள் அத்தியாசத்திற்கு ஏதுவாயுள்ளன. பந்த அத்தியாசத்தில் ஒரு தோஷமும் பொருந்தவில்லை. ஆதலால், பந்தஞ் சத்தியமாமென்று பூர்வம் கூறப்பட்டது.

அச்சங்கை பொருந்தாது. ஏனெனின், தோஷமின்றி அத்தியாசம் பொருந்தாது. அத்தியாசத்திற் ஹேது தோஷமாம். எங்ஙனம் துரி தந்து வேமாக்கள் (துரி-தரி; தந்து-நூல்; வேமா-நூல்நாழி) படத்திற்கு ஹேதுவாம். அவை யுளவாகில் படந் தோன்று நிற்கும் ; அவை யிலவாகில் படந் தோன்றாது. அங்ஙனமே, தோஷம் அத்தியாசத்திற்கு ஹேதுவன்று. எதனுலெனின், சாதிருசிய தோஷமின்றி ஆத்மாவின்கண் ஜாதியின் அத்தியாசந் தோன்றுகின்றது.

பிராஹ்மணத்துவ முதலிய ஜாதி ஸ்தூல சரீரத்தின் தர்மமாம்; ஆத்மாவின் தர்மமும், சூக்ஷ்ம சரீரங்களின் தர்மமுமன்றாம். எதனுலெனின், வேறு சரீரத்தை யடையுங்கால் பூர்வ சரீரத்தின்கணிருந்த ஆத்மாவுஞ் சூக்ஷ்ம சரீரமு மிருக்கின்றன; வேறு ஜாதி யுண்டாகாநிற்கின்றது. பூர்வ சரீரத்தின்கணிருந்த ஜாதியே உத்தர சரீரத்திலு முண்டாமென்னும் நியமமில்லை; ஜாதி, ஆத்மா அல்லது சூக்ஷ்ம சரீரத்தின் தர்மமாயின், உத்தர சரீரத்தில் வேறு ஜாதி உண்டாக வேண்டுவதில்லை; ஆதலால், ஜாதி, ஆத்மா சூக்ஷ்ம சரீரங்களின் தர்ம மன்றாம்;ஆனல், ஸ்தூல சரீரத்தின் தர்மமாம். "நான் த்விஜன்" என்றிவ்வாறு

பிராஹ்மணத்துவ, க்ஷத்திரியத்துவ, வைஶ்யத்துவ ஜாதிகள் ஆத்மாவின்கண் பாஙமாகின்றன. ஆதலால், ஆத்மாவின்கண் ஜாதியின் அத்தியாச முளது. எங்ஙனம் இரஜ்ஜுவின்கண் சர்ப்பம் பரமார்த்தமாக வில்லாதிருந்தும் பாஙமாகின்றது; ஆதலால், இரஜ்ஜுவின்கண் சர்ப்பத்தின் அத்தியாச முளது. அங்ஙனமே, ஆத்மாவின்கண் ஜாதி யில்லாதிருந்தும் பாஙமாகின்றது. ஆதலால், ஆத்மாவின்கண் ஜாதியின் அத்தியாச முளது.

மேலும், ஆத்மாவோடு ஜாதிக்கு ஸாதிருசிய மில்லை.

எதனு லெனின், ஆத்மா வியாபகமும், ஜாதி பரிச்சிந்நமுமாம்.

ஆத்மா பிரத்தியக்கும், ஜாதி பராக்குமாம்.

ஆத்மா விஷயியும், ஜாதி விஷயமுமாம்.

இவ்வாற்ருல் விரோதியான ஜாதிக்கும் ஆத்மாவின்கண் அத்தியாச முண்டாகின்றது.

த்விஜன் என்னும் நாமம் திரி (மூ)வருணத்திற்காம்.

எங்ஙனம் ஆத்மாவின்கண் ஸாதிருசிய மின்றி ஜாதியின் அத்தியாச முண்டாகின்றதோ, அங்ஙனமே ஸாதிருசிய மின்றி அஹங்காராதி பந்த அத்தியாசமும் ஆத்மாவின்கண் பொருந்தும்.

ஸாதிருசிய தோஷம் அத்தியாசத்திற்கு ஹேது வன்று. ஸாதிருசிய தோஷம் அத்தியாசத்திற்கு ஹேதுவாமாயின்,

ஆத்மாவின்கண் ஜாதிக்கு அத்தியாச முண்டாதல் கூடாது.

மற்றும், சங்கின்கண் பீதத்துவத்தின் அத்தியாசமாக வேண்டுவ தில்லை.

கற்கண்டின்கண் கைப்புத் தன்மையின் அத்தியாசமாக வேண்டுவ தில்லை; எதனு லெனின்,

சுவேதத்திற்கும், பீதத்திற்கும் விரோத முளது; ஸாதிருசிய மில்லை. அங்ஙனமே, மதுரத்திற்கும் கைப்பிற்கும் விரோதமாம்; ஸாதிருசிய மின்ரும். ஆதலால், அதிஷ்டானத்தின்கண் மித்தியா வஸ்துவினது ஸாதிருசிய தோஷம் அத்தியாசத்திற்கு ஹேது வன்ரும்.

84. ( பிரமாதா தோஷத்தின் கண்டனம் )

அங்ஙனமே, பிரமாதாவினது லோப பயாதி தோஷமும் அத்தியாசத்திற்கு ஹேது வல்ல; எதனு லெனின், லோப மின்றி வைராக்கிய முடைய புருஷனுக்கும் இப்பியின்கண் வெள்ளி யத்தியாச மாகின்றது. அஃதாக வேண்டுவ தில்லை. ஆதலால், பிரமாதாவின் தோஷமும் அத்தியாசத்திற்கு ஹேது வல்ல.

பிரமாண தோஷமும் அத்தியாசத்திற்கு ஹேது வல்ல. எதனு லெனின், சகல புருஷர்க்கும் ரூப ரகித ஆகாயத்தில் நீல ரூபமும், கொப்பரை கூடார ஆகாரமும் பிரதீதி யாகின் றன. ஆதலால், ஸர்வ புருஷர்க்கும் ஆகாயத்தின்கண் நீலரூப, கொப்பரை, கூடாரத்தின் அத்தியாச முளது. எல்லோரு டைய நேத்திர ரூபப் பிரமாணத்தின்கண் தோஷ முரைத்தல் பொருந்தாது. ஆதலால், பிரமாண தோஷம் அத்தியாசத் திற்கு ஹேது வல்ல.

ஆகாசத்தின்கண் நீல ரூபாதியின் அத்தியாசத்தில் பிரமாண தோஷ மொன்று மாத்திரம் இல்லை யென்ப தில்லை; பின்னையோ, ஸர்வ தோஷங்களு மில்லையாம்; ஸாதிருசியமு மில்லை; பிரமாதா தோஷமு மில்லை. எங்ஙனம் ஸர்வ தோஷ அபாவத்தினுலும் ஆகாயத்தின்கண் நீலாதிகளின் அத்தியாச மாகாநின்றனவோ, அங்ஙனமே ஆத்மாவின்கண்ணும் பந்த அத்தியாசம் தோஷ மின்றியும் பொருந்தும். ஆதலால், தோஷ மின்மையால் பந்தம் அத்தியாசரூப மல்ல வெனுஞ் சங்கை பொருந்தாது. எதனு லெ னின், ஸர்வ தோஷங்க ளின்றியும் ஆகாயத்தின்கண் நீலாதி அத்தி யாசம் ஸர்வ புருஷர்க்கு முண்டாகின்றது. ஆதலால், தோஷம் அத்தியாசத்திற்கு ஹேது வல்ல.

பித்த முதலிய ஒரு தோஷங்களு மில்லாதவனுக்கும் ஆகாயம் நீல ரூபமுடைய தென்றும், கொப்பரை கூடார ஆகார முடையதென்றும் தோற்றுகின்றது. ஆதலால், பிரமாண தோஷம் அத்தியாசத்திற்கு ஹேது வன்றும்.

ஞாநத்தின் சாதநமான இந்திரியம் பிரமாண மெனப்படும்.

இவ்வாற்ருல் தோஷம் அத்தியாசத்திற்கு ஹேது வன்று. ஆதலால், பந்தத்தின் அத்தியாசத்தில் தோஷத்தின் அபேக்ஷை யில்லை.

மற்றும் ஸம்க்ஷேபசாரீரகத்தில் பந்த அத்தியாசத்தில் தோஷங்களும் பிரதிபாதநஞ் செய்யப்பட்டிருக்கின்றன. (கிரந்தம்) விரியுமென்னும் பயத்தால் நாம் எழுத வில்லை. மற்றும் தோஷம் அத்தியாசத்திற்கு ஹேதுவாமாயின், தோஷ நிரூபணஞ் செய்யலாம். அத்தோஷம் அத்தியாசத்திற்கு ஹேதுவாக வில்லை. அதனாலும், தோஷ நிரூபணஞ் செய்ய வில்லை.

(இங்ஙனம் காரியாத்தியாச நிரூபணஞ் செய்யப்பட்டது).

## 85. காராண அத்தியாச நிரூபணம்.

### (50ல் உள்ள) பூர்வபக்ஷத்தின் உத்தரம்.

**(அதிஷ்டானத்தின் விசேஷரூப அஞ்ஞாநத்தின் கண்டநம்.)**

(இனிக் காரணாத்தியாச நிரூபணஞ் செய்யப்படும்).

விசேஷரூபத்தால் அஞ்ஞாத வஸ்துவின்கண் அத்தியாசந் தோன்றுநிற்கும். ஆத்மா ஸ்வயம்பிரகாசம்; அதனிடத்தில் அஞ்ஞாநம் பொருந்தாது. எதனாலெனின், தமத்திற்கும், பிரகாசத்திற்கும் பரஸ்பர விரோதமாம்; ஆதலால், எங்ஙனம் அத்தியந்தப் பிரகாசத்திலிருக்கும் இரஜ்ஜுவின்கண் சர்ப்பத்தின் அத்தியாசந் தோன்றாது, அங்ஙனமே ஸ்வயம்பிரகாச ஆத்மாவின்கண் பந்தாத்தியாசம் பொருந்தாதென்று பூர்வஞ் சொல்லப்பட்டது.

அச்சங்கையும் பொருந்தாது; எதனாலெனின், ஆத்மா ஸ்வயம்பிரகாசரூபமாமாயினும், ஆத்மாவினது ஸ்வரூபப் பிரகாசம் அஞ்ஞாநத்திற்கு விரோதி யல்ல; ஆத்மஸ்வரூபப் பிரகாசம் அஞ்ஞாநத்திற்கு விரோதியாமாயின், சுழுத்தியின்கண் பிரகாசரூப ஆத்மாவினிடத்து அஞ்ஞாநம் பிரதீதி யாகின்றது; அஃதுண்டாக வேண்டுவ தில்லை.

கோர நித்திரையி னின்றும் விழித்த புருஷனுக்கு நான் ஒன்று மறியாது சுகமாய்த் தூங்கினேன் என்று ஞாநம் உண்டாகின்றது. இந்த ஞாநத்திற்குச் சுகமும், அஞ்ஞாநமும் விஷயங்களாம். ஜாக்கிரத்தில் அச்சுக அஞ்ஞாநங்களின் ஞாநம் பிரத்தியக்ஷரூப மல்ல; எதனாலெனின், எந்த ஞாநத்தினது விஷயம் ஸந்முகமாக இருக்கின்றதோ, அந்த ஞாநம் பிரத்தியக்ஷரூபமாம். ஜாக்கிர காலத்தின்கண் சுகமும், அஞ்ஞாநமு மில்லை. ஆதலால், ஜாக்கிரத்தில் சுக, அஞ்ஞாநங்களின் ஞாநம் பிரத்தியக்ஷரூப மல்ல; பின்னையோ, ஸ்மிருதி ரூபமாம். அந்த ஸ்மி

ருதி அஞ்ஞாத வஸ்துவின்கண் தோன்றுவ தில்லை; ஞாத வஸ்துவின்கண் தோன்றுகின்றது. ஆதலால், சுழுத்தியின்கண் சுக அஞ்ஞானங்களின் ஞான முளது. அச் சுழுத்தியின் ஞானம் அந்தக்கரண ஜந்யமும், இந்திரிய ஜந்யமுமன்று. எதனாலெனின், சுழுத்தியின்கண் அந்தக்கரண இந்திரியங்கள் அபாவமா யுள்ளன. ஆதலால், சுழுத்தியின்கண் ஆத்மஸ்வரூபமாகவே அந்த ஞானம் இருக்கின்றது. ஞானத்திற்கும் பிரகாசத்திற்கும் பொருளொன்றேயாம்.

இந்த ரீதியினால், சுழுத்தியின்கண் ஆத்மா பிரகாச ரூபமாயிருக்கின்றது. அந்தப் பிரகாசரூப ஆத்மாவினாற் ஸ்வரூப சுகமும், அஞ்ஞானமும் பிரதீதி யாகின்றன. ஆத்மஸ்வரூபப் பிரகாசம் அஞ்ஞானத்திற்கு விரோதியாமாயின், சுழுத்தியின்கண் அஞ்ஞானத்தின் பிரதீதி உண்டாக வேண்டுவ தில்லை. ஆதலால், ஆத்மா பிரகாச ரூபமாகவே யிருக்கின்றது. ஆயினும், ஆத்மாவின் ஸ்வரூபப் பிரகாசம் அஞ்ஞானத்திற்கு விரோதி யல்ல; மாறாய், ஆத்மாவினது ஸ்வரூபப் பிரகாசம் அஞ்ஞானத்திற்குச் சாதகமா யுள்ளது.

இவ்வபிப்பிராயத்தாலேயே சாமாந்ய சைதந்யம் அஞ்ஞானத்திற்கு விரோதி யல்ல; பின்னையோ, விசேஷ சைதந்யமே அஞ்ஞானத்திற்கு விரோதியா யுள்ள தென்று வேதாந்த சாஸ்திரத்திற் கூறப்பட்டிருக்கின்றது. வியாபக சைதந்யம் யாது, அது சாமாந்ய சைதந்ய மெனப்படும். விருத்தியின்கண் ஸ்திதமாகிய சைதந்யம் யாது, அது விசேஷ சைதந்ய மெனப்படும். எங்ஙனம் காஷ்டத்தின்கண் ஸ்திதமாகிய சாமாந்ய அக்நி யாது அஃதந்தகாரத்திற்கு விரோதி யல்ல; மதநத்தாற் பிரகடநஞ் செய்யப்பட்ட அக்நி யாது, அது திரியிலிருந்து கொண்டு அந்தகாரத்திற்கு விரோதியாயிருக்கின்றது. அங்ஙனமே, வியாபக சைதந்யம் அஞ்ஞானத்திற்கு விரோதி யன்றாயினும், வேதாந்த விசாரத்தால், அந்தக்கரணத்தின் எந்தப் பிரஹ்மாகார விருத்தி யுண்டாகின்றதோ அதன்கண் ஸ்திதமாகிய சைதந்யம் அஞ்ஞானத்திற்கு விரோதியா யுளது.

இந்த ரீதியினால், கேவல சைதந்யம் அஞ்ஞானத்திற்கு விரோதி யல்ல; ஆனால்,

விர்த்திசகித சைதந்யம் அஞ்ஞானத்திற்கு விரோதியா யுளது.

அல்லது சைதந்யசகித விர்த்தி அஞ்ஞானத்திற்கு விரோதியா யுளது.

பிரதம பக்ஷத்தில் அஞ்ஞான நாசத்திற்கு ஹேது சைதந்யமாம். விர்த்தி ஸகாயமா யிருக்கின்றது.

இரண்டாம் பக்ஷத்தில் அஞ்ஞான நாசத்திற்கு ஹேது விர்த்தியாம்; சைதந்யம் ஸகாயமா யிருக்கின்றது. இஃதவச்சேத வாதத்தின் கிரமமாம். ஆபாச வாதத்திலோ சாமாந்ய சைதந்யம் போல விசேஷ சைதந்யமும் அஞ்ஞானத்திற்கு விரோதி யன்று. பின்னையோ, விர்த்திசகித ஆபாசம் அல்லது ஆபாசசகித விர்த்தி அஞ்ஞானத்திற்கு விரோதியாம்.

இந்த ரீதியினுல், பிரகாசரூப சைதந்யம் அஞ்ஞானத்திற்கு விரோதி யன்று; ஆதலால், சைதந்யத்தை ஆசிரயித்து அஞ்ஞான முளது. அவ்வஞ்ஞானத்தா லாவிருதமாகிய ஆத்மாவின்கண் பந்த அத்தியாசம் பொருந்தும்.

86. மற்றும், சாமாந்ய ரூபத்தால் ஞாதமாயும், விசேஷ ரூபத்தால் அஞ்ஞாதமாயு முள்ள வஸ்துவின்கண் அத்தியாசந் தோன்றுநிற்கும். ஆத்மாவின்கண் ஸாமாந்ய விசேஷ பாவங்களின்மையின், நிர்விசேஷ ஆத்மா ஞாதமாயும் அஞ்ஞாதமாயுமிருத்தல் பொருந்தாது. அதன்கண் அத்தியாசம் சம்பவிக்காதென்று பூர்வஞ் சொல்லப்பட்டது.

அவ்வார்த்தையும் பொருந்தாது; எதனுலெனின், ஆத்மா இருக்கின்றது என்று எல்லோருக்கும் பிரதீதி யாகின்றது. ஆத்மா வெனு நாமம் தனது சொரூபத்திற்காம். நா னில்லையென்று ஒருவர்க்கும் பிரதீதி யாகின்றதில்லை; பின்னையோ, நா னிருக்கிறே னென்று அனைவர்க்கும் பிரதீதி யாகின்றது. ஆதலால், சத்ரூபத்தால் ஆத்மா அனைவர்க்கும் பானமாகின்றது. ஆனுல் சைதந்யமாயும், ஆநந்தமாயும், வியாபகமாயும், நித்திய சுத்தமாயும், நித்திய முத்தரூபமாயும் ஆத்மாவுளதென்று அனைவர்க்கும் பிரதீதி யாகின்றதில்லை. ஆதலால், சைதந்ய, ஆநந்த, வியாபக, நித்தியசுத்த, நித்தியமுத்த ரூபத்தால் ஆத்மா அறியப்பட வில்லை; ஆனுல், சத்ரூபத்தால் அறியப்பட்டதாம். இவ்வார்த்தை அநுபவசித்தமா யுள்ளது. இவ்வநுபவசித்த வார்த்தை யுக்தியினுல் நிராகரிக்கப்படமாட்டாது.

அனைவர்க்கும் பிரதீதி யாகின்ற ஆத்மாவின் சத்ரூபம் ஸாமாந்ய ரூபமாம்.

கேவல ஞானிக்குப் பிரதீதி யாகின்ற (ஆத்மாவின்) சைதந்ய ஆநந்தாதி ரூபம் விசேஷ ரூபமாம்.

எது அதிக காலத்திலும், அதிக தேசத்திலு மிருக்குமோ அது ஸாமாந்ய ரூப மெனப்படும்.

(எது) நியூந தேசத்திலும் நியூந காலத்திலு மிருக்குமோ அது விசேஷ ரூப மெனப்படும்.

ஆத்மாவின் ஸ்வரூபமே சேதந ஆநந்தாதிகளா யிருத்தலால், சத்ரூபம் போலச் சேதந ஆநந்தாதிகளும் ஸர்வத்திர வியாபகமாம். சத்தி னபேக்ஷையால் சேதந ஆநந்தாதிகள் நியூநதேசத்திலும், சைதந்ய ஆநந்தாதிகளி னபேக்ஷயால் சத்ரூபம் அதிக தேசத்திலு மிருக்கின்ற தென்று கூறுதல் கூடாது. ஆதலால், சத்ரூபம் ஆத்மாவின் ஸாமாந்ய அம்ச மென்றும், சேதந ஆநந்தாதிகள் விசேஷ அம்ச மென்றும் சொல்லுதலும் பொருந்தாது. அங்ஙனமாயினும், சத்தின் பிரதீதி எல்லோர்க்கும் அவித்யா காலத்திலும் உண்டாகின்றது. (ஆத்மா) சேதந ஆநந்தாதி ரூபம் என்னும் பிரதீதி எல்லோர்க்கும் அவித்யா காலத்தில் உண்டாகிற தில்லை; கேவல ஞானிக்கே உண்டாகின்றது. அவித்யா காலத்தில் சேதந ஆநந்த முத்தத்தன்மை சுத்தத்தன்மைகளு மிருக்கின்றன. ஆனால், பிரதீதி யாகிற தில்லை; ஆதலால், இவை இல்லாதனபோல விருக்கின்றன. இவ்வபிப்பிராயத்தால்

சைதந்ய ஆநந்தாதிகள் நியூந காலத்தி லிருப்பனவென்றும், சத்ரூபம் அதிக காலத் திருப்ப தென்றும் கூறப்படுகின்றன.

இந்த ரீதியால், சத்ரூபத்திற்கும், சேதந ஆநந்தாதிகட்கும் ஸாமாந்ய விசேஷபாவங்கள் இல்லையாயினும், அற்பகாலத்திலும், அதிக காலத்திலும் பிரதீதி யாகின்றமையின், ஸாமாந்ய விசேஷ பாவங்களைப் போல உள. இக்காரணத்தினால், ஆத்மாவின் சத்ரூபம் ஸாமாந்ய அம்ச மென்று கூறப்படுகின்றது; சேதந ஆநந்தாதிகள் விசேஷ அம்ச மெனப்படுகின்றன.

மற்றும், ஆத்மா நிர்விசேஷ மென்னுஞ் சித்தாந்தத்திற்கும் ஹாநி யில்லை. ஆத்மாவின்கண் ஸாமாந்ய விசேஷபாவ மங்கீகா

ரஞ் செய்யின் ஆத்மா நிர்விசேஷ மென்னுஞ் சித்தாந்தத்திற்கு ஹாநி உண்டாம். அந்த ஸாமாந்ய விசேஷ பாவங்கள் அங்கீகாரஞ் செய்யப்பட வில்லை. பின்னையோ, அவித்தையினுல் ஸாமாந்ய விசேஷ பாவங்களைப் போலப் பிரதீதி யுண்டாகின்றது. ஆதலால் சாமாந்ய விசேஷ பாவம் கூறுவர்.

இந்த ரீதியினுல், சத்ரூபமாக ஞாதமாயும், சேதந, ஆநந்த, நித்தியசுத்த, நித்தியமுக்தப் பிரஹ்ம ரூபமாக அஞ்ஞாதமாயு முள்ள ஆத்மாவின்கண் பந்தத்தின் அத்தியாசம் பொருந்து கின்றது. அத்தியாச ரூப பந்தத்திற்கு ஞாநத்தால் நிவிர்த்தியும் பொருந்துகின்றது. ஆதலால், கிரந்தத்தின் பிரயோஜநம் ஸம்ப விக்கின்றது.

87. (51-58ல் உள்ள) பூர்வபக்ஷத்தின் உத்தரம்.

(பூர்வ பக்ஷம்). நிஷித்த காம்ய கர்மங்களைத் தியாகஞ் செய்து, நித்திய, நைமித்திக, பிராயச்சித்த கர்மங்களைச் செய்யின், நிஷித்த கர்மத்தின தபாவத்தால் நீச லோகமும், காம்ய கர்மத்தின தபாவத்தால் உத்தம லோகமும் அடையப்படமாட்டா. நித்திய, நைமித்திக கர்மங்களைச் செய்யாமையினு லுண்டாகும் பாபம் அவற்றைச் செய்வதனுல் உளதாகாது. இந்த ஜன்மத்தின்கண் அல் லது அந்நிய ஜன்மத்தின்கண், பூர்வஞ் செய்துள்ள பாபங்கள் ஸாதாரண, அஸாதாரணப் பிராயச்சித்தங்களால் நாசமாகா நிற் கும். பூர்வஞ் செய்த காம்ய கர்மங்களின் பலேச்சையின் அபாவத் தால் முமுக்ஷுவிற்கு அவற்றின் பலன்க ளுளவாகா. ஆதலால், முமுக்ஷுவிற்கு ஞாந மின்றியே ஜன்மத்தின தபாவ ரூபமாகிய மோக்ஷம் உளதாகாநிற்கும் என்று பூர்வஞ் சொல்லப்பட்டது.

(சித்தாந்தம்). அது பொருந்தாது. எதனு லெனின், நித் திய, நைமித்திக கர்மத்திற்கும், ஸ்வர்க்க ரூப பல முளது. இவ் வார்த்தை பாஷ்யகாரர் யுக்தியினு லும் பிரமாணங்களா லும் பிரதிபாதநஞ் செய்துளர். ஆதலால், நித்திய, நைமித்திக கர்மங்களால் உத்தம லோக மடையப்படும். ஜன்மத்தின தபாவம் பொருந்தாது. நித்திய, நைமித்திக கர்மங்களின் பலத் தை அங்கீகாரஞ் செய்யாவிடின், அவற்றைப் போதிக்கும் வேதம் நிஷ்பலமாய் விடும்; எதனு லெனின், நித்திய, நைமித்திக கர் மங்களைச் செய்யாமையினுல், பாபம் உண்டாகுமாயின், அவற் றைச் செய்வதனுல் பாப முண்டாகாம லிருத்தலே அவற்றின் பலனுதல் பொருந்தும். அந்த நித்திய, நைமித்திக கர்மங்களைச்

செய்யாமையால் பாபம் உளவாகாது. எதனு லெனின், அவற்றைச் செய்யாம லிருப்பது அபாவ ரூபமாம்; பாபம் பாவ ரூபமாம். அபாவத்தி னின்று பாவத்தினது உற்பத்தி உண்டாகமாட்டாது. ஆதலால், நித்திய, நைமித்திக கர்மங்களைச் செய்யாமையாற் பாப முண்டாகு மென்று கூறுதல் பொருந்தாது. நித்திய, நைமித்திக கர்மங்களைச் செய்யாமையாற் பாப முண்டாகு மென்று அங்கீகாரஞ் செய்யின், அபாவத்தினின்றும் பாவத்தின் உற்பத்தி உண்டாகமாட்டா தென்று (கீதையின்) இரண்டாம் அத்தியாயத்தில் பகவானுல் கூறப்பட்டிருக்கின்றது. அதனோடு விரோதமாகா நிற்கும். ஆதலால், நித்திய, நைமித்திக கர்மங்களி னபாவத்தால் பாவரூப பாபத்தின் உற்பத்தி பொருந்தாது; இந்த ரீதியினுல், நித்திய நைமித்திக கர்மங்கட்குப் பாபத்தின் அநுற்பத்தி பயனன்று. பின்னையோ, நித்திய, நைமித்திக கர்ம மின்றியும் பாபத்தின் அநுற்பத்தி சித்தமா யிருக்கின்றது. ஆதலால், நித்திய, நைமித்திக கர்மத்திற்கு ஸ்வர்க்கரூப பலன் அங்கீகாரஞ் செய்யாவிடின், கர்மம் நிஷ்பலமாய் விடும். நிஷ்பலமாகிய நித்திய, நைமித்திக கர்மங்களைப் போதிக்கும் வேதமும் நிஷ்பலமாகும். ஆதலால், நித்திய நைமித்திக கர்மங்களாலும் ஸ்வர்க்க பலம் உண்டாகாநிற்கும்.

88. ஜந்மாந்தரத்தின் காம்ய கர்மங்கள் இச்சையி னபாவத்தால் பலனைக் கொடுக்கமாட்டா வென்று முன்னர்க் கூறப்பட்டது.

அவ்வார்த்தையும் பொருந்தாது; ஏனெனின், கர்மரூப பீஜத்தினின்றும் இரண்டங்குர முற்பந்நமாகாநிற்கும். அவற்றுள், ஒன்று வாஸனை; மற்றொன்று அதிர்ஷ்டம். தர்மாதர்மத்திற்கு அதிர்ஷ்ட மென்று பெயர். சுபகர்மத்தாற் சுபவாஸனையும், தர்மரூப அங்குரமு முற்பந்ந மாகின்றன. அசுப கர்மத்தால் அசுப வாஸனையும், அதர்ம ரூப அங்குரமு முற்பந்ந மாகின்றன. சுப வாஸனையால் முன்னர் சுபகர்மத்திற் பிரவிர்த்தியும், தர்மத்தாற் சுக போகமு முண்டாகாநிற்கும்; இவ்வாறே, அசுபவாஸனையால் அசுப கர்மத்திற் பிரவிர்த்தியும், அதர்மத்தால் துக்கா நுபவமு முண்டாகின்றன இந்த ரீதியால் வாசனுரூபமும், அதிருஷ்ட ரூபமுமான அங்குரங்கள் கர்மரூபமாகிய பீஜத்தா லுளவாகாநிற்கும். அவற்றுள்,

வாசனு ரூபமாகிய அங்குரமோ உபாயத்தால் நாசமாகாநிற்கும்; அதிர்ஷ்டரூபமாகிய அங்குரமானது பலத்தி னுற்பத்தியின்றி ஒருவாற்ருனும் நாசமாகாது. இது சாஸ்திரத்தினது நிர்ணயமாம்.

அசுப கர்மத்தினு லுற்பந்நமாகிய அசுபவாசனமுளை சற்சங்கமாதிகளால் நாசமாகாநிற்கும்.

சுபகர்மத்தினு லுற்பந்நமாகிய சுபவாசனை கு(கெட்ட) சங்கமுதலியவற்ருல் நாசமடைகின்றது.

சாஸ்திரத்தில் எவ்வளவு புருஷார்த்தங் கூறப்பட்டிருக்கின்றதோ அதனுல், பிரவிர்த்திக்கு ஹேதுவாகிய வாசனையே நாசமாகாநிற்கும்; இதனுல் புருஷார்த்தமுஞ் சபலமாம். போகத்திற்கு ஹேதுவாகிய அதிருஷ்டம் நாசமடைகின்றதில்லை; ஆதலால், பலத்தைக் கொடுக்காமல் கர்மம் நிவிர்த்தியாகின்றதில்லை என்று சாஸ்திரங்களிற் கூறியுள்ளதற்கும் விரோதமில்லை. இந்த ரீதியினுல், அஞ்ஞாநிக்குப் பலபோகமின்றிக் கர்மத்தி னிவிர்த்தி பொருந்தாது.

ஞாநிக்கோ போகமின்றியும் கர்மம் நிவிர்த்தியாகின்றது. எதனுலெனின், கர்மமும், கர்த்தாவும், பலமும் பரமார்த்தமாக இல்லை;பின்னையோ, அவித்தையினுற் கற்பிதமாயுள்ளன. அவ்வவித்தைக்கு ஞாநம் விரோதியாம்; ஆதலின், அவித்தியா கற்பித கர்மமுதலியனவும் ஞாநத்தா னுசமாகாநிற்கும். எங்ஙனம் ஸ்வப்பனத்தின்கணித்திரையினுல் பிரதீதியாகும் பதார்த்தங்கள் ஜாக்கிரத்தின்க ணித்திரையின் நிவிர்த்தினுல் அபாவமாகின்றன, அங்ஙனமே அவித்யாரூப நித்திரையினுற் பிரதீதியாகும் கர்மமும், கர்த்தாவும், பலமும் ஞாநதசாரூப ஜாக்ரத்தின்கண் அவித்தையின் நிவிர்த்தினுல் அபாவ மாகின்றன; ஞாந மின்றி அபாவமாகா.

இச்சையின தபாவத்தாற் கர்மத்தினது பலபோக முண்டாகா தெனின், ஈசுவரனது சங்கற்பம் மித்தையாய்விடும்; எதனுலெனின், பலபோகமின்றி அஞ்ஞாநியின் கர்மம் நிவிர்த்தியாகாதென்பது ஈசுவரனது சங்கற்பமாம். இச்சை யின்றிச் செய்த கர்மத்தின் பலம் உண்டாகா தெனின், ஈசுவரனது சங்கற்பம் மித்தையேயாய்விடும. சத்திய சங்கற்பன் ஈஸ்வரன் என்னும்

வார்த்தை சாஸ்திரங்களிற் பிரசித்தமா யுள்ளது. ஆதலால், இச்சையின தபாவத்தாற் பூர்வஞ் செய்த காமிய கர்மத்தினது பலமுண்டாகா தென்பது விருத்தமாம்.

இச்சையின தபாவத்தாலேயே காமியகர்மத்தினது பலமுண்டாகா தெனின், அசுப கர்மத்தினது பலன் ஒருவர்க்கு முண்டாக வேண்டுவ தில்லை. எதனு லெனின், அசுப கர்மத்தினது பலமாகிய துக்கத்தில் ஒருவனுக்கும் இச்சை யுண்டாகின்ற தில்லை.

ஆதலால், ஞாந மின்றி கர்மபலத்தின் அபாவ முண்டாகாது.

89. எங்ஙனம் கர்மாநுஷ்டான காலத்தில் இச்சா ரகித புருஷனுக்குக் கர்மத்தின் பலம் வேதாந்த மதத்தில் அங்கிகாரஞ் செய்யப்பட வில்லையோ, அங்ஙனமே கர்மாநுஷ்டானத்தி னநந்தரமும் புருஷனுடைய இச்சை நிவிர்த்தியாய் விடுமாயின், கர்மத்தின் பல முண்டாகா தென்று பூர்வஞ் சொல்லப்பட்டது.

அவ்வார்த்தையும் வேதாந்த மதத்தை அறியாமற் சொல்லப்பட்டதாம். அஃதெதனு லெனின், எவன் பலத்தினது இச்சா சகிதனுகக் கர்மஞ் செய்தானுக, அல்லது பலத்தினது இச்சா ரகிதனுகக் கருமஞ் செய்தானுக அவனுக்குக் கர்மத்தின் பலபோகம் நிச்சயமாக உளதாகாநிற்கும். ஆயினும், இச்சா ரகித கர்மத்தால் அந்தக்கரண சுத்தி உளதாம்; இச்சா சகிதனுய்க் கர்மஞ் செய்கின்றவனுக்குக் கேவலம் போக முளதாம்; அந்தக்கரணசுத்தி உளதாகாது.

இச்சா ரகிதமாய்க் கர்மஞ் செய்வதால் சுத்தாந்தக்கரண முளதாகிச் சிரவணத்தால் ஞாநம் உண்டாகின்றது; அவனுக்குக் கர்மத்தினது பலம் உளதாகாது.

மற்றும், யாவன் பலத்தினது இச்சா ரகிதமாய்க் கர்மஞ் செய்தும், சிரவணம் இல்லாமையினுல் அல்லது யாதானும்அந்நிய நிமித்தத்தால் ஞாந முண்டாக வில்லை, அவனுக்கு இச்சா ரகித கர்மத்தினது பலபோகம் நிவிர்த்தியாகாது.

இது வேதாந்தத்தினது சித்தாந்தமாம். ஆதலால், ஞாநமின்றிக் கர்மத்தினது பலபோகம் நிவிர்த்தியாகாது.

90. மற்றும், பிராயச்சித்தத்தால் சம்பூர்ண அசுப கர்மங்கள் நாசமாகாநிற்கு மென்று பூர்வஞ் சொல்லப்பட்டது.

அவ்வார்த்தையும் பொருந்தாது. எதனுலெனின், அநந்த கர்ப்பத்தின் அசுப கர்மங்கட்கு ஒரு ஜந்மத்தின்கண் பிராயச் சித்தம் பொருந்தாது. மற்றும், கங்கா ஸ்நாநம், ஈசுவர நாமோச் சாரண முதலிய சர்வ பாப நாச காரணங்களாகிய எச்சாதாரணப் பிராபச்சித்தங் கூறியுள, அவையும் ஞாநத்திற்கே சாதநமாம். ஆதலால், சர்வ பாபங்களி ஞச காரணங்களாகக் கூறினர். இத ஞல், ஞாநத்தாலேயே சர்வ பாபங்களும் நாசமாகாநிற்கும்.

91. பின்னும், நித்திய நைமித்திகக் கர்மங்கள் செய்வதால் எந்தக் கிலேசங்கள் உளவாகாநின்றனவோ அவை பூர்வ சஞ்சித நிஷித்த கர்மத்தினது பலமாம். ஆதலால், சஞ்சித நிஷித்தகர்மங் களினது பலன்கள் வேறு உளவாகா வென்று பூர்வஞ் சொல்லப் பட்டது.

அவ்வார்த்தையும் பொருந்தாது. எதனுலெனின், அநந்த பிர காரமாகச் சஞ்சித நிஷித்த கர்மங்கள் இருக்கின்றன. அவற்றின் பலன்களும் அநந்த பிரகாரமாகத் துக்கங்களாயுள. கேவல கர்மா நுஷ்டானத்தினது கிலேசமே அவற்றின் பலமெனல் பொருந் தாது.

92. பின்னும், சம்பூர்ண சஞ்சித காமிய கர்மத்தால் ஒரே சரீர முளதாகாநிற்கு மென்று பூர்வஞ் சொல்லப்பட்டது.

அவ்வார்த்தையும் பொருந்தாது. எதனுலெனின், சஞ்சித காமிய கர்மங்க ளநந்தமாம்; ஒரு ஜந்மத்தின்கண் அவற்றின் அநுபவம் பொருந்தாது.

பின்னும், ஒரு புருஷனுக்கு ஒரு காலத்தில் நாநா சரீரங்க ளால் எப்போகஞ் சொல்லப்பட்டது அதுவும் சித்த யோகி யன்றி மற்றையோருக்குப் பொருந்தாது. மற்றுஞ், சித்த யோகிக்கும் வேறு சம்பூர்ண சாமர்த்தியங்க ளுளவாமாயினும், ஞாந மின்றி மோக்ஷம் உண்டாகாது. இது வேதத்தினது சித்தாந்தம்.

இந்த ரீதியினுல், காமிய, நிஷித்த கர்மங்களைத் தியாகஞ் செய்து கேவலம் நித்திய, நைமித்திக கர்மங்களை அஞ்ஞாநி செய் யின், அவனுக்கு நித்திய நைமித்திக கர்மங்களினது பலன்களை யநுபவித்தற் பொருட்டும், பூர்வம் எச் சுபாசுப கர்மங்கள் செய் யப்பட்டுள்ளன, அவற்றின் பலன்களை அநுபவித்தற் பொருட்டும், அநந்தசரீரங்க ளுளவாகாநிற்கும்; மோக்ஷமுளவாகாது. ஆதலால்,

ஞான வாயிலாய்ப் பந்தத்தி னிவிர்த்தி கிரந்தத்தின் பிரயோஜநம் பொருந்தும். எங்ஙனம் ஸ்வப்நத்தின்கண் எந்த மித்தியா பதார்த் தங்கள் பிரதீதி யாகின்றனவோ, அவற்றி னிவிர்த்தி ஜாக்கிர மின்றி உண்டாகாது. அங்ஙனமே, பந்தமும் மித்தையாகப் பிரதீதி யாகின்றது. அதனது நிவிர்த்தியும் ஞானரூப ஜாக்கிர மின்றி உளதாகாது.

93. சம்பந்த மண்டநம்.

கிரந்தத்தின் ஆரம்பம் பொருந்துகின்றது.

இந்த ரீதியினுல், கிரந்தத்திற்கு அதிகாரி, விஷய, பிரயோ ஜநங்கள் சம்பவமாம். அதிகாரி முதலியவற்றின் சம்பவத்தால் சம்பந்தமுஞ் சம்பவிக்கின்றது. இதனுல் கிரந்தத்தின் ஆரம்பம் பொருந்தும்.

தாது தீந தயாளநீ
ஓது சற்சுக வொள்ளொளி
யாது பாற்கதி யின்மதிக்
காது நிச்சல தாசரோ.

அநுபந்த விசேஷ நிரூபண மென்னும் நாமமுடைய

இரண்டாந் தரங்கம் முற்றிற்று.

ஸ்ரீ குரவே நம:.

ஸ்ரீ:கிருஷ்ணர்ப்பணமஸ்து.



ஸ்ரீ கணேசாய நமஃ. ஸ்ரீ நடேசாய நமஃ.
ஸ்ரீ குரவே நம:.

# விசாரசாகரம்.

## மூன்ருந் தரங்கம்.

---

விட்ட னைத்தும் விமல பரசுகம்
கிட்ட நல்குங் கிளரருண் மூர்த்தியாஞ்
சிட்டர் போற்றுஞ் சிதம்பர தேசிகன்
மட்ட விழ்மலர்ப் பாதம் வழுத்துவாம்.

## குரு சிஷ்ய லக்ஷணம்.

---

### குருபக்தி பலப் பிரகார நிரூபணம்.

### 94. கிரந்தாரம்பத்தின் பிரதிஞ்ஞை.

எப்புருஷன் அநுபந்த சதுஷ்டயசகித கிரந்தத்தை யறிந்து ஞாந சகித குருவினிடத்தினின்றும் படிப்பானே, அல்லது ஏகாக்கிர சித்தனுகக் கேட்பானே, அப்புருஷன் மோக்ஷத்தின் மார்க்கமாகிய ஞாநத்தை அடையாநிற்பன்.

குரு சிஷ்ய சம்வாதமாக அர்த்த நிரூபணஞ் செய்வதால் சுரோதாவிற்குச் சுகமாகப் போதம் உண்டாகாநிற்கும். இக் காரணத்தால் குரு சிஷ்ய சம்வாதமாகக் கிரந்தம் ஆரம்பிக்கப்படுகின்றது.

### 95. குரு லக்ஷணம்.

வேதாத்தியயநஞ்செய்து அதன் அர்த்தத்தை நன்ரு யறிந்தவரும், ஜீவப் பிரஹ்மங்களினது ஏகத்துவ நிச்சயஞ்செய் தறிந்திருத்தலால் ஆத்மஞாநத்தின்கண் நிலைத்திருப்பவரும் ஆசாரியராவர். எவர் வேதம் படித்தும் ஞாநத்தின்கண் நிஷ்டையிலர், அவராசிரியராகார். யாவர் ஞாநத்தின்கண் நிஷ்டையுளர், வேதம்படித்திலர், அவரும் தாம் முக்தரேயாயினும் உபதேசஞ் செய்ய யோக்கியமாகிய ஆசிரியரலர். எதனு லெனின், அவர்க்கு ஜிஞ்ஞாசுவின் சங்கையை நிவிர்த்திப்பிக்கத்தக்க யுக்தி தோன்ருது; எவன் சித்தத்தின்கண் சங்கை உண்டாகவில்லை, இவ்வித உத்தம சம்ஸ்காரத்தையுடைய ஜிஞ்ஞாசுவுக்கு உபதேசஞ் செய்வதில் சமர்த்துளதேனும், சகலருக்கும் உபதேசஞ்செய்ய யோக்கிய மில்லை; ஆதலால், ஆசாரியராகார்.

பின்னையோ, அதீத வேதஞ்ஞராய் ஞானத்தின்கண் நிஷ்டையுடையவர் யாவர், அவராசாரிய ரெனப்படுவர்.

சிஷ்யர்களது புத்தியின்கண் பாநமாகாநின்ற ஐந்து வகைத்தான பேதங்களை நாநாவித யுக்தியால் நிவிர்த்தி செய்வதில் சமர்த்தராக வேண்டும். ஜீவ ஈஸ்வரரது பேதம், ஜீவர்களது பரஸ்பர பேதம், ஜீவ ஜடங்களது பேதம், ஈச ஜடங்களது பேதம், ஜடஜடங்களினது பேதமாகிய இவ்வைந்து விதங்களான பேதங்கள் கண்டநஞ் செய்யத்தக்கன. எதனாலெனின், பேதம் பயத்திற்கு ஹேது; ஆதலால், பேதங்களினது நிராகரணம் அவசியம் கர்த்தவ்வியமாம்.

பேதத்தின் நிராகரணத்தால், அத்வயமாயும் அவித்தையாதி மல ரகிதமாயுமுள்ள பிரஹ்மத்தை ஆத்மரூபமாகச் சாக்ஷாத்காரம் செய்விக்கவேண்டும்.

சகல சம்சாரத்தையும் மித்யா ரூபமாக உபதேசஞ் செய்விக்கவேண்டும். இத்தன்மைய அற்புதமாகிய உபதேசஞ் செய்யத்தக்கவர் ஆசாரிய ரெனப்படுவர். மற்றும் கேவலந் தான் முண்டநஞ் செய்துகொண்டு சீடனது சிகையைச் சேதநமாத்திரஞ் செய்பவரும், அல்லது வேறே யாதானுமொரு சம்ப்ரதாயச் சிந்நமாத்திரத்தைத் தரிக்கும்படி செய்பவரும் ஆசாரிய ரெனப்படார். சம்சாரமாகிய முதலையினின்றும் விடுதலை செய்விக்கும் ஆத்மோபதேசஞ் செய்யத்தக்கவர் யாவர், அவரே ஆசாரியராவர் என்று அறிஞர்களாற் சொல்லப்படுகின்றது. காவி சம்பந்த வேஷதாரிகள் ஆசாரியராகார்.

## 96. சிஷ்யனது லக்ஷணம்.

சாஸ்திராநுசாரமாய்க் குரு லக்ஷணங் கூறினேம். எந்தச் சாதநங்களாற் கிரந்தத்தின்கண் ணதிகார முண்டாமோ, அந்தச் சாதநங்கள் மாணாக்கனது லக்ஷணமாம். இதனதபிப்பிராயம் இஃதாம்:—எவ்வதிகாரியினது லக்ஷணம் பூர்வம் சொல்லப்பட்டது, அதுவே சிஷ்யனது லக்ஷண மென்று அறிந்து கொள்க.

## 97. குரு பக்தியின் பல வர்ணநம்.

(இனிக் குருபக்தியினது பலம் வர்ணிக்கப்படுகின்றது).

குருவினிடத்தில் ஈசுவரனிடத்திலும் அதிக பக்தி செய்க. எதனாலெனின், எப்புருஷன் சர்வ சாஸ்திரங்களிலும், நிபுணனாயினும் அவனுங் குருவின துபதேச மின்றி ஞானத்தையடையான்.

பூர்வம் கூறியதனையே திருஷ்டாந்தத்தாற் பிரதிபாதநஞ் செய்யப்படுகின்றது:—

வேத ரூப சமுத்திரம் குரு வின்றி லவண சமாந க்ஷாரமாயுள்ளது. எங்ஙனம் லவண சமுத்திரத்தின்கணிருந்து அதன் ஜலத்தைப் பாநம் பண்ணுவனுயின், அவன் கேவலம் லவணத்தினையே அநுபவஞ்செய்து, அதனாற், கிலேசத்தை யடையாநிற்பன்; அங்ஙனமே குரு வின்றி எவன் வேதார்த்தத்தை விசாரிப்பன், அவன் பேத ரூபமாகின்ற லவணத்தினையே யநுபவித்து ஜந்ம மரண ரூபமாகிய கேத (துக்க)த்தை யடையாநிற்பன். இக்காரணத்தால் இராமாநுஜர், மத்துவர் முதலிய அநேக புருஷர் வேதார்த்தத்தை விசாரித்தும் குருவாயிலாக(விசாரஞ்)செய் திலர். ஆதலால், பேதத்தின்கண் நிச்சயஞ் செய்து, ஜந்ம, மரணரூப கேதத்தையே யடைந்தனர். முத்தி ரூபமாகிய ஆநந்த மவர்கட்குப் பிராப்தமாக வில்லை. இராமாநுஜர் முதலியோரும் தத்தங் குருவினாலேயே வேதத்தினைப் படித்தும் விசாரித்தும் வியாக்கியாநஞ் செய்தனராயினும், எவரிடத் தவர்கள் வேதம் படித்தனரோ அவர் குரு வலர். எதனாலெனின், எவர் ஜீவப் பிரஹ்மங்களின் ஏகத்துவத்தை உபதேசஞ் செய்பவர், அவர் குருவாவர் என்று பூர்வங் குரு லக்ஷணப் பிரசங்கத்திற் புகலப்பட்டிருக்கின்றது. மற்றும் அவர்கட் குபதேசஞ்செய்தவர் ஜீவப்பிரஹ்மங்களின் பேதத்தை உபதேசஞ் செய்பவரா யிருந்தனர். ஆதலால், அவர்களிடத்து எக் குருசப்தப் பிரயோகஞ் செய்யப்படுகின்றது, அது அர்ஹத(ஜயின)ர்க்குச் சமாநமாகச் செய்யப்படுகின்றது. (அர்ஹதமென்பது பௌத்த பேதமாம்). எங்ஙனம் அர்ஹதரது சிஷ்யர் அர்ஹதரைக் குருவென்பராயினும், அர்ஹதர் குருபதத்திற்கு விஷயமன்றாம். அங்ஙனமே பேதவாதி புருஷர்களின் சிஷ்யரும் தமக்கு உபதேசஞ் செய்பவரைக் குரு வென்றனராயினும் அவர்கள் குருவாகார். ஆதலால், இராமாநுஜர் முதலிய பேதவாதிகள், குருவாயிலாக விசாரஞ் செய்ய வில்லை. இக்காரணத்தாற் பேதத்தின்கண்ணே அபிநிவேசஞ் செய்து ஜந்ம மரண ரூபக் கிலேசத்தினையே யடைந்தனர்.

அங்ஙனமே, மற்றுஞ்சிலர் பூர்வஞ் சொல்லிய லக்ஷணத்தோடு கூடிய குரு வின்றித் தாங்களே வேதத்தின தர்த்தத்தை விசாரஞ்

செய்தனர், அல்லது பேதவாதி புருஷரிடத்தில் படித்து விசாரித்தனர், அவரும் பேத ரூபமாகிய உவர்ப்பினையே யநுபவஞ்செய்து ஜந்ம, மரணரூபக் கிலேசத்தையே யநுபவிக்கின்றனர்.

மேகரூபப் பிரஹ்மவித்தாகிய குருமுக வாயிலாய் எவர் கேட்டு விசாரித்தனர், அவர்க்கு வேதம் அமிர்தத்தினும் அதிக ஆநந்தத்திற்கு ஹேதுவாகாநிற்கும். எங்ஙனம் சமுத்திரத்தின் ஜலம் ஸ்வரூபமாக உவர்ப்பா யுள்ளதும் மேகத்தின் வழியாய் மதுரமாகவும் இருக்கின்றது, அங்ஙனமே வேதத்தி னர்த்தமும் ப்ரஹ்ம ஞாநியாகிய குருவாயிலாய் ஆநந்தத்திற்கு ஹேதுவாயிருக்கின்றது.

98. ஞாநியாகிய குருவினின்றும் வேதார்த்தத்தைப் படித்தலும் கேட்டலும் தகுதியா மெனல்.

குருவினிடத்துப் படித்த வேதத்தி னர்த்தத்தை விசாரித்தலால் முத்திரூப பலம் பிராப்தியாகாநிற்கு மென்று பூர்வஞ் சொல்லப்பட்டது. அதனால் குரு ஞாநியாக அல்லது அஞ்ஞாநியாக இருக்கவேண்டு மென்று விசேஷமாகச் சொல்லப்பட வில்லை. அதனை இப்பொழுது கூறுவாம்:—ஞாநமின்றியவர் குருவாகாரென்று பூர்வம் புகன்றேமாயினும், பூர்வங் கூறிய வார்த்தையினையே திருஷ்டாந்தத்தாற் பிரதிபாதநஞ் செய்வாம்:—

மசக முதலிய சர்ம பாத்திரவாயிலாகவேனும், கடவாயிலாகவேனும், கிரகணஞ் செய்த சமுத்திர ஜலம் விலக்ஷண மதுரத்திற்கு ஹேது வன்றும். அங்ஙனமே அஞ்ஞாநி புருஷன்வாயிலாய்க் கிரகணஞ் செய்த வேதரூப சமுத்திரத்தினது அர்த்தரூப ஜலமும் விலக்ஷண ஆநந்தத்திற்கு ஹேது வன்றும். ஆதலால், அஞ்ஞாநியாகிய பாடகர் சர்ம பாத்திரத்திற்கும் கடத்திற்கும் சமாநமாவர்.

மற்றும் ஞாநி மேகத்திற்குச் சமாநமாம். இவ்வார்த்தை பூர்வம் பிரதிபாதநஞ் செய்யப்பட்டிருக்கின்றது.

ஆதலால் சர்ம பாத்திரத்திற்கும் கடத்திற்கும் சமாநமாகிய அஞ்ஞாநி பாடகரைத் தியாகஞ்செய்து, மேக சமாநமாகிய ஞாநியினிடத்தினின்றும் வேதத்தினது அர்த்தங்களைப் படிக்க; அல்லது கேட்க.

## 99. பாஷா கிரந்தத்திஞலும் ஞாந முண்டா மேனல்.

ஞாநவானிடத்தில் வேதத்திஜைப்படிக்க வென்றமையால் வேதத்தின் சிரவணவாயிலாய் ஜீவப் பிரஹ்மங்களினது ஸ்வரூப விசாரணையால் ஞாந முளதாம். அந்நிய சம்ஸ்கிருத கிரந்தங்களிஞலும் பாஷா கிரந்தங்களிஞலும் ஞாநம் உளதாகாது. இதஞல் பாஷா கிரந்தத்தினது ஆரம்பம் நிஷ்பலமாகும் என்னும் சங்கை உண்டாயின்,

அதற்குச் சாமாதாநம்:—''பிரஹ்மத்தை யறிந்த புருஷன் பிரஹ்மரூபமாகின்ருன்'' என்னும் வார்த்தை சுருதியின்கண் பிரசித்தமா யுள்ளது. ஆதலால், அவனது வாக்கு வேதரூபமாம்; அது பாஷாரூபமாகுக, அல்லது சம்ஸ்கிருத ரூபமாகுக. எவ்விதத்தும் பேதப் பிரமத்தைச் சேதநம் பண்ணுநிற்கும்.

பின்னும் வேதத்தின் வசநத்தாலன்றி ஞாநம் உண்டாகாதெனின்,

அது நியம மன்று. எங்ஙனம் ஆயுர்வேதத்திற் சொல்லப்பட்ட ரோகங்களும், அவற்றின் ஸ்தானங்களும், ஔஷதங்களுமாய் இவற்றின் சம்பூர்ண ஞாநம் அந்நிய சம்ஸ்கிருத கிரந்தத்தானும் பாஷாபார்ஸி கிரந்தத்தானும் உண்டாகின்றதோ, அங்ஙனமே எல்லோருடைய ஆத்மாவாகிய பிரஹ்மத்தினது ஞாநமும், பாஷாதி கிரந்தங்களா னுளதாகாநிற்கும்.

இதஞலேயே சர்வஞ்ஞராகிய ரிஷிகளும், முநிகளும், ஸ்மிருதி புராண இதிகாச கிரந்தங்களில் பிரஹ்மவித்தையின் பிரகரணத்திஜைக் கூறியுளர். வேதத்தாலன்றி ஞாந முளதாகாதாகின், அச்சம்பூர்ணப் பிரகரணங்களும் நிஷ்பலமாகி விடும். ஆதலால், ஆத்ம ஸ்வரூபத்தினது பிரதிபாதகங்களாகிய வாக்கியங்களால் ஞாந முளதாகாநிற்கும். அவ்வாக்கியம் வேதமாகுக, அல்லது அந்நிய பாஷையாகுக. ஆதலாற் பாஷாகிரந்தங்களானும் ஞாந முளதாகும் என்னும் வார்த்தை சித்தமாயிற்று.

## 100. ஜிஞ்ஞாசு பிரஹ்ம ஞாநியாகிய ஆசாரியரது சேவை செய்ய வேண்டு மெனல்.

எந்தப் பிரஹ்மஞாநியின் வசநம் வேதத்திற்குச் சமாநமா யுள்ளது, அந்தப் பிரஹ்ம ஞாநியாகிய ஆசாரியருக்கு ஜிஞ்ஞாஸு ஸேவை செய்க. எதஞ லெனின், ஸேவையிஞ

லெப்பொழுது ஆசாரியர் பிரசந்நமாவர், அப்பொழுது தனது ஸ்வரூபத்தினை யறிகின்றான். இங்ஙனம் கூறினமையால் இஃதறி யத்தக்கதாம்:—ஆசாரியரது ஸேவை ஈசுவரனது ஸேவையினு மதிகமாம். அஃதெதனை லெனின்,

ஈஸ்வர ஸேவை அதிர்ஷ்ட பலத்திற்கு ஹேதுவாம். ஆசாரிய ரது ஸேவை அதிர்ஷ்ட பலம், திருஷ்டபலமாகிய இரண்டிற்கும் ஹேதுவாம்.

எவ்வஸ்து தர்மாதர்மோற்பத்தி வாயிலாய்ப் பலத்திற்கு ஹேதுவாமோ, அஃது அதிருஷ்ட பலத்திற்கு ஹேது வெனப் படும்.

மற்றும், எவ்வஸ்து தர்மாதர்மங்களி னுற்பத்தி யின்றிச் சா க்ஷாத் பலத்திற்கு ஹேதுவாமோ, அது திருஷ்டபலத்திற்கு ஹேது வெனப்படும்.

ஈசுவர ஸேவை தர்மோற்பத்தி வாயிலாக அந்தக்கரண சுத்தி ரூப பலத்திற்கு ஹேதுவா யுளது. ஆதலால், ஈசுவர சேவை அதிருஷ்ட பலத்திற்கு ஹேதுவாம்.

மற்றும், ஆசாரியரது சேவை தர்மாபேக்ஷையின்றி அவரது பிரசந்நத்துவத்தா லுபதேசரூப பலத்திற் கேதுவாயுளது; ஆத லால் திருஷ்ட பலத்திற்கு ஹேதுவும், தர்மோற்பத்தி வாயிலாக அந்தக்கரண சுத்தி ரூப பலத்திற்கு ஹேதுவுமாம். ஆதலால், அதிருஷ்ட பலத்திற்கும் ஹேதுவாம்.

இந்த ரீதியினால், ஆசாரியரது சேவை ஈசுவர சேவையினு முத்தமமாம். ஆதலால், ஜிஞ்ஞாசு சர்வப்பிரகாரத்தாலும் பிரஹ்ம வேத்தாவாகிய ஆசாரியரது சேவை செய்யத்தக்கது.

### 101. ஆசாரிய சேவையின் கிரமம்.

எப்பொழுது குரு பிராப்தமாவரோ அப்பொழுது தண்டம் போலச் சாஷ்டாங்கமாகப் † பிரணாமஞ் செய்க. பவித்திரமாகிய பாதரூப பத்மங்களினது தூளியைச் சிரஸின்மீது தரிக்க. மீண்டும் குருவினது சமீபத்தில் வாசஞ் செய்க. அதனால் ஜிஞ்ஞாசை அதிக மாக வுளதாகும். பந்தநாசத்தை வேண்டில் தநு, மநம், தநம், வாக்கு என்பவற்றை அர்ப்பணஞ் செய்க.

† பிரணாமம் - நமஸ்காரம்.

### 102. சரீரார்ப்பணக் கிரமம்.

தநுவினல் விஸ்தாரமாகப் பலவித சேவை செய்க. குருவின தாஞ்ஞையை ஒருபோதுங் கடக்கற்க.

### 103. மந அர்ப்பணக் கிரமம்.

மநத்தின்கண் ஸ்ரீராமனிடத்திற் போலப் பிரியம் வைக்க. இப் பிரியத்தாற் குரு பிரசந்நமாகாநிற்பர். குருவினிடத்துத் தோஷ திருஷ்டி ஸ்வப்பனத்திலும் வரலாகாது. (அவரை) அரி, அர, பிரஹ்ம, கங்கை, ரவி யென்று அறிக. கல்யாணத்தை விரும்பின், குரு மூர்த்தியை யிருதயத்தின்கண் தியாநத்தாற் றரிக்க.

### 104. தந அர்ப்பணக் கிரமம்.

பத்தினி, புத்திரன், பூமி, பசு, தாசி, தாசன், திரவ்யம், கிரகம், தாந்யம் இவை யாவும் தந மெனப்படும். இவையனைத் தையுந் தியாகஞ் செய்து தியாகியாகிய குருவின் சரணம் புகுவது தந அர்ப்பண மெனப்படும். எதனு லெனின், குரு தியாகியா யிருத்தலின், அங்கிகாரஞ் செய்யார். பின்னையோ, அந்தக் குரு வின் பிராப்தி நிமித்தம் தநத்தைத் தியாகஞ் செய்தனன். ஆத லால், இவ்வித தியாகமும் குருவிற்கே அர்ப்பண மெனப்படும்.

மற்றும் (குருவானவர்) கிருகஸ்தராகில், அவர்க்கு எல்லாவற் றையும் கொடுத்துவிடல் வேண்டும். இது வேறு வகைத் தந அர்ப்பண மெனப்படும்.

இதிற் கிருகஸ்தராயுள்ளார் பிரஹ்ம வித்தைக் காசாரிய ரல ரென்று சிலர் சங்கை பண்ணுநிற்பர்; அச்சங்கை பொருந்தாது. எதனு லெனின், யாக்ஞவல்கியர், உத்தாலகர் முதலிய கிருகஸ் தரே பிரஹ்ம வித்தைக்கு ஆசாரிய ரென்று வேதத்தின்கண் வெகுவாய்க் கேட்கப்பட்டிருக்கின்றது. ஆதலால் கிருஹஸ்தரும் ஆசாரியராதல் சம்பவிக்கும்.

### 105. வாக்கின் அர்ப்பணக் கிரமம்.

குருவினது சுத்தமாகிய குணகணங்களைச் சொல்லுக; மற்றும், தோஷங்களை ஒரு காலத்தினுஞ் சொல்லாதொழிக. இது வாக்கின் அர்ப்பணமாம்.

### 106. சிஷ்யன் குருவின் சம்பந்தத்தில் வியவகாரம்.

புருடன் தனது கல்யாணம் வேண்டின் பூர்வரீதியாகத் தநுவாதியவற்றைஅர்ப்பணஞ் செய்து தான் வெகுகாலங் குருவெங்குளர்; அத்தானத்தின்கண் அல்லது அவர்சமீபத்தில் வாசஞ் செய்க. தாம் பிச்சையினுற் பிராண தாரணஞ் செய்க.

107. பிக்ஷாந்நம் சிஷ்ய னேற்றுவரின், அதனைத் தானே போஜநஞ் செய்யற்க. பின்னையோ குருவினது சந்நதியில் வைத்துவிடுக. மற்றும் பிக்ஷையைக் குருவினது சந்நிதியில் வைத்துத் தனது போஜநத்திற்குக் குருவினிடத்தினின்றும் கேட்கலாகாது. ஒரு தினத்தில் மீண்டும் கிராமத்திலும் பிக்ஷை கேட்கலாகாது. பின்னையோ, குரு கிருபையினுற் கொடுப்பாராகில் போஜனஞ் செய்க. குரு சிஷ்யனது சிரத்தையின் பரீக்ஷை நிமித்தங் கொடாராயின் மறுத்தினத்தினும் வழக்கமாகிய பிக்ஷையைக் கிராமத்திலேற்க; ஏற்றுவந்த பிக்ஷையை மீண்டுங் குருவின் சந்நிதியில் வைத்துவிடுக. தனது கல்யாணத்தைச் சிஷ்யன் வேண்டின் இருதயத்தின்கண் அருவருப்புறலாகாது.

108. இந்த ரீதியாயுள்ள வியவகாரஞ் செய்துவர எப்போது குருவினது அவகாசம் பார்க்கப்பட்டதோ, பிரசந்ந முகத்தோடு குருவானவர் எப்போது தனது சந்முகம் பார்த்தனரோ, அப்போது கைகூப்பிக்கொண்டு குருவின் ஸ்துதி செய்து, வணக்கத்துடன், ஹே பகவன்! நான் கேட்க இச்சியாநிற்கிறேனென்று விண்ணப்பஞ் செய்க. அப்பொழுது குரு ஆக்ஞாபிக்கின் பிரஸ்நஞ் செய்க.

மற்றும், ஒருகால் ஜந்மாந்திரத்தின் உத்தம கர்மத்தால் குரு கிருபை செய்து சிஷ்யனுக்குத் தநுஅர்ப்பணுதிசேவை யின்றியே உபதேசஞ் செய்வாராயின், விசுத்த அதிகாரிக்குக் கல்யாண முளதாகாநிற்கும். எதனு லெனின், குருசேவைக்கு இருவகைப் பலம்

உள:—ஒன்று, குருவின் பிரசந்நத்தன்மை, மற்ருென்று அந்தக்கரணத்தின் சுத்தி; அவ் விரண்டு மவனுக்குச் சித்தமாயுள.

† எம்மனோ வாக்குக் காயத நங்களை
அம்மநற் குருவுக் கர்ப்பணஞ் செய்வன்
தம்மிலொண் சகல ரூப மாகுவன்
அம்ம தாது குரவன் சகாயனும்.

குருசிஷ்ய லக்ஷண, குருபத்தி பலப்பிரகார
நிருபண நாம முள்ள
மூன்ருந் தரங்கம் முற்றிற்று.
கிருஷ்ணர்ப்பணமஸ்து.



---

† எவன் மனோ வாக்குக் காய தநங்களை அர்ப்பணஞ்செய்து மனதைச்செலுத்திக் குருவைச் சேவைசெய்கின்ருனோ, அவன் தான் சகலவடிவமுமான பிரஹ்மரூபமாய்விடுகின்ருன். தாதுவானவர் எப்போதும் அவனுக்குச் சகாயுஞ் செய்கின்ருர்.

ஸ்ரீ கணேசாய நம:. ஸ்ரீ குரவே நம:.
ஸ்ரீ நடேசாய நம:.

# விசாரசாகரம்.

## நான்காந் தரங்கம்.

ஆக்கை யின்றி யடிமுடி வின்றியே
சாக்கி யோடுறு சாக்கியந் தாமிலா
தூக்க மோன வுலப்பி லொளியினை
வாக்கி னாலெங்ங னேவழுத் தும்வகை.

### உத்தமாதிகாரி உபதேச நிரூபணம்.

குரு சிஷ்ய சம்வாத ரூபமாகப் புதுமையான ஒருகதையை இப்போது கூறுகின்றேன். இதை முமுக்ஷு ஜனங்கள் நன்குணர்ந்து விசாரத்தின்கண் சமர்த்தராவார்கள்.

**109. சுபசந்ததிராஜா, அவருடைய (தத்துவதிருஷ்டி, அதிருஷ்டி, தர்க்கதிருஷ்டி யென்னும்) மூன்று புத்திரர்களது கதை.**

சக்கரவர்த்தி சந்தானத்தில் ஸ்வர்க்க, பாதாள, பூமி முழுதையும் ஆளும் சுபசந்ததி யென்னு மோரரசனுக்கு தத்துவ திருஷ்டி யென்றும், அதிருஷ்டி யென்றும், தர்க்கதிருஷ்டியென்றும் பெயருள்ள மூன்று சற்புத்திர ரிருந்தனர்; அவர் உத்தமன், மத்திமன், கநிஷ்டன் எனப்படுவர். (அரசன்) பாலப்பருவ முழுதையும் விநோதத்தினாற் போக்கியும், காளைப்பருவமடைந்து மன்மதலீலையினும், ஸ்திரீ லோலத்திலும் செலுத்தி எல்லாப் போகங்களையும் அநுபவித்தான்.

110. மூன்று உலகங்களிலுள்ள போகங்களையும் அநுபவித்து, சுபசந்ததி அரசன் தன் புகழ்பொருந்திய புஜ பலத்தினா லிராச்சிய காரியங்களைச்செய்துவந்தனன். அப்புத்திரர்களின் பிதாவாகிய அரசனது ஹிருதயத்தின்கண் உற்பத்தி நாசமில்லாத ஆத்மாவே ஆநந்த ரூபம்; அதற்கந்நியமாகிய வனைத்தும் அசாரம்; இந்தக் காரணத்தினால் புத்திரர் மூவரையும் மூன்றுலகங்கட்கும்

அரசர்களாக்கி நாம் இவ்விராஜ்ஜியத்தைத் துறந்து ஆத்ம ஸ்வரூப த்தை அறிவோமென்று இவ்வித விசாரம் உதித்தது. இங்ஙனம் விசாரித்துப் பின் மந்திரிகளால் ஸமர்த்தர்களான தனது புத்திரர்களைச் சமீபத்தில் வரவழைத்து ஏகாந்தத்தில் வைத்துத் தனக்குண்டாகிய வைராக்கிய வசநங்களைச் சொல்லி மீண்டுஞ் சொல்லுகின்றான்:—உங்கள் மூவரில் ஒருவன் பாதாளத்தையும், ஒருவன் சுவர்க்கத்தையும், மற்றொருவன் அந்தர்யாமியாகிய சிவன் எங்கு எழுந்தருளியுள்ளார், எங்கு மரணமாகவே சிவனதுபதேசங் கேட்டு அனுயாசமாக அவரது லோகத்திற் பிரவேசியா நின்றனரோ, கங்கை எங்கு உத்தர வாகினியா யதிகமாய் விளங்காநின்றதோ, அந்தக் காசி பூமியையுமாக இராஜ்ஜியத்தை விபாகஞ் செய்து அவரவர் தேசத்தைப் பரிபாலனஞ் செய்துவரக் கடவீர்; விபாகஞ் செய்யாவிடில் பூமி காரியத்தாற் சகோதரர்க்குக் கிலேச முண்டாகாநிற்கும். நான் இப்போ திவ்விராஜ்ஜிய முழுதும் விடத்தக்கதென் றிருதயத்தின்கண் ணறிந்தனன். ஏதனாலெனின் சகலமுந் துக்கத்தைக் கொடுக்கத்தக்க அஸாரங்களா யுள்ளன. பாமரர்கள் துக்கிகளாயினும், துக்கங்களை யநுபவிக்கின்றனர்;நான் அநுபவித்த ஜகக்கிலேசங்களுக் களவில்லை. பிரதாநமான தநவந்தனாயினும், (தன்னை) அறியாதவன் தரித்திரனுக்குச் சமாநமாவன். ஆதலால், இதற்கு ஹேதுவை ஹிருதயத்தின்கண் விசாரித்து ஜகதைச்வர்யத்தைத் தியாகஞ் செய்து, ஆத்ம ஸுகத்தை யடைவேன்.

111. பிதா கூறிய அநந்த வாக்கியங்களைக் கேட்டு நன்மதியுடைய புத்திரர் மூவரும் ஏகாந்தத்தில் உட்கார்ந்து அபாரமாகிய விசாரத்தைச் செய்தார்கள்; பின்னர், நன்றாய் நிச்சயித்ததைத் தம்மிற் கூறுகின்றனர். துக்கத்திற்கு மூலமாகிய இவ்விராஜ்ஜியத்தை நமக்குக் கொடுத்து அரசன் தான் பிரஹ்மஸமாநத்தை யடைய எண்ணினான். புத்தியை வருத்தத் தக்கதாயுள்ள துக்க சமுத்திரத்தை எவர் விடுத்தனரோ அவரே மானுடராவர்.

## 112. மூன்று புத்திரர்களும் கிரகத்தினின்றும் புறப்பட்டுக் குருவைச் சந்தித்தல்.

ஆதலால், தன திராஜ்ஜிய வியாபாரத்தை அரசனே செய்க; துக்க காரணமாகிய இவ்விராஜ்ஜியபாரத்தை நாம் விட்டொழி

வோமென்று இவ்விதம் விசாரஞ் செய்து, கிருஹத்தினின்றுஞ் சகோதரர் மூவரும் புறப்பட்டு இருதயத்தின்கண் மோக்ஷேச்சையைத் தரித்துள்ளராய்ச் சற்குருவைத் தேடிச்சென்றனர் ; சுப சந்ததியென்னும் பிதாவினது நாமத்தை அர்த்த சகிதமாக்கினர்; வெகு தேசங்களிற் சென்று தேடித்தேடி கங்காதீரத்தில் ஏகாந்த ஸ்தாநத்தில் இலைகளோடு கூடிய சாகைகளானெருங்கிய தருக்களையுடைய வனத்தின்கண் ஒரு மஹானுனவர் சின்முத்திரை தரித்தவராய், ஜீவப் பிரஹ்மத்தின் ஏகத்துவ வுபதேசஞ் செய்யுங் குணமுடையவராய், வடவிருக்ஷத்தின்கீ ழெழுந்தருளி யிருந்தனர். தோஷரகித ஏகாக்கிர சித்தத்தையுடைய சிஷ்யக் கூட்டங்கள் சூழ்ந்து, அத்தேசிகரது உபதேசத்தை இருதயத்தின்கண் நன்ருய் விசாரஞ் செய்து கொண்டிருந்தனர். கைலாயத்தின்கண் ஸநகாதியர்க் குபதேசித்தருளிய பரமேஸ்வரனைப்போல அந்தத் தேசிகரைப் பாவித்து, அவரது சரணாரவிந்தத்தை யடைந்து நமஸ்காராதிகள் செய்து, மோக்ஷ இச்சையை இருதயத்தின்கட் டரித்துச், சிஷ்யரீதி யநுசாரமாக அதிக குரு சேவையை அம்மூவருஞ் செய்து, ஆறுதிங்கள்(மாசம்) அவ்விடத்திற்ருனே வாசஞ் செய்திருந்தனர். அச்சேவையினுல் ஸ்ரீகுருவானவர் பிரசந்நராகி மிருதுவான மொழியிஞ லவர்களைப் பார்த்து, ஹே புத்திரரே! நீவிர் மூவரும் யாவர்? எவ்விடத்தினின்றும் வந்திருக்கின்றீர்? யாது காரணத்தா லிவ்விடத்தில் வாசஞ் செய்கின்றீர்? இவற்றைச் சொல்லுவீராக வென்று கேட்டருளினுர். அப்பொழுது தத்துவ திருஷ்டியானவன் சகோதரருடைய அபிப்பிராயத்தை ஹிருதயத்தி லறிந்து, உபயகரங்களையுங் கூப்பிக் கொண்டு தனதபிப்பிராய வசநத்தை விண்ணப்பஞ் செய்கின்ருன்.

### 113. தத்துவ திருஷ்டியினுல் பிரஸ்னை செய்வதற்குக் குருவின் ஆஞ்ஞையைக் கேட்டலும், குரு ஆஞ்ஞை கொடுத்தலும்.

ஹே பகவன்! யாங்கள் மூவருஞ் சகோதரர்கள் ; சுப சந்ததியினது சந்தாநர்கள். அநேக அபிப்பிராயங்களை யறிய இருதயத்தின்கண் இச்சித் திருக்கின்ருேம். யாங்கள் தீநராயும், நவீநராயும், அறியாமை யுடையோராயு மிருக்கின்ருேம். தாங்கள் தயாநிதியும், கற்பக விருக்ஷமும்போன் றிருக்கின்றீர்கள். யாங்கள் அதிதுக்காதீநர்களா யிருக்கின்ருேம். தேவரீரது ஆஞ்ஞையுண்டாயின், கேட்கச் சமர்த்தராவோம்.

### குரு கூறுகின்றார்.

சிஷ்யர்களே! நமது வார்த்தையைக் கேட்பீர்களாக. எதனை நீங்கள் கேட்பீர்களோ, அதனைச் சொல்லுகின்றேன்; இருதயத்தின்கண் சந்தோஷத்தை யடையுங்கள்; சம்சய மொன்று மிருக்கமாட்டாது.

## 114. தத்துவ திருஷ்டியின் மோக்ஷ இச்சையைக் குறிப்பித்தும் விண்ணப்பம்.

(இங்ஙன மருளிய) குருவின் தயாளுத்துவத்தை யறிந்து தமது காரியஞ் சித்தியாகு மென் றெண்ணி யிருதயத்தின்கண் சந்தோஷ மெய்தினர். பின் பவர்களுள் தத்துவதிருஷ்டி குருவைப்பார்த்து வினயத்துடன் கூறுகின்றான்.

### தத்துவதிருஷ்டி கூறுகின்றான்.

ஏ பகவன்! தேவரீர் கிருபாநிதாநர்; சதாசிவனுக்குச் சமானமாயுள்ள சர்வஞ்ஞர்; யாங்கள் அஞ்ஞாந மதியுடையவர்களாய் ஒன்று மறியாது ஜன்ம மரண முதலிய துக்கரூப சம்சாரத்திற்கு அஞ்சியுளோம். அத னிவிர்த்தி யுபாயமும், பரமாநந்தப் பிராப்தி யுபாயமும் அருளுவீர். ஹே குருவே! கர்மோபாசனைகளை யநுஷ்டித்து மவைகளால் நாங்க ளிச்சித்த பலப் பிராப்தி உண்டாக வில்லை. அதற்கு மாறாகவே அவற்றால் சம்சாரம் விர்த்தியாயிற்று. ஆதலால் எதனால் யாங்கள் கிருதார்த்தராவோம் அவ்வித வேறு உபாயத்தைக் காட்டியருளக் கடவீர் (என்று தத்துவ திருஷ்டி விண்ணப்பஞ் செய்தனன்.)

## 115. குருவின் உத்தரம். (மோக்ஷ விச்சை பிராந்தி ஜந்நிய மென்பதனோடு மகாவாக்கியத்தின் உபதேசம்.)

துக்கத்தின் நிவிர்த்தியையும் பரமாநந்தத்தின் பிராப்தியையும் மோக்ஷ மென்பர். அதன திச்சை சிஷ்யன திருதயத்தி லிருப்பதைப் பார்த்து, அதற்குச் சாதநமாகிய வேதோக்த ஞாநத்தைக் (குரு) சொல்லத் தொடங்கினர்.

ஞாநத்தின் சொரூபம் அநேக சாஸ்திரங்களில் பிந்நம் பிந்நமாக வருணிக்கப்பட் டுளவாயினும், ஜீவப் பிரஹ்மங்களினது பேதத்தினை நிவிர்த்திக்கும் ஞாநமே வேதத்தின்கண் மோக்ஷ சாதநமாகக் கூறப்பட்டிருக்கின்றது. ஆதலா லதனையே உபதேசிக்கின்றார்.

குரு கூறுகின்றார்.

ஹே சிஷ்ய! பரமாநந்தத்தின் பிராப்தியிலும், ஜந்ம மரண முதலிய துக்க ரூப சம்சாரத்தி னிவிர்த்தியிலும் உனக்குண் டாயிருக்கும் இச்சை, பிராந்தியினு லுண்டாயிற்றென்று நீ யறிக. எதனு லெனின்,

நீ பரமாநந்த சொரூபமாக விருக்கின்றனே; ஆதலால் அதன் பிராப்தியி னிச்சை பொருந்தாது. எந்த வஸ்து அப்ராப்த மாக விருக்குமோ, அதனது பிராப்தியி னிச்சை பொருந்தும். எந்தத் தனது சொரூப முண்டோ அது சதா பிராப்தமாகவே யுளது. அதனது பிராப்தியி லுளதாகு மிச்சை பிராந்தி யின் றிப் பொருந்தாது.

மற்றும், ஜந்ம முதலிய சம்சாரம் ஒருகாலத்திலாவ திருக்கு மாயின், அதன் நிவிர்த்தியில் இச்சை பொருந்தும். அந்த ஜந்மாதி சம்சாரம் லேசமும் உன்னிடத்தி லில்லை. ஆதலால் இல்லாததாகிய துக்கத்தி னிவிர்த்தியிலும் இச்சையானது பிராந்தி யின்றிப் பொருந்தாது.

ஹே சிஷ்ய! ஜந்ம நாச ரகித சேதநரூபப் பிரஹ்மமே நீ யாகின்றாய். ஆதலால், உனதிருதயத்தின்கண் ஜந்மாதி கேத முண்டென் றெண்ணு தொழி.

116. பிரஶ்நம்:—எனது ஆத்மா ஆநந்தரூபமாகுமாயின் விஷய சம்பந்தத்தினுல் ஆநந்தத்தின் பானம் ஆத்மாவிலுண்டாகா தெனல்.

தத்துவ திருஷ்டி சொல்லுகின்றன்.

ஹே பகவன்! என்னுடைய ஆத்மா ஆநந்த ரூபமாயின், விஷயத்தின் சம்பந்தத்தால் ஆத்மாவின்கண் ஆநந்தம் பாநமாக வேண்டுவ தில்லை: ஆதலால், ஆத்மா ஆநந்தரூப மல்ல; பின் னேயோ, விஷயத்தினது சம்பந்தத்தால் ஆத்மாவின்கண் ஆநந்த முண்டாகின்றது.

117. உத்தரம்:—ஆத்ம விமுகனுக்கு அந்தர்முக விருத்தியில் ஆநந்தம் விளங்குதலும், விஷயத்தில் ஆநந்த மில்லை யெனலும்.

ஸ்ரீ குரு கூறுகின்றார்.

சிஷ்ய! ஆத்மாவின் விமுக புத்தி எவனுக்குளது அவனு க்கு விஷயேச்சை யுளதாம். ஈண்டு விஷய மென்றது போக சாதநங்களை ஆதலால், தந புத்திராதிகளையுங் கிரகணஞ்செய்து கொள்க.

அவ்விஷயேச்சையினால் புத்தி சஞ்சலமா யிருக்கும். அச் சஞ்சல புத்தியின்கண் ஆத்ம சொரூபாநந்தத்தின் பிரதிவிம் பந் தோன்றாது.

எவ்விஷயத்தின திச்சை யுண்டாயிற்றோ அவ்விஷயம் அவ னுக்குப் பிராப்தமாயின் அப்போது அப்புருடனது புத்தி க்ஷண மாத்திரம் ஸ்திரமாகி அந்தர்முக விர்த்தியுண்டாகின்றது. அவ் வந்தர்முக விருத்தியில் ஆத்ம சொரூபாநந்தத்தின் பிரதிவிம் பந் தோன்றாநிற்கும்.

அவ்வாத்ம சொரூபாநந்தத்தின் பிரதிவிம்பத்தை யநு பவஞ் செய்யும் புருஷனுக்கு "எனக்கு விஷயத்தால் ஆநந்த முண்டாயிற்று" என்று பிராந்தி யுண்டாகின்றது. ஆனால் விஷ யத்தி லாநந்த மில்லை.

ஒருகால் விஷயத்தின்கண் ஆநந்த முளதாமாயின், ஒரு விஷயத்தாற் றிருப்தியடைந்துள்ள புருஷனுக்கு மற்றொரு விஷ யேச்சை உண்டாகுங்காலத்தும் முன் விஷயத்தால் ஆநந்த முண் டாதல் வேண்டும். அங்ஙனம் உண்டாவ தில்லை. எம்முடைய ரீதியினால், சொரூபாநந்தத்தின் பாநம் பொருந்தாது. எதனா லெனின், இரண்டாவது விஷயேச்சையினால் புந்தி சஞ்சலமா யுளது. அதன்கண் பிரதிவிம்பம் பொருந்தாது.

அன்றியும், விஷயத்திலேயே ஆநந்த மிருக்குமாயின், ஒரு புருஷனது பிரிய புத்திரன், அல்லது வேறே ஒரு அத்தியந்த சிநேகிதன் நிமித்த மின்றி வெகுகாலத்திற்குப் பின்னர்க் கிடைக் கப் பெறுவானாயின், அப்பொழுது அவனைப் பார்த்தமாத்திரத்தி னாலேயே முன் எவ்வாநந்தம் உண்டாகிறது அவ்வாநந்தம் பின் எப்பொழுது முண்டாகின்ற தில்லை. அஃதெப்பொழுதுமே உண்டாகவேண்டும். எதனா லெனின், ஆநந்தத்திற் கேதுவாகிய புருஷன் அவன் சமீபத்தி லுளன். எம்முடைய ரீதியினால், முத லிற்றான் ஆநந்தம் பொருந்தும்; சதா சம்பவிக்காது. எதனா லெ னின், ஒருமுறை இஷ்டனைப் பார்த்து விர்த்தி ஸ்திதமாகின்றது. மீண்டும் விருத்தி வேறு பதார்த்தங்களிற் செல்லுகின்றமையின் சஞ்சலமா யிருக்கின்றது. ஆதலால், பதார்த்தத்தி னிடத்தில் ஆநந்த மில்லை.

அன்றியும், விஷயத்தின்க ணாநந்த முண்டாயின், சமாதி காலத்தில் எந்த யோகாநந்தம் பாநமாகாநின்றதோ, அஃது உண்

டாக வேண்டுவ தில்லை. எதனை லெனின், சமாதியில் ஒரு விஷய சம்பந்தமு மில்லை.

அன்றியும், விஷயத்தின்கண்ணேயே ஆநந்த முண்டாகுமாயின், சுழுத்தியின்கண் ஆநந்த பாந முண்டாக வேண்டுவ தில்லை. எதனை லெனின், சுழுத்தியின்கண்ணு மொரு விஷய சம்பந்தமு மில்லை. ஆதலால், விஷயத்தின்க ணாநந்த மில்லை. பின்னையோ, ஆத்ம சொரூபாநந்தம் சகலத்திலும் பாநமாகாநின்றது. இதனுற்றான் ஆத்ம சொரூபாநந்தத்தைக் கொண்டே சகலமு மாநந்த முடையனவாயுள வென்று வேதத்தின்கண் கூறப்பட்டுளது.

ஹே சிஷ்ய! ஆத்மா ஆநந்தசொரூபம். விஷய சம்பந்தத்தால் அவ்வாத்மாநந்தம் வெளிப்படுகின்றதென்று உனக்கு யான் கூறினேன். இது சமாந ரகிதமான சித்தாந்தமாம். இதன்கண் சங்கை யுண்டாயின், அதனை மனத்தில் வைக்காமல் என்னிடத்திற் கேள்; அதற்கு யான் உத்தரங் கூறுகின்றேன்.

118. பிரஶ்நம்:—ஞாநிக்கு விஷயத்தின் இச்சையும், அதன் சம்பந்தத்தால் முன் கிரமப்படி சுகத்தின் விளக்கமும் உண்டாகின்றதா? இல்லையா?

**தத்துவ திருஷ்டி சொல்லுகின்றன்.**

பகவானே! தாங்கள் முன் விஷய சம்பந்தத்தால் ஆத்மாநந்த பாநத்தின் ரீதியைச் சொன்னீர்கள்; அஃதஞ்ஞாநி புருஷனுக்குக் கூறினீர்கள்; ஞாநிக்குச் சொல்ல வில்லை. எதனைலெனின், ஆத்மாவின் விமுக புத்தி எவனுக்குண்டோ, அவனுடைய பெயரைத் தாங்கள் சொன்னீர்கள். அவ்வாத்மாவின் விமுக புத்தியும் அஞ்ஞாநிக் குளது; ஞாநிக் கில்லை. இதனுல், ஞாநிக்கு விஷயேச்சையும் அதன் சம்பந்தத்தால் பூர்வ ரீதியாகச் சுக பாநமும் உண்டாகின்றதா? இல்லையா? வென்று தேவரீர் அருள வேண்டும்.

119. உத்தரம்:—இரண்டுவித ஆத்ம விமுகர் உளர்; விஷயாநந்தம் சொரூபாநந்தத்தினும் வேறன்று.

**குரு கூறுகின்றார்.**

சிஷ்யனே! நீ சித்தத்தையுஞ் சுரோத்திரத்தையுஞ் சாவதாநஞ் செய்து கேட்பாயாக.

பூர்வம் நாம் எந்த ஆத்மவிமுகனைக் கூறினோமோ, அவன் அஞ்ஞானியே யாகான்; பின்னையோ, ஞானவானது புத்தியும் எப்பொழுது வியவகாரத்தில் வருமோ, அப்பொழுது அவன் தத்துவத்தை மறந்து விடுவன். அக்காலத்தில் ஞானவானும் ஆத்ம விமுகனே யாவன். ஞானியினது புத்தி சதா ஆத்மாகாரமாகவே யிருக்குமாயின் (அவனுக்கு) போஜனாதி வியவகார முண்டாகாது. ஆதலால் ஆத்ம விமுக புத்தி இருவருக்கும் பொருந்தும்.

அஞ்ஞானியினது புத்தி சதா ஆத்ம விமுகமாம்; ஞானியின் புத்தி ஆத்மா விமுகமாகும்போது விஷயேச்சையும் விஷய சம்பந்தத்தால் ஆத்ம சொரூபாநந்த பானமும் அஞ்ஞானிக்குப் போன்று ஞானிக்குமாம். ஆயினும், இவ்வளவு பேத முண்டு:—

விஷய சம்பந்தத்தால் எந்த ஆநந்த பான முண்டாகின்றது அதனை ஞானி இவ்வாநந்த மெனது சொரூபத்தினும் அந்நிய மல்ல; பின்னையோ, எனதாபாசமே யென் றறியாநிற்பன். இதனால் ஞானிக்கு விஷய போகத்திலுஞ் சமாதியே யாம்.

அஞ்ஞானி தன் சொரூபமே ஆநந்தமென் றறிய வில்லை.

இருவருடைய சொரூபமும் ஆநந்தமாம். விஷயத்தாற் கேவலம் அஞ்ஞானிக்குப் பிராந்தி யுண்டாகின்றது.

### 120. ஜந்மாதி துக்கம் எதன்கண் உளது?
### சிஷ்யன் கேட்கின்றான்.

ஏ பகவன்! "பரமாநந்த சொரூபமாக நீ யிருக்கின்றாய்" யென்று தேவரீ ரருளியதை நன்குணர்ந்தேன். பின்னும் "ஜந்ம மரண முதலிய சம்சாரரூப துக்கமானது உன்னிடத்தி லில்லை. ஆதலால் அதனது நிவிர்த்தி கூடா" தென்று தேவரீ ரருளினீர். இதன்கண் எனக்குச் சங்கை யுண்டாகின்றது. ஜந்மமாதிய துக்க மென்னிடத்தில் இல்லையாயின், மற்றெதனிடத்தில் சம்சார முளது? எதனிடத்தில் சம்சார துக்கத்தை யறிந்து என்னிடத் தங்கீகரியேனோ, என்னினும் பிந்நமாகிய அவ்வாசிரயத்தைக் காட்டி யருளக் கடவீர்.

### 121. ஜந்மாதி துக்கம் ஓரிடத்து மில்லை யெனல்.
### ஸ்ரீ குரு கூறுகின்றார்.

ஹே சிஷ்ய! எதனா லுன்னுடைய சங்கை நிவிர்த்தியாமோ அவ்வித நமது வாக்கியத்தைக் கேட்பாயாக. ஜகத்தின் அத்தியந்த நிவிர்த்தி என்னிடத்தி லில்லை; மற்றொன்றி னிடத்திலு மில்லை.

122. பிரஸ்நம்:—துக்கம் ஓரிடத்திலு மில்லை யெனின் பிரத்தியக்ஷமாக ஏன் தோன்றுகின்றது.

**தத்துவ திருஷ்டி கூறுகின்றன்.**

ஹே பகவன்! ஜந்ம மரணாதி சம்சார துக்க மென்னிடத்தும், அங்ஙனமே மற்றொன்றி னிடத்து மில்லையாயின், ஏன் பிரத்தியக்ஷப் பிரதீதி உண்டாகின்றது? எந்த வஸ்து இல்லையோ அது வந்தியா புத்திர ககனாரவிந்தங்கள் போலப் பிரதீதியாகின்றதில்லை. இந்தச் சம்சாரமுமில்லை யாயின், பிரதீதியாக வேண்டுவ தில்லை. ஜந்ம மாதிய சம்சாரம் பிரதீதி யாகின்றது. ஆதலால் ஜந்ம முதலிய சம்சாரரூப துக்க மில்லை யென்று கூறுவது பொருந்தாது.

123. உத்தரம்:—ஆத்மாவை யறியாததனால் தோற்றுகின்றது. ரஜ்ஜு சர்ப்பத்தின் திருஷ்டாந்தம்.

**ஸ்ரீகுரு கூறுகின்றார்.**

ஜந்ம முதலிய ஜகத்துப் பரமார்த்தமாக வில்லையாயினும், ஆத்மாவினைப் பிரஹ்ம சொரூபமாக அறியாமையினால் மித்தையாகப் பிரதீதியாகாநிற்கின்றது. எங்ஙனம் ஸ்வப்பன பதார்த்தம், ஆகாயத்தின்க ணீலத்துவம், இரஜ்ஜுவின்கண் சர்ப்பம் பரமார்த்தமாக வின்றி மித்தையாக எங்ஙனம் பிரதீதி யாகின்றனவோ, அங்ஙனமே ஜந்மாதி ஜகத்துப் பரமார்த்தமாக இல்லை; மித்தையாகப் பிரதீதி யாகாநின்றது.

124. ரஜ்ஜுவில் சர்ப்பம் எங்ஙனம் தோற்றுகின்ற தெனல்.

**தத்துவ திருஷ்டி கூறுகின்றன்.**

எங்ஙனம் இரஜ்ஜுவின்கண் சர்ப்பம் மித்தையாம், அங்ஙனமே ஆத்மாவின்கண் சம்சாரதுக்கம் மித்தையென் றருளிச் செய்தீர். ஆண்டு திருஷ்டாந்தத்தின் ஞானமின்றித் தார்ஷ்டாந்தத்தின் ஞான முதியாதாதலால், இரஜ்ஜுவின்கண் சர்ப்ப மெங்ஙனந் தோற்றுகின்றது? என்பது திருஷ்டாந்தத்திற் பிரஸ்நமாம்.

125. புகன்ற கேள்வியின் அபிப்பிராயம்.

யாண்டு இரஜ்ஜுவின்கண் சர்ப்பம், இப்பியின்கண் வெள்ளி முதலிய பிராந்தி யுண்டாகின்றதோ, ஆண்டு நான்கு மதங்களைக் கேட்டுளேன். சூந்யவாதி அசத்கியாதி யென்பர்; க்ஷணிக விக்ஞாநவாதி ஆத்மக்கியாதி யென்பர்; நியாய வைசேஷிக மதத்தில் அந்நியதாக் கியாதி யென்பர், சாங்கியர் பிரபாகரர் அக்கியாதி யென்பர்.

### 126. அசத் கியாதி.

ஆண்டு சூந்யவாதியின தபிப்பிராய மிதுவாம்:—இரஜ்ஜுவின்கண் சர்ப்பம் அத்தியந்தம் அசத்தாம். அங்ஙனமே, அந்நிய தேசத்தினு மத்தியந்தம் அசத்தாம். இப்படி அத்தியந்தம் அசத்தாகிய சர்ப்பம் இரஜ்ஜுவின்கண் பிரதீதி யாகின்றது. இதனை அசத் கியாதி யென்பர். அத்தியந்தம் அசத் சர்ப்பத்தின் கியாதி யென்பது பாநமும், சொல்லுதலுமாம்.

### 127. ஆத்மக் கியாதி.

விஞ்ஞாநவாதியின் அபிப்பிராய மிதுவாம்:—பழுதையி னிடத்திலும், அங்ஙனமே அந்நிய தேசத்திலும், புத்திக்கு வெளியே ஓரிடத்துஞ் சர்ப்ப மிருக்க வில்லை. சகல பதார்த்தங்களும் புத்திக்குப் பிந்நமாக வில்லை. பின்னையோ, சகல பதார்த்தங்களினது ஆகாரத்தைப் புத்தியே தரிக்கின்றது. அப்புத்தி க்ஷணிக விஞ்ஞாந ரூபமாம். க்ஷணந்தோறும் நாசத்தையும் உற்பத்தியையு மடையும் விஞ்ஞாநம் சர்ப்பரூபமாகப் பிரதீதியாகாநிற்கின்றது. இதனை ஆத்மக் கியாதி என்பர். ஆத்மா வென்பது க்ஷணிக விஞ்ஞாநரூப புத்தியாம். அதனது சர்ப்ப ரூபமாக, கியாதி யென்பது பாநமும், சொல்லுதலுமாம்.

### 128. அந்நியதாக் கியாதி.

நியாய வைசேஷிகரது அபிப்பிராய மிதுவாம்:—புற்று முதலிய ஸ்தாநங்களில் எதார்த்த சர்ப்ப முளது; அது நேத்திரத்தால் பார்க்கப்படுகின்றது. நேத்திரத்தின்கண் தோஷ முளது; அதனது வலியினல் எதிரே சமீபத்திற் பிரதீதியாகின்றது. எதார்த்த சர்ப்பத்திற்கும் நேத்திரத்திற்கும் மத்தியில் பித்தி சுவர் முதலிய அந்தராயங்களுளவாயினும், தோஷ சகித நேத்திரத்தால் அந்தராய சகித சர்ப்பமுங் காணப்படுகின்றது.

இதன்கண் சிலர் இங்ஙனஞ் சங்கை செய்யில்:—தோஷத்தாற் சாமர்த்தியங் குறையாநிற்கும், விர்த்தியாகாது. எங்ஙனம் ஜாடராக்கினியின்கண் பாசந சாமர்த்தியம் வாத பித்த கப தோஷத்தாற் குறையாநின்றது, அங்ஙனமே நேத்திரத்தின்கண்ணும் திமிராதி தோஷத்தாற் சாமர்த்தியங் குறைய வேண்டும் தோஷ சகித நேத்திரத்தாற் புற்று முதலிய ஸ்தானங்களிலுள்ள சர்ப்பத்

தின் ஞான முண்டாகின்ற தென்று கூறப்பட்டது. ஆண்டு சுத்த நேத்திரத்தால் அந்நிய விடத்திலுள்ள பதார்த்தத்தின் பிரத்தியக்ஷ ஞான முண்டாகாது; தோஷ சகித (நேத்திர)த்தா லுண்டாகின்றது. இதனுல் "தோஷத்தால் நேரத்திரத்தின் சாமர்த்தியம் அதிகமாகின்றது" என்று ஒப்புவதி லொருதிருஷ்டாந்தமு மில்லை.

அச்சங்கை பொருந்தாது. எதனு லெனின், ஒருவனுக்குப் பித்த தோஷத்தா லிவ்வித ரோக முண்டாகின்றது. நான்கு பங்கு அதிகமாகப் போஜனஞ் செய்தாலுந் திருப்தி யுண்டாகிற தில்லை. எங்ஙனம் பித்த தோஷத்தாற் ஜாடராக்கினியின்கண் ஜீரணிக்குஞ் சாமர்த்தியம் விர்த்தியாகின்றதோ, அங்ஙனமே நேத்திரத்தின் கண்ணும் திமிராதி தோஷத்தால் அந்நியதேசத்தின்கண்ணுள்ள சர்ப்பத்தினைப் பிரத்தியக்ஷஞ் செய்யும் சாமர்த்தியம் விர்த்தியாகும்.

இந்த ரீதியாகப் புற்று முதலிய தேசங்களிலுள்ள சர்ப்பத்தினது, அந்நியதா வென்பது வேறு பிரகாரமாக எதிரே பழுதையின்கண், கியாதி யென்பது, பாநமும் சொல்லுதலும் ஆம்; அது அந்நியதாக் கியாதி யெனப்படும்.

129. பின்னுஞ் சிந்தாமணி காரரது மத மிதுவாம்:—தோஷ சகித நேத்திரத்தாற் புற்றின்கண் ஸ்தித சர்ப்பத்தினது ஞான முண்டாமாயின், மத்தியிலுள்ள ஏனைய பதார்த்தங்களின் ஞானமு முண்டாதல் வேண்டும். ஆதலால், வேறு தேசத்திலுள்ள வஸ்துவினது ஞானம் நேத்திரத்தா லுளதாகாது. பின்னையோ, தோஷ சகித நேத்திரத்தால் பழுதை தனது நிச ரூபமாகப் பாநமாகாது; சர்ப்ப ரூபமாகப்பாநமாகாநிற்கும் இதனுல் பழுதையேஅந்நியதா (வேறு பிரகார) சர்ப்ப ரூபமாக, கியாதி, பாநமும்,சொல்லுதலும் ஆம்; அது அந்நியதாக் கியாதி யெனப்படும்.

### 130. அக்கியாதியும் முற்கூறிய மூன்று கியாதிகளின் கண்டநமும்.

அக்கியாதி வாதியினுடைய அபிப்பிராய மிதுவாம்:—அசத்தினது பிரதீதி யுள்ளதாமாயின், வந்தியாபுத்திர சச சிருங்கத்தினது பிரதீதியாக வேண்டும். ஆதலால், அசத் கியாதி அசங்கதமாம்.

க்ஷணிக விஞ்ஞானத்தின தாகாரமே சர்ப்பாதிகளாமாயின், க்ஷண மாத்திரத்தால் அதிக காலமுள்ள பிரதீதி ஆக வேண்டுவ தில்லை. ஆதலால், ஆதமக் கியாதி அசங்கதமாம்.

அந்யதாக் கியாதியின் பிரதம ரீதியோ, சிந்தாமணி மதத் தால் தூஷிதமாகவே யுளது. அங்ஙனமே சிந்தாமணியினது ரீதியாலும் அந்யதாக்கியாதி மதம் அசங்கதமாம். எதனுலெனின், ஞேய வநுசாரமாக ஞாந முளதாகாநிற்கும். “ஞேயம் இரஜ்ஜு, ஞாநம் சர்ப்பம்” என்று கூறுதல் அத்தியந்த விருத்தமாம். ஆத லால், இந்த ரீதி ஒப்ப யோக்கியமாம்:—யாண்டு இரஜ்ஜுவின் கண் சர்ப்பப் பிராந்தியுளதோ, ஆண்டு இரஜ்ஜுவோடு நேத்திரத் திற்குத் தனது விருத்தி வாயிலாகச் சம்பந்தமாகி, இரஜ்ஜுவி னது இதம் ரூபமாக சாமாந்ய ஞாந முளதாகின்றது, சர்ப்பத்தின் ஸ்மிருதியு முண்டாகின்றது. “இது சர்ப்ப” மென்பதில் இரண்டு ஞாந முள. “இது” வென்னும் அம்சமோ, இரஜ்ஜுவினது சாமாந் யப்பிரத்தியக்ஷ ஞாநமாம்; “சர்ப்ப” மென்பது சர்ப்பத்தினது ஸ்மி ருதி ரூப ஞாநமாம்.

இந்த ரீதியினுல் “இது சர்ப்பம்” என்னு மிடத்தில் இரண்டு ஞாநமுள; ஆயினும், பயதோஷம் பிரமாதாவின்கண்ணும், திமிர தோஷம் பிரமாணத்தின்கண்ணும் உள. அவற்றின் பலத்தால் எனக்கு இரண்டு ஞாந முண்டாயின வென்று புருஷனுக்கு இங்ங னம் விவேக முண்டாகின்றதில்லை. “இது” வெனு மம்சமாகிய இரஜ்ஜுவினது சாமாந்ய ஞாநம் யதார்த்தமாம்; பூர்வங் கண்ட சர்ப்பத்தினது ஸ்மிருதி ஞாநமும் யாதார்த்தமே யாமாயினும், எனக்கு இரண்டு ஞாநந் தோன்றின. இவற்றுள் இரஜ்ஜுவி னது சாமாந்யப் பிரத்தியக்ஷ ஞாநம் ஒன்று, சர்ப்பத்தினது ஸ்மி ருதி ஞாநம் ஒன்று என்னும் விவேக முண்டாவ தில்லை. அவ்விர ண்டு ஞாநத்தின் அவிவேகத்தையே சாங்கிய பிரபாகர மதத்திற் பிராந்தி யென்றனர். இந்த ரீதி சகல பிராந்தி ஸ்தலங்களினு மறி யத் தக்கதாம்.

இந்த ரீதியாக இரஜ்ஜுவாதிகளில் சர்ப்பாதிப் பிராந்தி யாண்டுஉளதாமோ, ஆண்டு நான்கு மதங்களைக்கேட்டிருக்கிறேன். அவற்றுள் சிறந்துள்ள மதத்தை யருள்க. அதனையே நான் அங்கீ கரிக்கின்றேன் என்பது சிஷ்யனது பிரஸ்நமாம்.

124 - 130 திலுள்ள பிரஶ்நத்தின் உத்தரம்.

131. அக்யாதி மத கண்டனம்.

குரு கூறுகின்றார்.

சிஷ்யனே! அந்நான்கு கியாதியினும் வேறாகப் பிராந்தி ஸ்தலத்தில் அநிர்வசநீயக் கியாதியினை ஐந்தாவதாக அறி. அசத் கியாதி, ஆத்மக்கியாதி, அந்யதாக்கியாதி, அக்கியாதியாகிய இந் நான்கு மதமும் யுத்தி ஹீநமாம்.

எங்ஙனம் உத்தரோத்தர மத நிரூபணத்தில் மூன்று மதங்கள் அசங்கதமென்று கூறப்பட்டதோ, அங்ஙனமே அக்கியாதி மதமும் அசங்கதமாம்; எதனாலெனின், "இது சர்ப்ப மென்னு ஞானத்தில் பிரதமம் 'இது' வெனு மம்சம் இரஜ்ஜுவினது சாமாந்ய ஞானப் பிரத்தியக்ஷமாம். 'சர்ப்ப' மென்னு மம்சம் பூர்வங் கண்ட சர்ப்பத்தினது ஸ்மரண ஞானமாம்" என்னுமிஃதக்கியாதி வாதியினது மதமாம். ஆண்டுப் பூர்வங்கண்ட சர்ப்பத்தினது ஸ்மரணத்தினையே யங்கீகரித்து ஸந்முக இரஜ்ஜு தேசத்தில் சர்ப்பஞானத்தினை யங்கீகரியாவிடின், ஸந்முக இரஜ்ஜுவினின் றும் புருஷனுக்குப்பயமுண்டாகி அவன் திரும்பி யோடாநின்ற னன். அப்பயமும் ஓடுதலும் உளவாக வேண்டுவ தில்லை. ஆதலால் ஸந்முக இரஜ்ஜு தேசத்திலேயே சர்ப்பத்தினது பிரதீதி யுள தாகா நிற்கின்றது. பூர்வங்கண்ட சர்ப்பத்தினது ஸ்மிருதி யல்ல.

132. அன்றியும், இரஜ்ஜுவினது விசேஷரூப யதார்த்த ஞாந முண்டானதன் பின்னர் எனக் கிரஜ்ஜுவின்கண் சர்ப்பப் பிரதீதி மித்தையா யுளதாயிற்றென் றிங்ஙனம் பாத முண்டாகின் றது. இந்தப் பாதத்தாலும் இரஜ்ஜுவின்கண் சர்ப்பப் பிரதீதி யுளதாகின்றது. பூர்வங்கண்ட சர்ப்பத்தினது ஸ்மிருதி யல்ல; "இது சர்ப்ப" மென்னு மிடத்தில் ஞாநம் ஒன்றே பிரதீதியாகின் றது; இரண்டு பிரதீதியாகின்ற தில்லை. ஏககாலத்தில் அந்தக்கர ணத்தினின்றும் ஸ்மிருதிரூபம் பிரத்தியக்ஷரூப மென்னும் இரண்டு ஞாநம் உண்டாகவு மில்லை.

ஆதலால், அக்கியாதி மதமும் அத்தியந்தம் அசங்கதமாம். இந்நான்கு மதங்களின் பிரதிபாதநமுங், கண்டநமும், விவரணம், ஸ்வாராஜ்ய சித்தியாதிய கிரந்தங்களில் விஸ்தாரமாக எழுதப்பட் டுள்ளன. பிரதிபாதந கண்டநங்களின் யுக்தி கடினமா யுள்ளன,

ஆதலால், சுருக்கமாக ஜிஜ்ஞாஸுக்கு அந்த ரீதி யறிவிக்கப்பட்டது. விஸ்தாரமாக நாம் எழுத வில்லை.

133. அநிர்வசநீயக் கியாதியின் (சித்தாந்தத்திலுள்ள) தன்மை.

சித்தாந்தத்தில் அநிர்வசநீயக் கியாதி உளது. அதனது ரீதி இதுவாம்:—அந்தக்கரணத்தினது விருத்தி நேத்திராதி வாயிலாய் வெளிப்பட்டு விஷயத்தினது சமாநாகாரத்தை யடையாகிற்கின்றது. அதனால் விஷயத்தின தாவரண பங்கமாக அதனது பிரதீதியாகின்றது. ஆண்டுப் பிரகாசமுஞ் சகாயமாகாநின்றது. பிரகாச மின்றிப் பதார்த்தத்தினது பிரதீதி யாகமாட்டாது. எங்கே இரஜ்ஜுவின்கண் சர்ப்பப் பிரம முளதாகின்றதோ, அங்கே அந்தக்கரணத்தினது விருத்தி நேத்திராதி வாயிலாக வெளிப்பட்டும், இரஜ்ஜுவோடு அதன் சம்பந்தமுமாம்; ஆயினும், திமிராதி தோஷப் பிரதிபந்தத்தால் விருத்தியினது சொரூபம் இரஜ்ஜுவினது சமாநாகாரமாக வில்லை; ஆதலால், இரஜ்ஜுவின தாவரணம் நாசமாக வில்லை.

இந்த ரீதியினால், ஆவரண பங்கத்தின் நிமித்தம் விருத்தியினது சம்பந்தமாயினும், எப்போது இரஜ்ஜுவின தாவரணம் பங்கமாக வில்லையோ, அப்போது இரஜ்ஜு சேதநத்தின்கண் உள்ள அவித்தையின்கண் க்ஷோப முண்டாகி அவ்வவித்தை சர்ப்பாகார பரிணாமத்தை யடைகின்றது. அவ்வவித்தையினது காரியமாகிய சர்ப்பமானது சத்தாகுமேல், இரஜ்ஜு ஞாநத்தால் அது பாதமாகாது; ஆனால், பாதமாகாநின்றது. ஆதலால், சத்தல்ல; அசத்தாகுமேல், வந்தியா புத்திரன்போல் பிரதீதியாகாது; ஆனால், பிரதீதி யாகாநின்றது. ஆதலால், அசத்து மல்ல; பின்னையோ, சதசத்தின் விலக்ஷணமாகிய அநிர்வசநீயமாம். சுத்தியாதிகளில் ரசதாதிகளும் இந்தரீதியாகவே அநிர்வசநீயமாக உற்பந்நமாகின்றன. அவ்வநிர்வசநீயத்தின் கியாதி, பிரதீதி கூறுதல் யாது, அது அநிர்வசநீயக் கியாதி யென்று சொல்லப்படும்.

134. பிரஹ்ம ஸ்தலத்தில் அந்தக்கரணத்திற்குப் பிந்நமான அவித்தையின் பரிணாமமாய சர்ப்பாதி விஷயங்களும், அவற்றின் ஞாநமும் ஒரேசமயத்தில் உற்பத்தியாகி லயத்தை யடைகின்றன.

அவை சாக்ஷி பாஸ்யமாம்.

எங்ஙனம் சர்ப்பம் அவித்தையின் பரிணாமமோ, அங்ஙனமே அதன் ஞாநரூப விருத்தியும், அவித்தையின் பரிணாமமே; அந்தக்

கரணத்தின் பரிணும மன்று; எதனு லெனின், எங்ஙனம் இரஜ்ஜு ஞாநத்தால் சர்ப்பம் பாதமாகின்றதோ, அங்ஙனமே அதன் ஞாநமும் பாதமாகாநின்றது. அந்தக்கரணத்தின் ஞாநமாகுமேல், பாதமாக வேண்டுவ தில்லை. ஆதலால், ஞாநமும் சர்ப்பத்தைப் போல அவித்தையின் காரிய சதசத்தின் விலக்ஷண அநிர்வசநீயமாம். ஆயினும்,

இரஜ்ஜு வுபகித சேதநத்தின்கண்ணுள்ள தமோகுணப் பிரதான அவித்தையா அம்சத்தின் பரிணுமம், சர்ப்பமாம். சாக்ஷி சேதநத்தின்கண்ணுள்ள அவித்தையின் சத்துவகுணத்தின் பரிணுமம், விருத்தி ஞாநமாம்.

எந்தச் சமயத்தில் இரஜ்ஜு சேதநத்தின் அவித்தை, சர்ப்பாகாரப் பரிணுமமாமோ, அந்தச் சமயத்திலே சாக்ஷி யாசிரித அவித்தை, ஞாநாகார பரிணுமமாம். எதனு லெனின், இரஜ்ஜு சேதநாசிரித அவித்தையின்கண் எந்நிமித்தத்தால் க்ஷோப முண்டோ, அந்நிமித்தத்தாலேயே சாக்ஷியாசிரித அவித்தியா அம்சத்தின்கண் க்ஷோப முண்டாகின்றது. இதனுற், பிராந்தித் தலத்தில் சர்ப்பாதி விஷயங்களும், அவற்றின் ஞாநங்களும் ஒரே சமயத்தி லுற்பந்நமாகின்றன. இரஜ்ஜு வாதி அதிஷ்டாநத்தின் ஞாநத்தால் ஒரே சமயத்தில் லீநமாகின்றன.

இந்த ரீதியால், சர்ப்பாதிப் பிராந்தியில் பாகியமான அவித்தையி னம்சம், சர்ப்பாதி விஷயங்களின் உபாதான காரணமாம். சாக்ஷி சேதந ஆசிரிதமாகிய ஆந்தர அவித்தையின் அம்சம், அவற்றின் ஞாநரூப விருத்திகளி னுபாதான காரணமாம்.

ஸ்வப்நத்திலோ, சாக்ஷியாசிரிதமாகிய அவித்தையின் தமோகுண அம்சமே, விஷயரூப பரிணுமத்தை யடைகின்றது. அவ்வவித்தையிலுள்ள ஸத்வகுண அம்சம், ஞாநரூப பரிணுமத்தை யடைகின்றது.

இதனுல், ஸ்வப்நத்தில் ஆந்தர அவித்தையே, விஷயம், ஞாநமென்னு மிரண்டின் உபாதாந காரணமாம். இதனுலேயே, பாகியமான இரஜ்ஜு சர்ப்பாதிகளும் ஆந்தர ஸ்வப்ந பதார்த்தங்களும் சாக்ஷி பாஸ்ய மெனப்படுகின்றன. அவித்தையா விருத்தியின் வாயிலாய் எதனைச் சாக்ஷி பிரகாசிக்கின்றதோ, அது சாக்ஷி பாஸ்ய மென்று சொல்லப்படும்.

### 135. ரஜ்ஜுவில் சர்ப்பமும் அதன் ஞாநமும் அவித்தையின் பரிணாமமும் சேதநத்தின் விவர்த்தமுமாம்.

இரஜ்ஜுவாதிகளில் அநிர்வசநீய சர்ப்பாதிகளும், அவற்றின் ஞாநங்களும் பிராந்தி யென்றும், அத்தியாச மென்றும் சொல்லப்படும். அந்தப் பிராந்தி அவித்தையின் பரிணாமமும், சேதநத்தின் விவர்த்தமுமாம்.

உபாதாந காரணத்திற்குச் சமான ஸ்வபாவ முடைய அந்யதா (வேறு) ஸ்வரூபம் பரிணாம மெனப்படும். அதிஷ்டானத்தினும் விபரீத ஸ்வபாவமுடைய அந்யதா ஸ்வரூபம் விவர்த்த மெனப்படும். உபாதாந காரணம் அவித்தை; அஃதநிர்வசநீயமாம். அப்படியே இரஜ்ஜுவின்கண் சர்ப்பமு மதன் ஞாநமும்அநிர்வசநீயமாயிருக்கின்றன. இதனால் இரஜ்ஜு சர்ப்பமு மதன் ஞாநமும் அவித்தையின் சமாந ஸ்வபாவ முடையன. அந்யதா ஸ்வரூப மென்பது அவித்தையினும் வேறு பிரகாரமான ஆகாரம் ; அஃதவித்தையின் பரிணாமமாம். அப்படியே இரஜ்ஜு அவச்சிந்ந அதிஷ்டாந சேதநம் சத்ரூபமாக விருக்கின்றது. சர்ப்பமு மதன் ஞாநமும் சத்தின் விலக்ஷணமாம். இதனால், இரஜ்ஜு சர்ப்பமு மதன் ஞாநமும் அதிஷ்டான சேதநத்தினும் விபரீத ஸ்வபாவ முடையன. அந்யதா ஸ்வரூப மென்பது சேதநத்தினும் வேறு பிரகாரமான ஆகாரமாம்.

### 136. ரஜ்ஜு அந்தக்கரணங்களின் உபஹித சேதநம் அதிஷ்டாநமாம்; ரஜ்ஜு வன்று; சர்ப்பமும் அதன் ஞாநமும் ரஜ்ஜு ஞாநத்தால் நிவர்த்தியாம்.

மித்தியா சர்ப்பத்தின ததிஷ்டாநம் இரஜ்ஜு உபஹித சேதநமாம்; இரஜ்ஜு வன்று. எதனா லெனின், சர்ப்பத்தினைப்போல இரஜ்ஜுவும் கற்பிதமாம். கற்பிதவஸ்து அந்ய கற்பிதத்துக்கு அதிஷ்டாநமாகாது. இதனால், இரஜ்ஜு உபஹித சேதநமே அதிஷ்டாநமாம் ; இரஜ்ஜு வன்றாம்.

இரஜ்ஜு விசிஷ்டத்தினை யதிஷ்டாந மென்று சொல்லுவோமாயின், இரஜ்ஜு, சேதந மிரண்டும் அதிஷ்டாநமாம். ஆண்டு இரஜ்ஜுபாகத்தில் அதிஷ்டாநத்தன்மை பாதிக்கப்பட்டுளது. இதனால்,இரஜ்ஜு உபஹித சேதநமே அதிஷ்டாநமாம். இரஜ்ஜு விசிஷ்ட சேதந மன்று.

அங்ஙனமே சர்ப்ப ஞானத்திற்குச் சாக்ஷி சேதந மதிஷ்டாந மாம். இந்த ரீதியினால், பிராந்தி ஸ்தலத்தில் விஷயத்திற்கும் அதன் ஞானத்திற்கும் உபாதி பேதத்தால் அதிஷ்டானம் பிந்ந மாம்; ஒன் றல்ல.

விசேஷ ரூபமாக இரஜ்ஜுவின் அப்பிரதீதி அவித்தையில் க்ஷேபத் துவாரா இரண்டன துற்பத்தியி னிமித்தமாம். அங் ஙனமே இரஜ்ஜுவின் ஞாநம் இரண்டன் நிவிருத்தியிலும் நிமித்த மென்று சொல்லப்பட்டிருக்கின்றது.

### 137. சங்கை:—ரஜ்ஜுவின் ஞாநத்தால் சர்ப்பத்தின் நிவர்த்தி பொருந்தாது.

இதன்கணிவ்வாறு சங்கை யுண்டாகின்றது:—இரஜ்ஜுவின் ஞாநத்தாற் சர்ப்பத்தி னிவிருத்தி பொருந்தாது. எதனாலெனின் "மித்தியா வஸ்துவிற்கு யாது அதிஷ்டாநமாமோ, அவ்வதிஷ்டா நத்தின் ஞாநத்தான் மித்தைக்கு நிவிருத்தி உளவாம் என்பது அத்வைத வாதத்தின் சித்தாந்தமாம்". மித்தியா சர்ப்பத்துக் கதிஷ்டாநம் இரஜ்ஜு உபஹித சேதநமாம்; இரஜ்ஜு வன்று. இதனால் இரஜ்ஜுவின் ஞாநத்தாற் சர்ப்பத்தி னிவிர்த்தி பொருந் தாது.

### 138. சமாதாநம்:—ரஜ்ஜுவின் ஞாநமே. சர்ப்பத்தின் அதிஷ்டாந ஞாநமாம்.

இச்சங்கைக் கிது சமாதாநமாம்:—" இரஜ்ஜுவாதிய ஜட பதார்த்தத்தின் ஞாநம் அந்தக்கரணத்தின் விருத்தி ரூபமாக வுண்டாயின், ஆண்டு ஆவரண பங்கம் விருத்தியின் பிரயோஜந மாம். அவ்வாவரணம் அஞ்ஞாநத்தின் சக்தியாம். இதனால் ஆவர ணம் ஜடத்தின தாசிரித மன்றும்; பின்னையோ, ஜடத்திற் கதிஷ் டாநசேதந ஆசிரிதமாம். இதனால்,

இரஜ்ஜு சமானாகார அந்தக்கரணத்தின் விருத்தியால்இரஜ்ஜு அவச்சிந்ந சேதநத்தின் ஆவரணமே பங்கமாகின்றது. விருத்தி யில் உள்ள சிதாபாசனால் இரஜ்ஜுவின் பிரகாச முளவாகின்றது.

சேதநம் ஸ்வயம்பிரகாசமாம். அதில் ஆபாசன துபயோக மில்லை" இந்தப் பிரக்கிரியை முழுதும் மேலே (187 பிரசங்கத்தில்) பிரதிபாதநம் செய்வாம். இந்த ரீதியினால் சிதாபாச சகித அந்தக் கரணத்தின் விருத்திரூப ஞாநத்தில் விருத்தி பாகத்திற்கு ஆவ

ரணபங்க ரூப பலம் சேதநத்தி லுளதாம்; சிதாபாச பாகத்திற்குப் பிரகாச ரூப பலம் இரஜ்ஜுவி லுளதாம்.

இதனால், விருத்தி ஞாநத்திற்குக் கேவலம் ஜட இரஜ்ஜு விஷய மல்ல; பின்னையோ, அதிஷ்டாந சேதநத்தோடு கூடிய இரஜ்ஜு, சாபாஸ விருத்திக்கு விஷயமாம். இக்காரணத்தால் சித்தாந்த கிரந்தங்களில் "அந்தக்கரண ஜந்யமாகிய விருத்தி ஞாநங்கள் முழுதும் பிரஹ்மத்தை விஷயம் செய்கின்றன." என்று எழுதப்பட்டிருக்கின்றது.

இந்தப் பிரகாரமாக இரஜ்ஜு ஞாநத்தால் நிராவரணமாகி, சர்ப்பத்திற் கதிஷ்டாநமான இரஜ்ஜு அவச்சிந்ந சேதநமுந் தன் பிரகாசத்தால் விளங்குகின்றது. இதனால் இரஜ்ஜுவின் ஞாநமே சர்ப்பத்தி னதிஷ்டாந ஞாநமாம். அதனால், சர்ப்பத்தி னிவிருத்தி சம்பவிக்கின்றது.

### 139. சங்கை:—ரஜ்ஜு ஞாநத்தால் சர்ப்ப ஞாநத்தின் நிவர்த்தி பொருந்தாது.

அந்ய சங்கை:—இந்த ரீதியினாற், சர்ப்பத்தி னிவிருத்தி இரஜ்ஜுவின் ஞாநத்தாற் சம்பவிக்குமாயினும், சர்ப்ப ஞாநத்தி னிவிருத்தி சம்பவிக்க வில்லை. எதனா லெனின், சர்ப்பத்தின ததிஷ்டாநம் இரஜ்ஜு அவச்சிந்ந சேதநமாம்; சர்ப்ப ஞாநத்தின ததிஷ்டாநம் சாக்ஷி சேதநமாம். பூர்வஞ் சொன்ன பிரகாரத்தால் இரஜ்ஜுவின் ஞாநத்தால் இரஜ்ஜு அவச்சிந்ந சேதநமே பாநமாகின்றது; சாக்ஷி சேதநம் (பாநமாக) இல்லை. ஆனதால், இரஜ்ஜுவின் ஞாந முண்டானாலும் சர்ப்ப ஞாநத்தின ததிஷ்டாநமான சாக்ஷி சேதநம் அஞ்ஞாதமா யுளது. அஞ்ஞாத அதிஷ்டாநத்தில் கற்பிதத்தின் நிவிர்த்தி யாகாது; பின்னையோ, ஞாத அதிஷ்டாநத்திலேயே கற்பிதத்தி னிவிருத்தி யுளதாம். இதனால் இரஜ்ஜுவின் ஞாநத்தாற் சர்ப்ப ஞாநத்தி னிவிர்த்தி பொருந்தாது.

### 140. சமாதாநம்:—சர்ப்பத்தின் அபாவத்தால் சர்ப்ப ஞாநத்தின் நிவர்த்தி.

அதற்குச் சமாதாநம் இதுவாம்: — விஷயத்தின ததீநமாய் ஞாந முளதாம். விஷயமாய சர்ப்பம், நிவர்த்தியாகவே சர்ப்ப ஞாந விஷயத்தின தபாவத்தால் (சர்ப்ப ஞாநத்தி னிவிர்த்தி) தானே யுளதாம்.

141. வேறு இங்ஙனஞ் சொல்லில்:—கற்பிதத்தின் நிவிர்த்தி அதிஷ்டாந ஞாந மின்றி யுளதாகாது; சர்ப்பத்தினது ஞாநமும் கற்பிதம். அதன தநிஷ்டாநம் சாக்ஷி சேதநம்; அதனது ஞாந மின்றிக் கற்பிதமாகிய சர்ப்ப ஞாநத்தி னிவிருத்தி பொருந்தாது.

142. அதற்குச் சமாதாநம் இதுவாம்:—நிவிருத்தி யிரண்டு பிரகாரமாம். ஒன்று அத்தியந்த நிவிர்த்தியாம்; மற்றொன்று காரணத்தில் லயமாகுதலாம்; அஃதும் நிவிருத்தி யெனப்படும். காரணத்தோடு காரியத்தின் நிவிர்த்தி அத்தியந்த நிவிர்த்தி யெனப்படும். சகல கற்பித வஸ்துக்களின் காரணம் அதிஷ்டாந ஆசிரித அஞ்ஞாநமாம்; அவ்வஞ்ஞாநத்தோடு கற்பிதமாகிய காரியத்தின் நிவிர்த்தி அதிஷ்டாந ஞாநத்தினாலேயே யுளதாம்; ஆனால், காரணத்தில் லயரூப நிவிர்த்தி அதிஷ்டான ஞாந மின்றியு முளதாம்.

எங்ஙனம் சுழுத்தியிலும், பிரளயத்திலும் சர்வ பதார்த்தங் கட்கும் அஞ்ஞாநத்தின்கண் லயம், அதிஷ்டாந ஞாந மின்றியும் உண்டாகின்றது, ஆண்டுச் சர்வ பதார்த்தங்களின் லயத்தி னிமித்தம், போக சந்முக கர்மங்களின தபாவமாம். அங்ஙனமே அதிஷ்டாநமாகிய சாக்ஷி ஞாந மின்றியே சர்ப்ப ஞாநத்தின் லய முண்டாம். ஆண்டுச் சர்ப்ப ஞாநத்திற்கு விஷயமான சர்ப்பாபாவம் சர்ப்ப ஞாநத்தின் லயத்தில் நிமித்தமாக வுளது.

இந்தப் பிரகாரத்தால், சர்ப்பத்தின் நிவிர்த்தி இரஜ்ஜு ஞாநத்தா லுளதாம்; சர்ப்ப ஞாநத்திற்கு விஷயமான சர்ப்பத்தின் அபாவத்தால் சர்ப்ப ஞாநத்தின் லயம் உண்டாம்.

143. **ரஜ்ஜு ஞாந சமயத்தில் சாக்ஷியின் பாநமாகின்றது.**

அல்லது, சர்ப்பமு மதனது ஞாநமுமாகிய இரண்டனது நிவிர்த்தி, இரஜ்ஜு ஞாநத்தினாலேயே யுளதாம். எதனாலெனின், எப்போது இரஜ்ஜுவின் பிரத்தியக்ஷ ஞாந முண்டாம், அப்போது அந்தக்கரணத்தின் விருத்தி நேத்திர வழித்தாய்ப் புறப்பட்டு இரஜ்ஜு தேசத்தில் பிராப்தமாய் இரஜ்ஜுவுக்குச் சமானமாய் விருத்தியின் ஆகாரமாம். இதனால், இரஜ்ஜுவின் பிரத்தியக்ஷ சமயத்தில் விருத்தி உபஹித சேதநம், இரஜ்ஜு உபஹித சேதநம் இரண்டும் ஏகமாம்; அவற்றிற்குப் பேத மிருப்பதில்லை. இதில் இஃதேதுவாம்:—“சேதநத்திற்கு ஸ்வரூபத்தினாற் பேத மெவ்

விடத்து மின்று; பின்னையோ, உபாதியின் பேதத்தால் சேதநத்திற்குப் பேத முளதாம். விருத்தி உபஹித சேதநம், இரஜ்ஜு உபஹித சேதநங்களின் பேதக உபாதி, விருத்தியு மிரஜ்ஜுவு மாம்.

அந்த விருத்தியும், இரஜ்ஜுவும் பிந்ந பிந்ந தேசத்திலிருக்கும்போது உபாதியினை யுடைய சேதநங்கட்குப் பேதமாம். இரண்டு உபாதியும் ஓரிடத்தி லிருக்கும்போது உபஹித சேதநங்கட்குப் பேதம் பொருந்தாது என்னும் வார்த்தை வேதாந்த பரிபாஷை முதலிய கிரந்தங்களி லெழுதப்பட் டிருக்கின்றது. வேறு தேசத்திலுள்ள உபாதியினாலேயே உபஹித சேதநங்கட்குப் பேதமாம். ஏகதேசத்தி லெப்போ திரண்டு உபாதியும் ஸ்திதமாமோ, அப்போது இரண்டு உபாதிகளால் உபஹிதமான சேதநமு மொன்றேயாம்.

இந்தப் பிரகாரத்தால், இரஜ்ஜுவின் பிரத்தியக்ஷ ஞாந சமயத்தில்இரஜ்ஜுஉபஹிதசேதநமும்,விருத்தி உபஹித சேதநமும் ஏகமாயுளது. அவ்விடத்திற் சாக்ஷி சேதநமே விருத்தி உபஹித சேதநமாம்.எதனு லெனின், அந்தக்கரணத்திலும் அதன்விருத்தியிலு முள்ள அவற்றின் பிரகாசகமான சேதந மாத்திரம் சாக்ஷி யெனப்படும். இந்த ரீதியினால், இரஜ்ஜுவின் ஞாந சமயத்தில் சாக்ஷி சேதநம், இரஜ்ஜு உபஹித சேதநங்கட் கபேத முளதாம்.

இரஜ்ஜு உபஹித சேதநம் இரஜ்ஜு ஞாநத்தாற் பாநமாம். இரஜ்ஜு உபஹித சேதநத்தோ டபிந்நமான சாக்ஷியும் இரஜ்ஜு ஞாநத்தாற் பாநமாம்.

இந்தப் பிரகாரத்தால், இரஜ்ஜு ஞாந சமயத்தில் அதிஷ்டாந சாக்ஷியும் பாநமாவதால், கற்பித சர்ப்ப ஞாநத்தி னிவிர்த்தி சம்பவிக்கின்றது.

### 144. சர்வ திரிபுடி ஞாநத்தில் சாக்ஷியின் ஞாந முண்டாம் எனல்.

அன்றியும், கூடஸ்த தீபத்தில் வித்தியாரண்ய சுவாமிகள் இந்தப் பிரக்கிரியையைச் சொல்லி யிருக்கின்றார்கள்:—"ஆபாசனோடு கூடிய அந்தக்கரணத்தின் விருத்தி இந்திரிய வழித்தாய்ப் புறப்பட்டு கடாதி விஷயங்களைப் பிரகாசிக்கின்றது. கடாதி விஷயம், அங்ஙனமே ஆபாச சகித விர்த்திரூப அவற்றின் ஞாநம், அங்ஙனமே ஆபாச சகித அந்தக்கரணரூப ஞாதா என்னும் இம்

மூன்றையும் சாக்ஷி பிரகாசிக்கின்றது." "இது கட" மென்னு மிந்த ரீதியினல் ஆபாச சகித விர்த்தியால், கட மாத்திரத்தின் பிரகாசமாகின்றது. "நான் கடத்தை யறிகின்றே" னென்னும் இந்த ரீதியினல் "நா"னென்னுஞ் சப்தத்திற் கர்த்தமாகியஞாதா, ஞேயமாகிய கடம், அதன் ஞாந மென்னும் திரிபுடி சாக்ஷியினுற் பிரகாசமாகின்றது. இந்தப் பிரகாரத்தால், சர்வ திரிபுடிகளின் பிரகாசமாய்ச் சாக்ஷி யிருக்கின்றது.

சாக்ஷி தான் அஞ்ஞாதமாயின், திரிபுடியின் ஞாநம் சாக்ஷியினுல் உண்டாகாது. இதனல்,சர்வ திரிபுடிகளின் ஞாநத்தில் சாக்ஷியின் ஞாநம் அவசிய மிருக்கின்றது.

அந்தச் சாக்ஷி ஞாநத்தால் சர்ப்ப ஞாநத்தின் நிவிர்த்தி சம்பவிக்கலாம். இந்தப் பூர்வ ரீதியினல், சர்ப்பத்திற்கும் அதன் ஞாநத்திற்கும் அதிஷ்டாநம் பிந்ந பிந்நமாய்ச் சொல்லப்பட்டது. அதில் இவ்வளவு சங்கை சமாதாநங்களுள. இந்தப் பக்ஷத்தில் சங்கை சமாதாந ரூப விவாதம் இன்னும் அநேக முள.

### 145. சர்ப்பத்திற்கும் அதன் ஞாநத்திற்கும் அதிஷ்டாநம் சாக்ஷி யாதல்.

இதனல், சர்ப்பத்திற்கும் அதன் ஞாநத்திற்கும் அதிஷ்டாந மொன்றேயென்னும் பக்ஷஞ் சொல்லப்படுகின்றது:—ஆண்டுப் பாகியமான இரஜ்ஜு சேதநத்தினை,சர்ப்பம் அதன் ஞாநங்கட்கு அதிஷ்டாந மெனிற் பொருந்தாது. எதனுலெனின்,

எவ்வளவு ஞாந முண்டாகின்றனவோ, அவை பிரமாதா, அல்லது சாக்ஷியின் ஆசிரிதமாம். பாஹ்யமான இரஜ்ஜு சேதநத்தின் ஆசிரிதமாதல் ஞாநத்திற்குப் பொருந்தாது.

அங்ஙனமே, சர்ப்பத்திற்கும், அதன் ஞாநத்திற்கும் அதிஷ்டாநமாக அந்தக்கரண உபஹித சாக்ஷி சேதநத்தை ஒப்பினேமாயின், சரீரத்தினுள்ளே அந்தக்கரண தேசத்தில் சர்ப்பத்தின் பிரதீதியாகவேண்டும்; இரஜ்ஜு தேசத்தில் சர்ப்பத்தின் பிரதீதியாக வேண்டுவ தில்லை. உள்ளே உதியாநின்ற சர்ப்பத்தின் பிரதீதி வெளியில் மாயையின் பலத்தா லொப்பினேமாயின், ஆத்மக் கியாதி மத சித்தி வரும்.

இந்த ரீதியினல்,இரஜ்ஜு உபஹிதசேதநம் ஞாநத்திற் கதிஷ்டாநமாதல் பொருந்தாது. அந்தக்கரண உபஹித சேதநம் சர்ப்

பத்திற் கதிஷ்டாநமாகுதலும் பொருந்தாது. இதனுல், சர்ப்ப அதன் ஞாநங்கட்கு அதிஷ்டாநம் ஒன்றென்றல் பொருந்தாது. அங்ஙனமாயினும், இரஜ்ஜுவின் சமீபத்தையடைந்த அந்தக்கரணத்தின் இதமாகார விருத்தியின்கண் ஸ்திதமான சேதந ஆசிரித அவித்தை சர்ப்பாகார ஞாநாகார பரிணுமத்தை யடையாநிற்கின்றது.

விருத்தி உபஹித சேதநத்தின்கண்ணே ஸ்திதமான அவித்தையின் தமோகுண அம்சம், சர்ப்பத்திற் குபாதாந காரணமாம். அதனிடத்துள்ள சத்துவகுண அம்சம், சர்ப்ப ஞாநத்திற் குபாதாந காரணமாம்.

சர்ப்ப அதன் ஞாநங்கட்கு விருத்தி உபஹித சேதநம் அதிஷ்டாநமாம்.

விருத்தி, இரஜ்ஜு தேசத்தில் புறம்போந்துள தாதலால், விருத்தி உபஹித சேதநமும் பாஹ்யத்தி லுளது. இதனுல், சர்ப்பத்திற் காசிரியமாதல் பொருந்தும்.

அந்தக்கரணத்தினது சொரூப மெவ்வள வுளதோ அவ்வளவே சாக்ஷியினது சொரூபம் உளது. சரீரத்திற்குள் ளிருக்குமந்தக்கரணம், விர்த்திரூப பரிணுமத்தை யடையாநிற்கும். இதனுல், விர்த்தி உபஹித சேதநம் சாக்ஷியாம். இதனுல் ஞாநத்திற் காசிரியமாதல் பொருந்தும். எப்போது இரஜ்ஜுவின் சாக்ஷாத்காரமாமோ, அப்போது இரஜ்ஜு சேதநம், விர்த்தி சேதநம் இரண்டு மேகமாம். இதனுல், இரஜ்ஜுவின் ஞாநத்தால் சர்ப்ப அதன் ஞாநங்களின் நிவிர்த்தியும் பொருந்தும்.

146. யாண்டு ஓர் இரஜ்ஜுவில் பத்துப் புருஷருக்கு ஒருவனுக்குச் சர்ப்பம், ஒருவனுக்குத் தண்டம், ஒருவனுக்கு மாலே, ஒருவனுக்குப் பிருதிவியின் பிளவு, ஒருவனுக்குச் சலதாரை எனப் பிந்ந பிந்நமாய்ப் பிரதீதியாகின்றதோ, அல்லது, சகலருக்கும் சர்ப்பமே பிரதீதியாகின்றதோ, ஆண்டு எந்தப் புருஷனுக்கு இரஜ்ஜுவின் சாக்ஷாத்காரமாமோ, அவனது விர்த்தி சேதநத்தில் கற்பிதமாகிய அத்தியாசத்தின் நிவிர்த்தியாம். எவனுக்கு இரஜ்ஜு ஞாந முண்டாகவில்லேயோ அவனுக்கு அத்தியாசத்தின் நிவிர்த்தி யுண்டாகாது. இதனுல், விருத்தி சேதநமே கற்பிதத்திற் கதிஷ்டாநமாம். இரஜ்ஜு முதலிய விஷய உபஹித சேதந

மன்று. இரஜ்ஜு உபஹித சேதநத்தைச் சர்ப்ப தண்டாதிகட் கதிஷ்டாநமாக வொப்பின், பத்துப் புருஷர்க்குப் பிரதீதியாகா நிற்கும் பத்துப் பதார்த்தங்களும் ஒவ்வொருவனுக்கும் பிரதீதி யாகவேண்டும். ஆனால், நம்முடைய ரீதியினாலோ எவனுடைய விருத்தி சேதநத்தில் எந்தப் பதார்தங் கற்பிதமோ அஃதவனுக் கே பிரதீதியாம்; அந்யனுக்குத் தோற்றுகின்ற தில்லை.

இந்த ரீதியினால்,பாஹ்ய சர்ப்பாதிகட்கும்,அவற்றின் ஞாநங் கட்கும், விருத்தி உபஹித சாக்ஷி அதிஷ்டாநமாம். ஸ்வப்ந பதார் த்தங்கட்கும், அவற்றின் ஞாநங்கட்கும் அந்தக்கரண உபஹித சாக்ஷியே அதிஷ்டாநமாம்.

இந்தப் பிரகாரத்தால்,சத் தசத்தினும் விலக்ஷணமான அநிர் வசநீய அவித்தையின் பரிணாமமாகிய அநிர்வசநீய சர்ப்பாதிக ளின் கியாதி பிரதீதியும் சொல்லுதலும் யாது அது அநிர்வச நீயக் கியாதி யெனப்படும்.

147. பிரஸ்நம்:—அபார மித்தியா ஜகத்தின் ஆதாரமும் அதிஷ்டாநமும் எவை?

**சிஷ்யன் சொல்லுகின்றான்.**

பகவானே! இந்த அபாரமாகிய மித்தையான ஜகத்து எதன் கண் பிரதீதியாகின்றது? இதற்காதார மியாது? அதனை அடியே னுக் கருளவேண்டும் (என்று சீடன் கேட்க அதற்கு)

**முற்கூறிய பிரஸ்னத்தின் உத்தரம்.**

148. மித்தையாகிய ஜகத்திற்கு ஆதாரமும் அதிஷ்டாநமும் நீ எனல்.

**குரு சொல்லுகின்றார்.**

சிஷ்யனே! உன்னுடைய நிஜரூபத்தை (பிரஹ்ம ஸ்வரூப மாக) அறியாமையினால் மித்தையான ஜகத்துப் பிரதீதியாகின் றது. இதனால் ஜகத்திற் காதாரமும்,அதிஷ்டாநமும் நீயே. எங்ங னம் இரஜ்ஜுவினை யறியாமையினால் மித்தையாகிய புஜங்க (சர்ப்ப)ம் பிரதீதியாகின்றது ஆண்டு மித்தியா புஜங்கத்திற்கு ஆதாரமும், அதிஷ்டாநமும் இரஜ்ஜுவாகின்றது.

மித்தியா சர்ப்பத்திற் கதிஷ்டாநம் முக்கியமாகிய இரண்டாம் பக்ஷத்தில் விர்த்தி உபஹித சேதநமும்,முதற்பக்ஷத்தில் இரஜ்ஜு உபஹித சேதநமுமாம். ஒரு பக்ஷத்திலும் இரஜ்ஜு அதிஷ்டாந மன்று.

அங்ஙனமாயினும், முதற்பக்ஷத்தில் சேதநத்தின்கண் அதிஷ்டாநத்தன்மைக்கு உபாதி இரஜ்ஜுவாகையால், ஸ்தூல திருஷ்டியினுல் இரஜ்ஜு அதிஷ்டாந மென்று கூறப்பட்டது. எங்ஙனம் மித்தியா புஜங்கத்திற் கதிஷ்டாநமும் ஆதாரமும் இரஜ்ஜுவோ, அங்ஙனமே மித்தியா ஜகத்திற் கதிஷ்டாநமும் ஆதாரமும் நீயே.

### 149. ஆத்மாவின் சாமாந்யரூபம் ஆதாரமும், விசேஷரூபம் அதிஷ்டாநமுமா மெனல்.

ஈண்டு இஃது இரகசியமாம்:—எங்ஙனம் பழுதைக் கிரண்டு ரூபம், ஒன்று சாமாந்ய ரூபம், ஒன்று விசேஷ ரூபம். "இது" வென்பது சாமாந்ய ரூபம்; "இரஜ்ஜு" வென்பது விசேஷரூபம். "இது சர்ப்ப" மென்னும் இந்த ரீதியின், மித்தையாகிய சர்ப்பத்தோ டபிந்நமாகிப் பிராந்திகாலத்திலும் பிரதீதியாகின்ற "இதம்" ரூபம் சாமாந்ய ரூபமாம்; எதன் ஸ்வரூபம் பிராந்தி காலத்தில் பிரதீதியாக வில்லை, பின்னையோ, எதன் பிரதீதியாவதால் பிராந்தி தூரமாம், அஃது இரஜ்ஜுவின் விசேஷ ரூபமாம்.

அங்ஙனமே, ஆத்மாவிற்கு மிரண்டு ஸ்வரூபமாம். ஒன்று சாமாந்யரூபம், மற்றொன்று விசேஷ ரூபம். சத்துரூபம் சாமாந்யம்; அசங்கத்துவம், கூடஸ்தத்துவம், நித்திய முத்தத்துவம் முதலியன விசேஷ ரூபமாம். எதனு லெனின்,

"ஸ்தூல, ஸூக்ஷ்ம சங்காதங்க ளுண்"டென் பதில் ஸ்தூல ஸூக்ஷ்ம சங்காதங்களின் பிராந்தி சமயங்களிலும் மித்தியா சங்கத்தோ டபிந்நமாகிச் சத்துரூபம் பிரதீதியாகின்றது. இதனுல், ஆத்மாவினுடைய சத்துரூபம் சாமாந்ய ரூபமாம். ஸ்தூல, ஸூக்ஷ்ம சங்காதங்களின் பிராந்தி சமயத்தில் ஆத்மாவினது அசங்க, கூடஸ்த, நித்திய முத்த ஸ்வரூபம் பிரதீதியாக வில்லை. பின்னையோ, ஆத்மாவின் அசங்காதி ஸ்வரூபம் பிரதீதியாவதால் சங்காதப்பிராந்தி தூரமாக நிவிர்த்தியாகின்றது. இதனுல், அசங்கத்துவம், கூடஸ்தத்துவம், நித்திய முத்தத்துவம், வியாபகத்துவ முதலியன விசேஷ ரூபங்களாம். சர்வப் பிராந்தியிலும் சாமாந்யரூபம் ஆதார மென்று சொல்லப்படும்; விசேஷ ரூபம் அதிஷ்டாந மென்று சொல்லப்படும்.

எங்ஙனம், சர்ப்பத்திற் காசிரயமாகிய பழுதையின் சாமாந்ய "இதம்" ஸ்வரூபம் சர்ப்பத்திற் காதாரமும், விசேஷ

ரஜ்ஜு ஸ்வரூபம் அதிஷ்டாநமுமாமோ, அங்ஙனமே மித்தியாப் பிரபஞ்சத்திற் காசிரயமாகிய ஆத்மாவின் சாமாந்ய சத்துரூபம் பிரபஞ்சத்திற் காதாரமாம். அசங்கத்துவாதி விசேஷரூபம் அதிஷ்டாநமாம். இந்த ரீதியாக ஆதார அதிஷ்டாநங்கட்குச் சர்வஞ்ஞாத்ம முநியானவர் கிஞ்சித் பேதஞ் சொல்லி யிருக்கின்றார்.

150. பிரஶ்நம்:—ஜகத் திருஷ்டாவினை ஆத்மாவிற்குப் பிந்நமாகக் கூறவேண்டு மெனல்.

**சிஷ்யன் கூறுகின்றன்.**

ஹே பகவன்! மித்தியா ஜகத்திற்குத் திருஷ்டா யார்? எவன் அதிஷ்டாநமாயும் ஆதாரமாயு மிருக்கின்றானோ அவன் திருஷ்டா வாகான்.

தாத்பர்ய மிதுவாம்:—ஜகத்திற்கு ஆதாரமும், அதிஷ்டாநமும் ஆத்மாவாதலால், ஜகத்திற்குத் திருஷ்டா ஆத்மாவினும் வேறாகச் சொல்லவேண்டும். எங்ஙனம் சர்ப்பத்திற் காதாரமும், அதிஷ்டாநமுமாகிய இரஜ்ஜுவினும் வேறாகப் புருஷன் அதற்குத் திருஷ்டாவோ (அங்ஙனமேயாம்).

முற்கூறிய பிரஶ்நத்தின் உத்தரம்.

151. சகல கற்பிதங்கட்கும் அதிஷ்டாநமே திருஷ்டாவாம்.

**குருவானவர் சொல்லுகின்றார்.**

ஜகத்தில் மித்தியாவஸ்து அதிஷ்டாநத்தில் கற்பிதமாம். அதிஷ்டாநம் இருவகைத்தாம்:—ஒன்று சேதநம், மற்றொன்று ஜடம். யாண்டு ஜடவஸ்து அதிஷ்டாநமாமோ, ஆண்டு திருஷ்டா அதனினும் பிந்நமாம். யாண்டு சேதநம் ஆதார (அதிஷ்டாந) மாமோ, ஆண்டு திருஷ்டா வேறன்றாம். தாத்பர்யம் இஃதாம்:—

யாண்டு ஜடம் அதிஷ்டாநமாமோ ஆண்டு அதிஷ்டாநத்தினும் பிந்நமாகத் திருஷ்டா இருக்கின்றது; யாண்டு சேதநம் அதிஷ்டாநமாமோ ஆண்டு அதிஷ்டாநமே திருஷ்டாவாகும். வேறில்லை.

எங்ஙனம் ஸ்வப்நத்திற் கதிஷ்டாநமாகிய சாக்ஷி சேதநமே ஸ்வப்நத்திற்குத் திருஷ்டாவோ, அங்ஙனமே ஜகத்திற்கு ஆத்மாவே அதிஷ்டாநம். அதுவே திருஷ்டாவாம்; இந்தச் சங்கை

சமாதானம் ஸ்தூல திருஷ்டியால் பழுதையினைச் சர்ப்பத்திற் கதிஷ்டாநமாக அங்கீகரித்துச் சொல்லப்பட்டன. சித்தாந்த மதத்தில் சர்ப்பத்திற் கதிஷ்டாநம் சாக்ஷி சேதநமாம்: அதுவே திருஷ்டாவாம். இதனால், சகல கற்பிதங்கட்கும் அதிஷ்டாநமே திருஷ்டாவாம். சங்கை சமாதானங்கள் பொருந்தா.

### 152. மித்தையாகிய சம்சாரத்தின் நிவர்த்தியினை விரும்புதல் பொருந்தாது.

சிஷ்யனே! இந்த ரீதியினால், உன்னிடத்தில் ஸம்ஸாரரூப துக்கம் மித்தையாகவே பிராந்தியினாற் பிரதீதியாகின்றது. அந்த மித்தையினது நிவிர்த்தியின் விருப்பம் பொருந்தாது.

திருஷ்டாந்தம்:—எங்ஙனம், வித்தையாடுபவன் ஒரு புருஷனுடைய மித்தியா சத்துருவினை மந்திரத்தின் பலத்தாற் காட்டுவானேல் அவனை யடிப்பதில் அந்தப் புருஷன் பிரயத்நம் செய்வ தில்லையோ அங்ஙனமே, மித்தியா ஸம்ஸார நிவிர்த்தியின் விருப்பம் பொருந்ாது.

### 153. பிரஶ்நம்:—ஜந்மாதி சம்சாரம் துக்க ஹேதுவாகலின் அதன் நிவிர்த்திக்கு உபாயம் அருளுவீராக எனல்.

**சிஷ்யன் கூறுகின்றான்.**

பகவானே! "ஜகத்து உன்னிடத்தில் மித்தியாரூபமாக உளது. சத்திய ரூபமாக வில்லை" யென்று தேவரீர் கூறினீர். அது சத்தியமாமாயினும், பகவானே! எந்த உபாயத்தினால் அந்த மித்தியாரூபமான ஜந்ம, மரண முதலிய ஸம்ஸாரம் என்னிடத்திற் றொற்றுமற் போமோ அந்த உபாயத்தினைத் தாம் அருளுவீராக.

"மித்தையின் நிவிர்த்தி நிமித்தம் சாதநம் வேண்டுவதில்லை" யென்று தேவரீர் கூறினீர் அந்த வார்த்தையுஞ் சத்தியமா மாயினும், எவனுக்கு மித்தியா பதார்த்தமும் துக்க ஹேதுவா யிருக்கின்றதோ, அவனுக்கு அது மித்தை யாயினும் சாதநத்தால் நிவிர்த்தி செய்வது யோக்கியமாம். எங்ஙனம் ஒரு புருஷனுக்கு நாடோறும் பயங்கரமான ஸ்வப்நம் வருமாயின், அது மித்தையாயினும் அதனை நிவிர்த்தி செய்வதற்கு ஜபம், பாதப் பிரக்ஷாளனாதி நாநா சாதநாநுஷ்டாநம் செய்கின்றானே, அங்ஙனமே, இந்தச் சம்சாரம் மித்தையாயினும், ஜந்ம

முதலிய துக்க ஹேதுவாக எனக்குப் பிரதீதியாகின்றது. ஆதலால், சம்சார நிவிர்த்தியினை இச்சியாநின்றேன். தேவரீர் கிருபையினால் அதற் குபாயத்தினைக் காட்டி அருளுவீராக.

புகன்ற பிரஸ்நத்தின் உத்தரம்.

154. ஆத்மாவின் அஞ்ஞாநத்தினால் ஜகத்தின் பிரதீதி உண்டாகின்றது. அதன் நிவிர்த்தியின் உபாயம் ஞாநத்தின் சோரூபமா மெனல்.

**குரு கூறுகின்றார்.**

சிஷ்யனே! நீ ஜகத்ரூப துக்க நிவிர்த்தியின் சாதநத்தை வினவினாய். அதனை நாம் உனக்கு முன்னரே கூறிவிட்டோம். அதன்கண் நீ திடநிச்சயஞ் செய். அதனால் ஜகத்ரூப துக்கம் இராது.

ஹே சிஷ்யனே! உன்னுடைய ஆத்ம ஸ்வரூபத்தை யறியாமையினால் ஜகத்துரூப துக்கம் பிரதீதியாகின்றது. அஃதாத்ம ஞாநத்தால் நிவிர்த்தியாம். எந்த வஸ்து எதன் அறியாமையினால் பிரதீதியாமோ அந்த வஸ்து அதனை யறிவதால் நிவிர்த்தியாய்விடும் என்பது நியமமாம். இரஜ்ஜுவை யறியாமையினாற் பிரதீதியாகின்ற சர்ப்பமானது இரஜ்ஜுவின் போதத்தால் எங்ஙனம் நிவிர்த்தியாகின்றதோ, அங்ஙனமே, ஆத்ம ஞாநத்தால் ஜகத்தின் நிவிர்த்தியாம். அவ்வாத்ம ஞாநத்தினை நான் முற்கூறினேன்.

ஜகத்து என்னிடத்தில் மூன்று காலத்தினு மில்லை. எதனாலெனின், அது மித்தையா யிருக்கின்றது. யாது மித்தியா வஸ்துவாமோ அஃததிஷ்டாநத்தைக் கெடுக்க மாட்டாது. கானல் ஜலமானது பிருதிவியை எங்ஙனம் நனைக்க மாட்டாதோ, அங்ஙனமே, ஜகத்துப் பிரதீதியாயினும் மித்தையா யிருக்கின்றது; எனக்கு ஹானி செய்வதில் சிறிதும் சமர்த்துளதல்ல; நான் "சச்சிதாநந்தப் பிரஹ்ம ஸ்வரூபமா யிருக்கின்றேன்" என்னும் நிச்சயத்திற்கு ஞாந மென்று பெயர். அதுவே மோக்ஷத்திற்குச் சாதநமாம்; வேறொன்று மன்று. அந்த ஞாநத்தினை நாம் முன்னமே உபதேசித்து விட்டோம்.

155. அஞ்ஞாநத்தின் நாசம் கேவல ஞாநத்தாலாம்; கர்மோபாசனைகளா லாகா தெனல்.

ஹே சிஷ்யனே! ஜகத்திற் குபாதாந காரணமான அஞ்ஞாந நாசத்தால் ஜகத்துத் தானே நாசமாய் விடும். எதனாலெனின்,

உபாதாநம் நாசமான பின் காரியமிராது. அவ்வஞ்ஞாந நாசம் கேவலம் ஞாநத்தினுலாம்; கர்ம, உபாஸனைகளால் நாசமாகாது. ஏதனுலெனின், அஞ்ஞாநத்திற்கு விரோதி ஞாநமாம்; கர்ம, உபாஸனைகள் விரோதிகளன்று.

திருஷ்டாந்தம்:—கிருகத்தின்கண் ணுள்ள அந்தகாரம் ஒரு கிரியையாலும் எங்ஙனம் நிவிர்த்தியாகாமல் கேவலம் பிரகாசத்தால் நிவிர்த்தியாகின்றதோ, அங்ஙனமே அஞ்ஞாநரூப அந்தகாரம், ஞாநரூபப் பிரகாசத்தால் நிவிர்த்தியாம்; வேறு எந்தச் சாதநத்தாலும் நிவிர்த்தியாகாது. சிஷ்யனே! இந்த ஜகத்து நாசமாகும்படியான உபதேசத்தை நான் அருளினேன். இதில் ஸம்ஶயமுண்டானுல் நீ விசாரம் செய்து அதனைக் கேட்பாயாக.

பிரஸ்நம்.

## 156. கூறிய அர்த்தத்தினை அநுவாத பூர்வகம் கூறப்படும் சங்கையினைச் சூசிப்பித்தல்.

**சிஷ்யன் புகல்கின்றன்.**

பகவானே! தாங்கள் கூறியபடி "இந்த ஜகத்திற்குக் காரணம் அஞ்ஞாநமாம். அவ்வஞ்ஞாந நாசத்தால் ஜகத்தின் நிவிர்த்தி ஞாநத்தினுலா மென்று" தேவரீர் கூறினீர். அந்த வார்த்தையினை நான் சத்தியமாக அறிந்தேன். "ஜகத்து மித்தை; ஜீவன் ஆநந்த ஸ்வரூபன்; அவன் ப்ரஹ்மத்தினும் பிந்ந னல்லன்; பின்னையோ, ப்ரஹ்மரூபமா யுளன் என்னும் நிச்சயத்திற்கு ஞாந மென்று பெயர். அதில் ஜகத்து மித்தை, ஜீவன் ஆநந்த ரூபன்" என்பதனை நான் சத்தியமாக அறிந்தேன்.

ஆயினும், "ஜீவப் ப்ரஹ்மங்க ளிரண்டும் ஒன்று" என்பதனை அறிய வில்லை. ஏதனு லெனின் ஜீவப் ப்ரஹ்மங்களின் பேதத்தினை உணர்த்தும் சங்கை என்னுடைய இருதயத்தி லுண்டா யிருக்கின்றது.

## 157. பிரஹ்மமும் எனது ஸ்வரூபமும் பரஸ்பரம் விருத்தமாம்; அதனேடு எனக்கு ஐக்கியம் பொருந்தா தெனல்.

**சங்கை.**

பகவானே! நான் புண்ணிய பாபங்களுக்குக் கர்த்தாவாகின்றேன்; அவற்றின் பலமாகிய ஜந்ம, மரண, சுக, துக்கங்களைத் தரிக்கின்றேன். நாநாப் பிரகாரமாகிய ஜகத்து என்னிடத்தில்

பிரதீதியாகின்றது. ஜகத்திற்குக் காரணமாகிய அஞ்ஞானத்தினை நிவிர்த்திக்கின்றதற்கு நான் ஞானத்தினை இச்சிக்கின்றேன்.

பிரஹ்மத்தி னிடத்தில் புண்ணிய மில்லை, பாப மில்லை, ஜன்ம மில்லை, மரண மில்லை, சுக மில்லை, துக்க மில்லை, வேறெவ்விதக் கிலேசங்களு மில்லை, ஞானத்தின் இச்சையு மில்லை.

ஆதலால், பிரஹ்மத்தின் ஸ்வரூபமும், எனது ஸ்வரூபமும் பரஸ்பரம் விருத்தமாம். ஆதலால், இரண்டிற்கும் ஏகத்துவம் பொருந்தாது.

என்னிடத்திலும் ஜந்ம முதலிய சம்சாரம் பாரமார்த்திகமாக வில்லை. என்றாலும், மித்தையாகிய ஜன்மமுதலிய சம்சாரம் எனக்குப் பிராந்தியினாற் பிரதீதி யாகின்றது; பிரஹ்மத்தின்கண் இல்லை. ஜீவனுக்கும், பிரஹ்மத்திற்கும் இவ்வளவு பேதமிருத்தலால், ஏகத்துவம் பொருந்தாது.

### 158. பக்ஷிரூபத் தன்மையால் விலக்ஷணமாயுள்ள ஜீவப் பிரஹ்மங்களின் ஐக்கியத்தினால் கர்ம உபாஸனைகளைப் பிரதிபாதிக்கும் வேதம் நிஷ்பலமாகு மெனல்.

**வேறு சம்சயம்.**

குருவே! எனக்கு மற்று மொரு ஸம்ஶய முளது. அதனைத் தாம் கேட்பீராக. அஃதெத்தன்மையாய ஸம்ஶய மெனின், அதனால், ஜீவப் பிரஹ்மங்களின் ஏகத்துவ நிச்சயத்திற்குக் கேடுண்டாம்; அதனைத் தங்கட்குச் சொல்லுகின்றேன். தேவரீர் கேட்டு அச்சம்சயத்தினை நிவிர்த்திக்க வேண்டும். நான் வேதத்தில் இவ்வாறு பார்த்திருக்கின்றேன்:—புத்திரூப ஒரு விருக்ஷத்தில் இரண்டு பக்ஷிகள் உள. அவ்விரண்டும் சமானமாம். அவற்றுள்,

ஒன்று கர்ம பலத்தினைப் புஜிக்கின்றது. ஒன்று சுத்தமாய்ப் போதரகிதமாய் அசங்கமாய் இருந்து, அந்தப் போக்தாவினைப் பிரகாசிக்கின்றது. இவற்றுள் ஒன்று போக்தாவாய ஜீவனென்றும், மற்றொன்று பரமாத்மா வென்றும் பிரதீதியாகின்றன. ஆதலால் அவர்கட்கு ஏகத்துவம் பொருந்தாது.

வேதத்தில் கர்மமும், உபாஸனையும் வெகு பிரகாரமாகச் சொல்லப்பட் டிருக்கின்றன. அவை ஜீவப்ரஹ்மங்களின் ஏகத்துவத்தில் நிஷ்பலமாய் விடும். எதனாலெனின், தாங்கள் ஜீவப்ரஹ்மங்களின் ஏகத்துவஞ் சொன்னீர்கள்; அது ப்ரஹ்மத்தில் ஜீவ

ஸ்வரூபத்திற்கு அந்தர்ப்பாவம் சொல்லுகின்றீர்களா? அல்லது, ஜீவனிடத்தில் ப்ரஹ்ம ஸ்வரூபத்திற்கு அந்தர்ப்பாவம் சொல்லுகின்றீர்களா?

ஒருகால் ப்ரஹ்மத்தில் ஜீவ ஸ்வரூபத்திற்கு அந்தர்ப்பாவஞ் சொல்லும் பக்ஷத்தில் ஜீவன் ப்ரஹ்மரூப மாகின்றமையின் அதிகாரி அபாவமாவன்; இதனால் கர்ம, உபாஸனைகள் நிஷ்பலமாம். ஜீவனிடத்தில் ப்ரஹ்ம ஸ்வரூபத்திற்கு அந்தர்ப்பாவஞ்சொல்லும் பக்ஷத்தில் ப்ரஹ்மம் ஜீவ ரூபமாகின்றமையின், எதன் உபாஸனை செய்யப்படுகின்றதோ, அந்த உபாசியத்திற்கு அபாவமாம். ஆதலால், உபாஸனை நிஷ்பலமாய் விடும்.

அன்றியும், கர்ம பலனைக் கொடுப்பவராயுள்ள பரமாத்மாவின் அபாவ முண்டாகுதலின், கர்மம் நிஷ்பலமாம்.

மீமாம்ஸகர் சொல்லும் "கர்மமே ஈஶ்வரன். அதனாலேயே பலமுளதாம்" என்னும் வார்த்தை சிறப்புடையதன்று; எதனாலெனின், கர்மம் ஜடம், அதற்குப் பலத்தினைக் கொடுக்குஞ் சாமர்த்தியம் பொருந்தாது; ஆதலால், கர்மத்தின் பலனை ஈஶ்வரரே கொடுக்கின்றார்.

இவ்வாற்றால் பரமாத்மாவிற்கும், ஜீவனுக்கும் ஏகத்துவம் பொருந்தாது.

### 157-ல் உள்ள பிரஶ்நத்தின் உத்தரம்.

### 159. நான்கு ஆகாசமும் நான்கு சேதநமும்.

**குரு கூறுகின்றார்.**

சிஷ்யனே! உனக்கு உண்டாயிருக்கின்ற சங்கையை நிவர்த்திக்கும் விசாரத்தை நான் சொல்லுகின்றேன்; நீ கேள். ஒரு ஆகாசத்தில் கடாகாசம், ஜலாகாசம், மேகாகாசம், மகாகாசம் என்று எங்ஙனம் நான்கு பேதமுண்டோ, அங்ஙனமே ஒரு சேதநத்திற்கு நான்குபேத முள:—கூடஸ்தன், ஜீவன், ஈஶ்வரன், ப்ரஹ்மமாம்; இந்த நான்கு பேதமும் ஆகாசத்திற்குப் போலச் சேதநத்தினு முண்டு.

சிஷ்யனே! எப்போது இவற்றின் ஸ்வரூபங்களை நீ நன்றுயறிகின்றனையோ, அப்போது உன்னுடைய சங்கைக்கு நீ, தானே சமாதான மறிந்து கொள்ளுவாய். ஆதலால் நான் இவற்றின் ஸ்வரூப வர்ணனை செய்கின்றேன். நீ கேட்பாயாக. இவற்றைக் கேட்

பதினால் ஸம்ஸயரகித ஞானம் உண்டாகி ஜன்ம முதலிய துக்கம் நாசமாய்விடும்.

## 160. கடாகாச வர்ணநம்.

சிஷ்யனே! ஜலத்தால் நிறைந்த கடத்திற்கு எவ்வளவு ஆகாசம் அவகாசங் கொடுத்திருக்கின்றதோ அவ்வளவு ஆகாசத்தினைக் கடாகாசமென்று பண்டிதர் கூறுகின்றனர்.

## 161. ஜலாகாச வர்ணநம்.

சிஷ்யனே! ஜலத்தால் நிறைந்த கடத்தில் நக்ஷத்திராதிசகிதமாய் ஆகாசப் பிரதிபிம்ப முண்டாகின்றது. அவ்வாகாசப் பிரதிபிம்பமும், கடாகாசமும் ஆகிய இரண்டையும் சேர்த்து ஜாலகாசமென்று சொல்லப்படும்.

### இதில் ஒருவன் சங்கிக்கின்றான்.

ஆகாசம் பிரதி பிம்பிக்கவில்லை; பின்னையோ கேவலம் நக்ஷத்திராதிகளே பிரதிபிம்பிக்கின்றன; எதனாலெனின், ஆகாசம் ரூபமில்லாதது. ரூபமுள்ள பதார்த்தம் பிரதிபிம்பிக்கும். ஆதலால் ஆகாசத்திற்குப் பிரதிபிம்பம் பொருந்தாது (என்று சிலர் சங்கை செய்யா நிற்பர்).

### அதற்குச் சமாதாநம்.

ஜலத்தின்கண் ஆகாசப் பிரதிபிம்பம்உண்டாகாவிடின் முழந்தாட் பரிமாண ஜலத்தின்கண் மனுஷ்ய பரிமாண கெம்பீரத்தன்மைப் பிரதீதி உண்டாக வேண்டுவ தில்லை. ஆதலால் ஆகாசத்தின் பிரதிபிம்பம் அங்கீகாரம் செய்தல் யோக்கியமாம்.

ரூப மில்லாத பதார்த்தத்திற்குப் பிரதிபிம்ப முண்டாகின்றதில்லை யென்று கூறின், அதுவும் நியம மில்லை. எதனாலெனின் ரூப மில்லாத சப்தத்தின் பிரதித் தொனி உண்டாகின்றது. அது சப்தத்தின் பிரதிபிம்பமாம். ஆதலால் ரூபமில்லாத ஆகாசத்திற்கும் பிரதிபிம்பம் பொருந்தும்.

## 162. மேகாகாச வர்ணநம்.

மேகத்திற்கு எந்த ஆகாசம் அவகாசங் கொடுக்கின்றதோ, மேக ஜலத்தில் எந்த ஆகாசப் பிரதிபிம்ப முண்டாகின்றதோ, அவ்விரண்டினையும் மேகாகாச மென்பர்.

### இதில் ஒருவன் சங்கிக்கின்றான்.

மேகமோ ஆகாயத்தி லுளது. அதில் ஜலமும், ஆகாசப் பிரதிபிம்பமும் கண்டாலன்றி எங்ஙனம் அறியலாம் ?

### அதற்குச் சமாதானம்.

மேகத்தினிடத்திற் ஜலமும், ஆகாசப் பிரதிபிம்பமும் பிரத்தியக்ஷமாக வில்லை யாயினும், அவை அநுமானத்தினு லறியப்படுகின்றன. மேகம் ஜலத்தை வர்ஷிக்கின்றது; ஆதலால், மேகத்தில் ஜலமுண்டு என்று அநுமான முண்டாகின்றது. மேகத்தினிடத்தில் ஜலமில்லையானுல் ஜலத்துளி மேகத்தினின்று முண்டாகாது.

மேகத்தினிடத்திலுள்ள ஜலம் ஆகாசப் பிரதிபிம்ப சகிதமாயுளது. ஏதனு லெனின், ஜல மிருந்தால் அஃது ஆகாசப் பிரதிபிம்ப மின்றி யிராது. ஆதலால் மேகத்தின்கண்ணுள்ள ஜலமும் ஆகாசப் பிரதிபிம்ப முடையதா யிருக்கின்றது.

இந்த ரீதியினுல் மேகத்திற் ஜலமும் ஆகாசப் பிரதிபிம்பம் என்பவற்றின் அநுமானம் உண்டாகின்றது.

### 163. மஹாகாச வர்ணநம்.

உள்ளும் புறம்பும் எல்லாவற்றிலும் ஏகாகாரமாய் வியாபகமாகிய ஆகாச ஸ்வரூபத்தினை அற்புத புத்தியையுடைய பண்டிதர் மஹாகாச மென்பர்.

### 164. நான்கு சேதநங்களின் வர்ணந உபோத்காதம்.

சிஷ்யனே! நான்கு பிரகாரமாகிய ஆகாசங்களின் இலக்கணங் கூறினேன். இப்போது நான்கு விதமாகிய சேதநங்களின் இலக்கணங்களைக் கேள். அதனைக் கேட்பதனுல் விசாரத்தின் பலமான ஞாநம் பிராப்தமாம்.

### 165. கூடஸ்த வர்ணநம்.

புத்தி, அல்லது வியஷ்டி அஞ்ஞாநத்தின் அதிஷ்டாந சேதநம் கூடஸ்தனென்று சொல்லப்படும்.

எந்தப் பக்ஷத்தில் புத்தியோடு கூடிய சேதநம் ஜீவனே, அந்தப் பக்ஷத்தில் புத்திக்கு அதிஷ்டாநம் கூடஸ்த னென்று சொல்லப்படும்.

எந்தப் பக்ஷத்தில் வியஷ்டி அஞ்ஞாநத்தோடு கூடிய சேதநம் ஜீவனென்று சொல்லப்படுமோ, அந்தப் பக்ஷத்தில் வியஷ்டி அஞ்ஞாநத்தின் அதிஷ்டாநம் கூடஸ்தனென்று சொல்லப்படும்.

ஈண்டு இது சித்தாந்தமாம்:—ஜீவத்தன்மைக்கு எது விசேஷணமோ, அதன் அதிஷ்டாநத்திற்கு கூடஸ்தனென்று பெயர். அந்தக் கூடஸ்தன் உற்பத்தி ரகிதனுவன். இதனபிப்பிராயம் இதுவாம்:—ப்ரஹ்மத்திற் கந்யமான சிதாபாசன் எங்ஙனம் உற்பந்நமாகின்றனன், அங்ஙனம் இவன் உற்பந்நமாகிலன். பின்னேயோ, பிரஹ்ம ரூபமாகவே உளன். எங்ஙனம் கடாகாசம் மஹாகாசத்தினும் அந்யமாக வில்லை, பின்னேயோ, மஹாகாச ரூபமாக வுளது. இந்த கூடஸ்தன் எவனே, அவனே ஆத்ம பதத்திற்கு லக்ஷியார்த்தமாம். இவனேயே பிரத்யக் கென்றும், நிசரூப மென்றும், ஜீவ சாக்ஷி என்றும் கூறுவர்.

## 166 ஜீவ வர்ணநம்.

நாநாவாகிய காமகர்மங்களோடு கூடிய புத்தியில் உண்டாகின்ற சேதநத்தின் பிரதிபிம்பத்தினே ஞாநிகள் ஜீவனென்பர். அந்தக் கேவலம் பிரதிபிம்ப மாத்திரத்தை ஜீவனென்பதில்லை. பின்னேயோ, கடாகாசத்தோடு கூட ஆகாசத்தின் பிரதிபிம்பத்தினே எங்ஙனம் ஜலாகாச மென்று சொல்லுகின்றூர்களோ, அங்ஙனமே பிம்பமாகிய கூடஸ்தனேடு கூடிய சிதாபாசனே ஜீவனென்று சொல்லுகின்றூர்கள்.

இதனுல் புத்தியின்கண்ணுள்ள சிதாபாசனும், புத்திக் கதிஷ்டாந சேதநமும் ஆகிய இவ்விரண்டிற்கும் பெயர் ஜீவ னென்று சித்தாந்தமாயிற்று.

167. பூர்வம் பிம்பமாகிய கூடஸ்தனேடு கூடிய ஆபாசன் ஜீவனென்று கூறப்பட்டது.

இதனுல் இது பிரதீதியாகின்றது:—புத்தியில் உள்ள பிரதிபிம்பம் கூடஸ்தனது பிரதிபிம்பமாம்; புறம்பேயுள்ளபிரஹ்மசேதநத்தினது அன்றும். எதனு லெனின், பிரதிவிம்பம் எதனுடையதோ, அது பிம்பமெனப்படும். அந்தக் கூடஸ்தன் பிம்பமென்று சொல்லப்பட்டான். இதனுல், அதன்பிரதிபிம்பமாம் என்று பிரதீதியாகின்றது. இப்போது அது பிரதிபாதநம் செய்யப்படுகின்றது. பெரிய சிவப்புப் புஷ்பத்தின் மேல் வெண்மையான ஸ்படிகத்தில் புஷ்பத்தினது சிவப்பின் காந்தி உண்டாகின்றது. அஃது எங்ஙனம் சிவப்புப் புஷ்பத்தின் பிரதிபிம்பமோ, அங்ஙனமே கூடஸ்தனே யாசிரயித்த புத்தியில் கூடஸ்தப் பிரகாசத்தின் காந்தி யுண்

டாகின்றது. எங்ஙனம் ஸ்படிகம் அந்தியந்தஞ் சுத்தமோ, அங்ஙனமே புத்தியும் அத்தியந்தஞ் சுத்தமாம். ஏதனுலெனின், புத்தி சத்துவகுணத்தின் காரியமாம். இதனுல் கூடஸ்தனுடைய ஒளிக்குப் பிரதிபிம்ப மென்று பெயராம்.

அல்லது, ப்ரஹ்ம சேதநத்தின் பிரதிபிம்பமாம். எங்ஙனம் கடஜலத்தில் மஹாகாசம் பிரதிபிம்பிக்கின்றது, உள்ளிருக்கும் ஆகாசம் பிரதிபிம்பிக்க வில்லை. ஏதனுலெனின், எவ்வளவு கம்பீரத்தன்மை ஜலத்திற் பிரதீதியாகின்றதோ, அவ்வளவு கம்பீரத்தன்மை உள் ளாகாசத்தில் இல்லை. அந்தக் கம்பீரத்தன்மை ஆகாசத்தின் பிரதிபிம்பமாம் ; ஆதலால் வெளி ஆகாசத்தின் பிரதிபிம்பமாம்.

"வியாபகசேதநத்திற்குப் பிரதிபிம்பம்பொருந்தா"தெனின், அச்சங்கை ஆகாச திருஷ்டாந்தத்தால் நிவர்த்தி யாகாநிற்கும். ஏனெனின், ஆகாசம் வியாபகமாயிருந்தும் பிரதிபிம்பிக்கின்றதோ, அங்ஙனமே வியாபக சேதநமும் பிரதிபிம்பிக்கக் கூடும்.

"ரூப முள்ள பதார்த்தத்தில்" ரூபமுள்ள பதார்த்தம் பிரதிபிம்பிக்கலா மெனின் அஃதும் நியமமல்ல. ஏதனுலெனின், "ரூபமில்லாத சப்தத்திற்கு ரூபமில்லாத ஆகாயத்தில் பிரதிபிம்பமுண்டாகின்ற" தென்று பூர்வஞ் சொல்லப்பட்டது; ஆதலால் சேதநத்திற்குப் பிரதிபிம்பம் பொருந்தும்.

இந்த ரீதியினுல் புத்தியின்கண்ணுள்ள ஆபாசனும், புத்திக் கதிஷ்டாந சேதநமுமாகிய இரண்டற்கும் ஜீவனென்று பெயர். அந்த ஜீவன் துவம்பதத்திற்கு வாச்சிய மென்று சொல்லப்படுகின்றுன். அதில் சிதாபாசனைத் தியாகஞ் செய்து கேவலம் கூடஸ்தன் துவம்பதத்திற்கு லக்ஷியமென்று சொல்லப்படுகின்றுன். அஹம் சப்தத்திற்கு வாச்சியம் ஜீவனும்; கேவலம் கூடஸ்தன் லக்ஷியமாம்.

168. சிதாபாசன், கூடஸ்தன் என்னும் இருவர்க்கும் பெயர் ஜவனுமாயினும், ஜீவத்தன்மையின் சகல தருமங்களும் ஆபாசனிடத்துள்ளன. புண்ணிய, பாபம் அவற்றின் பலமான சுக, துக்கம், லோகாந்தர கமநம், இந்த லோக ஆகமநம் முதலிய முழுதும் ஆபாச சகித புத்தி செய்யாநின்றது; கூடஸ்தன் செய்கின்றதில்லை; கூடஸ்தனிடத்திற் கேவலம் பிராந்தியினுற் பிரதீதியாகின்றது.

அந்தப் பிராந்தியினற் பிரதீதியும் புத்திசகித ஆபாசனுக் குண்டாகின்றது; கூடஸ்தனுக் கில்லை. எதனுலெனின், கூடம் என்பது கொல்லன் அடைகல்லு. அதுபோல நிர்விகாரரூபமாக இருப்பது, கூடஸ்த னென்று சொல்லப்படும்.

அல்லது, கூடமென்பது மித்தையாகிய புத்தியும் சிதாபாசனு மாம்; அவற்றின்கண் அசங்கரூபமாக இருப்பது கூடஸ்த னென்று சொல்லப்படும். ஆதலால், கூடஸ்தனிடத்துப் பிராந்தி முதலியன பொருந்தா; பின்னேயோ, சிதாபாசனிடத்திற் பொருந் தும்.

169. அத்தியந்தம் விசாரத்தினற் பார்க்கிலோ புண்ணிய, பாபம், சுக, துக்கம், லோகாந்தர கமநம், ஆகமநம் கேவலம் புத் தியி னிடத்திலிருக்கின்றன; ஆபாசனிடத்திலு மில்லை. புத்தி யின் ஸம்யோகத்தால் ஆபாசனிடத்தில் இருக்கின்றன.

எங்ஙனம் ஜலத்தோடு கூடிய கடம் கோணலாயினும், நேரா யினும், போயினும், வரினும் அதன் சம்பந்தத்தினல் வியோமத் தின் ஆபாசம் சகல கிரியையுஞ் செய்யாநிற்கின்றது. ஸ்வதந்தர மாக ஒன்றுஞ் செய்ய வில்லையோ, அங்ஙனமே காம கர்மரூபமா கிய ஜலத்தால் நிறைந்த புத்திரூப கடம் புண்ணிய முதலிய சகல விகாரங்களையும் தரிக்கின்றது. அதன் சம்பந்தத்தாற் சிதா பாசன் தரிக்கின்ருன். கூடஸ்தன் சர்வ விகார ரகிதனுயுளன். எங்ஙனம் ஜலம் நிரம்பிய கடத்தின் விகாரரகிதமாய்க் கடாகாச மிருக்கின்றதோ, அதுபோலக் கூடஸ்தனையும் அறிக. இதனுல் ஜீவத்தன்மையின் தர்மம் சிதாபாசனிடத்தில் உளதாம்; அங்ஙன மாயினும் கூடஸ்தனிடத்தில் அஞ்ஞாநத்தாற் பிரதீதி யாகாநின் றது. இதனுல் புத்தியினிடத்தில் கூடஸ்த சகித சிதாபாசன் ஜீவன் என்று சொல்லப்படுகின்ருன்.

170. வர்ணிக்கப்பட்ட ஜீவனது ஸ்வரூபத்தில் பிராஞ்ஞனு க்கு ஹானி வருகின்றது. எதனுலெனின், சுழுத்தியின் அபிமா னியாகிய ஜீவனுக்கு பிராஞ்ஞன் என்று பெயர். அந்தச் சுழுத்தி யில் புத்தி அபாவமாவதால் புத்தியில் ஆபாசனும் பொருந்தாது. இதனுல் பிராஞ்ஞனது ஸ்வரூபப் பிரதிபாதகமாகிய சாஸ்திரத் திற்கு விரோதம் உண்டாம். இந்தக் காரணத்தால் ஜீவனது ஸ்வ ரூபம் வேறு பிரகாரமாகச் சொல்லப்படுகின்றது:—

அஞ்ஞானத்தின் அம்சத்திற்கு வியஷ்டி அஞ்ஞான மென்று பெயர்; சம்பூர்ண அஞ்ஞானத்திற்கு ஸமஷ்டி அஞ்ஞான மென்று பெயர். அவ்வஞ்ஞானத்தின் அம்சத்திலுள்ள சேதநத்தின் (பிரதி பிம்பமாகிய) ஆபாஸமும், அஞ்ஞானத்தின் அம்சத்திற்கு அதிஷ்டானமாகிய கூடஸ்தனுமாகிய இரண்டினையும் ஜீவன் என்னும் பதத்தாற் சொல்வர். இதனால் பிராஞ்ஞனுக் கபாவம் இல்லை; எதனாலெனின், சுழுத்தியில் அஞ்ஞான முளது. சுழுத்தியில் சேதநத்தின் பிரதிபிம்ப சகிதமாகிய அஞ்ஞான அம்சம் யாது உளது, அதுவே புத்தி ரூபத்தை யடைகின்றது. சேதநத்தின் பிரதிபிம்பம் கூடவே உண்டாகின்றது. அந்தச் சிதாபாசனோடு கூடிய புத்தியில் புண்ணிய பாப முதலிய சம்சாரம் பிரதீதியாகின்றது. இந்த அபிப்பிராயத்தால், புத்தியினையே சில சாஸ்திரங்களில் ஜீவத்தன்மைக்கு உபாதியாக வர்ணிக்கப்பட்டிருக்கின்றது. விசார திருஷ்டியினால் ஜீவத்தன்மைக்கு உபாதி அஞ்ஞானமாம்.

### 171. ஈஸ்வர வர்ணநம்.

மாயையின்கண்ணுள்ள சேதநத்தின் ஆபாஸமும், மாயையின் அதிஷ்டான சேதநமுமாகிய இவ்விரண்டையும் ஈஸ்வர னென்பர். அந்த ஈஸ்வரன் மேகாகாசத்திற்குச் சமமாம். அவ்வீஸ்வரன் அந்தர்யாமியாம்; எதனாலெனின், எல்லாவற்றுள்ளு மிருந்து பிரேரணை செய்வதால் அந்தர்யாமியாம்.

சதா முக்தர்; எதனாலெனின், அவருக்குத் தன்னுடைய ஸ்வரூபத்தில் ஆவரண மில்லை. ஆதலால், ஜந்ம, மரணாதி பந்தத்தின் பிரதீதி யில்லை. இவ்வேதுவால், ஈஸ்வரன் நித்திய முக்தராவர். சர்வஞ்ஞன், சர்வ பதார்த்தங்களையும் அறிகின்றவன். இதன்கண் இது ஹேதுவாம்:—மாயையில் சுத்த சத்துவகுணம் உளது. தமோகுண, ரஜோகுணங்களால் அமிழ்த்தப்பட்டிருக்குஞ் சத்துவ குணமாகாது, இரஜோகுண தமோகுணங்களைத் தான் அமிழ்த்தி யிருப்பது யாது, அது சுத்த சத்துவ குண மெனப்படும்.

சத்துவ குணத்தால் ஞானோற்பத்தி யாகாநிற்கும். இதனால் பிரகாச ஸ்வபாவ முடையது சத்துவ குணமாம். இப்படிப்பட்ட சத்துவ குணத்தினை யுடைய மாயையின்கண் இருக்கும் சேதநத்தின் (பிரதிபிம்பமாகிய) ஆபாஸத்திற்கு ஸ்வரூபத்தின், அல்லது

வேறு பதார்த்தங்களின் ஆவரண மில்லை. ஆதலால், முக்தனும் சர்வஞ்ஞனு மாவன்.

அதிஷ்டானமாகிய சேதநம் ஜீவேஸ்வரர் இருவரிடத்திலு முள்ள பந்தமோக்ஷங்களி லில்லாதது. ஆகாசம் போல ஏக ரசமா யிருக்கின்றது. ஆயினும், ஆபாஸ அம்சத்தில் பந்த மோக்ஷங்க ளுள. அதிஷ்டானத்தில் ஆபாஸனுக்குப் பிராந்தியினுற் பிரதீதி'யாகின்றது. இதனுல், கேவலம் ஆபாஸனிடத்தில் பந்த மோக்ஷங்க ளுள. அதனிடத்திலும் இவ்வளவு பேதமுண்டு:—

எந்த ஆபாஸனிடத்தில் ஆவரண முண்டோ, அவனிடத்தில் பந்தம் உண்டு. யாவனிடத்தில் ஸ்வரூபாவரண மில்லையோ அவன் முக்தனுவன். ஈஸ்வரனிடத்தில் ஆவரண மில்லை. அதனுல், ஈஸ்வரன் எப்போதும் முக்தனு யிருக்கின்முன்.

ஜீவனிடத்தில் ஆவரண முண்டு. அவன் பெத்தனுயிருக்கின்முன். பெத்தன் என்பது கட்டுப்பட்டவனுயிருக்கின்முன் என்பதாம். எதனு லெனின், எந்த அவித்தையின் அம்சத்தில் சேதநத்தின் ஆபாஸம் ஜீவ னென்று சொல்லப்பட்டதோ, அந்த அவித்தைக்கு ஆவரணஞ் செய்யுஞ் ஸ்வபாவம் உளது.

அவித்தை, அஞ்ஞானம், மாயை யென்று ஓரே வஸ்துவிற் குரைத்தனராயினும், சுத்த சத்துவ குணத்தின் பிரதானத்தன் மையால் மாயை யென்று சொல்லப்படும். மலிந சத்துவ குணத்தின் பிரதாநத்தன்மையால் அஞ்ஞாந மென்றும், அவித்தை யென்றும் சொல்லப்படும். இரஜோகுண, தமோகுணங்களால் அமிழ்த்தப்பட்டிருக்கின்ற சத்துவகுணம் மலிந சத்துவ குண மென்று சொல்லப்படும்.

இதனுல், தமோகுண, இரஜோ குணங்கள் அதிகரித்திருப்பதால், அவித்தையின்கண் ணுள்ள ஜீவனுடைய ஆபாஸ அம்சத்திணை, அவித்தையானது ஸ்வரூபமாக ஆவரணஞ் செய்கின்றது. ஆதலால், ஜீவனிடத்தில் பந்தம் உளதாம்; ஈஸ்வரனிடத்தில் இல்லை.

அதிஷ்டாந சேதநத்தோடு கூடிய மாயையி லுள்ள ஆபாஸ ரூப ஈஸ்வரன் தற்பதத்திற்கு வாச்சிய மெனப்படுவன். கேவலம் அதிஷ்டாந சேதநம் தற்பதத்திற்கு லக்ஷிய மெனப்படும். "ஈஸ்வரன் ஜகத்தினது உற்பத்தி, ஸ்திதி, ஸம்ஹாரங்களைச் செய்

கின்றனன்'' என்று சகல சாஸ்திரங்களிலும் சொல்லப்பட்டிருக்கின்றது. அதற் கபிப்பிராயம் இதுவாம்:—சேதந அம்சமோ ஆகாசம் போல அஸங்கமாம்; ஆபாஸ அம்சம் ஜகத்தி னுற்பத்தி முதலியவற்றைச் செய்கின்றது. அதனிடத்திலேயே சர்வஞ் ஞத்துவம் உளது. பக்த ஜநங்கள்மீது அநுக்கிரகஞ் செய்வதும் கேவலம் ஆபாஸ அம்சமேயாம். ஐச்வரியத்தையும் கேவலம் ஆபாஸ அம்சமே செய்கின்றதாம். சேதந அம்சம் ஏகரசமாம். அதனிடத்தில் சத்தாஸ்பூர்த்தியினைக் கொடுப்பது மாத்திர மன்றி மற்றோர் ஐச்வரியமும் பொருந்தாது.

## 172. பிரஹ்ம ஸ்வரூப வர்ணநம்.

பிரஹ்மாண்டத்தி னுள்ளிலும் வெளியிலும் மஹாகாசம் போலப் பரிபூரணமாயிருக்கும் சேதநம் பிரஹ்ம மெனப்படும். அந்தப் பிரஹ்மம் அணித்து மல்ல; தூரத்து மல்ல. எதனாலெனின், எந்த வஸ்து தன்னினும் பிந்நமாயும், தேசரூப உபாதியை யுடைத்தாயு மிருக்கின்றதோ, அது அணித் தென்றும், தூரத் தென்றும் சொல்லப்படும் ; பிரஹ்மம் பிந்ந மன்று. பின்னேயோ, எல்லாவற்றிற்கும் ஆத்மாவாம். தேச முதலிய ஸர்வோபாதிகளும் இன்றியதாம். இதனால், அணித் தென்றும், தூரத் தென்றும் சொல்லப்படுகின்ற தில்லை.

பிரஹ்ம சப்தத்திற்கு வாச்சியம் சோபாதிகமாம். எதனாலெனின், வியாபக வஸ்துவிற்கு பிரஹ்ம மென்று பெயர். அந்த வியாபகத் தன்மை இரண்டு பிரகாரமாம்:—ஒன்று ஆபேக்ஷிக வியாபகத் தன்மை, மற்றொன்று நிரபேக்ஷிக வியாபகத்தன்மை. எந்த வஸ்து ஒரு பதார்த்தத்தின் அபேக்ஷையினால் வியாபகமும், ஒன்றன் அபேக்ஷையினால் வியாபகமுமாக வில்லையோ அதனிடத்தில் ஆபேக்ஷிக வியாபகத் தன்மை யெனப்படும். எங்ஙனம் ? பிருதிவியாதிகளின் அபேக்ஷையினால் மாயை வியாபகமாம்; சேதநத்தின் அபேக்ஷையினா லில்லை. இதனால், மாயையினிடத்தில் ஆபேக்ஷிக வியாபகத்தன்மை இருக்கின்றது.

எந்த வஸ்து எல்லாவற்றின் ஆபேக்ஷையினால் வியாபகமாயிருக்கின்றதோ, அதனிடத்திலுள்ள வியாபகத்தன்மை நிரபேக்ஷிக வியாபகத் தன்மை யெனப்படும். அந்த நிரபேக்ஷிக வியாபகத்தன்மை சேதநத்தின்க ணுளது. எதனாலெனின், சேதநத்

திற்குச் சமாநமாக அல்லது,சேதநத்திநும் அதிகமாக வேறொன்றும் வியாபகமாக இல்லை. பின்னையோ, சேதநமே ஸர்வத்திநும் வியாபகமாம். இதனால், சேதநத்தின்கண் நிரபேக்ஷிக வியாபகத்தன்மை இருக்கின்றது.

இந்த இரண்டு பிரகாரமாகிய வியாபகத் தன்மையோடு கூடிய வஸ்து பிரஹ்ம சப்தத்தின் வாச்சியமாம். அவ்விரண்டு பிரகாரமான வியாபகத்தன்மை மாயாவிசிஷ்ட சேதநத்தின்கண்ணுளது. எதனாலெனின், விசிஷ்டனிடத்திலுள்ள மாயா அம்சத்தில் ஆபேக்ஷிக வியாபகத்தன்மை இருக்கின்றது; சேதந அம்சத்தில் நிரபேக்ஷிக வியாபகத் தன்மை இருக்கின்றது.

மாயாவிசிஷ்ட சேதநத்தில் நிரபேக்ஷிக வியாபகத் தன்மை பொருந்தாது. எதனாலெனின், மாயை சேதநத்தின் ஏக தேசத்தி லிருக்கின்றது. அந்த மாயா விசிஷ்ட சேதநத்திநும் சுத்த சேதநத்தின் வியாபகத்தன்மை அதிகமாக விருக்கின்றது. ஆதலால், சுத்த சேதநத்தில் நிரபேக்ஷிக வியாபகத்தன்மை இருக்கின்றதாமாயினும், மாயா விசிஷ்ட சேதநம் பாமார்த்த திருஷ்டியினால் சுத்த சேதநத்திநும் பிந்நமன்றும்; பின்னையோ, சுத்தரூபமேயாம். ஆதலால், மாயாவிசிஷ்டத்தின்கண்ணும் சேதநாம்சத்தில் நிரபேக்ஷிக வியாபகத் தன்மையே இருக்கின்றது.

இந்த ரீதியினால், மாயா விசிஷ்டமே பிரஹ்ம சப்தத்திற்கு வாச்சியமாதல் கூடும். சுத்த சேதநம் பிரஹ்ம சப்தத்திற்கு லக்ஷியமாம். இதனால், ஈஸ்வர சப்தம், பிரஹ்ம சப்தம் என்னும் இரண்டற்கும் சமாநமாகவே அர்த்தந் தோன்றுகின்றது. பிந்நமாகத் தோற்ற வில்லை.

அங்ஙனமாயினும், பிரஹ்ம சப்தத்திற்கு இது ஸ்வபாவமாம்:—அநேக விடத்தில் லக்ஷியார்த்தத்தினைப் போதிக்கின்றது. சில விடத்தில் வாச்சியார்த்தத்தைச் சொல்லுகின்றது. ஈஸ்வர சப்தத்திற்கு இது ஸ்வபாவமாம்:—அநேக விடங்களில் வாச்சியார்த்தத்தைப் போதிக்கின்றது. இவ்வளவு பேதம் உண்டு. இதனால், லக்ஷியார்த்தத்தைக் கொண்டு பிரஹ்ம சப்தத்திற்கு அர்த்தம் பிந்நமாக நிரூபிக்கப்பட்டது.

## 158-லுள்ள பிரஶ்நத்தின் உத்தரம்
## 173. கூடஸ்தர் பிரகாசித்துக்கொண் டிருக்கின்றார். ஆபாஸன் புஜிக்கின்றான் எனல்.

சிஷ்யனே! நான்கு பிரகாரமாகிய சேதநங்களையும் கூறினேன். அவற்றுள், ஜீவனுடைய ஸ்வரூபத்திலுள்ள மித்தையாகிய ஆபாஸ அம்சம் புண்ணிய பாபங்களைச் செய்கின்றது; அவற்றின் பலன்களைப் புஜிக்கின்றது. கூடஸ்த சேதநம் சிவ (கல்யாண) ரூபமாம். ஆதலால், "புத்தி ரூப விருக்ஷத்தில் இரண்டு பக்ஷிக ளிருக்கின்றன. ஒன்று பரமாத்மா; ஒன்று ஜீவனும்" என்று முன் நீ செய்த சங்கைக்கு ஈண்டு உத்தரம் கூறப்படுகின்றது:—பரமாத்மாவையும் ஜீவனையும் கிரஹிக்க லாகாது. பின்னையோ, கூடஸ்தர் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றார்; ஆபாஸன் புஜிக்கின்றான்.

## 174. ஆபாஸம் கர்மத்தைச் செய்கின்றது ; பலத்தினையும் தருகின்றது ; சேதநம் தருகின்ற தில்லை யெனல்.

ஜீவனது ஸ்வரூபத்திலுள்ள சேதநத்தி னாபாஸ அம்சம் கர்மங்களைச் செய்கின்றது. அக்கர்மங்களைச் செய்யு மாபாஸத்திற்கு ஈஶ்வர னுடைய ஆபாஸ அம்சம் பலனைக்கொடுக்கின்றது. இதனால், இது சித்தமாயிற்று:—ஜீவனுடைய ஸ்வரூபத்திலுள்ள ஆபாஸ அம்சம் புண்ணிய பாபங்களைச் செய்கின்றது ; அவற்றின் பலன்களைப் புஜிக்கின்றது. ஈஶ்வரனிடத்திலுள்ள ஆபாஸ அம்சம் கர்மத்தின் பலனைக் கொடுக்கின்றது. இருவரிடத்திலுள்ள சேதந அம்சத்தில் எவ்வித வார்த்தைக்கும் இடமில்லை. ஜீவனிடத்திலுள்ள சேதந அம்சத்தின்கண் கர்மம், பலம் என்பவற்றின் ஸம்பந்த மில்லை.

ஈஶ்வரனிடத்திலுள்ள சேதந அம்சத்தில் பலனைக் கொடுத்தவின் சம்பந்தம் இல்லை. அந்தச் சேதநத்தினிடத்தில்(அவற்றை) எவர் சொல்லுகின்றனரோ, அவர் மூர்க்கர். ஏதனாலெனின், சேதநம் இரண்டிடங்களிலும் அஸங்கமாய் ஏகரூபமாய் இருக்கின்றது. சேதநத்தின்கண் பேத மில்லை. ஜீவசேதநத்தை ஈஶ்வர சேதநத்தோடு, அல்லது, ஈஶ்வர சேதநத்தை ஜீவசேதநத்தோடும் வேறாக அறிகின்றவன் நிந்திக்க யோக்கியனாவன். இவ்வாறுசொன்னதால், "ஜீவ பரமாத்மாக்கட்கு ஏகத்துவம் அங்கீகாரம் செய்

யின், கர்மோபாஸனைகளைப் பிரதிபாதிக்கும் வேதம் நிஷ்பலமாகு" மென்னும் இரண்டாவது சங்கைக்கு உத்தரம் சொல்லப்பட்டது. ஜீவேஶ்வரரிடத்திலுள்ள சேதந பாகங்கட்கு அபேதமாம்; ஆபாஸ பாகத்திற்குப் பேத முளது. இதனல், இரண்டு பிரகாரமாகிய வசநங்களும் பொருந்துகின்றன.

## 175. ஜீவ ப்ரஹ்மங்களின் லக்ஷியார்த்தத்திற்கு அபேத முண்டெனல்.

சிஷ்யனே! நீ செய்த பிரஶ்நங்கட்கு நான் உத்தரஞ் சொன்னேன். "ஒரு விருக்ஷத்தில் இரண்டு பக்ஷிகளுள. ஒன்று புஜியாநிற்கின்றது; மற்றென்று இச்சை யில்லாம லிருக்கின்றது. இதனல், ஜீவப் பிரஹ்மங்களின் ஏகத்துவம் பொருந்தாது" என்று நீ கூறியிருந்தாய். அதற்கு "இந்த விடத்தில் ஜீவப் பிரஹ்மங்களைக் கொள்ளலாகாது. பின்னையோ, கூடஸ்தனையும் புத்தியின்கணுள்ள ஆபாஸனையுங் கிரஹிக்க வேண்டும். அவை கடாகாசத்தினையும் ஆகாசத்தின் சாயையினையும் போலத் தம்மில் பிந்நமாயிருக்கின்றன" என்று யாம் உத்தரஞ் சொன்னேம்.

"ஜீவனே கர்மோபாஸனைகளைச் செய்கின்றவன்; பரமாத்மா பலனைக் கொடுப்பவர்; அவர்கட் கேகத்துவம் பொருந்தா"தென்று நீ பிரஶ்நம் செய்தாய். இதற்கும் யாம் இவ்வுத்தரங் கூறினேம்:— "கர்மஞ் செய்கின்றவன் ஜீவ னல்லன்; பலனைக் கொடுப்பவன் ஈஶ்வர னல்லன்; பின்னையோ, ஜீவனிடத்திலுள்ள ஆபாஸஅம்சம் (கர்மத்தைச்) செய்கின்றது; ஈஶ்வரனிடத்திலுள்ள ஆபாஸ அம்சம் பலனைக் கொடுக்கின்றது. ஜீவேஶ்வரரிடத்திலுள்ள சேதநாம்சம், கடாகாசம், மஹாகாசத்தினைப் போல பேதத்தின் லேசமு மின்றியதாம்."

சிஷ்யனே! இந்த ரீதியினல், ஜீவப் பிரஹ்மங்களின் ஏகத்துவம் பொருந்தும். ஆதலால், "நான் பிரஹ்ம மென்று நீ அறிவாயாக. அஹம் சப்தத்திற்கு அர்த்தம் கூடஸ்த னென்றறி. பிரஹ்ம சப்தத்திற்கு மஹாகாசத்திற்குச் சமமாகச் சொல்லப்பட்ட லக்ஷியார்த்தம் (பொருள்) என்றறி. அஹம் சப்தத்திற்கும் பிரஹ்ம சப்தத்திற்கும் வாச்சியார்த்தத்திற்கு அபேதம் அன்றாயினும், லக்ஷியார்த்தத்திற்கு அபேதமாம்.

சிஷ்யனே! எது வரையில் 'அஹம் பிரஹ்மாஸ்மி' யென்று நீ அறிய வில்லையோ, அது வரையில், நீ உன்னைத் தீநனுகவும் துக்கியாகவு மெண்ணுவாய் அந்நியமாகப் பரமாத்மாவை அறிந்திருக்கின்றனேயோ, அது உனக்குப் பயத்திற்கு ஹேதுவாம். ஆகையால், "நான் பிரஹ்மமா யிருக்கின்றே" னென்று அறி.

## 176. பிரஸ்நம்-நான் பிரஹ்மம் என்னும் ஞாநம் யாருக்கு உண்டாகின்றது எனல் ?

**தத்துவ திருஷ்டி கூறுகின்றன்.**

ஹே குருவே! "அஹம் பிரஹ்மாஸ்மி" என்னும் ஞாநம் யாருக்குண்டாகின்றது என்பதைத் தேவரீர் கிருபையினுற் கூற வேண்டும். தாம் சொன்னு லன்றி இவ்வார்த்தையினை நான் அறிந்துகொள்ள மாட்டேன். இக்கேள்வியால் சிஷ்யனுடைய சித்தத்திலுள்ள கூடமான அபிப்பிராயம் இதுவாம்:—"நான் பிரஹ்மமாயிருக்கிறே"னென்னும் ஞாநம் கூடஸ்தனிடத்தி லுண்டாகின்றதா? அல்லது, ஆபாஸ சகித புத்தியின்க ணுண்டாகின்றதா?

கூடஸ்த னிடத்திற் சொல்லுவோமாயின், கூடஸ்தன் விகாரியாவன். ஆபாஸசகித புத்தியின்கண் கூறுவோமாயின், அவனுக்கு "நான் பிரஹ்ம மாகின்றேன்" என்னும் ஞாநம் பிராந்திரூபமாகும். எதனுலெனின், "கூடஸ்தனுக்கும் பிரஹ்மத்திற்கும்ஏகத்துவம் உளது ஆபாஸன் பிந்ந" னென்று பூர்வந் தாங்களே சொன்னீர்கள். ஆதலால், பிரஹ்மத்திற்கு வேருன ஆபாஸனுக்கு "பிரஹ்ம ரூபமான ஞாநம் பிராந்தியே யாம்; சர்ப்பத்திற்கு வேருன இரஜ்ஜுவைச் சர்ப்ப மென்று அறிவது பிராந்தியாவது போலவாம். இந்த ரீதியினுல், ஆபாஸனேடு கூடிய புத்திக்கு "நான் பிரஹ்மமா யிருக்கின்றேன்" என்னும் ஞாநம் யதார்த்தமாகாது; பின்னையோ, பிராந்தி ரூபமாம்.

ஒருகால், "அஹம் பிரஹ்மாஸ்மி" யென்னும் ஞாநத்தைப் பிராந்தி ரூபமாகவே அங்கீகரிப்போமாயின், இந்த ஞாநத்தால், மித்தையாகிய ஜகத்தின் நிவிர்த்தி யாகாது. பின்னையோ, யதார்த்த ஞாநத்தால் மித்தையின் நிவிர்த்தியாம். இரஜ்ஜுவின் யதார்த்த ஞாநத்தால் மித்தையாகிய சர்ப்ப நிவிர்த்தியாவது போலவாம். இந்த ரீதியினுல், ஆபாஸனேடு கூடிய புத்திக்கு "நான் பிரஹ்ம" மென்னும் ஞாநம் பொருந்ாது.

முற் கூறிய பிரஶ்நத்தின் உத்தரம்.

## 177. ஆபாஸனது ஸப்தாவஸ்தைகளின் பெயர்.

**ஸ்ரீ குரு கூறுகின்றார்.**

சிஷ்யனே! இப்போது ஆபாஸனது ஸப்தாவஸ்தைகளை நான் சொல்லுகின்றேன்; அதனை நீ கேட்பாயாக. அந்த ஏழவஸ்தைகளில் எதுவும் சேதநமாகிய கூடஸ்தனுக்கு இல்லை. "நான் பிரஹ்மம்" என்னும் ஞாநமும் அவ்வேழவஸ்தையி னுள்ளேயே இருக்கின்றது.

178. ஸப்தாவஸ்தைகளின் பெயர். அஞ்ஞாநம், ஆவரணம், பிராந்தி, இருவிதஞாநம், சோக நாசம், ஹர்ஷம் என்வபற்றினைச் ஸப்தாவஸ்தை யென நிச்சயிப்பாய்.

## 179. அஞ்ஞாந ஆவரணங்களின் ஸ்வரூப வர்ணநம்.

"சிஷ்யனே! நான் பிரஹ்மத்தினை அறியேன்" என்று புருஷர் கூறும் வியவகாரத்திற்கு ஹேது அஞ்ஞாநமாம். "பிரஹ்ம மில்லை; பாநமாக வில்லை" யென்னும் வியவகாரத்திற்கு ஹேது ஆவரணமாம். ஆவரணத்தால் இவ்வியவகார முண்டாகின்றது. எதனு லெனின், அஞ்ஞாநத்தின் சக்தி இரண்டு பிரகாரமா யுள; ஒன்று அஸத்துவாபாதகம்; மற்றென்று அபாநாபாதகம். இவ்விரண்டனையும் ஆவரண மென்பர்.

"வஸ்து வில்லை" யென்னும் பிரதீதியைச் செய்வதாயுள்ள சக்தி அஸத்துவாபாதக மெனப்படும். "வஸ்து பாநமாகவில்லை" யென்னும் பிரதீதியைச் செய்வதாயுள்ள அஞ்ஞாநத்தின் சக்தி அபாநாபாதக மெனப்படும்.

இந்த ரீதியால், "பிரஹ்ம மில்லை" யென்னும் வியவகாரத் திற்கு ஹேது அஞ்ஞாநத்தின் அஸத்துவாபாதக சக்தியாம். "பிரஹ்மம் பாநமாக வில்லை" யென்னும் வியவகாரத்திற்கு ஹேது அஞ்ஞாநத்தின் அபாநாபாதக சக்தியாம். இவ்விரண் டிற்கு மாவரண மென்று பெயராம்.

## 180. பிராந்தியின் வர்ணநம்.

கூடஸ்தனிடத்தில் ஜந்மாதி சம்சாரப் பிரதீதி வேதத் தின்கண் பிராந்தி யெனப்படும். இதனையே சோக மென்று சொல்வர்.

### 181. இருவித ஞாந வர்ணநம் (பரோக்ஷம் - அபரோக்ஷம்).

பரோக்ஷ மென்றும், அபரோக்ஷ மென்று ஞாந மிருவித மாம். அவற்றுள் "பிரஹ்ம முளது" என்பது பரோக்ஷ ஞாந மாம். "அஹம் பிரஹ்ம" மென்பது அபரோக்ஷ ஞாநமாம். 'பிரஹ்மமில்லை' யென்னும் ஆவரண அம்சத்தினைப் பிரஹ்மம் உளது என்னும் பரோக்ஷஞாநம் நாசஞ் செய்கின்றது. எதனு லெனின், "சத்திய ஞாநாநந்த ரூபமாகப் பிரஹ்மம் இருக்கின் றது" என்னும்ஞாநத்திற்குப் பரோக்ஷ ஞாந மென்று பெயர். அது "பிரஹ்மமில்லை" யென்னும் பிரதீதிக்கு விரோதியாம்; வேறென் றற்கும் விரோதி யன்று.

"நான் பிரஹ்மமா யிருக்கின்றேன்" என்னும் அபரோக்ஷ ஞாநம் சகல அவித்தியாஜால (ஸமூக)த்திற்கும் விரோதியாம். இந்தக் காரணத்தால் "நான் பிரஹ்மத்தினை யறியேன்" என் பது அஞ்ஞாநம். "பிரஹ்ம மில்லை", "பாநமாக வில்லை" என் பது ஆவரணம். "நான் பிரஹ்ம மல்ல; பின்னையோ, புண்ணிய பாபங்களின் கர்த்தாவும், சுக துக்கங்களின் போக்தாவுமாகிய ஜீவன்" என்பது பிராந்தி. இவ்வளவு அவித்தியா ஜாலத்தினை அபரோக்ஷ ஞாநம் நாசஞ் செய்யாநிற்கும்.

### 182. பிராந்தி நாச வர்ணநம்.

என்னிடத்தில் ஜந்ம மரண மில்லை. சுக துக்கங்கள் அற்பமு மில்லை. ஒரு சம்சார தர்மமு மென்னிடத்தி லில்லை. பின்னை யோ, ஜந்மரகிதமாகிய கூடஸ்தன் யான் என்று சிஷ்யனே! இவ்விதமாக ஸர்வ அநர்த்தங்களையும் நிஷேதித்தல் பிராந்தி நாசத் தின் ஸ்வரூபமாம். ஈண்டு கூடஸ்தரிடத்தில் ஜந்ம நிஷேதஞ் செய்ததால் ஸர்வ அநர்த்தத்தின் நிஷேதத்தினையு மறிக. எதனு லெனின், ஜந்மப் பிரதீதியின் பின்னர், மற்றைய அநர்த்தங் கள் பிரதீதியாகின்றன. ஆதலால், ஜந்மத்தினை நிஷேதிப் பதால் ஸர்வ அநர்த்தங்களும் நிஷேதிக்கப்படுகின்றன. இந் தப் பிராந்தி நாசத்தினையே சோக நாச மென்றுங் கூறுவர்.

### 183. ஹர்ஷ ஸ்வரூப வர்ணநம்.

சிஷ்யனே! தனது ஸ்வரூப ஞாநம் "நான் அத்வைதப் பிரஹ்மரூபன்" என்று ஸம்சய ரகிதமா யுனக் கெப்போ துண் டாகின்றதோ, அப்போது உனக்கு ஆநந்த முண்டாகும். அதனை

ஹர்ஷமென்று நீ அறி. சிஷ்யனே! ஸப்தாவஸ்தைகளை உனக்கு யான் கூறினேன். அவை முழுது மாபாஸனுக்கேயாம். அவனிடத்திலேயே ஞானமுளது. சிஷ்யனே! "ஞானம் யாருக்குண்டாகின்றது" என்று நீ வினவியதற்கு விடை கூறினேன். இன்னும் நீ விரும்பியதைக் கேட்பாயாக.

184. பிரஸ்நம்:—பிரஹ்மத்திற்கு வேறான ஆபாஸனுக்கு "நான் பிரஹ்மம்" என்னும் ஞானம் மித்தையாகும். 176-லுள்ள பிரஸ்நத்தின் கூட அபிப்பிராயம்.

கூடமான அபிப்பிராயத்தாற் ப்ரஸ்நம் செய்திருந்ததனை இப்போது சிஷ்யன் பிரகடனம் செய்கின்றனன்:—பகவானே! "அஹம் பிரஹ்மம்" என்னும் ஞானம் சிதாபாஸனுக் குண்டாகிறதென்று தேவரீர் கூறியதை யறிந்தேன். பின்னுமொரு சங்கை யுண்டாகின்றது. "கூடஸ்தனும், பிரஹ்மமும் ஏகம். ஆபாஸன் பிரஹ்மத்திற் கந்நியன்" என்று தாம் முன்னர்க் கூறினீர்கள். அந்தப் பிரஹ்மத்திற் கந்நியமான ஆபாஸனுக்கு "நான் பிரஹ்மமா யிருக்கின்றேன்" என்னும் பிரஹ்ம ரூபமான ஞானம் பொருந்தாது. "எனது அதிஷ்டானமான கூடஸ்தன் பிரஹ்மரூபமாம்" என்று ஆபாஸனுக்கு ஞான முண்டாகு மாயின், அது யதார்த்த ஞானமாம்.

"அஹம் பிரஹ்மம்" என்னும் ஞானம் யதார்த்த மாகாது. எதனாலெனின், அஹம் என்னும் நாமம் தனது ஸ்வரூபத்திற்காம். எதனை நானென்னு நின்றனரோ, அவ்வாபாஸத்தினது ஸ்வரூபம் மித்தையாம்; ஆதலால், பிந்நமாம். இதனால், பிரஹ்மத்தின் பிந்நமான ஆபாஸனது ஸ்வரூபத்தினை பிரஹ்மரூப மென அறியின், அது மித்தியா ஞானமாம். சர்ப்பத்திற்குப் பிந்நமான பழுதையினை சர்ப்பரூபமாக அறியும் ஞானம் மித்தையாவது போலவாம். மித்தையின் நாமம் பிராந்திக்காம். அந்தப் பிரஹ்ம ஞானத்தினைப் பிராந்திரூப மெனச் சொல்லுதல் பொருந்தாது.

(ஆதலால், இந்தச் சந்தேஹத்தை நிவிர்த்திப்பிக்க வேண்டுமென்று சிஷ்யன் கேட்க, ஸ்ரீகுருவானவர் சொல்லுகின்றார்.)

### 185. உத்தரம்:—அஹம் சப்தத்தின் இரண்டர்த்தமும், அவற்றில் கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தோடுள்ள முக்கிய சாமானாதிகரண்யமும், ஆபாஸனுக்குள்ள பாதசாமானாதி கரண்யமும்.

சிஷ்யனே! உனதிருதயத்தின்கணுண்டாகாநிற்கு மநேக வித சங்கை ரூபமான களங்கமெதனால் நசியாநிற்குமோ, அந்த அஹம் சப்தார்த்த விவேகத்தை இப்போது கேட்பாயாக. "நான் பிரஹ்மம்" என்னும் ஞானம் புத்தி சகித ஆபாஸனுக் குண்டாகாநின்றது; கூடஸ்தனுக் கில்லையாயினும், அவ்வாபாஸன் கூடஸ்தனையும், தனது ஸ்வரூபத்தையும், தனதாத்மாவாக அறிகின்றான். "நான்" என்னுஞ் சப்தத்தால் அவ்வாத்மா கிரஹிக்கப்படுகின்றது. அதுவே அஹம் சப்தத்திற் கர்த்தமாம்.

அவ்வஹம்சப்தத்திற்பாநமாகாநின்ற கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தோடு சதா அபேதமாம். அது கடாகாசத்திற்கும், மஹாகாசத்திற்கும் சதா அபேத முளதாயிருப்பது போலவாம். இக்காரணத்தால், கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தோடு முக்கிய ஸமானாதிகரணம் வேதாந்த சாஸ்திரத்திற் கூறப்பட் டிருக்கின்றது. எந்த வஸ்துவிற் கெந்த வஸ்துவோடு சதா அபேத மிருக்கின்றதோ, அந்த வஸ்துவிற் கந்த வஸ்துவோடு முக்கிய ஸமானாதிகரணம் கூறப்பட் டிருக்கின்றது. எங்ஙனம் - கடாகாசம் மஹாகாசத்தோடு சதா அபேதமாகையால் கடாகாசம் மஹாகாசமாம். இந்த ரீதியால், கடாகாசத்திற்கு மஹாகாசத்தோடு முக்கிய ஸமானாதிகரண மிருக்கின்றது.

இந்த ரீதியால், கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தோடு முக்கிய ஸமானாதி கரண முண்டு. எதனாலெனின், கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தோடு ஸதா அபேத முண்டு. இதனால். "நான்" எனும் சப்தத்திற் பாநமாகின்ற கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தோடு ஸதா அபேத முண்டு.

"நான்" என்னுஞ் சப்தத்திற் பாநமாகாநின்ற ஆபாஸனுக்குப் பிரஹ்மத்தோடு தன்னுடைய ஸ்வரூபத்தைப் பாதித்து அபேத முண்டாகின்றது. அது முகத்தினது பிரதிபிம்பத்திற்குப் பிம்ப ஸ்வரூப முகத்தோடு பிரதிபிம்ப ஸ்வரூபத்தைப் பாதித்து அபேத முண்டாவது போலவாம். இக்காரணத்தால், வேதா

ந்த சாஸ்திரத்தில் ஆபாஸனுக்குப் பிரஹ்மத்தோடு பாத ஸமானாதிகரணங் கூறப்பட்டிருக்கின்றது. எந்த வஸ்துவிற்கு பாதமுண்டாய் எந்த வஸ்துவோடு அபேத முண்டாமோ, அந்த வஸ்துவிற் கந்த வஸ்துவோடு பாத ஸமானாதிகரணஞ் சொல்லப்பட்டிருக்கின்றது. அது முகப்பிரதிபிம்பத்திற்குப் பாத முண்டாய் முகத்தோடு அபேத முண்டாவது போலவாம். இதனால், பிரதிபிம்பம் முகமாம்; வேறன்று. இவ்வாறு பிரதிபிம்பத்திற்கு முகத்தோடு பாதஸமானாதிகரண முண்டு.

அஃதன்றியும், ஸ்தாணுவின்கட் புருஷப் பிரமம் (பிராந்தி) உண்டாய் ஸ்தாணு ஞானத்தின் பின் "புருஷன் ஸ்தாணு" வென்னும் ரீதியினாற் புருஷனுக்குத் ஸ்தாணுவோடு பாதஸமானாதிகரண மெங்ஙனமோ, அங்ஙனமே ஆபாஸனுக்குப் பாதமாய்ப் பிரஹ்மத்தோடு அபேத முண்டாகின்றது. ஆதலால், "நான்" என்னுஞ் சப்தத்திற் பானமாகின்ற ஆபாஸன் பிரஹ்மமாம்; வேறன்று. இவ்வாறு பாதஸமானாதிகரணம் ஆபாஸனுக்குப் பிரஹ்மத்தோடுளதாம். சிஷ்யனே! இந்த ரீதியினால், அஹஞ் சப்தத்திற் பானமாகின்ற கூடஸ்தனுக்கு முக்கிய அபேத முண்டு. ஆபாஸனுக்குப் பாதத்தினு லபேத முண்டு.

186. பிரச்நம்:—அஹம் விருத்தியில் கூடஸ்த ஆபாஸர்களின் பானம் கிரமமாக உண்டாகின்றதா? அல்லது கிரம மின்றி உண்டாகின்றதா? எனல்.

**தத்துவதிருஷ்டி கூறுகின்றன்.**

பகவானே! "அஹம் விருத்தியிற்ஸாக்ஷி, ஆபாஸன் என்னு மிருவரும் பானமாகின்றன"ரென்று தேவரீர் கூறினீர். இதன்கண் யான் ஒன்றும் அறிய வில்லை. அஹம் விருத்தியின்கண் கூடஸ்தனும், ஆபாஸனும் கிரமமாகப் பானமாகின்றனவா? அல்லது கிரம மின்றிப் பானமாகின்றனவா? இதன் பொரு ளிதுவாம்:-கிரமமாக வென்பது பிந்ந பிந்ந காலத்தில் பானமாகின்றனவா? அல்லது, இரண்டும் ஏக காலத்தில் பானமாகின்றனவா ? இதைத் தாங்க ளெனக்கு அறிவிக்கவேண்டும்.

நிகழ்ந்த பிரச்நத்தின் உத்தரம்.

187. ஒரே சமயத்தில் ஸாக்ஷி ஆபாஸர்களின் பான முண்டாகின்றது.

**குரு கூறுகின்றார்.**

சிஷ்யனே! நீ செய்த பிரச்நத்திற்கு நான் சாரபூதமான உத்தரஞ் சொல்லுகின்றேன். நீ ஸாவதானனாய்க் கேட்பாயாக.

எவ்வித உத்தரமெனின், இதைக் கேட்பதனல் போதரூப சூரியப் பிரகாசமுண்டாய் அஞ்ஞாநரூப இருளை நாசஞ்செய்யத் தக்கதாம். சிஷ்யனே! ஒரே சமயத்திற் ஸாக்ஷியும், ஆபாஸமும், அஹம் விருத்தியிற் பாநமாகின்றன. எல்லாப் பிரகரணங்களிலும் ஆபாஸ சப்தத்தால் அந்தக்கரண சகித ஆபாஸமே கிரஹிக்க வேண்டும். ஆதலால், அந்தக்கரணசகித ஆபாஸம் சேதநமாகிய ஸாக்ஷிக்கு விஷயமாய்ப் பாநமாகின்றது. ஸாக்ஷி ஸ்வயம் பிரகாச ரூபமாகப் பாநமாகின்றது. அந்தக்கரணத்தின் ஆபாஸ சகித விருத்திக்கு ஸாக்ஷி விஷயமாகின்ற தில்லை.

கட முதலிய பாஹ்ய பதார்த்தங்களில் இவ்வாறு கிரமமுளது:—எப்பொழுது இந்திரியத்திற்குங் கடத்திற்குஞ் ஸம்யோக முண்டாமோ, அப்பொழுது இந்திரிய வாயிலாய் அந்தக்கரணத்தின் விருத்தி புறப்பட்டுக் கடத்திற்குச் சமாநமாகிய ஆகாரத்தை யடையாநின்றது. அச்சில் (மண்ணல் அல்லது, இரும்பிஞல் செய்த உருவில்) விடப்பட்ட தாம்பிரம் அவ்வச்சின் ஆகாரத்திற்குச் சமாநாகாரத்தினை எங்ஙன மடைகின்றதோ, அங்ஙனமே அந்தக்கரணத்தின் விருத்தியும், கடத்திஞகாரத்திற்குச் சமாநாகாரமாகின்றது. அவ்விர்த்தி ஆபாஸ னின்றி உண்டாகின்ற தில்லை. பின்னையோ, ஆபாஸசகிதமாகவே உண்டாகின்றது. எதனுலெனின், விர்த்தி அந்தக் கரணத்தின் பரிணமமாம். அந்தக் கரணத்தின் பரிணமத்தினை விர்த்தி யென்பர்.

அந்தக்கரணம் ஸத்வ குணத்தின் காரியமா யிருத்தலால் ஸ்வச்சமாம். ஆதலால், அந்தக்கரணத்தின்கண் சேதநத்திஞபாஸம் எங்ஙன முண்டாகின்றதோ, அங்ஙனமே விருத்தியும் ஸ்வச்சமாகிய அந்தக்கரணத்தின் காரியமாம். ஆதலால், விருத்தியின்கண் சேதநத்தி ஞபாச முண்டாகின்றது. உத்பந்நமாகின்ற விர்த்தி, ஆபாசசகித அந்தக்கரணத்தினின்றும் உற்பந்நமாகின்றது. இக்காரணத்தாலும், விர்த்தி ஆபாஸசகிதமாகவே யுண்டாகின்றது.

### 188. அஞ்ஞாநத்திற்கு ஆஶ்ரயமும், விஷயமும் சேதநமாம் எனல்.

விஷயமாகிய கடம் தமோகுணத்தின் காரியமாம். ஆதலால், ஸ்வரூபத்தாற் ஜடமாம். அதன்கண் அஞ்ஞாநமும் அதன் ஆவரணமு முளா. இதன்கண் இச்சங்கை யுண்டாகாநிற்கும். அஞ்ஞாநமும் அதன் ஆவரணமும் விசார திருஷ்டியினுற் சேதநத்தின்க

ணுள. கடத்தின்கண் ணில்லே. எதனு லெனின், அஞ்ஞானம் சேதநத்தி னுசிரிதமாயிருந்து சேதநத்தினேயே விஷயஞ் செய்கின்றதென்பது வேதாந்தத்தின் சித்தாந்தமாம். ஸப்தாவஸ்தையின் பிரசங்கத்தில் அஞ்ஞாநத்திற் காசிரயம் அந்தக்கரணசகித ஆபாஸனென்று யாது கூறப்பட்டது, அஃது அஞ்ஞாநத்தின் அபிமானியாம். "நான் அஞ்ஞாநி" யென்னும் அபிமாநம் அந்தக்கரணசகித ஆபாஸனுக் குண்டாகாநிற்கின்றது. இக்காரணத்தால், ஆபாஸன் அஞ்ஞாநத்திற் காசிரயமென்று சொல்லப்படுகின்றது. முக்கிய ஆஸ்ரயம் சேதநமாம். ஆபாஸசகித அந்தக்கரணமன்று; எதனுனெனின், ஆபாஸசகித அந்தக்கரணம் அஞ்ஞாநத்தின் காரியமாம். எதுஎதன்காரியமாமோ, அஃதுஅதற் காசிரயமாகாது. ஆதலால், சேதநமே அஞ்ஞாநத்திற் கதிஷ்டாநரூப ஆஸ்ரயமாம். சேதநத்தினேயே அஞ்ஞாநம் விஷயஞ் செய்கின்றது. ஸ்வரூபத்தை ஆவரணம் செய்வதே அஞ்ஞாநம் விஷயம் செய்வதாம்.

அவ்வஞ்ஞாநத்தாலாய ஆவரணம் ஜடவஸ்துவின்கண் பொருந்தாது. எதனு லெனின், ஜடவஸ்துவானது ஸ்வரூபமாகவே ஆவிருதமா யுளது. அதன்கண் அஞ்ஞாநத்தாலாய ஆவரணத்திற்குக் கிஞ்சிற்று முபயோக மில்லே. இந்த ரீதியால், அஞ்ஞாநத்திற் காசிரயமும் விஷயமுஞ் சைதந்யமாம். அது கிரஹமத்தியிலுள்ள அந்தகாரமானது கிரஹ மத்தியை ஆவரணம் செய்வது போலவாம். இதனுல், கடத்தின்கண் அஞ்ஞாநமும், அதனது ஆவரணமும் பொருந்தா.

189. வெளிப்பதார்த்தங்களில் விருத்தி, ஆபாஸ மென்னும் இரண்டற்கும் உபயோகமும், அதன்கண் அஞ்ஞாநத்தினுல் மறைக்கப்பட்ட கடத்தின் உதாகரணமும்.

அதற்குச் சமாதான மிதுவாம்:—சேதந ஸ்வரூபத்திற்குப் பிந்நமாய்ச் சதசத் விலக்ஷண அஞ்ஞாநம் சேதநத்தி னுசிரிதமாயுளது. அவ்வஞ்ஞாநத்தாற் சேதநம் எங்ஙனம் ஆவிருதமாகாநிற்குமோ, அங்ஙனமே கடரூபத்திற்குப் பிந்நமாகிய அஞ்ஞாநம் கடத்தினது ஆசிரிதமன்ருயினும், அஞ்ஞாநம் கடாதிகளே ஸ்வரூபமாகப் பிரகாசமற்ற ஜடரூபமாகச் சிருஷ்டித்திருக்கின்றது. இதனுல், எப்போதுமே அந்தனுக்குச் சமானமா யாவிருதமா (மறைப்பா)ம். அவ்வாவிருத ஸ்வபாவம் கடாதிகட்கு அஞ்ஞாநத்தாலுண்டா யிருக்கின்றது. ஏனெனின், தமோகுணப் பிரதாந அஞ்

ஞாநத்தினின்றும் பூதோற்பத்தி வாயிலாய்க் கடாதிக ளுண்டாயின; அத்தமோகுணம் ஆவரண ஸ்வபாவ முடையதாம். ஆதலால் கடாதிகள் பிரகாசமற்ற இருளாகவே யிருக்கின்றன.

இந்த ரீதியினுல், இருட்டன்மை ரூபமான ஆவரணம், கடாதிகளில் அஞ்ஞாநத்தாலாகியதாம்; ஸ்வபாவ சித்தமாயுளது. கடாதிகளின் அதிஷ்டாநமாகிய சேதநத்தை ஆஸ்ரயித்ததாயுள்ள அஞ்ஞாநம், சேதநத்தினை மறைத்து ஸ்வபாவமாக ஆவிர்தமாயுள்ள கடாதிகளையும் மறைக்கின்றது.

ஸ்வபாவமாக ஆவிர்தமாயுள்ள பதார்த்தங்களை ஆவரணம் செய்வதில் பிரயோஜந மில்லையாயினும், ஆவரண கர்த்தா, பதார்த்தப் பிரயோஜனுபேக்ஷை யின்றியே, ஆவரணமின்றியதைப்போல ஆவரணசகிதத்திலும் ஆவரணஞ்செய்கின்றது. இஃதுலகத்திற் பிரசித்தமாம். அவ்வஞ்ஞாநத்தாலாவிருதமான கடத்தை வியாபித்துள்ள அந்தக்கரணத்தினுபாச சகிதமாகிய கடாகார விர்த்தியிலுள்ள விர்த்தி பாகமானது, கடத்தினதாவரணத்தை நிவிர்த்திக்கின்றது. விர்த்தியிலுள்ள ஆபாஸ பாகம் கடத்தினைப் பிரகாசிக்கின்றது. இந்த ரீதியினுல், வெளிப்பதார்த்தங்களில் விர்த்தியும் ஆபாஸனுமாகிய இரண்டு முபயோகமாம்.

### 190. திருஷ்டாந்தம்.

அந்தகாரத்தில் பானையினுல் மிருத்திகை யல்லது, இரும்பினுற் செய்யப்பட்ட பாத்திரங்கள் மூடி வைத்திருக்குமாயின், ஆண்டு தண்டத்தாற் பானையை யுடைத்தாலும் பின் தீப மில்லாமல் அந்த நிராவரண பாத்திரமும் எங்ஙனம் பிரகாசிக்கின்றதில்லை, பின்னையோ, தீபத்தாற் பிரகாசிக்கின்றது, அங்ஙனமே அஞ்ஞாநத்தா லாவிருதமாகிய கடத்தி னுவரணத்தை விர்த்தி நாசஞ் செய்யினும் கடம் பிரகாசிக்கின்ற தில்லை. எதனு லெனின், கடம் ஸ்வரூபமாக ஜடமாம்; விர்த்தியும் ஜடமாம். அதற்காவரண பங்கமாத்திரம் பிரயோஜநமாம். அதனுல், பிரகாச முண்டாகின்றதில்லை. ஆதலால் கடத்தினைப் பிரகாசிப்பது ஆபாஸனும்.

நேத்திர விஷய வஸ்துவின் பிரத்தியக்ஷ ஞாநத்தில் இந்த ரீதி கூறினேம். சிரவணுதி விஷயங்களின் பிரத்தியக்ஷத்தின் ரீதியும் இங்ஙனமே யறிந்துகொள்க. விர்த்தியுங் கடமும் ஆகிய இரண்டும் ஓரிடத்தில் நிலைபெறுவதால் கடத்தின் ஞாநம் பிரத்தி

யக்ஷ மென்று சொல்லப்படுகின்றது. அந்தக்கரணத்தின் விர்த்தி கடாகாரமாய்க் கடத்தோடு சம்பந்தமாகாமலுள்ளேயே யிருக்குமாயின், அது கடத்தின் பரோக்ஷ ஞானமென்று சொல்லப்படுகின்றது. "இது கடம்" என்பது அபரோக்ஷ ஞானத்தின் ஆகாரமாம். "கட மிருக்கின்றது அல்லது, அந்தக் கட மிருக்கின்றது" என்பது பரோக்ஷ ஞானத்தின் ஆகாரமாம். ஸ்மிருதி ஞானமும் பரோக்ஷ ஞானமேயாம். என்றாலும், ஸ்மிருதி ஞானமோ ஸம்ஸ்கார ஜந்யமாம். அநுமிதியாதி பரோக்ஷ ஞானங்கள் பிரமாண ஜந்யங்களாம். இவ்வளவு பேத முண்டு.

### 191. பிரத்தியக்ஷ, அநுமான, சப்த, உபமான, அர்த்தாபத்தி, அநுபலப்திப் பிரமாணங்களைக் கூறல்.

பிரமாணத்தின் பிரசங்கத்தால் யாம் பிரமாண நிரூபணம் செய்வாம். சார்வாகர் பிரத்தியக்ஷப் பிரமாண மொன்று மட்டும் அங்கிகரிக்கின்றார்கள்.

192. கணாத சுகத மதாநுசாரியரிரண்டாவது அநுமானப்பிரமாணத்தையும்அங்கீகரிக்கின்றார்கள். எதனாலெனின், ஒரு பிரத்தியக்ஷப் பிரமாணமே யங்கீகாரஞ் செய்யில், திருப்தி வேண்டினோனுக்குப் போஜநத்தின்கண் பிரவிர்த்தி யுண்டாகாது. எதனாலெனின், அபுக்த போஜநத்தின்கண் திருப்திக்கு ஹேதுத் தன்மையின் பிரத்தியக்ஷப் பிரமாண ஜந்யப் பிரத்தியக்ஷ ஞான மின்று. ஆதலால், புக்த போஜநத்தின்கண் ணநுபவஞ் செய்யப்பட்ட திருப்தியின் ஹேதுத் தன்மை எதுவோ, அதனை அபுக்த போஜநத்தின்கண்ணும்அநுமாநத்தினா லறிந்து திருப்திவேண்டினோனுக்குப் போஜநத்தின்கண் பிரவிர்த்தி யுண்டாவதால், அநுமாநப் பிரமாணமும் அங்கீகரிக்க வேண்டும். இவ்வாறு கணாத சுகத மதாநுசாரிகள் பிரத்தியக்ஷம், அநுமானம் என்னும் இரண்டு பிரமாணமு மொப்பினர்.

193. சாங்கிய சாஸ்திரத்திற்குக் கர்த்தாவாகிய கபிலாதிமதாநுசாரியர் மூன்றாவது சப்தப் பிரமாணமு மங்கீகரிக்கின்றனர். எதனாலெனின், பிரத்தியக்ஷம், அநுமாநமாகிய இரண்டு பிரமாணங்களையே அங்கிகரிக்கின், தேசாந்தரத்தில் ஒருவன் தகப்பன் மரிக்கின்றான். அவனுக்கு ஒருரியோன் வந்து "நின்பிதா மரித்தனன்" னெனச் சொல்லுவானாயின், அப்போது சுரோதாவுக்குப் பிதாவின் மரண நிச்சய முண்டாக வேண்டுவதில்லை. இஃதெதனா

லெனின், தேசாந்திரத்திலுள்ள பிதாவினது மரண ஞாநம், பிரத்தியக்ஷ அநுமாநங்களாற் பொருந்தாது. இவ்வாற்ருல், கபில மதாநுசாரியர், பிரத்தியக்ஷம் அநுமாநம் சப்தம் என்னும் மூன்று பிரமாணங்களை அங்கீகரிக்கின்றனர்.

194. நியாய சாஸ்திர கர்த்தாவாகிய கௌதமரது மதாநுசாரியர், நான்காவது உபமானப் பிரமாணமும் அங்கீகரிக்கின்றனர். எதனு லெனின், பிரத்தியக்ஷாதி மூன்று பிரமாணங்களையே அங்கீகரிக்கின், மரை யறியான் ஒரு புருடன், வநவாஸி புருஷனுல் "பசுவிற் கொப்பா மரை" யெனக் கேட்டிருந்து வநத்திற் போந்து மரையைக் கண்டனன். அப்போ தவனுக்குப் பசுவிற் கொப்பா மரையென வநவாஸி புருஷனுற் சொல்லப்பட்ட வாக்கியார்த்த ஸ்மரணை யுண்டாகாநிற்கும். அந்த ஸ்மிருதியின் அநந்தரமன்னேனுக்கு "இது மரையா" மென்று ஞாந முண்டாகின்றது. இந்த ஞாநம் உண்டாக வேண்டுவ தில்லை. ஆதலால், இவ்வித விலக்ஷண ஞாநத்திற்கு ஹேதுவாகிய உபமானப் பிரமாணத்தினையும் அங்கீகரிக்கின்றனர்.

195. பூர்வ மீமாஞ்சையி னேகதேசியான பட்டருடைய சிஷ்யராகிய பிரபாகரர், ஐந்தாவதான அர்த்தாபத்திப் பிரமாணத்தினையும் அங்கீகரிக்கின்றனர். பகற்பொழு துணவொழித்திருக்கும் புருடனது ஸ்தூலத்தைப் பார்த்து, "இவன் இராத்திரிக்கு உணவுண்பன்" என ஞாந முண்டாகாநிற்கும். ஆண்டு, இராத்திரி போஜந மின்றிப் பகற்கண் போஜநத் தியாகியி னிடத்தில் ஸ்தூலத்தன்மை பொருந்தாது. ஆதலால், ஸ்தூலத் தன்மை இராத்திரி போஜநத்தின் சம்பாதகமாம்; இராத்திரி போஜநம், சம்பாத்தியமாம். சம்பாத்தியமாகிய இராத்திரி போஜந ஞாநத்திற்கு ஹேதுவான, ஸ்தூலத் தன்மையினது ஞாநம் அர்த்தாபத்திப் பிரமாண மென்று சொல்லப்படுகின்றது.

196. பூர்வ மீமாஞ்சகரான பட்டர், ஆருவதான அநுபலப்திப் பிரமாணத்தினையு மங்கீகரிக்கின்றனர். வேதாந்த சாஸ்திரத்திலும் ஆறு பிரமாண மொப்பினர். அநுபலப்திப் பிரமாணத்திற்குப் பிரயோஜந மிதுவாம்:—கிரஹ முதலியவற்றில் கடாதிகளின் அபாவ ஞாந முண்டாகின்றது. ஆண்டு, எந்தப் பதார்த்தத்தின் பிரதீதி யுண்டாகவில்லையோ அந்தப் பதார்த்தத்தின் அபாவ

ஞாந முண்டாகாநிற்கின்றது. அப்பிரதீதி (தோற்ருமை)யினே அநுபலப்தி யென்பர். கடத்தின் அப்பிரதீதியினுற் கடத்தினது அபாவ நிச்சய முண்டாகாநின்றது. இவ்வாறு பதார்த்தங்களின் அபாவ நிச்சயத்திற்கு ஹேதுவாகிய பதார்த்தங்களினது அப்பிர தீதியினே, அநுபலப்திப் பிரமாண மென்பர்.

### 197. பிரமாணப் பிரமா ஞாநங்களின் லக்ஷணம்.

பிரமா ஞாநத்திற்குக் கரணம் யாது, அது பிரமாண மெனப் படும். ஸ்மிருதி ஞாநத்திற்குப் பிந்நமாய், அபாதித அர்த்தத்தை விஷயம் பண்ணுவதாயுள்ள ஞாநம் யாது, அது பிரமா (பிரமை) எனப்படும்; ஸ்மிருதி ஞாநம் பிரமை யன்று. எதனு லெனின், பிரமா ஞாநம் பிரமாதாவி ஞசிரிதமாம். ஸ்மிருதி, பிரமாதாவிஞசி ரித மன்று. பின்னேயோ, சாக்ஷியி ஞசிரிதமா யொப்பப்பட்டிருக் கின்றது. பிராந்தி ஞாநமும், ஸம்சயமும் ஸாக்ஷியி ஞசிரிதமா யங்கிகாரஞ் செய்யப்பட்டிருக்கின்றன. இக்காரணத்தால், ஸ்மி ருதி, பிராந்தி, ஸம்சய ஞாந மென்னும் மூன்றும் ஆபாஸசகித அவித்தியாவிர்த்தி ரூபமாம்; அந்தக்கரணவிர்த்திரூபங்க ளன்று. ஆகையால், பிரமாதாவி ஞசிரித மன்று. பின்னேயோ, ஸாக்ஷியி ஞசிரிதமாம். அந்தக்கரண விர்த்திரூப ஞாநம், பிரமாதாவிஞசி ரிதமாகாநிற்கும். அதுவே பிரமா வென்று சொல்லப்படும். ஸ்மி ருதி ஞாநம் அந்தக்கரண விர்த்தி யன்று. ஆதலால், பிரமாதாவி ஞசிரத மன்று. பிரமையு மன்று. ஆதலால், பிரமையின் லக்ஷ ணத்தில் ஸ்மிருதியினும் பிந்நமாகச் சொல்லவேண்டும்.

ஸ்மிருதி ஞாநமும், அபாதித அர்த்தத்தை விஷயம் செய்யும் ஞாநமேயாம். ஆயினும், ஸ்மிருதி ஞாநம் ஸ்மிருதியினும் பிந்ந மன்று. ஆகையால், பாதிக்கப்படாத அர்த்தத்தை விஷயம் செய் யும் ஸ்மிருதியினும் பிந்ந ஞாநம், பிரமை யென்று சொல்லப் படும். இந்த லக்ஷணத்தில் ஒரு தோஷமு மில்லே.

### 198. ஸ்மிருதி ஞாநமும், ஆறு பிரமையின் விசார பூர்வகமான கரணத்தின் லக்ஷணமும்.

வேறு சிலர், ஸ்மிருதி ஞாநத்தையும் பிரமாரூபமாக அங்கீ கரிக்கின்றனர். அவரது மதத்தில் பிரமா லக்ஷணத்தில் "ஸ்மிருதி யினும் பிந்ந" மென்று சொல்லுவ தில்லே. பின்னேயோ, அபாதித அர்த்தத்தை விஷயம் செய்யும் ஞாநம், பிரமை யென்று சொல்லப்

படுகின்றது. பிராந்திஞானம் அபாதித அர்த்தத்தை விஷயஞ்செய்கின்ற தில்லை; பின்னையோ, பாதித அர்த்தத்தை விஷயஞ் செய்கின்றது. ஆதலால், பிரமாவி னிலக்கணம் பிராந்தி ஞானத்திற் செல்லுகின்ற தில்லை.

எவருடைய மதத்தில் ஸ்மிருதி ஞானத்திலும் பிரமா வியவகாரமுளதோ, அவரது மதத்தில் ஸ்மிருதிஞானம் அந்தக்கரண விர்த்தியாம்; அவித்தியா விருத்தி யன்றும்; ஸாக்ஷியாசிரிதமு மன்று. பின்னையோ, பிரமாதாவி னாசிரிதமாம். எதனு லெனின், அந்தக்கரண விர்த்தியின் ஆசிரயம் பிரமாதாவே யாதல்கூடும்; ஸாக்ஷி ஆகாது. இவ்வாறு ஸ்மிருதி ஞானம் சிலர் மதத்தில் அந்தக்கரண விர்த்தியாதலால் பிரமாரூபமாம். சிலர் மதத்தில், அவித்தியாவிர்த்தியாதலால் பிரமாரூப மன்று. பிராந்திஞானம், ஸம்ஸயஞானம் என்னும் இரண்டும் எல்லோர் மதத்திலும் அவித்தியா விர்த்தியாம். ஸாக்ஷியி னாசிரிதமாம். இதில் ஒரு விவாதமு மில்லை.

விசாரத்தாற் பார்க்கின், ஸ்மிருதி ஞானமும் அவித்தியா விர்த்தியாம்; ஸாக்ஷியி னாசிரிதமாம்; பிரமாரூப மன்றும். எதனு லெனின், வேதாந்த ஸம்பிரதாயத்தை அறிந்தவர்கள் பிரஹ்ம ஞானந்தினை ஆறு பிரகாரமாகக் கூறி யிருக்கின்றனர். அந்த ஆறு பிரகாரத்தில் ஸ்மிருதி ஞான மின்று. ஆதலால், பிரமை யன்று. மதுஸூதந ஸ்வாமிகள், ஸ்மிருதி ஞானம் ஸாக்ஷியாசிரித மென்றே கூறினர்.

199. (1) பிரத்தியக்ஷப் பிரமா, (2) அநுமிதிப் பிரமா, (3) உபமிதிப் பிரமா, (4) சாப்திப் பிரமா, (5) அர்த்தாபத்திப் பிரமா, (6) அபாவப் பிரமா என ஆறு பிரமையாம். பூர்வங் கூறிய பிரத்தியக்ஷாதி ஆறு பிரமாணங்கள் இவற்றிற்குக் கிரமமாகக் கரணங்களாம். பிரத்தியக்ஷப் பிரமையின் கரணம் பிரத்தியக்ஷப் பிரமாண மெனப்படும். அஸாதாரண காரணம் கரண மெனப்படும்; ஸர்வ காரியங்கட்குங் காரணமா யிருப்பது ஸாதாரண காரண மெனப் படும். அது தர்மா தர்ம முதலியன ஸர்வ காரியங்கட்குங் காரணமாகையால் ஸாதாரண காரணமாவதுபோ லென்க. ஸர்வ காரியங்கட்குங் காரண மாகாமல் ஒரு காரியத்திற்கு மட்டுங் கரணமாமேல், அது அஸாதாரண காரண மெனப்படும். அது, தண்டம் ஸர்வ காரியங்கட்குங் காரணமாகாமல் கடாதிகாரிய விசேஷங்களுக்கு மாத்திரங் காரணமாவது போலவாம். ஆதலால், தண்டம்

அஸாதாரண காரண மென்று சொல்லப்பட் டிருக்கின்றது. கடத்திற்குக் கரண மென்றுஞ் சொல்லப்படும்.

அதுபோல, பிரத்தியக்ஷப் பிரமைக்கு ஈஸ்வரனும், அவன திச்சை முதலியனவும் ஸாதாரண காரணங்களாம். எதனு லெனின், ஈஸ்வரன் முதலியன ஸர்வ காரியங்களுக்குங் காரண மாயுள்ளன. அவையின்றி, ஒரு காரியமு முண்டாகின்ற தில்லை. ஆதலால், ஈஸ்வரன் முதலியன ஸாதாரண காரணங்களாம். நேத்திர முதலிய இந்திரியங்கள் பிரத்தியக்ஷப் பிரமையின் அஸாதாரண காரணங்களாம். ஆதலால், நேத்திர முதலிய இந்திரியங்கள், பிரத்தியக்ஷப் பிரமையின் கரணங்களாம். இந்த ரீதியினுல், நேத்திராதி இந்திரியங்கள் பிரத்தியக்ஷப் பிரமாண மென்று சொல்லப்படும்.

### 200. பிரமாதா, பிரமாணம், பிரமிதி, பிரமேய சேதநங்கள்.

வேதாந்த சித்தாந்தத்தில், இந்திரியத்தினை பிரமா ஞானத்திற்குக் காரணத்தன்மையாகச் சொல்லுதல் பொருந்தாது. எதனு லெனின், சேதநத்திற்கு நான்கு பேத முண்டு:—(1) பிரமாதா சேதநம் (2) பிரமாண சேதநம், (3) பிரமிதி சேதநம்; அதனையே பிரமா சேதநம் என்றுஞ் சொல்வர் ; (4) பிரமேய சேதநம்; அதனையே விஷய சேதந மென்றுஞ் சொல்வர். இந்த ரீதியினுல், பிரமா நாமஞ் சேநத்திற்காம். அது நித்தியமாம்; இந்திரிய ஜந்நிய மன்று. ஆதலால், இந்திரிய மதற்குக் காரணமன்று. அங்ஙனமாயினும், சேதநத்தின்கண் பிரமா வியவகாரத்திற்குச் சம்பாதகமாயுள்ள விர்த்தியும் பிரமா வென்று சொல்லப்படுகின்றது. அதற்கு இந்திரியம் கரணமாம்.

தேஹத்தின் மத்தியிலுள்ள அந்தக்கரணத்தால் அவச்சிந்நமான சேதநம் பிரமாதா வெனப்படும். அவ்வந்தக்கரணமே நேத்திர முதலிய இந்திரிய வாயிலாய்ப் புறம்போந்து எவ்வளவு தூரங் கடாதி விஷயங்க ளிருக்குமோ, அவ்வளவு நீண்ட பரிணமம் அந்தக்கரணத்திற் குள தாகாநிற்கும். எதிரிலுள்ள விஷயமாகிய கடாதிகளோடு சேர்ந்து எப்படி கடாதிகளினுகார மிருக்குமோ, அப்படியே அந்தக் கரணத்தின் ஆகாரமுளதாகாநிற்கும். தொட்டியின்கணிரம்பிய ஜலம் சித்திர (துவார) வாயிலாய்ப் புறப்பட்டு நீண்ட கான் (வாய்க்கால்) ஆகாரமாய்த் தோட்டத்தின்

வயலிற் சென்று எப்படி வயலினதாகாரமா யிருக்குமோ, அவ் வாகாரத்தை யெப்படி ஜலமானதடையா நிற்குமோ, அப்படியே அந்தக் கரணமும் இந்திரிய ரூபமாகிய சித்திரவாயிலாய்ப் புறப் பட்டு விஷயரூபமாகிய வயலுக்குப் போகாநிற்கும். ஆண்டுச் சரீ ரந் தொட்டு கடாதிவிஷய பரியந்தம் அந்தக்கரணத்தின் வாய்க் கால்போன்ற பரிணாம மெதுவோ, அதனை விர்த்திஞாந மென் பர். அதனால், அவச்சிந்நமான சேதநத்தினைப் பிரமாண சேதந மென்பர்.

விர்த்திஞாந ரூபமாகிய அந்தக்கரணத்தினது பரிணாமத் தினைப் பிரமாணமா மென்று சொல்லுவர். ஜலமானது வயலிற் சென்று வயலின் சமாநாகாரத்தை யெப்படி யடையாநிற்கின்ற தோ, அப்படியே விர்த்தியானது கடாதியாகிய விஷயங்களிற் சென்று கடாதிகளின் சமாநாகரத்தை யடையாநிற்கின்றது. அதனா லவச்சிந்நமாகிய சேதநம், பிரமா சேதந மெனப்படும்.

ஞாநத்திற்கு விஷயமான கடாதிகளால் அவச்சிந்நமான சேதநம் விஷய சேதந மென்று சொல்லப்படும்; பிரமேய சேதந மென்றுங் கூறுவர். இவை வேதார்த்தங்களை யறிந்துள்ள ஆசாரி யர்களின் பரிபாஷைகளாம்.

## 201. அவச்சேத வாதத்தின் ரீதியாக பிரமாதா ஸாக்ஷிகளோடு விசேஷண உபாதிகளின் லக்ஷணம்.

இதன்கண் இவ்வளவு பேதமாம்:—அவச்சேத வாத மங்கீ கரித்தவரது மதத்தில், அந்தக்கரண விசிஷ்ட சேதநம் பிரமாதா வாம்; அதுவே கர்த்தா போக்தாவாம். அந்தக்கரண உபஹிதம் ஸாக்ஷியாம். ஒரு அந்தக்கரணமே பிரமாதாவிற்கு விசேஷண மாயும், ஸாக்ஷிக்கு உபாதியாயும் இருக்கின்றது. ஸ்வரூபத்தின் கண் எதற்குப் பிரவேசமுண்டோ, அத்தன்மைய வியாவர்த்தக வஸ்து விசேஷண மெனப்படும். வேறு பதார்த்தங்களினின்றும் வேறுபடுத்தி வஸ்துவினது ஸ்வரூபத்தை எது அறிவிக்கின்ற தோ, அது வியாவர்த்தக மெனப்படும். எதனை வேறுபடுத்தி அறிவிக்குமோ, அதனை வியாவர்த்திய மென்பர். எங்ஙனம், "நீலகடமென்னு" மிடத்தில் நீலத்தன்மை கடத்தின் விசேஷண மாம். எதனா லெனின், நீலகடத்தின்கண் நீலத்தன்மைக்குப் பிர வேச மிருக்கின்றது. பொன்மை, வெண்மை முதலியவற்றினின் றும் வேறுபடுத்தி அறிவிக்கின்றது. ஆதலால், வியாவர்த்தகமாம். இந்த ரீதியினால், நீலத்தன்மை கடத்தின் விசேஷணமாம்.

கடம் பரிச்சேத்தியமாம். எதனாலெனின், பொன்மை, வெண்மைமுதலியவற்றினின்றும் வேறுபடுத்தி அறிவிக்கின்றது. வேறாக அறிவிப்பது பரிச்சேத்தியமென்றும், வியாவர்த்தமென்றும், விசேஷமென்றுஞ் சொல்லப்படும். "தண்டி புருஷ" னென்னுமிடத்திலும் தண்டம் புருஷனது விசேஷணமாம். இந்த ரீதியினால், பிரமாதாவிற்கு அந்தக்கரணம் விசேஷணமாம். எதனாலெனின், பிரமாதாவின் ஸ்வரூபத்தின்கண் அந்தக்கரணத்தின் பிரவேச மிருக்கின்றது.

பிரமேய சேதநத்தினின்றும் பிந்நப்படுத்தி பிரமாதாவின் ஸ்வரூபத்தினை அறிவித்தலால் வியாவர்த்தகமாம். எது, வஸ்துவின் ஸ்வரூபத்திற் பிரவேசியாமல் வியாவர்த்தகமாமோ, அது உபாதியென்று சொல்லப்படும்.

எங்ஙனம், நையாயிக மதத்தில், கர்ண ஸஸ்குலியினால் அவச்சிந்நமாகிய ஆகாசம், சுரோத்திரமென்று சொல்லப்படும். ஈண்டுக் கர்ணஸஸ்குலி சுரோத்திரத்திற் குபாதியாம். எதனாலெனின், சுரோத்திரத்தின் ஸ்வரூபத்தின்கண் கர்ணஸஸ்குலி பிரவேசியாமல் வெளியாகாசத்தினும் பிந்நமாகச் சுரோத்திரத்தினை அறிவிக்கின்றது. ஆதலால், வியாவர்த்தகமாம்.

கடாகாசம் மணு (மணங்கு) பரிமாண அந்நத்திற் கவகாசங் கொடாநிற்கின்றது என்னுமிடத்திலும், ஆகாசத்திற்குக் கடம் உபாதியாம். எதனாலெனின், மணு அந்நத்திற்கு அவகாசந் தருகின்ற ஆகாசத்தின் ஸ்வரூபத்தின்கண் கடத்தின் பிரவேசமில்லை. கடம் பிருதிவியின் காரியமாம். அதன்கண் ணவகாசங் கொடுத்தல் பொருந்தாது. ஆதலால், கடத்திற்கு ஸ்வரூபத்தின்கண் பிரவேசம் பொருந்தாது. வியாபகாகாசத்தினும் பிந்நமாக அறிவிக்கின்றது. இதனால், மணு (பரிமாண) அந்நத்திற் கவகாசங் கொடுக்கத் தக்கதாகிய ஆகாசத்திற்குக் கட முபாதியாம்.

அங்ஙனமே, அந்தக்கரண உபஹித சேதநம் ஸாக்ஷியாம். ஈண்டந்தக்கரணம் ஸாக்ஷிக் குபாதியாம். எதனாலெனின், ஸாக்ஷியின் ஸ்வரூபத்தின்கண் அந்தக்கரணத்தின் பிரவேசமில்லை. பிரமேய சேதநத்தினும் ஸாக்ஷியினை வேறுபடுத்தி அறிவிக்கின்றது. ஆதலால், ஒரு அந்தக்கரணமே ஸாக்ஷிக்கு உபாதியும், பிரமாதாவிற்கு விசேஷணமுமாம். இவ்வாற்றால், அந்தக் கரணோபஹித

சேதநம் ஸாக்ஷியாம். அந்தக்கரண விசிஷ்ட சேதநம் பிரமாதா வாம். உபாதி யுடையது உபஹிதமெனப்படும். விசேஷண முடையது விசிஷ்ட மெனப்படும். அந்தக்கரணவிசிஷ்ட பிரமாதாவே கர்த்தா, போக்தா, சுகி, துக்கி, ஸம்ஸாரி, ஜீவனும். இஃதவச்சேத வாதத்தின் ரீதியாம்.

202. ஆபாஸ வாதித்தின் ரீதியாக ஜீவன், ஸாக்ஷி முதலியவற்றின் லக்ஷணம்.

ஆபாஸ வாதத்தில், ஆபாஸ சகித அந்தக்கரணம் ஜீவனுக்கு விசேஷணமாம். ஆபாஸ ஸகித அந்தக்கரணம் ஸாக்ஷிக்கு உபாதியாம். ஆகையால், சாபாச (ஆபாஸத்தோடு கூடிய) அந்தக்கரண விசிஷ்டசேதநம் ஜீவனும். சாபாசாந்தக்கரணோபஹித சேதநம் ஸாக்ஷியாம். இரண்டு பக்ஷத்திலும் விசேஷண சகித சேதநம் ஜீவனும். அதுவே ஸம்ஸாரியாம். அங்ஙனமாயினும், விசேஷிய பாகமான சேதநத்தில் ஜந்ம, மரண முதலிய ஸம்ஸாரம் ஸம்பவிக்கின்ற தில்லை. ஆதலால், விசேஷண மாத்திரத்திற் ஸம்ஸார முளது. அதுவே, விசிஷ்ட சேதநத்தில் பிரதீதியாகாநிற்கின்றது. சில விடத்தில், விசேஷணத்தின் தர்ம வியவகாரம் விசிஷ்டத்தில் உளதாகாநிற்கும். சிலவிடத்தில், விசேஷிய தர்ம வியவகாரம் விசிஷ்டத்தின்கண் ணுளதாகாநிற்கும். சில விடத்தில், விசேஷண, விசேஷ்ய மிரண்டின் தர்ம வியவகாரம் விசிஷ்டத்தின்க ணுளதாகாநிற்கும். எங்ஙனம், தண்டத்தினல் கடாகாசத்திற்கு நாச முளதாயிற் றென்னு மிவ்விடத்தில் விசேஷணமாகிய கடத்திற்குத் தண்டத்தானச முளதாகாநிற்கும். விசேஷ்ய மாகிய ஆகாசத்திற்கு நாசம் பொருந்தாது. ஆயினும், விசிஷ்டமாகிய கடாகாசத்தின் நாசம் பிரதீதியாகின்றது. "குண்டலி புருஷ னுறங்காநின்றன"னென்னுமிடத்தில், குண்டலம் விசேஷணமாம்; புருஷன் விசேஷ்யமாம். விசேஷணமாகிய குண்டலத்தில் உறங்குதல் பொருந்தாது. பின்னையோ, விசேஷ்ய மாகிய புருஷனிடத்தில் உறக்க முளது. "குண்டல விசிஷ்டன் உறங்காநின்றன"னென்று விசிஷ்டத்தின்கண் வியவகார முண்டாகாநின்றது.

"சஸ்திரி (ஆயுத முடைய) புருஷன் யுத்தத்திற்குச் சென்றன" னென்னு மிடத்தில் விசேஷணமான சஸ்திரமும், விசே

ஷ்யமான புருஷனும் யுத்தத்திற்குச் சென்றிருத்தலால், இரண்டி னுடைய தர்மத்தின் வியவகாரம் விசிஷ்டத்தி லுண்டாகின்றது. இவ்விடத்தில், அவச்சேத வாதத்தில் அந்தக்கரணம் விசேஷண மாம். ஆபாஸ வாதத்தில், சாபாசாந்தக்கரணம் விசேஷணமாம். இரண் பக்ஷத்திலும் சேதநம் விசேஷ்யமாம். அதன்கண் ஜந்ம முத ஸம்ஸாரம் பொருந்தாது. பின்னேயோ, விசேஷணமாகிய அந் கரணத்தின், அல்லது, சாபாசாந்தக்கரணத்தின் தர்மமா கிய ஜந்ம முதலிய ஸம்ஸாரத்தின் வியவகாரம் விசிஷ்டத்திற் செய்யப்படுகின்றது. வியவகார மென்பது பிரதீதிக்கும் சொல்லு தலுக்குமாம். இவ்வாற்ருல், ஆபாஸ வாதம் அவச்சேத வாதங் கட்குப்பேத முள.

## 203. ஆபாஸ வாதத்தின் சிரேஷ்டத்தன்மை.

ஆபாஸ வாதத்தில், அந்தக்கரணம் ஆபாஸ ஸகிதமாயும், அவச்சேத வாதத்தில், அந்தக்கரணம் ஆபாஸ ரகிதமாயு மிருக் கின்றது. இரண்டு பக்ஷத்துள், ஆபாஸ வாதம் சிரேஷ்டமாம். எதனு லெனின், பாஷ்யக்காரர் ஆபாஸ வாதம் அங்கீகரித்துளர். அவச்சேத வாதத்தில், வித்தியாரணிய ஸ்வாமிகள், தோஷமுங் கூறியிருக்கின்ருர்கள்:—ஆபாஸ ரகித அந்தக்கரணுவச்சிந்ந சேத நத்தைப் பிரமாதாவாக வொப்பின் கடாவச்சிந்ந சேதநமும் பிர மாதாவாக வேண்டும். எதனு லெனின், எங்ஙனம் அந்தக்கரணம் பூதங்களின் காரியமோ, அங்ஙனமே, கடமும் பூதங்களின் காரிய மாம். எங்ஙனம், அந்தக்கரணம் சேதநத்தின் அவச்சேதக மென்னும் வியாவர்த்தகமோ, அங்ஙனமே, கடமும் சேத நத்தின தவச்சேதகமாம். ஆதலால், அந்தக்கரண விசிஷ் டம் போல, கடவிசிஷ்டமும் பிரமாதாவாகவேண்டும். அந் தக்கரணத்தின்க ணுபாஸத்தை அங்கீகாரஞ்செய்யின், இந் தத் தோஷ மில்லை. எதனு லெனின், அந்தக்கரணம் பூதங் களின் ஸத்துவகுணத்தின் காரியமாம். ஆகையால் ஸ்வச்சமாம். கடாதிகள் பூதங்களின் தமோகுண காரியமாம். ஆகையால் ஸ்வ ச்ச மன்று.யாது ஸ்வச்ச பதார்த்தமாம் அதுவே ஆபாஸத்திற்கு யோக்கியமாகாநிற்கும். மலின பதார்த்தம்ஆபாஸத்திற்கு யோக் கியமாகாது. எங்ஙனம், கண்ணுடியும் அதன் மேன்மூடியும் பிரு துவியின் காரியமாயினும்,கண்ணுடியோ ஸ்வச்சமாம்.அதன்கண், முகத்தின் ஆபாஸ (பிரதிபிம்ப) முண்டாகாநிற்கும். மேன்மூடி ஸ்வச்ச மன்று. ஆதலால், அதன்கண் ஆபாஸ முண்டாகின்ற

தில்லையோ அங்ஙனமே, ஸத்துவகுணத்தின் காரியமாகையால் அந்தக்கரணம் ஸ்வச்சமாம். அதன்கண் சேதநத்தின் ஆபாஸ முண்டாகாநிற்கும். சரீராதியும், கடாதியும் தமோகுணத்தின் காரியமாகையால் ஸ்வச்ச மன்று. அவற்றின்கண் சேதநத்தின் ஆபாஸ முண்டாகாது.

204. அந்தக்கரணத்தில் இருவகைப் பிரகாசங்க ளிருத்தலால் அதுவே பிரமாதாவாம்; வேறன்று எனல்.

இந்த ரீதியினால், அந்தக்கரணத்தின்கண் இருவிதப் பிரகாசங்களுளவாம். ஒன்று வியாபகமாகிய சேதநத்தின் பிரகாசமாம்; மற்றொன் றாபாஸனது பிரகாசமாம். சரீராதிகளிலும், கடாதிகளிலும் ஒரு வியாபக சேதநத்தின் பிரகாசமே யிருக்கின்றது; மற்றோராபாஸப் பிரகாசமில்லை. ஆதலால், இருவிதப் பிரகாச மில்லை. ஆதலால், இருவிதப் பிரகாசத்தோடுகூடிய அந்தக்கரண விசிஷ்ட சேதநமே பிரமாதா வென்று சொல்லப்படும். ஒரு பிரகாசஸஹித கடாதிகளுடன்கூடிய சேதநம் பிரமாதா வன்று. எவருடைய மதத்தில் அந்தக்கரணத்தின்க ணாபாஸ னில்லையோ, அவருடைய மதத்தில் கடாதிகளைப்போல அந்தக்கரணத்திலும் ஆபாஸனுடைய இரண்டாம் பிரகாச மில்லை. வியாபகமாகிய சேதநத்தின் ஒரு பிரகாசம் எது அந்தக்கரணத்தின்கணுண்டோ, அந்த வியாபகமாகிய சேதநத்தின் பிரகாசமே கடாதிகளி லிருக்கின்றது. ஆதலால், அந்தக்கரண விசிஷ்டம்போன்று கடவிசிஷ்ட, அல்லது சரீரவிசிஷ்ட, அல்லது குட்டிய (சுவர்) விசிஷ்ட சேதநமும் பிரமாதாவாக வேண்டும். இந்த ரீதியினால், கடசரீராதிகளினும் அந்தக்கரணத்தின்கண் இவ்விலக்ஷணத் தன்மையே யுளது.

அந்தக்கரணம் ஸத்துவகுணத்தின் காரியமாகையால் ஸ்வச்சமாகின்றது ; ஆதலால், சேதநத்தின் ஆபாசத்தினைக் கிரஹணஞ்செய்ய யோக்கிய முண்டு. மற்றைய பதார்த்தங்கள் ஸ்வச்ச மன்று; ஆகையால், ஆபாஸத்தினைக் கிரகணஞ் செய்ய யோக்கிய மில்லை. ஆபாஸ க்ரஹணத்திற்கு யோக்கியமாகிய அந்தக்கரணத்தோடுகூடிய சேதநமே பிரமாதா வெனப்படும். கடாதிகளும், சரீராதிகளும் ஆபாஸ கிரஹணத்திற்கு யோக்கிய முடையன வல்ல. ஆதலால், அவற்றால் விசிஷ்டமாகிய சேதநம் பிரமாதா வன்று. இந்த ரீதியினால், ஆபாஸ வாதமே உத்தமமாம். அவச்சேத வாதம்(உத்தமம்) அன்று.

205. பிரமாதா முதலிய நான்கு சேதநங்களின் ஸ்வரூபம்.

எங்ஙனம் அந்தக்கரணம் ஆபாஸ சஹிதமோ, அங்ஙனமே அந்தக்கரணத்தின் விருத்தியும்ஆபாஸ சஹிதமாகவே யுண்டாகாநின்றது. சாபாச சஹிதவிர்த்தி விசிஷ்டசேதநம் பிரமாண சேதநமெனப்படும். கடாதி விஷயாகாரமான அந்தக்கரணத்தின் விருத்தியில் ஆரூடமான சேதநத்தினைப் பிரமாவென்றும் யதார்த்தஞாநமென்றுஞ் சொல்லுவர். அதற்குச் சாதநமான இந்திரியம் பிரமாண மெனப்படும். எதனுலெனின், விஷயாகார விருத்திக்கணுரூட சேதநத்தைப் பிரமா வென்கின்றனர் ஆண்டுச் சேதநமானது ஸ்வரூபமாக நித்தியமாம். ஆதலால், இந்திரிய ஜந்யத்தன்மையின் அபாவத்தால் பிரமா சேதநத்தின் சாதநம் இந்திரியமன்று. அங்ஙனமாயினும், நிருபாதிக சேதநத்தின்கண் பிரமா வியவகாரமில்லை. பின்னையோ, விஷயாகார விர்த்தி யுபகிதசேதநத்தின்கண்பிரமா வியவகார முண்டாகாநிற்கின்றது. ஆதலால், சேதநத்தின்கண் பிரமா சப்தப் பிரவிர்த்தியில் விஷயாகார விர்த்தி உபாதியாம். அவ்விஷயாகார விர்த்தி இந்திரிய ஜந்யமாம். இந்திரியம் அதற்குச் சாதநமாம். பிரமாத்தன்மைக் குபாதியாகிய விர்த்தி இந்திரிய ஜந்யமாகையால் உபகிதமாகிய பிரமையும் இந்திரிய ஜந்ய மென்று சொல்லப்படும். இதனுல், இந்திரியம் பிரமைக்குச் சாதந மெனப்படும். ஆயினும், அந்தக்கரணத்தின் பரிணும முழுதும் பிரமை யென்று கூறுவ தில்லை. பின்னையோ, சரீரத்திற் குள்ளிருக்கும் அந்தக்கரணம், விஷயமாகிய கடாதி பரியந்தமான பரிணுமத்தினைப் பிரமாண மென்பர். விஷயத்தோடுகூடி விஷயத்தின் ஸமாநமான அந்தக்கரணத்தின் பரிணுமத்தினைப் பிரமை என்பர். சரீரத்தி னகத்திருக்கும் அந்தக்கரணமுதல் கடாதி விஷய பரியந்தம் அடைந்த அந்தக்கரணத்தின் பரிணுமமே பிரமா ரூபத்தினைத் தரிக்கின்றது. ஆதலால், பிரமைக்குப் பிரமாணரூப அந்தக்கரண விர்த்தியோ டத்தியந்த பேத மில்லை.

இந்த ரீதியால், பாஹ்ய பதார்த்தங்களின் பிரத்தியக்ஷஞாந மெங்கே யுண்டாகின்றதோ அங்கு, அந்தக்கரணத்தின்விர்த்தி புறம் போந்து விஷயமாகிய கடாதிகளின் ஸமாஞகார ரூபத்தைத் தரிக்கின்றது. சரீரத்தி னகத்திருக்கும் ஆத்மாவின் பிரத்தியக்ஷம் உண்டாகுங்கால், அந்தக்கரணத்தின் விர்த்தி வெளி

யிற் செல்வ தில்லை. பின்னேயோ, சரீரத்தி னுள்ளேயே விர்த்தி ஆத்மாகார மாகாநிற்கும். அவ்விர்த்தியினுல் ஆத்மாவி னுசிரித மாகிய ஆவரணம் நீங்காநிற்கும். ஆத்மா தன்னுடைய பிரகாசத் தால் அவ்விர்த்தியின்கண் பிரகாசிக்கின்றது. இக்காரணத்தால், விர்த்தியின் விஷயம் ஆத்மா என்று சொல்லப்பட் டிருக்கின்றது. சிதாபாசரூப விர்த்தியிலுள்ள பலத்தின் விஷயம் ஆத்மா வன்று. இந்தப் பிரகாரத்தால், ஸாக்ஷியாகிய ஆத்மா ஸ்வயம் பிரகாச ரூபமாகப் பாநமாகின்ற தென்று சித்தமாயிற்று.

206. பிரஶ்நம்:—இந்திரிய சம்பந்த மின்றி "நான் பிரஹ்மம்" என்னும் ஞாநம் எங்ஙனம் பிரத்தியக்ஷமாகு மெனல்.

**தத்துவ திருஷ்டி கூறுகின்றன்.**

"பிரஹ்மத்தின் அபரோக்ஷ ஞாநத்தால் சகல அவித்தியா ஜாலமு நாசமாகாநிற்கும். பரோக்ஷ ஞாநத்தாலாகா" தென்று பூர்வஞ் சொல்லப்பட்டது. அதன்கண் சங்கை செய்வோம்:-பிரஹ் மத்தின் ஞாநம் பிரத்தியக்ஷ மாகாது. எதனு லெனின், இந் திரிய ஜந்ய ஞாநம் பிரத்தியக்ஷமாம். பிரஹ்மத்தின் ஞாநம் இந்திரிய ஜந்ய மெனல் பொருந்தாது.

207. பிரஹ்மம் நேத்திரத்திற்கு விஷயமாகாமை.

இராம கிருஷ்ணுதிய சரீரம் பிரஹ்ம மன்றேனல்.

எதனு லெனின், நேத்திரேந்திரியத்தால் ரூபமுடைய தின் (ஞாநம்) அல்லது, நீலாதி உருவங்களின் ஞாந முண்டா கும். இங்ஙனம் பிரஹ்ம மில்லை. ஆதலால், பிரஹ்மத்தின் ஞாநம் நேத்திரேந்திரிய ஜந்ய மெனல் பொருந்தாது. இராம கிருஷ்ணுதிகளின் மனுஷியாகார மூர்த்திகள் ரூபமுடையன வாயினும், அம்மூர்த்திகள் மாயையாற் செய்யப்பட்டனவாய் மித்தையா யிருக்கின்றன. அம்மூர்த்திகள் பிரஹ்ம மல்ல. புரா ணங்களில் இராம கிருஷ்ணுதிகட்குப் பிரஹ்மரூபத்தன்மை கூறப்பட் டிருக்கின்றது. அஃதவர்களின் சரீர ரூபமாகிய மூர்த் திகள் பிரஹ்மரூப மெனு மபிப்பிராயத்தாற் கூறிய தன்று. பின் னேயோ, அவர்களின் சரீரங்களி னதிஷ்டாந சேதநம் பிரஹ்ம மாகு மென்னு மபிப்பிராயத்தாற் கூறியதாம்.

இதில் இச்சங்கை உண்டாகின்றது:—ஸர்வ சரீரங்களின் அதிஷ்டாந சேதநம் பிரஹ்மமாம். ஆதலால், அதிஷ்டாந

சேதந அபிப்பிராயத்தால்இராம கிருஷ்ணாதிகட்குப் பிரஹ்மரூபத்துவங் கூறியிருக்குமாயின், ஸர்வ சரீரங்களின் அதிஷ்டாந சேதநம் பிரஹ்மமாவதால், மநுஷ்ய,பசு, பக்ஷிமுதலிய எல்லாமே பிரஹ்மரூபமாம். இராம கிருஷ்ணாதிகள் அவற்றிற்குச் சமாநமேயாகாநிற்பர். ஆதலால், இராம கிருஷ்ணாதிகளின் அதிஷ்டாந சேதநம் பிரஹ்மமா" மென்னும் அபிப்பிராயத்தால் பிரஹ்மரூபத்துவஞ் சொல்ல வில்லை. பின்னையோ, அவர்களுக்கு மற்ற ஜீவர்களினும் விசேஷ ரூபத்துவஞ் சித்தித்தற் பொருட்டு அவர்களது சரீரமே பிரஹ்மமா மென் றுரைப்ப யோக்கியமாம் (எனின்)

அது பொருந்தாது. எதனு லெனின், சரீரத்தினைப் பாதித்து அவர்களது சரீரங்களைப் பிரஹ்ம ரூபத்துவமாக வொப்பின், ஸர்வ சரீரங்களையும் பாதித்து ஸர்வ சரீரமும் பிரஹ்மரூபமேயாம். பாதஞ்செய்த லின்றியோ அந்ய சரீரங்களைப்போல அஸ்தபாதாதி அவயவத்தோடுகூடிய ரூபமுடையதுங் கிரியையுடையதுமாகிய சரீரத்திற்கு, நிரவயவ, நிரூப, அக்கிரிய பிரஹ்மத்தோடு அபேதம் பொருந்தாது. ஆதலால், இராமகிருஷ்ணாதிகளின் சரீரம் பிரஹ்ம மன்று. ஆயினும், இவ்வளவு பேதமுண்டு:—ஜீவர்களது சரீரம் புண்ய பாபங்களின் அதீநமாம். பூதங்களின் காரியமாம். ஜீவர்கட்கு தேகாதி அனாத்ம பதார்த்தங்களில் அவித்தையின் பலத்தால் அக, மம அத்தியாச முள. ஆசாரியரது உபதேசத்தால் அவ்வத்தியாசத்தின் நிவிர்த்தியுண்டாம். இராம கிருஷ்ணாதிகளின் சரீரம் தமது புண்ய பாவத்தா லுண்டாயின வல. பூதங்களின் காரிய மல்ல.

பின்னையோ, எங்ஙனம் சிருஷ்டியினாதியிற் பிராணிகளுடைய கர்மம், போகங் கொடுக்கின்றதற்கு ஸந்முகமாகும் போது ஆப்த காமனாகிய ஈஸ்வரனிடத்திலும், பிராணிகளுடைய கர்மாநு சாரமாக "நான் ஜகத்துற்பத்தி செய்வே" னென்னும் சங்கற்ப முண்டாகின்றது. அச்சங்கற்பத்தால் ஜகத்துற்பத்தி ரூப சிருஷ்டி யுண்டாகாநின்றதோ, அங்ஙனமே சிருஷ்டிக்குப் பின்னரும் "நான் ஜகத்தைப் பாலனஞ் செய்வே"னென்னும் சங்கற்பம் ஈச்வரனுக்கு முண்டாகின்றது. அச்சங்கற்பத்தால் ஜகத்தின் பாலந முண்டாகின்றது. கர்மாநுஸாரமாக சுக துக்கத்தின் சம்பந்தம் பாலந மெனப்படும். அப்பாலநஞ் சங்கற்பத்தின் மத்தியில் உபாஸக புருஷருடைய உபாஸனையின் பலத்

தால் "இராம கிருஷ்ணாதி நாமஸஹித மூர்த்திகள், எல்லோருக்கும் பிரதீதியாகுக" என்னும் சங்கற்பம் ஈஸ்வரனுக்குண்டாகின்றது. அந்த ஈஸ்வர ஸங்கற்பத்தினால், விசேஷ நாமரூப ரகித ஈசுவரனிடத்தில் இராம கிருஷ்ணாதி நாமங்களும், பீதாம்பரதர முதலிய சியாம, சுந்தர, விக்கிரஹ, ரூபத்தினுற்பத்தியு முண்டாகாநிற்கின்றது. அவ்விக்கிரகம் கர்மத்தி னதீந மன்று. இராம கிருஷ்ணாதி விக்கிரஹத்தால் ஸாதுக்கட்கும், துஷ்டருக்கும் கிரமமாக சுக துக்க முண்டாகாநிற்கும். எது எவன் ஸுக துக்கத்திற்கு ஹேதுவாகாநிற்குமோ, அஃது அவனுடைய புண்ய பாபத்தா லுண்டாக்கப்பட்டதாம். இதனால், புண்ய பாபத்தி னதீந மெனப்படும்.

இந்த ரீதியினால், அவதார சரீரங்கள் ஸாது புருஷர்க்குச் சுகத்திற்கு ஹேதுவாதலால், ஸாது புருஷரின் புண்ய ஸமுதாயத்தா லுண்டாயினவாமோ, அங்ஙனமே அசுராதி அஸாது புருஷர்க்குத் துக்கத்திற்கு ஹேதுவாதலால், அவரது பாபத்தா லுண்டாக்கப்பட்டதாம். ஆதலால், "அவதார சரீரங்கள் புண்ய பாப அதீநமல்ல" வென்று புகலுதல் பொருந்தாது. அங்ஙனமாயினும், ஜீவர்கள் பூர்வ சரீரத்திற் புண்ய பாபகர்மஞ்செய்துளர்; உத்தர சரீரத்தி லவற்றின் பலமாகிய ஸுக துக்கங்க ளவர்க்குண்டாகின்றன. ஆண்டுச் சரீராபிமாநியாகிய ஜீவனுக்குப் பூர்வ சரீரத்தின் தனது புண்ணிய பாபத்தின் அதீநமா யுத்தர சரீர மெப்படிச் சொல்லப்படுகின்றதோ, அப்படி இராம கிருஷ்ணாதிகளின் சரீரம் ஸாது, அஸாது புருடரின் புண்ணிய பாப வதீநமாம். அவர்களது ஸுக துக்கத்திற்கு ஹேதுவாம். ஆயினும், இராம கிருஷ்ணாதிகளின் புண்ணிய பாபத்தா லாக்கப்பட்டதாய் அவதார சரீரமில்லை. அவர்கட்குத் தமது சரீரத்தால் ஸுக, துக்க போக முண்டாகா. ஆதலால், "இராம கிருஷ்ணாதியரின் சரீரம் தமது புண்ய பாபத்தி னதீந மல்ல" வென்பது பொருந்தும்.

அங்ஙனமே, இராம கிருஷ்ணாதி சரீரம் பூதங்களின் பரிணாமமு மல்ல; பின்னையோ, சேதந ஆசிரித மாயையின் பரிணாமமாம். பஞ்சீகிருத பூதங்களின் பரிணாம மாயின். கிருஷ்ண சரீரத்தில் கயிற்றாற் செய்யும் பந்தனாதிகளின் அபாவஞ் சாஸ்திரத்திற் கூறப்பட்டிருக்கின்றது. அஃது அசங்கத மாகாநிற்கும். பஞ்சபூதத்தா லுண்டாக்கப்பட்ட சித்தயோகி சரீரத்தி

லும் பந்தனாதிகள் பொருந்த வில்லை யாயினும், யோகிசரீரத்தில் முதலில் பந்தனாதிகள் பொருந்துகின்றது. பின், யோகாப்பியாஸரூப புருஷார்த்தத்தாற் கட்டுதல் தகித்தலாதிகளின் யோக்கியத்தன்மை நாசமாகின்றது கிருஷ்ணாதிகளின் சரீரத்தின்கண் யோகிகட்குப்போல ஒரு புருஷார்த்தத்தினாலும், பந்தனாதிகளின் அபாவ மில்லை. பின்னையோ, அவர்களது சரீரம் ஸகஜமாகவே பந்தனாதிகட்கு யோக்கிய மல்ல; ஆதலால், பூதங்களின் பரிணாம மல்ல.

மாண்டூக்கிய பாஷ்யத்தின் வியாக்கியாநத்தி லாநந்தகிரி ஸ்வாமிகள் இராமாதி சரீரம் பூதங்களின் பரிணாம மென்றனர். அது ஸ்தூல திருஷ்டியினால் மற்றச் சரீரங்கள்போல அச்சரீரம் பிரதீதியாகின்றது என்னும் அபிப்பிராயத்தாற் கூறியிருக்கின்றார். எதனாலெனின், பாஷ்யக்காரர் கீதாபாஷ்யத்தில் இங்ஙனங் கூறியுளர்:—"ஜீவர்கண்மீ தனுக்கிரஹஞ் செய்து சரீரதாரிகள் போல மாயையின் பலத்தாற் பரமாத்மா கிருஷ்ணரூபமாகப் பிரதீதியாகாநின்றனர். அவர் ஜந்மாதி ரகிதர். அவர்க்கு வசுதேவரின் வழியாய்த் தேவகியின்கணின்று ஜந்மமும் மாயையினால் பிரதீதியாகின்றது" இவ்வாறு பாஷ்யக்காரர் கிருஷ்ண சரீரம் மாயையின் காரிய மென்று கூறியிருக்கின்றார். ஆதலால்,பூதங்களினின்றும் அவதார சரீரங்க ளுற்பத்தியாகின்ற தில்லை; பின்னையோ, அவர்களது சரீரத்தின் உபாதாநகாரணம் ஸாக்ஷாத்(நேரே) மாயையாம்.

மற்ற ஜீவர்கட்குத் தேகாதிகளி லாத்மப் பிராந்தியிருக்கின்றது. இராம கிருஷ்ணாதிகட் கில்லை. எதனாலெனின், ஜீவர்களினுபாதியாகிய அவித்தை, மலிந ஸத்வகுணத்தையுடையது. இராம கிருஷ்ணாதிகளி னுபாதியாகிய மாயை சுத்த ஸத்வகுணத்தையுடையது. ஆதலால், ஜீவர்க்கு அவித்தையாற் செய்யப்பட்ட பிராந்தியும் இராம கிருஷ்ணாதிகட்கு மாயையினாற் செய்யப்பட்ட ஸர்வஞ்ஞத்துவமு மிருக்கின்றன. ஜீவர்கட்கு அஞ்ஞாநத்தாற் செய்யப்பட்ட ஆவரணமும் பிராந்தியு நாசமாகு நிமித்தம், ஆசாரியர்வாயிலாய் மகாவாக்கியோப தேசஜந்ய ஞாநாபேக்ஷை யிருக்கின்றது. அங்ஙனமே, இராம கிருஷ்ணாதிகட்கு ஆவரணமும் பிராந்தியு மில்லை. ஆகையால் உபதேச, ஜந்ய ஞாநாபேக்ஷை யில்லை. பின்னையோ, ஜீவனுக்கு அந்தக்கரண விர்த்தி ரூப

ஞானத்தைப்போல ஈஸ்வரனுக்கு மாயாவிர்த்திரூப ஆத்மஞானம் உபதேசாதிகளின்றியு முண்டாகின்றது. ஆயினும், அந்த ஞானத்தால் எவ்வித பிரயோஜநமும் அவர்க்குச் சித்திக்கின்ற தில்லை. எதனு லெனின், ஜீவர்க்குக் கடாதிஞானத்தால் ஆவரண பங்கமும் விஷயமாகிய கடாதிகளினது பிரகாசமு முண்டாகும். மற்றும் பிரஹ்மரூபமாக ஆத்ம ஞானமானது ஜீவர்க் குண்டாகாநிற்கும். ஆண்டு ஞானத்திற்கு விஷயமாகிய ஆத்மாவின் ஆவரண நாசமானது ஞானத்தினு லுண்டாகும்; ஆத்மாவாகிய விஷயம் ஸ்வயம் பிரகாசமாம். ஆகையா லாத்ம ஞானத்தால் விஷயத்தின் பிரகாசம் உண்டாகின்ற திற்லை. அப்படியே, ஈஸ்வரனுக்கு மாயா விர்த்தி ரூபமாகிய "அஹம் பிரஹ்மாஸ்மி" யென்னும் ஞானத்திற்கு விஷயமாகிய ஈஸ்வரனுடைய ஆத்மா ஆவரண ரகித ஸ்வயம்பிரகாச மாகையா லாவரண பங்கமும், விஷயத்தினது பிரகாசமும், ஈஸ்வரனது ஞானத்திற்குப் பிரயோஜந மன்று.

ஜீவன் முத்தனுகிய வித்துவானுக்கு நிராவரணமாகிய ஆத்மாவை விஷயம் செய்வதாயுள்ள அந்தக்கரணத்தின் "அஹம் பிரஹ்மாஸ்மி" யென்னும் விர்த்தி ஆவரணபங்க முதலிய பிரயோஜந மின்றியதாக எங்ஙனம் உண்டாகின்றதோ, அங்ஙனமே, ஈஸ்வரனுக்கு மாவரண பங்கமுதலிய பிரயோஜந மின்றிய மாயா விர்த்திரூபமாகிய "அஹம் பிரஹ்மாஸ்மி" யென்னும் ஞானம் உபதேசாதிக ளின்றி உண்டாகின்றது. இந்த ரீதியினுல், இராம கிருஷ்ணுதிகட்கு ஜீவர்களினும் விலக்ஷணத்தன்மையாகிய ஈஸ்வரத்தன்மை யிருக்கினும், அவரது சரீரம் மாயையினுற் செய்யப்பட்டதாம். ஆதலால், பிரஹ்ம மல்ல. பின்னேயோ, மித்தையாம். மாயையினு லுற்பத்தி பண்ணப்பட்ட அவதார சரீரங்க ளஸ்த பாதாதி அவயவஸஹிதமாயும்,ரூபஸஹிதமாயுஞ்செய்யப்பட்டிருக்கின்றன. ஆதலால், அவர்களது சரீரம் நேத்திரேந்திரியத்திற்கு விஷயமாகாநிற்கும். பிரஹ்மத்தை நேத்திரேந்திரியம் விஷயம் செய்கின்ற தில்லை.

208. பிரஹ்மம் துவக்கிந்திரியத்திற்கு விஷயமாகாமை.

அப்படியே, துவக்கேந்திரியமும் ஸ்பரிசத்தையும், ஸ்பரிசாசிரியத்தையும் விஷயஞ் செய்கின்றது. பிரஹ்மம் ஸ்பரிசாசிரியமும், ஸ்பரிசமு மல்ல; ஆகையாற் றுவக்கிந்திரியத்திற்கு விஷய மல்ல.

## 209. பிரஹ்மம், ரஸனை, கிராணம் சுரோத்ரேந்திரியங்கட்கு விஷயமாகாமை.

ரஸநேந்திரியத்தால் ரஸ ஞாநமும், கிராணத்தாற் கந்தஞாநமும், சுரோத்திரத்தாற் சப்த ஞாநமு முண்டாம். ரஸ கந்த சப்தத்தினும் பிரஹ்மம் விலக்ஷணமாதலால், ரஸனை கிராண சுரோத்திரங்களால் பிரஹ்மத்தின் ஞாந முண்டாகின்ற தில்லை.

## 210. பிரஹ்மம் கர்மேந்திரியங்கட்கு விஷயமாகாமை.

கர்மேந்திரியம் ஞாநத்திற்குச் சாதநமன்று. பின்னையோ, வசநாதிக்கிரியையின் ஸாதநமாம். ஆதலால், அவற்றால் எதன் ஞாநமு முளதாகாது. இந்த ரீதியினால், எவ்விந்திரியங்களாலும் பிரஹ்மத்தின் ஞாநம் பொருந்தாது. இந்திரியங்களால் உண்டாகும் ஞாநம் பிரத்தியக்ஷ மெனப்படும். பிரத்தியக்ஷத்தினையே அபரோக்ஷ மென்பர். ஆதலால், பிரஹ்மத்தின் அபரோக்ஷ ஞாநம் பொருந்தாது. பின்னையோ, சப்தத்தாற் பிரஹ்ம ஞாந முண்டாகாநிற்கும். சப்தத்தால் உண்டாகும் ஞாநம் பரோக்ஷமாகாநிற்கும். ஆதலால், பிரஹ்மஞாநமும் பரோக்ஷமேயாகின்றது.

## 206-210-லுள்ள பிரஸ்நங்களின் உத்தரம்.

## 211. இந்திரிய சம்பந்த மின்றிப் பிரத்தியக்ஷ ஞாநம் உண்டாகா தென்பது நியமமன்று.

### ஸுக துக்கங்கள் ஸாக்ஷி பாஸியமாம் எனல்.

### ஸ்ரீ குரு கூறுகின்றார்.

இந்திரிய சம்பந்த மின்றிப் பிரத்தியக்ஷ ஞாந முண்டாகா தென்னும் நியமமில்லை; எதனாலெனின், ஸுக துக்க ஞாநம் எந்த இந்திரியங்களாலு முண்டாகவில்லை. அச்சுகதுக்க ஞாநமும்பிரத்தியக்ஷ மாகாநின்றது. ஆதலால், இந்திரிய ஸம்பந்தத்தால் உண்டாகும் ஞாநமே பிரத்தியக்ஷ ஞாநமா மென்பது நியம மல்ல. பின்னையோ, விஷயத்தோடு விர்த்திக்குச் சம்பந்தமுண்டாய் விஷயாகாரவிர்த்தி யாண்டு யுண்டாமோ, ஆண்டுப் பிரத்தியக்ஷ ஞாந மென்று கூறப்படும். அந்த விஷயத்தோடு விர்த்தியின் சம்பந்தம் சிலவிடத்தி லிந்திரிய வாயிலாய் உண்டாகின்றது; சிலவிடத்திற் சப்தத்தா லுண்டாகின்றது. "தசமன் நீ" என்னும் சப்தத்தால் தசமனாகிய தன்னோ டந்தக்கரண விர்த்திக்குச் சம்பந்தமுண்டாய் தசமாகாரவிர்த்தி யுண்டாகின்றது. ஆதலால், சப்தஜந்யமாயினும், தசமனது ஞாந மெப்படிப் பிரத்தியக்ஷ மாகின்ற

தோ அப்படியே பிரமாதாவின்கண் சுகதுக்க முண்டாகும்போது ஸுகாகார, துக்காகார அந்தக்கரணவிர்த்தி யுண்டாகும். அந்த விர்த்தியோடு ஸுக துக்கத்திற்குச் சம்பந்த முண்டாகாநிற்கும். ஆதலால், ஸுக துக்க ஞாநம் பிரதியக்ஷ மென்று சொல்லப் படும். பூர்வம் உற்பந்நமான ஸுகதுக்கம் நஷ்டமானபின் எங் குப் புருஷனுக்கு ஞாபகம் வருகின்றதோ, அங்கு ஸுகாகார துக்காகார அந்தக்கரண விர்த்தி யுண்டாகின்றதாயினும், விர்த் திக்கு நஷ்டமான ஸுக துக்கங்களோடு சம்பந்த மில்லை. ஆத லால், அந்த ஞாநம் ஸ்மிருதி ரூபமாம்; பிரத்தியக்ஷ ரூப மன்று. அந்தக்கரணத்தின் தர்மமாகிய ஸுக துக்கங்கள், ஸாக்ஷி பாஸியமாமாயினும், சுகாகார துக்காகார அந்தக்கரண விர்த்தி வாயிலாய், ஸாக்ஷி ஸுக துக்கங்களைப் பிரகாசஞ் செய்கின்றது. ஸாக்ஷிபாஸிய பதார்த்தத்தினையும், சாக்ஷி விருத்தியி னபே க்ஷையினாலேயே பிரகாசிக்கின்றது. எங்ஙனம்:—சுக்தி ரஜதம் ஸாக்ஷிபாஸியமாம். அங்கு அவித்தியா விர்த்தியின் அபேக்ஷையி னால் ஸாக்ஷி ரஜதத்தைப் பிரகாசிக்கின்றது. ஆயினும் ஸுக துக்கப் பிரகாசத்தில் அந்தக்கரணத்தின் விர்த்தி ஸாக்ஷிக்குச் சகாயமாம். மித்தியா ரஜதாதிகளின் பிரகாசத்தில் அவித்தியா விர்த்தி சகாயமாம்.

இந்த ரீதியினால், சாக்ஷிபாஸிய பதார்த்தத்தின் ஞாநத்திலும் விர்த்தியி னபேக்ஷை யிருக்கின்றது. அந்த விர்த்தி யெங்கு இந்தி ரிய முதலிய பாஹ்ய சாதநங்களா லுண்டாகின்றதோ, (அங்கு) அதனது விஷயம் ஸாக்ஷிபாஸியம் அன்றெனப்படும். ஸுக துக் கங்களை விஷயஞ் செய்வதாயுள்ள விர்த்தியில் பாஹ்ய இந்திரிய முதலியன ஹேது வல்ல. பின்னையோ, எப்போது ஸுக முதலியன உற்பந்நமாமோ, அந்தக்காலத்தி லந்நிய ஸாதநங்களின் அபேக்ஷை யின்றி ஸுகாகார துக்காகார அந்தக்கரண விர்த்தி யுண்டாகின்றது. அவ்விர்த்திக்க ளாரூடமாகிய ஸாக்ஷி சுகதுக்கங் களைப் பிரகாசிக்கின்றது. இதனால், ஸுக துக்கங்கள் ஸாக்ஷி பாஸிய மென்று சொல்லப்படுகின்றன.

212. பிரஹ்மத்தின் ஞாநம் பிரத்தியக்ஷமாதல் கூடும். தத்துவ திருஷ்டியின் பேதப் பிராந்தியின் முடிவு.

பாஹ்யமாகிய கடாதிகளோடு அந்தக்கரணவிர்த்தியின் சம் பந்தம் நேத்திராதி இந்திரியவாயிலாய் உண்டாகின்றது. ஆத

லால், கடமுதலியன ஸாக்ஷிபாஸ்யமல்ல. அப்படியே பிரஹ்மாகார அந்தக்கரணவிர்த்தி யுண்டாகாநின்றது. அவ்வந்தக்கரணவிர்த்தி புறம்பே செல்லாது. பின்னையோ, சரீரத்தினுள்ளேயே யுண்டாகாநிற்கும். அவ்விருத்தியோடு பிரஹ்மத்திற்குச் சம்பந்தமிருக்கின்றது. ஆதலால், பிரஹ்ம ஞாநமும் ஸுக துக்க ஞாநம் போலப் பிரத்தியக்ஷ ரூபமாம். ஆயினும், ஸுகாகார துக்காகார விர்த்தியில் பாஹ்ய ஸாதநத்தின் அபேக்ஷை யில்லை. ஆதலால், ஸுக துக்கங்கள் ஸாக்ஷிபாஸ்யமாம். பிரஹ்மாகார அந்தக்கரண விர்த்தியில் குருவாயிலாய் (கேட்கப்பட்ட) வேதவசநத்திற்குச் சுரோத்திரத்தோடு ஸம்பந்தமாகிய பாஹ்ய ஸாதநம் வேண்டியிருக்கின்றது. ஆதலால், பிரஹ்மம் ஸாக்ஷிபாஸ்ய மன்று. இந்த ரீதியினால், எங்கு விஷயத்தோடு விர்த்திக்குச் சம்பந்த முண்டாமோ, அங்குப் பிரத்தியக்ஷ ஞாந மென்று சொல்லப்படும். "அஹம் பிரஹ்மாஸ்மி" யென்னும் விர்த்திக்கு விஷயமாகிய பிரஹ்மத்தோடு சம்பந்த முண்டாதலால் பிரஹ்மஞாநம் பிரத்தியக்ஷமாதல் கூடும்.

யாண்டு தூமத்தைப் பார்த் தக்நியின் ஞாந முண்டாகின்றதோ ஆண்டு தூமத்தின் ஞாநம் பிரத்தியக்ஷமாம். அக்நியின் ஞாநம் பிரத்தியக்ஷ மன்று. எதனா லெனின், நேத்திரவாயிலாய் அந்தக்கரண விர்த்திக்குத் தூமத்தோடு ஸம்பந்த முண்டாதலால், தூமத்தின் ஞாநம் பிரத்தியக்ஷ மெனப்படும். அநுமாநத்தால் அந்தக்கரணவிர்த்தி சரீரத்தினுள்ளே அக்நியாகாரத்தைக் கிரகணஞ் செய்வதா யுண்டாயிற்று. ஆயினும், அக்நியோடு விர்த்திக்குச் சம்பந்த மில்லை யாதலால், அக்நியின் ஞாநம் பிரத்தியக்ஷ மன்று. இந்த ரீதியினால், எங்கு விர்த்தியோடு விஷயத்திற்குச் சம்பந்த முண்டாமோ, அங்குப் பிரத்தியக்ஷ ஞாந மென்று சொல்லப்படும். எங்கு விர்த்தியோடு விஷயத்திற்குச் சம்பந்த முண்டாக வில்லையோ, விஷயமானது வெளியில் தூரத்திலாவது, அல்லது, பூத (சென்ற) அல்லது, பௌஷ்யத் (வருகின்ற) தாமோ, அநுமாநத்தால், அல்லது, சப்தத்தால் விஷயாகார விர்த்தி யுள்ளே யுண்டாமோ, அந்த ஞாநம் பரோக்ஷ ஞாந மென்று சொல்லப்படும். இந்திரிய ஜந்ய ஞாநமே பிரத்தியக்ஷமா மென்பது நியம மில்லை. எப்படி ஸுகதுக்க ஞாநம் இந்திரிய ஜந்யமல்ல; பிரத்தியக்ஷமாம், அப்படியே தசம புருஷனது ஞாநம் சப்த ஜந்யமாயினும் பிரத்தி

யக்ஷ மாகாநின்றது. இந்த ரீதியால், குருவாயிலாய்ச் சிரவணஞ் செய்த மகாவாக்கிய ரூப வேத சப்தத்தினின்றும் உற்பந்நமாகிய பிரஹ்ம ஞாநமும் பிரத்தியக்ஷமாகவே பொருந்துகின்றது.

குருவின் இத்தன்மைய உபதேசத்தினை அறிவுள்ள தத்துவ திருஷ்டி யென்னுஞ் சிஷ்யன் கேட்டு ஆத்மாவினைப் பிரஹ்ம ரூபமாக ஸாக்ஷாத்கரித்துப் பேதப் பிராந்தியினை நாசஞ் செய்தனன்.

† உயர்வுடைப் பிரமநா னெனும்வி ருத்தியில்
அயர்தரு மறைப்ப தன்றியே பாநமாம்
நயமுறு மிதனைநற் ருது வென்னுமோர்
உயர்முதற் பொருளின்யா முணர்ந்து கொண்டனம்.

உத்தமாதிகாரி உபதேச நிரூபண மென்னும் நாம முள்ள

நான்காந்தரங்கம் முற்றிற்று.

ஸ்ரீ கிருஷ்ணார்ப்பண மஸ்து.





† "நான் பிரஹ்மம்" என்னும் விர்த்தியில் ஆவரண மின்றிய விளக்க முண்டாகின்றது. இதனைத் தாது வென்னும் ஆதி ரூபத்தினின்று யாம் அறிந்துகொண்டோம்.

ஸ்ரீ கணேசாய நம:.

ஸ்ரீ நடேசாய நம:.

# விசாரசாகரம்.

## ஐந்தாந் தரங்கம்.

---

முகுந்த னான்முக னுருத்திரன் முதலெனைத் துயிரால்
உகந்த மெய்ப்பர வின்பமா தலினொரு பொருள்வை
உகந்த தேசிக னெனவுல குரைக்குமொண் சுடரை
அகந்தை தீர்தர வகத்துவந் தஞ்சலி செய்வாம்.

### ஸ்ரீ குரு வேதாதி வியாவகாரிகப் பிரதிபாதந மத்தியமாதிகாரி ஸாதந நிரூபணம்.

**213. அதிருஷ்டியின் பிரஶ்நம்:—வேதமும் குருவும் ஸத்தியமாக அல்லது, மித்தையாக இருவகையாலும் வேதத்தினாலும், குருவினாலும் அத்வைத ஞாநம் பொருந்தாதெனல்.**

பூர்வ தரங்கத்தில் "குருமுக வாயிலாய்ச் சிரவணஞ்செய்த வேதவாக்கியத்தினால் அத்வைதப் பிரஹ்மத்தின் ஸாக்ஷாத்கார முண்டாகு" மென்று கூறியதைக் கேட்டு அதிருஷ்டியெனும் பெயரினையுடைய இரண்டாவது சிஷ்யன் சங்கிக்கின்றான்:—வேதமும், குருவுஞ் சத்தியமாமாயின், அத்வைதத்திற்கு ஹாநியாம்; த்வைதம் சித்திக்கும். அஸத்தியமாயின், அவற்றால், புருஷார்த்தப் பிராப்தி பொருந்தாது; ஸம்ஸார துக்கமும் நாசமாகாது. அது மித்தையான கானல் ஜலத்தினால் தாகசாந்தி யாகாதது போலவாம். இவ்வாறு இரண்டு விதங்களாலும் அத்வைத ஞாநம் பொருந்தாது. இவ்வாற்றால், சங்கராசாரியருடைய மதத்திலுள்ள அசுத்தத்தினை யறிந்து மிகவு மறிவுடையவர்களான மத்வர் முதலியோர் தியாகஞ் செய்திருக்கின்றனர். பகவானே! இந்தச் சங்கை எனக்குண்டாயிருக்கின்றது. இதற்குத்தரம் முனிவுறாமல் தயை செய்து கூறவேண்டும்.

சென்ற பிரஶ்நத்தின் உத்தரம்.

## 214. சங்கரமதத்தின் பிரமாணத்தன்மை.

(என்று விண்ணப்பஞ் செய்த) சிஷ்யனது வார்த்தையினைக் கேட்டுக் குரு சொல்லுகின்றார். சங்கரமதமே பரமப் பிரமாணம்; மற்ற மத்துவர் முதலியோருடைய மதங்கள் வேத விருத்தமாகையால் அப்பிரமாணமாம். சங்கர மதமே பிரமாணமென்பதில் வியாஸ வசநத்தினைக்கேள். "கலியில், வேதத்தினர்த்தத்தை எப்போது பலவிதமாய்ச் செய்வார்களோ, அப்போது பரமசிவன் ஸ்ரீ சங்கரரூபமாக அவதரித்து பிரபுவாகிய பத்திரிநாத மூர்த்தியை தேவநதியிலிருந்தும் வெளிப்படுத்தி (தன்னுடைய ஸ்தானத்தில்) ஸ்தாபிப்பர். ஜயிந புத்தமதங்களை நிர்மூலமாக்குவர். சூர்யப்பிரகாசத்தினால் ஜகத்திலுள்ள அந்தகாரம் நீங்கிச் சகல வஸ்துக்களும் யதார்த்தமாக விளங்குவனபோல ஸம்ஶயங்களும் விபரீதங்களும் நாசமாகின்றன. ஸ்ரீ சங்கரவியாக்யானம் வேதார்த்தத்திலுள்ள அஞ்ஞாநத்தினை நாசஞ் செய்து, ஸம்சயப் பிராந்திகளை நாசஞ்செய்து, யதார்த்த உபதேசஞ் செய்யும். வேதார்த்தத்தினை வேறுவிதமாய்ச் செய்தவர்கள் மூடர்களே. வீண் பரிசிரமப் பட்டார்கள்." என்று வியாஸ பகவான் புராணத்திற் கூறியிருக்கின்றனர். இவ் வியாஸ வசநத்தினால் ஸ்ரீ சங்கராசாரியருடைய மதமே பிரமாணம்; மத்துவர் முதலியோர் பேத மதம் அப்பிரமாணமாம்.

## 215. பேதவாதத்தின் அப்பிரமாணத் தன்மை.

எல்லாவற்றிற்கும் தாத்பர்யம் இதுவாம் :—எப்போது "கலியில், வேதத்தினர்த்தத்தினை நாநாவிபரீதங்களாகச் செய்வார்களோ, அப்பொழுது கிருபாலுவாகிய சிவன் ஸ்ரீ சங்கரரெனும் நாமந்தரித்து அவதாரஞ்செய்து பத்திரிநாத மூர்த்தியைத் தேவநதிமத்தியினின்று முத்தாரஞ்செய்து தனது ஸ்தாநத்தில் ஸ்தாபநமும், ஜைந பௌத்தமதகண்டநமும் வேதத்தின் யதார்த்தவியாக்கியானமும் செய்வர்" என்று வியாஸபகவான் புராணத்திற் கூறியிருக்கின்றனர். இவ்வியாஸவசநத்தினால், ஸ்ரீ சங்காராசாரியருடைய மதமே பிரமாணமாம் ; மத்துவர் முதலியோர் பேதமதம் அப்பிரமாணமாம்.

வேறு பிரமாணஞ் சொல்லுகின்றேன் கேள். உபநிஷத், கீதை, சூத்திரம் என்னும் மூன்றும் வேதாந்தத்தின் பிரஸ்

தாநங்களாம். அவற்றிற்கு மத்துவர் முதலியோர் ஒருவா றிழுத்துத் தத்தம் மதாநுஸாரமாக வியாக்கியாநஞ் செய்தனராயி னும், வியாஸவசநத்தினுல் ஸ்ரீ சங்கரரியற்றிய வியாக்கியாநமே யதார்த்தமாம். ஆதிகவியாகிய சர்வஞ்ஞ வால்மீக ரிஷியென்பவர் உத்தர ராமாயணமாகிய வாசிட்டமென்னும் நாமமுள்ள கிரந்தஞ் செய்திருக்கின்றனர். அதன்கண் அத்வைத மதத்தில் பிரதாநமாகிய திருஷ்டி சிருஷ்டி வாதத்தினை அநேக இதிகாசங்களினுல் பிரதிபாதநஞ் செய்திருக்கின்றுர். ஆதலால், வான்மீகி வசனுநுசாரமாகிய அத்வைதமதமே பிரமாணமாம். வான்மீகி வசநத்திற்கு விருத்தமாகிய பேதமதம் அப்பிரமாணமாம்.

இவ்வாறு, சர்வஞ்ஞ ரிஷி, முநிகளின் வசந விரோதத்தினுல் பேதவாதம் அப்பிரமாணமென்று கூறப்பட்டது. யுக்தியினுலும் பேதவாதம் விருத்தமாம். இது கண்டநாதி கிரந்தங்களில் ஸ்ரீ ஹர்ஷர் முதலியோரால் பிரதிபாதநஞ் செய்யப்பட்டிருக்கின்றது. யுக்தி கடிநமாகையால் பேத மத கண்டநத்தின் யுக்தி எழுத வில்லை.

## 216. பேதவாத திரஸ்காரம்.

ரிஷி, முநிகளின் வசநத்தோடு விருத்தமாகிய பேத மதத்தில் ஜைந மதம்போல் அப்பிரமாணத்தன்மை நிச்சயமுண்டானுல் ஆஸ்திக அதிகாரிகட்கு யுக்தியினுற் கண்டநத்தின் அபேக்ஷையுண்டாவ தில்லையென்று சொல்லப்படுகின்றது. ஸ்ரீ ஹர்ஷரால் செய்யப்பட்டிருக்கின்ற கண்டந கிரந்தத்தில் பேதத்தின் கண்டநமும், அத்வைத மண்டநமும் வெகு விஸ்தாரமாகக் கூறப்பட்டிருக்கின்றன. பேதவாதம் யுக்தியோடுகூடிய தன்றும். பேத திக்காரமென்னு கிரந்தத்தில் கூறப்பட்ட பேத கண்டநத்தின் மார்க்கங்களுனக்கு மிகவுங் கடிநமாய் அறிதற்கரிய தர்க்கங்களாகையா லுன்னுடைய புத்தியதி னுழையாது. ஆதலால், பேதத்தினையே கண்டநஞ் செய்திருக்கின்ற யுக்திகளை உன்னிடத்தில் யாம் கூற வில்லை. பேத மதம் அப்பிரமாணமென்று எப்பொழுது அறியப்படுகின்றதோ அப்பொழுது அதன் கண்டநத்தில் யுக்தி விரும்பத்தக்க தில்லை.

வேத வசநத்தினுலும் பேத மதம் விருத்தமா மென்று சொல்லுகின்றேன். பேதப் பிரதீதியானது மகாதுக்கத்தைத் தருகின்றது.

சிஷ்யனே! இது கடவல்லி உபநிஷத்தில் யமனுல் கூறப்பட்டிருக்கின்றது. ஆதலால், பேதவாதத்தைச் சித்தத்தினின்றுந் தியாகஞ்செய்து, அத்வைத வாதத்தையே ஆதரஞ்செய்தி. "எவன் இங்கு நாநாவைப்போன்று பார்க்கின்றனனே அவன் மிருத்தியுவினின்றும் மிருத்தியுவினை யடைகின்ருன். எவன் இரண்டாவதனைப் புத்தியிற் றரிக்கின்றனன் அவனுக்குப் பயமுண்டாகின்றதென்று வேதம் கூறுகின்றது. தன்னினும் அறியத்தக்கது தியானிக்கத்தக்கது என்று வேறென்றை யறியில் அவன், தேவதைகளின் பசுவென" வேதம் முரசறைகின்றது.

சிஷ்யனே! ஆதலால், அதிக துக்கத்தினைக் கொடுக்கும் மத்துவர் முதலியோரது வசநங்களைக் கேட்டவுடன் மறந்துவிடுக. த்வைத வசநம் உனது இருதயத்தின்கண் எதுபரியந்தமிருக்குமோ அது பரியந்தஞ் ஸாக்ஷாத் அத்வைத நிச்சயமுண்டாகாது.

### இராஜா மந்திரி பர்ச்சுக்களின் கதை.

### 217. பர்ச்சு தபஸ்வியாதல்.

த்வைத வசநத்தின் ஸ்மரண முண்டாயின், அது ஸாக்ஷாத்காரத்தினைக் கெடுக்கும். பூர்வ ஸ்மிருதி ஸாக்ஷாத்காரத்தினைக் கெடுக்கும் என்பதனை விளக்கும் ஒரு கதையை உனக்குச் சொல்லுகிறேன் கேட்பாயாக.

ஓரரசனுக்குப் பர்ச்சுவென்னு மொரு மந்திரி இருந்தான். இராஜ்ய காரியங்கள் முழுதையும் அவன் தனது அதீநமாய் வைத்திருந்தான். ஏனைய மந்திரிகளைத் தனது ஏவலில் வைத்திருந்தான். அதனுல் அவர்கள் பொருமை யடைந்தார்கள்; பர்ச்சுவினிடத்தில் அரசனுக்குப் பிரிய மிருப்பதை யறிந்து அவனுக்கு ஒருதீங்கும் செய்யமுடிய வில்லை. அப்போது எல்லோருமொன்றுசேர்ந் திந்த உபாயத்தைச் செய்தார்கள்:—திருடர்களைக் கொண்டு கலகம் விளைவித்தார்கள். அதனை யரசன் கேட்டு, மற்ற மந்திரிகளை வரவழைத்துச் சபைகூட்டி அவர்களைப் பார்த்து நீங்கள் சீக்கிரம் சென்று திருடர்களால் நமது தேசத்திலுண்டாகாநின்ற கலஹத்தை யடக்கி வாருங்க ளென்று ஆக்ஞாபித்தனன். அப்போ தவர்க ளனைவருஞ் சேர்ந்து அரசனைப் பார்த்து, அரசனே! எப்போதும் பர்ச்சு ஒருவனையே நீங்கள் கொண்டாடுகின்றீர்கள்; மரணத்தின்பொருட்டு இப்போது எங்களை யனுப்ப வெண்ணுகின்றீர்; பர்ச்சுவை யோரிடத்திற்குமே

யனுப்புகின்றீர்களில்லை யென்று சொன்னூர்கள். அப்போது பர்ச்சு கை கூப்பிக்கொண்டு, மஹாராஜாவே! எனது விண்ணப்பத்தினைக் கேட்பீராக. எனக்கு உமது ஆஞ்ஞை யுண்டாயின் நானே சென்று எல்லாத் திருடர்களையும் கொல்லுகின்றேன் என்ருன். அப்போது பர்ச்சுவைப் பார்த்து, அரசன் நீ "சென்று அக்காரியத்தினை நிர்வகித்துக்கொள்" என்று உத்தரவளித்தனன். அந்தப் பர்ச்சுவானவன் சென்று, திருடர்களை யடித்துத் துரத்தி வைசியர், உழவர் முதலியோர்கட்கு ஸுகத்தைச் செய்தனன். பர்ச்சுவின் ஜயத்தை யெப்போ தனைவருங் கேட்டனரோ, அப்போதே அரசனிடத்திற் சென்று பர்ச்சுவானவன் காரியத்தினை நிர்வகிக்காம லிறந்து போயினு னென்று சொன்னூர்கள். இவர்களின் மித்தியாவசநத்தை அரசன் கேட்டுச் சிறிய மந்திரிகளுள் ஒருவனைப் பிரதாந மந்திரியாக நியமித்து (அவனுக்குக்) குடை, சிவிகை, சாமர முதலியவற்றைக் கொடுத்தனன். அன்னேன் அரசன் பர்ச்சுவை ஸ்வப்நத்திலுங்கேட்காவகைக் காவல் செய்தனன். அப்போது பர்ச்சுவானவன் இந்தச் சகல விருத்தாந்தங்களையுங் கேட்டு அரசனிடத்தில் நம்மைச் செல்லவிடார்கள், சென்றேமாயின், வாயிலிற்போனல் பிராணனை யொழித்து விடுவார்கள் என்றெண்ணித் தபோவேடந்தரித்து விசாரஞ் செய்கின்ருன்:— இது பரியந்தஞ் சகல பதார்த்தங்களையும் அநுபவித்தேன். தேகேந்திரியங்கள் ரோக மின்றியதா யிருந்தன; ஸ்திரீகளை வர்ணிக்கின் நான்கு நாற்கால், நான்கு புஷ்பம், நான்கு பழம், நான்கு பக்ஷி என்பவற்றல் உவமிக்கப்படும் மநத்திற்கு மோஹத்தைக் கொடுக்கும் ஸ்திரீகளோடு கூடி யிருந்தேன்.

## 218. ஸ்திரீயின் நிந்தை.

நான்கு நாற்கால்கள்.

யானையின் துதிக்கை போன்றது தொடை, மான் குளப்படி போன்றது யோனி, ஸிம்ஹத்தைப் போன்றது இடை, சலிக்கும் குதிரையைப் போன்றது கண்கள் என்று காவ்யக் கிரந்தத்தில் குசலர்களால் வர்ணிக்கப்பட் டிருக்கின்றன.

நான்கு புஷ்பங்கள்.

கமலம்போன்றது முகம், அலசிப் புஷ்பம்போன்றது தாடை, எள்ளின் மலர் போன்றது நாசி, சண்பகம் போன்றது சரீர ரூபம் என்று கவிகள் கூறுவர்.

நான்கு பழங்கள்.

கொவ்வைக் கனிபோன்றது அதரம்; மாதுளை போன்றது பற்கள்; வில்வப்பழம் போன்றது ஸ்தநங்கள்; கோஹரமென்னும் பழத்தைப் போன்றது குதி என்பர்.

நான்கு பக்ஷிகள்.

ஹம்ஸம்போன்ற மந்தநடை; குயில்போன்ற நல்ல கண்டத்வனி; கிளிபோன்ற அதிமதுரமான வாக்கு; மயிற்றோகை போன்றது கூந்தல் என்று பலவாறு கவிகள் வர்ணிக்கின்றனர்.

இப்படிப்பட்டவர்களும், ஸமுத்திரத்தினை ஒருபோதும் கங்கை விடாததுபோல் காமியின் மநம் இடைவிடாது செல்லத் தக்க தன்மையை யுடையவர்களும், பிரஹ்மா, திலோத்தமையை யுண்டாக்கி, சுந்த, நிசுந்தர்களைக் கொன்றமையால் வேறு திலோத்தமையைச் சிருஷ்டித்தார் என்று சொல்லத் தக்கவரும், கை கால்களில் மருதோன்றிச் சாயம் ஏற்றினவர்களுமான ஸ்திரீகளை நிமிடமாவது நான் தியாகஞ் செய்திலேன். அதற்குச் சாதகமான மற்றைப் போகங்களை எல்லாம் புசித்தேன். இப்போது மரணம் சமீபித்தது. அஹோ! ஜகத்தின்கணெனக்குச் சமானமான மூடன் யாவன்? இதுவரையில் நான் யோனியில் ஆசையுடையவனாயிருந்தேன்; (அது) மலிநமாகிய மூத்திரத்தினுடோறும் ஈரமாயும், சேதப்படாமல் (மாதந்தோறும்) மாமிசமயமான உதிரமொழுகுவதாயும், தோலால் மூடப்பட்ட மலிந மாமிசமயமாயும், மேல் அசுத்தமான மயிர்களால் சூழப்பட்டிருப்பதாயு மிருக்கின்றது. இவற்றில், எப்பதார்த்தம் சுந்தரமானது? மிகவும் அபவித்திரமாய் அருவருப்புக்கு வீடாயிருக்கின்றது. ஸ்திரீயின் தொடைகள் எப்போதும் அதிமலிநமாயிருந்தும் வாழைத்தண்டுக்கும், யானையின் துதிக்கைக்கும் ஸமாநமாய் விஷயப்பற்றுள்ள கவிகளால் சொல்லப்படுகின்றன. அவை மூத்திரச் சாக்கடைபோன் றிருக்கின்றன. இரத்தம், மாம்சம், துவக், அஸ்தி முதலியவற்றால் நிறைந்திருக்றன. ஸ்தூலமாகிய நிதம்பத்தின் மத்தியில் மலிநமாகிய மலக்குழாயி (குதமி)ருக்கின்றது. அதனால், கடிதடம் அதிக துர்க்கந்தமா யிருக்கின்றது. இதன்கண் ஆசத்தியுள்ளவன் அந்தனவன். கோழையோ டெச்சில் வடிகின்றமையால் நனைந்துள்ள அதரத்தை, சுத்தாசுத்த விவேக மில்லாதவன், அவளைப் பார்த்தமாத்தி

ரத்தில் மதங்கொண்டவனுய் அருவருப்பொழிந்து சுவைக்கின்ற னன். அவளை அதிசுந்தரலாவண்ய முள்ளவ ளென்று நினைக்கின் ருன். இவ்வாறு கபடகூட்டத்திற்கு ஸ்தாநமாகிய நாரியினை நான் இப்போது விசாரித்து விடத்தக்க தென்று அறிந்தேன்.

## 219. பர்ச்சுவின் வைராக்கியத்தினைக் கூறல்.

கலாகந்தம் (கிழங்கு), தயிர், பாயஸம், பேடா, அரிசி, நெய், வியஞ்சனம் (பலவகைக்கறி) மற்றும் நாநாவித போஜநங்களைப் புஜித்தும், அவற்றின் எல்லா ரஸங்களையும் ஜிஹ்வேந்திரியத்தி னுல் கிரஹித்து இதுவரையில் திருப்தியடையாத இந்த நாக்கினை விருதாவாகப் போஷித்தேன்; பசியை நாசஞ் செய்தற்கு வநத் தின்கண், கனி, கிழங்குக ளிருக்கின்றன. அங்ஙன மிருக்க ஏன் இந்தப் பராதீநமான கட்டு ? (வசிக்கக்) குகையாகிய அரண்மனை யும், நெருங்கிய வநமாகிய தோட்டமுமாயிருக்க இராஜாவிற்கேன் வேலைக்காரனுகவேண்டும்? பாறை படுக்கையாம்; தன்கை தலை யணையாம். (தாக முண்டானுல்) அருவி ஜலமாம். கரம் பாத்திர மாம்; கூஜா முதலிய இல்லை. ஏகாந்த ஸ்தாநத்தில் ஸ்வாதீநனு யிருந்து இவ்வாறு விசாரித்துப் பர்ச்சு பரமாநந்தத்தினை யடைந் தனன். சமுத்திர பரியந்தமான பிருதிவி முழுதும் அடைந்தாலும் ஏகாந்தத்தை யடையி னன்றி ஆநந்தம் (ஒருகாலும்) உண்டாகாது.

## 220. இராஜாமுதல் பிரஹ்மா பரியந்த முண்டாம் ஸர்வ ஸுகங்களும் ஏகாந்தத்தில் உண்டாகின்றன வெனல்.

பிருதிவி முழுதுக்கும் பதியாய், (ரூபவானுய்), உரோகமற்ற வனுய், யௌவனனுய், திடச்சித்தனுய், பலவானுய், வித்வானு யுள்ள அரசனிடத்தில் மனித ஸுகத்தின் முடிவுண்டாகின்றது. மநுடகந்தர்வ னென்று கூறப்படுபவன் அந்த அரசனினும் நூறு மடங்கு அதிகமான ஸுகத்தினை யடைகின்ருன். தேவகந்தர்வ னென்பவன் அவனினும் நூறுமடங்கு அதிக ஸுகமுள்ளவன். பிதிரர் என்பவர் தேவகந்தர்வர் ஆநந்தத்தினும் நூறுமடங்கு அதிகமான ஸுகத்தினை யனுபவிப்பவராவர். ஆஜாந தேவதைக ளிடத்து அவரினும் நூறுமடங்கு அதிகமான ஸுகமிருக் கின்றது. கர்மதேவர்களின்கண் அவர்களைவிட நூறுமடங்கதிக மான ஸுகம் இருக்கின்றது. முக்கிய தேவர்களிடத்தில் அவர் களினும் நூறுமடங்கு அதிகமான சுகமிருக்கின்றது. முக்கிய

தேவர்கள் என்பவர் பதினேரு ருத்திரர், பன்னிரண்டாதித்தியர், எட்டு வஸுக்கள் என்னும் முப்பத்தொருவராவர். அவர்களினும் நூறுமடங்கு அதிகமான ஆநந்தம் திரிலோகபதியாகிய இந்திரனிடத்தி லிருக்கின்றது. சர்வ தேவதைகட்குங் குருவாகிய பிரகஸ்பதியின் ஆநந்தம் இந்திரனினும் நூறுமடங்கு அதிகமாம். பிரஜாபதியின் ஸுகம் குருவாகிய பிரகஸ்பதியினும் நூறுமடங்கு அதிகமாம். பிரஹ்மாவின் ஸுகம் அவரினும் நூறு மடங்கு அதிகமாம். அவருக்கு (பிரஹ்மாவிற்கு) கிஞ்சிற்றும் துக்கம் ஒருபோதும் இல்லை. இவ்வாறு, கிரமமாகச் சுகத்தினை அடைகின்றன ரென்று தைத்திரிய சுருதி அறிவிக்கின்றது. இராஜா முதல் பிரஹ்மா வரையில் கூறப்பட்ட சர்வ சுகங்களும், எல்லா இச்சையும் இறந்தெப்போது மேகாந்தத்தி லிருப்பவனது இருதயத்தின் கண் உதியாகின்றது. ஏகாந்தவிடத்தில் இவ்வித ஸுக மிருக்கின்றது; ஸ்திரீ புத்திர, தந சங்கம் சதா துக்கத்தைப் பயப்பிப்பனவாம்.

### 221. ஸ்திரீ சங்க துக்க வர்ணநம்.

எவனுடைய ஸ்திரீ குரூபியாயும், துர்ப்பாஷிணியாயு மிருக்கின்றாளோ, அவன் மநதில் சதா துக்கமே குடிகொண்டிருக்கும். பிரபுவே! இம்மலபாண்டமாகிய முண்டையை எந்தப் பாபத்தின் தண்டனையாக எனக்குக் கொடுத்தீர். காக்கைபோல் வசனிக்கின்றாள். செம்மறி, எருமை, கிரி, சர்ப்பிணி, ஒட்டை இவைகட்கு பெண்ணுக்கு ஆணிடத்தும், ஆணுக்குப் பெண்ணிடத்தும் பிரியமாம். பெண் கழுதையின் சப்தத்தினைக் கேட்டு ஆண்கழுதை மோஹிக்கின்றது. இராத்திரியில் பெண் நரிகளின் பெருஞ் சப்தத்தினைக் கேட்டு ஆண் நரிகள் ஊளையிடுகின்றன. அபராதமின்றிய ஸ்திரீயினை வைராக்ய மின்றி விடுதல் பொருந்தாது. பாபம் இருதயத்தில் பற்றியிருக்கின்றதென்று புருஷனது மநம் ஸ்திரீயினது துர்ப்பாஷணையினைக்கேட்டும், குரூபமான சரீரத்தினைப் பார்த்தும் அஹோராத்ரம் துக்கப்பட்டுக்கொண்டிருக்கின்றது.

ஸ்திரீயானவள் அழகுள்ளவளாயும், நல்ல வசநத்துடன் கூடினவளாயு மிருந்தால், அவள் குரூபமான ஸ்திரீயினும் அதிக துக்கத்தினைக் கொடுப்பவ ளாகின்றாள். ஸ்வர்ணம் போன்று தோலின் மினுமினுப்புள்ள ஸ்திரீயே பிரிய முள்ளவளாய், புருஷனது

தர்மார்த்தங்களை நாசஞ்செய்து மோக்ஷத்தினையும் கெடுக்கின்ருள்.

222. ஸ்திரீ சங்கத்தினுல் தந நாசமாதல்.

புருஷன் அவளுடைய பிரிய வார்த்தையாகிய விஷங்கலந்த லட்டை (ஓர்வகைப் பக்ஷணத்தினை)ப் புசித்து புத்தியினை நாசஞ்செய்து கொள்ளுகின்ருன். காமாந்தகாரனுய் ஸ்வப்பநத்திலும் இந்தக் காமினியை கருதிக்கொண்டு வேருென்றையும் பார்ப்பதில்லை. வீட்டிலாவது, வெளியிலாவது கிடைக்கும் தநம், எல்லாவற்றையும் அவளுக்குச் செலவு செய்கின்ருன். வஸ்திரம் பூஷணம் முதலியவற்றை அவளை அணிந்துகொள்ளச் செய்கின்ருன். குரு, பிதா, மாதா முதலியோர்களின் ஞாபகம் வருவதேயில்லை. பாயஸம், வெற்றிலை, மிட்டாய், பழம் முதலியவற்றை ஸ்திரீயாகிய தனது தேவதைக்குப் பக்தியோடு ஸமர்ப்பிப்பான். மோஹ மென்னும் மூக்கணுங் கயிற்றினுல் கட்டப்பட்டு விடுபடாத புருஷனுகிய எருதை, ஸ்திரீயாகிய குடியானவன் நையப்புடைக்கின்ருன்.

223. ஸ்திரீ ஸங்கத்தினுல் தர்மம் நாசமாதல்.

பஞ்சரத்தில் அடைக்கப்பட்ட கிளி சுத்தாசுத்த வசநங்களைக் கற்றுக்கொடுத்தபடி கூறுவதுபோல ஸ்திரீ சொல்லிக் கொடுத்தபடி, குரு, பிதா, மாதாக்களிடத்தில் பேசுகின்ருன். ஆண் மயில் பெண்மயிலின் முன்பாக நடனஞ்செய்து அதனைச் சந்தோஷப்படுத்துவதுபோலக் காமுகன் நாநாவித வேஷத்தினுல் ஸ்திரீ சோன்னபடி நடித்து அவளைச் சந்தோஷிப்பிக்கின்ருன். இருவர் மனமும் ஒருமித்துக் காமக்கள்ளின் வெறி மிகுந்த காலத்தில் மிகவும் உந்மத்தர்களாய் வஸ்திரத்தினைத் தியாகஞ்செய்து அமங்களமான பிரேதம்போல் நக்ந ரூபமாய் ஆடுகள்போல் அடிக்கடி பின்பின் சுற்றித் தொடர்ந்து திரிந்து ரமிக்கின்ருர்கள். மத்திய பாநம் பண்ணினவன் துர்க்கந்தத்தினை அறியாமல் புத்திகெட்டு மலிநமான தெருச்சாக்கடையில் புரளுவதுபோல் ஸ்திரீ புருஷர்கள் காமத்தால் விவேகங்கெட்டு மிக மலிநமான சரீரங்களைக் கட்டிக்கொண்டு புரளுகின்ருர்கள். காம மதம் மனத்தினைப் பிரமிக்கச் செய்கின்றது. காமத்தினை வென்றவர்கள் இதனைக் கேட்டு ஆச்சரியப்படுகின்ருர்கள். காமத்தின் மதத்தினுல் புருஷனது புத்தி நாச மடைகின்றது. அங்யனது ஸ்திரீயினை உயர்வு, தாழ்

வெனப் பார்ப்ப தில்லை. ஸ்திரீயே காம வெறியினை உண்டாக்கு கின்றாள். எவள் ஸுகத்தைத் தருபவளோ அவள் கிரியையி னால் துக்கத்தினைத் தருபவளாகின்றாள். காமக்கள்ளின் மதம் பிரபலமாகும்போது பிராஹ்மண ஸ்திரீ நீச (தாழ்ந்த) புருஷனோ டும் சேர்கின்றாள். காமக்கள்ளை ஸ்திரீ புருஷர்கள் பருகி அநேக வித அநர்த்தங்களை இவ்வாறு செய்கின்றார்கள். காமதோஷத்தி னால் நான் இவ்வாறு காலத்தை வீணாக்குவது ஸுந்தரமான ஸ்திரீயினைத் தேடி யடைந்ததனாலாம். இதனாற்றான் அதிக ஸுந் தரரூபமுடைய ஸ்திரீ துக்கத்தைத் தருபவளாகின்றாள். அவளை விடுதல் ஸுகத்தைத் தருவதா மென்று முநிகள் கூறியிருக்கின் றார்கள். எவன் அழகிய ஸ்திரீயைச் சேரப் பிரியப்பட்டு விஷத் திற்கு ஸமாநமாக துக்கத்தைக் கொடுப்ப தென எண்ணி ஓடாம லிருக்கின்றனனோ, அவன் இரண்டு லோக சுகத்தையும் இழக் கின்றான் என்பதற்குக் குணநிறைந்த முநிவர்கள் ஸாக்ஷி கூறு கின்றார்கள்.

## 224. ஸ்திரீ சங்கத்தினால் பிந்துவின் நாசம்.

புஜிக்கப்பட்ட நாநாவிதபோஜநத்தின் ரஸத்தினின்றும் பிந்துவாகிய பலம் உத்பத்தியாகின்றது. எல்லோருக்கும் ஜீவ னம் பிந்துவின் அதீநமாம். பிந்துவினால் மநத்தின் துக்கம் நாசமாகின்றது. மனது எப்பொழுது ஜீவர்களுக்கு மலத்தில் வசிக்கின்றதோ, அப்பொழுது அவர்களுக்குத் துக்க முண்டா கின்றது. மநம் எப்பொழுது இரத்தத்தில் வசிக்கின்றதோ, அப் பொழுது சஞ்சலம் அதிகப்பட்டு ரஜோகுண முண்டாகின்றது. எப்போது மனம் பிந்துவில் வாசஞ் செய்கின்றது, அப்போது சோக, சஞ்சலத்தன்மைகள் நாசமாகின்றன. அன்றியும், தானே பலமுடையவன் என அறிந்து பிரசந்நனாகி சுபகாரியத்தினைச் செய்கின்றான். எவர்களிடத்தில் பிந்து அதிகமாயிருக்கின்றதோ அவர்களது சரீரத்தில் அழகும், காந்தியும் உண்டாகின்றன. பிந்துவே சரீரத்தில் பிரகாசமானது. பிந்து நசிக்கில் சரீரமும், மநமும் கொல்லப்பட்டவனது போலாகின்றன. எவனுக்கு பிந்து ஒருகாலும் நாச மடைகின்றதில்லையோ, அவன் சரீரம் நரை திரை யின்றிப் பிரகாசிக்கின்றது. கேஸரி முத்திரையினை அப்யஸிக்கும் யோகி, சிரேஷ்டத்தன்மையினை யடைகின்றான் பிந்துவை யிழுத் தலால் யோகி அஷ்டமாசித்திகளையுந்தரிக்கின்றான். பிந்து வெளிப்

படுதலால் யோகி அவற்றை யிழக்கின்ருன். ஜகத்தில் அதி உத்தமமான இப்பிந்துவை ஸ்திரீயானவள் தனது யோனியில் கிரஹித்துக் கொள்ளுகின்ருள். கரும்பின் துண்டத்தை ஆலேயில் அடிக்கடி கொடுத்துப் பிழிந்து சக்கையானபின் எரித்துவிடுவது போல, ஸ்திரீயானவள் புருஷனைத் தன் புஜங்களால் ஆலிங்கனஞ் செய்து, அவன் வீரியத்தினை இழுத்துத் தன் யோனியாகிய கடத்தில் நிரப்புகின்ருள். இவ்வாறு புருஷன் வீரியமெல்லாம் ஒழியும்வரை மீண்டுமீண்டும் பிரதி திநமும் செய்து அவன் சரீரத்தினை ஸ்திரீயானவள் அசாரமாக்கிவிடுகின்ருள். வாஸனையிழந்த பூவின் சக்கையைப்போலப் புருஷன் பிந்து அற்றுப்போனபோது அவனைக் கடுஞ்சொற்களாகிய கொள்ளிக்கட்டையால் சுடுகிருள். அழகு, பலம், தநம் என்பனமிகுதியாய் இருக்கின்ற புருஷனினும் ஸ்திரீ பலமுடையவளாய், அவன் அழகு, பலம், தநம் முதலியவற்றை நாசஞ்செய்து நீ எனது கணவனே என்கின்ருள். மூடன் மறுபடியும் அவளிடத்தில் ரமிக்கவிரும்புகின்ருன். அவன் தொட்டவுடன் துர்ப்பாஷைபாய்ப் பேசுகின்ருள். கோபத்தினுற் மூக்கைச்சுழித்து சிவந்தகண்களைச் சுழற்றுகின்ருள். பிறகு புருஷன் படுக்கையின் சமீபத்தில் போகின்ற தில்லை. கோடிவஜ்ரங்களின் கூட்டமாகிய எல்லாவற்றின் சாரத்தினை இழுத்துச் சேர்த்துவைக்கின், ஸ்திரீயின் இருதயம்போன்று கடினமாக மாட்டாதென்று ரிஷிகளும், முனிகணங்களும் முரசறைகின்ருர்கள். ஸ்திரீயானவள் இவனை அவமானஞ் செய்து எவ்வளவுக்கெவ்வளவு பின்னடைகின்ருளோ, புருஷன் அவ்வளவுக்கவ்வளவு ஆசையினுற் பின்பற்றி மரணபரியந்தம் விடாதிருக்கின்ருன். சுருதி, ஸ்மிருதி, புராணம், கீதை முதலியவற்றைப் படித்துத் தர்க்கத்தில் நிபுணனுய் ஒருவராலும் ஜயிக்கப்படாத அதிபுத்திசாலியாயுள்ளவனையும் ஸ்திரீ இவ்வாறு ஸ்வாதீநஞ் செய்துவிடுகின்ருள். வித்தையாடியினிடத்திலுள்ள குரங்கு அவன்சொன்னபடி ஆடுவதுபோல் ஸ்திரீயின் இஷ்டப்படி நடிக்கின்ருன். ஸ்திரீ மோஹத்தினுல் பண்டிதனும் அப்பொழுதே வார்த்தை, யுக்தி யெல்லாவற்றையும் மறந்துவிடுகின்ருன். எப்பொழுதாவது வேதத்தின் ஞாபகம்வந்தால் ஸ்திரீயினிடத்தில் வெறுப்பையடைந்து அவளை விட விரும்புகின்ருன். அப்பொழுது அவள் தன் கண்ணம்பைச் செலுத்துகின்ருள். அவள் விஷத்தில் நனைத்த கண்ணம்பை,புருவமாகிய வில்லை வளைத்து இரண்டையும்

சேர்த்துப் பாணப்பிரயோகம் பண்ணிக் காரியசித்தி செய்கின்றாள். எல்லா ஜநங்களேயும் மனத்தினுல் கொல்லுகின்றாள். வித்துவான்களே தப்பார்களென்றால் மற்ற மூடர்கள் ஒரு பொருளா? இவ்வாறு, ஸ்திரீயினிடத்தில் தீவிர வைராக்கிய மின்மையால் மந்த புத்தியுடையோர்கள் மறுபடியும் இச்சை வைக்கின்றார்கள். அரசன் வேலைக்காரனை ஆக்ஞைபிடுவதுபோல் ஸ்திரீ, புருஷனுக்கு நாநாவித உத்தரவு செய்து யஜமானைப்போல் உட்கார்ந்திருக்கின்றாள். எவன் ஸ்திரீயின் கண்ணுகின்ற பாணத்தினுல் துளைக்கப்படுகின்றனனே, அவனது ஹிருதயம் நோகின்றதில்லை. நன்மை, தீமை, சுகம், துக்கம் முதலியவற்றை மறக்கின்றான். அவன் எப்படி ஸம்ஸார துக்கத்தினின்றும் விடுபடுவன்? வேசிகளும், பரஸ்திரீகளும், ஸ்வஸ்திரீயும், நிந்திக்கத்தக்கவளும், நகரத்தின் ஆசிரயமாவள்; சந்தேஹ மில்லை. விவேகியானவன் இம்மூவர்களின் சிநேகத்தையும் விட்டுவிடுகின்றான். இவர்களுடன் சிநேஹம் செய்கின்ற மூடன் வாயில் மண்விழுகின்றது. தர்மார்த்தமோக்ஷங்களை ஸ்திரீ நன்றாய் நாசஞ் செய்கின்றாள். அவர்களைச் சகல அநர்த்தங்களுக்கும் மூலமென்று அறிந்து விட்டவனுக்குச் சுகமுண்டாம்.

### 225. புத்திர சங்க துக்க வர்ணநம்.

புத்திரனும் அப்படியே சதாதுக்கத்தினைக் கொடுக்கின்றான். புத்திரன் இல்லாவிட்டால் (இல்லையென்ற) துக்கம் ஒன்றே; புத்திரன் உண்டானுல் கர்ப்ப சமயத்திலும் துக்கம்; பிறப்பிலும் துக்கமாம். மரித்தாலோ அநேக துக்கமாம். ஸ்திரீ கர்ப்பிணியாகாவிட்டால் அதுவரையில் ஸ்திரீ, புருஷர் இருவர்க்கும் பெருந்துக்கம் உண்டாகின்றது. கர்ப்ப முண்டானுல் அது நாசமடையாமலிருக்க வேண்டுமென்று விசாரப்படுகின்றார்கள். பிறகு பிறப்பது பெண்ணோ, அல்லது ஆணோ வென்று கலக்கம் அடைகின்றார்கள். கர்ப்பம் விழுந்துபோவதற்கு ஹேதுக்கள் அநேகம் இருக்கின்றன. அதனுல், பயந்து மிகவும் சிந்திக்கின்றார்கள். ஒன்பது மாதம்வரை புத்திரன் பிறப்பதற்கு மாதா, பிதாக்கள் அதிகதுக்கத்தைப் பொறுத்துக் கொள்ளுகின்றார்கள். நவக்கிரகங்களில் ஒன்றிரண்டு விரோத மின்றி யிராது. சில கிரகங்கள் விருத்தமாயிருப்பதைக் கண்டு தம்பதிகள் அகோராத்ரம் ஏகாந்தத்திலிருந்து சிந்தை செய்கின்றார்கள். சிசு ஸ்தந்யபாநம் செய்யாவிட்டால்

மாதா, பிதாக்கள் இருவருஞ் சேர்ந்து அழுகின்றார்கள். இவ்வித சிந்தையால் சில மாதங் கழிந்தபின் சிரகம் போல் புத்திரனுக்குப் பல் முளைக்ும்போது அநேக குழந்தைகள் மரணமடைவதை எண்ணி துக்கப்படுகின்றார்கள். குழந்தை இளைத்துப்போனாலும் துக்கத்தினால் சந்திகளில் கழிப்புக் கழித்துத் தலையைச் சுற்றிப் போடுகின்றார்கள். அதன் ஸௌக்கியத்தின் பொருட்டு மிலேச்சன், பறையன், சக்கிலியன், பள்ளன் முதலியோர்களைக் கொண்டு பிராஹ்மணர்கள் மந்திரித்துக் கயிறு கட்டிக்கொள்ளுகின்றனர். ஸையத், க்வாஜா, பீர், பக்கீர், உடுக்கடிக்கின்றவன் என்னும் இவர்களைத் தைரியமில்லாது கைகுவித்து நமஸ்கரிக்கின்றார்கள். எவனை இந்துக்கள் ஒருபோதும் மதிக்கமாட்டார்களோ அவனைப் புத்திரன் நிமித்தம் இஷ்டனாக அறிகின்றார்கள். பைரவன், பூதம் முதலியவற்றைப் பிரார்த்தித்து ஸ்மசானபூமியில் பலிகொடுக்கின்றார்கள். பூசாரியை யழைத்து வீட்டில் உடுக்கு அடிப்பித்துக் கைகுவித்து லஜ்ஜையின்றிப் பூஜிக்கின்றார்கள். யந்திரம், தாழ்த்து முதலியவற்றை அநேகமாக எழுதி மூடிக் குழந்தையின் கழுத்தைச் சுற்றிக் கட்டுகின்றார்கள். தன் குலத்தில் ஒரே நாராயணனைப் பூஜித்துக் கனவிலும் வேறு தேவதைகளை ஸ்மரிக்காதவர்களும் குழந்தையின் நிமித்தம் குல நியமங்களைவிட்டு வியபிசாரிபோல் கண்டவிடமெல்லாம் பலதேவதைகளைத் தேடுகின்றார்கள். வைசூரி கண்டால் மாதா பிதாக்கள் மனதை வியஸநம் நாசஞ் செய்கின்றது. ஸ்நாநம் முதலிய கிரியைகளைவிட்டு மலிநமா யிருப்பார்கள். கழுதையை மேலான தெய்வ மென்று கொண்டாடுவார்கள். "தாயே! உன் வாஹநமாகிய கழுதையைப் பிடித்துக்கொண்டு ஊரைச்சுற்றிக்கொண்டு வருகின்றேன். அதற்குத் தீனிபோடுகின்றேன். என் குழந்தையைக் காக்கவேண்டும்." என்று வணக்கத்தோடு கடலையை மடியில் போட்டுக்கொண்டு கழுதைக்குக் கொடுப்பார்கள். இவ்வித மாக அநந்த துக்கத்தினால் குழந்தையைக் காப்பாற்றுகின்றார்கள். குழந்தை யௌவநனாகும் வரையில் மற்றும் அநேகமாயிரம் கவலை யிருக்கின்றது. குழந்தைக்கு ஆயுள் அற்பமானால் இறந்துபோவா னென்று கோடி உபாயஞ் செய்கின்றார்கள். இறந்துபோனால் தாய்தந்தையர்கள் தலையி லடித்துக்கொண்டு தங்களைத் தீநர்களாயும், அநாதர்களாயும் பாவித்து அஹோ

ராத்ரம் ஐயோ! ஐயோ! என்று அலறித் தமது ஜந்மம் வியர்த்தமாகி விட்டது என்று திக்காரஞ் செய் (நிந்திக்)கின்றார்கள். புத்ரன் உள்ளவன் புத்திர மரணத்தால் அடையும் துக்கத்தைப் புத்திரனைப் பெறாதவன் அடையமாட்டான். புத்திரன் பிழைத்துப் பெரியவனானால் தனது ஸ்திரீயினைப் போஷித்துக் காக்கின்றான். வெகு பிரயாசைப்பட்டு வளர்த்த மாதாப் பிதாக்கட்குக் குடிக்கத் தண்ணீர் கொடுப்பதும் அவனுக்குச் சுமைபாம். இராத்திரி படுக்கையில் அவள் சொல்லி வைத்தபடி மாதா பிதாக்களை அவன் வைவான். சற்புத்திரனாயின் காலையில் எழுந்து பெற்றோரைத் தூரத்திலிருந்து சிரஸினால் நமஸ்கரித்து ஒன்றுஞ் சொல்லுகின்றதில்லை. மாதா, பிதாக்கள் விரும்பினால் சமீபத்தில் வருவானே யன்றி, மற்று அவர்கள் சந்நிதியில் நிமிர்ந்தும் பாரான். அஸத் புத்ரனாயின் காலையில் எழுந்தவுடனே மதா,பிதாக்களை ஸஹிக்க முடியாதபடி துர்ப்பாஷையாகப்பேசி அவர்களுக்குத் தங்கள் சரீரத்தினை மாத்திரம் விட்டு வீட்டிலுள்ள தநம் முதலிய பொருள்களை யெல்லாம் எடுத்துக்கொண்டு வேறிடத்திற்குத் தனியாகக் குடிபோகின்றான். தான் பின்னர்ச் சம்பாதித்து அவர்கட்கு ஒன்றும் ஒருகாலத்தும் கொடுப்பதில்லை. தன் சரீரத்தினையும், ஸ்திரீயின் சரீரத்தினையும் இரவும், பகலும் போஷிக்கின்றான். மாதா, பிதாக்கள் அவனைப் பார்த்துப் பெருமூச்சு விடுகின்றார்கள்.

இவ்வாறாகப் புத்திரன் எப்போதும் துக்க ஸமூஹத்தினையே யுண்டாக்குபவனாகின்றான். ஆதலால், விசாரித்துப் பார்க்குமிடத்துப் புத்திரன் எப்போதும் துக்க ரூபமென்று அறிந்தும் புத்திரனால் ஸுகம் பெறலாமென்று எவன் விரும்புகின்றானோ அவன் மூடர்களுக்கு அரசனாகின்றான்.

### 226. தந சங்க துக்க வர்ணநம்.

ஸ்திரீயினையும், புத்திரனையும் விட்டுத் தநத்தை விரும்புவோன் வாயில் மண் விழும். தநம் சம்பாதிப்பதிலும், காப்பாற்றுவதிலும், செலவிடுவதிலும், இழந்து போவதிலும் துக்கத்தினையே தருகின்றது. தநத்தை அதிகமாகச் சேர்க்க விரும்புகின்றவன் லக்ஷம், கோடி எனப்படும் அநர்த்தங்களைச் செய்கின்றான். தநத்தினைச் சேர்க்க ஆரம்பிக்கின்றவன் ஜாதி தர்மம், குல தர்மங்களை

விட்டு விடுகின்ருன். அப்படிச் செய்தும் அதிருஷ்டமின்றி அந்தத் தநங் கிடைப்ப தில்லை. கிடைக்கின், அதைக் காப்பாற்றிக் காப் பாற்றி மரண மாகின்ருன். செலவிட்டால் தநம் குறையுமென் னும் விசார முண்டாகின்றது. நாசமாய்விடின், அஹோராத்ரமாக அநந்த தாப முண்டாகின்றது. இவ்வாருக தநம் மநதிற்கு ஸதா துக்கத்தினையே யுண்டாக்குகின்றது. அதனை இச்சிப்பவன் நிந் திக்கத்தக்கவ னுகின்ருன்.

இவ்வாருக, ஸ்திரீ, புத்திரன், தநம் என்பன துக்கத்தினைத் தருவதாம் என அறிந்து பர்ச்சு அவற்றில் உள்ள மமத்தன்மை யின் சம்பந்தத்தினை அறவே யொழித்தான்.

## 227. இராஜாவிற்குப் பர்ச்சுவினிடத்துப் பிரேதபுத்தி யுண்டாகுதலும் இராஜா ஓடுதலும்.

பர்ச்சு வனத்திற் சென்று ஏகாந்தத்தில் சித்த சாந்தியை அடைந்தனன். புதிய மந்திரியானவன் இந்தச் சகல விருத்தாந் தங்களையுங் கேள்விப்பட்டு அவனது சித்தத்தி விப்படிப்பட்ட சிந்தனை உதியாநின்றது. பர்ச்சு ஜீவத்திருப்பதை அரசன் கேட்கில், அல்லது, எவரேனும் அவனைச் சந்திக்கில் நாம் பொய் யர்களாகிவிடுவோம். ஆதலால், அரசன் எல்லோரையும் தண் டிப்பான் என்று மநதில் சிந்த்தித்து, உத்தியோதஸ்தகர்களுடன் ஆலோசித்து இப்போ தனைவருங்கூடி இராஜாவினிடம் போய்ப் பர்ச்சு பிரசண்ட (உக்ர) பிசாசுரூபமாய்ச் சஞ்சரிப்பதாயும், தேகத் திற் சாம்பலைப் பூசிக்கொண் டிருப்பதாயும், அவனைச் சந்தித்துப் பேசுகின்றவர்களை அவன் அடிக்கின்றதாயும், அவனைப் பார்த்தோ டிப் போகின்றவர்கள் தப்புவதாயும் தெரியப்படுத்திக் கொண்டார் கள். இதனை அரசன் கேட்டு பர்ச்சு இறந்து பிசாசாயினனென்று நிச்சயித்தனன். மிகவும் மோகத்தை யுடையவர்க ளாகையால், இது ஸத்தியம், இது மித்தையென்று அரசர்க ளறிகிருர்க ளில்லை. சில திநம் சென்றபின் அரசன் வேட்டையாடச் சென்றனன். பருவதங்களும், அநேக ஸிம்ஹங்களு முடைய நெருங்கிய வன த்தி லிருக்குமிடத்தில், ஒரு விருக்ஷத்தின்கீழ் தவஞ்செய்துகொண் டிருக்கும் பர்ச்சு வென்னுந் தனது மந்திரியைப் பார்த் தவனைத் துக்கத்தினைக் கொடுப்பதான பிசாசென் றெண்ணிப் பயத்தினுல் திரும்பியோடினுன்.

### 228. 227-ல் கூறிய திருஷ்டாந்தத்தைச் சித்தாந்தத்தில் பொருத்துதல். பேதவாதத்தைத் திக்கரித்தலோடு விடவேண்டு மெனல்.

பர்ச்சு இறந்து பிசாசாயின னென்னும் வாக்கியம் அசத்திய மாயினுஞ், சத்தியமாக வறிந்து பர்ச்சு ஜீவித்திருப்பதைத் தனது கண்களினாற் பார்த்தும், பிசாசாக வெண்ணி அரசன் ஓடினது போல் த்வைதத்தை வஞ்சகர்களாற் கேட்டுப் புத்தியின்கண் விசுவாசஞ் செய்து, அஞ்ஞாநிக்குப் பிரஹ்மம் அத்வைத மென்னும் பிரத்தியக்ஷ ஞாநம் உண்டானாலும் அஃது இருதயத்தில் இராது. பேத வசந விசுவாசத்தினால் அவர்க ளெப்போதுந் துக்கத்தையே அநுபவியாநிற்பர்; ஒருகாலும் அவனுக்குப் பிரஹ்ம ஞாநம் உண்டாகின்ற தில்லை. ஆதலால், பேத வசநத்தைக் கேட்கில் அதனை யசத்தியமாக அறியுங்காலத்து, அவனுக்கு மகாவாக்கியத்தினால் ஸத்திய ஞாந முண்டாகாநிற்கும். சிஷ்யனே! பேதவசநத்தினை நீ கேட்பாயானால் அதனைப் பொய்யாகவும், நரகத்திற்குச் சாதந மென்றும் அதனைக் கூறுபவ ரெல்லோரும் பொய்யரென்றும் அறி. புருடார்த்த சுகத்தினின்றும் ஜடர்களா யிருக்கின்றார்கள். அவர்களோடு ஒருகாலும் சேர்தல் கூடாது. சேர்ந்தாலும் அவர்களது வசநத்தினைக் கேட்கலாகாது. கேட்டாலும் கேட்டவுடனே விட்டுவிடுக. அவ்வசநத்தை மிலேச்சர், ஜைநர்களின் வசநத்திற்குச் சமானமா யறிந்தோடுக.

### 229. மித்தையாகிய துக்கம் மித்தையினால் நாசமாகுதலும் ஓர் அரசன் ஸ்வப்ந மடைதலும் அவனுக்கு நரியால் துக்க முண்டாகுதலும், மித்தையாகிய வைத்தியனால் நிவர்த்தியாதலும்.

"குருவும், வேதமும் மித்தையாயின், பவதுக்கத்தை எப்படி நாசஞ் செய்யு" மென்று நீ செய்த சங்கைக்கு இப்பொழுது உத்தரஞ் சொல்லுகின்றேன் கேள். மித்தையாகிய துக்கம் மித்தையினால் நிவிர்த்தியாகும்; வேதமுங், குருவுஞ் சத்தியமாயின், மித்தையாகிய சம்சார துக்கம் நாசமாகாது. இதிலோர் திருஷ்டாந்தம் கூறுகின்றேன்; கேள். அதனால் உனது சந்தேஹம் நாசமாய்விடும். ஸ்வர்க்கத்தின்கண் தேவதைகட் கதிபதியாகிய இந்திரனெப்படியோ, அப்படிப் பிரபலப் பிரதாபமுள்ள ஓர் அரசனிருந்

தான். அவனைச் சூழ்ந்து நிற்பவர்களாய் பீமன்போன்ற சூரர்கள் அநேகர் இருந்தனர். அவனது அந்தப்புரத்து வாயிலிலும், வெளிவாயிலிலும் அநேகமாயிரம் வீரர்கள் உருவின கத்தியுடன் நிற்பார்கள். பதினெண்ணிலையுள்ள உந்நதமான மாளிகையிற் புஷ்ப சயனத்தில் அரசன் நித்திரை செய்தனன். பட்சியுஞ் செல்லுதற்கரிய அவ்விடத்தில் மற்றவை யெங்ஙனஞ் செல்லக் கூடும்? ஆண்டு அரசன் ஒரு ஸ்வப்நங் கண்டான். அது யாதெனின், தன் காலை நரி கவ்விக்கொண்டது. அதை நிவிர்த்திக்க எண்ணினான். நரியானது கவ்விய காலை விடவில்லை; அப்போதரசன் இந்த நரியைக் கோறல்செய்பவர்கள் இருக்கின்றனரா வென்று கூவினான். தனது வாயில் காத்துக்கொண்டு நிற்கும் சேவகர்கள் அவனுக்குக் கொஞ்சமுஞ் சகாயஞ் செய்ய வரவில்லை. அப்பொழுதரசன் தன் கையினால் ஒருதடியை யெடுத்து நரியின் சிரஸிலடித்தான். அந்த அடியினால் அது இறந்து விட்டது. அப்போது தன் காலில் அழுந்தியிருந்த நரியின் பற்களை நிவர்த்தித்து முடவனைப்போல் கையினால் தடியை யூன்றிக்கொண்டு சென்று வைத்தியன் வீட்டை அடைந்து, அவனைப்பார்த்து வைத்தியனே! எனது காலினை மிகவும் வருத்தாநின்ற ரணத்தைத் தீர்க்கத்தக்கதான மருந்து தருதி யென்று கேட்டான். அதற்கவன் மருந்து என்னிடத்தில் தயாரா யில்லை. ஒருகாசு (காலணா) கொடுப்பின் செய்து கொடுப்பே னென்ன, ஒரு வராடிகை, (பலகரை)யாவது கொடுத்தற் கின்மையினால் என்று இங்ஙனஞ் சோகித்துக்கொண்டு அரசன் தடியை யூன்றி மீண்டனன்:-நான் தனவானா யிருப்பேனாகில் வயித்திய னெனது வீட்டிற் கோடிவாராநிற்பன். என்னிடத்திலுள்ள தாரித்திரியத்தை யறிந்து பாவி இவ்வாறு ரோகத்தோடுந் துரத்திவிட்டான். அவனுக்கொரு தோஷமும் நான் செய்ய வில்லை. ஸ்வார்த்த மின்றி ஒருவரும் ஆதரியார். மாதா, பிதா, பந்து, புத்திரர், ஸ்திரீ என்பவர்கள் ஸ்வார்த்தத்தினால் மிகவும் பிரியம் வைக்கின்றனர். ஸ்வார்த்த சித்தியை யடையாவிடில், இவனை ஒருவருந் திரும்பிப்பார்க்க மாட்டார்கள். எவன் வீட்டி வில்லாதிருக்கின் தனிமையாய் இருக்கமாட்டார்களோ, எவன் கொஞ்சநேரம் பிரிந்துபோனால் அதிக துக்கப்படுகின்றார்களோ, எவன் வீட்டுவாயிலில் வந்தவுடன் அவனைக் கட்டிக்கொள்ள எல்லோரும் கூடுகின்றார்களோ, அவன் விதிவசத்

தினுல் குஷ்டரோகியாய் அழுகிப்போய் எல்லா விரல்களிலும் ஜலம் பெருக ஈக்களால் உபத்திரவப்பட்டுக் கொண்டிருப்பானு யின், இவனுல் என்ன பிரயோஜநம் என்று நினைத்து முன் பிரிய மாயிருந்தவர்கள் இப்போது "ஏபாவி! ஏன் இன்னும் ஜீவித்துக் கொண்டிருக்கின்ருய், பிராணனை விடு" என்று கோபித்துப் பேசுகின்ருர்கள். கண்ணுல் பார்க்க ஸஹிக்கின்ற தில்லை. வாந்தி யைப்போல் அருவருப்புறுகின்ருர்கள். பதியினிடத்துப் பிரிய முள்ள ஸ்திரீயானவள் சற்று விலகி யிருந்து கொண்டு முகத்தி லுள்ள ஈக்களை யோட்டுகின்ருள். இவனை மடியில்வைத்து வளர் த்த மாதா, பிதாக்கள் இவன் விரும்பியதைக் கொடுத்து விலகி விடுகின்ருர்கள். பந்துக்கள் மறைவில் நின்று பேசுகின்ருர்கள். இவ்விதமாக ஸர்வ ஜகத்தும் ஸ்வார்த்தத்தினையே கருதுகின்றன. ஸ்வார்த்த மின்றி ஒருவனிடத்திலும் ஒருவரும் விருப்பம் வையார் கள். என்னிடத்தில் அவனுக்குத் தன்பொருட்டுப் பிரயோஜந மின்மையால் இவ்வைத்தியன் மருந்து கொடுக்க வில்லை என்று இப்படிச் சிந்தித்துக்கொண்டு போகும்போது, அவ்விடத்தி லெழு ந்தருளியிருந்த ஒரு முநி(சந்நியாசி)யைச் சந்தித்தான். அவர் தயையினுல் ஓர் அவுஷதத்தினைக் கொடுத்துக் காயத்தினுலுண் டான வேதனையை நீக்கினுர். அரசன் நித்திரையினின்றும் விழி த்தபோது, ரணம், வேதனை, முநிவர் என்பன காணப்பட வில்லை. சிஷ்யனே! இத்திருஷ்டாந்தத்தினை உனக்கு உரைத்தேன். இத னுல், மித்தையினுல் மித்தை நசியாநிற்கு மென் றறிதி. அரசன் மித்தியா துக்கத்தினைப் பார்க்கும்போது சத்தியமானவை ஒரு காரியமுஞ் செய்ய வில்லை.

### 230. 229 ல் கூறிய பிரசங்கத்தின் அபிப்பிராயம்.

இப்போது கூறிய கதையினது அபிப்பிராயம் இதுவாம்:— ஸம்ஸாரரூப துக்கம் மித்தையாம். ஆதலால், அதை நிவர்த்திக்கச் சாதநமாகிய வேதமுங் குருவு மித்தையாகவே வேண்டும். மித் தையின் நாசத்திற் சத்திய சாதநத்தின் அபேக்ஷை யில்லை.

சத்திய சாதந முளதாயின், அதனுல், மித்தையின் நாச முண் டாகாது. எங்ஙனம்? இராசாவின் சமீபத்தில் மித்தையாகிய நரி ஸ்வப்நத்தி லடைந்தது. அது ஒரு சத்திய சேவகராலுந் தகையப் பட வில்லை. அரசன் கூவினகாலத்து ஒருவராலும் அந்த நரி அடிக்

கப்பட வில்லை. அவன் ஸமீபத்தில் அநேக சத்திய சஸ்திரங்கள் வைக்கப்பட்டிருந்தன வாயினும், மித்யா தண்டத்தினல் மரண மடைந்தது. இராசாவிற்கு மித்தையாகிய ரணம் உண்டான போது, சத்தியமான வைத்தியனொருவனும் அடைந்தன னில்லை. மித்தையாகிய வைத்தியனிடத்திற் சென்றனன். அவன் காசு கொடென்றான். பொக்கிஷசாலையில் ஏராளமான ஸத்ய திரவியமிருந்தது. அதில் ஒரு பைசாவாயினும் இராஜாவிற்குக் கிடைக்க வில்லை. ஒரு ஸத்திய ஸாதநமும் இராஜாவின் துக்கத்தினை நாசஞ் செய்வதில் சமர்த்தமாக வில்லை. பின்னரோ, மித்தையான முனிவர் மித்தையான வேரைக்கொடுத்து மித்தையான துக்கத்தை நாசஞ்செய்தனர். இவ்வாறாய ஸ்வப்நம் எல்லோருக்கும் அநுபவசித்தமாம். எங்ஙனம் ஜாக்கிருத பதார்த்தங்கள் ஸ்வப்நத்தி லொருவர்க்கும் ஒருகாலத்து முபயோக மாகின்ற தில்லையோ, அங்ஙனமே மித்தையாகிய ஸம்ஸார துக்கத்தின் நாசமும் மித்தையாகிய வேதத்தினலுங் குருவினலு முண்டாகாநிற்கும். ஸத்தியமாகிய வேதத்தினையும், குருவினையும் அபேக்ஷிக்கின்ற தில்லை.

231. கானல் ஜலத்திலும், தாகத்திலுமுள்ள சத்தையின் பேதம்.

"மித்தையாகிய கானல் ஜலத்தினல் தாகசாந்தியாகாதது போல் மித்தையாகிய வேதத்தினலும் குருவினலும் ஸம்ஸார துக்கம் நாசமாகின்ற தில்லை. மித்தையாக வேதத்தையுங் குருவையு மொப்பி அவற்றால் ஸம்ஸார துக்கநாசத்தினை அங்கீகரிக்கின், கானல் ஜலத்தினலுந் தாகசாந்தி ஆகவேண்டும்" என்று சிஷ்யன் சங்கை செய்திருந்தான்.

அதற்குச் சமாதானம்.

(சமாதாந மினிக் கூறப்படுகின்றது). மித்தையாகிய கானல் ஜலத்தா லொருவருந் தாகசாந்தி செய்து கொள்ள வில்லை. மித்தையாகிய குருவினலும், வேதத்தினலும் துக்க நாச மாவதுபோல் மித்தையாகிய ஜலத்தினல் தாக நாசமாக வேண்டும். தாகநாச முண்டாக வில்லை. அங்ஙனமே மித்தையாகியவேதத்தினலும், குருவினலும் ஸம்ஸார நிவர்த்தி பொருந்தாதாயினும், உனது திருஷ்டாந்தம் விஷமமாம். ஏதனாலெனின், கானல் ஜலம், தாக நாசமென்னு மிரண்டிலும் சத்தையின் பேத முளது. அதனை அறிதி.

232. சமசத்தைகள் தம்மில் சாதக பாதக மாதல்.

பவதுக்கமும் குருவேதங்களும் ஒரே சத்தையாம். ஆதலால், குருவேதங்களினுல் ஸம்ஸார துக்கத்தின் நாச முண்டாகா நிற்கும். எந்தப் பதார்த்தங்கட்கு தம்மில் சமசத்தை யுண்டோ, அவற்றிற்குத் தம்மில் சாதகத்தன்மை, பாதகத்தன்மை உண்டாகா நிற்கும். எங்ஙனம்:-மண்ணிற்கும், கடத்திற்கும் சமசத்தையாம். ஆதலால், மண் கடத்திற்குச் சாதகமாம். அக்நிக்கும், காஷ்டத்திற்கும் சமசத்தையாம். ஆண்டு அக்நி காஷ்டத்திற்குப் பாதகமாம். ஸாதகமென்பது காரணமாம்; பாதகமென்பது நாசஞ் செய்வதாம். கானல் ஜலத்திற்குந் தாகத்திற்குஞ் சமசத்தையில்லை. ஆதலால், கானல் ஜலம் தாகத்திற்குப் பாதகமாவதில்லை. ஈண்டிஃது இரகசியமாம்:—சேதநத்தின்கட் பரமார்த்த சத்தையுண்டு. சேதநத்திற்குப் பிந்நமாகிய மித்தியா பதார்த்தங்களில் வியவகார சத்தை, பிரதிபாசிக சத்தை என இரண்டு பிரகாரமாகிய சத்தை யிருக்கின்றன.

233. வியாவகாரிக சத்தை, பிராதிபாசிக சத்தை, பாரமார்த்திக சத்தை.

எந்தப் பதார்த்தத்திற்கு பிரஹ்மஞாந மின்றிப் பாத முண்டாக வில்லையோ, பிரஹ்மஞாநத்தினுலேயே பாத முண்டாமோ அந்தப் பதார்த்தத்தில் வியவகார சத்தை கூறப்படுகின்றது.

அந்த வியவகார சத்தை ஈஸ்வரசிருஷ்டியி லிருக்கின்றது. எதனுலெனின், தேகேந்திரிய முதலிய பிரபஞ்சமாகிய ஈஸ்வர சிருஷ்டி பிரஹ்மஞாந மின்றிப் பாதிக்கப்படுகின்ற தில்லை. பிரஹ்மஞாநத்தினுலேயே பாத முண்டாகாநிற்கின்றது. ஈஸ்வரசிருஷ்டியாகிய பதார்த்தங்கட்குப் பிரஹ்மஞாந மின்றி நாச முண்டானுலும் பிரஹ்மஞாந மின்றிப் பாத மாகின்ற தில்லை.

அபரோக்ஷ மித்தியா நிச்சயத்திற்குப் பாத மென்று பெயராம் அந்த அபரோக்ஷ மித்தியாநிச்சயம் ஈஸ்வர சிருஷ்டியாகிய பதார்த்தங்களில் பிரஹ்மஞாநத்திற்கு முன்னரொருவர்க்குமுண்டாகின்ற தில்லை. பிரஹ்மஞாநத்திற்குப் பின்னரே யுண்டாகா நிற்கின்றது. ஆதலால், மூலாவித்தையின் காரியமாகிய ஜாக்கிர பதார்த்தமாய ஈஸ்வர சிருஷ்டியில்,வியவகார சத்தை யிருக்கின்றது. ஜநமம், மரணம், பந்தம், மோட்சம் முதலிய வியவகாரங்களைச் சித்திக்கச்செய்வதாகிய சத்தை (இருத்தல்)வியவகார சத்தை யெனப்படும்.

234. பிரஹ்ம ஞாந மின்றியே எவற்றிற்குப் பாத முண்டாமோ அப்பதார்த்தங்களில் பிரதிபாச சத்தை கூறப்படுகின்றது. எங்ஙனம் பிரஹ்மஞாந மின்றியே சுத்தி, இரஜ்ஜு, கானல் முதலிய வற்றின் ஞாநத்தினல், வெள்ளி, சர்ப்பம், ஜல முதலிய வற்றின் பாத முண்டாகின்றன. அவற்றில், பிரதிபாச சத்தை யிருக்கின்றது. பிரதீதி மாத்திரமா யிருப்பது பிரதிபாச சத்தை யெனப்படும்.

தூலாவித்தையின் காரியமாகிய வெள்ளி முதலிய பதார்த்தங்கட்குப் பிரதீதி மாத்திரமே யிருப்பாம். ஆதலால், அவற்றிற்குப் பிரதிபாச சத்தை யுண்டு.

235. எதற்கு மூன்று காலத்திலும் பாத முண்டாக வில்லையோ, அதற்குப் பரமார்த்த சத்தை யிருக்கின்றதென்று கூறப்படும். சேதநத்தின் பாத மொரு காலத்திலு முண்டாக வில்லை. ஆதலால், பரமார்த்த சத்தை சேதநத்திற்காம்.

236. வேதத்திற்கும், குருவிற்கும் ஸம்ஸார துக்கத்திற்கும் வியாவகாரிக சத்தை யிருக்கின்றது. ஆதலால், அவற்றால் பவதுக்கத்தின் நாசம் பொருந்து மெனல்.

இந்த ரீதியினல், வேதம், குரு, ஸம்ஸார துக்கம் என்பவற்றிற்கு ஒரு வியவகார சத்தை யிருப்பதனல், தம்மில் சமசத்தை யிருக்கின்றது. ஆதலால், மித்தையாகிய வேதம் குரு என்பவற்றால் மித்தையாகிய ஸம்ஸார துக்க நாசம் பொருந்தும்.

பசி, தாகம், பிராணனது தர்மங்கள். பிராணனுக்கும், அதன் தர்மங்கட்கும் பிரஹ்மஞாந மின்றிப் பாத முண்டாகா. ஆதலால், தாகத்திற்கு வியவகார சத்தை யிருக்கின்றது. கானல் ஜலத்திற்குப் பிரஹ்ம ஞாந மின்றியே கானல் ஞாநத்தினல் பாதிக்கப்படுகின்றதனல், கானல் ஜலத்திற்குப் பிரதிபாச சத்தை யிருக்கின்றது. ஆதலால், தாகத்திற்கும், கானல் ஜலத்திற்கும் சமசத்தை யில்லாமையினல், அந்த ஜலத்திற்றாகசாந்தி யுண்டாகின்ற தில்லை.

இப்பிரகாரமாகத் தார்ஷ்டாந்தத்தின்கண் பாதகமாகியவேதம் குரு என்பவற்றிற்கும், பாத்தியமாகிய ஸம்ஸார துக்கத்திற்கும் சத்தை யேகமாம். திருஷ்டாந்தத்தின்கண் ஜலத்திற்கும், தாகத்திற்கும் சத்தையின் பேத மிருத்தலால், திருஷ்டாந்தம் விஷமமாம். (தார்ஷ்டாந்தத்தின் சமமன்றாம்).

237. சங்கை:—சுத்தி, வெள்ளி முதலியவற்றிற்குப் பிரஹ்ம ஞாந மின்றியே பாதமாதலும், ஸம்ஸாரதுக்கம் பிரஹ்ம ஞாநத்திற்குப் பின் பாதமாதலுமாகிய இந்தப் பேதத்தினை எக்காரணத்தால் வைத்தீர்கள்? எனல்.

பிரபுவே! பிரஹ்மத்திற்குப் பிந்நமாகிய எல்லாவற்றையும் மித்தை யென்று தாங்கள் கூறினீர்கள். அம்மித்தியா பதார்த்தங்களில் சுத்தியில் ரஜதம், இரஜ்ஜுவில் சர்ப்பம், கானலில் ஜலம் முதலியவற்றிற்குப் பிரஹ்ம ஞாந மின்றியே பாத முளதாம். ஸம்ஸார துக்கம் பிரஹ்ம ஞாநத்திற்குப் பின் பாத முளதா மென்னும் பேத மெந்த ஹேதுவினுல் வைத்தீர்கள்?

இவ்வாறு எனக்குச் சந்தேக முண்டாகியிருக்கின்றது, அதனை நிவர்த்திக்கவேண்டும்.

238. உத்தரம்:—எதன் அஞ்ஞாநத்தினுல் எது உற்பத்தியாகின்றதோ அதன் ஞாநத்தினுல் அதற்குப் பாத முண்டாகின்ற தெனல்.

சிஷ்யனே! பிரஹ்மத்திற்குப் பிந்நமாகிய சகலமும், அவித்தையின் காரியமாம். ஆதலான், மித்தையாம். இதிற் சிறிதுஞ் சத்திய மில்லை. ஆயினும், எதன் அஞ்ஞாநத்தினுல் எஃதுண்டாகின்றதோ அதன் ஞாநத்தால் அதற்குப் பாத முண்டாம். சுத்தி, இரஜ்ஜு, கானல் முதலியவற்றின் அஞ்ஞாநத்தினுல் இரஜதம், சர்ப்பம், ஜலம் முதலியவை யுண்டாகின்றன. அவற்றின் பாதம், சுத்தி, இரஜ்ஜு, கானல் முதலியவற்றின் ஞாநத்தினு லுண்டாம். பிரஹ்மத்தின் அஞ்ஞாநத்தினுல் ஜந்மம், மரண முதலிய ஸம்ஸார துக்க முண்டாகின்றன. அதன் பாதம் பிரஹ்ம ஞாநத்தினு லுண்டாகும்.

239. பிரஸ்நம்:—பிரஹ்மத்தின் அஞ்ஞாநத்தினுல் ஸம்ஸாரம் எந்தக் கிரமத்தினு லுண்டாகின்ற தெனல்.

சிஷ்யன் கூறுகின்றன்.

பகவானே! பிரஹ்மத்தினை யறியாததனுல் உண்டாகின்ற ஸம்ஸாரம் எந்தக் கிரமமாக வுண்டாகின்றது? அந்த நிர்ணயத்தை எனக்குக் கூறவேண்டும்.

முற்புகன்ற பிரஶ்நத்தின் உத்தரம்.

240. ஸ்வப்ந ஸமானமாகக் கிரம மின்றி ஜகத்தின் தோற்றம்.

குரு கூறுகின்றார்.

எங்ஙனம் ஸ்வப்நம் கிரம மின்றி உண்டாகின்றதோ, அங்ஙனமே பிராந்தியினல் மித்தையாகிய ஜகத்துத் தோன்றுகின்றது. இதன் கிரமத்தினை யறிய விரும்புகின்றவன் கானல் ஜலத்தில் வஸ்திரத்தினை நனைத்தற்கு விரும்பக் கூடும். உபநிடதங்களில் ஜகத்தி னுற்பத்தி அநேகப் பிரகாரமாகக் கூறப்பட்டிருக்கின்றது. சாந்தோக்கிய உபநிஷத்தில் சத்துரூப பரமாத்மாவி னின்றும் அக்நி, ஜலம், பிருதிவி என்பன கிரமமாக உண்டாயினவென்று கூறப்பட்டிருக்கின்றது. தைத்திரீய உபநிஷத்தில் ஆகாசம், வாயு, அக்நி, ஜலம், பிருதிவி என்பன கிரமமாக வுண்டாயினவென ஐந்து பூதத்தி னுற்பத்தி சொல்லப்பட் டிருக்கின்றது. சிலவிடத்தில் எல்லாவற்றையும் பரமேஶ்வரன் உண்டாக்கினன் என்று கிரம மின்றியே உற்பத்தி சொல்லப்பட்டிருக்கின்றது. இவ்வாறு ஜகத்தி னுற்பத்தி வேதத்தின்கண் அநேகப் பிரகாரமாகக் கூறப்பட் டிருக்கின்றது. ஆண்டு வேதத்திற் கபிப்பிராயம் இதுவாம்:- ஜகத்து மித்தையாம். ஜகத்து ஒரு பதார்த்தமாயின் அதன் உற்பத்தி அநேகப் பிரகாரமாக வேதம் கூறமாட்டாது. அநேகப் பிரகாரமாக ஜகத்தி னுற்பத்தியைச் சொல்லியிருக்கின்றபடியால், ஜகத்தி னுற்பத்தியைப் பிரதிபாதிப்பதில் வேதத்திற்கு அபிப்பிராய மில்லை. பின்னரோ, அத்வைதப் பிரஹ்மத்தினை யறிவித்தற்காக ஜகத்தை நிஷேதம் செய்யும்பொருட்டு மித்தையாகிய ஜகத்தை ஒருவா றுரோபஞ் செய்திருக்கின்றது.

திருஷ்டாந்தம்:—விநோத நிமித்தம் உயர எழுப்புவதற்கு மரத்தினல் யானை செய்யப்படுகின்றது. அதன் செவி, வால் கோணியிருக்குமாயின், அதனைச் செவ்வையாக்கு நிமித்தம் எங்ஙனம் யத்நம் செய்கின்றதில்லையோ அங்ஙனமே அத்வைத ஞானத்தினிமித்தம் பிரபஞ்சத்தினை நிஷேதிப்பதற்கு அதனை ஆரோபஞ் செய்திருக்கின்றது. ஆதலால், வேதம் பிரபஞ்சத்தின் உற்பத்திக் கிரமத்தினை ஒரு ரூபமாகக் கூறுவதில் யத்தனிக்க வில்லை. பிரபஞ்சத்தின் உற்பத்தியினை ஒரு ரூபமாக வேதங் கூறுமையினல் வேதத்தின் அபிப்பிராயம் பிரபஞ்ச நிஷேதத்திலாம்; அதன் உற்பத்தியில் அபிப்பிராயம் இல்லை யென் றறிக.

## 241. சூத்திரக்காரர், பாஷ்யக்காரர்கள் சுருதி வசநத்தினுல் ஜகத் துற்பத்தியினைக் கூறுதலின் அபிப்பிராயம்.

சூத்திரக்காரரும், பாஷ்யக்காரரும் இரண்டாம் அத்தியாயத்தி லுற்பத்தியினைக் கூறும் சுருதிவசநங்களின் விரோதத்தை நீக்கி ஒரு ரூபமாக தைத்திரிய சுருதியின் அநுசாரமாகச் சொல்லப்பட்ட உத்பத்தியில் எல்லா உபநிடதங்கட்கும் அபிப்பிராயமாமென்று கூறி யிருக்கின்றார்கள். அது மந்த ஜிஜ்ஞாஸுக்களின் நிமித்தம் கூறியதாம். பூர்வஞ் சொல்லிய உத்பத்தி வாக்கியங்களி னபிப்பிராயத்தை யறியாத மந்த ஜிஞ்ஞாஸுவிற்கு உபநிடதங்களில் கூறியுள்ள நாநாப் பிரகாரமாய ஜகத்தின் உற்பத்தியினைப்பார்த்து உபநிஷதங்கட்குப் பரஸ்பரம் விரோத மிருக்கின்றதென்னும் பிராந்தி யுண்டாய்விடும்; அதனை நீக்குதற்கு எல்லா உபநிஷதங்களிலும் ஏக ரூபமாக ஜகத்தி னுற்பத்தியினைக் கூறுவதாகக் கூறியிருக்கின்றனர்.

பிரஹ்ம விசாரத்தா லெதார்த்த ஞாந முண்டாகாதவனுக்கு லயசிந்தன நிமித்தமும் உற்பத்திக் கிரமங்கூறப்பட்டதாம். எந்தக் கிரமத்தினு லுற்பத்தி சொல்லப்பட் டிருக்கின்றதோ அதற்கு விபரீதக் கிரமமாக லயசிந்தனஞ் செய்யில், அந்த லயசிந்தனத்தாலத்வைதத்தில் புத்தி ஸ்திதமாம். அந்த லயசிந்தனத்தின் பிரகாரம் பஞ்சீகரணத்தில் வார்த்திக காரராகிய ஸுரேஸ்வராசாரியர் கூறியிருக்கின்றனர். இந்தக் கிரந்தம் உத்தம ஜிஜ்ஞாஸுவின் நிமித்தமாய் இருக்கின்றதால் ஜகத்தி னுற்பத்தி லயப்பிரகாரங்களை யெழுத வில்லை. இது ஸாகரரூபமாகையால் சங்க்ஷேபமாகக் காண்பிப்பாம். சுத்தப் பிரஹ்மத்தினின்றும் ஜகத்தின் உற்பத்தியுண்டாகின்ற தில்லை. எதனுலெனின், சுத்தப் பிரஹ்மம், அசங்கமும் அக்கிரியமுமாம். பின்னையோ மாயாவிசிஷ்ட ஈஸ்வரனிடத்தி னின்றும் ஜகத்தின் உற்பத்தி யுண்டாகின்றது. ஆகையால், மாயை ஈஸ்வரர்களின் ஸ்வரூபங்கள் பிரதிபாதநஞ் செய்யப்படுகின்றன.

## 242. பிரசங்கத்தினுல் மாயையின் ஸ்வரூபத்தினைப் பிரதிபாதித்தல்.

ஜீவேஸ்வர பேத மின்றிய சுத்த சேதனத்தின் ஆசிரிதமாய் மாயை யிருக்கின்றது. அந்த மாயை அனுதியாம். அஃதாவது ஆதி யின்றியதாம். ஆதி யென்பது உற்பத்திக்காம். மாயையின்

உற்பத்தியினை அங்கீகரிக்கின், மாயையின் காரியமாகிய பிரபஞ்சத்தி னின்றும், மாயையின் உற்பத்தி, புத்திரனிடத்தினின்றும் பிதாவிற்கு உற்பத்தி யின்றியதுபோல் பொருந்தாது. சேதநத்தினின்றுமே மாயையின் உற்பத்தி அங்கீகரிக்கவரும்.

அங்கு ஜீவ பாவமும், ஈஸ்வர பாவமும் மாயையின் காரியமாம். மாயை சித்தித்தா லன்றி ஜீவேஸ்வரரது ஸ்வரூபஞ் சித்தியாது. ஆதாலால், ஜீவ சேநத்தி னின்றும், அல்லது, ஈஸ்வர சேதநத்தி னின்றும் மாயையின் உற்பத்தி சொல்லுதல் பொருந்தாது.

சுத்த சேதநம் அசங்கமாயும், அக்கிரியமாயும், நிர்விகாரமாயு முளது. அதனினின்றும் மாயையின் உற்பத்தி யொப்பினுல் விகாரியாகும். சுத்த சேதநத்தினின்றும் மாயையின் உத்பத்தி யுண்டாயின் மோக்ஷகாலத்தில் மாயை மீண்டும் உண்டாம். அதனுல், மோக்ஷ நிமித்தமா யிருக்கின்ற ஸாதநங்கள் நிஷ்பலமாம். இவ்விதத்தால், மாயை உற்பத்தி யின்றி யிருத்தலின் அநாதியாம். ஏகமாம். ஞாநத்தினுல் அந்தமுண்டாவதாயிருத்தலால் சாந்தமாம். சதசத் விலக்ஷணமாம். மூன்று காலத்திலும் பாத முண்டாகாதது சத்தென்று சொல்லப்படும். இவ்வாருயது சேதநமாம். மாயைக்கு ஞாநத்தினுல் பாத முன்டாகின்ற தாதலால் சத்தினும் விலக்ஷணமாம். மூன்று காலத்திலும் பிரதீதி யுண்டாகாத ஸஸசிருங்கம், வந்தியா புத்திரன், ஆகாய புஷ்ப முதலியன அசத்தென்று சொல்லப்படும். ஞாநத்திற்குப் பூர்வம் மாயையும், அதன் காரியமும் பிரதீதியாகின்றன. ஜாக்கிரத்தின்கண் "நான் அஞ்ஞானியா யிருக்கின்றேன்; பிரஹ்மத்தை யறிய வில்லை"யென்னும் ரீதியினுல் மாயை பிரதீதி யாகின்றது. ஸ்வப்நத்தின்கண் பிரதீதியாகின்ற நாநாபதார்த்தங்களின் உபாதான காரணம் மாயை யாம்.

சுழூத்தியின் அநந்தரம் "நான் சுகமா யுறங்கினேன். ஒன்றும் அறிய வில்லை" என்று அஞ்ஞாநத்தின் ஸ்மிருதி யுண்டாகின்றது. அந்த ஸ்மிருதி அஞ்ஞாத வஸ்துவின தாகாது. ஆதலால், சுழூத்தியின்கண் அஞ்ஞாநம் பிரதீதியாகின்றது. அவ்வஞ்ஞாநமும், மாயையு மொன்றேயாம். அவற்றிற்குப் பேத மில்லை. இப்பிரகாரத்தானே மூன்றவஸ்தையின்கண் மாயையின் பிரதீதி யுள

தாம். ஆதலால், அசத்தின் விலக்ஷணமாம். இவ்வாறு, சதசத்தின் விலக்ஷணமாகிய மாயையின் காரியமும் சதசத்தின் விலக்ஷணமாம். சதசத் விலக்ஷணத்தினையே அத்வைத மதத்தில் மித்தையென்றும், அநிர்வசநீய மென்றுஞ் சொல்லுவர். ஆதலால், மாயை யதன் காரியங்களால் த்வைதம் சித்திக்கின்றதில்லை; எதனாலெனின், எங்ஙனம் சேதநமானது சத்ரூபமா யிருக்கின்றதோ அங்ஙனமே மாயையும் அதன் காரியமும் சத் ரூபமாமாயின், த்வைதமாம். அம்மாயையும் அதன் காரியமுஞ் சதசத்தின் விலக்ஷணமாவதான் மித்தையாம். மித்தியா பதார்த்தத்தினால் த்வைதமுண்டாகாது. மித்தையாகிய ஸ்வப்ந பதார்த்தத்தினால் த்வைதமாகாதது போல வென்க.

### 243. அஞ்ஞானத்திற்குத் தனது ஆசிரயத் தன்மையும் தனது விஷயத்தன்மையும்.

ஜீவேஶ்வர விபாக மின்றிய சுத்தப் பிரஹ்மத்தின் ஆஶ்ரிதமாக மாயை யிருக்கிறது. சுத்தப் பிரஹ்மத்தினையே ஆச்சாதனஞ் செய்(மறைக்)கின்றது. கிருகத்தி னாசிரிதமான அந்தகாரம் கிருகத்தை ஆச்சாதனஞ் செய்வது போ லென்க. இந்தப் பக்ஷத்தினை ஸ்வாசிரய, ஸ்வ விஷய பக்ஷ மென்பர். ஸ்வ என்பது சுத்தப் பிரஹ்மம். அதுவே ஆசிரயமாயிருத்தல் ஸ்வாஶ்ரயம். ஸ்வ வென்பது சுத்தப் பிரஹ்மம். அது விஷயமாகுதல், அஃதாவது மாயையினால் மறைக்கப்படுதல், ஸ்வ விஷயமாம். சங்க்ஷேப சாரீரகம், விவரணம், வேதாந்த முக்தாவலி, அத்வைத சித்தி, அத்வைத தீபிகை முதலிய கிரந்தக்காரர் அஞ்ஞானத்தை ஸ்வாசிரய, ஸ்வ விஷய மென்றே அங்கீகரித் திருக்கின்றனர்.

### 244. புகன்ற அர்த்தத்தில் வாசஸ்பதியின் மதம்.

வாசஸ்பதியின் மதம் இதுவாம்:—அஞ்ஞானம் ஜீவனை ஆசிரயித் திருக்கின்றது. பிரஹ்மத்தினை விஷயஞ் செய்கின்றது. "நான் அஞ்ஞாநி, பிரஹ்மத்தினை யறியேன்" என்னும் பிரதீதியினால் "நான்" என்னும் சப்தத்திற் கர்த்தம் ஜீவன் "அஞ்ஞாநி" யென்று சொல்வதால், அஞ்ஞானத்திற் காசிரயமாகத் தோற்றுகின்றது. "பிரஹ்மத்தினை யறியேன்" என்பதால், அஞ்ஞானத்திற்கு விஷயமாகப் பிரஹ்மம் பிரதீதியாகின்றது. இந்த ரீதியினால், அஞ்ஞானம் ஜீவனாசிரிதமாய்ப் பிரஹ்மத்தினையே விஷயமாக்குகின்றது.

அஃதாவது மறைக்கின்றது. அந்த அஞ்ஞான மொன்றன்று; பின்னேயோ, அநந்தமாம். எதனுலெனின், ஒன்ருக அஞ்ஞானத்தினை யொப்பின், ஒருவனது ஞானத்தினுல் ஒரு அஞ்ஞானத்தினிவிருத்தி உண்டாவதால், மற்றையோர்க்கு அஞ்ஞானமும் அதன் காரியமாகிய ஸம்ஸாரமும் பிரதீதியாக வேண்டுவதில்லை. இன்றளவி லொருவர்க்கும் ஞான முண்டாகவில்லை யெனில், மேலும் ஒருவர்க்கும் ஞான முண்டாகாது. இதனுல், சிரவணுதி சாதநம் நிஷ்பலமாகும். ஆதலால், அநந்த ஜீவரினுசிரிதமாய அஞ்ஞான மநந்தமாம். அநந்த ஜீவரின் அநந்த அஞ்ஞானத்தினுற் கற்பிக்கப்பட்ட ஈஸ்வரனும், அநந்தமாம். பிரஹ்மாண்டமும் அநந்தமாம். எந்த ஜீவனுக்கு ஞான முண்டாமோ அவனுடைய அஞ்ஞானம், ஈஸ்வரன், பிரஹ்மாண்டம் என்பன நிவிருத்தியாகின்றன. எவனுக்கு ஞான முண்டாகவில்லையோ அவனுக்குப் பந்த மிருக்கின்றது. இது வாசஸ்பதியினுடைய மதமாம். அது சிறந்ததன்று. எதனுலெனின்,

### 245. வாசஸ்பதியின் மதத்தின் சிறப்பின்மையும், அஞ்ஞாநத்தின் ஏகத்தன்மையும்.

“ ஈஸ்வரன் ஜீவனதஞ்ஞானத்தினுல் கற்பிக்கப்பட்டவன் ” என்னல் சுருதி, ஸ்மிருதி, புராணங்கட்கு விருத்தமாம். “ஈஸ்வரனநந்தம், தனித்தனி ஜீவரிடத்தில் சிருஷ்டி பேதமாம்” என்பதும் விருத்தமாம். ஆதலால், நாநா அஞ்ஞானத்தினை யொப்புவது அசங்கதமாம். நாநா அஞ்ஞானத்தினை ஒப்பி ஈஸ்வரனையும், சிருஷ்டியையு மேகமாக வொப்புதலும் பொருந்தாது. எதனுலெனின் ஜீவன், ஈஸ்வரன், பிரபஞ்சங்கள் அஞ்ஞான கற்பிதமாம். அநந்த அஞ்ஞானத்தினை யொப்புவதனுல் ஒவ்வோர் அஞ்ஞானத்தினுலும் கற்பிக்கப்படுகின்ற ஜீவனைப்போல் ஈஸ்வரனும் பிரபஞ்சமு மநந்தமேயாம். இதனுலேயே வாசஸ்பதி யென்பவர் அநந்த ஈஸ்வரனையும் அநந்த சிருஷ்டியினையும் கூறியிருக்கின்ருர். ஆதலால், “அஞ்ஞானம் ஏகம்” மென்னும் மதமே சிறந்ததாம்.

### 246. ஸ்வாஸ்ரய ஸ்வவிஷய பக்ஷத்தின் அங்கீகாரம்.

அந்த ஓர் அஞ்ஞானமும் ஜீவனை ஆசிரயித்ததன்று. பின்னரோ, சுத்தப் பிரஹ்மத்தின தாசிரிதமாம். எதனுலெனின், ஜீவபாவம் அஞ்ஞானத்தின் காரியமாம். அந்த அஞ்ஞானம் ஸ்வதந்தரமாக வொரு காலத்திலு மிருப்ப தில்லை. ஆதலால், நிராசிரய

அஞ்ஞாநத்தினலோ ஜீவபாவம் பொருந்தாது. முதலில் அஞ் ஞாநம் ஒன்றன தாசிரிதமாகுமாயின், அப்போ தஞ்ஞாநத்தின் காரியமாகிய ஜீவபாவ முண்டாம். ஜீவத்தன்மை போன்று ஈஸ் வரத்தன்மையும் அஞ்ஞாநத்தின் காரியமாம். அஞ்ஞானம் ஈஸ் வரனையும் ஆசிரயித்திருக்க வில்லை.பின்னையோ, சுத்தப் பிரஹ்மத் தின் ஆசிரிதமாய் அநாதி அஞ்ஞாந முளது. அநாதியாகிய சேத நத்திற்கும் அஞ்ஞாநத்திற்கும் உள்ள சம்பந்தமும் அநாதியே. சேதந அஞ்ஞாநங்களின் அநாதி சம்பந்தத்தினுல், ஜீவபாவம், ஈஸ்வர பாவங்களும் அநாதியாம். ஆயினும், ஜீவபாவங்களும், ஈஸ்வர பாவங்களும் அஞ்ஞாநத்தின் அதீநமாம். ஆதலால், அஞ் ஞாநத்தின் காரிய மெனப்படும். "நான் அஞ்ஞாநி" என்று இவ் வாறு, ஜீவனை ஆசிரயித்ததாக அஞ்ஞாநம் பிரதீதியாகின்றதாமா யினும், சுத்தப்பிரஹ்மத்தின் ஆசிரிதமாகிய அஞ்ஞாநத்தின தபிமாநம் ஜீவனுக்கு "நான் அஞ்ஞாநி" என்று உண்டாகின் றது. ஜீவன் அஞ்ஞாநத்தின் காரியமாதலால், அஞ்ஞாநத்திற் கதிஷ்டாநரூப ஆசிரயமாதல் பொருந்தாது. பின்னையோ, சுத்தப் பிரஹ்மமே அஞ்ஞாநத்திற் கதிஷ்டாநரூப ஆசிரயமாம். சுத்தப் பிரஹ்மமாகிய அதிஷ்டாநத்தின் ஆசிரிதமாகிய அஞ்ஞாநம் அந் தப் பிரஹ்மத்தினையே மறைக்கின்றது. அதன்பின் "நான் அஞ் ஞாநி" என்று இவ்வாறு, ஜீவன் அஞ்ஞாநத்தின் அபிமானரூப ஆசிரயமாகின்றனன். இவ்விதத்தால், அஞ்ஞாநம் ஸ்வாசிரய, ஸ்வ விஷயமாம்.

247. அஞ்ஞாநம் ஒன்றென்னும் பக்ஷத்தில் பந்த மோக்ஷங்களின் வியவஸ்தையும் எல்லாப் பிரக்ரியைகளின் சிரேஷ்டத் தன்மையோடு நாம பேதத்தினுல் மாயையின் ஸ்வரூபமும்.

அந்த அஞ்ஞாநம் ஏகமாம். ஞாநத்தில் நிவர்த்தியாமாயி னும் எந்த அந்தக்கரணத்தில் அஞ்ஞாந மிருக்கின்றதோ அவ் வந்தக்கரணுவச்சிந்ந சேதநத்தின்க ணுள்ள அஞ்ஞாநத்தின் அம்சம் ஞாநத்தினல் நிவிர்த்தியாகின்றது. அவனே முக்தனு வான்; எந்த அந்தக்கரணத்தில் ஞாந முண்டாக வில்லையோ ஆண்டு அஞ்ஞாநத்தின் அம்சமு மிருக்கின்றது, பந்தமு மிருக் கின்றது. இந்த ரீதியினுல் அஞ்ஞாந மேக மென்னும் பக்ஷத்தில் பந்த மோக்ஷ வியவகாரம் பொருந்தும். ஒருவர்க்கு வாசஸ்பதி யின் ரீதியாக நாநா அஞ்ஞாந வாதமே புத்தியின்கண் பிரவே

சிக்குமாயின், அஃதும் அத்வைத ஞானத்திற்கு உபாயமாம். அதன் கண்டநத்தில் சிறிது மாக்கிரக மில்லை. எந்த ரீதியினுல் ஜிஞ்ஞாஸுவிற்கு அத்வைத போத முண்டாமோ, அங்ஙனமே புத்தியினை ஸ்திரம் செய்க.

சுத்தப் பிரஹ்மத்தின தாசிரிதமாகிய மாயையினை அவித்தையென்றும், அஞ்ஞாந மென்றுஞ் சொல்லுவர். அசிந்திய சக்தியுள்ளதாயும்,யுத்தியினைச் சகிக்காததாயுமிருத்தலால் மாயையென்பர். வித்தையினுல் நாசமாவதால் அவித்தையென்பர். ஸ்வரூபத்தினை மறைத்தலினுல் அஞ்ஞாநம் என்பர். (மாயை) எந்தச் சேதநத்தி ஞசிரிதமா யிருக்கின்றதோ அந்தச் சாமாந்ய சேதநம் அதன் விரோதி யன்று. பின்னையோ, சாமாந்ய சேதநம் மாயையின் சாதகமாம். சத்தா ஸ்புரணத்தினைக் கொடுக்கின்றது. விருத்தியின்கண் ஆரூட (இருக்கின்ற) சேதநம் அல்லது, சேதந ஸகித விருத்தி அதன் விரோதி யென் றறிவாயாக.

248. பிரசங்கத்தினுல் ஈஶ்வர ஸ்வரூபமும் இருவித காரணத்தின் லக்ஷணமும் ஜகத்தின் உபாதாநகாரண நிமித்த காரணங்கள் ஈஶ்வரன் எனலும்.

ஈஶ்வர ஸ்வரூபம் கூறப்படுகின்றது :—சுத்த ஸத்வகுண சகிதமாயை, மயையின் அதிஷ்டாந சேதநம், மாயையின்கண்ணுள்ள ஆபாசம் என்னும் மூன்றுஞ் சேர்ந்தது ஈஶ்வர னெனப்படும். அந்த ஈஶ்வரன் சர்வஞ்ஞன். அவனே ஜகத்திற்குக் காரணன்.

காரண மிரண்டு பிரகாரமாம்:—ஒன்று உபாதாந காரணம், மற்றொன்று நிமித்த காரணம். எது காரியத்தின் ஸ்வரூபத்தில் பிரவேசிக்கின்றதோ, எஃதின்றிக் காரியத்தின் ஸ்திதி யில்லையோ அஃது உபாதாந காரணமெனப்படும். எங்ஙனம்? மண் கடத்தின் உபாதாந காரணமாம். கடத்தின் ஸ்வரூபத்தில் அது பிரவேசித்திருக்கின்றது. மண் ணின்றி கடத்திற்கு ஸ்திதி யில்லை. எது ஸ்வரூபத்தில் பிரவேசியாமல் காரியத்திற்குப் பிந்நமாயிருந்து காரியத்தைச் செய்கின்றதோ, எதன் நாசத்தினுல் காரியம் கெடுகின்றதில்லையோ, அது, நிமித்தகாரண மெனப்படும். எங்ஙனம்? கடத்திற்குக் குலாலன், தண்டம், சக்கர முதலியன நிமித்த காரணங்களாம். கடத்தின் ஸ்வரூபத்தில் அவற்றிற்குப் பிரவேச

மில்லை; கடத்திற்குப் பிந்நமாயி (ஸமீபத்தி) ருந்து கடத்தி னுற்பத்தியைச் செய்கின்றன. உற்பத்தியான பின், குலாலன், தண்டம், சக்கரம் முதலியவற்றின் நாசத்தினுல் கடம் கெடுகின்றதில்லை. இந்த ரீதியினுல் உபாதாந மென்றும், நிமித்த மென்றுங் காரண மிரு வகைத்தாம்.

249. ஜகத்திற்கு உபாதாந நிமித்த மென்னு மிரு வகைக் காரணங்களும் ஈஸ்வரனேயாவன். எங்ஙனம்? உலண்டுப் பூச்சி ஒன்றே ஜாலத்திற்கு (வலைக்கு) உபாதாந காரணமும், நிமித்த காரணமும் ஆகின்றதாம். உலண்டுப் பூச்சியின் ஜடமாகிய சரீரம் ஜாலத்திற்கு உபாதாந காரணமாம். அதன் சரீரத்தின்கண்ணுள்ள சேதநபாகம் நிமித்த காரணமாம். ஆதலால், ஈஸ்வரன் ஒருவனையே நிமித்தகாரணமும் உபாதாந காரணமுமாக அங்கீகரிப்பதில் ஒரு திருஷ்டாந்தமு மில்லை யெனின், உலண்டுப் பூச்சியினைப்போல ஈஸ்வரனது சரீர மென்னுஞ் ஜடமாகிய மாயை ஜகத்திற்கு உபாதாந காரணமாம். சேதநபாகம் நிமித்த காரணமாம். இந்த ரீதியினுல், ஈஸ்வர னெருவனே ஜகத்திற்கு உபாதாந நிமித்தகாரணங்க ளாவன். அதில் உலண்டுப் பூச்சி திருஷ்டாந்தமாம். முக்கிய திருஷ்டாந்தம் ஸ்வப்நமாம். எந்தச் சமயத்தில் ஜீவர்களின் கருமம் பலனைக் கொடுத்தற்கு ஸந்முகமாக வில்லையோ, அப்போது பிரளயமாகின்றது. (எப்போது) ஜீவர்களின் கர்மம் பலனைக் கொடுத்தற்கு ஸந்முகமாகின்றதோ, அப்போது சிருஷ்டி உண்டாகின்றது. இந்த ரீதியினுல்,ஸிருஷ்டி, ஜீவர்களின் கர்மாதீநமாம். ஆதலால்,

250. ஜீவனது ஸ்வரூபத்தினைக் கூறுகின்றூர்:—

இரஜோகுண, தமோகுணங்களைத் தாழ்த்துவது சுத்த சத்வ குண மெனப்படும். இரஜோகுண, தமோகுணங்களால் தான் தாழ்ந்து போவது மலிந சத்துவகுண மெனப்படும். அம்மலிந ஸத்துவகுண சகித அஞ்ஞாநத்தின் அம்ஸத்தில் சேதநத்தின் ஆபாசம், அஞ்ஞாநம், அதன் அதிஷ்டாந கூடஸ்தன் என்னும் மூன்றும் சேர்ந்தது ஜீவ னெனப்படும். அந்த ஜீவன் கருமத்தினைச் செய்கின்றுன், பலத்தினை இச்சிக்கின்றுன்.

251. ஈஸ்வரனிடத்தில் விஷம திருஷ்டியும், குரூரத்தன்மையு மின்மை.

அந்த ஜீவனது கர்மாநுசாரமாக உயர்வு, தாழ்வான போகத்தினிமித்தம் ஈஸ்வரன் சிருஷ்டி செய்கின்றுன். ஆதலால், ஈஸ்

வரனிடத்து விஷம திருஷ்டியும், குரூரத் தன்மையு மில்லை. எல்லா வற்றிற்கும் பிரதமமான சிருஷ்டிக்குப் பூர்வம் கர்மமில்லை. பிரதம சிருஷ்டியி லுயர்வு, தாழ்வாகிய சரீரங்களையும், போகங்களையும் ஈஸ்வரன் சிருஷ்டிக்கின்ற ளைகையால், ஈசுவரன் விஷம திருஷ்டி யுடையவ னெனின், அது பொருந்தாது. எதனு லெனின், ஸம் ஸாரம் அநாதியாம். உத்தரோத்தர ஸிருஷ்டியில் பூர்வ பூர்வ ஸிருஷ்டியின் கர்மம் ஹேதுவாம். எல்லா வற்றிற்கும் பிரதமத் தில் ஒரு ஸிருஷ்டியு மில்லை. ஆதலால், ஈஸ்வரனிடத்துத் தோஷ மில்லை.

252. ஜீவர்களது போகத்தின் நிமித்தம் ஈஸ்வரனுக்கு ஜகத்தைச் சிருஷ்டிக்கும் இச்சை யுளதேனல்.

எப்பொழுது ஜீவர்களின் கர்மம் போகங் கொடுப்பதி னின் றும் உதாஸீந மாமோ, அப்பொழுது பிரளய முண்டாகும். பிரளயத்தின்கண் ஸர்வ பதார்த்தங்களின் ஸம்ஸ்காரம் மாயை யில் இருக்கின்றது. ஆதலால், ஜீவர்களின் எஞ்சியிருக்கும் கரும மும் சூட்சுமமாய் மாயையில் இருக்கின்றது. எப்பொழுது கர்மம் போகங் கொடுத்தற்கு ஸன்முகமாமோ, அப்பொழுது ஈஸ்வர னுக்கு "ஜீவர்களுடைய போக நிமித்தம் ஜகத்தினை உண்டாக்கு வதாம்" என்னும் இச்சை உண்டாகின்றது.

ஸூக்ஷ்ம ஸிருஷ்டி நிரூபணம்.

253. பஞ்ச பூதமும், அவற்றின் குணங்களும் உற்பத்தியாதல்.

இவ்வித ஈஸ்வரன திச்சையினல் மாயை தமோகுணப்பிர தான மாகின்றது. அத்தமோகுணப் பிரதாந மாயையி னின்றும் ஆகாயம், வாயு, அக்நி, அப்பு, பிருதிவி யென்னும் பஞ்ச பூதங்க ளுண்டாயின. அப்பூதங்களில் கிரமமாக சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரஸம், கந்த மென்னும் ஐந்து குணங்கள் இருக்கின்றன. மாயையி னின்றும் சப்தத்தோடுகூடிய ஆகாய முண்டாகின்றது. ஆகா யத்தினின்றும் வாயு உண்டாகின்றது. வாயு ஆகாயத்தின் காரியமாம். ஆகையால், ஆகாயத்தின் சப்தகுணம் வாயுவி லிருக்கின்றது; தன் குணம் ஸ்பரிசமாம். வாயுவினின்றும் அக்கி யுண்டாம். அந்த அக்நியில், ஆகாயத்தின் குணமாகிய சப்தமும், வாயுவின் குணமாகிய ஸ்பரிசமும், தன் குணமாகிய ரூபமு மிருக்கின்றன. அக்நியி னின்றும் அப்பு (ஜலம்) உண்டாம்.

அந்த அப்புவில் ஆகாயத்தின் குணமாகிய சப்தமும், வாயுவின் குணமாகிய ஸ்பரிசமும், தேயுவின் குணமாகிய ரூபமும், தன் குணமாகிய ரஸமு மிருக்கின்றன. அப்புவினின்றும் பிருதிவி யுண்டாகும். அந்தப் பிருதிவியில் ஆகாயத்தின் குணமாகிய சப்தமும், வாயுவின் குணமாகிய ஸ்பரிசமும், தேயுவின் குண மாகிய ரூபமும், அப்புவின் குணமாகிய இரசமும், தன் குணமா கிய கந்தமு மிருக்கின்றன.

ஆகாயத்தின்கண் பிரதித்துவனிரூப சப்த முண்டு. வாயு வின்கண் ஸீ ஸீ என்னுஞ் சப்தமும், உஷ்ண, சீத கடிநங்களின் விலக்ஷண ஸ்பரிசமு முள. அக்நியின்கண் புக் புக் என்னுஞ் சப்த மும், உஷ்ண ஸ்பரிசமும், பிரகாசமு முள. அப்புவில் சுலு சுலு என்னுஞ் சப்தமுஞ், சீத பரிசமுஞ், சுக்கில ரூபமும், மதுர ரஸமு மிருக்கின்றன. உவர்ப்பும் கைப்பும் பிருதிவியின் ஸம்பந் தத்தினுல் அப்புவில் பிரதீதியாகின்றன. அப்புவிற்கு ரசம் மதுர மேயாம். அந்த மதுரத்தன்மை கடுக்காய் (நெல்லிக்கனி) முதலிய வற்றைத் தின்று ஜலபாநஞ் செய்யில் வெளிப்படுகின்றது. பிருதி வியில் கடகடவென்னுஞ் சப்தமும், உஷ்ண, சீத விலக்ஷணமாகிய கடின ஸ்பரிசமும், சுவேதம் (வெளுப்பு), நீலம், பீதம் (மஞ்சள்), ரத்தம், அரிதம்(பச்சை)முதலிய ரூபங்களும், தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, உறைப்பு, கைப்பு, துவர்ப்பு என்னும் ரசமும், சுகந்தம் துர்க்கந்த மென்னும் மிருவகைத்தாய கந்தங்களு மிருக்கின்றன.

இவ்வாற்றால், ஆகாயத்தி லொன்றும், வாயுவி லிரண்டும், அக்கினியில் மூன்றும், அப்புவில் நான்கும், பிருதிவியில் ஐந் தும் குணங்களாம். அவற்றில், ஒவ்வொன்று தன் குணமாம். அதிகம் காரணத்தின் குணங்களாம். எல்லாவற்றிற்கும் மூல காரணம் ஈஶ்வரவன்; அவனிடத்தில் மாயை, சேதந மென்னும் இரண்டு பாகங்கள் உள. எல்லாப் பூதங்களிலும் மித்தியாபாகம் மாயையினதும், சத்தா ஸ்பூர்த்தி சேதநத்தினதுமாம்.

254 நான்கு பேதங்களோடு அந்தக்கரணத்தின் உற்பத்தி.

பூதங்களின் ஸத்துவகுணும்சங்கள் கூடி சத்துவ மென்னும் அந்தக்கரணத்தை யுண்டாக்குகின்றன. அந்தக்கரணம் ஞானத் திற்கு ஹேதுவாம். ஞாநத்தின் உற்பத்தி ஸத்வ குணத்தினின் றும் அங்கீகரிக்கப்படுகின்றது. ஆதலால், அந்தக்கரணம் பூதங் களின் ஸத்வகுணத்தின் காரியமாம். பஞ்ச பூதங்களின் காரிய

மாகிய ஞாநேந்திரியங்களைந்திற்கும் சகாயமாம். ஆதலால், பஞ்ச பூதங்களும் சேர்ந்த ஸத்துவகுணத்தினுல் அந்தக்கரணத்தி னுற்பத்தி சொல்லப்பட் டிருக்கின்றது. தேஹத்தி னுள்ளிருந்து ஞாநத்தின் சாதநமா யிருத்தலால் அந்தக்கரண மெனப்படும். பூதங்களின் ஸத்வகுணத்தின் காரியமாயிருத்தலால் அந்தக்கர ணத்திற்குச் சத்துவ மெனவும் நாமமாம்

அந்தக்கரணத்தின் பரிணுமத்தினை விருத்தி யென்பர். அவ் வந்தக்கரணத்தின் விருத்தி நான்காம். பதார்த்தங்களின் நன்கு தீங்குகளின் ஸ்வரூபத்தினை நிச்சயஞ் செய்கின்ற விருத்தி, புத்தி யெனப்படும். சங்கற்ப, விகற்ப விருத்தி மன மெனப்படும். சிந்தை செய்யும் விருத்தி, சித்த மெனப்படும். "நான்" என்னும் அபிமான விருத்தி அகங்கார மெனப்படும்.

### 255. ஐந்து பேதங்களோடு பிராணனது உற்பத்தி.

பஞ்ச பூதங்களின் ஸமஷ்டி ரஜோகுணும்சத்தினுல் பிராண னது உற்பத்தியாம். அந்தப் பிராணன் கிரியையின் பேதங்களி னுலும், ஸ்தான பேதங்களினுலும் ஐந்து பிரகாரமாம். எதற்கு ஹிருதயம் ஸ்தாநமும், பசி தாகம் கிரியையாமோ, அது பிரா ணன் எனப்படும். எதற்குக் குதம் ஸ்தாநமும், மூத்திர மலங்களைக் கீழ்க்கொண்டு போதல் கிரியையாமோ, அஃதபாநனும். எதற்கு நாபி ஸ்தாநமும், புசித்தல் குடித்தல் செய்யும் அந்ந ஜலங்களைப் பாசந (பாக) யோக்கியமாகிய சமஞ் செய்யுங் கிரியையோ, அது ஸமாநனும். எதற்குக் கண்டம் ஸ்தாநமும், ஶ்வாஸம் கிரியை யோ, அது உதாநனும். எதற்கு ஸர்வ சரீரமும் ஸ்தாநமும், ரஸத்தினை யிழுத்துச் செல்லுதல் கிரியையுமோ, அது வியாநனும்.

சிலவிடத்தில், நாகன், கூர்மன், கிரிகலன், தேவதத்தன், தநஞ் ஜயன் என்னும் பஞ்சப் பிராணன்கள் அதிகமாகக் கூறப்பட்டிருக் கின்றன. அவற்றிற்கு வாந்தி செய்தல், தும்மல், கொட்டாவி விடுதல், பிண சரீரத்தினை வீங்கச் செய்தல் என்பன கிரமமாகக் கிரியை எனப்படுகின்றன. பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகா சம் என்னும் ஐந்தின் ரஜோகுணும்சங்களி னின்றும் ஒவ்வொன் றிற்கும் கிரமமாக உற்பத்தி கூறி யிருக்கின்றனர். அபாநன், ஸமா நன், பிராணன், உதாநன், வியாநன் என்பவற்றிற்கும் பிருதிவி, முதலியவற்றின் ஒவ்வொரு ரஜோ குணும்சங்களி னின்றும் உற்

பத்தி கூறி யிருக்கின்றனர். ஸமஷ்டி ரஜோகுணும்சத்தி னின்றும் உற்பத்தி சொல்லவில்லை.

ஆயினும், அத்வைத சித்தாந்தத்தி லிந்தப் பிரக்கிரியை யில்லை. எதனு லெனின், வித்தியாரண்ய சுவாமிகளும் பஞ்சிகரணத்தின் கண் வார்த்தீககாரரும், சூட்சும சரீரத்திலும் பஞ்சகோசத்திலும் நாகன், கூர்மன் முதலியவற்றைக் கிரகணஞ் செய்ய வில்லை. அவர்கள் அபாநன் முதலிய பஞ்சப் பிராணங்களி னுற்பத்தியும் பூதங்களின் ஸமஷ்டி ரஜோகுணும்சத்தி னின்றும் உண்டானதாகக் கூறியுளர். ஆதலால், வியஷ்டி ரஜோ குணும்சத்தி னின்றும் அபாநாதிகளி னுற்பத்தி கூறுதல் அசங்கதமாம். சூட்சும சரீரத்தில் நாகன், கூர்மன், முதலியவற்றைக் கிரகணஞ் செய்தலும் அசங்கதமாம். பஞ்சப் பிராணன்களே சூட்சும சரீரத்தில் கிரஹிக்கத்தக்கன. பிராணன் விக்ஷேப ரூபமாம் விக்ஷேப ஸ்வபாவம் ரஜோகுணத்தினதாம். ஆதலால், பூதங்களின் ரஜோகுணும்சத்தி னின்றும் பிராணனது உற்பத்திக் கூறப்பட்டிருக்கின்றது.

256. ஞானேந்திரிய கர்மேந்திரியங்களின் உற்பத்தி.

வியஷ்டி பூதங்களின் ஸத்துவ குணும்சத்தி னின்றும் ஐந்து ஞானேந்திரியங்க ளுண்டாயின. வியஷ்டி ரஜோகுணும்சத்தி னின்றும், ஒவ்வொரு கர்மேந்திரியங்க ளுண்டாகின்றது. ஆகாயத்தின் ஸத்துவகுணும்சத்தினின்றும் சுரோத்திரமும், வாயுவின் ஸத்வ குணும்சத்தினின்றும் த்வக்கும், தேயுவின் சத்துவகுணும்சத்தி னின்றும் சக்ஷுவும், அப்புவின் சத்துவ குணும்சத்தினின்றும் ரஸனையும், பிருதிவியின் ஸத்வகுணும்சத்தினின்றும் கிராணமுமுண்டாகின்றன. இப்பஞ்சேந்திரியங்களும் ஞானத்தின் சாதநமாம். ஆதலால், ஞானேந்திரியமெனப்படும். ஞானம், சத்துவ குணத்தினு லுண்டாமாதலால் பூதங்களின் சத்துவ குணத்தினின்றும் உற்பத்தி கூறப்பட்டிருக்கின்றது. சுரோத்திரேந்திரியம் ஆகாயத்தின் குணத்தைக் கிரகணஞ்செய்கின்றதாதலால் அதற்காகாயத்தினின்றும் உற்பத்தி கூறப்பட்டிருக்கின்றது. அதுபோல் எப்பூதங்களின் குணத்தினை எந்த இந்திரியம் கிரஹிக்கின்றதோ அப்பூதத்தினின்றும் அந்த இந்திரியம் உண்டானதாகக் கூறப்படும். ஆகாயத்தின் ரஜோகுணும்சத்தினின்றும் வாக்கிந்திரியமும், வாயுவின் ரஜோகுணும் சத்தினின்றும் பாணி இந்திரியமும், தேயு

வின் ரஜோகுணம் சத்தினின்றும் பாதேந்திரியமும், அப்புவின் ரஜோகுணம்சத்தினின்றும் உபஸ்தேந்திரியமும், பிருதிவியின் ரஜோகுணம்சத்தி னின்றும் குதேந்திரியமு முற்பத்தியாயின. ஸ்திரீயின் யோனியிலும் புருஷனது சிஸ்நத்திலும் உள்ள விஷயாநந்தத்திற்குச் சாதநமான இந்திரியம் உபஸ்தம் எனப்படும். கர்மமென்னும் நாமம் கிரியைக்காம்.

இப்பஞ்சேந்திரியங்களும், கிரியைக்குச் சாதநமாகையால் கர்மேந்திரியங்க ளெனப்படும். கிரியை ரஜோகுணத்தினுலுண்டாகாநின்றது. ஆதலால், பூதங்களின் ரஜோகுணம்சத்தினின்றும் இவற்றின் உற்பத்தி கூறப்பட்டிருக்கின்றது. இவ்வாறு ஸூக்ஷ்ம ஸிருஷ்டி நிரூபிக்கப்பட்டது

257. அபஞ்சிகிருத பூதங்கள், அவற்றின் காரியமாகிய அந்தக்கரணம், பிராணன், கர்மேந்திரியம், ஞாநேந்திரியம் என்பன ஸூக்ஷ்ம ஸிருஷ்டி யெனப்படும். ஸூக்ஷ்ம ஸிருஷ்டியின் ஞாந மிந்திரியங்களினு லுண்டாகாது. நேத்திரம், நாசிகை முதலிய கோளகங்களோ இந்திரியங்களின் விஷயமாம். ஆயினும், அக்கோளகங்களிலுள்ள இந்திரியங்கள் ஓரிந்திரியங்கட்கும் விஷயமாகா. ஸூக்ஷ்ம ஸிருஷ்டியி னுற்பத்தியின் அநந்தரம் ஈஶ்வரன திச்சையினுல் ஸ்தூல ஸிருஷ்டியினிமித்தம் பூதங்களின் பஞ்சீகரணம் உண்டாயின.

## பஞ்சீகரணம்.

### 258. பஞ்சீகரணத்தின் பிரகாரம்.

பஞ்சீகரணம் இருவகையாகக் கூறப்பட்டிருக்கின்றது:—ஒவ்வொரு பூதம் இரண்டிரண்டுபாகமாய்ச் சமமாக, ஒவ்வொரு பாகமும் நான்குபாக மாக்கப்பட்டன. பஞ்சபூதங்களின் அரை, அரைப் பாகங்களாகிய முற்பாதி வேருயிருந்தபடியிருந்தன; அரை அரைப் பாகங்களின் நந்நான்கு பாகங்கள் வேருயிருந்த பெரிய அரைப் பாகங்களில் தத்தம் பாகங்களை யொழித்துக் கூட்டினமையால் ஸர்வபூதங்களிலும் தத்தம் அரைப்பாகமும் தன்னின் இதரமாகிய நான்கு பூதங்களின் அரைப்பாகமுங்கூடின் பஞ்சீகரண மென்று சொல்லப்படுகின்றது.

மற்று மொரு பஞ்சீகரணப் பிரகாரம் இதுவாம்:—ஒவ்வொரு பூதம் இரண் டிரண்டு பாகமானது. அது சம மன்று. ஆனுல், ஒரு

பாகம் நான்கம்சமும், மற்றொருபாகம் ஐந்தம்சமுமாம். இவ்வாறு நியூன,அதிகமான இரண் டிரண்டு பாகங்களாயின. அவற்றினுள், எல்லாவற்றினும் அதிக பாகங்கள் இருந்தபடி இருக்க, பஞ்ச பூதங்களின் நியூனமாகிய ஐந்துபாகங்களின் ஒவ்வொரு பாகத்தினை ஐந்து பாகம் செய்து தனித்தனி யிருந்த அதிகமாகிய ஐந்து பாகங்களில் ஒவ்வொரு பாகம் சேர்ந்து பஞ்சீகரணமாயின.

முதல் பக்ஷத்தில் ஒருபாகத்தி னன்கு பாகங்கள்,தனித்தனி யிருந்த அரையரைப்பாகங்களில் தம்பாகத்தை யொழித்துக் கூடின. இரண்டாவது பக்ஷத்தில் நியூனபாகத்தின் ஐந்துபாகங்கள் தனித்தனியிருந்த அதிகமாகிய ஐந்துபாகங்களில் தன் பாக சகிதத்தில். கூடின. முதற்பக்ஷத்தில் பஞ்சிகிருத பூதங்களில் தனதம்சம் பாதியும், மற்றைய பூதங்களின் அம்சம் பாதியுமாம். இரண்டாம் பக்ஷத்தில் பஞ்சீகரணஞ் செய்ததனல் தன்னம்சமிருபத்தொன்றும், மற்றையவற்றின் அம்சம் நான்குமாம்.

இரண்டாம் பக்ஷத்திற் சுகம (எளிதான) ரீதி இதுவாம்:— ஒவ்வொரு பூதமும் இருபத்தைந் திருபத்தைந்து பாகங்களாயின்,இருபத்தொரு இருபத்தொரு பாகங்களும், நந்நான்கு பாகங்களும் வேருயிருந்தன. நந்நான்கு பாகங்களில் ஒவ்வொரு பாகம் தன் இருபத்தொரு பாகங்களை யொழித்து, (ஏனைய பூதங்களின்) இருபத்தொரு இருபத்தொரு பாகங்களில் கூடுகின்றன. இவ்வாறிரண்டு பிரகாரமாகப் பஞ்சீகரணம் கூறப்பட்டிருக்கின்றது. ஒவ்வொரு பூதத்தில் ஐந்து ஐந்து பூதங்களைக் கூட்டிச் செய்வதற்குப் பஞ்சீகரண மென்று பெயராம். எந்தப் பூதம் பஞ்சீகரணஞ் செய்யப்படுகின்றதோ, அப்பூதத்தைப் பஞ்சிகிருத மென்பர்.

### 259. ஸ்தூலப் பிரஹ்மாண்டாதிகளின் உற்பத்தி.

அப்பஞ்சிகிருத பூதங்களினின்றும் இந்திரியங்கட்கு விஷயமான ஸ்தூலப் பிரஹ்மாண்டம் உண்டாயிற்று. அப்பிரஹ்மாண்டத்தினுள், பூர்லோக, புவர்லோக, ஸுவர்லோக, மஹர்லோக, ஜநலோக, தபலோக, ஸத்திய லோக மென்னும் மேல் ஏழு புவநங்களு முண்டாயின. அதலம், ஸுதலம், பாதாளம், விதலம், ரஸாதலம், தலாதலம், மகாதலம் என்னும் கீழ் ஏழுலோகங்களு முண்டாயின. அந்தச் சதுர்த்தச லோகங்களில் ஜீவர்களின் போக போக்கியமாகிய அன்னுதிகளும், போகத்தின் ஸ்தானமாகிய

தேவ, மநுஷ்ய, பசு முதலிய ஸ்தூல சரீரங்களு முண்டாயின. இவ்வாறு ஸங்க்ஷேபமாகச் சிருஷ்டி நிரூபிக்கப்பட்டது.

மாயையின் காரியங்களை விஸ்தாரமாக நிரூபணஞ் செய்தால் கோடி பிரஹ்மாக்களின் ஆயுள்களினாலும் மாயையினால் இயற்றப் பட்ட பதார்த்தங்களின் நிரூபணத்திற்கு முடிவுண்டாகா தென்ப தனை வான்மீகி யென்பவர் அநேக இதிகாசங்களினால் வாசிஷ்டத் தில் நிரூபித்திருக்கின்றனர்.

ஆத்ம விவேகம். (பஞ்சகோச விவேகம்).

260. பஞ்சகோசங்களும் அவற்றினால் ஆத்மா மறைக்கப்படுதலும்.

மாயை, அதன் காரியங்களில் மூன்று சரீரங்களும் பஞ்ச கோசங்களு முள. சுத்த சத்துவகுணசகித மாயை, ஈஸ்வரனது காரண சரீரம்; மலிந ஸத்வகுண சகித அவித்தியா அம்சம் ஜீவ னது காரண சரீரமாம். உத்தர சரீரத்தி னாரம்பகமாகிய பஞ்ச சூக்ஷ்ம பூதங்கள், மநம், புத்தி, சித்தம், அஹங்காரம், பஞ்சப் பிராணன், பஞ்ச கர்மேந்திரியங்கள், பஞ்ச ஞானேந்திரியங்கள் என்னும் இவை ஜீவனது ஸூக்ஷ்ம சரீரமாம். ஸர்வ ஜீவர் களின் ஸூக்ஷ்ம சரீரங்களுமே சேர்ந்து ஈஸ்வரனது ஸூக்ஷ்ம சரீரமாம்.

சம்பூர்ண ஸ்தூலப் பிரஹ்மாண்டமும் ஈஸ்வரனது ஸ்தூல சரீரமாம். ஜீவர்களின் வியஷ்டி, ஸ்தூல சரீரங்கள் பிரசித்தங் களாம். இம்மூன்று சரீரங்களிலேயே பஞ்சகோசங்க ளுள. காரண சரீரத்தை ஆநந்தமயகோச மென்பர். விஜ்ஞாநமயம், மனோமயம், பிராணமயம் என்னும் மூன்று கோசங்களும் ஸூ க்ஷ்ம சரீரத்தின்க ணுள்ளன. பஞ்ச ஞானேந்திரியங்களும், நிச் சயரூபமாகிய அந்தக்கரண விருத்தியென்னும் புத்தியும், விஜ்ஞாந மயகோச மெனப்படும். பஞ்ச ஞானேந்திரியங்களும் சங்கற்ப விகற்பரூபமாகிய அந்தக்கரண விருத்தியென்னும் மநமும், மனோமயகோச மெனப்படும். பஞ்சப் பிராணனும் பஞ்ச கன்மேந்திரியங்களும், பிராணமய கோசமாம். ஸ்தூல சரீ ரத்தை அந்நமயகோச மென்பர். இந்த ரீதியினால், மூன்று சரீரங்களிலேயே பஞ்சகோசங்க ளுளவாம். ஈஸ்வரனது சரீரத் தில் ஈஸ்வரனது கோசங்களும், ஜீவனது சரீரத்தில் ஜீவனது கோசங்களு மிருக்கின்றன. கோச மென்னும் நாமம் உறைக்

காம். உறையைப்போலப் பஞ்ச கோசங்கள் ஆத்மாவின் ஸ்வரூபத்தை யாச்சாதநஞ் செய்கின்றன. ஆதலால், அந்நமய முதலியன கோச மெனப்படுகின்றன. அநேக மந்தமதியுள்ள புருடர் பஞ்ச கோசங்களி லுள்ள அநாத்ம பதார்த்தங்களில் ஒன்றை ஆத்மாவாக மதித்து முக்கிய சாக்ஷியாகிய ஆத்ம ஸ்வரூபத்தினின்றும் பகிர்முக முடையரேயாயுளர். ஆதலால், அந்நமய முதலியன ஆத்ம ஸ்வரூபத்தை ஆச்சாதநஞ் செய்கின்றன.

### 261 விரோசனனது சித்தாந்தம்.

### (அந்நமய கோசம் ஆத்மா)

ஆண்டு விரோசன மதாநுசாரியராகிய அநேக பாமரர் ஸ்தூல சரீரரூப அந்நமய கோசத்தையே ஆத்மா வென்கின்றனர். இந்த யுத்தியுங் கூறுகின்றனர்:—எதில் அகம்புத்தி யுண்டாமோ அஃதாத்மாவாம். அவ்வகம் புத்தி ஸ்தூல சரீரத்தின்கணுண்டாகாநின்றது. "நான் மநுஷ்யன், நான் பிராமணன்" என்னும் பிரதீதி எல்லோர்க்கு முண்டாகின்றது. மநுஷ்யத்தன்மை, பிராமணத்தன்மைகள் ஸ்தூல சரீரத்தின்கண்ணே யுள. ஆதலால், ஸ்தூல சரீரமே அகம் புத்திக்கு விஷயமாவதால் ஆத்மாவாம். அன்றியும், எதில் முக்கியப் பிரீதி யுண்டாமோ அஃதாத்மாவாம். ஸ்திரீ, புத்திரன், தநம், பசு முதலியன ஸ்தூல சரீரத்திற்கு உபகாரம் செய்வதாயின் அவற்றின்கண் பிரீதி யுண்டாகின்றது. ஸ்தூல சரீரத்திற்கு உபகாரமாகாவிடின் பிரீதி யுண்டாவ தில்லை. எதன் நிமித்தம் அந்நிய பதார்த்தத்திற் பிரீதி யுண்டாமோ, அத்தூல சரீரத்திலேயே முக்கியப் பிரீதி யுளதாதலால், ஸ்தூல சரீரமே ஆத்மாவாம். வஸ்திரம், பூஷணம், அஞ்சநம், மஞ்சநம், நாளுவித போஜனங்களினு லதனை சிருங்கரித்து (அலங்கரித்து)ப் போஷிப்பதே பரம புருஷார்த்தமாம். இது அசுரஸ்வாமி யாகிய விரோசனனது சித்தாந்தமாம்.

### 262. இந்திரியாத்ம வாதியின் மதம். (இந்திரியம் ஆத்மா).

வேறு சிலர் இவ்வாறு கூறுகின்றனர்:—ஸ்தூல சரீரமே ஆத்மா வன்று. ஆனல், ஸ்தூல சரீரத்தில் எதன் இருப்பினல் ஜீவந வியவகார முண்டாமோ, எது இல்லாவிட்டால் மரண வியவகார முண்டாமோ அவ்வாத்மா ஸ்தூல சரீரத்ினும் பிந்நமாம். ஜீவந, மரணங்கள் இந்திரியங்களின் அதீநமாம். எவ்வளவு

காலஞ் சரீரத்தின்கணிந்திரிய மிருக்குமோ அவ்வளவு காலஞ் ஜீவநம் உண்டாகின்றது. ஓர் இந்திரியமும் இல்லாவிட்டால் அப்பொழுது மரண மெனப்படும். "நான் பார்க்கின்றேன், நான் கேட்கின்றேன், நான் வசநிக்கின்றேன்" என்று இவ்வாறு அகம் புத்தியு மிந்திரியங்களி லுண்டாகின்ற தாதலால், இந்திரியமே ஆத்மாவாம்.

## 263. ஹிரண்யகர்ப்பனை உபாஸிப்பவர் மதம்.

### (பிராணன் ஆத்மா).

ஹிரண்யகர்ப்ப உபாஸகர் பிராணனை ஆத்மா வென்பர். அதில் இந்த யுக்தியைக் கூறுவர்:—எப்போது மரண சமயத்தில் மூர்ச்சை யுண்டாமோ, அப்போ தவனது சம்பந்தியாகிய புத்திரர் முதலியோர் பிராணன் இருந்தால் ஜீவித்திருப்பதாயும், பிராணன் இல்லாவிடின் மரணமாய் விட்டதாயும் அறிகின்றனர்.

அன்றியும், சரீரத்தின்கண் நேத்திரேந்திரிய மில்லையாயின், குருடன் சரீர மிருக்கின்றது. சுரோத்திரேந்திரிய மில்லையாயின், செவிடன் (சரீரம்) இருக்கின்றது. வாக்கிந்திரிய மில்லையாயின், ஊமையன் (சரீரம்) இருக்கின்றது என்று எவ்விந்திரிய மில்லையோ, அதன் வியாபார மன்றியுஞ் சரீரம் நிலையாகவே யிருக்கின்றது. பிராண னீங்குமாயின், அக்கணமே (தேகம்) மயாநத்திற்குச் சமாநமாக அமங்களமாய்ப் பயங்கரமாகி விழாநின்றது. "நான் பார்க்கின்றேன், கேட்கின்றேன்" என்னும் பிரதீதியினுனு மிந்திரியங்களினும் பிந்நமாகவே ஆத்மா சித்த மாகின்றது. எதனுலெனின், "நேத்திர ஸ்வரூபமாகிய நான் பார்க்கின்றேன், சிரவண ஸ்வரூபமாகிய நான் கேட்கின்றேன்" என்று பிரதீதியாமாயின், இந்திரியரூப ஆத்மா சித்தமாம். ஆனுல், "நேத்திரத்தையுடைய நான் பார்க்கின்றேன், சுரோத்திரேந்திரியத்தை யுடைய நான் கேட்கின்றேன்" என்று பிரதீதி யுண்டாகின்ற தாதலால், இந்திரியங்களினும் பிந்நமாகவே ஆத்மா உளதாம்.

சுழுத்தியின்கண் சர்வேந்திரியங்களும் அபாவமாகின்றனவாயினும், பிராணன திருப்பினுல் ஜீவந வியவகார மிராநின்றது. ஆதலால், ஜீவந, மரணங்களு மிந்திரியங்களி னதீந மன்றும்; பின்னையோ, ஸ்தூல சரீரப் பிராணன்களின் வியோகத்தை மரண

மென்கின்றனர். ஆதலால், ஜீவந, மரணங்கள் பிராணனது ஆதீந மேயாம். அஃது ஆத்மாவாம்.

### 264. மன ஆத்ம வாதியின் மதம். (மனம் ஆத்மா.)

வேறு சிலர் இவ்வாறு கூறுகின்றனர்:-பிராணன் ஜடமாம். ஆதலால், கடம்போன்று அனாத்மாவாம். பந்த மோக்ஷங்கள் மநத்தினதீநமாம். விஷயத்தின்கண் ஆசையுள்ள மநம் பந்தத்திற் கேதுவாம். விஷயவாசனை யின்றிய மநம் மோக்ஷத்திற்கு ஹேது வாம். மநத்தின் சம்பந்தத்தினுலேயே யிந்திரியங்கள் ஞாநத் திற்கு ஹேதுவாகின்றன. மநத்தின் சம்பந்த மின்றி யிந்திரியங் களினுல் ஞாந முண்டாகா. ஆதலால், ஸர்வ வியவகாரத்திற்கும் ஹேது மநமாம். அதுவே ஆத்மாவாம்.

### 265. விஞ்ஞாந வாதி பௌத்தரது மதம். (புத்தி ஆத்மா).

க்ஷணிக விஞ்ஞாநவாதி யென்னும் பௌத்தர் இங்ஙனம் கூறு கின்றனர்:—மநத்தினது வியாபாரம் புத்தியின் அதீநமாம். எதனு லெனின், புத்தியின தாகாரமே மநமாகின்றது. ஆதலால், க்ஷணிக விஞ்ஞாந ரூப புத்தியே ஆத்மாவாம்; மந மன்றும். அவர்களின் அபிப்பிராயம் இதுவாம்:—எல்லாப் பதார்த்தங்களும் விஞ்ஞாநத் தின தாகாரமேயாம். அவ்விஞ்ஞாநம் பிரகாச ரூபமாம். ஒவ் வொரு க்ஷணத்திலும் விஞ்ஞாநத்தி னுற்பத்தியும் நாசமு முண் டாகின்றன. பூர்வ விஞ்ஞாநத்திற்குச் சமாநமாக அந்ய விஞ்ஞா நத்தி னுற்பத்தி உண்டாய், பூர்வ விஞ்ஞாநத்தின் நாசம் உண்டா கின்றது. அங்ஙனமே மூன்ருவது விஞ்ஞாநத்தின் உற்பத்தியும் இரண்டாவது விஞ்ஞாநத்தின் நாசமும், நான்காவத னுற்பத்தியும் மூன்ருவத னுசமும் உண்டாகின்றன. இந்த ரீதியினுல், நதியின் பிரவாஹம்போல் விஞ்ஞாநத்தினது தாரை பொருந்தி யிருக்கின் றது. விஞ்ஞாநத்தினது தாரை இருவகைத்தாம். ஒன்று ஆலய விஞ்ஞாந தாரை, மற்ருென்று பிரவிர்த்தி விஞ்ஞாந தாரையாம்.

"அஹம் அஹம்" என்னும் விஞ்ஞாந தாரையை ஆலய விஞ்ஞாந தாரை யென்பர். அதனையே புத்தி யென்பர். "இது கடம், இது சரீர"மென்னும் விஞ்ஞாந தாரையினைப் பிரவிருத்தி விஞ்ஞாந தாரை யென்பர். ஆலய விஞ்ஞாந தாரையி னின்றும் பிரவிர்த்தி விஞ்ஞாந தாரை உற்பத்தியாகின்றது. மநத்தின் ஸ்வரூபமும், பிரவிர்த்தி விஞ்ஞாந தாரையின்கண் உளதாம்.

ஆதலால், ஆலய விஞ்ஞாந தாரைரூப புத்தியின் காரியமாம். அந்தப்புத்தியே ஆத்மாவாம். ஆலய விஞ்ஞாந தாரையின்கண் பிரவிர்த்தி விஞ்ஞாந தாரையினது பாத சிந்தநத்தினு னிர்விசேட, க்ஷணிக விஞ்ஞாந தாரையின் ஸ்திதியே அவரது மதத்தில் மோக்ஷமாம். இவ்வாறு, விஞ்ஞாந வாதி புத்தியையே க்ஷணிக ரூபமும் ஸ்வயம் பிரகாச ரூபமுமாகக் கற்பனை செய் தாத்மா வென்கின்றனர்.

266. பட்டரது மதம். (ஆநந்தமய கோசம் ஆத்மா).

பூர்வ மீமாஞ்சையின் வார்த்திகக் காரரான பட்டர் இவ்வாறு சொல்லுகின்றனர்:—மின்னல் போல க்ஷணிக ரூபம் ஆத்மா வன்று. ஆனால், ஸ்திரஸ்வரூபமான ஆத்மா, ஜடஸ்வரூபமுஞ் சேதநஸ்வரூபமுமா மென்று கூறுவர். அவரது அபிப்பிராய மிதுவாம்:— சுழுத்தியினின்றும் விழித்த புருஷன் 'நான் ஜடனு யுறங்கினேன்' என்று கூறுகின்றன னுதலால், ஆத்மா ஜட ரூபமாம். விழித்தோனுக்கு ஸ்மிருதி யுண்டாகின்றது. அஞ்ஞாநத்தின் ஸ்மிருதி யுண்டாகாது. சுழுத்தியின்கண் ஞாநத்திற் காத்மஸ்வரூபத்தினும் பிந்நமாய் வேறு சாதந மில்லை. ஆதலால், ஆண்டு ஸ்மிருதியின் ஹேதுவாகிய ஞாந மிருக்கின்றது. அஃதாத்மாவினது ஸ்வரூபமேயாம். இந்த ரீதியினுன் மின்மினிபோன் ருத்மா பிரகாசரூபமும் அப்பிரகாச ரூபமுமாம். ஞாநரூப மாதலால் பிரகாசரூபமும், ஜடரூப மாதலால் அப்பிரகாச ரூபமுமாம். அந்தப் பிரகாச ரூபமு மப்பிரகாசரூபமு மாநந்தமய கோசமாம். எதனு லெனின், சுழுத்தியின்கண் ணுள்ள சேதநத்தி னுபாசசகித அஞ்ஞாநத்தினை ஆநந்தமய கோச மென்பர். ஆண்டு ஆபாஸமோ, பிரகாசரூபமாயும், அஞ்ஞாநம் அப்பிரகாசரூபமாயு மிருக்கின்றன. ஆதலால், பட்டரது மதத்தில் ஆநந்தமய கோசமே ஆத்மாவாம்.

267. மாத்தியமிக பௌத்தர(சூந்யவாதியின)து மதம். (ஆநந்தமய கோசம் ஆத்மா).

சூந்யவாதி யென்னும் பௌத்தர் இங்ஙனம் கூறுகின்றனர்:- ஆத்மா நிரம்சமாம். ஆதலால், ஓர் ஆத்மாவைப் பிரகாசரூபமாகவும், அப்பிரகாச ரூபமாகவும் கூறுதல் பொருந்தாது. மின்மினியின் ஓர் அம்சம் பிரகாச ரூபமாம்; மற்றோ ரம்சம் அப்பிரகாச ரூபமாம். அதுபோல் அம்ச ரகித ஆத்மாவில் இரண்டு

ரூபங்களைக் கூறுதல் அசங்கதமாம். ஆதலால், இரண்டு ரூபங்கள் சித்தித்தற் பொருட்டு, ஆத்மாவை அம்ச ஸகிதமாகவே ஒப்ப வேண்டும். அம்சத்தையுடைய கடாதி பதார்த்தங்கள் உற்பத்தி நாசங்களை யுடையனவாம். அப்படியே ஆத்மாவும் அம்ச ஸகித மாவதா லுற்பத்தி நாசங்களை யுடையதாகவே ஒப்பவரும். உற்பத்தி நாசங்களை யுடைய பதார்த்தம் உற்பத்திக்குப் பூர்வமும் நாசத்திற் கநந்தரமும் அசத்தாம். எது ஆதியிலு மந்தத்திலு மசத்தாமோ, அது மத்தியிலுஞ் சத்தாகமாட்டாது; ஆனல், மத்தியிலும் அசத்தாகவே யிருக்கும். ஆதலால், ஆத்மா அசத்து ரூபமாம். அங்ஙனமே ஆத்மாவினும் பிந்நமாகிய ஸகலபதார்த்தங்களு முற்பத்தி நாசங்களை யுடையனவா மாதலால் அசத்து ரூபங்களாம். இவ்வாறு, ஆத்மானத்மாக்க ளென்னுஞ் ஸர்வ வஸ்துக்களும் அசத்துரூப மாகின்றமையால் சூந்யமே பரம தத்துவமாம். இது சூந்யவாதி யென்னும் மாத்தியமிக பௌத்தரது மதமாம்.

அவர்களும் அஞ்ஞாநரூப ஆநந்தமய கோசத்தைப் பிரதிபாதநஞ் செய்கின்ருர்கள். எதனு லெனின், அஞ்ஞாந மூவகை ரூபமாகப் பிரதீதி யாகின்றது. அத்வைத சாஸ்திரத்தின் சம்ஸ்காரமின்றிய மூடர்க்கு ஜகத்துரூபப் பரிணமத்தை யடைந்த அஞ்ஞாநஞ் சத்தியமாகப் பிரதீதியாகாநின்றது. அத்வைத சாஸ்திராநுசார யுக்தியில் நிபுண பண்டிதர்க்குச் சதசத்தின் விலக்ஷணமான அநிர்வசநீய ரூபமா யஞ்ஞாநமும் அதன் காரியமாகிய ஜகத்தும் பிரதீதியாகின்றன. ஞாந நிஷ்டையை யடைந்துள்ள ஜீவன் முக்தனகிய வித்துவானுக்குக் காரிய சகித அஞ்ஞாநந் துச்ச ரூபமாகப் பிரதீதியாகாநின்றது துச்சம், அசத்து, சூந்ய மென்னும் மூன்று சப்தத்திற்கு மொன்றே பொருளாம். இவ்வாறு, ஜீவன் முக்தனுக்குத் துச்சரூபமாய்ப் பிரதீதியாகும். அஞ்ஞாநத்தில் மோஹத்தினை யடைந்த சூந்யவாதிகள் பரம புருஷார்த்தத்தை யறிகின்ற தில்லை. ஆயின், துச்சரூப ஆநந்தமய கோசத்தை ஆத்மா வென்கின்றனர்.

### 268. பிரபாகர நையாயிகர்களின் மதம்.

### (ஆநந்தமய கோசம் ஆத்மா).

பூர்வ மீமாஞ்சையி னேகதேசியாகிய பிரபாகரரும், நையாயிகரும் இவ்வாறு கூறுகின்றனர்:—ஆத்மா சூந்யரூப மன்று. எதனு

லெனின், சூந்யரூபமாக ஆத்மாவைக் கொள்ளுகின்றவனை இது கேட்பாம்:—சூந்ய ரூபத்தை நீ யனுபவித்தனையா? அல்லது, இல்லையா? சூந்ய ரூபத்தை யநுபவிக்க வில்லை யெனின், சூந்ய மில்லை யென்று சித்தித்தது. சூந்யத்தை யநுபவித்தே னெனின், எது சூந்யத்தை யநுபவஞ் செய்ததோ, அவ்வாத்மா சூந்யத்தி னும் விலக்ஷண மென்பது சித்தமாம். இவ்வாற்றால், சூந்யத்தின் விலக்ஷணமாக ஆத்மா இருக்கின்றது. அதன்கண் மநத்தின் ஸம்யோகத்தால் ஞாந முண்டாகின்றது. அந்த ஞாந குணத்தி னாலாத்மா சேதந மெனப்படும். ஸ்வரூபத்தினு லாத்மா ஜடமாம். அங்ஙனமே, சுகம், துக்கம், இச்சை, துவேஷம், பிரயத்நம், தரு மம், அதருமம் முதலிய குணங்க ளாத்மாவின்கண் ணுள்ளன (வென்பர்); அவர்களுடைய மதத்திலு மாநந்தமய கோசமே ஆத்மாவாம். விஞ்ஞாநமய கோசத்திலுள்ள புத்தியை ஆத்மா வின் ஞாந குண மென்கின்றனர். எதனு லெனின், ஆநந்தமய கோசத்தின்கண் சேதநங் கூடமா யுளது; விவேக சூந்யர்க்குப் பிரதீதி யாகின்றதில்லை. பிரபாகரரும், நையாயிகரும் ஆத்மாவைச் சுழுத்தியின்கண் ஞாந ஹீநமா யொப்பி, ஸ்வரூபத்தினல் ஜடமா கக் கூறுகின்றனர். ஆதலால், கூட சேதநத்தினுடைய ஆநந்தமய கோசத்தின்கண்ணே அவர்கட் காத்மப் பிராந்தி யுளது. ஆத்ம ஸ்வரூப நித்திய ஞாநத்தை ஜீவனிடத்தி லொப்பாமல், அநித்திய ஞாநமாக ஒப்பி யிருக்கின்றனர். அந்த அநித்திய ஞாநஞ் சித்தா ந்தத்தி லந்தக்கரணத்தின் விருத்தியாகிய புத்தி ரூபமாம். இவ் வாறு பிரபாகரர், நையாயிகர்களது மதத்தில் ஆநந்தமய கோச மாத்மாவாம்; புத்தியானது குணமாம். அவர்களுடைய மதமுஞ் சிறந்த தன்றும்; எதனு லெனின்,

269. ஜீவனது பஞ்சகோசத்தினைப் போன்று ஈஶ்வரனது பஞ்ச கோசங்களினல் அவரது ஸ்வரூபத்தினை மறைத்தல்.

ஞாநத்தினும் பிந்நமான ஜட வஸ்துக்களாகிய கடாதிகள் அநித்தியங்களா யிருக்கின்றன. அங்ஙனமே, ஆத்மாவும் ஞாந ஸ்வரூப மன்றாயின் கடாதிகள் போன்று ஜடமாவதால், அநித்திய மாம். ஆத்மா அநித்தியமாயின், மோக்ஷத்தின் பொருட்டான சாதநங்கள் நிஷ்பலமாம். இவ்வாறு, வேதாந்த வாக்கியத்தின்கண் விசுவாச மற்ற அநேக பகிர்முகர், பஞ்சகோசங்களிலேயே ஒரு பதார்த்தத்தை ஆத்மாவாக வொப்பி, முக்கிய ஆத்மஸ்வரூபமாகிய

சாக்ஷியை யறிந்தன ரில்லை. ஆதலால், அந்நமயம் முதலியன ஆத்மாவை மறைக்கின்றன வாதலால் கோச மெனப்படும்.

ஜீவனுடைய பஞ்சகோசங்கள் ஜீவனது யதார்த்த ஸ்வரூபமான ஸாக்ஷியை மறைக்கின்றது போல ஈஸ்வரனது ஸமஷ்டி பஞ்சகோசங்களும் ஈஸ்வரனது யதார்த்த ஸ்வரூபத்தினை மறைக்கின்றன. எதனு லெனின், ஈஸ்வரன தெதார்த்த ஸ்வரூபந் தத்பதத்திற்கு லக்ஷியமாம். அதைக் கைவிட்டுச் சிலர் மாயாரூப ஆநந்தமய கோச விசிஷ்ட அந்தர்யாமி யென்னுந் தத்பத வாச்சியத்தையே பரம தத்துவ மென்பர். அங்ஙனமே ஹிரண்யகர்ப்பன், வைசுவாநரன், விஷ்ணு, பிரஹ்மா, சிவன், கணேசன், தேவி, சூரியன் முதலாக, வாள், கூந்தாலம், அரசு, எருக்கு, மூங்கில் பரியந்தமான பதார்த்தங்களில் பரமாத்மப் பிராந்தி செய்கின்றனர். சர்வ பதார்த்தங்களினு முள்ள லக்ஷியபாகம் பரமாத்மாவினும் பிந்நமன்றுமாயினும், அவ்வவ்வுபாதி சகிதங்களைப் பரமாத்மாவாக வொப்புகின்றனர். அஃதவர்கட்குப் பிராந்தியாம். இவ்வாறு, பஞ்சகோசங்களினுல் மறைக்கப்பட்ட ஜீவேஸ்வரர்களின் பரமார்த்த ஸ்வரூபத்தினின்றும் விமுகராய்த் தேகாதிகளி லாத்மப் பிராந்தியைச் செய்து புண்ய பாப கருமங்களைச் செய்கின்றனர். அந்தர்யாமி முதல் மூங்கில் பரியந்தத்தை ஈஸ்வர ரூபமாக வொப்பி, ஆராதனை செய்து சுகத்தை இச்சியாநின்றனர். எவ்வித உபாதியினை ஆராதநஞ் செய்கின்றனரோ, அத னநுசாரமாகவே அவர்க்குப் பலம் உண்டாகும். எதனு லெனின், காரண, ஸூக்ஷ்ம, ஸ்தூலப் பிரபஞ்சங்க ளெல்லாம் ஈஸ்வரனது மூன்று சரீரத்தில் அந்தர்ப்பாவமாம். அவற்றில், உபாஸனையின் அநுஸாரமாகப் பலமும் எல்லாவற்றிலுமே உண்டாகின்றது. ஆயினும், பிரஹ்மஞாந மின்றி மோக்ஷம் உண்டாகாது. மோக்ஷ இச்சை யுண்டானவனே விவேகத்தினுல் ஜிவேஸ்ரருடைய ஸ்வரூபத்தைப் பஞ்சகோசத்தினின்றும் வேறு செய்க.

திருட்டாந்தம்:—எங்ஙனம் முஞ்சத்தினின்றும் இஷீகை வேறு செய்யப்படுகின்றதோ, அங்ஙனமே, விவேகத்தினுல் ஜீவேஸ்வரருடைய ஸ்வரூபத்தைப் பஞ்சகோசங்களி னின்றும் வேருயறிக.

270. அந்தப் பஞ்சகோச விவேகத்தின் தன்மையை அறிவித்தல்.

ஸ்வப்ந அவஸ்தையின்கண் ஸ்தூலதேகத்தின் பாநம் உண்டாக வில்லை. ஆத்மாவின் பாந முண்டாகின்றது. அங்ஙனமே, சுழுத்தி யவஸ்தையின்கண் ஸூக்ஷ்ம சரீரத்தின் ஞாநம் உண்டாகின்றதில்லை. சுக ஸ்வரூபமாகிய ஆத்மா ஸ்வயம் பிரகாச ரூபமாகப் பிரதீதி யாகின்றது. சுகத்தின் ஞாநம் சுழுத்தியின்கண் ணில்லையாயின், "நான் சுகமாக உறங்கினேன்" என்னும் ஸ்மிருதி விழித்த பின் உண்டாக வேண்டுவ தில்லை. அங்ஙன முண்டாதலால், சுகத்தின் ஞாநம் சுழுத்தியின்கண் ணுளதாம். அந்தச் சுகம் சுழுத்தியில் விஷய ஜந்ய மன்று; ஆனால், ஆத்ம ஸ்வரூபமேயாம். அவ்வாத்மா ஸ்வயம் பிரகாசமாம். ஆதலால் சுக ஸ்வரூபமாகிய ஆத்மா ஸ்வயம் பிரகாச ரூபமாகச் சுழுத்தியின்கண் பிரகாசியாநின்றது.

நிதித்தியாஸநத்தின் பலமாகிய நிர்விகற்ப சமாதி யவஸ்தையின்கண் ணஞ்ஞாநத்தினால் செய்யப்பட்ட ஆவரணமின்றி ஆத்மா பிரகாசியாநிற்கின்றது; காரண சரீர மென்னு மஞ்ஞாநம் பிரகாசிக்க வில்லை. இவ்வாறு, மூன்று தேகங்களும் வியபிசாரியாம். ஓர் அவஸ்தையை யொழித்து மற்றோர் அவஸ்தையின்கண் பிரகாசிக்கின்ற தில்லை. ஆத்மா அநுகதமாய் ஸர்வாவஸ்தையின்கண் ணும் பிரகாசியாநின்றது. ஆதலால், வியாபகமாம். இவ்விவேகத்தினால் மூன்று சரீரங்களி னின்றும் ஆத்மாவை அந்நியமா யறிக. ஸ்தூல சரீரம், அந்நமய கோசமாம். காரண சரீரம், ஆநந்தமய கோசமாம். ஸூக்ஷ்ம சரீரத்தின்கண், பிராணமயம், மநோமயம், விஞ்ஞாநமயம் என்னும் மூன்று கோசங்க ளுள. ஆதலால், மூன்று சரீரங்களின் விவேகத்தினால் பஞ்சகோசங்களின் விவேகமே யாகின்றது. எங்ஙனம் ஜீவனது ஸ்வரூபம் பஞ்ச கோசங்களி னின்றும் வேறா யுளதோ, அங்ஙனமே, ஈஶ்வரனது ஸ்வரூபமுஞ் ஸமஷ்டி பஞ்ச கோசங்களி னின்றும் வேறா யுளது.

நான்காந் தரங்கத்தில் நான்குவித ஆகாச திருஷ்டாந்தத்தால் ஜீவேஶ்வரர்களுடைய லக்ஷிய ஸ்வரூபத்தின் விவேகம் விஸ்தாரமாகச் செய்யப்பட் டிருக்கின்றது. உத்தர (6-வது) தரங்கத்தில் அஸ்திபாதிப் பிரியரூப நிரூபணத்திலும் அவ்வாறே மகாவாக்கியங்களின் அர்த்த நிரூபணத்திலும் ஆத்மாவின் பரமார்த்த ஸ்வ

ரூபப் பிரதிபாதநஞ் செய்யப்படும். ஆதலின், ஈண்டு சுருக்கமாகவே ஆத்ம விவேகம் கூறப்பட்டது.

271. மஹா வாக்கியார்த்தத்தின் உபதேசம்.

இவ்வாறு பஞ்சகோசங்களி னின்றும் ஆத்மாவை வேருயறிந்தாலும் கிருத கிருத்திய ஞவதில்லை. ஆனுல், ஜீவப்பிரஹ்மங்களின் அபேத நிச்சயத்தின் பொருட்டு மீண்டும் விசாரம் செய்யத்தக்கது. ஆதலின், கர்த்தவ்யத்தின் அபாவரூப கிருத கிருத்தியத்தன்மையின் சித்தியின் பொருட்டு மகா வாக்கியார்த்தோபதேசஞ் செய்கின்ருேம்.

சிஷ்யனே! பஞ்சகோசத்தி னின்றும் ஆத்மாவை அந்யமாயறிந்து அந்த ஆத்மாவைப் பிரஹ்மஸ்வரூப மென்றறி

272. பிரசினம்:—ஆத்மா புண்ய பாபங்களைச் செய்கின்றது. சுகதுக்கங்களை அநுபவிக்கின்றது. ஆதலின், அதற்குப் பிரஹ்மத்தோடு ஐக்கியம் பொருந்தா தெனல்.

இதில் இவ்வாறு சங்கை யுண்டாகின்றது:-ஆத்மா புண்ணிய பாபங்களைச் செய்கின்றது. ஆதலின், ஸ்வர்க்க நரக பூலோகங்களில் அநேகவித சுக துக்கங்களை யநுபவிக்கின்றது; அதற்குப் பிரஹ்மத்தோடு ஏகத்துவம் பொருந்தாது.

சென்ற பிரசினத்தின் உத்தரம்.

273. அகர்த்தாவும், அபோக்தாவும், நித்திய முக்தமுமாகிய ஆத்மாவிற்கு எப்பொழுதும் பிரஹ்மத்தோடு அபேதமாம்.

அதன் சமாதாநம்:-அந்தப் பிரஹ்மரூப ஆத்மாவிற்கு வேருகக் காணப்படுவனவும் சாஸ்திரத்திஞல் கேட்கப்படுவனவு மாகிய ஸ்வர்க்க நரக புண்ணிய பாபங்களுமாகிய யாவும் மித்தியாப் பிராந்தி யென்று கொள்க.

மித்தியாவஸ்து அதிஷ்டாநத்தினைக் கெடுக்கின்ற தில்லை.

எங்ஙனம்! சொப்பநத்தில் பிச்சை வாங்குவதனுல் அரசன் தரித்திரனுவதில்லை. கானல் ஜலத்திஞல் பூமி நனைகின்றதில்லை. பொய்யான சர்ப்பத்திஞல் ரஜ்ஜு விஷஸஹித மாகின்றதில்லை. ஆதலின், பொய்யான எல்லாச் சுபாசுப கர்மங்களைச் செய்கின்றவனுயினும் உண்மையில் கர்த்தாவாகான். இவ்வாறு உன்னுடைய அற்புத ஆச்சரிய ஸ்வரூபம் ஸமாந மின்றியதா யிருக்கின்றது.

இதன் அபிப்பிராயம் இதுவாம்:-பிரஹ்மத்தோடபிந்நமான உனது ஸ்வரூபத்தில் ஸ்தூல, சூட்சும சரீரங்களும், அவற்றின் சுபாசுபக்கிரியைகளும், அவற்றின் பலனாகிய ஜந்மம், மரணம், ஸ்வர்க்கம், நரகம், சுகம், துக்கங்களுமாகிய யாவும் அவித்தையினால் கற்பிக்கப்படுகின்றன.

உனது பிரஹ்மத்தன்மை அந்தக் கற்பித சாமக்கிரியினால் கெடுகின்றதில்லை. ஆதலால், ஞானத்தின் முன்னும் ஆத்மா பிரஹ்மஸ்வரூபமாகவே யிருக்கின்றது.

ஆத்மாவினிடத்தில் மூன்று காலங்களிலும் சரீரமும் அதன் தர்மங்களுமாகிய விவற்றின் சம்பந்தமில்லை; ஆனால், ஆத்மா எப்போதுமே நித்தியமுக்தமா யிருக்கின்றது. அதற்குப் பிரஹ்மத்தோடு ஒருகாலத்தும் பேதமில்லை.

274. ஜீவன் முக்தனது நிச்சயம்—வேதாந்த சிரவணத்தின் பலன்.

ஆத்மா எப்போதுமே நித்தியமுக்தப் பிரஹ்மஸ்வரூபமா யிருக்குமாயின், ஞானசாதநங்களான சிரவணாதிகள் நிஷ்பலமாகுமே என்று கூறின், அதற்குச் சமாதானம்:-ஜீவன் முக்த வித்வானுடைய திருஷ்டியில் அஞ்ஞானமும் அதன் காரியமும் துச்சமா யிருக்கின்றன. அந்த ஜீவன் முக்தனது நிச்சயத்தினைக் காண்பிப்பாம்:-சிஷ்யனே !

இந்தப் பிரபஞ்சம் ஆகாசதாமரை போன்றிருத்தலால் இருப்பதில்லை. ஆதலின், அதன் கர்த்தாவான ஈசுவரனு மில்லை. சாட்சிக்குவிஷயமான அஞ்ஞானமுதலியன சாக்ஷியமென்று சொல்லப்படுகின்றன. அந்தச்சாக்ஷிய மில்லாமையினால் சாட்சியுமில்லை. அதுபோல, திருசியத்தைப் பிரகாசிப்பது திருக்கெனப்படும். பிரகாசித்தற்கு யோக்கியமாகிய தேகாதிகள் திருசியமெனப்படும். அத்தேகாதி திருசிய மில்லாமையினால் திருக்கு மில்லை. கேவலம் கூடஸ்த சேதநம் சாக்ஷியென்றும் திருக்கென்றும் கூறப்படுகின்றது. அதன் நிஷேதம் பொருந்தாதாமாயினும், சாக்ஷியத்தின் அபேக்ஷையினால் சாக்ஷியென்னும் பெயரும், திருசியத்தின் அபேக்ஷையினால் திருக்கென்னும் பெயருமாம். சாக்ஷியமும், திருசியமும் இல்லை. ஆதலின், சாக்ஷி, திருக்கென்னும் பெயர்கள் நிஷேதிக்கப்படுகின்றன; ஸ்வரூபம் நிஷேதிக்கப் படுகின்றதில்லை. பந்த மிருக்குமாயின், பந்த நிவிர்த்திரூபமான மோக்ஷமு மிருக்கும்;

பந்தமில்லையாகவின், மோக்ஷமுமில்லை. அஞ்ஞாந மிருக்குமாயின், அது ஞாநத்தினுல் நாசமாகும். அஞ்ஞாந மில்லாமையினுல் அதனை நாசஞ்செய்யும் ஞாநமு மில்லை. இதனையறிந்து "நான் இதனைச் செய்யவேண்டும்" என்னும் புத்தியை விடவேண்டும். ஏனெனின், இந்த லோகமும், பரலோகமும் துச்சமாம். அவற்றின்பொருட்டுச் செய்யவேண்டிய தொன்று மில்லை. ஆத்மாவில் பந்த மில்லை ஆதலால், மோக்ஷத்தின்பொருட்டும் கர்த்தவ்விய மில்லை. இவ்விதத்தால் ஆத்மாவினை நித்திய முக்தப் பிரஹ்மரூபமாக உணர்ந்து நிச்சலமாகி எப்போது கர்த்தவ்விய மெல்லாம் விடுவாயோ அப்போது அக்கிரியப் பிரஹ்மஸ்வரூபமான விதேக மோக்ஷத்தினை அடைவாய்.

இதன் அபிப்பிராயம் இதுவாம்:—ஆத்மா ஞாநத்தின் முன்னும் நித்தியமுக்தப் பிரஹ்மஸ்வரூபமாகவே யிருக்கின்றதாமாயினும், ஞாநத்திற்குமுன் ஆத்மாவைக் கர்த்தா போக்தாவென மித்தையாகக் கொண்டு சுகப்பிராப்தி துக்க நிவிருத்திகளின் பொருட்டு அநேக சாதநங்களைச் செய்கின்றான். அதனுல், கிலேசத்தையே அடைகின்றான்.

உத்தம ஆசாரியரை யடைந்தபோது (அவர்) வேதாந்தவாக்கிய உபதேசத்தைச் செய்கின்றார். அவ்வேதாந்த வாக்கியத்தைக் கேட்பதனுல் "நான் கர்த்தா போக்தாவல்லன்; நான் பிரஹ்மஸ்வரூபம்; ஆதலின், எனக்குச் சிறிதும் கர்த்தவ்வியமி (செய்வேண்டியதி)ல்லை" என்னும் ஞாந முண்டாகின்றது. இவ்வாறு அறிவதே சிரவணுதிகளின் பலன்; பிரஹ்மத்தின் அடைவு வேதாந்த சிரவணத்தின் பலனன்றாம். ஏனெனின், பிரஹ்மம் தன் ஸ்வரூபமாம்; ஆதலால், நித்தியப் பிராப்தமாம் (என்றும் அடையப்பட்டதாம்).

### 275. ஞாநி, அஞ்ஞாநிகளின் சின்னம்.
### (அகர்த்தவ்வியமும் கர்த்தவ்வியமும்.)

எவன் கர்த்தவ்விய மிருப்பதாகக் கொள்ளுகின்றனனோ, அவன் அஞ்ஞாநி; எவன் வேறுரூப மாவதற்கு இச்சிக்கவில்லையோ அவன் ஞாநி.

### 276. இரகசிய தத்துவத்தின் உபதேசம்.

ஏகமாயும், அகண்டமாயும், அசகங்மாயும், ஜந்ம மில்லாததாயும், அதிர்சியமாயும், நாமரூபங்களின்றியதாயுமுள்ள பிரஹ்மத்

தில் மூல அஞ்ஞாநமில்லை; சூட்சும ஸ்தூலங்களில்லை; சமஷ்டி வியஷ்டிகளில்லை; ஈசனில்லை; சூத்ராத்மா இல்லை; விராட்டில்லை; பிராக்ஞனில்லை; தைசத னில்லை; விசுவ ஸ்வரூபனில்லை; போக மில்லை; யோகமில்லை; பந்தமில்லை; மோக்ஷமில்லை; ஒன்றும் அத னிடத்திலில்லை; எல்லாம் அதினிடத்திலுண்டு. ஜாக்கிரத்தில் விளங்கும் பிரபஞ்சம் யாவும் புத்திவிலாசத்தினால் பொருந்தியிருக் கின்றன. சொப்பனத்தில் போக்கிய போகங்களில்லாதிருந்தும் சித்திர விசித்திரங்களாய் உண்டாகின்றன. இந்தப் புத்தி சுழுத்தி யில் லயமடையவே பேதங்களொழிந்து ஒரு ரூபமாகக் கேட்கப் படுகின்றது. புத்தியால் சிருஷ்டிக்கப்படுவன வெல்லாம் மனோ ரத மாத்திரமாம். நிச்சலம் (பிரஹ்மம்) புத்தியைப் பிரகாசிப்பிக் கின்றது என்று கூறப்படுகின்றது. எவனது இருதயத்தில் ஞாந முதயமாகின்றதோ, அவனது இருதயத்தைவிட்டு அஞ்ஞாந மென்னுமிருள் நிச்சயமாய் நாசமாகின்றது. அவன் எப்போதும் அசங்கமாயும், ஏகரஸமாயும், சுயம்பிரகாசமாயு மிருக்கின்ற பிரஹ்மசொரூப ஆத்மாவாக இருக்கின்றான். முன் ஒன்றும் உண்டானதில்லை; இப்போதுமில்லை; பின்னும் ஒன்றும் உண்டா காது. ஜகத்து மனோரத மாத்திரமான விலாசமாம். அதனடை வையும் நிவிருத்தியையும் ஞாநி இச்சிக்கின்றதில்லை. (ஞாநிக்கு) ஒரு ஆசையு மில்லை. பார்த்தும் (ஞாநி) பார்ப்ப தில்லை. கேட்டும் கேட்பதில்லை. சகல ரசங்களையும் ருசித்தும் ருசிக்காத வன்; ஸ்பரிசித்தும் ஸ்பரிசிக்காதவன்; நல்ல வாசனையை முகர்ந் தும் முகாரதவன்; பேசியும் பேசாதவன்; கிரகித்தும் கிரகிக் காதவன்; மலவிஸர்ஜநஞ்செய்துஞ் செய்யாதவன்; நடந்தும் நடக்காதவன்; யௌவந ஸ்திரீயை யநுபவித்தும் நித்திய சந்நி யாசி யாவன். சிஷ்யனே! இந்த ஆச்சரியத்தை நீ அறிவாயாக. இதன் அபிப்பிராயத்தைக் கூறுவாம்:—இந்திரியங்கள் தத்தம் விஷயங்களில் பிரவேசிக்கின்றன; அவற்றினோடு எனக்குச் சம் பந்த மில்லை. நான் இந்திரிய மல்லன்; இந்திரியம் எனது மன்று. நான் சாக்ஷி, கூடஸ்தன், அசங்கன்; இந்திரியம் விஷயத் தைத் தியாகஞ்செய்க, அல்லது அநுபவிக்க, எனக்குச் சிறிதும் சம்பந்த மில்லை யென்னும் நிச்சயம் ஞாநிக்கிருத்தலால், அவன் கர்த்தாவாகக் காணப்பட்டாலும் செய்யாதவனாவன்.

## லயசிந்தநம்.

### 277, சர்வப் பிரபஞ்சமும் ஈசுவரஸ்வரூபமாதல்.

இவ்வாற்ருல் ஆசாரியர் சிஷ்யனுக்கு ரஹஸ்யமான தத்துவத்தை யுபதேசம் செய்தும், சிஷ்யன் முகத்தில் அத்தியந்தம் பிரசந்நமின்மையினைப் பார்த்து இவ்வாறு உணர்ந்தனர்:—சிஷ்யன் கிருதார்த்தனுகவில்லை. கிருதார்த்தனு யிருந்தால் அவன் முகம் பிரசந்நமா யிருக்கும். ஆதலால், மீண்டும் ஸ்தூலக்கிரமமாக உபதேசஞ் செய்தற்பொருட்டு லயசிந்தநத்தைக் கூறுகின்ருர்.

எங்ஙனம்? மண்ணின் காரியமான கடம், உள்ளும் புறமும் மண்ணுகவே யிருக்கின்றது. ஆதலின், மண்ணின் காரியங்களெல்லாம் மண் ஸ்வரூபமாகவே யிருக்கின்றன. நுரைமுதலிய ஜல காரியங்கள் ஜல ஸ்வரூபமாகவே யிருக்கின்றன. இவ்வாறு எது எதன் காரியமோ அது அந்தக் காரணஸ்வரூபத்தினும் பிந்நமன்று; ஆனுல், காரியம் காரணஸ்வரூபமாகவே யிருக்கின்றது. சர்வப் பிரபஞ்சத்திற்கும் மூலகாரணம் ஈஸ்வரனுவன். ஆதலின், எல்லாக்காரியப் பிரபஞ்சமும் ஈசுவரஸ்வரூபத்தினும் பிந்நமல்ல. ஆனுல், சர்வப் பிரபஞ்சத்தின் ஸ்வரூபமும் ஈசுவரனே யாவன். "அந்த ஈசுவரன் நான்" என்றிவ்வாறு லயசிந்தனைத்தை யறிந்து நீ செய்வாய்.

### 278. சகல சூக்ஷ்ம சிருஷ்டியின் அபஞ்சீகிருத பூதத்தன்மை.

லயசிந்தனையின் சுருக்கமான கிரமம் இதுவாம்:—ஸ்தூலப் பிரஹ்மாண்ட முற்றும் பஞ்சீகிருத பூதத்தின் காரியமாம். அதன்கண் எது பிருதிவியின் காரியமோ, அது பிருதிவி ஸ்வரூபமாம். ஜலத்தின் காரியம் ஜல ஸ்வரூபமாம். இவ்வாற்ருல், எது எந்தப் பூதத்தின் காரியமோ, அது அதன் ஸ்வரூபமேயாம். இவ்வாறு, எல்லா ஸ்தூலப் பிரஹ்மாண்டமும் பஞ்சீகிருத பூத ஸ்வரூபமாம்.

அங்ஙனமே, பஞ்சீகிருத பூதம் அபஞ்சீகிருத பூதத்தின் காரியமாம். ஆதலின், அபஞ்சீகிருத ஸ்வரூபமே பஞ்சீகிருத பூதமாம்; பிந்நமன்ரும். அந்தக்கரண முதலிய சூக்ஷ்ம சிருஷ்டியும், அபஞ்சீருத பூத காரியமாயிருத்தலால் அபஞ்சீகிருத பூத ஸ்வரூபமாம். அதில் அந்தக்கரணம் சகல பூதங்களின் சத்துவ குண காரியமாயிருத்தலால் சத்துவகுண ஸ்வரூபமாம். பூதங்

களின் ரஜோகுணாம்சத்தின் காரியமான பிராணன் ரஜோகுண ஸ்வரூபமாம். குதேந்திரியம் பிருதிவியின் ரஜோகுணாம்சத்தின் காரியமாயிருத்தலின், அது பிருதிவியின் ரஜோகுண ஸ்வரூபமாம். கிராணேந்திரியம் பிருதிவியின் சத்துவகுண காரியமாதலின், அது சத்துவகுண ஸ்வரூபமாம். இங்ஙனமே ரஸநேந்திரியமும் உபஸ்தேந்திரியமும் ஜலத்தின் சத்துவகுண ரஜோகுண ஸ்வரூபங்களாம். நேத்திரமும் பாதமும் தேயுவின் சத்துவகுண ரஜோகுண ஸ்வரூபங்களாம். துவக்கும் பாணியும் வாயுவின் சத்துவகுண ரஜோகுண ஸ்வரூபங்களாம். சுரோத்திரமும் வாக்கும் ஆகாசத்தின் சத்துவகுண ரஜோகுண ஸ்வரூபங்களாம். இவ்வாற்றால், சூக்ஷ்ம சிருஷ்டி முற்றும் அபஞ்சீகிருத பூத ஸ்வரூபமாம்.

### 279. சர்வ அநாத்ம பதார்த்தங்களுக்கும் கிரமமாகப் பிரஹ்மத்தின்கண் லயசிந்தநம்.

இந்தச் சிந்தனைசெய்து அபஞ்சீகிருத பூதங்களின் லயசிந்தநத்தையும் செய்தல் வேண்டும். பிருதிவி ஜலத்தின் காரியமாயிருத்தலின் ஜல ஸ்வரூபமாம். ஜலம் தேஜஸின் காரியமாயிருத்தலின் தேஜஸ் ஸ்வரூபமாம். தேஜஸ் வாயுவின் காரியமாயிருத்தலின் வாயு ஸ்வரூபமாம். வாயு ஆகாசத்தின் காரியமாயிருத்தலின் ஆகாச ஸ்ரூபமாம். ஆகாசம் தமோகுணப் பிரதாநப் பிரகிருதியின் காரியமாயிருத்தலின் பிரகிருதி ஸ்வபரூமாம்.

மாயையின் அவஸ்தாவிசேஷம் பிரகிருதியாம். ஆதலின், பிரகிருதி மாயாஸ்வரூபமாம்.

ஒரே வஸ்துவிற்குப் பிரதாநம் பிரகிருதி மாயை அவித்தை அஞ்ஞாநம் என்பன பெயராம். சர்வ காரியங்களையும் தன்னில் லயப்படுத்திப் பிரளயகாலத்தில் இருக்கிற உதாசீந ஸ்வரூபம் பிரதாநமாம். சிருஷ்டியின் உபாதாநயோக்கியமான தமோகுணப் பிரதாந ஸ்வரூபம் பிரகிருதியாம். எங்ஙனம், தேசகாலாதி சாமக்கிரிக ளின்றி இந்திரஜாலத்தால் துர்க்கட பதார்த்தங்களுண்டாகுமிடத்து இந்திரஜாலத்தினை மாயை யென்பர். அங்ஙனமே, அசங்க அத்துவிதியப் பிரஹ்மத்தின்கண் இச்சையாதிகள் துர்க்கடமாம்; அவற்றைச் செய்தலின் மாயை யெனப்படும். பிரஹ்ம ஸ்வரூபத்தினை மறைத்தலின் அஞ்ஞாந மெனப்படும்.

வித்தையினுல் நாசமடைதலின் அவித்தையெனப்படும். ஸ்வதந்திரமாக ஒருகாலத்திலு மிருக்கின்றதில்லை. பின்னரோ, சேதநத்தை ஆசிரயித்தே யிருக்கின்றது. அதனுல் சக்தி யென்றுஞ் சொல்லப்படும். இவ்விதத்தால், பிரகிருதி முதலியன பிரதாநத்தின் பேதங்களாதலால், பிரதாந ஸ்வரூபமாவனவாம். அந்தப் பிரதாநம் பிரஹ்மசேதநத்தின் சக்தியாம். எங்ஙனம் புருஷனிடத்திலுள்ள சாமர்த்தியரூப சக்தி புருஷனினின்றும் பிந்நமன்ருே, அங்ஙனமே, சேதநத்திலுள்ள பிரதாநரூப சக்தி பிரஹ்ம சேதநத்தினின்றும் பிந்நமன்ரும்.

இவ்வாற்ருல், பிரஹ்மத்தின்கண் சகல அநாத்ம பதார்த்தங்களின் லயசிந்தநத்தைச் செய்து, "அந்த அத்வயப் பிரஹ்மம் நான்" என்று சிந்தனை செய்தல் வேண்டும்.

### 280. தியாந ஞாநங்களின் பேதம் அகங்கிரகத் தியாநம்.

எவனுக்கு மகாவாக்கிய விசாரஞ் செய்யினும் புத்தியின் மந்தத்தன்மை முதலிய பிரதிபந்தத்தால் அபரோக்ஷஞாந முண்டாகின்றதில்லையோ, அவனுக்கு இந்த லயசிந்தநரூபத் தியாநம் கூறப்பட்டது. ஞாநத்திற்கும் தியாநத்திற்கும் இவ்வளவு பேதமுண்டு:—ஞாநமோ பிரமாணப் பிரமேய மென்பவற்றின் அதீநமாம்; விதி புருஷனுடைய இச்சை என்பவற்றின் அதீநமன்று.

தியாநமோ விதி, புருஷனுடைய இச்சை, விசுவாசம், ஹடம் என்பவற்றின் அதீநமாயிருக்கின்றது.

பிரத்தியக்ஷ ஞாநத்தில் பிரமாணம் நேத்திரமும், பிரமேயம் கடாதிகளுமாம். ஆண்டு நேத்திரத்திற்கும் கடத்திற்கும் சம்பந்த முண்டாக, புருஷனுடைய இச்சையின்றியும் கடத்தின் பிரத்தியக்ஷஞாந முண்டாகின்றது. ஆவணிமாதம் சுத்த (விநாயக) சதுர்த்தி திநத்தில் சந்திரனைப் பார்த்தல் கூடாதென்னும் நிஷேத முண்டு; விதி யில்லை. "இன்றைத் திநம் எனக்குச் சந்திர தரிசந முண்டாகலாகா" தென்று புருஷனுக்கு இச்சையுண்டானுலும் எவ்விதத்திலாவது நேத்திரப் பிரமாணத்திற்குப் பிரமேயமாகிய சந்திரனேடு சம்பந்த முண்டாய் விடுமாயின், சந்திரனுடைய பிரத்தியக்ஷ ஞாநம் அவசியமாகவே உண்டாகும். இவ்வாற்றல், ஞாநம் பிரமாணப் பிரமேயங்களின் அதீநமா யிருக்கின்றது; இச்சை விதிகளின் ஆதீநமாக வில்லை.

"சாலிக்கிராமம் விஷ்ணுரூபமா யிருக்கின்ற" தென்று தியாநஞ் செய்கின்றவனுக்கு உத்தம பலத்தி னடை வுண்டாகின்றது. அங்குச் சாஸ்திரப் பிரமாணத்தினால் விஷ்ணுவைச் சதுர்ப்புஜ மூர்த்தியாகவும், சங்கு சக்கிர கதா பத்ம லக்ஷ்மி சகிதமாகவும் அறிகின்றான்; நேத்திரப் பிரமாணத்தால் சாலிக்கிராமத்தைச் சிலையாக அறிகின்றான். அங்ஙனமாயினும், விதி விசுவாச இச்சைகளால் "சாலிக்கிராமம் விஷ்ணுவா" மென்னும் தியாந முண்டாகின்றது. ஆனால், இந்தத் தியாநம் அநேக பிரகாரமாம்.

சாலிக்கிராமத்தை விஷ்ணுரூபமாகத் தியானிப்பது போல் அந்நிய வஸ்துவினை அந்நியரூபமாகத் தியாநிப்பது பிரதீகத் தியாநமாம்.

வைகுண்ட லோகத்தில் வசிக்கிற விஷ்ணுவைச் சங்கு சக்கராதி சகித சதுர்ப்புஜ மூர்த்திவடிவமாகத் தியாநிப்பதில் அந்நிய வஸ்துவின் அந்நியரூபமான தியாந மில்லை. ஆனால், தியேய வடிவத்தின் அநுசாரமான தியாந மிதுவாம். வைகுண்ட வாசி விஷ்ணுவின் ஸ்வரூபம் பிரத்தியக்ஷமாகவோ யில்லை; கேவலம் சாஸ்திரத்தினால் அறியப்படுகின்றது. சாஸ்திரத்தில் சங்கு சக்கிராதி சகிதமாகவே விஷ்ணுவின் ஸ்வரூபஞ்சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால், தியேய ஸ்வரூபத்தின் அநுசாரமே இந்தத் தியாநமாம். விதி, விசுவாச, இச்சைக ளின்றித் தியாந முண்டாகின்றதில்லை.

"இந்த உபாசனையைச் செய்" என்று புருஷனைப் பிரவர்த்திக்குமாறு செய்கின்ற வசநம் விதியாம். அந்த வசநத்திலுள்ள சிரத்தை விசுவாசமாம். அந்தக்கரணத்தின் காமனைவடிவ ரஜோகுணத்தின் விருத்தி இச்சையாம். தியாநத்திற்கு இம்மூன்றும் ஹேதுவாம்; ஞாநத்திற்கின்றாம். தியாநம் ஹடத்தினாலுண்டாகும். ஞாநத்தில் ஹடத்தின் அபேக்ஷை யில்லை. ஏனெனின், நிரந்தரத் தியேயாகாரமான சித்த விருத்தி தியாநமாம். ஆண்டு விருத்தியில் விக்ஷேப முண்டானால் ஹடத்தால் விருத்தியை ஸ்திரப்படுத்துக.

ஞாநரூப அந்தக்கரண விருத்தியால் தற்கால ஆவரண பங்கமு முண்டாதலால், விருத்தியை, ஸ்திரப்படுத்துவதன் உபயோக மில்லை; ஆதலால், ஹடத்தின் அபேக்ஷை யில்லை.

வைகுண்ட வாசியான சதுர்ப்புஜ விஷ்ணுவைத் தியானிப்பதுபோல் "நான் பிரஹ்மம்" என்னும் தியானமும் தியேயாநுசாரமா யிருக்கின்றது ; பிரதீக மன்று. ஆனல், இது அகங்கிரகத் தியான மாம். தியேய ஸ்வரூபத்தைத் தன்னேடு அபேதமாகச் சிந்தித்தல் அகங்கிரகத் தியானமாம்.

எவனுக்கு அபரோக்ஷஞான முண்டாகின்ற தில்லையோ, வேதத்தின் ஆஞ்ஞா ரூப விதியில் விசுவாசம் வைத்து ஹடத்தால் இடைவிடாமல் "நான் பிரஹ்ம" மென்னும் விருத்தியின் ஸ்திதி ரூப அகங்கிரகத் தியானஞ் செய்கின்றானே, அவனுக்கும் ஞான முண்டாகி மோக்ஷங் கிடைக்கும்.

## பிரணவ உபாஸனை.

### 281. பிரணவத்தின் அகங்கிரகத் தியானம்.

வேறு பிரகாரத்தால் அகங்கிரக உபாஸனையைக் கூறுகின்றேன்:—சிஷ்யனே! பிரணவ ரூபமாகிய ஓங்கார ஸ்வரூபத்தின் அகங்கிரகத் தியானம் மாண்டூக்கியம், பிரசினம் முதலிய சுருதிகளை யநுசரித்துச் சுரேசுவராசாரியர் கூறியிருக்கின்றனர். அதனை நீ செய்வாயாக. அதன் சுருக்கமான கிரமம் இதுவாம்:— பிரணவாக்ஷரம் பிரஹ்ம ஸ்வரூபம் ; "அந்தப் பிரணவ ஸ்வரூபப் பிரஹ்மம் நான்" என்று ஒரு க்ஷணமும் இடை யின்றித் தன் புத்தி விருத்தியை நிறுத்துக. இதற்குச் சமானமான வேறு தியான மில்லை. இந்தத் தியானத்தின் விசேஷக் கிரமம் சுரேசுவராசாரியர் செய்த பஞ்சீகரணக் கிரந்தத்தில் கூறப்பட்டிருக்கின்றது. இந்த உபாஸனையைச் செய்பவன் அபார சமுசாரத்தினை யொழிக்கின்றான்.

### 282. நிர்க்குணமும் சகுணமுமான பிரணவ உபாசனையைப் பலத்தோடு கூறுதல்.

பிரணவ உபாஸனை அநேக உபநிஷத்துக்களில் கூறப்பட்டிருப்பினும், மாண்டூக்கிய உபநிஷத்தில் விசேஷமாய்க் கூறப்பட்டிருக்கின்றது. அதன் வியாக்கியானத்தில் பாஷியகாரரும், ஆநந்தகிரியும் அதன் கிரமத்தினைத் தெளிவாய் எழுதியிருக்கின்றார்கள். அந்தக் கிரமமே வார்த்திககாரரால் பஞ்சீகரணக் கிரந்தத்தி லெழுதப்பட் டிருக்கின்றது. அங்ஙனமாயினும், அந்தக் கிரந்தங்களை விசாரித்தலில் எவன் புத்தி சாமர்த்திய முடைய

தன்றோ அவனுக்காகப் பிரணவ உபாஸனையின் கிரமத்தினை யாம் எழுதுவாம்:—

உபநிஷதங்களில் பிரணவத்தின் சிந்தநம் இருவகையாகக் கூறப்பட் டிருக்கின்றது. ஒன்று பரப்பிரஹ்ம ரூபமாகப் பிரணவத்தினைச் சிந்தித்தல். மற்றொன்று அபரப் பிரஹ்ம ரூபமாகச் சிந்தித்தல். நிர்க்குண பிரஹ்மத்தினைப் பரப் பிரஹ்ம மென்பர். ஸகுணப் பிரஹ்மத்தினை அபரப் பிரஹ்ம மென்பர். பரப் பிரஹ்ம ரூபமாகப் பிரணவத்தினைச் சிந்திக்கின்றவன் மோக்ஷத்தினை யடைகின்றான். அபரப் பிரஹ்ம ரூபமாகப் பிரணவத்தினைச் சிந்தனை செய்கின்றவன் பிரஹ்ம லோகத்தினை யடைகின்றான். இவ்வாற்றால், நிர்க்குண ஸகுண பேதங்களால் பிரணவ உபாஸனை இரண்டுவிதமாம்.

### 283. நிர்க்குண ரூபப் பிரணவ உபாசனைக் கிரமத்தின் ஆரம்பம்.

அவற்றுள் நிர்க்குண வுபாசனையின் கிரமத்தினையெழுதுகின்றோம்; ஸகுணத்தின தன்று. ஏனெனின், பிரஹ்ம லோக இச்சையுள்ளவனுக்கு நிர்க்குண உபாஸனையினாலும் இச்சையாகிய பிரதிபந்தத்தால் ஞாநவாயிலாகத் தற்காலம் மோக்ஷ முண்டாகின்றதில்லை; ஆனால், பிரஹ்ம லோகமே யடையப்படுகின்றது. ஆண்டு ஹிரண்யகர்ப்பனுக்குச் சமாநமாகப் போகங்களை யநுபவித்து ஞாநமுண்டாகும் பொழுது மோக்ஷத்தினை யடைகின்றான். பிரஹ்மலோக இச்சை யில்லாதவனுக்கு இந்த லோகத்திலேயே ஞாநமுண்டாய் மோக்ஷம் உண்டாகின்றது. இவ்விதத்தால், ஸகுண உபாஸனையின் பலனும் நிர்க்குண உபாஸனையில் அடங்கியிருக்கின்றது. ஆகையால், நிர்க்குண உபாஸனையின் கிரமத்தினைக் கூறுகின்றோம்.

காரண காரிய வஸ்து யாவும் ஓங்கார ஸ்வரூபமாதலால், சகல ரூபங்களும் ஓங்காரமாம். சகல பதார்த்தங்களிலும் நாமம் ரூபம் என இரண்டு பாகங்க ளுள்ளன. அவற்றில் ரூப பாகம் தன்றன் நாம பாகத்தினும் வேறன்று; பின்னையோ, நாம ஸ்வரூபமே ரூப பாகமாம். ஏனெனின், பதார்த்தத்தின் ரூப (ஆகார)த்தின் பெயரால் நிரூபிக்கப்பட்டுக் கிரகிக்கப்படுகின்றது; அல்லது, தள்ளப்படுகின்றது. பெயர் அறியப்பட்டா லன்றிக் கேவலம் ஆகாரத்தால் வியவகாரம் சித்திக்கின்ற தில்லை. ஆதலால்,

பெயரே சாரமாம். ஆகார மழிந்தாலும் பெயர் எஞ்சி நிற்கின்றது. கடம் நாச மடைந்தாலும் மண் மிஞ்சுகின்றது. அங்குக் கடம் மண்ணினும் வேறு வஸ்து வன்று; மண் ஸ்வரூபமேயாம். அது போன்று, ஆகாரம் நாச மடைய மண் போன்று மிஞ்சிநிற்கும் நாமத்தினும் ஆகாரம் வேறன்று; நாம ஸ்வரூபமே ஆகாரமாம்.

அல்லது, குடம், சட்டி முதலியவற்றில் மண் அநுகதமாயிருக்கின்றது. குடம், சட்டி முதலியன பரஸ்பரம் வியபிசாரியாம். ஆதலால், குடம் சட்டி முதலியன பொய்யாம். அவற்றில் அநுகதமான மண் சத்தியமாம். அது போன்று கடத்தின் ஆகாரம் அநேகமாம். அவற்றிற் கெல்லாம் "கட" என்னும் இரண்டெழுத்துக்களுடன்கூடிய பெயர் ஒன்றும். அந்த ஆகாரங்கள் பரஸ்பரம் வியபிசாரியாம். எல்லாக் கடங்களி னுகாரத்திலும் பெயர் ஒன்றே அநுகதாயிருக்கின்றது. ஆதலால், பொய்யான ஆகாரம் சத்தியமான பெயரினும் வேருகாதாம். இவ்வாற்றால், சகல பதார்த்தங்களி னுகாரமும் தத்தம் பெயரினும் வேறன்றும். நாமஸ்வரூபமே ஆகாரமாம். அவ்வெல்லா நாமங்களும் ஓங்காரத்தினைவிட வேறன்று. பின்னரோ, ஓங்கார ஸ்வரூபமே நாமமாம். ஏனெனின், வாசக சப்தத்தினை நாம மென்பர். உலகத்திலும் வேதத்திலும் வழங்கும் சப்தங்க ளெல்லாம் ஓங்காரத்தினின் றுண்டாயின வென்பது சுருதியில் பிரசித்தமாம். காரியம் யாவும் காரண சொரூபமே யாம். ஆதலால், ஓங்காரத்தின் காரியமான வாசக சப்தரூப நாமம் ஓங்கார ஸ்வரூப மாம். இவ்வாற்றால், ரூப பாகமான பதார்த்தத்தி னுகாரம் நாம ஸ்வரூபமாம். எல்லா நாமங்களும் ஓங்கார ஸ்வரூபமாம்; ஆதலால், எல்லாச் சொரூபமும் ஓங்காரமாம்.

### 284. ஓங்காரப் பிரஹ்மங்களின் அபேதம்.

எங்ஙனம் எல்லாச் சொரூபமும் ஓங்காரமோ, அங்ஙனமே எல்லாச் சொரூபமும் பிரஹ்மமாம். ஆதலால், ஓங்காரம் பிரஹ்மரூபமாம். அல்லது, ஓங்காரம் பிரஹ்மத்தின் வாசகமாம்; பிரஹ்மம் வாச்சியமாம். வாச்சியத்திற்கும் வாசகத்திற்கும் அபேதமுண்டாகின்றது. இதனாலும், ஓங்காரம் பிரஹ்மரூபமாம்.

விசார திருஷ்டியினுலே பிரஹ்மத்தில் எந்த அக்ஷரம் அத்தியஸ்தமா யிருக்கின்றதோ, அதற்குப் பிரஹ்மம் அதிஷ்

டாகமா யிருக்கின்றது. அத்தியஸ்தத்தின் ஸ்வரூபம் அதிஷ்டானத்தினும் வேறன்று. இதனனும், ஓங்காரம் பிரஹ்மரூபமாம். ஆதலால், ஓங்காரத்தைப் பிரஹ்ம சொரூபமாகச் சிந்தனை செய்க.

285. நான்கு பாதங்களையும் சொல்லுதலோடு, ஆத்மாவிற்குப் பிரஹ்மத்தோடும் விசுவனுக்கு விராட்டினேடும் அபேதமும், விராட் விசுவர்களின் ஏழு அங்கங்களும், பத்தோன்பது முகங்களும் கூறுதல்.

பிரஹ்மரூப ஓங்காரத்தை ஆத்மாவினும் வேறன்றெனச் சிந்தனை செய்க. ஏனெனின், ஆத்மாவிற்குப் பிரஹ்மத்தோடு முக்கிய அபேத மிருக்கின்றது.

பிரஹ்மத்திற்கு நான்கு பாதங்க ளுண்டு. அங்ஙனமே ஆத்மாவிற்கும் நான்கு பாதங்க ளுண்டு. பாத மென்பது பாகத்திற்காம். அதனுடைய அம்சம் என்றும் கூறப்படுகின்றது.

விராட், ஹிரண்யகர்ப்பன், ஈசுவரன், தத்பத லக்ஷியமான ஈஸ்வர சாக்ஷியாகிய நான்கும் பிரஹ்மத்தின் பாதங்களாம். விசுவன், தைசதன், பிராக்ஞன், துவம்பத லட்சியமான ஜீவசாக்ஷியாகிய நான்கும் ஆதமாவின் பாதங்களாம். ஜீவசாக்ஷிக்கே துரியமென்றும் பெயர்.

சமஷ்டி ஸ்தூலப் பிரபஞ்ச சகித சேதநத்திற்கு விராடென்று பெயர். வியஷ்டி ஸ்தூல அபிமாநிக்கு விசுவனென்று பெயர். விராட்டிற்கும் விசுவனுக்கும் உபாதி ஸ்தூலமா யிருத்தலால் விராட்டுருபமே விசுவன்; விராட்டினும் வேறல்லன்.

விராட்டுரூப விசுவனுக்கு ஏழங்கங்க ளுண்டு:—

சுவர்க்க லோகம் சிரசு, சூரியன் நேத்திரம், வாயு பிராணன், ஆகாசம் மார்பு, சமுத்திராதி ரூப ஜலம் மூத்திர ஸ்தானம், பிருதிவி பாதம், ஹோமம் பண்ணப்படும் அக்கினி முகம். இவ்வேழும் விசுவனுடைய அங்கங்கள் எனக் கூறப்படுகின்றன.

மாண்டூக்கிய உபநிஷத்தில் சுவர்க்க லோகாதிகள் விசுவனுடைய அங்கங்களாகச் செய்யாவிடினும் விராட்டின் அங்கங்களாம். அந்த விராட்டினேடு விசுவனுக்கு அபேத மிருத்தலின் விசுவனுடைய அங்கங்க ளென்று சொல்லப்படுகின்றன.

அவ்வாறு, விராட்டு விசுவர்களுக்கு 19 முகங்க ளிருக்கின்றன:—பிராணன்கள் 5, கர்மேந்திரியங்கள் 5, ஞானேந்திரியங்கள் 5, அந்தக்கரணம் 4; இப்பத்தொன்பதும் முகங்கள் போலப் போகத்திற்குச் சாதநமா யிருத்தலால் முகங்க ளெனப்படுகின்றன. ஜாக்கிராவஸ்தையில் இந்தப் பத்தொன்பது முகங்களாலும் ஸ்தூல சப்தாதிகள் பாஹ்ய விருத்தியால் அநுபவிக்கப்படுகின்றன. ஆதலால், விராட்டுரூப விசுவன், ஸ்தூலத்தின் போக்தா வென்றும், பாஹ்ய விருத்தி (பஹிர்ப் பிரஞ்ஞன்) என்றும், ஜாக்கிராவஸ்தை யுடையவ னென்றுங் கூறப்படுகின்றான்.

286. பதினான்கு திரிபுடிகள்.

போகசாதநங்களான பிராணாதி பத்தொன்பது முகங்களில், சுரோத்திராதி (பத்து) இந்திரியங்களும், அந்தக்கரணம் நான்கும் ஆகிய பதினான்கும் தத்தம் விஷயங்களின் சகாயத்தையும், தத்தம் தேவதைகளின் சகாயத்தையும் விரும்புகின்றன. தேவதை, விஷயம் என்பவற்றின் சகாய மின்றிக் கேவலம் இவற்றால் போக முண்டாகின்ற தில்லை. ஆதலால், பஞ்சப் பிராணன்களும் 14 திரிபுடிகளும் விராட்ரூப விசுவனுடைய முகங்க ளெனப்படுகின்றன. (முகம் தேவதை விஷயம் என்னும்) மூன்றன் சமுதாயத்திற்குத் திரிபுடி யென்று பெயராம்.

அத் திரிபுடி இவ்வாறு சொல்லப்படுகின்றது:—

(1) சுரோத்திரேந்திரியம் அத்தியாத்மம். அதன் விஷயமாகிய சப்தம் அதிபூதம். திசையின் அபிமாநி தேவதை அதிதைவமாம்.

இப்பிரகரணத்தில் கிரியா சக்தி யுடையனவும் ஞாந சக்தி யுடையனவுமாகிய இந்திரியமும் அந்தக்கரணமும் அத்தியாத்மமெனப்படும். அவற்றின் விஷயம் அதிபூத மெனப்படும். அவற்றின் சகாயமான தேவதை அதிதைவ மெனப்படும்.

(2) துவக்கிந்திரியம் அத்தியாத்மம்; அதன் விஷயமான ஸ்பரிசம் அதி பூதம்; வாயுதத்துவாபிமாநி தேவதை அதிதைவமாம்.

(3) நேத்திரேந்திரியம் அத்தியாத்மம்; ரூபம் அதிபூதம்; சூரியன் அதிதைவமாம்.

(4) இரசனேந்திரியம் அத்யாத்மம்; இரசம் அதிபூதம்; வருணன் அதிதைவமாம்.

(5) கிராணேந்திரியம் அத்தியாத்மம்; கந்தம் அதி பூதம்; அசுவினி குமாரர் அதிதைவமாம்.

வார்த்திககாரராய சுரேசுவராசாரியர் பிருதிவியின் அபிமானி தேவதையைக் கிராணத்தின் அதிதைவமாகச் சொல்லியிருக்கின்றார். அதுவும் பொருந்தும். எதனுலெனின், பிருதிவியினின்றும் கிராணம் உற்பத்தியாகின்றது. ஆகையால், பிருதிவி அதிதைவமாகச் சொல்லப்பட்டது. அன்றியும், சூரியனுடைய குதிரையின் மூக்கினின்றும் அசுவினி குமாரர்களின் உற்பத்தி சொல்லப்பட்டிருத்தலால் மூக்கின் அதிதேவதை அசுவினி குமார ரென்று சிலவிடத்துக் கூறப்பட்டிருக்கின்றது.

(6) வாக்கிந்திரியம் அத்தியாத்மம்; வக்தவ்யம் (சொல்லப்படுவது) அதிபூதம்; அக்கினிதேவதை அதிதைவமாம்.

(7) பாணீந்திரியம் அத்தியாத்மம்; பதார்த்தங்களைக் கிரகித்தல் அதிபூதம்; இந்திரன் அதிதைவமாம்.

(8) பாத இந்திரியம் அத்தியாத்மம்; நடத்தல் அதிபூதம்; விஷ்ணு அதிதைவமாம்.

(9) குத இந்திரியம் அத்யாத்மம்; மல விஸர்ஜநம் அதிபூதம்; யமன் அதிதைவமாவன்.

(10) உபஸ்த இந்திரியம் அத்யாத்மம்; கிராமிய (மைதுநக் கிரியாரூப பசு) தர்மத்தினது சுகத்தின் உற்பத்தி அதி பூதம்; பிரஜாபதி அதிதைவமாவன்.

(11) மநம் அத்யாத்மம்; மனனத்தின் விஷயம் அதிபூதம்; சந்திரன் அதிதேவதையாவன்.

(12) புத்தி அத்யாத்மம்; புத்திக்கு விஷயம் அதிபூதம்; பிரகஸ்பதி அதிதைவ மாவர்.

(13) அகங்காரம் அத்யாத்மம்; அகங்காரத்தின் விஷயம் அதிபூதம்; ருத்திரன் அதிதைவமாவர்.

(14) சித்தம் அத்யாத்மம்; சிந்தனையின் விஷயம் அதிபூதம்; க்ஷேத்திரஞ்ஞனுகிய சாக்ஷி அதிதைவமாம்.

இந்தப் பதினன்கு திரிபுடிகளும், ஐந்து பிராணன்களும் சேர்ந்து பத்தொன்பதும் விராட்ரூப விசுவனுடைய முகங்களாம்.

### 287. விசுவன் விராட் அகாரம் என்பவற்றின் அபேத சிந்தனை.

எங்ஙனம் விராட்டுடன் விசுவனுக்கு அபேத மிருக்கின்றதோ, அங்ஙனமே, ஓங்காரத்தின் முதன்மாத்திரையாகிய அகா

ரத்திற்கும் விராட்ரூப விசுவனேடு அபேத மிருக்கின்றது; எதனுலெனனின்,

பிரஹ்மத்தின் நான்கு பாதங்களில் முதற் பாதம் விராட்டாம். ஆத்மாவின் நான்கு பாதங்களில் முதற்பாதம் விசுவனும்.

அங்ஙனமே, ஓங்காரத்தின் நான்கு மாத்திரை ரூப பாதங்களில் முதற் பாதம் அகாரமாம். ஆதலால், பிரதமத் தன்மை மூன்றிலும் சமாந தர்மமா யிருத்தலால் விசுவன் விராட்டு அகாரங்களின் அபேத சிந்தனை செய்க.

288. விசுவ தைஜஸர்களின் விலக்ஷணத்தன்மை.

விசுவனுக்குக் கூறப்பட்ட ஏழு அங்கங்களும் பத்தொன்பது முகங்களும் தைஜஸனுக்கும் இருப்பனவாக அறியத்தக்கனவாம். ஆனல், இவ்வளவு பேத முண்டு:—

விசுவனது அங்கங்களும் முகங்களும் ஈசுவரனுல் செய்யப்பட்டன.

தைஜஸனது இந்திரிய தேவதா விஷயரூப திரிபுடிகளும் சிரசு முதலிய அங்கங்களும் மனேமயமா யிருக்கின்றன. தைஜஸனது போகம் சூக்ஷ்மமாம்.

போக மென்பது சுக துக்கங்களின் ஞாநமாம். அதன்கண் ஸ்தூல சூக்ஷ்மத் தன்மைகள் சொல்லுதல் பொருந்தா வாயினும், பாஹ்ய சப்தாதி விஷயங்களின் சம்பந்தத்தால் (உண்டாகிற) சுக துக்கங்களின் சாக்ஷாத்காரம் ஸ்தூல மெனப்படும். மாநஸமான சப்தாதிகளின் சம்பந்தத்தா லுண்டாகும் போகம் சூக்ஷ்ம மெனப்படும்.

இக்காரணத்தால், விசுவன் ஸ்தூலத்தின் போக்தா வென்று சுருதியிற் கூறப்பட் டிருக்கின்றது. தைஜஸன் சூக்ஷ்மத்தின் போக்தா வென்று கூறப்பட் டிருக்கின்றது. எதனுலெனின், தைஜஸனது போக யோக்கியமான சப்தாதிகள் மாநஸமா யிருத்தலால் சூக்ஷ்மமாம். அவற்றை அபேக்ஷித்து விசுவனது போக்கியம் பாஹ்ய சப்தாதிகளாம். அவை ஸ்தூலமாம்.

விசுவன் பகிர்ப் பிராஞ்ஞனுவன்; தைஜஸன் அந்தர்ப் பிராஞ்ஞனுவன்; ஏனெனின், விசுவனது அந்தக்கரணத்தின் விருத்தி

ரூபப் பிரஞ்ஞை வெளியே போகாநின்றது ; தைஜஸனது பிரஞ்ஞை போகின்ற தில்லை.

### 289. தைஜஸ ஹிரண்யகர்ப்ப உகாரங்களின் அபேத சிந்தனே.

எங்ஙனம் விசுவனுக்கும் விராட்டிற்கும் அபேதமிருக்கின்றதோ, அங்ஙனமே தைஜஸனையும் ஹிரண்யகர்ப்ப ரூபமா யறிதல் வேண்டும். ஏனெனின், தைஜஸனது உபாதி சூக்ஷ்மமாம். ஹிரண்ய கர்ப்பனது உபாதியும் சூக்ஷ்மமே. ஆதலால், இவ்விரண்டனையும் ஒன்றென அறிக.

தைஜஸ ஹிரண்யகர்ப்பர்களின் ஏகத்தன்மையினை அறிந்து ஓங்காரத்தின் இரண்டாவது மாத்திரையான உகாரத்தோடு அவற்றின் அபேதத்தைச் சிந்தனைசெய்க. ஏனெனின்,

ஆத்மாவின் நான்கு பாதங்களில் இரண்டாவது பாதம் தைஜஸனுவன். பிரஹ்மத்தின் இரண்டாவது பாதம் ஹிரண்ய கர்ப்பனுகும். ஓங்காரத்தின் மாத்திரைகளில் இரண்டாவது மாத்திரை உகாரமாம்.

இரண்டாவதாந் தன்மை மூன்றிலும் சமாந தர்மமாம். ஆகையால், மூன்றனது ஒன்ருந் தன்மையினைச் சிந்தனை செய்க.

### 290. பிராஞ்ஞன் ஈசுவரன் மகாரம் என்பவற்றின் அபேதம். பிராஞ்ஞனது விசேஷணம்.

பிராஞ்ஞனை ஈசுவர ரூபமாக அறிக ஏனெனின், பிராஞ்ஞனுக்குக் காரண (சரீரம்) உபாதியாம். ஈசுவரனுக்கும் காரணம் உபாதியாம். ஈசுவரனும் பிராஞ்ஞனும் பாதங்களில் மூன்ருவதாவர். ஓங்காரத்தின் மூன்ருவது மாத்திரை மகாரமாம்.

மூன்றிலும் மூன்ருவதாந்தன்மை சமாந தர்மமா யிருத்தலால் மூன்றற்கும் ஒன்ருந் தன்மையினை உணர்க.

இந்தப் பிராஞ்ஞன் பிரஞ்ஞாந கனனுவன். ஏனெனின், ஜாக்கிர ஸ்வப்நங்களின் எல்லா ஞாநங்களும் சுழுத்தியில் கனம் எனப்படும் ஒரே அவித்தியா ரூபமாய் விடுகின்றது. ஆதலால், பிரஞ்ஞாந கன மெனப்படுகின்றது.

இந்தப் பிராஞ்ஞன் "ஆநந்தபுக்" கென்றும் சுருதியாற் கூறப்பட் டிருக்கின்றான். ஏனெனின், அவித்தையினால் மறைபட்ட ஆநந்தத்தினை இந்தப் பிராஞ்ஞன் புசிக்கின்றான். ஆகையால், ஆநந்தபுக் கென்று கூறப் படுகின்றான்.

எங்ஙனம் தைஜஸ விசுவர்களின் போகம் திரிபுடியா லுண்டாகின்றதோ, அங்ஙனமே பிராஞ்ஞனது போகத்திற்கும் திரிபுடி கூறப்படுகின்றது:—சேதநத்தின் பிரதிபிம்ப சகிதமான அவித்தையின் விருத்தி அத்தியாத்மமாம். அஞ்ஞாநத்தினால் மறைக்கப்பட்ட ஸ்வரூபாநந்தம் அதிபூதமாம். ஈசுவரன் அதிதைவமாவன்.

இவ்வாற்றால், விசுவன் பகிர்ப் பிரஞ்ஞனா யிருக்கின்றான். தைஜஸன் அந்தர்ப் பிரஞ்ஞனா யிருக்கின்றான். பிராஞ்ஞன் பிரஞ்ஞாந கனனா யிருக்கின்றான்.

291. வாஸ்தவ விசுவன் முதலிய மூன்றன் ஏகத்துவம் துரீயத்திற்கு ஈஶ்வர சாக்ஷியோடு அபேதம்.

இவ்விதமாக (விசுவாதி) மூன்றற்கு முள்ள பேதம் உபாதியினா லாயிருக்கின்றது. விசுவனுக்கு ஸ்தூலம் சூக்ஷ்மம் அஞ்ஞாநம் (என்னு) மூன்றும் உபாதிகளாம். தைஜஸனுக்குச் சூக்ஷ்மம் அஞ்ஞாந (மென்னு) மிரண்டும் உபாதிகளாம். பிராஞ்ஞனுக்கு அஞ்ஞாநம் ஒன்றே உபாதியாம்.

இவ்வாறு, உபாதிகளின் ஏற்றத் தாழ்வால் மூன்றற்கும் பேத முண்டு. உண்மையில் ஸ்வரூபமாகப் பேத மில்லை.

விசுவன், தைஜஸன், பிராஞ்ஞன் என்னும் மூன்றிலும் அநுகதமான சேதநம் பரமார்த்தமாக மூன்று உபாதிகளின் சம்பந்த மில்லா திருக்கின்றது. மூன்று உபாதிகளின் அதிஷ்டாநம் துரீயமாம். அது பகிர்ப்பிரஞ்ஞ னன்று; அந்தர்ப் பிரஞ்ஞ னன்று; பிரஞ்ஞாந கனமு மன்று; கர்மேந்திரியத்திற்கும் ஞானேந்திரியத்திற்கும் விஷய மன்று; புத்திக்கு விஷய மன்று; எந்தச் சப்தத்திற்கும் விஷய மன்று.

இத்தன்மையான துரீயத்தைப் பரமாத்மாவின் நான்காவது பாதமான ஈசுவர சாக்ஷியாகிய சுத்தப் பிரஹ்ம ரூபமென்று அறிக.

292. இரண்டு சொருப முடைய ஓங்கார ஆத்மாக்களின் அபேதத்தினை மாத்திரா ரூபத்தாலும் பாத ரூபத்தாலும் சிந்தித்தல்.

இவ்வாற்றால், ஆத்மாவுக்கு இரண்டுவித ஸ்வரூபங்கள் கூறப்பட்டன. ஒன்று பரமார்த்த ரூபம்; மற்றொன்று அபர மார்த்த ரூபம்.

மூன்று பாதங்களோ அபரமார்த்தரூபமாம். ஒரு பாதமாகிய துரியம் பரமார்த்தரூபமாம்.

ஆத்மாவிற்கு இரண்டு ஸ்வரூபங்கள் இருப்பதுபோல் ஓங்காரத்திற்கும் இரண்டு ஸ்வரூபங்க ளுண்டு. அகார உகார மகாரங்களாகிய மூன்று மாத்திராரூப அக்ஷரங்கள் அபரமார்த்த ரூபமாம். மூன்று மாத்திரைகளிலும் வியாபித்திருக்கின்ற அஸ்திபாதிப் பிரிய ரூப அதிஷ்டாநசேதநம் பரமார்த்த ரூபமாம். ஓங்காரத்தின் பரமார்த்தரூபம் சுருதியில் அமாத்திரை யென்னும் சப்தத்தினால் கூறப்பட்டிருக்கின்றது. ஏனெனின், அந்தப் பரமார்த்த ஸ்வரூபத்தின்கண் மாத்திரைகளின் விபாகமில்லை. ஆதலால், அமாத்திரை யெனப்படுகின்றது. இவ்விதத்தால், இரண்டு ஸ்வரூபங்களுடன் கூடிய ஓங்காரத்திற்கு இரண்டு சொரூபங்களுடன் கூடிய ஆத்மாவோடு அபேதத்தை யறிக.

வியஷ்டி சமஷ்டி ஸ்தூலப் பிரபஞ்சத்துடன் கூடிய விசுவ விராட்டுகளுக்கும் அகாரத்தோடு அபேதத்தினை யறிக.

ஆத்மாவின் பாதங்களில் விசுவன் முதலாவதாவன். ஓங்காரத்தின் மாத்திரைகளில் அகாரம் முதலாவதாம். ஆதலால், இரண்டையும் ஒன்றாக அறிக.

சூக்ஷ்மப் பிரபஞ்ச சகிதமான ஹிரண்யகர்ப்ப ரூப தைஜஸனை உகார ரூபமாக அறிக.

தைஜஸனும் ஆத்மாவின் பாதங்களில் இரண்டாவதாவன். ஓங்காரத்தின் மாத்திரைகளில் உகாரமும் இரண்டாவதாம். ஆதலால், இரண்டையும் ஒன்றாக அறிக.

காரண உபாதியோடுகூடிய ஈசுவரரூபப் பிராஞ்ஞனை மகார ரூபமாக அறிக.

எங்ஙனம் ஈசுவரரூபப் பிராஞ்ஞன் மூன்றாவதாவன், அங்

னமே, மகாரமும் மூன்றுவதாம். ஆதலால், ஈசுவரரூபப் பிராஞ்ஞனையும், மகாரத்தினையும் ஒன்றாக அறிக.

மூன்றிலும் அநுகதமான பரமார்த்தரூப துரியத்தினை ஓங்கார அக்ஷரத்தின் மூன்று மாத்திரைகளில் அநுகதமான ஓங்காரத்தின் பரமார்த்த ரூபமாகிய அமாத்திரையோடு அபேதமாக அறிக.

எங்ஙனம் விசுவாதிகளில் துரீயம் அநுகதமாயிருக்கின்றது அங்ஙனமே, அகாராதி மூன்று மாத்திரைகளிலும் அமாத்திரை அநுகதமாயிருக்கின்றது. ஆதலால், ஓங்காரத்தின் அமாத்திரை ரூபத்தினையும் துரீயத்தினையும் ஒன்றாக அறிக.

இவ்வாற்றால், ஆத்மாவின் பாதத்தையும் ஓங்காரத்தின் மாத்திரையையும் ஒன்றாக அறிந்து லய சிந்தனை செய்க.

293. லய சிந்தநத்தின் அநுவாதம். ஒவ்வொரு மாத்திரை வடிவ விசுவன் முதலியன அந்நிய மாத்திரை வடிவாதல்.

அந்த லய சிந்தநத்தைக் கூறுவாம்:—

விசுவரூப அகாரம் தைஜஸ ரூப உகாரத்திற்கு வேறாகாமல் உகாரரூபமாகவே யிருக்கின்றது. இவ்வாறு சிந்தனை செய்தல் இங்கு லய மெனப்படுகின்றது. இவ்வாறே ஏனைய மாத்திரைகளிலும் அறிந்து கொள்க.

எந்த உகாரத்தில் அகாரம் லயமாகின்றதோ அந்தத் தைஜஸ ரூப உகாரத்தினைப் பிராஞ்ஞ ரூப மகாரத்தில் லயஞ்செய்க.

பிராஞ்ஞ ரூப மகாரத்தினைத் துரீய ரூபமான ஓங்காரத்தின் பரமார்த்த ரூபமாகிய அமாத்திரையில் லயஞ்செய்க. ஏனெனின், ஸ்தூலத்தின் உற்பத்தியும் லயமும் சூக்ஷ்மத்தில் உண்டாகின்றன.

ஆதலால் விசுவரூப அகாரத்திற்கு தைஜஸரூப உகாரத்தில் லயமாதல் பொருந்தும்.

சூக்ஷ்மத்தின் உற்பத்தியும் லயமும் காரணத்தி லுண்டாகின்றன. ஆதலால், தைஜஸ ரூப உகாரத்திற்கு (அதன்) காரணமாகின்ற பிராஞ்ஞ ரூப மகாரத்தில் லயமாதல் பொருந்தும்.

இந்த இடத்தில் விசுவாதிகளைக் கொள்வதினால் சமஷ்டி விராட்டாதிகளும் தத்தம் திரிபுடிகளுமாகிய எல்லாவற்றையும் கொள்ளவேண்டு மென்பதனை யறிக.

எந்தப் பிராஞ்ஞ ரூப மகாரத்தின்கண் உகாரம் லயஞ் செய்யப்பட்டதோ, அந்த மகாரத்திற்குத் துரீய ரூப ஓங்காரத் தின் பரமார்த்த ரூப அமாத்திரையில் லயஞ்செய்க. ஏனெனின், ஓங்காரத்தின் பரமார்த்த ஸ்வரூபத்திற்கு துரீயத்தோடு அபேத மிருக்கின்றது. அந்தத் துரியம் பிரஹ்ம ரூபமாம். சுத்தப் பிரஹ்மத்தில் ஈசுவரன் பிராஞ்ஞன் என்னு மிருவரும் கற்பிக்கப் பட் டிருக்கின்றார்கள். எது எதன்கண் கற்பிக்கப்படுகின்றதோ அது அதன் ஸ்வரூபமாகின்றது. ஆதலால், ஈசுவர சகிதப் பிரா ஞ்ஞ ரூப மகாரத்திற்கு லயமாதல் பொருந்துகின்றது.

இவ்விதத்தால், எந்த ஓங்காரத்தின் பரமார்த்த ஸ்வரூபமா கின்ற அமாத்திரையில் எல்லாம் லயஞ்செய்யப் படுகின்றனவோ "அது நான்" என்று ஏகாக்கிர சித்தத்துடன் சிந்தனை செய்க.

ஸ்தாவர ஜங்கம ரூபமாயும், அசங்கமாயும், அத்துவயமா யும், அசம்ஸாரியாயும், நித்ய முக்தமாயும், நிர்ப்பயமாயு மிருக் கிற பிரஹ்ம ரூப ஓங்காரத்தின் பரமார்த்த ஸ்வரூபத்தினை "அது நான்" என்று சிந்தனை செய்வதனால் ஞானமுண்டாகின்றது. ஆதலால், ஞானவாயிலாக முக்தி ரூப பலத்தினைக் கொடுப்பது இந்த ஓங்காரத்தின் நிர்க்குண உபாஸனையாம். அது எல்லாவற் றினும் உத்தமமாம்.

294. ஓங்கார சிந்தநத்தில் பரம ஹம்ஸனுக்கு அதிகார முள தெனல்.

முன் சொன்ன பிரகாரம் ஓங்கார ஸ்வரூபத்தை யறிகின்ற வன் முநியாவன்; அறியாதவன் முநியாகான். ஏனெனின், முநியென்னும் பெயர் மநநஞ் செய்பவனுக் காம். இந்த ஓங்காரத் தின் சிந்தநம் மநந ரூபமாம். எவனுக்கு ஓங்காரத்தின் சிந்தனை வடிவ மநந மில்லையோ அவன் முநி யல்லன்.

ஈண்டு, மாண்டூக்கிய உபநிஷத்தின் ரீதியாய் ஓங்காரத்தின் சிந்தநம் சுருக்கமாகக் கூறப்பட்டது. நிருசிஹ்ம தாபிநி முதலிய உபநிஷத்துக்களினும் இதன் பிரகார மிருக்கின்றது. இந்த ஓங்கார சிந்தநம் பரம ஹம்ஸர்களின் கோப்பிய (இரகசிய) தந மாம். பகிர்முக புருஷனுக்கு இதில் அதிகார மில்லை; அத்தியந்தம் அந்தர் முகனுக்கே அதிகார மிருக்கின்றது. கிரகஸ்தனுக்கு இதில் அதிகார மில்லை. தநம் புத்திரன் ஸ்திரீசங்கம் முதலியன வில்லாத பரமஹம்ஸனே அதிகாரியாவன்.

295. ஓங்காரத் தியாந முடையவர்கட்குப் பலன்.

முற் (புகன்ற) பிரகாரத்தினுல் ஓங்காரத்தினைப் பிரஹ்மரூப மாகத் தியாநஞ் செய்வதினுல் ஞாநவாயிலாக மோக்ஷ முண்டா கின்றது.

ஆனுல், எவனுக்கு இந்த லோக போகத்திலாவது, பிரஹ்ம லோக போகத்திலாவது இச்சை யிருக்கின்றதோ, (எவன்)தீவிர வைராக்கிய மில்லாமல் ஹடத்தினுல் இச்சையைத் தகைந்து தந புத்திராதிகளைத் தியாகஞ் செய்து பரமஹம்ஸ குரு உபதேசத்தி னுல் ஓங்காரரூபப் பிரஹ்மத்தைத் தியாநஞ்செய்கிருனே, அவ னுக்குப் போக இச்சை ஞாநத்திற் பிரதிபந்தகமா யிருக்கின்றது. அதனுல், (அவனுக்கு) ஞாந முண்டாகின்ற தில்லை. பின்னரோ, தியாநஞ் செய்துகொண்டே (இந்தச்) சரீரம் விட்டபின் வேறு சரீரம் அடையப்படுகின்றது.

இந்த லோக போகங்களின் இச்சையைத் தகைந்து தியாநத் தில் (மநதினைச்) செலுத்தினுல் இந்த லோகத்தில் வெகு செல்வ முடைய பரிசுத்தமான சற்சங்க குலத்திற் ஜந்ம முண்டாகின் றது. ஆண்டு முன் (ஜந்மத்தின்) இச்சைக்கு விஷயமான எல் லாப் போகங்களும் பிராப்த மாகின்றது. முன் ஜந்மத்தின் தியாந சம்ஸ்காரத்தினுல் மீண்டும் விசாரத்திலாவது, தியாநத்தி லாவது பிரவிருத்தி யுண்டாகின்றது. அதனுல் ஞாந முண்டாய் மோக்ஷம் உண்டாகின்றது.

296. பிரஹ்ம லோகத்தின் போகங்களில் இச்சையைத் தகைந்து ஓங்காரரூபப் பிரஹ்மத்தின் தியாநத்திற் பிரவிருத்திக் கின்றவன் சரீரத்தைவிட்டுப் பிரஹ்மலோகத்திற்குச் செல்லு கின்ருன். அவ்விடத்தில் மனிதர்களுக்கும், பிதிர்க்களுக்கும், தேவதைகளுக்கும் துர்லபமான சுதந்தரத்தன்மையின் ஆநந்தத் தை யநுபவிக்கின்ருன். ஹிரண்யகர்ப்பனுடைய சத்திய சங்கற் பாதி சகல ஐசுவரியங்களும் இவனுக்குக் கிடைக்கின்றன.

297. பிரஹ்ம லோக மார்க்கத்தின் கிரமம்.

பிரஹ்மலோகத்திற்குப் போகும் மார்க்கத்தின் கிரமம் இதுவாம்:—பிரஹ்மோபாஸனையில் தற்பரனுயுள்ள புருஷன் இறக்குங்காலத்தில் அவன் இந்திரிய அந்தக்கரணங்கள் முழுவ தும் மூர்ச்சையடைந்து எதனையு மறியச் சாமர்த்திய மில்லாதன

வாயினும், யமதூதர்கள் அவனுடைய லிங்கசரீரத்தைக் கொண்டு போக அவன் சமீபத்தில் வருகின்றதில்லை. ஆனால்,

அக்கினி யபிமானிதேவதை அவனை மரண சமயத்தில் சரீரத்தினின்றும் வெளிப்படுத்தித் தனது லோகத்திற்குக் கொண்டு போகின்றது. அந்த அக்கினி லோகத்தினின்றும் தினத்தின் அபிமானி தேவதை (தனது லோகத்திற்குக்) கொண்டுபோகின்றது. அங்கிருந்து சுக்கில பக்ஷத்தின் அபிமானி தேவதை தனது லோகத்திற்குக் கொண்டுபோகின்றது. அங்கிருந்து மேல் உத்தராயண ஆறு மாதத்தின் அபிமானி தேவதை தனது லோகத்திற்குக் கொண்டுபோகின்றது. அங்கிருந்து மேல் சம்வத்சர அபிமானி தேவதை தன் லோகத்திற்குக் கொண்டு போகின்றது. அங்கிருந்து மேல் தேவலோக அபிமானி தேவதை தனது லோகத்திற்குக் கொண்டுபோகின்றது. அங்கிருந்து மேல் வாயு அபிமானி தேவதை தனது லோகத்திற்குக் கொண்டுபோகின்றது. அங்கிருந்து மேல் சூரிய தேவதை தனது லோகத்திற்குக் கொண்டு போகின்றது. அங்கிருந்து மேல் சந்திர தேவதை தனது லோகத்திற்குக் கொண்டுபோகின்றது. அங்கிருந்து மேல் மின்னல் அபிமானி தேவதை தன் லோகத்திற்குக் கொண்டு போகின்றது. ஆண்டு மின்னல் அபிமானி தேவதையின் லோகத்தில் அந்த உபாசகனுக்குச் சமானமான ஹிரணயகர்ப்பனது ஆக்ஞையினால் ஹிரண்யகர்ப்பலோகவாசியும், ஹிரண்கர்ப்பனுக்குச் சமானமான ரூபத்தை யுடையவனுமான திவ்யபுருஷன் இந்த உபாஸகனைக் கொண்டுபோக இவன் முன் வந்துசேருகின்றான்; அவன் இந்த மின்னல் அபிமானி தேவதையின் லோகத்திலிருந்து வருணலோகத்திற்குக் கொண்டுபோகின்றான்; மின்னல் அபிமானி தேவதை கூடவே செல்லுகின்றது. வருணலோகத்திலிருந்து இந்திரலோகத்திற்குக் கொண்டுபோகின்றான். வருணதேவதையும் இந்திரலோக பரியந்தம், ஹிரண்யகர்ப்ப லோக வாசியான புருஷனுடனும் உபாசகனோடு மிருக்கின்றான். அங்கிருந்து மேல் பிரஜாபதிலோக பரியந்தம் இந்திரதேவதை இருவரோடு மிருக்கின்றது. அங்கிருந்து மேல் பிரஜாபதி அவ்விருவர்களோடும் பிரஹ்மலோகத்திற்குக் கொண்டுபோவதில் சமர்த்தனாகான். ஆதலால், பிரஹ்மலோகத்தில் அந்தத் திவ்விய புருஷனோடு அந்த உபாசகன் சேருகின்றான். பிரஹ்மலோகத்தின் அதிபதி ஹிரண்யகர்ப்பனுவன். சூக்ஷ்ம சமஷ்டியின் அபிமானி சேதனன் ஹிரண்யகர்ப்பனுவன்.

கர்ப்ப னெனப்படுகின்றான். அவனையே காரியப் பிரஹ்ம மென்பர். காரியப் பிரஹ்மத்தின் இருப்பிடத்தினைப் பிரஹ்மலோக மென்பர்.

298 சாயுஜ்ய மோக்ஷத்தின் வர்ணநம்.

முற்கூறியபடி ஓங்கார உபாசனை சுத்தப் பிரஹ்ம ரூபமாகக் கூறப்பட் டிருக்கின்றது. சுத்தப் பிரஹ்மத்தின் உபாசகனுக்குச் சுத்தப் பிராஹ்மத்தின் பிராப்தி வேண்டுமாயினும், சுத்தப் பிரஹ்மத்தின் பிராப்தி ஞாநத்தினாலேயே யுண்டாகின்றது. இச்சா ரூபப் பிரதிபந்தத்தினால் எவனுக்கு ஞாந முண்டாக வில்லையோ அவனுக்குக் காரியப் பிரஹ்மத்தின் பிராப்தியாகிய சாயுஜ்ய ரூப மோக்ஷ முண்டாகின்றது.

பிரஹ்மலோகத்தை யடைந்த உபாஸகனுக்கு ஹிரண்யகர்ப்பனுக்குச் சமாநமான விபூதி கிடைக்கின்றது. அவன் சத்திய சங்கற்ப னாகின்றான். இச்சித்தபடி அவனுக்குச் சரீரம் உண்டாகின்றது. இச்சிக்கும் போகங்களெல்லாம் அவனுக்குச் சங்கற்பத்தினாலேயே கிடைக்கின்றன. ஒருசமயத்தில் ஆயிரம் சரீரங்களால் அவ்வவற்றின் போகங்களைத்தனித்தனியே புசிக்க வேண்டுமென்று இச்சை யுண்டாயின், அதேசமயம் ஆயிரம் சரீரங்களும் அவற்றை அநுபவித்தற்கு வெவ்வேறு சாமக்கிரிகளு முண்டாகின்றன.

அதிகமாய்ச் சொல்வ தென்னை! எதனைச் சங்கற்பிக்கின்றானோ அதுவே சித்திக்கின்றது. ஆனால் ஜகத்தின் சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களை விட்டு மற்றெல்லா விபூதிகளும் ஈசுவரனுக்குச் சமாநமாக வுண்டாகின்றன. இதனையே சாயுஜ்ய மோக்ஷ மென்பர். இவ்வாறு ஹிரண்யகர்ப்பனுக்குச் சமாநமாய் வெகு காலம் சங்கற்பத்தாற் சித்தித்த திவ்விய பதார்த்தங்களைப் புசித்துப் பிரளய காலத்தில் ஹிரண்ய கர்ப்ப லோகத்திற்கு நாசம் வரும்போது ஞாந முண்டாக உபாசகனானவன் விதேக மோக்ஷத்தை யடைகின்றான்.

299. ஓங்காரத்தின் அகங்கிரகத் தியாநத்தால் பிரஹ்ம லோகப் பிராப்தியின் நியமம்.

எங்ஙனம் ஓங்காரரூபப் பிரஹ்மத்தை யுபாசனை செய்பவன் பிரஹ்மலோகப் பிராப்தியின் வாயிலாக மோக்ஷத்தை யடைகின்

ருனே, அங்ஙனமே மற்ற உபநிஷத்துக்களிலும் பிரஹ்மத்தின் உபாசனை கூறப்பட்டிருக்கின்றது. அவற்றால் இதேபலன் உண்டாகின்றது. ஆனால் அகங்கிரக உபாஸனையின்றி வேறு உபாஸனையால் பிரஹ்ம லோகத்தின் பிராப்தி யுண்டாகின்ற தில்லையென்று சூத்திரகாரரும் பாஷ்யகாரரும் பிரஹ்ம சூத்திரத்தின் நான்காவது அத்தியாயத்திற் பிரதிபாதநஞ்செய்திருக்கின்றார்கள்.

நர்மதையின் பாணங்களைச் சிவரூபமாகவும், சாளிக்கிராமங்களை விஷ்ணுரூபமாகவும் தியாநஞ்செய்தல் கூறப்பட்டிருக்கின்றது. அது பிரதீகத் தியாந மாம்; அகங்கிரகத்தியாந மன்றாம்.

மநதைப் பிரஹ்மரூபமாகவும், ஆதித்யனைப் பிரஹ்மரூபமாகவும் தியாநஞ்செய்தல் கூறப்பட்டிருக்கின்றது. அதுவும் பிரதீகத் தியாந மாம்; அகங்கிரகத் தியாந மன்றாம்.

அவற்றால் பிரஹ்மலோகத்தின் பிராப்தி யுண்டாவ தில்லை. சகுண அல்லது நிர்க்குணப் பிரஹ்மத்தைத் தன்னின் அபேதமாகச் சிந்தனைசெய்தல் அகங்கிரகத் தியாந மெனப்படும். அதனாலேயே பிரஹ்மலோகத்தின் பிராப்தி யுண்டாகின்றது.

### 300. உத்தராயண மார்க்கத்தினால் பிரஹ்ம லோகத்திற் சென்றவர்கட்கு மீண்டும் சம்சாரத்தின் அப்பிராப்தியும் ஞாந வாயிலாக மோக்ஷத்தின் பிராப்தியும்.

முற்கூறிய மார்க்கம் உத்தராயணமார்க்க மென்றும், தேவமார்க்கமென்றும் கூறப்படும். அந்தத் தேவமார்க்கத்தினால் பிரஹ்மலோகத்திற்கு எந்த உபாஸகன் செல்லுகின்றானே அவனுக்கு மீண்டும் சமுசார முண்டாகின்ற தில்லை; ஆனால் ஞாந முண்டாகி விதேக முத்தியை யடைகின்றான்.

ஆண்டு ஞாநத்தின் சாதநங்களான குரு உபதேசாதிகளின் அபேக்ஷ யில்லை. ஆனால் பிரஹ்மலோகத்தில் குரு உபதேசாதி சாதநங்க ளின்றியே ஞாந முண்டாகின்றது. ஏனெனின் பிரஹ்ம லோகத்தில் தமோகுண ரஜோகுணங்கள் லேசமு மில்லை. அந்த லோகம் கேவலம் சத்துவகுணப் பிரதானமானது. தமோகுண மில்லாமையினால் ஜடத்தன்மை, ஆலசிய முதலியன இல்லை. ரஜோகுண மில்லாமையினால் காமக் குரோதாதி ரூப ரஜோகுணத்தின் காரிய மான விக்ஷேப மில்லை. கேவலம் சத்துவகுண

மிருத்தலால் அதன் காரியமான ஞானரூபப் பிரகாசம் அந்த லோகத்தில் பிரதானமாம்.

**301.** இரணிய கர்ப்பவாசிக்கு அசங்க நிர்விகாரப் பிரஹ்ம ரூப ஆத்மாவின் பாந முண்டாகின்ற தென்பதில் காரணம்.

ஓங்காரத்தைப் பிரஹ்மரூபமாக முதலில் உபாசனை செய்த காலத்து ஓங்காரத்தின் மாத்திரைகளின் அர்த்தம் இவ்வாறு சிந்தனை செய்யப்பட்டது:—

" ஸ்தூல உபாதிசகித விராட்டு விசுவசேதநம், அகாரத்தின் வாச்சியமாம். சூக்ஷ்ம உபாதிசகித சேதநமாகிய ஹிரண்யகர்ப்ப தைஜஸன் உகாரத்தின் வாச்சியமாம். காரண உபாதிசகித சேதநமாகிய ஈசுவர பிராஞ்ஞன் மகாரத்தின் வாச்சியமாம்." என இவ்வாறு எவ்வர்த்தம் முன் சிந்திக்கப்பட்டதோ அதன் ஸ்மிருதி பிரஹ்ம லோகத்தில் உண்டாகின்றது. சத்துவகுணப் பிரபாவத்தினல் இவ்வாறு விவேசந முண்டாகின்றது:—ஸ்தூ லோபாதியால் சேதநத்தில் விராட்டுத்தன்மையும், விசுவத்தன் மையும் பிரதீதியாகின்றன. ஸ்தூல சமஷ்டியின் திருஷ்டியால் விராட்டுத்தன்மையும், ஸ்தூல வியஷ்டியின் திருஷ்டியால் விசுவத் தன்மையுமிருக்கின்றன. சமஷ்டி வியஷ்டி ஸ்தூலத்தின் திருஷ்டி யின்றி விராட்டுத்தன்மையும், விசுவத்தன்மையும் பிரதீதியாவ தில்லை. ஆனல், சேதந மாத்திரமே பிரதீதியாகின்றது.

அங்ஙனமே, சூக்ஷ்ம உபாதி சகித ஹிரண்யகர்ப்ப தைஜஸ சேதநம் உகாரத்தின் வாச்சியமாம்.

அங்குச் சமஷ்டி சூக்ஷ்ம உபாதியின் திருஷ்டியால் சேதநத்தில் ஹிரண்ய கர்ப்பத்தன்மையும், வியஷ்டி சூக்ஷ்ம உபாதியின் திருஷ்டியால் தைஜஸத்தன்மையும் பிரதீதியாகின்றன. சூக்ஷ்ம உபாதியின் திருஷ்டி யின்றி ஹிரண்யகர்ப்பத் தன்மையும், தைஜஸத்தன்மையும் பிரதீதியாகின்ற தில்லை.

அங்ஙனமே, மகாரத்தின் வாச்சியம் ஈசுவரப் பிராஞ்ஞனும். ஆண்டுச் சமஷ்டி யஞ்ஞாந உபாதியின் திருஷ்டியினல் சேதநத்தில் ஈசுவரத்தன்மையும், வியஷ்டி யஞ்ஞாந உபாதியின் திருஷ்டி

யால் சேதநத்தில் பிராஞ்ஞத்தன்மையும் பிரதீதியாகின்றன. அஞ் ஞாந உபாதியின் திருஷ்டி யின்றி ஈசுவரத்தன்மையும், பிராஞ்ஞத் தன்மையும் பிரதீதியாகின்ற தில்லை.

எந்த வஸ்து எதனிடத்தில் மற்றொன்றன் திருஷ்டியினுல் பிரதீதியாகின்றதோ, அது அதனிடத்தில் பரமார்த்தமாக இருக் கின்ற தில்லை. எதன் எந்த ரூபம் பிறவற்றின் திருஷ்டி யின்றிப் பிரதீதியாகின்றதோ, அஃது அதன் பரமார்த்தரூபமாகின்றது. எங்ஙனம், ஒரு புருஷனிடத்தில் பிதாவின் திருஷ்டியால் புத்திரத் தன்மையும், பாட்டனது திருஷ்டியால் பௌத்திரத் தன்மை முத லிய ரூபங்களும் பாந மாகின்றன; அவை பரமார்த்தமாக இல்லை; புருஷனுடைய பிண்டமே பரமார்த்தமா யிருக்கின்றதோ, அங் ஙனமே, ஸ்தூல சூக்ஷ்ம காரண உபாதிகளின் திருஷ்டியினுல் எந்த விராட்டு விசுவாதி ரூபங்கள் தோன்றுகின்றனவோ, அவை மித்தையாம்; சேதந மாத்திரமே சத்தியமாம். அந்தச் சேத நம் சர்வ பேதங்களு மில்லாததாம். ஏனெனின், விராட்டுக்கும் விசுவனுக்கு மிருக்கும் பேதம் உபாதியினு லாகியதாம். அந்த உபாதி இருவர்க்கும் ஸ்தூல மாயினும், விராட்டுக்கு உபாதி சமஷ்டியும், விசுவனுக்கு உபாதி வியஷ்டியுமாம். அந்தச் சமஷ்டி வியஷ்டி உபாதியால் அவற்றிற்குப் பேத முளது; ஆதலால், ஸ்வரூபமாகப் பேத மில்லை.

அவ்வாறே, தைஜஸனுக்கு ஹிரண்யகர்ப்பனோடுள்ள பேத மும், சமஷ்டி வியஷ்டி உபாதியினு லாயதாம்; ஸ்வரூபமாக வில்லை. அங்ஙனமே, ஈசுவரனோடு பிராஞ்ஞனுக்குப் பேதமும், சமஷ்டி வியஷ்டி உபாதியின் பேதத்தினு லாயதாம்; ஸ்வரூபமாக வில்லை. இவ்வாறு பிராஞ்ஞனுக்கு ஈசுவரனோடு அபேத முண்டு. தைஜஸ னுக்கு ஹிரண்யகர்ப்பனோடு அபேத முண்டு. அங்ஙனமே, விசு வனுக்கு விராட்டோடு அபேத முண்டு.

இவ்வாற்றால், ஸ்தூலோபாதி யுடையவனுக்குச் சூக்ஷ்மோ பாதி யுடையவனோடாவது, காரண வுபாதி யுடையவனோடாவது பேத மில்லை. ஏனெனின், ஸ்தூல சூக்ஷ்ம காரண உபாதியின் திருஷ்டியை விடுதலால் சேதந ஸ்வரூபத்தில் எவ்வாறாய பேத மும் பிரதீதியாகின்ற தில்லை. சேதநத்துக்கு அநாத்மாவோடும் பேத மில்லை. ஏனெனின், அநாத்மாவாகிய தேகாதிகள் அவித் தியா காலத்தில் பிரதீதியாகின்றன; பரமார்த்மாகப் பிரதீதி

யாகின்ற தில்லை. அவற்றிற்கும் சேதநத்தோடு பேதம் பொருந்தாது.

இவ்வாறு, சர்வ பேத ரகிதமாயும், அசங்கமாயும், நிர்விகாரமாயும், நித்திய முக்தமாயும், பிரஹ்ம ரூபமாயும் இருக்கின்ற ஆத்மா, ஓங்காரத்தின் லக்ஷிய ஸ்வயம்பிரகாசரூபமாக, அந்த உபாஸனுக்குப் பாந மாகின்றது. ஆதலால், ஹிரண்யகர்ப்ப லோக வாசிக்குச் சமுசார முண்டாகின்ற தில்லை.

### 302. ஓங்காரத்திற்கும் மகாவாக்கியத்திற்கு முள்ள அர்த்தத்தின் ஏகத்துவம்.

மஹாவாக்கிய விவேக மின்றி ஞாந முண்டாகாதா மாயினும், ஓங்காரத்தின் விவேகமே மகா வாக்கியத்தின் விவேகமாம். ஸ்தூலோபாதி சகித சேதநம் அகாரத்தின் வாச்சியமாம். ஸ்தூலோபாதியை விட்ட சேதந மாத்திரம் அகாரத்தின் லக்ஷியமாம். சூக்ஷ்மோபாதிசகித சேதநம் உகாரத்தின் வாச்சியமாம். சூக்ஷ்மோ பாதியைவிட்ட சேதந மாத்திரம் (உகாரத்தின்) லக்ஷியமாம். காரண உபாதி சகித சேதநம் மகாரத்தின் வாச்சியமாம். காரண உபாதியைவிட்ட சேதந மாத்திரம் மகாரத்தின் லக்ஷியமாம்.

இவ்வாற்றால், உபாதிசகித விசுவாதிகள் அகாராதி மாத்திரைகளின் வாச்சியங்களாம். உபாதி ரகித சேதநம் எல்லா மாத்திரைகளுக்கும் லக்ஷியமாம். அவ்வாறே, நாம ரூபமான சகல உபாதிகளோடுகூடிய சேதநம் ஓங்கார அக்ஷரத்தின் வாச்சியமாம். நாம ரூபமான ஸகல உபாதிகளு மின்றிய சேதநம் ஓங்கார அக்ஷரத்தின் லக்ஷ்யமாம். இவ்வாறு, ஓங்காரத்திற்கும் மகா வாக்கியத்திற்கும் அர்த்தம் ஒன்றாகவே யிருக்கின்றது. ஆதலால், ஓங்கார விவேகத்தால் அத்வைத ஞாந முண்டாகின்றது. இவ்விதமாக, ஆசாரியர் வாக்கினின்றும் சிரவணஞ் செய்து அதிருஷ்டி யென்னும் மத்தியம சிஷ்யன் உபாஸனையில் பிரவிருத்தித்து ஞாந வாயிலாகப் பரம புருஷார்த்தமான மோக்ஷத்தை யடைந்தான்.

### 303. நிர்க்குண உபாசனையில் அதிகார மின்றியவன் கடமை.

நிர்க்குண உபாசனையில் அதிகார மின்றியவன் செய்யவேண்டியதைக் கூறுகின்றார்:—இந்த நிர்க்குணத் தியாநத்தினைச் செய்ய ஆற்ற வில்லையாயின், சகுண ஈசுவானை மநத்தில் தரித்தல் வேண்

டும். சகுணோபாசனை செய்ய ஆற்ற வில்லையாயின், நிஷ்காம கர்மத்தினைச்செய்து ஸ்ரீ ராம மூர்த்தியைப் பஜிக்குக; நிஷ்காம கர்மஞ் செய்ய ஆற்ற வில்லையாயின், சகாமமான சுபகர்மஞ் செய்க. சகாம கர்மஞ் செய்ய ஆற்ற வில்லையாயின், அந்த ஜடன் அடிக்கடி இறந்து பிறக்க.

ஓங்காரத்தின் அர்த்தத்தினை யறிந்து அதிருஷ்டி கிருதார்த்தனுன். இந்தத் தரங்கத்தினைப் படிப்பவனைத் தாதுவானவர் சுதிருஷ்டி யாக்குவர்.

---

துங்க வோங்கா ரப்பொரு டோன்றவே
அங்க திட்டி யறிந்து பயனுற்ருன்
பங்க மில்லித் தரங்கம் படிப்பனைத்
துங்க தாதுசு திட்டிய தாக்குவார்.

குருவேத முதலியன வியாவகாரிக மென்று பிரதிபாதிக்கும்
மத்தியமாதிகாரி சாதந வர்ணன மென்னும் நாம முள்ள

ஐந்தாந் தரங்க முற்றிற்று.





ஸ்ரீ கணேசாய நம꞉.

ஸ்ரீ நடேசாய நம꞉.

# ஸ்ரீ விசாரசாகரம்.

மன்ற மாடுநம் மாமணி பாதமும்
வென்ற கோவிலூர் மேவுறுஞ் சீர்த்தியிற்
சென்ற மாவீர சேகரச் செம்மருள்
என்ற னல்லித யத்தி லிலங்குமால்.

சுத்தமாஞ் சிதம்பரச் சுதன்போ னம்பலச்
சித்தனூர் தரங்கமைந் தியற்றிச் சென்றபின்
வித்திவி சாரசா கரவி ணைத்தரங்
கத்தைநற் காசிகா நந்த னுக்கினன்.

## ஆறுந்தரங்கம்.

### குருவேத முதலிய சாதநங்கள் மித்தை யென்று வர்ணித்தல்.

### 304. உபோற்காதம்.

நான்காவது தரங்கத்தில் உத்தமாதிகாரியின் உபதேசத்தின் பிரகாரம் உரைக்கப்பட்டது. ஐந்தாவது தரங்கத்தில் மத்திய மாதிகாரியின் உபதேசத்தின் பிரகாரம் உரைக்கப்பட்டது. இந்தத் தரங்கத்தில் கநிஷ்டாதிகாரியின் உபதேசத்தின் பிரகாரத்தினை உரைப்பாம்.

எவனுக்குச் சந்தேகங்கள் விசேஷமாய் ஜனிக்கின்றனவோ, அவனுக்குப் புத்தி தீவிரமாமாயினும், அவன் கநிஷ்டாதிகாரியாவன்.

இந்தத் தரங்கம் யுக்திப் பிரதாநமாதலால், கேட்ட அர்த்தத்தில் குதர்க்கம் தோற்றுபவனுக்கு இந்தத் தரங்க முபயோகமாம்.

குதர்க்கத்தால் தூஷிக்கப்பட்ட புத்தியையுடையவன் கநிஷ்டாதிகாரியாவன். அவனுக்கு உபதேசக் கிரமம் இந்தத் தரங்கத்தின்க ணுளது.

முன் தரங்கத்தில் பிரணவோபாசனை, ஜகத்தினுற்பத்தி நிரூபணத்தின் முன் இது கூறப்பட்டிருக்கின்றது:—"சேதநத்தின் பின்னமான அஞ்ஞாநமும் அதன் காரியமும் அநாத்மா வெனப்படும். அவ்வநாத்ம பதார்த்தங்களியாவும் சொப்பநம் போல மித்தையாம்." இவ் வார்த்தையினைக் கேட்டு இரண்டு சகோதரர்களும் பிரஶ்நத்தினின்றும் உபராம மடைந்திருப்பதனைப் பார்த்து (தர்க்க திருஷ்டி கேட்கின்முன்).

தர்க்க திருஷ்டியின் பிரஶ்நம்.

305. பிரஶ்நம்:—சோப்பந திருஷ்டாந்தத்தினுல் ஜாக்கிர பதார்த்தங்கள் மித்தையாகா வெனல்.

தர்க்க திருஷ்டி பிரஶ்நஞ் செய்கின்ருன்:—முன் அத்யந்த மறியப்படாத பதார்த்தத்தின் ஞாநம் சொப்பநத்தில் உண்டாகின்ற தில்லை. பின்னரோ, ஜாக்கிரத்தில் எதன் அநுபவ ஞாநமுண்டாகின்றதோ அதன் ஸ்மரணம் சொப்பநத்தி லுண்டாகின்றது. ஆதலால், ஸ்மிருதி ஞாநத்தின் விஷயமாய ஜாக்கிர பதார்த்தங்கள் சத்தியமா யிருத்தலால் சொப்பநத்தி லுண்டாகின்ற அவற்றின் ஸ்மிருதிரூப ஞாநமும் சத்தியமேயாம். ஆதலால், சொப்ந திருஷ்டாந்தத்தினுல் ஜாக்ர பதார்த்தங்கள் மித்தை யென்று கூறுதல் பொருந்தாது.

306. பிரஶ்நம்:—சோப்பநம் மித்தை யன்றெனல்.

வேறு பிரகாரத்தினுல் சொப்பந ஞாநத்தின் விஷயமாய பதார்த்தங்களின் சத்தியத் தன்மையினைப் பிரதிபாதநஞ் செய்வாம்.

வேறு பிரகாரத்தினுல் சொப்பநத்தின் ஞாநமும் அதன் விஷயமான பதார்த்தமும் சத்தியமாம்; மித்தை யன்ரும். எதனுலெனின், சொப்பநாவஸ்தையில் ஸ்தூல சரீரத்தினை விட்டு லிங்க சரீரம் வெளியிற் சென்று சத்தியமான பர்வதம் சமுத்திர முதலியவற்றினைப் பார்க்கின்றது. ஆதலால், சொப்பநம் மித்தை யன்ரும்.

சென்ற பிரஶ்நங்களி னுத்தரம்.

307. ஜாக்கிர பதார்த்தங்களின் ஸ்மிருதி சோப்பநத்தி லின்றெனல்.

பூர்வகால சம்பந்தி பதார்த்தத்தின் ஞாநம் ஸ்மிருதியாம். எங்ஙனம், முன் பார்த்த யானையின் "அந்த யானை" என்று ஸ்மிருதி யுண்டாகின்றது.




"இந்த யானை எதிரில் நிற்கின்றது" என்று உண்டாகின்ற ஞானம் ஸ்மிருதி யன்றாம். பின்னரோ, பிரத்தியக்ஷமாகக் கூறப் படுகின்றது.

சொப்பநத்திலோ "இந்த யானை எதிரில் நிற்கின்றது", "இது பர்வதம்," "இது நதி" என்று ஞான முண்டாகின்றது. ஆதலால், ஜாக்கிரத்தில் பார்க்கப்பட்ட பதார்த்தங்களின் ஸ்மிருதி சொப்பநத்தில் இல்லை. பின்னரோ, யானை முதலியவற்றின் பிரத்தியக்ஷ ஞானம் உளதாம்.

"ஜாக்கிரத்தில் அறியப்பட்ட பதார்த்தங்களின் ஞானமே சொப்பநத்தில் உண்டாகின்றது; அறியப்படாத பதார்த்தத்தின் ஞான முண்டாகின்ற தில்லை. ஆதலால், ஜாக்ர பதார்த்தத்தின் ஞான சம்ஸ்காரத்தினால் சொப்பநத்தின் ஞான முளதாம். சம்ஸ்கார ஜந்ய ஞானம் ஸ்மிருதி யெனப்படும். ஆதலால், சொப்பநத்தின் ஞானம் ஸ்மிருதி ரூபமாம்" என் றிவ்வாறு சங்கிக்கப்படுமாயின், அச்சங்கை பொருந்தாது. ஏனெனின், பிரத்தியக்ஷ ஞான மிரு பிரகாரமாம். ஒன்று அபிஞ்ஞாரூபப் பிரத்தியக்ஷமாம்; மற்றொன்று பிரத்தியபிஞ்ஞாரூபப் பிரத்தியக்ஷமாம்.

கேவலம் இந்திரிய சம்பந்தத்தினா லுண்டாகும் ஞானம் அபிஞ்ஞாப் பிரத்தியக்ஷமாம். எங்ஙனம், "இது யானை" என்று நேத்திர சம்பந்தத்தினா லுண்டாகும் யானையின் ஞானம் அபிஞ்ஞாப் பிரத்தியக்ஷமாம்.

முந்திய ஞானத்தின் சம்ஸ்காரத்தினாலும், இந்திரிய சம்பந்தத்தினாலும் உண்டாகும் ஞானம் பிரத்தியபிஞ்ஞாப் பிரத்தியக்ஷமெனப்படும். எங்ஙனம், முன் பார்த்த யானையின் ஞானம் "அந்த யானை இது" என்று உண்டாகின்றது; அது பிரத்தியபிஞ்ஞாப் பிரத்தியக்ஷ மெனப்படும்.

அவ்விடத்தில் முன் (பார்த்த) யானை யினது ஞானத்தின் சம்ஸ்காரமும், யானையோடுள்ள நேத்திரத்தின் சம்பந்தமும், பிரத்தியபிஞ்ஞாப் பிரத்தியக்ஷத்திற்கு ஹேதுக்களாம். ஆதலால், "சம்ஸ்கார ஜந்திய ஞானம் ஸ்மிருதிரூபமேயாம்" என்னும் நியமமில்லை; பின்னரோ, பிரத்தியபிஞ்ஞாப் பிரத்தியக்ஷமும் சம்ஸ்கார ஜந்யமாம். ஆனால், இந்திரிய சம்பந்த மின்றிக் கேவலம்






சம்ஸ்கார ஜந்நிய ஞான முண்டாயின், அது ஸ்மிருதி ஞான மெனப் படும்.

சொப்பநத்தில் யானை முதலியவற்றின் ஞாநம் கேவலம் சம்ஸ்கார ஜந்நிய மன்று. பின்னரோ, அது நித்திராரூப தோஷ ஜந்நியமாம். யானை முதலியவற்றைப் போலச் சொப்பநத்தில் கற்பிக்கப்பட்ட இந்திரியங்களு மிருக்கின்றன; ஆதலால், (அவற்றின் ஞாநம்) இந்திரிய ஜந்நியமாம்.

சொப்பந பதார்த்தம் சாக்ஷி பாஸியமாம், இந்திரிய ஜந்நிய ஞாநத்திற்கு விஷய மன்று மாயினும், அவிவேகியின் திருஷ்டியினுல் சொப்பநத்தின் ஞாநம் இந்திரிய ஜந்நிய மென்று சொல்லப் படுகின்றது. இவ்வாற்ருல், சொப்பநத்தின் ஞாநம் ஜாக்கிர பதார்த்தத்தின் ஸ்மிருதி யன்ரும்.

நித்திரையினின்றும் விழித்துப் புருஷன் "நான் சொப்பநத்தில் யானை முதலியவற்றினைப் பார்த்தேன்" என்று கூறுகின்ருன். சொப்பநத்தில் யானை முதலியவற்றின் ஸ்மிருதி யுண்டாகுமாயின், விழித்தபின் "யான் சொப்பநத்தில் யானை முதலியவற்றினை ஸ்மரணஞ் செய்தேன்" என்று கூறல் வேண்டும். இவ்வாறு ஒருவரும் கூறுவ தில்லை. ஆதலால், ஜாக்கிர பதார்த்தங்களின் ஸ்மிருதி சொப்பநத்தி லில்லை.

ஜாக்கிரகாலத்தில் கண்ட கேட்ட பதார்த்தங்களின் ஞாநமே சொப்பநத்தி லுண்டாகின்ற தென்னும் நியம மில்லை; பின்னரோ, ஜாக்கிரத்தில் அறியப்படாத பதார்த்தத்தின் ஞாநமும் சொப்பநத்தி லுண்டாகின்றது. எந்த ஜந்மத்திலும் ஒருபோதும் பார்த்தும் கேட்டு மிராததான விலக்ஷண பதார்த்தம், சொப்பநத்தில் ஒருகாலத்தில் தோற்றுகின்றது. ஆதலால், அவற்றின் ஞாநம் ஸ்மிருதி யன்ரும்.

"இந்த ஜந்மத்தின் பதார்த்தங்களது ஞாநத்தின் சம்ஸ்காரமே ஸ்மிருதிக்கு ஹேதுவாம்" என்னும் நியம மில்லை; பின்னரோ, அந்ய ஜந்மத்தின் ஞாந சம்ஸ்காரத்தினுலும் ஸ்மிருதி யுண்டாம். ஏனெனின், அநுகூல ஞாநத்தினுல் பிரவிருத்தி யுண்டாகின்றது. அநுகூல ஞாந மின்றிப் பிரவிருத்தி யுண்டாகின்ற தில்லை. ஆதலால், ஸ்தந்ய பாநத்தில் பாலகர்களின் முதற்

பிரவிருத்திக்குக் காரணமான "ஸ்தந்நியபாநம் எனக்கு அநுகூலம்" என்னும் ஞாந முண்டாகின்றது. ஆண்டு வேறு ஜந்மத்தில் ஸ்தந்நியபாநத்தில் அநுகூலத்தன்மை யநுபவம் செய்யப்பட்டுளது. அதன் ஸம்ஸ்காரத்தினுல் பாலகர்களுக்கு முதலில் அநுகூலத்தன்மையின் ஸ்மிருதி யுண்டாகின்றது. ஆதலால், ஜந்மாந்தரத்தின் ஞாந ஸம்ஸ்காரத்தினுலும் ஸ்மிருதி யுண்டாகின்றது. அங்ஙனமே இந்த ஜந்மத்தில் அறியப்படாத பதார்த்தத்தின் ஸ்மிருதியும், ஜந்மாந்தரத்தின் ஞாந ஸம்ஸ்காரத்தால் சொப்பநத்தில் சம்பவிக்கின்றது. அங்ஙனமாயினும், ஜாக்கிரகாலத்தில் எந்த ஜந்மத்திலும் ஞாநம் ஸம்பவியாததான பதார்த்தம் சொப்பநத்தில் பிரதீதியாகின்றது. எங்ஙனம், தன் தலையை வெட்டுவதைத் தன் நேத்திரத்தினுல் சொப்பநத்தில் பார்க்கின்ருன். அங்குத் தன் தலையை வெட்டுவதை நேத்திரத்தினுல் ஜாக்கிராவஸ்தையில் (ஒருவரும்) பார்க்கின்ற தில்லை. ஆதலால், ஜாக்கிர பதார்த்தத்தின் ஞாநத்தின் ஸம்ஸ்காரத்தினுல் சொப்பநத்தில் ஸ்மிருதி யுண்டாகின்ற தில்லை. இவ்வாருய சொப்பநத்தின் ஸ்மிருதிரூப கண்டநத்தில் அநேக யுக்திகள் கிரந்தக்காரால் கூறப்பட்டிருக்கின்றன. ஆனுல், சொப்பநத்தை ஸ்மிருதி ரூபமாகக் கொள்ளுதலில் முற்கூறிய தூஷணம் அதிபிரபலமாம். ஸ்மிருதி ஞாநத்தின் விஷயம் எதிரில் பிரதீதியாகின்ற தில்லை. சொப்பநத்தின் யானை முதலியவற்றின் எதிரில் பிரதீதி சொப்ந காலத்தில் உண்டாகின்றது. ஆதலால், சொப்நத்தில் யானை முதலியவற்றின் ஸ்மிருதி யில்லை.

308. சொப்பநத்தில் இலிங்க சரீரம் வெளியிற் சென்று ஜாக்கிர பதார்த்தங்களைக் காண்கின்ற தில்லை யெனல்.

"லிங்க சரீரம் வெளியிற் சென்று சத்தியமான மலை சமுத்ராதிகளைப் பார்க்கின்ற" தென்பதன் உத்தரம்:—ஸ்தூல சரீரத்தினின்றும் வெளியிற் சென்று லிங்க சரீரம் சத்தியமான மலை சமுத்திராதிகளைப் பார்க்குமாயின், அதன் வெளிச் செல்லலினுல் மாணு வஸ்தையில் சரீரம் பயங்கரரூபமாய்த் தோன்றுவது போல், சொப்பனுவஸ்தையிலும் லிங்க சரீரம் இல்லாமையால் ஸ்தூல சரீரம் பயங்கரமாதல் வேண்டும்; அவ்வாறே பிராணனில்லாத பிணம் போலவு மாதல்வேண்டும். சொப்பனுவஸ்தையி லிவ்வாருவ தில்லை. பின்னரோ, சொப்பனுவஸ்தையில் ஸ்தூல சரீரம்

பிராணனோடுகூடி யிருக்கின்றது; ஜாக்கிரத்திற் போல மங்கள ரூபமா யிருக்கின்றது. ஆகையால், ஸ்தூல சரீரத்தை விட்டு வெளியே லிங்க சரீரம் சொப்பனவஸ்தையிற் போகின்ற தில்லை.

"சொப்பனவஸ்தையில் பிராணன் (வெளியில்) செல்வ தில்லை. ஆனால், அந்தக்கரணமும் இந்திரியமும் வெளியி லுள்ள பர்வதாதிகளினிடத்திற் சென்று அவற்றினைப் பார்க்கின்றன. பிராணன் வெளியிற் செல்லாமையினால் ஸ்தூல சரீரம் மரணவஸ்தையிற் போல் பயங்கரமா யிருக்கின்றதில்லை. பிராணன் வெளியிற் செல்வதில் ஒரு பிரயோஜநமு மில்லை. ஏனெனின், பிராணனிடத்தில் ஞாந சக்தி யில்லை; கிரியா சக்தி யிருக்கின்றது. ஆதலால், வெளியி லுள்ள பதார்த்தங்களை யறியச் சாமர்த்திய மெதனிடத்திருக்கின்றதோ அதுவே (வெளியிற்) செல்லுகின்றது. ஞாந சக்தி அந்தக்கரணத்திலும் ஞாநேந்திரியத்திலு மிருக்கின்றது. பிராணனிற் போல கர்மேந்திரியத்தினிடத்தும் ஞாந சக்தியில்லை; கிரியா சக்தி யிருக்கின்றது. ஆதலால், பிராணனும் கர்மேந்திரியமும் சரீரத்தில் இருக்கின்றன. அதனால், மரண நிமித்தத்தாலாம் தாக (எரித்தல்) முதலியவற்றினின்றும் ரக்ஷிப்புண்டாகின்றது. அந்தக்கரணமும் ஞாநேந்திரியமும் வெளியிற் சென்று சத்தியமான பர்வதாதிகளைப் பார்த்துப் பிராண கர்மேந்திரியங்களின் சமீபத்தில் வருகின்றன" என்று கூறின், அதுவும் பொருந்தாது. ஏனெனின்,

ஸ்தூல சூக்ஷ்மக் கூட்டங்களுள் எல்லாவற்றிற்கும் யஜமானன் பிராணனும். பிராணனின்றிய சரீரத்தைப் பார்த்து (அதனை) க்ஷண மாத்திரமும் வைத்துக் கொள்ளுகின்ற தில்லை; வெளியிற் கொண்டுபோய்த் தகனம் செய்கின்றார்கள்; ஸ்பரிசஞ் செய்தால் ஸ்நாநஞ் செய்கின்றார்கள். ஆதலால், ஸ்தூல சரீரத்தின் சாரம் பிராணனும். அங்ஙனமே சூக்ஷ்ம சரீரத்தின்கண்ணும் பிரதாநம் பிராணனும்.

பிராணனும் இந்திரியாதிகளும் பரஸ்பரம் சிரேஷ்டத்தன்மையின் விவாதஞ் செய்து கொண்டு பிரஜாபதியி னிடத்திற் சென்று "ஏ பகவன்! எங்களுள் யாவர் சிரேஷ்டர்?" என்று கேட்டன. அப்போது பிரஜாபதி "நீங்கள் எல்லோரும் ஸ்தூல சரீரத்திற் பிரவேசஞ் செய்து ஒவ்வொருவராக வெளியிற்

செல்லுங்கள். எதன் வெளியிற் செல்லலினுல் (ஸ்தூல) சரீரம் அமங்கல ரூபமாய் விழுந்து விடுகின்றதோ அது உங்களுக்குள் சிரேஷ்டமாம் ” என்று கூறினர். பிரஜாபதியின் வசநத்தினுல் நேத்திராதி இந்திரியங்கள் ஒவ்வொன்றன் அபாவத்தினுல் அந்தாதி ரூப சரீரத்தின் ஸ்திதியினைப் பார்த்தன. பிராணன் வெளியிற் செல்லப் பிரயத்தநஞ் செய்யவே சரீரம் விழ வாரம்பித்தது. அப்போது “ நம் எல்லோருக்கும் எஜமான் பிராணனே” என்று யாவும் நிச்சயஞ் செய்தன. இக்காரணத்தினுல், பிராணன் சரீரத்தி லிருக்கும் வரையில் இந்திரியாதிக ளிருக்கின்றன ; பிராணன் வெளியிற் செல்லவே எல்லா இந்திரியங்களும் வெளியிற் செல்லுகின்றன. ஆகையால், சூக்ஷ்மக் கூட்டத்திற்கு, அரசன் போல பிராணனே பிரதாநமாம் ; அதன் வெளிச் செல்ல லின்றி அந்தக்கரண ஞாநேந்திரியங்கள் வெளியிற் செல்வ தில்லை.

அல்லது, அந்தக்கரணமும் ஞாநேந்திரியமும் பூதங்களின் சத்துவகுண காரியங்களாம். அவற்றில் ஞாந சக்தி யிருக்கின்றது ; கிரியா சக்தியில்லை. பிராணனில் கிரியா சக்தி யிருக்கின்றது; அதன் பலத்தினுல் மரண சமயத்தில் லிங்க சரீரம் இந்த ஸ்தூல சரீரத்தை விட்டு லோகாந்தரத்திற்குச் செல்லுகின்றது. பிராணனுடைய பலத்தானேயே இந்திரிய வாயிலாக அந்தக்கரணத்தின் விருத்தி வெளியி லுள்ள கடாதிகளின் சமீபத்திற் செல்லுகின்றது. பிராணனுடைய சகாய மின்றி அந்தக்கரண முதலியன வெளியிற் செல்லல் சம்பவியாவாம்.இக்காரணத்தினுல் யோக சாஸ்திரத்தில் “பிராண நிரோத மின்றி மநத்தின் நிரோத முண்டாகின்ற தில்லை. பிராணனது சஞ்சாரத்தினுல் மநத்தின் சஞ்சார முண்டாம்; பிராண நிரோதத்தினுல் மநத்தின் நிரோத முண்டாம் ” என்று கூறப்பட்டிருக்கின்றது. ஆதலால், மநத்தின் நிரோதரூப ராஜ யோகத்தின் இச்சையுள்ளவன் பிராண நிரோதரூப ஹடயோகத்தின் யநுஷ்டாநஞ் செய்க. இதனுனும், அந்தக்கரணத்தின் கமநம் பிராணனது அதீநமாம். அதன் வெளிச் செல்ல லின்றி அந்தக்கரணமும் ஞாநேந்திரியமும் வெளியிற் செல்லுவ தில்லை. சொப்பனுவஸ்தையில் ஸ்தூல சரீரம் பிராண சகிதமாய்க் காணப்படுகின்றது. ஆதலால், “ (அந்தக்கரணம்) வெளியே சென்று சத்திய பதார்த்தங்களைச் சொப்பநத்தில் பார்க்கின்றது ” என்று புகன்றது பொருந்தாது.

அல்லது, ஒருவன், சொப்பநத்தில் தன் சம்பந்தியுடன் கூடிச் சில வியவகாரங்களைச் செய்கின்றான்; விழித்துக் கொண்ட பின், அந்தச் சம்பந்தியைச் சந்தித்த போது "நாம் இருவரும் இராத்திரி இன்ன வியவகாரத்தைச் சேய்தோ"மென்று சொல்லு கின்ற தில்லை. பூர்வ பக்ஷியின் ரீதியானே, அவன் வெளியிற் சென்று சம்பந்தியைச் சந்தித்து உண்மையாக வியவகாரஞ்செய் திருக்கின்றான்; அவ்வாறு சந்தித்ததும், வியவகரித்ததும் சம்பந் திக்கும் தெரிந்திருத்தல் வேண்டும். சம்பந்தியும் இவனைக் கண்ட போது (அவ்வாறே) சொல்லல் வேண்டும். சித்தாந்தத்திலோ, சம்பந்தியும், அவனது சந்திப்பு ஆகிய எல்லாம் உள்ளே கற்பித மாம்.

அல்லது, வெளியே சென்று சத்திய பதார்த்தங்களைப் பார்க் கினே, ராத்திரியில் தூங்குகின்ற புருஷன் ஹரித்துவாரத்தில் மத்தியாஹ்ந சூரியனால் தபிக்கப்பட்ட மஹங்லா கங்கையின் பூர் வத்தி (கிழக்கி) லிருப்பதாகவும், நீல பர்வதம் கங்கையின் மேற்கி லிருப்பதாகவும் சொப்பநத்திற் பார்க்கின்றான். ஆண்டு இராத் திரியில் மத்தியாஹ்ந சூரியன் இல்லை. கங்கையின் பூர்வதிசையில் ஹரித்துவாரபுரி யில்லை; கங்கையின் மேற்கில் நீலபர்வத மில்லை; இதனாலும் சத்திய பதார்த்தங்களைச் சொப்பநத்திற் காணுதல் பொருந்தாது. ஜாக்கிரத்தின் ஸ்மிருதி அல்லது ஈசுவரனால் சிருஷ்டிக்கப்பட்ட பர்வதாதிகளின் ஞாநம் வெளியிற் சென்று சொப்பநத்தி லுண்டாகின்றது என்னும் இரண்டு பக்ஷங்களும் நிராகரிக்கப்பட்டன.

### சித்தாந்தம்:—ஜாக்கிர சொப்பநங்களின் சமத்தன்மை.

309. சொப்பநத்தில் திரிபுடிக் கூட்ட முழுவதும் உண்டாகின்றன வெனல்.

சித்தாந்தம் கூறப்படுகின்றது:—ஜாக்கிர பதார்த்தத்தின் ஸ்மிருதியும், லிங்க சரீரம் வெளியிற் செல்லலும் சம்பவியாவிடி னும், ஜாக்கிரத்திற் போல் சொப்பநத்தில் ஞாதா, ஞாநம், ஞே யம் என்னும் திரிபுடி தோற்றுகின்றன. ஆதலால், கழுத்தின் நாடிக் குட்டானே யாவு முண்டாகின்றன.

இதனைச் சர்வப் பிரமாணங்களுக்கும் பிரதாநமான வேதம் விளம்புகின்றது. மாண்டூக்கிய உபநிஷத்தில், "ஜாக் கிரகாலத்தின்

பதார்த்தங்கள் சொப்நத்தில் பிரதீதியாவ தில்லை. ஆனால், ரதம் குதிரை மார்க்கம் அங்ஙனமே ரதத்திலிருப்பவன் என்பன யாவும் சொப்பநத்தில் புதிதா யுண்டாகின்றன” என்று கூறப்பட்டிருக் கின்றது. ஆதலால், மலை சமுத்திரம் நதி வநம் கிராமம் பட்ட ணம் சூரியன் சந்திரன் எனச் சொப்பநத்திற் பார்க்கப்படும் பதார்த்தங்கள் யாவும் புதிதா யுண்டாகின்றன. சொப்பநத்திற் பர்வதாதிகள் உண்டாகாவிடின் அவற்றின் பிரத்தியக்ஷ ஞாநம் சொப்பநத்தி லுண்டாகின்றது; அஃது உண்டாக வேண்டுவ தில்லை. ஏனெனின், விஷயத்தோடு (உண்டாம்) இந்திரியத்தின் சம்பந்தம், அல்லது அந்தக்கரண விருத்தியின் சம்பந்தம் பிரத்தி யக்ஷ ஞாநத்திற்கு ஹேதுவாம். ஆதலால், பர்வதாதி விஷயங் களும், அவற்றின் ஞாந சாதனங்களான இந்திரியங்களும் அந்தக் கரணங்களுமாகிய வெல்லாம் உள்ளே யுண்டாகின்றன.

சொப்பந பதார்த்தம் சுத்தி ரஜதாதி போலச் சாக்ஷி பாஸிய மாம். சொப்பந ஞாநத்தில் அந்தக்கரண இந்திரியங்களின் உப யோக மில்லை. ஆதலால், ஞேயமான பர்வதாதிகளின் உற்பத்தி யினையே சொப்பநத்தில் அங்கீகரித்தல் யோக்யமாம். ஞாதா- ஞாநம் இந்திரியங்களின் உற்பத்தியினை யங்கீகரித்தல் யோக்கிய மன்றுமாயினும், எங்ஙனம் சொப்பநத்திற் பர்வதாதிகள் தோற்றுகின்றனவோ, அங்ஙனமே இந்திரியமும் அந்தக்கரண மும் பிராண சகித ஸ்தூல சரீரமும் தோற்றுகின்றன. ஆதலால், அவற்றிற்கும் உற்பத்தியை அங்கீகரித்தல் வேண்டும்.

அல்லது, சொப்பந பதார்த்தங்களில் நேத்திராதிகளுக்கு விஷயத்தன்மை பாநமாகின்றது. வியாவகாரிக நேத்திராதி களுக்கு அவ்விஷயத்தன்மையோ சொப்பநத்தின் பிராதிபாஸிக பதார்த்தங்களிற் பொருந்தாது. ஏனெனின், சம சத்தையுடைய பதார்த்தங்களே தம்மிற் சாதக பாதகங்களா மென்று ஐந்தா வது தரங்கத்தில் பிரதிபாதநஞ் செய்யப்பட் டிருக்கின்றது. ஆத லால், வியாவகாரிக நேத்திராதிகள் சரீரத்தி லிருப்பினும், அவற் றோடு சொப்பந பதார்த்தங்கட்கு விஷம சத்தை யிருத்தலினால், அவற்றின் ஞாநத்தின் விஷயத்தன்மை சொப்பநத்தின் பர்வ தாதிகட்குப் பொருந்துவ தில்லை. அல்லது, வியாவகாரிக இந் திரியங்கள் தத்தம் கோளகங்களை விட்டுக் காரியஞ் செய்வதில் சாமர்த்திய முடையனவாகா. சொப்பநாவஸ்தையில் அஸ்தம்,

பாதம், வாக்கு என்பனவற்றின் கோளகங்களோ நிச்சலமாக அந்நியனுக்குக் காணப்படுகின்றன; (சொப்பநங் காண்கிறவன்) கையில் திரவியத்தைக் கிரகித்துக்கொண்டு (சொப்பநத்தில்) அலறிக் கொண்டு ஓடுகின்றான். ஆதலால், சொப்பநத்தில் இந்திரியங்களி னுற்பத்தியை அவசியம் அங்கீகரித்தல் வேண்டும். அங்ஙனமே, சுகம் துக்கம் அவற்றின் ஞாநம் அந்தச் சுக துக்க ஞாநத்தின் ஆசிரயமான பிரமாதா என்பன சொப்பநத்தில் பிரதீதியாகின்றன. இல்லாத பதார்த்தத்தின் பிரதீதி யுண்டாவ தில்லை. ஆதலால், சகல திரிபுடி சமூகங்களும் சொப்பநத்தி லுண்டாகின்றன.

அநிர்வசநீயக் கியாதியின் கிரமம் இதுவாம்:—எவ்வளவு பிராந்தி ஞாந முண்டோ அதன் விஷயங்களெல்லாம் அநிர்வசநீயமாக உண்டாகின்றன. விஷய மின்றி எந்த ஞாநமு முண்டாகாதென்பது சித்தாந்தமாம். வேறு சாஸ்திரத்தின் மதத்திலோ, வேறு பதார்த்தம் வேற்று ரூபமாகத் தோற்றுவது பிராந்தியென்று கூறப்படும்; சித்தாந்தத்திலோ, எவ்வாறு பதார்த்தம் இருக்கின்றதோ அவ்வாறே ஞாநமு முண்டாகின்றது. ஆதலால், பிராந்தி ஸ்தலத்திலும் விஷயத்தின் உற்பத்தி அவசிய முண்டாகின்றது. விஷய மின்றி ஞாந முண்டாவ தில்லை. இவ்வாற்றால் சொப்பநத்தில் திரிபுடி தோற்றுவதால் எல்லாக் கூட்டமும் உற்பத்தியாகின்றன.

### 310. சொப்பநத்தினது உற்பத்தியின் சங்கையைச் செய்து அந்தக்கரணத்தின் அல்லது அவித்தையின் பரிணாமமும் சேதநத்தின் விவர்த்தமுமான சொப்நத்தின் சித்தி (யைக் கூறல்).

இதில், இவ்வாறு சங்கை யுண்டாகின்றது. சொப்பநத்தில் பிரதீதியாகும் பதார்த்தங்களுக்குஉற்பத்தியை அங்கீகரிக்கின்,எங்ஙனம் சொப்பந திருஷ்டாந்தத்தினால் ஜாக்கிரபதார்த்தங்கள் மித்தையென்று சித்தாந்தத்திற் கூறப்பட்டிருக்கின்றதோ, அங்ஙனமே ஜாக்கிர பதார்த்தங்கள் போல் உற்பத்தியுடையன வாதலால், சொப்பந பதார்த்தங்களே சத்தியமாதல் வேண்டும். சொப்பநத்தில் பிரதீதியாகும் பதார்த்தங்களி னுற்பத்தியை யங்கீகரியாவிடத்து இந்தத் தோஷமின்றாம். ஏனெனின், ஜாக்கிர பதார்த்தங்களோ உற்பத்தியாகிப் பிரதீதியாகின்றன. சொப்பநத்தில்

பதார்த்தங்க ளின்றியே பிரதீதியாகின்றன. ஆதலால், சொப்பநத்தில், இல்லாத பதார்த்தங்களின் ஞாநம் பிராந்தி ரூபமாக வுண்டாகின்றது. அவற்றிற்கு உற்பத்தியினை யங்கீகரித்தல் யோக்ய மன்ரும்.

311. அந்தச் சங்கையின் சமாதாநம்.

எந்த வஸ்துவின் உற்பத்தியில் எவ்வளவு தேச காலாதி சாமக்கிரிகளாகிய காரணங்கள் வேண்டுமோ, அவ்வளவு சாமக்கிரிக ளின்றி உற்பத்தியாவது மித்தையெனப்படுகின்றது. சொப்பநத்தின் யானை முதலியவற்றின் உற்பத்திக்கு யோக்யமான தேச காலங்க ளில்லை. நீண்ட காலத்திலும், விஸ்தாரமான இடத்திலும் உண்டாதற்கு யோக்யமான யானை முதலியன க்ஷணமாத்திர காலத்தில் சூக்ஷ்மமான கண்டப் பிரதேசத்திலுண்டாதலால் மித்தையாம். சொப்பனவஸ்தையில் நீண்ட காலமும் விஸ்தார தேசமும் பிரதீதியாமாயினும், அந்நிய பதார்த்தங்களைப் போலச் சொப்பநத்தில் அதிக கால அதிக தேசங்களும் அநிர்வசநீயப் பிராதிபாஸிகமாக உற்பத்தியாகின்றன. ஏனெனின், விஷய மின்றிப் பிரத்தியக்ஷ ஞாநம் உண்டாகின்ற தில்லை. சொப்பநத்தில் அதிக தேச காலங்களின் ஞாநமுண்டாகின்றது. வியாவகாரிக தேச காலங்கள் குறைவா யிருக்கின்றன; ஆதலால், பிராதிபாஸிகமா யுண்டாகின்றன. பின்னரோ, சொப்பநாவஸ்தையில் உண்டாகிய பிராதிபாஸிக தேச காலங்கள் சொப்பநாவஸ்தையின் யானை முதலியவற்றிற்குக் காரணமன்ரும். ஏனெனின், காரணம் முன் னுண்டாதல் வேண்டும்; காரியம் பின் னுண்டாதல் வேண்டும். சொப்பநத்தின் தேச காலங்களும் யானை முதலியனவும் ஒரே சமயத்தி லுண்டாகின்றன. ஆதலால், அவற்றிற்குக் காரண காரியத்தன்மை பொருந்துவ தில்லை; வியாவகாரிக தேச காலங்கள் குறைவா யிருக்கின்றன; யானை முதலியவற்றிற்கு யோக்ய மன்ரும். ஆதலால், தேச கால ரூப சாமக்கிரிக ளின்றி யுண்டாதலால் சொப்பந பதார்த்தங்கள் மித்தையாம்.

மேலும், சொப்பநத்தில் யானைக்கு மாதா முதலிய சாமக்கிரிக ளில்லை. சொப்பநத்தில் பிராணி ரூப பதார்த்தங்களின் மாதா பிதாக்களும் பிரதீதியாகின்றனவாயினும், சொப்பநத்தின் மாதா பிதாக்கள் புத்திரனுடைய உற்பத்திக்குக் காரணமாகின்ற தில்லை. ஏனெனின், மாதா பிதா புத்திரன் (என்பவர்) ஒரு

க்ஷணத்தில் கூடவே உண்டாகின்றார்கள். ஆதலால், அவர்களுக்குக் காரண காரிய பாவ மின்றாம். எந்த நித்திரையோடு கூடிய அவித்தையினின்றும் சொப்பந பதார்த்தங்க ளுண்டாகின்றனவோ, அந்த அவித்தையே அந்தப் பதார்த்தங்களில் மாதாத் தன்மை பிதாத்தன்மை புத்திரத்தன்மைகளை யுண்டாக்குவிக்கின்றது. இவ்வாற்றால், சொப்பந பதார்த்தங்களின் உற்பத்தியில் வேறொரு சாமக்கிரியு மில்லை ; பின்னரோ நித்திராரூப தோஷத்தோடு கூடிய அவித்தையே காரணமாம். தோஷ சகித அவித்தையினின் றுண்டாகும் வஸ்து சுத்தி ரஜதம் போன்று மித்தையாகும். ஆதலால், சொப்பந பதார்த்தம் சத்தியமன்று; மித்தையாம். அவற்றின் உபாதாந காரணம் அந்தக்கரணம், அல்லது சாக்ஷாத் அவித்தையேயாம். முதற் பக்ஷத்தில் சாக்ஷி சேதநம் சொப்பநத்தின் அதிஷ்டாநமாம். இரண்டாவது பக்ஷத்தில் பிரஹ்ம சேதநம் சொப்பநத்தின் அதிஷ்டாநமாம். இவ்வாற்றால், சொப்பநம் அந்தக்கரணத்தின், அல்லது அவித்தையின் பரிணாமமும் சேதநத்தின் விவர்த்தமுமாம்.

312. மூவகைச் சத்தையின் பக்ஷத்தில் விலக்ஷண ஜாக்கிர சொப்பநங்களுக்கு இரண்டு சத்தையினை யங்கீகரிப்பதில் விலக்ஷணத்தன்மை யின்மை.

இதில் இவ்வாறு சங்கை யுண்டாகின்றது:—இரண்டாவது பக்ஷத்தில், பிரஹ்ம சேதநம் சொப்பநத்தின் அதிஷ்டாந மென்றும், அவித்தை உபாதாந காரண மென்றும் கூறப்பட்டது. ஆண்டு அதிஷ்டாந ஞாநத்தினால் கற்பிதத்தின் நிவ்ருத்தி யுண்டாகின்றது. சொப்பநத்தின் அதிஷ்டாநம் பிரஹ்மமாம். ஆதலால், பிரஹ்ம ஞாந மின்றி அஞ்ஞாநிக்கு ஜாக்கிராவஸ்தையில் சொப்பநத்தின் நிவர்த்தி யுண்டாகா திருத்தல் வேண்டும்.

313. வேறுசங்கை:—சொப்பநத்திற்கு அதிஷ்டாநம் பிரஹ்மமும் உபாதாந காரணம் அவித்தையு மாவது போல, வேதாந்த சித்தாந்தத்தில் ஜாக்கிராவஸ்தையின் வியாவகாரிக பதார்த்தங்களுக்கும் அதிஷ்டாநம் பிரஹ்மமும், உபாதாநகாரணம் அவித்தையுமாம். ஆதலால், ஜாக்கிர பதார்த்தங்களை வியாவகாரிக மென்பர். சொப்பந (பதார்த்த)ங்களைப் பிராதிபாஸிக மென்பர். இவ்வாறாய பேத மின்றி யிருத்தல் வேண்டும். ஏனெனின், இரண்டற்

கும் அதிஷ்டாநம் பிரஹ்மமும், உபாதாந காரணம் அவித்தையுமாம். ஆதலால், ஜாக்கிரம் சொப்பநம் இரண்டும் வியாவகாரிகமாதல் வேண்டும். அல்லது, இரண்டும் பிராதிபாஸிகமாதல் வேண்டும்.

314. அவ்விரண்டு சங்கைகளும் பொருந்தா. ஏனெனின், முதற் சங்கைக்கு இது சமாதாநமாம். நிவிருத்தி இரண்டு பிரகாரமாக விருக்கின்றதென்று முன் (4 - வது தரங்கத்தில்) கியாதி நிரூபணத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

காரணசகித காரியத்தின் விநாச ரூப அத்தியந்த நிவிருத்தியோ, சொப்பநத்திற்கு, ஜாக்கிரத்தில் பிரஹ்ம ஞாநமின்றிப் பொருந்தாது. பின்னரோ, தடியா லடித்தலால் எங்ஙனம் கடம் மண்ணில் லயமாகின்றதோ, அங்ஙனமே, சொப்பநத்திற்குக் காரணமான நித்திரா தோஷத்தின் நாசத்தினுல், அல்லது, சொப்பநத்திற்கு விரோதியான ஜாக்கிரத்தி னுற்பத்தியினுல், அவித்தையின்கண் லய ரூபமான நிவிருத்தி சொப்பநத்திற்குப் பிரஹ்ம ஞாநமின்றிச் சம்பவிக்கின்றது.

315. "ஜாக்கிர சொப்பந மிரண்டும் சமாநமா யிருத்தல் வேண்டும்" என்று சங்கித்தது பொருந்தாது. ஏனெனின், ஜாக்கிரத்தினது தேகாதி பதார்த்தங்களி னுற்பத்தியிலோ வேறு தோஷ மின்றிய கேவல அநாதி அவித்தையே உபாதாந காரணமாம். சொப்பந பதார்த்தங்களிலோ ஸாதி நித்திரா தோஷமும் அவித்தைக்குச் சகாயமாம். ஆதலால், அந்நிய தோஷ மின்றிய கேவல அவித்தியா ஜந்நியம் வியாவகாரிக மெனப்படும். ஸாதி தோஷ ஸகித அவித்தியா ஜந்நியம் பிராதிபாஸிக மெனப்படும். சொப்பந பதார்த்தம் நித்திரா தோஷ ஸகித அவித்தியா ஜந்நியமா யிருத்தலால் பிராதிபாஸிகமாம். ஜாக்கிர பதார்த்தம் அந்நிய தோஷ மின்றிய அவித்தியா ஜந்நியமா யிருத்தலால் வியாவகாரிக மெனப்படும். இவ்வாற்றுல், சொப்பந பதார்த்தங்களில் ஜாக்கிர பதார்த்தங்களினும் விலக்ஷணத்தன்மை யிருக்கின்றது. ஆனுல், இவை யாவும் மூவித சத்தைகளை யங்கீகரித்து ஸ்தூல திருஷ்டியினுற் கூறப்பட்டன. விசார திருஷ்டியினுலோ, மூவிதச் சத்தைகள் பொருந்தா. ஜாக்கிர சொப்பநங்களின் பரஸ்பர விலக்ஷணத் தன்மையும் பொருந்தாது.

316. வேதாந்த பரிபாஷை முதலிய கிரந்தங்களில் முன் கிரமப்படி வியாவகாரிக பிராதிபாஸிக பதார்த்தங்களின் பேதம் கூறப்பட்டிருக்கின்றது. ஆதலால், மூன்று சத்தைகள் அங்கீ கரிக்கப்பட்டிருக்கின்றன. அங்ஙனமே, வித்தியாரண்ய ஸ்வாமிக ளும் மூன்று சத்தை அங்கீகரித் திருக்கின்றார்கள். ஏனெ னின், அவர்கள் இப்பிரசங்கத்தை எழுதியிருக்கின்றார்கள்:—

தேகாதி பதார்த்தங்க ளிருவகையாம். ஒன்றோ ஈசுவர சிருஷ்டியாம்; அது பாஹியமாம். மற்றொன்று ஜீவ சங்கற்பத் தால் சிருஷ்டிக்கப்பட்டதாம்; அது மனோமயமும், ஆந்தரமுமாம்.

அவ்விரண்டிலும், ஜீவ சங்கற்பத்தினால் சிருஷ்டிக்கப்பட்ட ஆந்தரமான மனோமயம் சாக்ஷி பாஸியமாம். ஈசுவர சிருஷ்டி பாஹியமாம். அது பிரமாதாப் பிரமாணங்களுக்கு விஷயமாம். ஆந்தர மனோ மய தேகாதிகளே ஜீவனது சுக துக்கங்களுக்குக் காரணமாம். பாஹிய ஈசுவர சிருஷ்டி சுக துக்கங்களுக்குக் காரண மன்றாம். ஆதலால், மனோமய பதார்த்தங்களின் நிவி ருத்தி முமுக்ஷுவிற்கு அபேக்ஷையாம். பாஹியப் பிரபஞ்சம் சுக துக்கங்கட்குக் காரண மன்றாம். ஆதலால், அதன் நிவிரு த்தி அபேக்ஷிக்கப்பட வில்லை.

எங்ஙனம், இரண்டு புருஷர்களின் இரண்டு புத்திரர்கள், வேறு தேசஞ் சென்றிருந்தார்கள். அவர்களுள் ஒருவன் புத்தி ரன் இறந்துபோனான், மற்றொருவன் புத்திரன் ஜீவித்திருந்தான். அந்த ஜீவித்திருந்த புத்திரன் அநேக திரவியங்களை யடைந்து ஒரு புருஷன் வாயிலாகத் தன் பிதாவிற்குத் தனது திரவியத்தி னடைவின் சமாச்சாரத்தையும், மற்றொருவ னிறந்த சமாச்சாரத் தினை (அவன் தகப்பனுக்கும்) கூறி யனுப்பினான். ஆண்டு, சமாச் சாரத்தினை யறிவிக்கும் புருஷன் துஷ்டனாகையால், ஜீவித்திருக் கும் புத்திரனது பிதாவினிடத்து உன் புத்திரன் மரித்தா னென் றும், இறந்த புத்திரனது பிதாவினிடத்தில் உன் புத்திரன் ரோக மின்றிச் சரீரத்தோ டிருக்கின்றா னென்றும், அநேக திரவியத் தினை யடைந்திருக்கின்றான் சொற்ப காலத்தில் யானைமீ தேறிப் பெருங் கூட்டத்துடன் வருவா னென்றும் கூறினான்.

அந்த வஞ்சக வசனத்தினைக் கேட்டு; ஜீவித்திருக்கும் புத் திரனுடைய பிதா அழுது அநேக துக்கத்தினை யநுபவஞ் செய்

தான்; இறந்த புத்திரனது பிதா பெருஞ் சந்தோஷத்தினையடைந்தான். இவ்வாற்றால், தேசாந்தரத்தில், ஈசுவரனால் சிருஷ்டிக்கப்பட்ட புத்திரன் ஜீவித்திருந்தும் மனோமய புத்திரன் இறந்துபோனான். அதனால், துக்க முண்டாகின்றது. ஈசுவரன் சிருஷ்டித்த ஜீவித்திருப்பவன் பிதாவிற்குச் சுக முண்டாகிற தில்லை.

அங்ஙனமே, இரண்டாவமனது பிதாவிற்கு ஈசுவரனால் சிருஷ்டிக்கப்பட்ட புத்திரன் இறந்துபோனான். அவனுக்குத் துக்க முண்டாக வில்லை ; மனோமய புத்திரன் ஜீவித்திருத்தலால் அவனுக்குச் சுக முண்டாகின்றது. ஆதலால், ஜீவ சிருஷ்டியே சுக துக்கங்களுக்குக் காரண மாம். ஈசுவர சிருஷ்டி சுக துக்கங்களுக்குக் காரண மன்றாம். இவ்வாற்றால், வித்தியாரண்ய ஸ்வாமிகள் ஜீவ சிருஷ்டியையும், ஈசுவர சிருஷ்டியையும் இரண்டு பிரகாரமாகக் கூறியிருக்கின்றார்கள். ஆண்டு ஜீவ சிருஷ்டி பிராதிபாஸிகமாம்; ஈசுவர சிருஷ்டி வியாவகாரிகமாம். இவ்வாறு வேறு கிரந்தக் காரர்களும் சத்தையை மூன்று பிரகாரமாகக் கூறியிருக்கின்றார்கள். சேதநத்திற்குப் பரமார்த்த சத்தையாம். சேதநத்தின் பிந்நமான ஜட பதார்த்தங்கட்கு இருவிதசத்தை யுளது; ஒன்று வியாவகாரிக சத்தையாம்; மற்றொன்று பிராதி பாஸிக சத்தையாம். சிருஷ்டியின் ஆதிகாலத்தில் ஈசுவர சங்கற்பத்தினாலுண்டான கேவல அவித்தையின் காரியங்களான பஞ்ச பூதங்களும், அவற்றின் காரியங்களும் வியாவகாரிக சத்தையாம். தோஷ சகித அவித்தையின் காரியங்களான சொப்பநம், சுத்தி ரஜதாதிகட்குப் பிராதி பாஸிக சத்தையாம். இவ்வாற்றால், ஜாக்கிர பதார்த்தங்களுக்கு வியாவகாரிக சத்தையும், சொப்பந பதார்த்தங்களுக்குப் பிராதி பாஸிக சத்தையும் பிரதிபாதிக்கப்படுகின்றன.

317. அங்ஙன மாயினும், அநாத்ம பதார்த்தங்க ளெல்லாவற்றிற்கும் பிராதி பாஸிக சத்தையே யுளது. ஆதலால், சத்தை இரண்டு பிரகாரமேயாம்.

சேதநத்திற்குப் பரமார்த்த சத்தையும், சேதநத்தின் பிந்நமான சகல அநாத்மாக்களுக்கும் பிராதி பாஸிக சத்தையுமே ஆம்.

ஜாக்கிர சொப்பந பதார்த்தங்களுக்குச் சிறிதும் விலக்ஷணத்தன்மை சித்திக்கின்ற தில்லை யென்னும் உத்தம சித்தாந்தத்தினைப் பிரதிபாதநஞ் செய்வாம்:—தேச கால சாமக்கிரி யின்றிச்

சொப்பநத்தின் யானை மலை முதலியன உண்டாகின்றன. ஆதலால், (அவை) மித்தையெனப்படுகின்றன. அங்ஙனமே, ஆகாசாதிப் பிரபஞ்சத்தின் சிருஷ்டி பிரஹ்மத்தினின்றும் உண்டாகின்றது. அந்தப் பிரஹ்மத்தில் தேச காலங்கள் அற்பமு மில்லை. சொப்பநத்தில் யானை மலை முதலியவற்றிற்கு யோக்யமான தேச காலங்க ளில்லாவிடினும் அற்ப தேச காலங்க ளிருக்கின்றன. அவ்வாறே, ஆகாசாதிகளின் சிருஷ்டியில் அற்ப தேச காலங்களு மில்லை. ஏனெனின், தேச கால மின்றிய பரமாத்மாவினின்றும் ஆகாசாதிகளின் சிருஷ்டி சொல்லப்பட் டிருக்கின்றது. இக்காரணத்தால், தைத்திரீய சுருதியில் ஆகாசாதிகளின் சிருஷ்டி கிரமமாகச் சொல்லப்பட் டிருக்கின்றது; தேச காலங்களின் சிருஷ்டி சொல்லப்பட வில்லை.

சூத்திரகார பாஷியகாரர்களும் தேச காலங்களின் சிருஷ்டியினைக் கூற வில்லை. சிருஷ்டி யென்பது உற்பத்திக்காம். ஆண்டு, தைத்திரீய சுருதிக்கும், சூத்திரகார பாஷியக்காரர்களுக்கும் இதுவே அபிப்பிராயமாம்:—ஆகாசாதிப் பிரபஞ்சத்தி னுற்பத்தி தேச கால சாமக்கிரிக ளின்றி உண்டாகின்றது. ஆதலால், ஆகாசாதிகள் சொப்பநம் போன்று மித்தையாம்.

318. மதுசூதந ஸ்வாமிகள் தேச காலங்களைச் சாக்ஷாத் அவித்தையின் காரிய மென்று கூறியிருக்கின்றார்கள். ஆதலால், மாயா விசிஷ்ட பரமாத்மாவினின்றும், முதலில் மாயையின் பரிணாமமான தேச காலங்கள் உண்டாகின்றன. அதன் பின்னர் ஆகா சாதிகளின் உற்பத்தி யுண்டாகின்றது. ஆதலால், யோக்கியமான தேச காலங்களால் ஆகாசாதிப் பிரபஞ்சத்தி னுற்பத்தி சம்பவிக்கின்றது.

அங்ஙன மாயினும், மதுசூதந ஸ்வாமிகளுக்குத் தேச காலங்கள் முதலி லுண்டாகின்றன; ஆகாசாதிகள் பின்ன ருண்டாகின்றன என்பது அபிப்பிராய மன்றும். ஏனெனின், சென்ற காலத்தி லிருப்பது பிரதமம், அல்லது, பூர்வம் எனப்படுகின்றது. வருங் காலத்தில் இருப்பதற்கு, உத்தரம், அல்லது, பின் என்று கூறப்படுகின்றது. ஆகாசாதிகளி னுற்பத்திக்கு முன் தேச காலங்கள் உண்டாயின வென்று கூறுதலால், ஆகாசாதிகளி னுற்பத்தி காலத்திற் பூர்வ கால உபகித பரமாத்மா தேச காலங்களுக் கதிஷ்டாநமா

மென்பது சித்தமாகும். ஆதலினல், தேச காலங்களின் உற்பத்தியில் பூர்வ காலத்தின் அபேக்ஷை யுண்டாகும். காலத்தி னுற்பத்தியின்றிப் பூர்வ காலஞ் சித்திக்கின்ற தில்லை. ஆதலால், ஆகாசாதிகளுக்குப் பூர்வ காலத்தில் தேச காலாதிகள் உளவாகின்றனவென்று கூறுதல் பொருந்தாது.

ஆனல், மதுசூதந ஸ்வாமிகளின் அபிப்பிராயம் இதுவாம்:- பூத பௌதிகப் பிரபஞ்சம் பிரதீதியாவது போன்று தேச காலங்களும் பிரதீதி யாகின்றன. ஆத்மாவினும் பிந்நமான எவையும் நித்திய மன்று; ஆதலால், தேச காலங்கள் நித்திய மன்றும். இல்லாத பதார்த்தம் பிரதீதி யாவதில்லை ; ஆகையால், ஆகாசாதிகள் போலத் தேச காலங்களும் உற்பத்தியாகின்றன. அத் தேச காலங்கள் மாயையின் பரிணமமும், சேதநத்தின் விவர்த்தமுமாம். விவர்த்தம் எதற்கும் காரணமாவ தில்லை. ஆதலின், ஆகாசாதிப் பிரபஞ்ச உற்பத்தியில் தேச காலங்களின் காரணத் தன்மை பொருந்தாது.

அல்லது, காரணம் முதலினும், காரியம் பின்னரும் இருக்கின்றன. ஆகாசாதிப் பிரபஞ்சத்திற்கு முன் தேச காலங்க ளிருக்கின்றனவாகக் கூறுதல் பொருந்தாது என்னும் வார்த்தை சமீபத்திலேயே சொல்லப்பட்டு வந்திருக்கின்றது. இதனுலும், தேச காலங்கள் ஆகாசாதிப் பிரபஞ்சத்திற்குக் காரணமாதல் பொருந்தாது. ஆனல், சொப்பநத்தின் பிதா புத்திரன் போல் தேச கால சகித ஆகாசாதிப் பிரபஞ்சம் மாயா விசிஷ்ட பரமாத்மாவினின்றும் உற்பத்தியாகின்றது. ஒரு பதார்த்தம் ஒரு தேசத்தில் ஒரு காலத்தி லுண்டாகின்றது ; அந்நிய தேசத்தி லந்நிய காலத்தி லுண்டாகின்ற தில்லை. இவ்வாற்ருல், சகல பதார்த்தங்களும் பிரளய காலத்தி லுண்டாகின்ற தில்லை; சிருஷ்டி காலத்தி லுண்டாகின்றன. அதனல், தேச காலங்கட்குக் காரணத்தன்மைப் பிரதீதியு மாகின்றன. அங்ஙன மாயினும், எந்த மாயையினின்று தேச கால சகிதப் பிரபஞ்ச முற்பத்தியாகின்றதோ, அந்த மாயையினுலேயே தேச காலங்களில் காரணத்தன்மையும் அந்நியப் பிரபஞ்சத்தில் காரியத்தன்மையும் பிரதீதியாகின்றன. ஆகாசாதிப் பிரபஞ்சத்திற்குத் தேச காலங்கள் காரண மன்று.

### 319. பிரஹ்மத்தின் காரணத்தன்மை தேச காலங்களில் பிரதீதியாகின்றது என்பதாதி ஸ்தலத்தில் அந்நியதாக் கியாதியின் அங்கீகாரம்.

இவ்விஷயத்தில் இவ்வாறு சங்கை யுண்டாகின்றது:—இல்லாத பதார்த்தம் பிரதீதியாகின்ற தில்லை; சித்தாந்தத்திலும் அங்கீகார மில்லை. இல்லாத பதார்த்தத்தின் பிரதீதியினை யங்கீகரிக்கினே அசத் கியாதியின் அங்கீகார முண்டாம். இல்லாத மலடி மகன்,முயற் கொம்பு முதலியவற்றின் பிரதீதி யுண்டாதல் வேண்டும். ஆதலின், இல்லாத பதார்த்தம் பிரதீதியாகின்ற தில்லை.

ஆதலால், தேச காலங்களில் காரணத்தன்மை இல்லாதிருக்குமாயின், தேச காலங்களில் சர்வபதார்த்தங்களின் காரணத்தன்மையின் பிரதீதி மாயையின் பலத்தினுலு முண்டாக வேண்டுவ தில்லை; காரணத்தன்மையின் பிரதீதி தேச காலங்களி லுண்டாகின்றது. ஆதலால், தேச காலங்கள் சகலப் பிரபஞ்சத்திற்கும் காரணங்களாம்.

சர்வப் பிரபஞ்சத்திற்கும் காரணம் பிரஹ்மமாம். பிரஹ்மத்தின் காரணத்தன்மை தேச காலங்களில் பிரதீதியாகின்றது. தேச காலங்களில் காரணத்தன்மை யில்லை யென்று சித்தாந்தி கூறுவதும் பொருந்தாது. ஏனெனின்,

எங்ஙனம், தேச காலங்களுக்கு அதிஷ்டானம் பிரஹ்மமோ, அங்ஙனமே,சர்வப் பிரபஞ்சத்திற்கும் அதிஷ்டாநம் பிரஹ்மமாம். தேச காலங்களிலேயே பிரஹ்மத்தின் காரணத்தன்மை பிரதீதியாகின்றது; அந்நியத்தி லில்லை யென்று கூறுவதற்கு ஒரு காரணமு மில்லை. ஆதலால், அதிஷ்டாநப் பிரஹ்மத்தின் காரணத்தன்மை தேச காலங்களில் பிரதீதி யாகுமாயின்,பிரஹ்மம் சர்வப் பிரபஞ்சத்திற்கும் அதிஷ்டாநமா யிருத்தலால், சர்வப் பிரபஞ்சத்திலும் காரணத் தன்மை பிரதீதி யாதல் வேண்டும். சிலவற்றிற் காரணத்தன்மை, சிலவற்றிற் காரியத்தன்மை யென்னும் பேத மிருக்க வேண்டுவ தில்லை.

அல்லது, தேச காலங்களில் காரணத் தன்மை யில்லை; பிரஹ்மத்தில் காரணத் தன்மை யிருக்கின்றது ; அந்தப் பிரஹ்மத்தின் காரணத் தன்மை தேச காலங்களிற் பிரதீதி யாகின்ற தென்று கூறுவதனுல், அந்நியதாக் கியாதியின் அங்கீகார முண்டாகும்.

ஏனெனின், அந்நிய வஸ்து அந்நிய ரூபமாகப் பிரதீதி யாதலே அந்நியதாக் கியாதி யென்பர். தேச காலங்கள் காரண மன்றும். ஆதலால், காரணத்தின் அந்நியம் அகாரணமாம்; அதற்கு அந்நிய ரூப மெனப்படும் காரண ரூபத்தினுல் பிரதீதியை யங்கீகரிக்கின் அந்நியதாக் கியாதியின் அங்கீகார முண்டாகும்; சித்தாந்தத்தில் அந்நியதாக் கியாதி அங்கீகரிக்கப்பட வில்லை. இவ்விடத்தில் அந்நியதாக் கியாதியை யங்கீகரிக்கினே, சுத்தியில் அநிர்வசநீய வெள்ளியி னுற்பத்தி சித்தாந்தத்தில் அங்கீகரிக்கப்பட் டிருக்கின்றது; அது நிஷ்பலமாம். ஏனெனின், அந்நியதாக் கியாதியில் இரண்டு மதங்க ளுள:—ஒன்றே, வேறிடத்திலிருக்கின்ற பதார்த்தங்கள் வேறிடத்திற்பிரதீதியாவது அந்நியதாக் கியாதியாம். எங்ஙனம் ஸ்திரீயின் கரத்தி லிருக்கிற ரஜதம் எதிரி லிருக்கும் சுத்தி தேசத்தில் பிரதீதியாவது அந்நியதாக் கியாதியாம். அல்லது, அந்நிய பதார்த்தம் அந்நிய ரூபமாகப் பிரதீதியாவது அந்நியதாக்கியாதியாம். எங்ஙனம்-சுத்தியே ரஜதரூபமாகப் பிரதீதியாதல் அந்நியதாக் கியாதியாம். இவ்வாறு, எல்லாப் பிராந்தி ஸ்தலங்களினும் அந்நியதாக் கியாதியினுல் நிர்வாகம் சம்பவிக்கின்றது. அநிர்வசநீய ரஜதாதிகளின் உற்பத்தி கூறுதல் அசங்கதமாகும்.

விஷயத்தின் சமாநாகாரமாக ஞாந முண்டாகின்றது. அந்நிய வஸ்துவின் ஞாநம் அந்நிய ரூபத்தினு லுண்டாவ தில்லை. ஆகையால், ரஜதாகார ஞாநத்தின் விஷயமாய அநிர்வசநீய ரஜதமும் உத்பத்தியாகின்றது. இந்த அத்வைத சித்தாந்தத்தில் காரணத்தின் அந்நியமான தேச காலங்களில் பிரஹ்மத்தினது காரணத் தன்மையின் ஞாந முண்டாகின்ற தில்லை. ஆதலால், தேச காலங்களில் பிரதீதியாகும் காரணத்தன்மை, யின்றியதற்கு, அல்லது, பிரஹ்மத்தி லிருப்பதற்குப் பாநம் பொருந்தாது. பின்னரோ, தேச காலங்களிலேயே காரணத்தன்மை யிருக்கின்றது; அதன் பாந முண்டாகின்றது. இவ்வாற்றால், "ஆகாசாதிப் பிரபஞ்சத்திற்குக் காரணம் தேச காலங்க ளலவாம்" என்று சித்தாந்தி கூறுவாராயின் அக்கூற்று அசங்கதமாம்.

320. அச்சங்கை பொருந்தாது. ஏனெனின், பிரஹ்மத்தின் காரணத்தன்மை தேச காலங்களிற் பிரதீதியாகின்றது. எங்ஙனம் செவ்வரத்தம் புஷ்பத்தின் சம்பந்த முடைய ஸ்படிகத்தில் அப்புஷ்பத்தின் சிவப்பு வர்ணம் தோற்றுகின்றது. அதிஷ்டாநத்

தின் சத்தியத்தன்மை சொப்பந காலத்தில் மித்தையான யானை பர்வத முதலியவற்றில் பிரதீதியாகின்றது. ஆண்டு ஸ்படிகத்தில் அநிர்வசநீயமான சிவப்பு வர்ணத்தி னுற்பத்தி அங்கீகரிக்கப்பட வில்லை. பின்னரோ, புஷ்பத்தின் சிவப்பு வர்ணத்தன்மை ஸ்படிகத்தில் பிரதீதியாகின்றது. ஆதலால், வெண்மையான ஸ்படிகம் சிவப்பு ரூபமாய்த் தோற்றுவதால் சிவப்புத் தன்மையின் ஞாநத்தில் அந்நியதாக் கியாதியே அங்கீ கரிக்கப்பட் டிருக்கின்றது.

அங்ஙனமே, சொப்பநத்தில் மித்தியா பதார்த்தங்களில் சத் தியத்தன்மை பிரதீதியாகின்றது. ஆண்டு, அநிர்வசநீய சத்தி யத்தன்மை அந்தப் பதார்த்தங்களில் உற்பந்நமாகின்றது. இவ் வார்த்தையோ "மெய்யான பொய்யாம்" என்னும் (வியாகாத தோஷ முடைய) வசனம் போலப் பொருந்தாதாம். இல்லாதது பிரதீதியாவ தில்லை. பின்னையோ, சொப்பநத்தின் அதிஷ்டாந மாய சேதநத்தின் சத்தியத்தன்மை மித்தியா பதார்த்தங்களில் பிரதீதியாகின்றது. ஆதலால், மித்தியா பதார்த்தம் சத்தியரூப மாய்ப் பிரதீதியாதலால், சத்தியத்தன்மையின் ஞாநத்தில் அந்நிய தாக் கியாதியே அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. அவ்வாறே, அதிஷ் டாநப் பிரஹ்மத்தின் காரணத் தன்மை, தேச காலங்களில் அந் நியதாக் கியாதியாகப் பிரதீதி யாகின்றது.

321. இவ்வளவு இடத்தில் அந்நியதாக் கியாதியை அங்கீ கரிக்கின், எல்லாப் பிராந்திகளினும் அந்நியதாக் கியாதியையே அங்கீகரிக்க வேண்டுமென்று கூறின், அச்சங்கை பொருந்தாது. ஏனெனின், சுத்தி ரஜதாதிகளில் அந்நியதாக் கியாதியை அங்கீ கரிப்பதில் விஷயத்தின் விலக்ஷணமான ஞாநம் பொருந்தாது என் னும் தோஷம் கூறப்பட்டிருக்கின்றது. யாண்டு ஸ்படிகத்தில் சிவ ப்பு வர்ணத்தன்மையின் ஞாந முண்டாகின்றதோ, ஆண்டுச் சிவப் புப் புஷ்பத்திற்கு ஸ்படிகத்தோடு சம்பந்த மிருக்கின்றது. ஆத லால், ஸ்படிக சம்பந்த முடைய புஷ்பத்தின் சிவப்பு வர்ணத்தன் மை, ஸ்படிகத்தில் பிரதீதியாகின்றது. ஏனெனின், அந்தக்கர ணத்தின் விருத்தி சிவப்புப் புஷ்பாகாரமாகும்போது அந்த விரு த்தியின் விஷயமே சிவப்புப் புஷ்ப சம்பந்தியாகிய ஸ்படிகமாம். ஆதலால், புஷ்பத்தின் சிவப்பு வர்ணத்தன்மை ஸ்படிகத்தில் பிர தீதியாகின்றது. சுத்திக்கோ ரஜதரூபத்தினால் ஞாநம் சம்பவி

யாது. ஏனெனின், சுத்தி தேசத்தில் அநிர்வசநீயமாகவோ வியாவகாரிகமாகவோ வெள்ளி அந்நிய மதத்தில் இல்லை; பின்னேயோ, சுத்தி இருக்கின்றது. அந்தச் சுத்தியின் சம்பந்தத்தினல் சுத்தியின் சமானுகாரமாகவே அந்தக்கரண விருத்தி யுண்டாகும். ரஜதாகார அந்தக்கரணத்தின் விருத்தி யுண்டாகாது. ஆதலால், அவித்தையின் பரிணாமமும், சேதநத்தின் விவர்த்தமுமான அநிர்வசநீய ரஜதம் அதன் ஞாந மென்னு மிரண்டு முண்டாகின்றன. ஸ்படிகத்தில் சிவப்பு வர்ணத்தன்மை பிரதீதியாகின்றது. ஆண்டு விருத்தியின் சம்பந்தம், ஸ்படிகம் சிவப்புப் புஷ்பமென்னு மிரண்டனேடு முண்டாகின்றது. சிவப்புப் புஷ்பத்தின் சம்பந்தத்தினல் சிவப்புவடிவ விருத்தி யுண்டாகின்றது. அவ்விருத்திக்கு ஸ்படிகத்தோடும் சம்பந்த மிருக்கின்றது. ஸ்படிகத்தில் சிவப்புத் தன்மையின் சாயை யிருக்கின்றது. ஆதலால், புஷ்பத்தின் தர்மமாய சிவப்பு வர்ணத்தன்மை ஸ்படிகத்தில் அவ்விருத்திக்கே விஷயமாகின்றது.

இவ்வாற்ருல், யாண்டு இரண்டு பதார்த்தங்களின் சம்பந்தமிருக்கின்றதோ ஆண்டு ஒன்றன் தர்மம் மற்ருென்றில் பிரதீதியாதல் சம்பவிக்கிறது. ஆண்டு அந்நியதாக்கியாதியே சம்பவமாம். யாண்டு இரண்டு பதார்த்தங்களின் சம்பந்தமில்லையோ ஆண்டு அந்நியதாக் கியாதி யில்லை; பின்னரோ, அநிர்வசநீயக் கியாதி யிருக்கின்றது. எங்ஙனம் புஷ்ப சம்பந்தியாகிய ஸ்படிகத்தில் புஷ்பத்தின் ரக்தத்தன்மை பிரதீதியாகின்றதோ, அங்ஙனமே சொப்பநத்தின் யானை பர்வதம் முதலியவற்றிற்கும் அதிஷ்டாந சேதநத்தோடு சம்பந்த மிருக்கின்றது. ஆதலால், சேதநத்தின் தர்மமாகிய சத்தியத் தன்மையும் சேதந சம்பந்தியாய யானை பர்வத முதலியவற்றிற் பிரதீதியாகின்றது. அது அந்நியதாக் கியாதியாம். அங்ஙனமே, அதிஷ்டாந சேதநத்தின் தர்மமாகிய காரணத் தன்மை அதிஷ்டாந சேதந சம்பந்தியாய தேச காலங்களில் பிரதீதியாகின்றது.

322. ஜாக்கிரப் பிரபஞ்சம் சாமக்கிரி யின்றி யுண்டாகின்றது. ஆதலால் சொப்பந சமாநமாய் மித்தையாம்.

"அதிஷ்டாந சேதநத்தின் சம்பந்தம் எல்லாப் பிரபஞ்சத்தோடு மிருக்கின்றது. சம்பந்தியின் தர்மம் அந்நியதாக் கியாதி

யினுல் அந்நியத்திற் பிரதீதி யாமாயின், சேதநத்தின் காரணத் தன்மை சர்வப் பிரபஞ்சத்திலும் பிரதீதியாதல் வேண்டு''மென்று முன்னர்ச் சங்கை செய்யப்பட்டது.

அச்சங்கை பொருந்தாது. ஏனெனில், எங்ஙனம், சொப்பநத்தில் இரண்டு சரீரங்கள் உற்பத்தியாகின்றன. ஒரு சரீரம் பிதா ரூபமாகப் பிரதீதியாகின்றது. மற்றொரு சரீரம் புத்திர ரூபமாகப் பிரதீதிக்கின்றது.

ஆண்டு இரண்டு சரீரங்கட்கும் சொப்பநத்தின் அதிஷ்டாந சேதநத்தோடு சம்பந்தம் உளதாமாயினும், பிதா சரீரத்தில் அதிஷ்டாந சேதநத்தின் காரணத்தன்மை பிரதீதியாகின்றது. புத்திர சரீரத்தில் காரணத்தன்மை பிரதீதியாகின்ற தில்லை. பின்னரோ, பிதாவாற் பெறப்படுபவன் புத்திரனுவன் (என்று) இவ்வாறு புத்திர சரீரத்தில் காரியத்தன்மை பிரதீதியாகின்றது. இவ்வாற்ருல், அதிஷ்டாந சேதநத்தின் சம்பந்தம் எல்லாவற்றிற்கு மிருப்பினும், தேச காலங்களில் சேதந தர்மமான காரணத்தன்மையின் பிரதீதியும், பிறவற்றில் காரியத்தன்மையின் பிரதீதியு முண்டாகின்றன.

அல்லது, அதிஷ்டாந சேதநம் அசங்கமா யிருக்கின்றது. அது எதற்கும் பரமார்த்தமாகக் காரண மன்று. மாயையி லுள்ள ஆபாஸன் காரணமாமாயினும், ஆபாஸனது சொரூபம் மித்தையாகின்றது. எது தானே மித்தையாக விருக்கின்றதோ, அது வேறென்றற்குக் காரணமாதல் பொருந்தாது. ஆதலால், பரமாத்மாவின்கண் பிரபஞ்சத்தின் காரணத்தன்மை யுளதாயின், அது தேச காலங்களில் பிராந்தியால் பிரதீதியாதல் பொருந்தும். பரமாத்மாவினிடத்தில் காரணத்தன்மை யில்லை. பரமாத்மா காரணத்தன்மை முதலிய தர்மங்க ளின்றி அசங்கமா யிருக்கின்றது. அதன் காரணத்தன்மை தேச காலங்களில் பிரதீதியாகின்றது என்று கூறுதல் பொருந்தாது. பின்னரோ, மாயையினு லுண்டான அநிர்வசநீய தேச காலங்கள், அநிர்வசநீய காரணத்தன்மை யுடையன வாகின்றன. பரமார்த்தத்தால் தேச காலங்கள் காரணமாகா. எங்ஙனம் புத்திர னின்றிய புருஷன் சொப்பநத்தில் புத்திரனையும், பௌத்திரனையும் பார்க்கின்றான். ஆண்டுப் புத்திர பௌத்திர சரீரங்கள் அநிர்வசநீயமா யுண்டாகின்றன. புத்திர சரீரத்தில் பௌத்திர சரீரத்தின் அநிர்வசநீய காரணத்

தன்மை யுண்டாகின்றது. ஆண்டு பரமார்த்தமாகப் புத்திர பௌத்திர சரீரங்கட்குப் பரஸ்பரம் காரிய காரண பாவங்களில்லை. அங்ஙனமே, தேச காலங்கள், அநிர்வசநீய காரணங்களாகப் பிரதீதியாகின்றன. பரமார்த்தமாகத் தேச காலங்களுக்கும் ஆகாசாதிப் பிரபஞ்சத்திற்கும் காரிய காரணத் தன்மைக ளில்லை. இவ்வாற்றால், தேச கால சாமக்கிரிக ளின்றி ஜாக்கிரப் பிரபஞ்சத்தின் உற்பத்தி யுண்டாகிறது. ஆதலால், சொப்பநம் போல் ஜாக்கிரமும் மித்தையாம்.

எங்ஙனம், சொப்பநத்தின் ஸ்திரீ புத்திராதிகள் சொப்பநத்திலேயே சுக துக்கங்கட்கு ஹேதுக்களா யிருக்கின்றன ; ஜாக்கிரத்தில் அவர்க ளில்லை. அங்ஙனமே, ஜாக்கிர பதார்த்தங்கள் சொப்பநத்தி லில்லை ; (ஆதலால்) ஜாக்கிர சொப்பநங்கள் இரண்டும் சமமாம்.

323. ஜாக்கிர பதார்த்தங்கள் ஞாநத்தின் கூடவே உற்பத்தியாகின்றன ; ஆதலால், வேறு ஜாக்கிரத்தில் இருப்ப தில்லை யெனல்.

ஜாக்கிரத்தினின்று சொப்பந முண்டாய், பின்னர் ஜாக்கிர முண்டாகின்றது. ஆண்டு முதல் ஜாக்கிரத்தின் பதார்த்தமே, சொப்பந விபவஹித இரண்டாவது ஜாக்கிரத்தி லிருக்கின்றது. முதல் சொப்பநத்தின் பதார்த்தம் இரண்டாவது சொப்பநத்தி லிருக்கின்ற தில்லை. ஆகையால், சொப்பந பதார்த்தங்களினும் ஜாக்கிர பதார்த்தங்கள் விலக்ஷணமா மென்று கூறின்,

அச்சங்கையும் சித்தாந்தத்தை யறியாத மூடனது திருஷ்டியா லுண்டாகின்றது ; ஏனெனின், மூர்க்கனுடைய திருஷ்டி யிவ்வா றிருக்கின்றது. சமுசாரப் பிரவாகம் அநாதியாம். அதில் ஜீவனுக்கு ஜாக்கிர ஸ்வப்ந சுழுத்தி யுண்டாகின்றது. ஜாக்கிர காலத்தில் சொப்பநமும், சுழுத்தியும் நஷ்டமாகின்றன. சொப்பந காலத்தில் ஜாக்கிரமும், சுழுத்தியும் நஷ்டமாகின்றன. அங்ஙனமே சுழுத்தி காலத்தில் ஜாக்கிர சொப்பநங்கள் நஷ்டமாகின்றன. பின்னரோ, "சொப்பந சுழுத்திக ளுண்டாகும்போது ஜாக்கிர காலத்தின் ஸ்திரீ புத்திர பசு தநாதிகள் நீங்காமலிருந்து கொண்டே யிருக்கின்றன. அவற்றின் ஞாநமே நீங்குகின்றது. மீண்டும் ஜாக்கிர முண்டாகும்போது முதல் ஜாக்கிரத்தி லிருந்த பதார்த்தங்களின் ஞாந முண்டாகிறது" என்பது அஞ்ஞாநிகளாகிய மூர்க்கர்களின் திருஷ்டியாம்.

324. சித்தாந்த மிதுவாம்:—பதார்த்தங்க ளெல்லாம் சேதநத்தின் விவர்த்தமும், அவித்தையின் பரிணாமமுமாம். ஆதலால், சுத்தி ரஜதம் போன்று எக்காலத்தில் எப்பதார்த்தம் பிரதீதியாகின்றதோ, அக்காலத்தில் அதிஷ்டாந சேதநத்தை யாசிரயித்த அவித்தையின் இருவகைப் பரிணாமங்க ளுண்டாகின்றன. அவித்தையின் தமோ குணாம்சம் கடாதி விஷயரூபமாகப் பரிணமிக்கிறது. அவித்தையின் சத்துவ குணாம்சம் ஞானரூபமாகப் பரிணமிக்கிறது.

சேதநத்தை ஞானமாகக் கூறுவதால், சத்துவ குணத்தின் பரிணாமம் ஞானமாமென்று கூறுதல் பொருந்தாதாமாயினும், எல்லா வியாபக சேதநமும் ஞான மன்று ; பின்னரோ, ஆபாஸ ஸகித விருத்தியி லாரூடமான சேதநத்தை ஞானமென்பர். ஆகையால், சேதநத்தில் ஞான வியவகாரத்தைச் சம்பாதிப்பது விருத்தியாம். இவ்வாறு, சேதநத்தில் ஞானத்தன்மையைச் சம்பாதிப்பது விருத்தியாம்.

இவ்வாற்றால், சேதநத்திலுள்ள ஞானத் தன்மைக்கு உபாதி, விருத்தியாம். அதனிடத்திலும் ஞான சப்தத்தின் பிரயோக முண்டாகின்றது. " கடத்தின் ஞான முண்டாயிற்று " என்றும், " கடத்தின் ஞானம் நஷ்டமாயிற்று " என்றும் உலகத்தில கூறுகின்றார்கள். ஆண்டு விருத்தியி லாரூடமான சேதநத்திற்கு உற்பத்தி நாசங்கள் சம்பவிக்கின்ற தில்லை; விருத்திக்கு உற்பத்தி நாசங்க ளுண்டாகின்றன. ஞானத்திற்கு உற்பத்தி நாசங்கள் கூறப்படுகின்றன. ஆதலால், விருத்தியிலும் ஞான சப்தத்தின் பிரயோகமுண்டாகின்றது. அந்த விருத்திரூப ஞானம் சத்துவகுணத்தின் பரிணாமமாம் என்று கூறுதல் சம்பவிக்கின்றது, அந்த விருத்திரூப பரிணாமத்தில் சேதநத்தின் ஆபாசம் உண்டாகின்றது. கடாதி விஷயரூப பரிணாமத்தில் சேதநத்தின் ஆபாஸ முண்டாகின்ற தில்லை. ஏனெனின், விஷயம் விருத்தி என்னும் இரண்டும் அவித்தையின் பரிணாமங்களாமாயினும், கடாதி விஷயங்களோ அவித்தையின் தமோ குணத்தின் பரிணாமமாம். ஆதலால், மலிநமாம். அதில் ஆபாஸம் உண்டாகின்ற தில்லை. விருத்தி சத்துவ குணத்தின் பரிணாமமாய்ச் சொச்சமா யிருக்கின்றது. அதில் ஆபாஸ முண்டாகின்றது. இவ்வாற்றால், விருத்திக்குச் சேதநத்தின் ஆபாஸத்தைக் கிரஹிக்கும் யோக்யத்தன்மை யிருத்

தலினுல் விருத்தி யவச்சிந்ந சேதநம் ஞாந மெனப்படும்; சாக்ஷி யென்றுங் கூறப்படுகின்றது. கடாதி விஷயங்கட்கு ஆபாசத்தைக் கிரகிக்கும் யோக்யத் தன்மை யில்லை இக்காரணத்தினுல் விஷயா வச்சிந்நசேதநம் ஞாந மன்ரும்; சாக்ஷியு மன்ரும். இவ்வாற்ருல், ஜாக்கிரத்தின் பதார்த்தங்களும் அவற்றின் ஞாநமும் கூடவே யுண்டாகின்றன; கூடவே நஷ்டமுமாகின்றன. இது வேதத்தின் ரகசிய சித்தாந்தம். ஆதலால், ஜாக்கிரத்தின் பதார்த்தங்கள் இரண்டாவது ஜாக்கிரத்தில் இருக்கின்றன என்று கூறுதல் சம்பவியாது.

325. ஜாக்கிரத்தினது பதார்த்தங்களுக்குப் பரஸ்பரம் காரண காரியத் தன்மை யில்லை யெனல்.

சொப்பநத்தினின்றும் விழித்துக்கொண்டவனுக்கு "முன் எந்தப் பதார்த்தங்க ளிருந்தனவோ அவையே இவை" என்னும் பிரத்தியபிஞ்ஞை யுண்டாகின்றது. ஆதலால், ஜாக்கிர பதார்த்தங்களுக்கு ஞாநத்தின் சமகாலத்தில் உற்பத்திநாச முண்டாகின்றதில்லை. பின்னரோ, ஞாநத்திற்குமுன் இருக்கின்றன; ஞாநத்தின் நாசத்துக்குப் பின்னு மிருக்கின்றன.

அங்ஙனமாயினும், எங்ஙனம், சொப்பந பதார்த்தங்கள் அந்த க்ஷணத்தில் உற்பத்தியாய், "நான் பிறப்பதற்கு முன்னும் இந்த மலை சமுத்திர முதலியன உண்டாயிருக்கின்றன" என்று பிரதீதியாகின்றன. ஆண்டுத் தற்கால முண்டாகிய பதார்த்தங்களில் வெகுகால நிலைத்திருத்தற் றன்மைப் பிராந்தியுண்டாகிறது. ஆதலால், எந்த அவித்தை மித்தையான மலை சமுத்திர முதலியவற்றை யுண்டாக்கி யிருக்கின்றதோ, அவ்வவித்தையினுல் வெகுகால ஸ்திரத்தன்மையும், ஸ்திரத்தன்மையின் பிரதீதியும் அநிர்வசநீயமா யுண்டா யிருக்கின்றன. அங்ஙனமே, ஜாக்கிர பதார்த்தங்களினும் வெகு கால நிலைத்திருத்தற் றன்மை யில்லை. பின்னரோ, அவித்தையின் பலத்தினுல் மித்தையான ஸ்திரத்தன்மையும், அந்தப் பதார்த்தங்களோடு கூடவே உற்பத்தியாகிப் பிரதீதியாகின்றது.

இவ்வாறு கூறின்:—சொப்பந பதார்த்தம் சாக்ஷாத் அவித்தையின் பரிணமமாம். ஜாக்கிர பதார்த்தம் சாக்ஷாத் அவித்தையின் பரிணம மன்ரும். பின்னரோ, கடத்தி னுற்பத்தி தண்டம் சக்கரம் குலாலன் என்பவற்ருு லுண்டாவது போல் சகல பதார்த்தங்

களினுற்பத்தியும், தத்தங்காரணத்தா லுண்டாகின்றது; சாக்ஷாத் அவித்தையா லுண்டாகின்ற தில்லை. சாக்ஷாத் அவித்தையின் பரிணாமமா யிருக்குமாயின், ஆகாசாதிக் கிரமத்தால் பஞ்சபூதங்களின் உற்பத்தியும், பஞ்சீகரணமும், அவற்றினின்று பிரஹ்மாண்டத்தி னுற்பத்தியும் சுருதியிற் கூறப்பட்டிருக்கின்றன. அஃது அசங்கதமாம். ஆதலால், ஈசுவர சிருஷ்டியாகிய ஜாக்கிர பதார்த்தங்கள் தத்தம் உபாதானத்தின் பரிணாமங்களாம்; சாக்ஷாத் அவித்தையின் பரிணாமங்க ளன்றாம். சொப்பநத்தின் சகல பதார்த்தங்களும் அவித்தையின் பரிணாமங்களாம். அவற்றிற்கு ஒரே அவித்தை உபாதாநமா யிருத்தலால் அந்தப் பதார்த்தங்களுக்கும் அவற்றின் ஞாநத்திற்கும் ஒரே யவித்தையினின்றும் ஒரே காலத்தில் உற்பத்தி சம்பவிக்கின்றது. ஜாக்கிர பதார்த்தங்கள் பிந்ந பிந்ந காரணங்களா லுண்டாகின்றன. காரியத்திற்குமுன் காரணமிருக்கும். காரணத்தில் காரியம் லயமாகின்றது. ஆதலால், கடத்தின் உற்பத்திக்கு முன்னும் கடநாசத்திற்குப் பின்னும் மட்பிண்ட மிருக்கின்றது. இவ்விதத்தால், சில பதார்த்தங்கள் அற்ப காலம் நிலைப்பனவும், சில அதிக காலம் நிலைப்பனவுமாகக் காரிய காரணங்களா யிருக்கின்றன. சொப்பந பதார்த்தங்கள் அவ்வா றில்லை.

326. அச்சங்கை பொருந்தாது. ஏனெனின், ஜாக்கிர பதார்த்தங்கட்குப் போல் சொப்பந பதார்த்தங்களிலும் காரிய காரணத் தன்மை பிரதீதியாகின்றது. எங்ஙனம், ஒருவனுக்கு "என் பசு கன்று போட்டிருக்கின்றது; அல்லது, என் ஸ்திரீக்குப் புத்திரன் உண்டாயிருக்கின்றான்" என்று சொப்பந முண்டாகிறது. ஆண்டுப் பசுவினிடத்திலும், ஸ்திரீயினிடத்திலும் காரணத்தன்மையும், வெகு கால ஸ்திரத்தன்மையும் பிரதீதியாகின்றன. கன்றினிடத்திலும், புத்திரனிடத்திலும் காரியத்தன்மையும், அற்ப கால ஸ்திரத்தன்மையும் பிரதீதியாகின்றன. எல்லாம் ஒரே காலத்தி லுண்டாகின்றன. ஒன்று மற்றொன்றற்குக் காரண மன்று. ஆனால், பசு, கன்று, ஸ்திரீ முதலியவற்றிற்கு அவித்தையே உபாதாநமாம். அங்ஙனமே, ஜாக்கிரத்திலும் சில வெகு கால மிருக்கும் காரண ரூபமாகவும், சில சொற்ப கால மிருக்கும் காரிய ரூபமாகவும் சொப்பநத்திற்போலத் தோற்றுகின்றன. எதுவும் எதற்கும் பரஸ்பரம் காரிய காரண மன்றாம்; பின்னரோ, சாக்ஷாத் அவித்தையின் காரியங்களாம்.

327. சுருதியில் கிரமமாகச் சிருஷ்டி கூறப்பட்டிருக்கின்றது. ஆண்டுச் சிருஷ்டியைக் கூறுதலில் சுருதிக்கு அபிப்பிராயமின்று. பின்னரோ, அத்வைதத்தினைப் போதித்தலில் அபிப்பிராயமாம். எல்லாப் பதார்த்தங்களும் பரமாத்மாவினின்றுமுண்டா யிருக்கின்றன. ஆதலால், அதன் விவர்த்தமாம். எது எதன் விவர்த்தமா யிருக்கின்றதோ, அது அதன் சொரூபமாகவே யிருக்கின்றது. ஆதலால், சகல நாம ரூபங்களும் பிரஹ்மத்தினும் வேறாகாமல் பிரஹ்மமாகவே யிருக்கின்றன என்னும் அர்த்தத்தினைப் போதிப்பதற்காகச் சிருஷ்டி கூறப்பட்டது. சிருஷ்டிக்கு வேறு பிரயோசநமில்லை. ஆண்டு கிரம சிருஷ்டி கூறியது ஸ்தூல திருஷ்டியை யுடையவனுக்கு விபரீதக் கிரமமாக லய சிந்தனை செய்யும் பொருட்டாம். அதற்கும் அத்வைத ஞாநமே பிரயோஜநமாம். ஆதலால், கிரமமாகச் சொல்லுவதிலும் அபிப்பிராய மில்லை. சிருஷ்டியில் கிரம மில்லை. பின்னரோ, எல்லாப் பதார்த்தங்களும் ஒரே அவித்தையினின்றும் உண்டாயிருக்கின்றன. அவற்றிற்குப் பரஸ்பரம் காரிய காரணத் தன்மையும், பூர்வோத்ரத் தன்மையும் அவித்தையாலாகிய சொப்பநம்போல் மித்தையாகப் பிரதீதி யாகின்றன. சுருதி அவற்றிற்குத் தம்மில் காரிய காரணத்தன்மையும், பூர்வோத்தரத் தன்மையும் கூறியிருக்கின்றது. அது லயசிந்தனையின் பொருட்டுக் கூறியதாம். எவ்வாறு சொரூப மிருக்கின்றதோ அவ்வாறே தியாந மிருக்க வேண்டு மென்னும் நியமம் தியாநத்தி லில்லை. ஆதலால், ஜாக்கிர பதார்த்தங்களுக்குத் தம்மில் காரண காரியத் தன்மை யில்லை.

### 328. திருஷ்டி சிருஷ்டி வாதத்தின் அங்கீகாரம்.

ஆனால், சகல பதார்த்தங்களும் சாக்ஷாத் அவித்தையின் காரியங்களாம். சுத்தி ரஜதாதி போன்று அல்லது, சொப்பநம் போன்று அவித்தையின் விருத்தி யுபஹித சாக்ஷியினால் அவற்றின் பிரகாச முண்டாகின்றது. ஆதலால், எல்லாப் பதார்த்தங்களுஞ் சாக்ஷி பாஸியங்களாம். அவித்தையின் ஞாநாகாரா ஞேயாகார பரிணாமங்கள் ஒரே காலத்தில் உண்டாகின்றன; கூடவே நஷ்டமாகின்றன. ஆதலால், எப்போது பதார்த்தம் தோற்றுகின்றதோ அப்போதே தோற்றத்திற்கு விஷயமான பதார்த்தம் உண்டாகின்றது; வேறு காலத்தி லுண்டாகின்ற தில்லை. இதனையே திருஷ்டி சிருஷ்டி வாத மென்பர்.

இந்தப பக்ஷத்தில் பதார்த்தங்களுக்கு அஞ்ஞாத சத்தை இல்லை ; ஞாதசத்தை யிருக்கின்றது. அத்வைத வாதத்தில் இது சித்தாந்த பக்ஷமாம். இந்தப் பக்ஷத்தில் இரண்டு சத்தைக ளிருக்கின்றன ; மூன் றில்லை. ஏனெனின், அநாத்ம பதார்த்தங்களெல்லாம் சொப்பநம் போன்று பிராதிபாஸிகமா யிருக்கின்றன. பிரதீதி காலத்தினும் பிந்ந காலத்தில் அநாத்மாவிற்குச் சத்தை யில்லை. ஆகையால், மூன்றாவதான வியாவகாரிக சத்தை யில்லை.

இந்தப் பக்ஷத்தில் அநாத்ம பதார்த்தங்க ளெல்லாம் சாக்ஷி பாஸியமா யிருக்கின்றன. பிரமாதாப் பிரமாணங்களுக்கு விஷயம் ஒன்றும் இல்லை. ஏனெனின், அந்தக்கரணமும், இந்திரியங்களும், அங்ஙனமே கடாதிகளுமாகிய எல்லாத் திரிபுடிகளும், ஞாநமும் சொப்பநம் போன்று ஒரே காலத்தில் உண்டாகின்றன. அவற்றிற்கு விஷய விஷயீ பாவம் பொருந்தாது. கடாதி விஷயமும், நேத்திராதி இந்திரியங்களும், அந்தக்கரணமுமாகிய இவை ஞாநத்திற்குமுன் இருக்குமாயின், நேத்திராதி வாயிலாக அந்தக்கரணத்தின் விருத்திரூப ஞாநம் பிரமாண ஜந்யமாம். அந்த அந்தக்கரணம் இந்திரியம் விஷயம் என்னும் மூன்றும் ஞாநத்தின் பூர்வகாலத்திலில்லை. பின்னரோ, ஞாந சம காலத்திலேயே சொப்பநம் போல் திரிபுடி யுண்டாகின்றது. ஆதலால், திருபுடியாற் றோன்றும் ஞாநம் ஒன்று மில்லை. அங்ஙனமாயினும், சொப்பநம் போல் ஞாநத்தில் திரிபுடி ஜந்யத் தன்மை பிரதீதியாகின்றது. ஆதலால், ஜாக்கிர பதார்த்தங்கள் சாக்ஷி பாஸியமாம்; பிரமாண ஜந்யஞாநத்திற்கு விஷயமன்று; இதனாலும் சொப்பநம்போன்று மித்தையாம். அல்லது, ஜாக்கிரத்தில் சிற்சில பதார்த்தங்கள் மித்தியா ரூபத்தினா லறியப்படுகின்றன; சிற்சில சத்திய ரூபத்தினா லிவ்வாறு அறியப்படுகின்றன:—

அநாதி கால பதார்த்தங்க ளிருக்கின்றன ; அவற்றுள் சில நஷ்டமாகின்றன; அவற்றிற்குச் சமாநமாக வேறு பதார்த்தங்கள் உண்டாகின்றன. இவ்வாறு பிரபஞ்ச தாரையின் நாசம் ஒரு காலத்திலு முண்டாவ தில்லை. ஞாந முண்டானவனுக்குப் பிரபஞ்சத்தின் பிரதீதி யுண்டாகின்றதில்லை. ஏனையோர்க்குப் பிரபஞ்சத்தின் பிரதீதி யுண்டாகின்றது. அந்த ஞாநத்திற்குச் சாதநம் வேதமும், குருவுமாம். அந்த வேதத்தினாலும், குருவினாலும் பரம சத்தியம் அடையப்படுகின்றது. இவ்வாறாய பிரதீதி ஜாக்கிரத்தி லுண்டாகின்றது. ஆண்டு சில பதார்த்தங்களில் மித்

தியாத்தன்மை, சிலவற்றில் நாசம், சிலவற்றில் உற்பத்தி, வேதத்திஞலும் குருவிஞலும் பரம புருஷார்த்தப் பிராப்தி என்னும் இவை யாவும் அவித்தையா லாகிய சொப்பநம் போன்று மித்தையா யிருக்கின்றன. வாஸிஷ்டத்தில் இவ்வாறு அநந்த இதிஹாஸங்கள் கூறப்பட் டிருக்கின்றன.

க்ஷண மாத்திர சொப்பநத்தில் அநேககாலப் பிரதீதி யுண்டாகின்றது. ஜாக்கிரம் போல் ஸ்திரமான பதார்த்தங்கள் பிரதீதியாகின்றன. அவற்ருல் வெகு கால போக முண்டாகின்றது. ஆதலால், ஜாக்கிர பதார்த்தங்கட்குச் சொப்பந பதார்த்தங்களினும் சிறிதும் விலக்ஷணத் தன்மை யில்லை. பின்னரோ, ஆத்ம பிந்நமாய யாவும் மித்தையாம்.

329. பிரசிநம்:—சோப்பநம் போற் சோற்ப காலம் நிலைத் திருப்பது சம்சாரமாயின், அநாதி காலத்துப் பந்த முண்டாகாது. பந்த நிவிருத்தி ரூப மோக்ஷத்தின் போருட்டுச் சிரவணுதி சாதநங்கள் நிஷ்பலமா மேனல்.

சிஷ்யன் கேட்கின்ருன்:—ஈசுவர சிருஷ்டி அநந்த கற்பமாக அநாதியா யிருக்கின்றது. அதில் ஞாநி முக்தனுகின்ருன்; அஞ்ஞாநிக்குப் பந்த மிருக்கின்றது. (ஜாக்கிரம்) சொப்பந சமாநமாகுமாயின், சொப்பநம் ஒரு க்ஷணம், அல்லது ஒரு நாழிகை, அல்லது, பகற் காலம் இருக்கின்றது போல், சமுசாரமும் ஒரு க்ஷணம் அல்லது ஒரு நாழிகை, அல்லது பகற் காலம், அல்லது, கிஞ்சித் அதிக காலம் இருக்கும். சொப்பநம் போல் சமுசாரம் சொற்ப கால மிருப்பதாயின் அநாதி காலத்துப் பந்த முண்டாகாது. பந்த நிவிருத்தி ரூப மோக்ஷத்தின் பொருட்டுச் சிரவணுதி சாதநங்கள் நிஷ்பலமாம்.

குரு கூறுகின்ருர்:—முற் கூறிய சித்தாந்தத்தில், பந்தம், மோக்ஷம், வேதம், குரு என்பன அங்கீகரிக்கப்பட வில்லை. பின்னரோ, சேதநம் நித்திய முக்தமா யிருக்கின்றது. அவித்தையின் பரிணுமங்கள் சேதநத்தில் நாநா விவர்த்தமாகின்றன. அதனுல், ஆத்ம சொரூபத்திற்குக் கிஞ்சித் மாத்ரமும் ஹாநி யில்லை. ஆத்மா எப்போதும் அசங்கமாயும் ஏக ரஸமாயு மிருக்கின்றது. இற்றை நாள் வரையில் ஒருவரும் முக்தராக வில்லை; இனியும் ஆவ தில்லை. பின்னரோ, சேதநம் நித்ய முக்தமாக விருக்கின்றது. அவித்தைக்கும் அதன் பரிணுமத்திற்கும் சேதநத்தோடு எக்காலத்திலும்

சம்பந்த மில்லை. ஆதலால், பந்தம், வேதம், குரு, சிரவணுதிகள், சமாதி, மோக்ஷம் என்பவற்றின் பிரதீதியும் சொப்பநம் போல் அவித்தியா ஜந்யமாம்; ஆதலால் மித்தையாம். இவற்றில் வெகு கால ஸ்தாயித்தன்மையும், அவித்தியா ஜந்யமாம். அங்ஙனமாயினும், இது சித்தாந்தத்தினை யுணராமல் ஸ்தூல திருஷ்டியுடைய புருஷனது பிரஸ்நமாம்.

அக்கிருத (இச்சை யின்றிய ஆத்ம) தேவனின் சொப்பநம்.
சேன்ற பிரஸ்நத்தின் உத்தரம்.

330. அக்கிருத தேவனுக்குச் சொப்பநத்தின் பிரதீதி.

குரு வாக்கியம்:—சிஷ்யனே! எங்ஙனம், நித்திரா தோஷத்தினுல் சொப்பநத்தில் அத்தியாபகன் (ஓதுவிப்போன்), அத்தியயநம் (ஓதல்), வேதம், சாஸ்திரம், புராணம், தர்ம சாஸ்திரம், அத்தியயந கர்த்தா, கர்மம், அதன் பலம் என்பன பிரதீதியாகின்றன. அவ்வெல்லாப் பதார்த்தங்களிலும் சத்தியத்தன்மையின் பிராந்தி யுண்டாகின்றது. அங்ஙன மாயினும், அச்சொப்பநத்தின் சகல பதார்த்தங்களும் மித்தையா யிருக்கின்றன. அங்ஙனமே, ஜாக்கிரத்தின் சகல பதார்த்தங்களும் மித்தையா யிருக்கின்றன. அவற்றில் சத்தியத்தன்மை பிரதீதியாவது பிராந்தியாம். உனக்கு நான் குருவாகத் தோற்றிப் பந்தத்தை நாசஞ் செய்யும் வேதார்த்தத்தினை உபதேசஞ் செய்தல் (எதுவோ) அது உனக்கு மித்தையாகப் பிரதீதியாகின்றது

எங்ஙனம், அக்கிருத தேவனுக்குச் சொப்பநத்தில் மித்தியாப் பிரதீதிக்கு விஷயங்களான குரு வேதாதிகள் அநிர்வசநீயமா யுண்டாயினவோ, அங்ஙனமே, உன் பிரதீதியில் யான் முதலிய யாவும் அநிர்வசநீயமாய் மித்தையா யிருக்கின்றன.

331. அந்த அக்கிருத தேவனுக்கு இவ்வாறு சொப்பநமுண்டாயிற்று:—ஓர் அக்கிருத னென்னும் தேவதை, அநாதிகாலத்து உறக்கத்தில் தூங்குவதாய்ச் சொப்பநத்தைக் கண்டது. அச் சொப்பநத்தில் அப் புருஷனுக்கு இவ்வாறுய பிரதீதி யுண்டாயிற்று:—

நான் சண்டாளன்; மகா துக்கியா யிருக்கிறேன்; அஸ்தி, மஜ்ஜை, இரத்தம், துவக், மாமிசம், மேதை, வீரியரூப சப்த தாதுக்களினுல் என்முகம் நிறைந் திருக்கின்றது.

மகா கோரமும் பயங்கரமுமான பாம்பு, யானை முதலியவற்றோடு கூடிய வநத்தில் நான் சுற்றித் திரிகின்றேன். அந்தத் தேவதை சுற்றித் திரிந்துகொண்டு அவ்வநத்தில் அநந்த இடங்களைப் பார்த்தது.—சில விடங்களில் அநேக பயங்கரமான பிராணிகள் பக்ஷணஞ் செய்தற்கு எதிரில் ஓடிவருகின்றன. சில விடங்களில் பீறிட்டு இரத்தம் நிறைந்த குண்டங்களில் விழுந்த பிராணிகள் ஹாஹாகார சப்தங்களைச் செய்கின்றன. சில விடங்களில் பழுக்கக் காய்ச்சிய இருப்பு ஸ்தம்பங்களோடு (சேர்த்துப்) பந்திக்கப்பட்ட புருஷர்கள் அலறுகின்றார்கள். சில விடங்களில் சுடுமணலோடு கூடிய மார்க்கங்களில் காலில் ஒன்று மில்லாமல் சில புருஷர்கள் போகின்றார்கள். அவர்களை ராஜ படர்கள் இருப்புத் தண்டத்தினால் அடிக்கின்றார்கள். இவ்வாறு, அநேக பயங்கரமான இடங்களை அந்தத் தேவதை பார்த்து, ஒரு காலத்தில் தானும் அபராதஞ் செய்து சொப்பநத்தில் அந்தத் துக்கங்களை யடைந்ததாயிற்று.

சில விடங்களில் திவ்வியமான ஸ்தலங்களைப் பார்க்குமிடத்து, அவ்விடங்களி லுத்தமமான தேவதைகள் விளங்குகின்றார்கள். அத் தேவர்களுக்குத் திவ்விய போகங்க ளிருக்கின்றன. அமிர்தத்தைப் பார்த்தல் மாத்திரத்தினால் அவர்களுக்குத் திருப்தி யுண்டா யிருக்கின்றது. அவர்களுக்குப் பசி தாகங்களாற் பாதை யுண்டாகின்ற தில்லை. அவர்கட்கு மல மூத்திரங்க ளின்றிச் சரீரம் பிரகாசித்துக்கொண் டிருக்கின்றது. உத்தமமான விமாநத்தி லிருந்துகொண்டு சில தேவர்கள் ரமிக்கின்றார்கள். அந்த விமாநங்கள் அவர்க ளிச்சையி னநுசாரஞ் செல்லுகின்றன. சிலவிடங்களில் அரம்பை ஊர்வசி முதலிய அப்ஸர ஸ்திரீகள் நிர்த்தநஞ் செய்கின்றார்கள். அவர்கள் அங்க முற்றும் தோஷ ரகிதமா யிருக்கின்றது. எல்லா ஸ்திரீகளும் குண முடையவர்களா யிருக்கின்றார்கள். அவர்கள் சரீரத்தினின்றும் காமத்தினைப் பிரகாசிப்பிக்கும் உத்தமமான சுகந்த முண்டாகின்றது. சில விடங்களில் அவர்களோடு தேவர்கள் ரமிக்கின்றார்கள்.

தானும் ஒருகால் தேவத்தன்மையினை யடைந்து அவர்களோடு அநேககாலம் ரமிக்கின்றான். ஒருகால் அந்த அப்சர ஸ்திரீகளோடு திவ்விய ஸ்தாநங்களில் ரமிக்கின்றவனாய், தற்செயலாய் இரத்த, மலங்கள் நிறைந்த குண்டங்களில் முழுகுகின்றான்.

ஓரிடத்தில் யாவர்க்கும் அதிபதியான புருஷன் இருக்கின்றான். அவன் ஆஞ்ஞையின் பிரகாரம் நடக்கின்றவர் அவன் முன் நிற்கின்றனர். சிலர்க்கு அந்த அதிபதியும், அவன் சேவகர்களும் சௌமிய ரூபமாய்த் தோற்றுகின்றார்கள். சில புருஷர்கட்கு மகா பயங்கர ரூபமாய்த் தோற்றுகின்றார்கள். அவ்வநத்திலிருக்கும் புருஷர்கட்குக் கர்மாநுசாரமாய்ப் பலனைக் கொடுக்கின்றார்கள். இவ்விதமாக, அக்கிருத தேவன் சொப்பநத்தில் நானா ஸ்தாநங்களைப் பார்த்தான். வேறு சில விடங்களில் பிராமணர்கள் வேத பாராயணஞ் செய்கின்றார்கள். சில விடங்களில் யஞ்ஞ சாலைகளில் உத்தமமான கர்மஞ் செய்கின்றார்கள். சில விடங்களில் உத்தமமான நதி ஓடுகின்றது. அதில் புண்ணியத்தின் பொருட்டு ஜநங்கள் ஸ்நாநஞ் செய்கின்றார்கள். சில விடங்களில் ஞாநமுடைய ஆசாரியர்கள் சிஷ்யர்களுக்குப் பிரஹ்ம வித்தையை யுபதேசஞ் செய்கின்றார்கள். அந்தப் பிரஹ்ம வித்தையை யடைந்து அவ்வநத்தினின்றும் அவர்கள் வெளிப்பட்டுப் போய்விடுகின்றார்கள்.

இவ்விதமாக, சொப்பநத்தில் அக்கிருத தேவன் க்ஷண மாத்திரத்தில் அநேக ஆச்சரிய ரூப பதார்த்தங்களை அவ்வநத்தில் பார்த்தான். அவனுக்குச் சொப்பநத்தில் இவ்வாறு பிரதீதி யுண்டாயிற்று:—அஃதாவது—அநந்த காலமாய் நான் இந்த வநத்திலிருக்கின்றேன். இந்த வநத்திற்கு ஒரு காலத்தும் நாசம் வருகின்ற தில்லை. ஒரு காலத்தில் பகவானுடைய நான்கு முகங்களினின்றும் நானா பீஜங்கள் வெளியே வர அவ்வநம் அவரால் சிருஷ்டிக்கப்படுகின்றது. ஜலம் பாய்ச்சுவதால் அவ்வநம் பரிபாலிக்கப்படுகின்றது. ஒருகால் அவருடைய கோரமான ஹாஸியத்தால் அவர் முகத்தினின்றும் அக்கிநி புறப்பட்டு அவ்வநத்தைத் தாஹம் செய்கின்றது. வநத்தின் உற்பத்தியுடன் எனது உற்பத்தி யுண்டாகின்றது. வநத்தின் தாஹ முண்டாகும் போது எனது தாஹ முண்டாகின்றது. வநம் முற்றும் தாஹகம்செய்து அந்தப் பகவான் ஒருவரே யிருக்கின்றார். அவர் சரீரத்தில் வநத்தின் பீஜம் தங்குகின்றது. இந்தப் பிரதீதி, சொப்பநத்திலேயே அந்த அக்கிருத தேவனுக்குச் சொப்பந வேதத்தின் சிரவணத்தினு லுண்டாயிற்று.

332. அக்கிருத தேவன் சொப்நத்தில் குருவைச் சந்தித்தல்.

அப்போது தனக்கு அடிக்கடி ஜநந மரணங்க ளுண்டாவ தைக்கேட்டு அக்கிருத தேவன் விசாரஞ் செய்தான்:—

எவ்விதமாக நான் இவ்வநத்தை விட்டு வெளிப்படுவேன்? வெளிப்படாவிட்டாலும், எனது சண்டாளத்துவம் நீங்கி தேவ பாவம் எப்போது மிருக்கும்படி வநத்தினின்றும் வெளியிற் செல்வதற்கு வேறோர் உபாய மில்லை. பிரஹ்ம வித்தையினை யுப தேசஞ்செய்யும் ஆசாரியர் தனது சிஷ்யர்களை வநத்திற்கு வெளி யிற்கொண்டு போகின்றார். இவ்வாறு, விசாரித்து அந்த அக்கிருத தேவன் சொப்பநத்திலேயே ஆசாரியரை யடைந்தான். விதி பூர்வகமாய் அடைந்த சிஷ்யனுக்கு அந்த ஆசாரியர் தேவ வாணி ரூபமான மித்தியா கிரந்தத்தை யுபதேசஞ் செய்கின்றார்.

333. மித்தியா ஆசாரியர் மித்தியா சிஷ்யனுக்கு மித்தியா சம்ஸ்கிருத கிரந்தத்தால் உபதேசித்தலும், கிரந்தத்தின் மங்கலாசரணமும்.

மித்தியாசாரியரால் மித்தியா சிஷ்யனுக்கு உபதேசிக்கப் பட்ட சம்ஸ்கிருத கிரந்தம் பாஷா ரூபமாக எழுதப்படுகின்றது.

சம்ஸ்கிருத கிரந்தத்தைப் பாஷாரூபமாக்குவதில் மங்கலம் செய்கின்றார். ஏனெனின், மங்கலம் செய்வதினால் கிரந்தம் முடி தற்குப் பிரதிபந்தமா யுள்ள விக்கிநங்கள் நாசமாகின்றன. விக் கிநம் என்பது பாபத்திற்காம். பாபத்தினால் சுபகாரியத்தின் சமாப்த முண்டாகின்ற தில்லை. அந்தப் பாபங்கள் மங்கலத்தால் நாச மாகின்றன. பாப மற்றவனும் கிரந்தாரம்பத்தில் மங்கலம் அவசியஞ் செய்தல் வேண்டும். ஏனெனின், கிரந்தாரம்பத்தில் மங்கலஞ் செய்யாவிடின் கிரந்தகர்த்தாவினிடத்தில் புருஷர் களுக்கு நாஸ்திகப் பிராந்தி யுண்டாய்க் கிரந்தத்திற் பிரவிருத்தி யுண்டாகாது.

அம்மங்கலம் மூன்று பிரகாரமாம்:—1. வஸ்து நிர்த்தேச ரூபமாம். 2. நமஸ்கார ரூபமாம். 3. ஆசீர்வாத ரூபமாம். சகுண அல்லது, நிர்க்குணமான பரமாத்மா வஸ்து எனப்படும். அதன் கீர்த்தநம் வஸ்து நிர்த்தேச மெனப்படும். தன்னுடைய அல்லது, சிஷ்யனுடைய வாஞ்சித வஸ்துவைப் பிரார்த்தித்தல் ஆசீர்வாத ரூப மங்கல மெனப்படும். தனது இஷ்ட வஸ்துவின் பிரார்த்தநம்

பின்னர் ஸ்பஷ்டமாகும். சிஷ்யனது இஷ்ட வஸ்துவின் பிரார்த்தநம் அதன் பின் ஸ்பஷ்டமாம்.

334. புராணத்தில், கணேசருக்கும், தேவிக்கும், ஈசுவரத் தன்மை பிரசித்தமா யிருக்கின்றது. ஆகையால், அநீசுவர சிந்தனை யில்லை. புராணத்தில் கணேசருக்குச் சொல்லப்பட்ட ஜந்மம் ஜீவர்கள் ஜந்மம் போல் கர்மத்தின் பல னன்று; பின்னரோ, ராம கிருஷ்ணாதிகள் போல் பக்தர்களை யநுக்கிரகிக்கப் பரமாத்மாவே ஆவிர்ப்பவித் திருக்கின்ற தென்பது வியாஸ பகவானது பரம அபிப்பிராயமாம்.

இந்த விடத்தில் இது இரகசியமாம்:—பரமார்த்த திருஷ்டியால் ஜீவனும் பரமாத்மாவினும் பிந்நமன்று. ஆனால், எந்த ஜநநமரணாதி பந்தங்களின் அத்தியாஸம் ஆத்மாவினிடத்துளதோ, அது ஜீவனுடைய ஜீவத்தன்மையாம். அந்த ஜந்மாதி பந்தம் கணேசாதிகளுக்கு ஆத்மாவில் பிரதீதியாகின்ற தில்லை. ஆகையால், ஜீவர்க ளல்லர். இவ்வாற்றால், கணேசாதிகளுக்கு ஈசுரவத் தன்மை யிருக்கின்றது. அதனால், கிரந்தாரம்பத்தில் அவர்களைச் சிந்தித்தல் யோக்யமாம்.

நாநாரூபம் ஈசுவரனுக்குக் கூறியது எல்லோருக்கும் ஈசுவரத்தன்மையினை விளக்கற் பொருட்டாம்; ஈசுவர பக்தியும் குரு பக்தியும் வித்தையின் பிராப்திக்கு முக்கிய சாதநங்களா மென்னும் அர்த்தத்தினையும் விளக்கற் பொருட்டாம்.

335. நிர்க்குண வஸ்து நிர்த்தேச ரூப மங்கலம்.

வியாபகமாயும், சத்தியமாயு மிருக்கிற எதன் பிரகாசத்தால் சூரிய சந்திரர்கள் பிரகாசிக்கின்றார்களோ, அந்தப் புத்திக்குச் சாக்ஷியாகிய நான் சுத்த ரூபமாகவும் ஆநந்த ரூபமாகவும் இருக்கின்றேன்.

சகுண வஸ்து நிர்த்தேச ரூப மங்கலம்.

ஸ்ரீ கணபதியின் பெயர், விக்கிநங்களை மூலத்தோடு நாசஞ் செய்கின்றது. அவரைச் சிந்திக்காவிடின் தேவதைகளுடைய இச்சைகளுஞ் சித்திக்கின்ற தில்லை. திரிபுரவதத்தில் இந்த வார்த்தை பிரசித்தமாம்.

நமஸ்கார ரூப மங்கலம்.

அசுரர்களைச் சங்கரிக்கிறவர்களாயும், பக்தர்களை யெப்போதும் பரிபாலிக்கிறவர்களாயு மிருக்கிற லக்ஷ்மீ பதியான மகா

விஷ்ணுவையும், பார்வதி பதியான பரமசிவனையும் நான் நமஸ்கரிக்கின்றேன்.

சுவ வாஞ்சித பிரார்த்தநா ரூப ஆசீர்வாதம்.

எந்தச் சக்தியின் பலத்தால் ஈசுவரன் இச் சிருஷ்டியினைச் செய்கின்றாரோ, அந்தச் சக்தி, இந்தக் கிரந்தம் முடியும் பொருட்டு என் வாக்கி லிருக்கப் பிரார்த்திக்கின்றேன்.

சிஷ்ய வாஞ்சித பிரார்த்தநா ரூப ஆசீர்வாதம்.

பந்தத்தை நீக்கிச் சுகத்தைத் தரும் தீநதயாளுவான ஸ்ரீ நாது குரு இந்தக் கிரந்தத்தைப் படிக்கின்றவர் கேட்கின்றவர்களது ஜந்மாதி துக்கத்தை நிவர்த்திப்பாராக.

336. வேதாந்த சாஸ்திர கர்த்தாவாகிய ஆசாரியரை நமஸ்கரித்தல்.

எங்ஙனம், காற்றானது வநத்தில் வீசி, மரங்களை யசைத்து, அவற்றின் முட்களை விரித்து, அழகிய தாமரைப் புஷ்பங்களைத் தமது ஸ்தாநங்களினின்றும் பறித்து, முட்களிற் சுழற்றுகின்றது; அந்தச் சுழலும் புஷ்பத்தினைப் பார்த்து வழியிற் செல்லுபவனது சித்தத்தில் இவ் வழகிய கமலம் இங் கிருக்கத்தக்க தன்று; பின்னரோ, உத்தமமான இடத்தி லிருக்கத் தக்கதாமென்று விசாரித்து, அப்புஷ்பங்களை யெடுத்துக் கொண்டு, மறுபடியும், மேலும் காற்று பூக்களைப் பறித்து முட்களிற் சுழற்று மாதலால் மீண்டும் வாயு பூக்களை முட்களில் சுழற்றா திருக்கும்படி உபாயஞ் செய்வேணுக வென்று மீண்டும் விசாரித்துச் சூத்திரங்களால் வலை செய்து முண் மரத்தைப் பிரித்துவிடுகின்றான். அவ் வலையால் புஷ்பங்கள் முட்களில் பிரவேசிக்கின்ற தில்லை.

337. அங்ஙனமே, பேத வாதி ஆசாரிய ரூப வாயு, வேத ரூப வநத்தில் அர்த்தவாத ரூப முட்களோடுகூடிய விருக்ஷத்தினின்றும் ஸகாம கர்மரூப முட்களைப் பிரவிருத்திக்கச் செய்து, கபடமில்லாமலும் அதிசுத்த ராகாதி தோஷங்க ளில்லாமலு மிருக்கும் சிஷ்ய ரூப தாமரைப் புஷபத்தினைச் சமாதிரூப அவற்றின் ஸ்தாநத்தினின்றும் பறித்து, ஸகாம கர்மரூப முட்களிற் சுழற்றுவதைப் பார்த்து, வழிப்போக்கனுக்குச் சமானமான வியாபக விஷ்ணுவானவர் இந்தச் சுத்த புருஷன் இவ்விடத்தி லிருக்கத் தக்கவ னன்று; பின்னரோ, என் ஸ்வரூபத்தை யடைய யோக்ய

ணுவ னென்று விசாரித்து, வியாஸ ரூபந் தரித்து அச் சிஷ்யர்களை உபதேச ரூப மடிமீது வைத்தார். எங்ஙனம், புருஷனது மடிமீ திருக்கின்ற புஷ்பத்தினைப் பறிப்பதில் காற்று சமர்த்தமாகாதோ, அங்ஙனமே, பிரஹ்மநிஷ்ட ஆசாரியருடைய உபதேசத்தில் இருக்கும் புருஷனைப் பேதவாதி பிரமிக்கும்படி செய்யச் சமர்த்தனுகின்ற தில்லை. ஆகையால், உபதேசமே மடியாம். மீண்டும் வியாச பகவான், இந்தப் பேத வாதி, மற்றவர்களையும் ஸகாம கர்மரூப முட்களில் பின்னும் சுழற்றுவான். ஆகையால் இனிமேல் சிஷ்யர்கள் பிரமிக்காம லிருக்கு மாறு விசாரித்துச் சூத்திர வடிவ வலையினுல் வேத வாக்கிய ரூப விருக்ஷங்களை விபாகஞ் செய்து கொடுத்தார்.

எங்ஙனம், வநத்தில் இருவகை விருக்ஷங்க ளுண்டு:—முண் மரங்கள், முள் ளில்லாதன. அவை வலையினுல் பிரிக்கப்பட்டால் வலையினுல் புஷ்பங்களுக்கு முட்களோடு கூடிய விருக்ஷத்தில் பிரவேச முண்டாகின்ற தில்லையோ, அங்ஙனமே, வேதத்தில் இருவகை வாக்கியங்க ளுள:—ஒன்று கர்மத்தைத் துதித்துப் பகிர்முகப் புருஷனைக் கர்மத்திற் பிரவிருத்திக்கச் செய்கின்றது. மற்றொன்று கர்ம பலத்தின் அநித்தியத் தன்மையைப் போதித்துப் புருஷனை நிவிருத்திப்பிக்கின்றது. இவ் வாக்கியங்களை,

338. வேத வியாஸர் விபாகஞ் செய்து சூத்திரத்தினுற் சகல வாக்கியங்களுக்கும் நிவிருத்தியில் தாற்பரியமே யல்லாமல் பிரவிருத்தியில் ஒரு வாக்கியத்திற்கும் தாற்பரிய மில்லை என்று போதித்தார். பிரவிருத்தியைப் போதிக்கும் வாக்கியங்கட்கும் ஸ்வாபாவிகமாயும் நிஷித்தமாயு முள்ள பிரவிருத்தியினின்றும் நிவிர்த்திசெய்து விஹிதப் பிரவிருத்தியினுல் அந்தக்கரணம் சுத்தமாக அதினின்றும் நிவிர்த்தி யடைந்து ஞாநநிஷ்ட புருஷனுகுக என்று இவ்வாறு நிவிருத்தியில் தாற்பரியமாம். அர்த்த வாத வாக்கியங்கள் கர்ம பயனைப் போதிப்பன, குட ஜிஹ்வா நியாயத்தினுலாம். பலத்தில் அவற்றிற்குத் தாற்பரிய மில்லை யென்னும் அர்த்தத்தைச் சூத்திரத்தினுல் வியாஸர் போதிக்கின்றுர். சூத்திரங்களால் இந்த அர்த்தத்தைப் புருஷன் அறிந்து ஸகாம கர்மத்தில் பிரவிருத்திக்கின்ற தில்லை. எங்ஙனம், நூல் வலை புஷ்பங்களை முட்களினின்றும் தடுக்கின்றதோ, அங்ஙனமே, வியாஸ பகவானது சூத்திரம் ஸகாம கர்மத்தினின்றும் தடுப்பதால் வலை ரூபமாகக் கூறப்பட்டது.

**339.** அக்கிருத தேவனுடைய பிரஸ்நம்—நான் யார் ?
சம்சாரத்தின் கர்த்தா யாவன்? முக்திக்குக் காரணம் ஞானமா ?
அல்லது கர்மமா ? அல்லது உபாசனையா ? அல்லது இரண்டுமோ ?

பகவானே ! நான் யார் ? தேக ஸ்வரூபமா? அல்லது, தேகத்தினும் பிந்நமா ? நான் மனுஷியனா யிருக்கிறேன் ; எனக்குச் சரீரமிருக்கின்றது என்று இரண்டு பிரதீதி யுண்டாகுதலால் எனக்குச் சந்தேக மிருக்கின்றது. தேகத்தினும் பிந்ந மென்று தாங்கள் கூறுவீராயின், நான் கர்த்தா போக்தாவா? அல்லது, அக்கிரியனா? அக்கிரியனெனினும், நான் சர்வ சரீரங்களிலும் ஏகனா? அல்லது, அநேகனா ? என்பது முதற் பிரஸ்நத்தின் அபிப்பிராயமாம்.

இந்தச் சம்சாரத்தின் கர்த்தா யாவன் ? என்பதன் அபிப்பிராயம் இதுவாம்:—இச்சம்சாரத்திற்கு ஒரு கர்த்தா வுண்டா? அல்லது, தானாகவே யுண்டா யிருக்கின்றதா ? கர்த்தா விருப்பினும், கர்த்தா ஜீவனா ? அல்லது, ஈசுவரனா ? ஈசுவர னெனினும், அந்த ஈசுவரன் ஓரிடத்தி லிருக்கின்றனரா? அல்லது, வியாபகரா? வியாபகராயினும், வியாபகமான ஆகாசத்தினும் ஜீவன் பிந்நமா யிருப்பது போல அந்த ஈசுவரனினும் ஜீவன் பிந்நமா? அல்லது, அபிந்நமா? முக்திக்குக் காரணம் ஞானமா ? அல்லது, கர்மமா? அல்லது, உபாஸனையா ? அல்லது, இரண்டுமா ? இரண்டு மெனினும், ஞாந கர்மங்களா? அல்லது, ஞாந உபாஸனைகளா? அல்லது, கர்ம உபாஸனைகளா ?

‘ நான் யார் ’ என்பதன் உத்தரம்.

340. ஆத்மா சங்காதத்தின் சாக்ஷியாதல்.

ஸ்ரீ குருவானவர் முதலில் சிஷ்யன் கேட்ட பிரஸ்நத்திற்கு உத்தரங் கூறுகின்றார்:—“ நீ சச்சிதாநந்த சொரூபம் ” என்று கூறுவதனால் தேகத்திற்கு வே றெனப்பட்டது. ஏனெனின், தேகம் அசத் ரூபமாயும், ஜட ரூபமாயும் துக்க ரூபமாயு மிருக்கின்றது. (நீ) கர்த்தா போக்தாவு மன்று. ஏனெனின்,

எவனிடத்தில் துக்க மிருக்கின்றதோ, அவன் துக்க நிவிருத்தியின் பொருட்டும், சுகப் பிராப்தியின் பொருட்டும் கிரியைச் செய்கின்றான் ; அவன் கர்த்தா வெனப் படுகின்றான். உன்னிடத்

தில் துக்க மில்லாததினுல் துக்க நிவிருத்தியின்பொருட்டுக் கிரியைச் செய்கிறவ னல்லன். நீ ஆநந்த ஸ்வரூபமா யிருக்கின்ருய். ஆதலால், சுகப் பிராப்தியின் பொருட்டும் நீ கிரியையின் கர்த்தா வாகின்ற தில்லை. எவன் கர்த்தாவாகின்ருனே அவனே போக்தா வாகின்ருன். நீ கர்த்தா வன்று; ஆகையால், போக்தாவு மன்று. புண்ணிய பாவங்களை யுண்டுபண்ணும் கர்மத்தின் கர்த்தாவும், சுக துக்கங்களின் போக்தாவும் ஸ்தூல சூக்ஷ்ம சங்காதமாம்; நீ யன்று. நீ சங்காதத்திற்குச் சாக்ஷியா யிருக்கின்ருய்.

### 341. ஆத்மா சுக துக்காதி தர்மங்க ளின்றி வியாபகமாய் ஏகமா யிருக்கிற தெனல். சாங்கிய மதத்தையும் மூவகை நியாய மதங்களையும் கூறுதலும் கண்டித்தலும்.

இதனுலேயே, ஆத்மா ஏகமாம்; நாநா வன்று. ஆத்மா கர்த்தா போக்தாவாயின், அப்போது நாநாவாகும். ஏனெனின், ஒருவன் சுகியா யிருக்கின்ருன். ஒருவன் துக்கியா யிருக்கின்ருன். கர்த்தா போக்தாவாக ஒருவனையே அங்கீகரிக்கின், ஒருவனுக்குச் சுகம் அல்லது, துக்கம் உண்டாகின்றதினுல் எல்லோர்க்கும் சுகம் அல்லது, துக்கம் உண்டாதல் வேண்டும். ஆதலால், போக்தா நாநாவாம். ஆத்மா போக்தா வன்ரும்; ஆதலினுல் ஏகமாம்.

342. சாங்கிய மதத்தில் ஆத்மாவைக் கர்த்தா போக்தாவாக அங்கீகரிக்காது புருஷன் நாநா வென்று அங்கீகரிப்பது அத்தியந்தம் விருத்தமா யிருக்கின்றது. ஏனெனின், இது சாங்கிய சித்தாந்தமாம்:—

சத்துவ ரஜஸ் தமோ குணங்களின் சமாந அவஸ்தைக்குப் பிரதாந மென்று பெயர். அந்தப் பிரதாநம் பிரகிருதியா யிருக்கின்றது; விகிருதி யன்று. விகிருதி யென்பது காரியத்திற்காம்.

பிரகிருதி என்பது உபாதாந காரணத்திற்காம். அந்தப் பிரதாநம் மஹத் தத்துவத்தின் உபாதாந காரணமாம். ஆதலால், பிரகிருதியாம். அநாதியா யிருத்தலால் விகிருதி யன்ரும்.

மஹத் தத்துவம், அகங்காரம், பஞ்ச தந்மாத்திரைகள் என்னும் இவ் வேழும் பிரகிருதிகளும், விகிருதிகளுமாம்.

முன்னிற்பது பின்னிற்பதற்குப் பிரகிருதியாம். பின்னிற்பது முன்னிற்பதற்கு விகிருதியாம். தந்மாத்திரைகளும் பூதங்

களுக்குப் பிரகிருதிகளாம். இவ்வாற்ருல், ஏழும் பிரகிருதிகளும் விகிருதிகளுமாம்.

பஞ்ச பூதங்கள், தசேந்திரியங்கள், மநம் என்னும் இந்தப் பதினாறும் விகிருதிகளாம்; பிரகிருதிக ளன்ரும். புருஷன் பிரகிருதி விகிருதிக ளன்று. ஏனெனின், ஒன்று ஒரு பதார்த்தத்திற்குக் காரணமாயின் (அது) பிரகிருதியாகும். காரியமானுல் (அது) விகிருதியாகும். அந்தப் புருஷன் எதற்கும் காரணமாகாமையின் பிரகிருதி யன்று. காரியமாகாமையின் விகிருதியு மன்று. ஆதலால், புருஷன் அசங்கன். இவ்வாற்ருல், சாங்கிய மதத்தில் 25 தத்துவங்க ளிருக்கின்றன. தத்துவ மென்பது பதார்த்தத்திற்காம். சாங்கிய மதத்தில் ஈசுவரனது அங்கீகார மில்லை. சுதந்திரமான பிரகிருதி ஜகத்தின் காரணமாம். புருஷனுடைய போக மோக்ஷங்களின் பொருட்டுப் பிரகிருதியே பிரவிருத்திக்கின்றது; புருஷன் பிரவிருத்திக்கின்ற தில்லை. பிரகிருதியின் விஷயரூப பரிணுமத்தால் புருஷனுக்குப் போக முண்டாகின்றது. புத்தி வாயிலாக விவேகரூபப் பிரகிருதியின் பரிணுமத்தால் மோக்ஷ முண்டாகின்றது. புருஷன் அசங்கனு யிருத்தலால், அவனிடத்திற் போகமோக்ஷங்கள் பொருந்தாதாமாயினும், ஞாநம் சுகம் துக்கம் ராகம் துவேஷ முதலியன புத்தியின் பரிணுமங்களாம். அந்தப் புத்திக்கு ஆத்மாவோடு அவிவேக மிருக்கின்றது; விவேக மில்லை. ஆதலால், ஆத்மாவில் ஆரோபிக்கப்பட்ட பந்த மோக்ஷங்களுள; பரமார்த்தமாக வில்லை. ஆத்மாவில் அவிவேகத்தால் சித்தித்துள்ள போகங்களினுலேயே சாங்கிய மதத்தில் ஆத்மா போக்தாவெனப்படுகின்றது; பரமார்த்தமாக ஆத்மா போக்தா வன்று; புத்தியே போக்தாவாம். புத்தி ஆத்மாவினும் பிந்நமாம். இந்த ஞாநத்திற்கு விவேக மென்று பெயராம். அதன் அபாவத்திற்கு அவிவேக மென்று பெயராம். இவ்வாற்ருல், சாங்கிய மதத்தில், ஆத்மா அசங்கமா யிருக்கின்றது.

சுகாதிகள் புத்தியின் பரிணுமங்களா யிருத்தலால் புத்தியின் தர்மங்களாம்; ஆத்மா நாநாவாம்.

அவ்வார்த்தை அத்தியந்தம் விருத்தமாயிருக்கிறது. சுக துக்கங்கள் ஆத்மாவின் தர்மங்களாமாயின் அவை ஒவ்வொரு சரீரத்திலும் பேதப்படுவதால் ஆத்மாவிற்குப் பேத முண்டாம். அச்சுக துக்கங்கள் ஆத்மாவின் தர்மங்களாகாமல் புத்தியின் தர்

மங்களா யிருத்தலால் சுக துக்கங்களின் பேதத்தால் புத்தியின் பேதமே சித்திக்கின்றது ; ஆத்மாவின் பேதம் சித்திக்கின்ற தில்லை. எங்ஙனம் ஒரே வியாபக ஆகாசத்தில் நானா வுபாதிக ளின் தர்மங்கள், உபாதி-ஆகாசம் என்பவற்றின் அவிவேகத்தி னுல் தோற்றுகின்றனவோ, அங்ஙனமே ஒரே வியாபக ஆத்மா வில் நானா புத்திகளின் தர்மங்கள், அவிவேகத்தினுல் தோற்றுகின் றன என்னும் வார்த்தையினைச் சாங்கிய மதத்தில் அங்கீகரிப்பது உசிதமாம். ஆத்மாவை, அசங்கமாகக்கொண்டு நானாவாகக் கொள் ளுதல் நிஷ்பலமாம். சில ஆத்மாக்கள் முக்தர்களா யிருக்கின் ருர்கள். சிலருக்குப் பந்த மிருக்கின்றது. இவ்வாறு, பந்த மோக்ஷ ங்களின் பேதத்தினுல் ஆத்மாவின் பேதத்தை யங்கீகரிப்பதும் பொருந்தாது. ஏனெனின், பந்த மோக்ஷங்களை ஆத்மாவில் அங்கீ கரிக்கினே, பந்த மோக்ஷ பேதத்தால் ஆத்மாவின் பேதம் சித் திக்கின்றது. அப்பந்த மோக்ஷம் சாங்கிய மதத்தில் அசங்க ஆத்மாவில் அங்கீகரிக்கப்பட வில்லை.

பின்னரோ, புத்தியின் அவிவேகத்தால் பந்தமும், புத்தி யின் விவேகத்தால் பந்தத்தின் மோக்ஷமும் அங்கீகரிக்கப்பட் டிருக்கின்றன. எந்த வஸ்து அவிவேகத்தா லுண்டாகின்றதோ விவேகத்தால் நிவிருத்தியாகின்றதோ, அந்த வஸ்து ரஜ்ஜு சர்ப் பம்போல மித்தையாம். ஆத்மாவினிடத்திலும் புத்தியின் அவி வேகத்தால் பந்த மிருக்கின்றது. விவேகத்தால் (அது) நிவிருத்தி யாகின்றது. ஆதலால், பந்தம் மித்தையாம். எங்ஙனம் பந்தம் மித்தையோ, அங்ஙனமே ஆத்மாவின் மோக்ஷமும் மித்தையாம். எதில் பந்தம் சத்தியமா யிருக்கின்றதோ, அதற்கே மோக்ஷமும் சத்தியமாகும். ஆத்மாவில், பந்தம் மித்தையா யிருத்தலால் மோக்ஷமும் மித்தையேயாம். இவ்வாற்ருல், மித்தையான பந்த மோக்ஷங்கள் ஆகாசம் போல ஓர் ஆத்மாவினிடத்திலும் பொரு ந்துகின்றன. அவற்றின் பேதத்தால் ஆத்மாவின் பேதம் சித்திக் கின்ற தில்லை. ஆதலால், சாங்கிய மதத்தில் ஆத்மாவின் பேதம் அசங்கதமாம்.

343. அங்ஙனமே நியாய மதத்திலும் ஆத்மாவின் பேதம் அசங்கதமாம். ஏனெனின், இது நியாய சித்தாந்தமாம்:—சுகம், துக்கம், ஞானம், இச்சை, துவேஷம், பிரயத்நம், தர்மம், அதர் மம், ஞானத்தின் சம்ஸ்காரம், சங்கியை, பரிமாணம், வேற்றுமை,

சையோகம், விபாகம் என்னும் பதினுன்கு குணங்களும் ஜீவரூப ஆத்மாவி லிருக்கின்றன. சங்கியை, பரிமாணம், வேற்றுமை, சையோகம்,விபாகம், ஞாநம், இச்சை, பிரயத்நம் என்னும் இவ்வெண் குணங்களும் ஈசுவரனிடத்தி லிருக்கின்றன. இவ்வளவு பேத முளது:—ஈசுவரனுடைய ஞாநம், இச்சை, பிரயத்நம் என்பன நித்தியமாம். ஜீவனுடைய ஞாநாதிகள் மூன்றும் அநித்தியமாம். ஈசுவரன் வியாபகமாயும்,நித்தியமாயு மிருக்கின்ருன் ஜீவன் நாநாவாயும், சம்பூர்ண வியாபகமாயும், நித்தியமாயும் இருக்கின்ருன். ஜீவனுடைய ஞாநம் அநித்தியமாம். ஆதலால், ஞாநகுண மிருக்கும் காலத்தில் ஜீவன் சேதநமாயும், ஞாநகுணம் அழிந்த காலத்தில் ஜடமாயு மிருக்கின்ருன். ஜீவேசுவரர்கள் போல், ஆகாசம், காலம், திக்கு, மநம் என்பன நித்தியமாம்.

பிருதிவி, ஜலம், தேயு, வாயு என்பவற்றின் பரமாணுக்கள் நித்தியமா யிருக்கின்றன. ஜன்னலின் வழியாய் வரும் கிரணத்தில் காணப்படும் சூக்ஷ்மமான தூளியின் ஆறிலொரு பாகத்திற்குப் பரமாணு வென்று பெயர். அந்தப் பரமாணு ஆத்மாவைப் போல நித்தியமா யிருக்கின்றது. ஜாதி முதலிய வேறு சில பதார்த்தங்களும் நியாய மதத்தில் நித்தியமா யிருக்கின்றன. வேதத்திற்கு விருத்தமான சித்தாந்தங்களை வெகுவா யெழுதுவதால் ஜிஞ்ஞாசுவுக்கு உபயோக மில்லை யாகலின் எழுதவில்லை.

"நான் மனுஷ்யன் பிராஹ்மணன்" என்று தேகத்தில் ஆத்மப் பிராந்தி யுண்டாகின்றது. அதனுல், ராகத் துவேஷங்களுண்டாகின்றன. அவற்ருல், தர்மாதர்மங்களின் பொருட்டுப் பிரவிருத்தி யுண்டாகின்றது. அதனுல், சரீரத்தின் சம்பந்த வாயிலாகச் சுக துக்கங்க ளுண்டாகின்றன. இவ்வாற்ருல், நியாய மதத்தில் பிராந்தி ஞாநம் ஆத்மாவின் சமுசாரத்துக்கு ஹேதுவா யிருக்கின்றது.

அந்தப் பிராந்தி ஞாநம் தத்துவ ஞாநத்தினுல் நிவிருத்தியாகின்றது. சரீர முதலிய சகல பதார்த்தங்களினும் ஆத்மா பிந்நம் என்னும் நிச்சயத்திற்குத் தத்துவ ஞாந மென்று பெயராம். அந்தத் தத்துவ ஞாநத்தினுல் "நான் பிராஹ்மணன் மனுஷ்யன்" என்னும் பிராந்தி நிவிருத்தியாகின்றது. பிராந்தி நாசத்தினுல்

ராகத் துவேஷாதிகளின் அபாவமுண்டாகின்றது. அவற்றின் அபாவத்தினுல் தர்மாதர்மங்களின் நிமித்தமான பிரவிர்த்தியின் அபாவமுண்டாகின்றது. பிரவிருத்தியின் அபாவத்தால் சரீர சம் பந்த ரூப ஜங்மத்தின் அபாவ முண்டாகின்றது. பிராரப்தம் போ கத்தினுல் நாச மடைகின்றது. சரீர சம்பந்தத்தின் அபாவத்தால் 21 துக்கங்களும் நாச மடைகின்றன. அந்தத் துக்கநாச ரூபமே நியாய மதத்தில் மோக்ஷமாம். ஒரு சரீரம், சுரோத்திரம், துவ க்கு, நேத்திரம், ரஸனை, கிராணம், மநம் என்னும் ஆறு இந்திரி யங்களும், அவற்றின் விஷயங்களும், ஆறு இந்திரியங்களின் ஞாநமும், சுக துக்கங்களுமாகிய இவை இருபத்தொரு துக்கங்க ளாம். சரீராதிகளும் துக்கத்தை யுண்டுபண்ணுவனவாகலின், துக்க மெனப்படுகின்றன. சுவர்க்காதிகளின் சுகமும் நாசமாகு மென்னும் பயத்தினுல் துக்கத்திற்கு ஹேதுவாம்; ஆதலால், துக்க மெனப்படுகின்றது. நியாய மதத்தில் சுரோத்திரமும், மநமும் நித்தியமாம்; அவற்றிற்கு நாசம் பொருந்தாதாமாயினும், எந்த ரூபங்களால் சுரோத்திரமும், மநமும் துக்கத்திற்கு ஹேதுக்க ளாகின்றனவோ அந்த ரூபங்கள் நாசமாகின்றன.

பதார்த்த ஞாநத்தை உண்டாக்குவதனுல் (அவை) துக்கத் திற் ஹேதுக்களாகின்றன. அந்தப் பதார்த்தங்களின் ஞாநத்தை மோக்ஷ காலத்தில் சுரோத்திரமும், மநமும் உண்டாக்குகின்ற தில்லை. ஏனெனின், கர்ண கோளகத்திலிருக்கும் ஆகாசம் சுரோத் திர மெனப்படும். அக்கர்ண கோளகம் மோக்ஷ காலத்தில் இருக் கின்ற தில்லை. ஆதலால் ஆகாசரூப சுரோத்திரேந்திரிய மிருப்பி னும் கோளகமின்மையினுல் ஞாந முண்டாகின்ற தில்லை. இவ்வாற் ருல், ஞாநத்தை யுண்டுபண்ணும் சுரோத்திரேந்திரியத்தின் ஸ்வ ரூபமே துக்கமாம்; அதற்கே நாச முண்டாகின்றது.

ஆத்மாவோடு மநத்தின் சம்யோகத்தினுல், ஞாந முண்டா கின்றது. அந்த மநத்தின் சையோகம் நியாய சித்தாந்தத்தில், ஒன்றன் கிரியையா லாவது, இரண்டன் கிரியைகளா லாவது உண் டாகின்றது. எங்ஙனம் காக்கைக்கு விருக்ஷத்தோ டுண்டாம் சை யோகம் காக்கை யொன்றன் கிரியையா லாகின்றது; இரண்டு ஆட் டுக் கடாக்களின் சையோகம் இரண்டன் கிரியைகளாலு முண்டா கின்றதோ, அங்ஙனமே வியாபக ஆத்மாவிலோ கிரியை ஒருகாலு முண்டாகின்ற தில்லை. மோக்ஷ காலத்தில் மநதிலும் கிரியை

யுண்டாகின்ற தில்லை. ஆதலால், சையோக முடைய மநத்திற்கே மோக்ஷ காலத்தில் அபாவ முண்டாகின்றது.

344. ஓர் ஏகதேசி துவக்கோடு மநது சையோகமாதலை ஞாநத்திற்கு ஏது வென்று கூறுகின்றார்; ஆத்மாவின் சையோகத் தினைக் கூறுவ தில்லை. சுழுத்தியில் புரீததி என்னும் நாடியில் மநம் பிரவேசிக்கின்றது. (அப்போது) துவக்கோடு மநத்திற் குச் சையோக மிருப்ப தில்லை. ஆதலால், சுழுத்தியில் ஞாந முண் டாகின்ற தில்லை. அவர்கள் மதத்தில் துவக்கோடு சையோக முடைய மநமே ஞாநவாயிலாகத் துக்கத்திற்கு ஹேதுவாயிருத் தலால் துக்கமாம்; கேவல மநம் துக்க மன்று. மோக்ஷத்தில் துவக்கு நாசமடைவதால் அதனோடு சையோகமுண்டாகின்ற தில்லை; ஆதலால் ஞாந முண்டாகின்ற தில்லை. மோக்ஷ காலத்தில் மநம் இருக்கினும் துக்கத்திற்கு ஹேதுவாய ஞாநத்தினை யுண்டு பண்ணும் துவக்குடன் சையோகமுடைய மநத்தின் சையோக நாசத்தால் நாச முண்டாகின்றது.

இவ்வாற்றால், மோக்ஷ காலத்தில் பரமாத்மாவிற்குப் பிந்ந மாகவே துக்க மின்றியதாய் வியாபக ஆத்மா ஜடரூபமாக நிலைத் திருக்கின்றது. ஏனெனின், ஞாந குணத்தினால் ஆத்மா பிரகாசிக் கின்றது; அந்த ஜீவனுடைய ஞாந மியாவும் இந்திரிய ஜந்நியமாக வே இருக்கின்றது; நித்திய மன்று. அந்த இந்திரிய ஜந்நிய ஞாநம் மோக்ஷ காலத்தில் நாச மடைகின்றது. ஆதலால், பிரகாச மின்றி ஜடரூபமாய் ஆத்மா மோக்ஷ காலத்தில் நிலைத்திருக்கின்றது. இது நியாய சித்தாந்தமாம்.

345. நியாய மதத்தில் முற்புகன்ற பிரகாரமாக சுக துக்கங் களும் பந்த மோக்ஷங்களும் ஆத்மாவிற் குண்டாகின்றன. ஆத லால், ஆத்மா நாநாவும் சம்பூர்ண வியாபகமுமா யிருக்கின்றது. சகல அற்ப பதார்த்தங்களோடும் உண்டாகும் சையோகமே நியாய மதத்தில் வியாபகத்தின் லக்ஷணமாம்; ஸஜாதீய விஜாதீய ஸ்வகத பேதங்களின் அபாவம் வியாபகத்தின் லக்ஷண மன்றாம். ஏனெனின் நியாய மதத்தில் ஆத்மா நிரவயவமாம். ஆதலால், ஸ்வகத பேதம் ஆத்மாவினிடத்தில் அபாவமாயினும், ஸஜாதீய விஜாதீய பேதங்களி னபாவ மில்லை. ஆனால் ஸஜாதீயமான இரண் டாவது ஆத்மாவின் பேதம் ஆத்மாவில் இருக்கின்றது. விஜாதீய மான கடாதிகளின் பேதமும் ஆத்மாவி லிருக்கின்றது.

ஆதலால், ஸஜாதீய விஜாதீய ஸ்வகத பேதங்களின் அபாவம் வியாபகத்தின் லக்ஷண மன்றும். ஆனால், சகல அற்ப பதார்த்தங்களோ டுண்டாம் சையோகமே வியாபகத்தின் லக்ஷணமாம்.

இதிலொருவன், "நியாய மதத்தில் ஆத்மாவைப் போல ஆகாசமும், காலமும், திக்கும் வியாபகமா யிருக்கின்றன. பரமாணு சூக்ஷ்மமாயும் நிரவயவமாயும் இருக்கின்றது. அதனோடு சர்வ வியாபகபதார்த்தங்களுக்கும் சம்யோகம் பொருந்தாது. ஏனெனின், பரமாணு ஸாவயவமாயின், சில இடத்தில் ஆத்மாவின் சம்யோக முண்டாம்;சில விடத்தில் அந்நிய வியாபக பதார்த்தங்களின் சம்யோக முண்டாம். அந்தப் பரமாணு ஸாவயவ மன்று; பின்னரோ, நிரவயவமாம் ; அதிசூக்ஷ்மமுமாம். அதனோடு ஒரே இடத்தில் சர்வ வியாபக பதார்த்தங்கட்கும் சம்யோக முண்டாகு மெனல் பொருந்தாது. ஏனெனின், ஒன்றன் சம்யோகத்தினால் இடம் மறைபட்டிருக்கின்றது. அந்த விடத்தில் அந்நிய பதார்த்தத்தின் சம்யோகம் பொருந்துகின்ற தில்லை. ஆகையால் நாநா பதார்த்தங்கட்கு வியாபகத்தன்மை பொருந்தாது. யாதேனும் ஒரு பதார்த்தமே வியாபகமாதல் பொருந்துகின்றது" என்று சங்கை செய்யின்,

அச்சங்கை பொருந்தாது. ஏனெனின், ஸாவயவ வஸ்துவின் சம்யோகம் எதுவோ அது அந்நிய வஸ்துவின் சம்யோகத்திற்கு விரோதியாம். எந்தப் பிருதிவி தேசத்தில் அஸ்தத்தின் சம்யோக முளதாகின்றதோ, அந்தத் தேசத்தில் பாதத்தின் சம்யோக முண்டாகின்ற தில்லை. நிரவயவ வஸ்துவின் சம்யோகம் ஸ்தானத்தினை மறைக்கின்ற தில்லை. ஆதலால், அந்நிய வஸ்துவின் சம்யோகத்திற்கு விரோத மில்லை. இவ்வார்த்தை அநுபவ சித்தமாம். கடத்தின் எந்தத் தேசத்தில் ஆகாசத்திற்குச் சம்யோக மிருக்கின்றதோ, அந்த இடத்திலேயே கால திக்குக்களின் சம்யோகமுமிருக்கின்றது.யாதேனுமொரு கடத்தின் தேசம் ஆகாச கால திக்குக்களினின்றும் புறம்பா யிருக்குமாயின், அந்தத் தேசத்தில் ஆகாச கால திக்குக்களின் சம்யோக முண்டாவ தில்லை. வெளியிலோ அவ்வாறு ஒரு தேசமு மில்லை. சகல பதார்த்தங்களின் சர்வ தேசங்களும், ஆகாச கால திக்குக்களினிடத்தே இருக்கின்றன. ஆதலால், சர்வ பதார்த்தங்களின் சர்வ தேசத்திலும், ஆகாச கால திக்குக்களின் சம்யோக மிருக்கின்றது. இவ்

வாறு பரமாணுவினும் ஒரே தேசத்தில் நாநா நிரவயவ விபு பதார்த்தங்கட்குச் சம்யோகம் பொருந்துகின்றது; ஒரு தோஷமு மில்லை. ஆதலால், ஆத்மா நாநாவும், சம்பூர்ண வியாபகமுமா யிருக்கின்றது.

346. எல்லாவற்றிற்கும் எல்லாப் பதார்த்தங்களோடும் சம்யோகம் இருக்கின்றதென்பது நியாய சித்தாந்தமாம். அது நலமுடையதன்று. ஏனெனின், வியாபகமான ஆத்மா நாநா வென்று அங்கீகரிக்கின், எல்லாச் சரீரங்களினும் எல்லா ஆத்மாக்களின் சம்பந்தத்தையு மங்கீகரித்தல் வேண்டும். அதனால், இன்ன சரீரம் இன்ன ஆத்மாவி னுடையதென்னும் நிச்சய முண்டாகாது. பின்னரோ, ஒவ்வொரு ஆத்மாவிற்கும் எல்லாச் சரீரங்களு மிருத்தல் வேண்டும்.

எந்த ஆத்மாவின் கருமத்தினுல் எந்தச் சரீரமுண்டாயிற்றோ அந்த ஆத்மாவிற்கு அது சரீரமாமென்று ஒருவன் கூறின், அதுவும்பொருந்தாது. ஏனெனின், எந்தச் சரீரத்தாற் கர்மம் செய்யப்பட்டதோ அந்தக் கருமத்தைச் செய்தவனுடைய முன் சரீரத்தினும் சகல ஆத்மாக்களுக்கும் சம்பந்த மிருந்தது. ஆதலால், கர்மமும் சர்வ ஆத்மாக்களினதே யாகும்; ஓராத்மாவின தாகாது. எந்த ஆத்மாவிற்குச் சரீரம் மநதோடு கூடி யிருக்கிறதோ, அந்த ஆத்மாவிற்கு அது சரீரமாம் என்று கூறின், அதுவும் பொருந்தாது. ஏனெனின், சரீரம் போல் மநதுடனும் சகல ஆத்மாக்களுக்கும் சம்பந்த மிருக்கின்றது. அதன்கண் இன்ன மநது இன்ன ஆத்மாவின தென்னும் நிச்சய முண்டாகாது. பின்னரோ, எல்லா ஆத்மாக்கட்கும் எல்லா மநமு மிருத்தல் வேண்டும். அங்ஙனமே, எல்லா ஆத்மாக்களுக்கும் எல்லா இந்திரியமுமே யிருத்தல் வேண்டும். வெளிப் பதார்த்தங்களில் "இது என்னுடையது இது வேறொருவனது" என்னும் வியாவகாரமும் சரீரத்தை நிமித்தமாகவுடையதாம். எல்லா ஆத்மாக்கட்கும் எல்லாச் சரீரமு மாதலால், வெளிப் பதார்த்தங்க ளியாவும் எல்லா ஆத்மாக்களுடைய தாதல் வேண்டும்.

அன்றியும், எந்த ஆத்மாவிற்கு எந்தச் சரீரத்தில் 'நான்' என்னுடையது, என்னும் புத்தி யிருக்கின்றதோ, அந்தச் சரீரமே அந்த ஆத்மாவினதாம். யா னென்னும் புத்தியும் என்னுடைய தென்னும் புத்தியும் ஒன்றும்; ஆதலால், எல்லா ஆத்மாவினு

மிராது. ஆனல், ஒரு தர்மம் ஒரு தருமியின்கண்ணேயே யிருக்கும். ஆதலால், ஒரே ஆத்மாவின் சரீரமாம். எந்த ஆத்மாவிற்கு எந்தச் சரீர மிருக்கின்றதோ அந்தச் சரீரத்துடன் சம்பந்தப்பட்ட மநதும், இந்திரியமும், வெளிப் பதார்த்தங்களும் அந்த ஆத்மாவினுடையனவாம். ஆதலால், வியாபகமான நாநா ஆத்மாக்களை அங்கீகரித்தலினும் தோஷ மில்லை யென்று கூறின்,

அவ் வார்த்தையும் பொருந்தாது. ஏனெனின், நான் என்னும் புத்தி ஒரு தேகத்தில் ஒரே ஆத்மாவிற் கிருப்பினும், அது நியாய மதத்திற் பொருந்துவ தில்லை. எல்லா ஆத்மாக்கட்கும் ஒரு சரீரத்தில் நான் என்னும் புத்தி யுண்டாதல் வேண்டும். ஏனெனின், நியாய மதத்தில் புத்தி யென்பது ஞாநத்திற்காம். அந்த ஞாநம் ஆத்ம மநங்களின் சம்யோகத்தின லுண்டாகின்றது. அந்த மநதோ டுண்டாம் சம்யோகம் எல்லா ஆத்மாக்களுக்கும் இருக்கின்றது. ஆதலால், மநதின் சம்யோகத்தினல் எங்ஙனம் ஒரு சரீரத்தில் ஒரு ஆத்மாவிற்கு நான் என்னும் புத்தி யுண்டாகின்றதோ, அங்ஙனமே ஒரு சரீரத்தில் எல்லா ஆத்மாக்களுக்கும் நா னென்னும் புத்தி யுண்டாதல் வேண்டும்.

மநதின் சம்யோகம் எல்லா ஆத்மாக்களோடு மிருப்பினும், எந்த ஆத்மாவில் ஞாநத்தை உண்டு பண்ணும் அதிருஷ்ட மிருக்கின்றதோ, அந்த ஆத்மாவிற்கே நா னென்னும் புத்தி யுண்டாகின்றது என்று கூறினும், எல்லாருக்குமே ஞாந முண்டாதல் வேண்டும். ஏனெனின், வியாபகமான நாநா ஆத்மாவினை யங்கீகாரஞ் செய்யினே, ஒரு சரீரத்தின் சுபாசுபக் கிரியைகளால் சரீத்தி விருக்கும் எல்லா ஆத்மாக்கட்குமே, அதிருஷ்டம் உண்டாதல் வேண்டும் என்னும் வார்த்தையினை முற்கூறி யுள்ளேம், ஆதலால், வியாபகமான நாநா ஆத்மாவை அங்கீகரிக்கினே, ஒரு தேகத்தில் எல்லா ஆத்மாக்களுக்கும் சுக துக்கங்களின் போகமுண்டாதல் வேண்டும்; ஆதலால், ஆத்மா வியாபகமும், நாநாவும், கர்த்தா போக்தாவுமாம் என்னும் நியாய சித்தாந்தம் நல முடையதன்றும்.

347. நமது சித்தாந்தத்திலோ, கர்த்தா போக்தா அந்தக்கரணமாம். அந்த அந்தக்கரணம் நாநாவாம்; வியாபகமும், அணுவு மன்றும். பின்னரோ, அதன் பரிமாணம் சரீரத்திற்குச் சமாநமாம். தீபப் பிரகாசம் போல் பெரிய சரீரத்தினை யடையும்

போது அந்தக்கரணம் விகாசமாகின்றது; சிறிய சரீரத்தில் சங்கோசமாகின்றது. இவ்வார்த்தை சித்தாந்த பிந்துவின் வியாக்கியானத்தில் மதுசூதந ஸ்வாமிகளால் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது. எந்த அந்தக்கரணத்திற்கு எந்தச் சரீரத்தோடு சம்பந்த மிருக்கின்றதோ, அந்த அந்தக்கரணத்திற்கு அந்தச் சரீரத்தாற் போக முண்டாகின்றது.

அந்தக்கரணத்தை வியாபகமாக அங்கீகரிக்கினே, எல்லாச் சரீரங்களும் எல்லோருடையதாம்; போகமும் எல்லோருக்கு முண்டாம். அந்த அந்தக்கரணம் வியாபக மன்றாதலின் தோஷ மில்லை. அந்தக்கரணத்தை யணு வென அங்கீகரிக்கினே, சரீரத்தின் ஓரிடத்தில் அஃதிருத்தல் வேண்டுமென்று அங்கீகரிக்க நேரும். அவ்வார்த்தை பொருந்தாது. ஏனெனின், ஒரே காலத்திலேயே பாதத்திலும் சிரசிலும் முள் குத்தினுல் இரண் டிடங்களிலும் ஒரே காலத்தில் வேதனை யுண்டாகின்றது. அஃது உண்டாக வேண்டுவ தில்லை. ஏனெனின், அந்தக்கரணம் அணுவாயினே ஒரு ஸ்தாநத்திலேயே ஒரு காலத்தி லிருக்கும். அதனுல் எவ்விடத்தில் அந்தக்கரண மிருக்கின்றதோ, அவ்விடத்திலேயே வேதனை யுண்டாதல் வேண்டும்; இரண் டிடங்களிலு முண்டாக வேண்டுவ தில்லை.

ஆதலால், அந்தக்கரணம் அணுவும், வியாபகமு மன்று. பின்னரோ, சரீரத்திற்குச் சமாநமா யிருக்கின்றது. அதனுல், ஒரு தோஷமு மில்லை. அணுவிற்கும், வியாபகத்திற்கும் விலக்ஷணமா யிருப்பது எதுவோ அதனையே மத்தியம பரிமாண மென்பர்.

348. நியாய மதத்தில் ஒரு நவீனர் இவ்வாறு அங்கீகரித்திருக்கின்றனர்:—ஆத்மா நாநாவாம்; கர்த்தா போக்தாவாம்; வியாபக மன்று. ஆதலால், போகத்தின் சங்கர மில்லை; அணுவு மன்று. ஆதலால், இரண் டிடங்களிலும் (முள் குத்தின) வேதனை பொருந்தா தென்பது மில்லை. ஆனுல், எங்ஙனம் வேதாந்த மதத்தில் அந்தக்கரணம் மத்தியம பரிமாணமோ, அங்ஙனமே ஆத்மாவும் மத்தியம பரிமாணமாம். அதனிடத்தில் பதினுன்கு குணங்களிருக்கின்றன.

349. அதுவும் நல முடைய தன்று. ஏனெனின், ஆத்மாவை சங்கோச விகாச முடையதாக அங்கீகாரஞ் செய்யினே, தீபப் பிரகாசம் போல் ஆத்மா விகாரியும் நாச முடையது மாகும். அத

ளுல், மோக்ஷத்தைப் பிரதிபாதிக்கும் சாஸ்திரமும், சாதநங்களும் நிஷ்பலமாம். மத்தியம பரிமாணத்தை யங்கீகரித்துச் சங்கோச விகாசங்களை யங்கீகரிக்காவிடின், எந்தச் சரீரத்திற்குச் சமாந மாக ஆத்மாவினை அங்கீகரிப்பதென்னும் நிச்சய முண்டாகின்ற தில்லை. மனுஷிய சரீரத்திற்குச் சமாநமென அங்கீகரிக்கினே, எப்போது ஆத்மா யானையின் சரீரத்தை அடைகின்றதோ, அப் போது தேகமுற்றிலும் ஆத்மா இல்லாமற் போகும். அதனால், எந்த இடத்தில் யானையின் ஆத்மா வில்லையோ, அந்த விடத்தில் வேதனையு முண்டாக வேண்டுவ தில்லை. யானையின் சரீரத்திற் குச் சமாநமாக ஆத்மாவை யங்கீகரிக்கின், அதனினும் வேறு சரீரங்கள் பெரிதா யிருக்கின்றன; அவற்றின் ஏகதேசத்தில் வேதனை யுண்டாக வேண்டுவ தில்லை. எல்லாவற்றினும் பெரிய சரீரம் எதற்கு மில்லை; எதற்குச் சமாநமாக ஆத்மாவினை அங்கீ காரஞ் செய்வது? எல்லாவற்றினும் பெரிது விராட்டின் சரீர மாம்; அதற்குச் சமாநமாக ஆத்மாவினை யங்கீகரிக்கினே, விராட்டின் சரீரத்தினுள் சர்வ சரீரங்களும் அடங்கி யிருத்த லால், எல்லா ஆத்மாக்கட்கும் எல்லாச் சரீரத்தோடும் சம்பந்த முண்டாம். அதன்கண் முன்னர்த் தோஷம் கூறி யிருக்கின் ளேம்.

மத்தியம பரிமாணமா யிருக்கும் வஸ்து சரீரம் போல் அநித் தியமாகும் என்னும் நியம மிருக்கின்றது. ஆதலால், ஆத்மாவும் (மத்தியம பரிமாணமா யிருத்தலால்) அநித்திய மாகும். நமது மதத்தில் அந்தக்கரணமோ ஞாநத்தினல் நாச மடைகின்றது; ஆதலால், அநித்தியமாம். (அந்தக்கரணத்திற்கும்) மத்தியம பரி மாணம் அங்கீகரிப்பதனல் தோஷ மில்லை. இவ்வாற்ருல், நவீந தார்க்கிகாது மதமும் நலமுடைய தன்ரும்.

350. ஆத்மா நாநாவும் அணுவுமா மென்று சிலர் கூறுகின் றனர். அவ்வார்த்தையும் பொருந்தாது. ஏனெனின், ஆத்மா வைக் கர்த்தா போக்தா வென அங்கீகாரஞ் செய்யினே, அந்தக் கரணத்திற்கு அணு பக்ஷத்தில் கூறிய தோஷ முண்டாகும். (ஆத் மாவைக்) கர்த்தா போக்தா வென்று அங்கீகரிக்காவிடின், நாநா ஆத்மாவினைக் கொள்ளுதல் நிஷ்பலமாகும். வியாபகமான ஓராத் மாவையே எல்லாச் சரீரங்களிலும் (இருப்பதாக) அங்கீகாரஞ்செய் தல் யோக்யமாம். கர்த்தா போக்தா வென்று அங்கீகரிக்காவிடின், தனது சித்தாந்தத்திற்கும் தியாக முண்டாம். ஏனெனின், ஞாநம்,

சுகம், துக்கம், தர்ம முதலியன ஆத்மாவின் தர்மங்க ளென்பது அணு வாதியின் சித்தாந்தமாம். ஆதலால், ஆத்மாவை யணு வென்று அங்கிகாரஞ் செய்யின், சரீரத்தின் எந்த விடத்தில் ஆத்மா இல்லையோ அந்த இடம் மிருத (பிண) சமானமாம். அவ் விடத்தில் வேதனை முதலியன உண்டாக வேண்டுவ தில்லை.

351. ஆத்மாவோ சரீரத்தினது ஏகதேசத்தி லிருக்கிறது. ஆனால், கஸ்தூரியின் கந்தம் போன்று அதன் ஞானம் சரீர முற்றி லும் வியாபித் திருக்கின்றது. அதனால், சரீர முற்றிலு(முண் டாம்) அநுகூலப் பிரதிகூலங்களின் சம்பந்தத்தினை அநுபவஞ் செய்கின்றது என்று கூறின், அதுவும் பொருந்தாது. ஏனெ னின், எவ்வளவு தேசத்தில் குண முடைய வஸ்து இருக்குமோ அதனினும் வெளியில் குண மிராது; பின்னரோ, குணியினிடத் திலேயே குண மிருக்கும் என்பது நியாயமாம். எங்ஙனம் (கடா திகளின்) ரூபமானது கடாதிகளினும் வெளியி லிருப்ப தில்லை யோ, அங்ஙனமே, ஆத்மாவிற்கு வெளியில் ஞானமும் பொருந்துவ தில்லை. கஸ்தூரியின் சூக்ஷ்ம பாகம் எவ்வளவு தேசத்தில் வியா பித் திருக்கின்றதோ அவ்வளவு தேசத்திலேயே கந்தம் வியாபிக் கின்றது. ஆதலால், கஸ்தூரியின் திருஷ்டாந்தமும் பொருந்துவ தில்லை. ஆதலால், " ஆத்மா அணு " என்னும் பக்ஷமும் பொருந் தாது.

சிலவிடத்துச் சுருதிகளில் ஆத்மா அத்தியந்தம் அணுவினும் அணு வென்று கூறப்பட் டிருக்கின்றது. அது அறிதற் கரியதா யிருத்தலால் கூறியதாம். எங்ஙனம் அத்தியந்தம் அணுவா யிருக்கும் வஸ்துவின் ஞானம் மந்த திருஷ்டி யுடையவர்களுக்கு உண்டாவ தில்லையோ, அங்ஙனமே பகிர்முக புருஷர்களுக்கு ஆத் மாவின் ஞானமு முண்டாகின்ற தில்லை. ஆதலால், அணுவிற்குச் சமானமா மென்பதே சுருதியின் அபிப்பிராயமாம்; 'ஆத்மா அணு' என்னும் அபிப்பிராய மில்லை. ஏனெனின், அநேக இடங் களில் தானே (ஆத்மாவே) வியாபக ரூப மென்று வேதம் பிரதி பாதித்திருக்கின்றது. ஆதலால், அணு வன்றாம். இவ்வாற்றால், ஆத்மா வியாபகமாயும், மத்தியம பரிமாணமாயும், அணுவாயும், நானா வாயு மிருக்கிற தென்று கூறுதல் பொருந்தாது.

352. பரிசேஷத்தால் ஆத்மா ஏகமாயும், வியாபகமாயு மிருக்கின்றது. அதனிடத்தில் தர்மாதர்மங்கள் சுக துக்கங்கள்

பந்த மோக்ஷங்கள் என்பவற்றை யங்கீகாரஞ் செய்யினே, சிலருக்குச் சுகம், சிலருக்குத் துக்கம், சிலருக்குப் பந்தம், சிலருக்கு மோக்ஷம் என்னும் வியவகார முண்டாகாது. ஆதலால், தர்மாதிகள் புத்தியின் தர்மங்களாம். புத்தி ஜடமா யிருத்தலால் அதனிடத்திலும் தர்ம சுகாதிகள் பொருந்தா வாயினும், ஆத்மாவின் தர்மங்களாகா என்னும் அபிப்பிராயத்தால் புத்தியின் தர்மமெனப் படுகின்றன ; "புத்தியின் தர்மமா" மென்பதில் அபிப்பிராய மில்லை. புத்தியும் சுகாதிகளும் ஆத்மாவினிடத்தில் அத்தியஸ்தங்களா யிருக்கின்றன. எந்த வஸ்து எதில் அத்தியஸ்தமா யிருக்கிறதோ, அந்த வஸ்து அதில் பரமார்த்தமா யிருப்ப தில்லை. எங்ஙனம் ரஜ்ஜுவில் அத்தியஸ்தமான சர்ப்பம் பரமார்த்தமாக ரஜ்ஜுவில் இல்லையோ, அங்ஙனமே புத்தியும் சுகாதிகளும் ஆத்மாவினிடத்தி லில்லை. அத்தியஸ்த வஸ்துவும் எதற்கும் ஆசிரயமாகின்ற தில்லை. ஆதலால், புத்தியும் சுகாதிகளின் ஆசிரயமா யிருப்ப தில்லை. ஆனால், அஞ்ஞானமோ சுத்த சேதநத்தில் அத்தியஸ்தமா யிருக்கின்றது. அந்தக்கரணம் அஞ்ஞான உபகித (சேதந)த்தில் அத்தியஸ்தமா யிருக்கின்றது. அந்தக்கரண உபகித (சேதந) த்தில் தர்மாதர்மங்கள், சுக துக்கங்கள், பந்த மோக்ஷங்கள் அத்தியஸ்தமா யிருக்கின்றன.

இவ்வாற்றால், ஆத்மாவி லுள்ள தர்மாதிகளின் அதிஷ்டானத் தன்மைக்கு அந்தக்கரணம் உபாதியா யிருக்கின்றது ; ஆதலால், அந்தக்கரணத்தின் தர்ம மெனப் படுகின்றன.

353. அந்தக்கரண விசிஷ்டத்தில் தர்மாதிகள் அத்தியஸ்தமெனின், (அது) பொருந்தாது. ஏனெனின், விசேஷணத்தோடு கூடியதனை விசிஷ்ட மென்பர். தர்மாதிகளின் அத்தியாஸத்திற்கு அதிஷ்டானமான ஆத்மாவிற்கு அந்தக்கரணத்தை விசேஷணமாக அங்கீகாரஞ் செய்யினே, அந்தக்கரணமும் தர்மம் சுக முதலியவற்றிற்கு அதிஷ்டானமாகும். அவ்வார்த்தை பொருந்தாது. ஏனெனின், மித்தியா வஸ்து அதிஷ்டானமாவ தில்லை. ஆதலால், ஆத்மாவில் தர்மாதிகளின் அத்தியாஸத்திற்கு அந்தக்கரணம் விசேஷண மன்றாம் ; ஆனால் உபாதியாம். உபாதியின் சுபாவம் இதுவாம்:—தான் தடஸ்தமாய், எவ்வளவு தேசத்தில் தா னிருக்கின்றதோ, அவ்வளவு தேசத்தி லிருக்கும் வஸ்துவை யறிவிக்கும். விசேஷணத்தின் சுபாவம் இதுவாம்:—எவ்வளவு தேசத்

தில் தா னிருக்கின்றதோ, அவ்வளவு தேசத்தி லிருக்கும் வஸ்து வைத் தன்னோடு அறிவிக்கும். விசேஷண முடையதனை விசிஷ்ட மென்பர். உபாதி யுடையதனை உபஹித மென்பர்.

இவ்வாற்றால், அந்தக்கரண விசிஷ்டத்தில் தர்மாதிகள் அத்தியஸ்த மெனின், எவ்வளவு தேசத்தில் அந்தக்கரண மிருக்கின்றதோ, அவ்வளவு தேசத்தி லிருக்கும் சேதந பாகம், அந்தக்கரணம் என்னும் இரண்டற்கும் அதிஷ்டானத் தன்மை யுண்டாகின்றது. அந்த அந்தக்கரணம் தானும் அத்தியஸ்தமா யிருத்தலால் அதிஷ்டாநமாதல் பொருந்தாது. இவ்வபிப்பிராயத்தினால், அந்தக்கரண வுபகித் சேதநத்தில் தர்மாதிகள் அத்தியஸ்த மெனப்பட்டன. ஆதலால், "எவ்வளவு தேசத்தில் அந்தக்கரண மிருக்கிறதோ அவ்வளவு தேசத்தி லிருக்கும் சேதநபாக மாத்திரத்தில் அதிஷ்டாநத் தன்மை யிருக்கின்றது; அந்தக்கரணத்தி லில்லை" என்னும் வார்த்தை பொருந்துகின்றது.

354. அங்ஙனமே, அந்தக்கரணமும் அஞ்ஞாந வுபகித (சேதந)த்தில் அத்தியஸ்தமா யிருக்கிறது; அஞ்ஞாந விசிஷ்டத்தி லில்லை. இவ்வாற்றால், அத்தியஸ்தமான தர்மாதிகளுக்கு அதிஷ்டாநம் ஆத்மாவாம். அத்தியாஸத்தின் அதிஷ்டாநத் தன்மைக்கு அந்தக்கரண முபாதியா யிருக்கின்றது. ஆதலால், சுக துக்காதிகள் புத்தியின் தர்மங்க ளெனப்பட்டன. அவிவேகத்தினால் அந்தக்கரண ஆத்மா என்னு மிரண்டிலும் (அவை) பிரதீதியாகின்றன; அதனால், அந்தக்கரண விசிஷ்டப் பிரமாதாவின் தர்மங்க ளெனப்படுகின்றன. தர்மாதிகள் அந்தக்கரணத்தின் தர்மங்களாம்; அல்லது, அந்தக்கரண விசிஷ்டப் பிரமாதாவின் தர்மங்களாம்; அல்லது, ரஜ்ஜுசர்ப்பம் போலவும், சொப்பந பதார்த்தம் போலவும், கந்தர்வ நகரம் போலவும், ஆகாய நீலத் தன்மை போலவும் எதன் தர்மமு மாகா. எவ்வாற்றானும், ஆத்மாவின் தர்மங்க ளன்றாம். ஆத்மாவினிடத்தில் அத்தியஸ்த மாயினும், எந்த வஸ்து எதனிடத்தில் அத்தியஸ்தமா யிருக்கின்றதோ, அது அதனிடத்திலேயே பரமார்த்தமாக இருப்ப தில்லை. அத்தியஸ்தம் என்பது கற்பிதத்திற்காம். ஆதலால், ராகத்துவேஷங்கள், தர்மாதர்மங்கள், சுக துக்கங்கள், பந்த மோக்ஷங்கள் என்னு மிவை யின்றிய ஏகமும், வியாபகமுமாய் ஆத்மா இருக்கின்றது.

## 355. ஆத்மா சத் தெனல்.

ஆத்மா சத்தாம். எது வஸ்து ஞானத்தினுல் அபாவமாகின்றதோ, அது அஸத் தென்று சொல்லப்படுகின்றது. எதன் நிவிர்த்தி ஒரு காலத்திலு முண்டாகின்ற தில்லையோ அது சத் தென்று சொல்லப்படுகின்றது. சர்வ பதார்த்தங்கட்கும் அவற்றின் நிவிருத்திக்கும் ஆத்மா அதிஷ்டானமாம். அந்த ஆத்மாவிற்கு நிவிருத்தி யுண்டாகுமாயின், அதற்கு வேறு அதிஷ்டானம் கூறல் வேண்டும். ஏனெனின், சூநியத்தில் நிவிருத்தி யுண்டாவ தில்லை. ஆத்மாவிற்கும், அதன் நிவிருத்திக்கும் வேறு அதிஷ்டானம் அங்கீகரிக்கினுே, அதற்கு வேறு அதிஷ்டானம் அங்கீகரித்தல் வேண்டும். இவ்வாற்ருல்; அநவஸ்தை (தோஷம்) உண்டாம். அன்றியும், ஆத்மாவின் நிவிருத்தியினை அங்கீகரிக்கின்றவனை, ஆத்மாவின் நிவிருத்தியை யாவரேனும் அநுபவித்திருக்கின்றனரா? இன்ரு? என்று கேட்டல் வேண்டும்.

அநுபவித் திருக்கின்றன ரென்று கூறின், அது பொருந்தாது; ஏனெனின், எவன் அநுபவிக்கின்றவனுே அவனே ஆத்மாவும் தனது ஸ்வரூபமுமாவன். அதன் நிவிருத்தியின் அநுபவம் தன் தலையை வெட்டினதைத் (தான்) அநுபவிப்பதற்குச் சமானமாகும். ஆகையால், ஆத்மாவின் நிவிருத்தியின் அநுபவம் பொருந்தாது. ஆத்மாவின் நிவிருத்தியோ உண்டாகின்றது; ஆனல், அதன் நிவிருத்தியின் அநுபவம் ஒருவனுக்கு மில்லை யென்று கூறினுே, இது சித்த மாயிற்று; ஆத்மாவிற்கு நிவிருத்தியோ உண்டாகின்ற தில்லை. ஏனெனின், எந்த வஸ்து ஒருவராலும் அநுபவிக்கப்பட வில்லையோ, அது மலடி மகனுக்குச் சமானமாகும். ஆதலின், ஆத்மாவின் நிவிருத்தி யுண்டாகின்ற தில்லை. இதனுனேயே ஆத்மா சத்தாம்.

## 356. ஆத்மா சித்து (சைதநியம்) எனல்.

ஆத்மா சித்தாம். பிரகாச ரூபமான ஞானம் சித் தெனப்படும். ஆத்மாவை அப்பிரகாச ரூபமாக அங்கீகரிக்கினுே, அநாத்மாவாய ஜட வஸ்துக்களின் பிரகாசம் ஒருகாலு முண்டாக மாட்டாது. அந்தக்கரணம் இந்திரியங்கள் என்பவற்ருல் பதார்த்தங்களின் பிரகாச முண்டாகின்ற தென்று கூறின், (அது) பொருந்தாது. ஏனெனின், அந்தக்கரணமும், இந்திரியங்களும் பரிச்சிந்நமாயிருக்கின்றன. ஆதலால் (அவை) காரியங்களாம். எது பரிச்சிந்நமா

யிருக்கின்றதோ அது கடம்போல் காரியமாம். அந்தக்கரணமும் இந்திரியங்களும் பரிச்சிந்நமா யிருத்தலால் காரியங்களாம். தேசகாலங்களால் எதற்கு அந்த முண்டாகிறன்தோ, அது பரிச்சிந்நமெனப்படும். எது காரியமோ அது ஜடமாம்.

ஆதலால், அந்தக்கரணமும் இந்திரியங்களும் ஜடமா யிருக்கின்றன. அவற்ருல், எந்த வஸ்துவின் பிரகாசமும் பொருந்துவதில்லே. ஆதலால், எல்லாவற்றையும் பிரகாசஞ் செய்கின்ற ஆத்மா பிரகாச ரூபமாக விருக்கின்றது.

357. ஆத்மா பிரகாச ரூப மன்ரும்; அது ஜடமாம்; அதனிடத்தில் ஞாந குண மிருக்கின்றது. அந்த ஞாநத்தால் ஆத்மாநாத்மாக்களின் பிரகாச முண்டாகின்றது என்று கூறுவானுயின், அவனே, ஆத்மாவின் ஞாந குணம் நித்தியமா? அல்லது, அநித்தியமா? என்று கேட்க. நித்திய மென்று கூறினே, ஆத்மாவின் ஸ்வரூபமே ஞாந மென்று சித்திக்கும். ஏனெனின், ஆத்மாவினும் பிந்நமாய யாவும் அநித்தியம் என்பது நியமமாம். ஞாநத்தினே ஆத்மாவினும் பிந்நமாக அங்கீகரிக்கினே, அநித்தியமே யாகும். ஆதலால், (ஞாநம்) நித்திய மென்று அங்கீகரித்து ஞாநம் ஆத்மாவினும் பிந்ந மென்று கூறுதல் பொருந்தாது. அநித்திய மென அங்கீகரிக்கினே,

கட முதலிய வற்றைப் போல் ஜடமாம். அநித்திய வஸ்து எதுவோ அது ஜடமாம். ஆதலால், "ஞாநம் அநித்தியமாம்" என்று கூறுதல் பொருந்தாது. ஆனுல், ஞாநம் நித்தியமேயாம். அந்த நித்திய ஞாநம் ஆத்ம சொரூபமேயாம். அநித்திய மெனக் கொள்ளினே, ஒரு காலத்தில் ஆத்மாவில் ஞாந முண்டாம்; ஒரு காலத்தி லுண்டாகாது. ஆதலால், ஆத்மாவினும் பிந்நமாகவும் ஞாந மிருக்கும். நித்திய மென அங்கீகாரஞ் செய்யினே (அது) பிந்நமாவ தில்லே.

எது குணமோ அது குணியினிடத்தில் ஒருகால் இருக்கும்; ஒருகால் இல்லாமலு மிருக்கும். எங்ஙனம் வஸ்திரத்தின் நீல மஞ்சட் குணங்கள் ஒருகா (வஸ்திரத்தி) லிருக்கும்; ஒருகால் இல்லாம லிருக்கும். ஆதலால், எது குணமோ அது ஆகமாபாயியா (போக்கு வரவு உடையதா) ம்.

ஞாநத்திற்கு நித்தியத் தன்மை யுளதாகலின் ஆகமாபாயியாவ தில்லே. ஆதலால், ஆத்மாவின் ஸ்வரூபமே ஞாநமாம்.

358. ஞானத்தினை அநித்திய மென்று கூறின், இந்திரியங் களினாலாவது, அந்தக்கரணத்தினு லாவது ஞாநம் உற்பத்தியா கின்றதென்று கூறல் வேண்டும். அது பொருந்தாது. ஏனெ னின், சுழுத்தியில் இந்திரியாதிகளோ இல்லை; சுகத்தின் ஞாந முண்டாகின்றது. அஃது உண்டாக வேண்டுவ தில்லை.

சுழுத்தியில் சுகத்தின் ஞாநத்தினை யங்கீகாரஞ் செய்யா விடின், விழித்துக்கொண்ட பின் "நான் சுகமாய்த் தூங்கினேன்" என்று சுழுத்தி சுகத்தின் ஸ்மிருதி (மக்கட்கு) உண்டாகின்றது; அஃது உண்டாக வேண்டுவதில்லை. எந்த வஸ்து முன் னறியப்பட் டிருக்கின்றதோ அதன் ஸ்மிருதி யுண்டாகின்றது. அறியப்படாத வஸ்துவின் ஸ்மிருதி யுண்டாகின்றதில்லை. சுழுத்தி சுகத்தின் ஸ்மிருதி விழித்துக் கொண்டபின் (மக்கட்) குண்டாதலால், சுழுத்தியில் சுகத்தின் ஞாந மிருக்கின்றது. அந்த ஞாநத்தை யுண்டாக்கும் இந்திரியாதிகள் சுழுத்தியி லில்லை. ஆதலால் ஞாநம் நித்தியமாம்.

ஞாநத்தினை விட்டு ஆத்மா ஒருபோது மிருக்கின்ற தில்லை. ஆதலால், ஞாநம் ஆத்மாவின் சொரூபமாம். எங்ஙனம் உஷ் ணத்தன்மையினை விட்டு அக்கிநி ஒருபோது மிராமையால் உஷ் ணத்தன்மை அக்கிநியின் சொரூபமா யிருக்கின்றதோ, அங்ஙன மே ஞாநமும் ஆத்மாவின் சொரூபமா யிருக்கின்றது. எது ஆக மாபாயியோ, அது குணமாம். உஷ்ணத் தன்மையும் ஞாநமும் ஆகமாபாயி யன்றாம். ஆதலால், (அவை முறையே) அக்கிநியின் சொரூபமும் ஆத்மாவின் சொரூபமுமாம்.

எந்த வஸ்து ஒருபோ திருந்து ஒருபோது இல்லாம லிருக் கின்றதோ, அது ஆகமாபாயி எனப்படும்.

359. உற்பத்தியும் விநாசமும் அந்தக்கரண விருத்திக் கிருக்கின்றன; ஞாநத்திற் கில்லை. ஆத்ம ஸ்வரூபமான ஞாநம் விசேஷ வியவகாரத்திற் கேது வன்று. பின்னரோ, ஞாந சகித விருத்தி, அல்லது, விருத்தியில் ஆரூடமான ஞாநம் வியவகாரத் திற் கேதுவாம். இஃது அவச்சேத வாதத்தின் கிரமமாம். ஆபாஸ வாதத்தில் ஆபாஸ சகித விருத்தியால் வியவகார முண்டா கின்றது. ஆபாஸ வாயிலாக வாவது, அல்லது, சாக்ஷாத் விருத்தி வாயிலாகவாவது ஆத்ம ஸ்வரூப ஞாநத்தினாலேயே சர்வ வியவ காரமுஞ் சித்திக்கின்றது. இல்லாவிடின், ஒரு வியவகாரமுஞ்

சித்திக்கின்ற தில்லை. இவ்வாற்ருல், எல்லாவற்றையும் பிரகாசிப்பது ஞாந ஸ்வரூப ஆத்மாவாம். ஆதலால், அது சித்தாம்.

360. ஆத்மா ஆநந்த ரூப மேனல்.

ஆத்மா ஆநந்த ரூபமா யிருக்கின்றது. ஆத்மா ஆநந்த ரூபமாகா விடினே, விஷப சம்பந்தத்தினுல் சொரூபாநந்தத்தின் பாநம் உண்டாக வேண்டுவ தில்லை. விஷயத்தில் ஆநந்த மில்லையென்னும் வார்த்தை முன் (4-வது தரங்கத்தில்) கூறப்பட்டிருக்கின்றது.

விஷயத்தில் ஆநந்த மிருக்குமாயின், எந்த விஷயத்தினுல் ஒரு புருஷனுக்குச் சுக முண்டாகின்றதோ அதனுலேயே அந்நியனுக்குத் துக்க முண்டாகின்றது. எங்ஙனம் அக்நியை ஸ்பரிசிப்பதனுல் அக்கிநிப் புழுவிற்கும், ஆண் சர்ப்பத்தைப் பார்ப்பதனுல் பெண் சர்ப்பத்திற்கும், ஆண் சிங்கத்தைப் பார்ப்பதனுல் பெண் சிங்கத்திற்கும் ஆநந்த முண்டாகின்றது ; அந்நிய புருடர்களுக்குத் துக்க முண்டாகின்றது. அது உண்டாக வேண்டுவ தில்லை. சித்தாந்தத்திலோ அக்கிநிப் புழுவிற்கு அக்கிநியை ஸ்பரிசிப்பதன் இச்சை யுண்டாகும் போது சஞ்சல புத்தியில் சொரூபாநந்தத்தின் பாநம் உண்டாவ தில்லை. அக்நி சம்பந்தத்தினுல் க்ஷண மாத்திரம் இச்சை நிவிர்த்தியாக நிச்சல புத்தியிற் சொரூபாநந்தத்தின் பாந முண்டாகின்றது. அந்நிய புருஷர்களுக்கு அக்நி சம்பந்தத்தின் இச்சை யுண்டாகின்ற தில்லை. பின்னரோ, அந்நிய பதார்த்தங்களி னிச்சை உண்டாகின்றது. அவற்றின் இச்சை அக்நி சம்பந்தத்தால் நிவிருத்தி யாகின்ற தில்லை. ஆதலால், சஞ்சலமான அந்தக்கரணத்தில் அக்நி சம்பந்தத்தால் ஆநந்த முண்டாகின்ற தில்லை.

361. இதில் இச்சங்கை யுண்டாகின்றது:—அந்தக்கரணத்தின் இச்சாரூப விருத்தி எதுவோ அது விஷயப் பிராப்தியினுல் நாச மடைந்து விட்டது. அந்நிய விருத்திக்கு ஒரு நிமித்தமு மில்லை யாகலின், உற்பத்தியாவ தில்லை. விருத்தி யின்றிச் சொரூபாநந்தத்தின் பாநம் உண்டாவ தில்லை. ஆதலால், விஷயத்திலேயே ஆநந்த மிருக்கின்றது. அச்சங்கை பொருந்தாது. ஏனெனின்,

இச்சாரூபமான அந்தக்கரண விருத்தியின் அபாவ மிருக்கின்றது. அந்த இச்சா ரூப விருத்தி யிருப்பினும் அதனிடத்து

ஆநந்தப் பிரகாசம் உண்டாகின்ற தில்லை. ஏனெனின், இச்சா ரூப விருத்தி ராஜஸமாம். ஆநந்தத்தின் பிரகாசம் ஸாத்வீக விருத்தியில் உண்டாகின்றது. அங்ஙனமாயினும், இச்சிக்கப் பட்ட எப்பதார்த்தம் கிடைத்திருக்கின்றதோ அதன் சொரூ பத்தை விஷயஞ் செய்தற் பொருட்டுள்ள அந்தக்கரணத்தின் ஞாந ரூப விருத்தி சாத்வீகமாம். ஏனெனின், சத்துவ குணத்தி னின்று ஞாந முண்டாகின்ற தென்பது நியமமாம். அந்த ஸாத் வீக விருத்தியில் ஆநந்தத்தின் பாநம் உண்டாகின்றது. ஆனால், அந்த ஞாந ரூப விருத்தி பகிர்முகமாம். அதன் பிருஷ்ட (பின்) பாகத்தி லிருக்கும் அந்தக்கரண உபகித சேதந ஸ்வரூபாநந்தம் அந்த விருத்தியில் கிரகிக்கப் படுகின்ற தில்லை. ஆதலால், விஷய உபஹித சேதநரூப ஆநந்தத்தின் பாநம் உண்டாகின்றது. அந்த விஷய உபஹித சேதநம் ஆத்மாவினும் பிந்ந மன்றாம். ஆதலால், ஆத்மாநந்தமே விஷயத்தில் பாநமாகின்றதாகக் கூறப்படுகின்றது. அந்த ஞாந ரூப விருத்தியில் விஷயத்தோ டுண்டாம் நேத்ராதி களின் சம்பந்தமே காரணமாம்.

அல்லது, ஞாநரூப பகிர்முக விருத்தியினும் வேறான அந் தர்முக விருத்தி யுண்டாகின்றது. அதனிடத்தில் அந்தக்கரண உபஹித சேதந ரூப ஆநந்தமே பாந மாகின்றது என்பது உத்தம சித்தாந்தமாம். அந்த விருத்தியி னுற்பத்தியில் இச் சாதிகளின் அபாவமே காரணமாம். எங்ஙனம், இச்சை முத லியன வின்றி ஏகாந்தத்தி லிருக்கும் உதாஸீந புருஷனுக்குப் பகிர்முக ஞாந ரூபமாக ஒரு விருத்தியும் உண்டாகின்ற தில்லை. ஆநந்தத்தின் பாநம் உண்டாகின்றது ஆதலால், இச்சாதி களின் அபாவரூப காரணத்தினால் அந்தர்முக விருத்தி ஆநந் தத்தைக் கிரகிப்பதாக உண்டாகின்றது. அதனால், இச்சித்த விஷயம் கிடைத்ததனால் இச்சை முதலியவற்றின் அபாவ முள தாகலின், ஞாநத்தின் பின் அந்தர்முக விருத்தி யுண்டாகின்றது. அதனால், அந்தக்கரண உபகித ஆநந்தமே கிரகிக்கப்படுகின்றது.

அந்த ஸ்வரூபாநந்தத்தின் கிரகணமும் விஷயத்தின் ஞாநமும் அத்தியந்தம் அவ்வியவஹிதமா யிருக்கின்றன. அத னால், "நான் விஷயத்தில் ஆநந்தத்தை அநுபவித்தேன்" என் னும் பிராந்தி புருஷனுக் குண்டாகின்றது. முதற் பக்ஷத்தினும் இப்பக்ஷம் உத்தமமாம். ஏனெனின், விஷயத்தின் ஞாநரூ

விருத்தியினுல் அந்தக்கரண உபகித ஆநந்தத்தின் பாநமோ பொருந்தாது; ஆதலால், விஷய உபஹித ஆநந்தத்தின் பாந முண்டாகுமாயின், மார்க்கத்தி லுள்ள விருக்ஷத்தின் ஞாநரூப விருத்தியும் சாத்விகமா யிருக்கின்றது. அதனுலும், விருக்ஷ உபகித சேதந ஸ்வரூபாநந்தத்தின் பாநம் உண்டாதல் வேண்டும். அங்ஙனமே, சர்வ ஞாநத்தினுலும் ஞேய உபகித சேதந ரூப ஆநந்தத்தின் பாந முண்டாதல் வேண்டும். ஆதலால், அநாத்ம வஸ்துவின் ஞாநரூப பகிர்முக விருத்தியினுல் ஞேய உபகித சேதந ஸ்வரூபாநந்தத்தின் கிரகணம் உண்டாவ தில்லை.

இவ்வாற்ருல், விஷய சம்பந்தத்தினுல் ஆத்ம ஸ்வரூபாநந்தத்தின் பாந முண்டாகின்றது. ஆத்மா ஆநந்த ரூப மன்ருயினே, விஷய சம்பந்தத்தினுல் ஆநந்தத்தின் பாநம் பொருந்தாது. ஆகையால், ஆத்மா ஆநந்தரூபமா யிருக்கின்றது.

362. ஆத்மாவின் சம்பந்த முடைய வஸ்துக்களில் பிரிய முண்டாகின்றது. அவற்றினும் சமீபத்தி லிருப்பவற்றில் அதிகப் பிரிய முண்டாகின்றது. இவ்வாறு, பாஹிய பாஹிய பதார்த்தங்களை யபேக்ஷித்து ஆந்தர ஆந்தர பதார்த்தங்களில் அதிகப் பிரீதி யுண்டாகின்றது.

பரம்பரையாக ஆத்மாவின் சம்பந்தியான புத்திரனுடைய மித்திரனிடத்தில் பிரீதி யுண்டாகின்றது. புத்திரனுடைய மித்திரனின் அபேக்ஷயினுல் புத்திரனிடத்தில் அதிகப் பிரீதி யுண்டாகின்றது. புத்திரனினும் ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களில் அதிப் பிரீதி யிருக்கின்றது. அவற்றுள்ளும் ஸ்தூலத்தினும் சூக்ஷ்மத்தில் அதிகப் பிரீதி யிருக்கின்றது.

முன் முன் சொல்லப்பட்ட வற்றினும் பின் பின் சொல்லப் பட்டவை ஆத்மாவிற்குச் சமீப மானவை யாம்.

ஆத்மாவின் ஆபாஸம் சூக்ஷ்ம சரீரத்தி லிருக்கின்றது; மற்றவற்றி லில்லை. ஆதலால், ஆபாஸ வாயிலாக ஆத்மாவிற்குச் சூக்ஷ்ம சரீரத்தோடு சம்பந்த மிருக்கின்றது; மற்றவற்ருேடில்லை. ஸ்தூல சரீரத்தோடு சூக்ஷ்ம சரீரத்திற்குச் சம்பந்த மிருக்கின்றது. ஆதலால், சூக்ஷ்ம சரீர வாயிலாக ஸ்தூல சரீரத்தோடு ஆத்மாவிற்குச் சம்பந்த மிருக்கின்றது. ஸ்தூல சரீர வாயிலாகப் புத்திரனேடு சம்பந்த மிருக்கின்றது; புத்திரன்

வாயிலாக அவன் மித்திரனோடு சம்பந்த முண்டாகின்றது. இவ்வாற்றால், பின் பின் உள்ள ஆத்மாவின் சமீபமான வஸ்துக்களில் அதிகப் பிரீதி யுண்டாகின்றது.

எந்த ஆத்ம சம்பந்த மிருத்தலினால் பதார்த்தங்களில் பிரீதி யுண்டாகின்றதோ அந்த ஆத்மாவிலேயே முக்கியப் பிரீதி யிருக்கின்றது; பதார்த்தங்களி லில்லை. எங்ஙனம் புத்திரனுடைய மித்திரனிடத்தில் புத்திர சம்பந்தத்தினால் பிரீதி யுண்டாகின்றது; அதனால் புத்திரனிடத்திலேயே பிரீதியிருக்கின்றது, புத்திரனது மித்திரனிடத்தில் இல்லையோ, அங்ஙனமே, ஆத்மாவிற்கு மிகு சமீபத்திலுள்ளவற்றில் மிகு பிரீதி யுண்டாகின்றது. ஆதலால் ஆத்மாவி னிடத்திலேயே எல்லோருக்கும் பிரீதி யிருக்கின்றது.

அந்தப் பிரீதி ஆநந்தத்திலும் துக்கத்தின் அபாவத்திலும் உண்டாகின்றது; மற்றவற்றி லில்லை. மற்றப் பதார்த்தங்களில் உண்டாகின்ற பிரீதி ஆநந்தத்தின் நிமித்தமும், துக்காபாவத்தின் நிமித்தமுமாம். ஆதலால், ஆநந்தம் துக்காபாவம் என்பவற்றினும் வேறானவற்றில் பிரீதி யுண்டாகின்ற தில்லை. ஆகையால் எல்லோருடைய பிரீதிக்கும் விஷயமாகிய ஆத்மா ஆநந்தரூபமும், துக்காபாவ ரூபமுமாம். கற்பிதத்தின் அபாவம் அதிஷ்டாந ரூபமாம். எங்ஙனம், சர்ப்பத்தின் அபாவம் ரஜ்ஜுரூபமா யிருக்கின்றது. ஆதலால் கற்பிதமான துக்கத்தின் அபாவமும் ஆத்மரூபமா யிருக்கின்றது. இவ்வாற்றால், ஆத்மா ஆநந்த ரூபமாம்.

363. நியாய மதத்தில் ஆத்மாவிற்கு ஆநந்தம் குணமாயிருக்கின்றது. அது சரி யன்று. ஏனெனின், ஆநந்த குணத்தை நித்திய மென்று அங்கீகரிக்கின், அது ஆகமாபாயி ஆவ தில்லை. அதனால், ஆத்மாவின் சொரூபமே ஆநந்த மென்று சித்திக்கும். நியாய மதத்தில் நித்தியமான ஆநந்தம் இருப்ப தில்லை. அநித்திய மென்று கூறினோ, அநுகூல விஷய இந்திரியங்களின் சம்பந்தத்தினால் ஆநந்த முண்டாவதாக அங்கீகாரஞ் செய்தல் வேண்டும். ஆதலின், சுழுத்தியில் ஆநந்தத்தின் பாந முண்டாக வேண்டுவ தில்லை. ஏனெனின், சுழுத்தியில் விஷயத்திற்கும் இந்திரியத்திற்கும் சம்பந்த மில்லை. ஆதலால், ஆநந்தம் ஆத்மாவின் குண மன்று; ஆனால், ஆத்மா ஆநந்த ஸ்வரூப

மாம். இவ்வாற்ருல், ஆத்மா சத்து சித்து ஆநந்த சொரூப மாம்.

364. சச்சிதாநந்தம் பரஸ்பரம் பிந்ந மன்றெனல்.

அந்தச் சத்து சித்து ஆநந்தங்கள் பரஸ்பரம் வேருகாது ஒன்ருகவே யிருக்கின்றன ; ஆத்மாவின் குணங்களா யிருப்பின், பரஸ்பரம் பிந்நமாகவு மிருக்கும் ; ஆத்ம ஸ்வரூபமாக விருத்த லால் பிந்ந மன்று.

ஓர் ஆத்மாவே,நிவிருத்தி யின்றி யிருத்தலால் சத்தெனப்படு கின்றது;ஜடத்திற்கு விலக்ஷணமான பிரகாச ரூபமா யிருத்தலால் சித் தெனப்படுகின்றது; துக்கத்திற்கு விலக்ஷணமான முக்கியப் பிரீதிக்கு விஷயமா யிருத்தலால் ஆநந்த மெனப்படுகின்றது.

எங்ஙனம் உஷ்ணப் பிரகாச ரூபமாய் அக்கிநி யிருக்கின்ற தோ, அங்ஙனமே சச்சிதாநந்த ரூபமாய் ஆத்மா விருக்கின்றது.

சச்சிதாநந்த ஸ்வரூபமே சாஸ்திரத்திற் பிரஹ்ம மென்று கூறப்பட் டிருக்கின்றது. ஆதலால், பிரஹ்ம ஸ்வரூபம் ஆத்மா வாம். பிரஹ்ம மென்பது வியபாகத்திற்காம். தேசத்தா லெதற்கு முடிவில்லையோ, அது வியாபக மெனப்படுகின்றது. (ஆதலால்) ஆத்மா பிரஹ்மத்திற்கு அந்நியமாயின், (அது) தேசத் தினுல் அந்த முடையதாம். எதற்குத் தேசத்தினுல் அந்த முண் டோ அதற்குக் காலத்தினுலும் அந்த முண் டென்பது நியமமாம். ஆதலால், அஃதநித்திய மாகும். எதற்குக் காலத்தினுல் அந்த முண்டோ அஃது அநித்திய மெனப்படும்.ஆதலால்,ஆத்மா பிரஹ்ம மத்திற்குப் பிந்நமாக வில்லை. ஆத்மாவிற்குப் பிந்நமாய்ப் பிரஹ்ம மிருக்குமாயின், அஃது அநாத்மாவாகும். அநாத்மாவாய கடாதி கள் ஜடமா யிருக்கின்றன ; அதனுல் ஆத்மாவிற்குப் பிந்நமான பிரஹ்மமும் ஜடமேயாகும். ஆதலால், ஆத்மாவிற்குப் பிந்நம் பிரஹமமு மன்று ; பிரஹ்ம ஸ்வரூபமே ஆத்மாவாம்.

365. ஒரு சேதநமே சர்வப் பிரபஞ்சத்திற்கும் மாயைக்கும் அதிஷ்டாநமா யிருக்கின்றது; ஆகையால் (அது) பிரஹ்ம மென்று கூறப்படுகின்றது. அவித்தைக்கும் வியஷ்டி தேகாதிகளுக்கும் அதிஷ்டாநமா யிருத்தலினுல், ஆத்மா வென்று கூறப்படு கின் றது. தத் பதத்தின் லக்ஷியம் பிரஹ்ம மெனப்படும். துவம் பதத் தின் லக்ஷியம் ஆத்மா வெனப்படும். ஈசுவர சாக்ஷி தத் பதத்தின்

லக்ஷியமாம். ஜீவ சாக்ஷி துவம் பதத்தின் லக்ஷியமாம். வியஷ்டி சங்காத உபகித சேதநம் ஜீவ சாக்ஷியம். சமஷ்டி சங்காத உப கித சேதநம் ஈசுவர சாக்ஷி யெனப்படும்.

ஜீவனுக்கும், ஈசுவரனுக்கும் ஏகத்துவம் பொருந்தாதாமா யினும், ஜீவ சாக்ஷிக்கும் ஈசுவர சாக்ஷிக்கும் உபாதிபேதத்தால் பேத மிருக்கின்றது; சொரூபமாக ஒன்றேயாம். எங்ஙனம் மடத்தி லிருக்கும் கடாகாசத்திற்கும் மடாகாசத்திற்கும் உபாதி பேத மின்றிச் சொரூபமாகப் பேதமில்லையோ, அங்ஙனமே ஆத் மாவிற்கும் பிரஹ்மத்திற்கும் உபாதி பேத மின்றிப் பேத மில்லை. (இரண்டும்) ஒரு வஸ்துவேயாம்.

366. பிரஹ்ம ரூப ஆத்மா ஜந்ம மின்றிய தெனல்.

அந்தப் பிரஹ்ம ரூப ஆத்மா ஜந்ம மில்லாத தாம். ஆத்மா விற்கு ஜந்மம் அங்கீகரிக்கின், (ஆத்மா) அநித்திய மாகும். அவ் வார்த்தை பர லோக வாதியாகிய ஆஸ்திகனுக் கிஷ்ட மில்லை. ஏனெனின், ஆத்மா உற்பத்தி நாச முடையதாமாயின் முதல் ஜந்மத்தில் பூர்வ கர்ம மின்றியே சுக துக்கங்களின் போகமும், போக மின்றியே செய்த கர்மத்தின் நாசமு முண்டாம். ஆதலால், (ஆத்மாவைக்) கர்த்தா போக்தாவாக அங்கீகரிக்கினும் ஜந்ம நாசங்க ளின்றியதாகவே அங்கீகரித்தல் வேண்டும்.

அன்றியும், ஆத்மாவிற்கு ஜன்மத்தினை யங்கீகரிக்கின் காரண மின்றி ஒரு வஸ்துவும் உண்டாகின்ற தில்லை. ஆதலால், ஏதேனும் ஒரு காரணத்தினால் (ஆத்மாவிற்கு) ஜந்மம் கூறல் வேண்டும். அது பொருந்தாது; ஏனெனின், எது ஆத்மாவிற்கு ஹேது வாகுமோ (அதனை) ஆத்மாவிற்கு வேறாகவே கூறல் வேண்டும். அவ் வாத்மாவினும் பிந்நமாய யாவும் ஆத்மாவில் கற் பிதமாம். ஆதலால், அது ஆத்மாவிற்குக் காரண மாதல் பொருந் தாது. எங்ஙனம், ரஜ்ஜுவிற் கற்பிக்கப்பட்ட சர்ப்பம் ரஜ்ஜு விற்கு ஹேது வாவ தில்லையோ, அங்ஙனமே ஆத்மாவில் கற்பிக் கப்பட்ட வஸ்து ஆத்மா விற்கு ஹேது வாதல் பொருந்துவ தில்லை.

367. ஒரு ரஜ்ஜுவில் அநேக புருஷர்களுக்குத் தண்டம், சர்ப்பம், பூமியின் பிளப்பு, ஜல தாரை எனப் பிராந்தி யுண்டா கின்றது. அந்தப் பிராந்தியில் இரண் டம்சங்க ளுள.

ஒன்று சாமாந்யமான "இது" என்னும் அம்சமாம். மற் றொன்று சர்ப்பாதிகளின் விசேஷ அம்சமாம். அந்தச் சாமாந்ய

மான "இது" என்னும் அம்சம், சர்ப்பாதி விசேஷ அம்சத்தில் முற்றினும் வியாபித் திருக்கின்றது.

"இது சர்ப்பம்" "இது தண்டம்" "இது பூமியின் பிளப்பு" "இது ஜல தாரை" என்றிவ்வாறு சர்ப்பாதி விசேஷ அம்சத்தில் இது எனும் அம்சம் முற்றும் வியாபித் திருக்கின்றது. அந்த வியாபக சாமாநிய 'இது' என்னும் அம்சம் ரஜ்ஜு ஸ்வரூபமாம். அந்தச் சாமாநிய இது வெனும் அம்சத்தின் ஞாநத்தினையே பிராந்திக்குக் காரணமான ரஜ்ஜுவின் சாமாநிய ஞாந மென்பர்.

அந்தச் சாமாநியமான இது என்னும் அம்சம் சத்திய மாம். ஏனெனின், ரஜ்ஜுவின் ஞாநம் உண்டான பின்னரும் அந்த இது வெனும் அம்சம் பிரதீதி யாகின்றது.

எங்ஙனம் பிராந்தி காலத்தில் "இது சர்ப்ப"மென்று சர்ப்ப முதலியவற்றோடு சேர்ந்து இது என்னும் அம்சம் பிரதீதி யாகின்றதோ, அங்ஙனமே பிராந்தி நிவிருத்திக்குப் பின்னும் "இது ரஜ்ஜு" வென்று ரஜ்ஜுவோடு சேர்ந்து இது என்னும் அம்சம் பிரதீதி யாகின்றது.

இது என்னும் அம்சமும் மித்தையாகு மாயின், சர்ப்பாதி களைப் போலப் பிராந்தி நிவிர்த்திக்குப் பின் அதுவும் பிரதீதியாக வேண்டுவ தில்லை. அதனால், சர்ப்பாதிப் பிராந்தியில் வியாபகமா யிருக்கின்ற "இது" எனும் அம்சம் சத்தியமாம். அதிஷ்டாநம் ரஜ்ஜு ரூபமாம். பரஸ்பரம் வியபிசாரியா யுள்ள சர்ப்பாதிகள் கற்பிதமாம்.

368. அங்ஙனமே, எல்லாப் பதார்த்தங்களிலும் ஐந்து அம் சங்களுள:—நாமம், ரூபம், அஸ்தி, பாதி, பிரியம் என்பனவாம். "கட" மென்னும் இரண்டு அக்ஷரமும் நாமமாம். உருட்சி அதன் ரூபமாம். "கடம் இருக்கின்றது" என்பது அஸ்தியாம். "கடம் பிரதீதி யாகின்றது" என்பது பாதியாம். "கடம் பிரியமா யிருக்கின்றது" என்பது பிரியமாம். சர்ப்ப முதலியனவும் பெண் சர்ப்ப முதலியவற்றிற்குப் பிரியமா யிருக்கின்றன.

இவ்வாற்றால், சர்வ பதார்த்தங்களிலும் ஐந்து அம்சங்க ளுள. அவற்றுள், அஸ்தி பாதி பிரியவடிவ மூன்று அம்சங்கள் சர்வ பதார்த்தங்களிலும் வியாபகமா யிருக்கின்றன.

நாம ரூபங்கள் வியபிசாரியாம். எந்த வஸ்து ஓரிடத்தி லிருந்து ஓரிடத்தி லிருப்ப தில்லையோ அது வியபிசாரி எனப் படும். கடம் என்னும் நாமமும், உருட்சியான ரூபமும் படத்தி லில்லை. பட மென்னும் நாமமும் அதன் ரூபமும் கடத்தில் இல்லை. இவ்வாற்றால், சர்வ பதார்த்தங்களிலும் நாம ரூபாம் சங்கள் வியபிசாரிகளாம்.

அஸ்தி பாதி பிரியவடிவ (மூன்று அம்ச)ங்களும் எங்கும் அநுகதமா யிருக்கின்றன. எங்ஙனம், சர்ப்ப தண்டாதிகளில் அநுகதமான இதம் அம்சம் சத்தியமாயும், அதிஷ்டாநமாயு மிருக்கின்றதோ, அங்ஙனமே, சர்வ பதார்த்தங்களிலும் அநு கதமான அஸ்தி பாதி பிரிய ரூபங்கள் சத்தியமாயும் அதிஷ் டாந ரூபமாயு மிருக்கின்றன. சர்ப்ப தண்டாதிகளைப் போல் வியபிசாரியா யுள்ள நாம ரூபங்கள் கற்பிதமா யிருக்கின்றன.

அஸ்தி பாதி பிரியம் சச்சிதாநந்த ரூபமாம். ஆதலினால் ஆத்ம ஸ்வரூபமாம். இவ்வாற்றால், சச்சிதாநந்த ஆத்மாவில் எல்லா நாம ரூபப் பிரபஞ்சங்களும் கற்பிதமா யிருக்கின்றன. அக் கற்பித பதார்த்தங்கள் எவையும் ஆத்மாவின் ஜந்மத்திற்கு ஹேதுவாதல் பொருந்தாது. ஆதலால், ஆத்மா ஜந்ம மின்றிய தாம்.

எந்த வஸ்துவுக்கு ஜந்ம மிருக்கின்றதோ அதற்கே சத்தை, விருத்தி, பரிணமம், அபக்ஷயம், விநாசம் என்னும் ஐந்துவித வேறு விகாரங்க ளுண்டாகின்றன. ஆத்மாவுக்கு ஜந்ம மில்லா மையினால் பிந்திய ஐந்து விகாரங்களு மில்லை.

இவ்வாற்றால், ஆத்மா ஜந்மாதி ஆறு விகாரங்க ளின்றியதா யிருக்கின்றது. சத்தை யென்பது பிரகடத் தன்மைக்காம்; அப க்ஷய மென்பது குறைதற்காம்.

### 369. ஆத்மா அசங்கன் எனல்.

ஆத்மா அசங்கமா யிருக்கின்றது. சங்க மென்பது சம்பந் தத்திற்காம். அந்தச் சம்பந்தம் ஸஜாதீய விஜாதீய ஸ்வகத பதா ர்த்தங்களோ டுண்டாகின்றது. எங்ஙனம் கடத்திற்குக் கடத் தோ டுள்ள சம்பந்தம் ஸஜாதீயத்தோ டுள்ள சம்பந்தமாம்.

கடத்திற்குப் படத்தோடுள்ள சம்பந்தம் விஜாதீயத்தோடுள்ள சம்பந்தமாம். ஸ்வகதமென்பது அவயவத்திற்காம். ஆதலால், படத்திற்கு நூலோடுள்ள சம்பந்தம் ஸ்வகதத்தோடுள்ள சம்பந்தமாம்.

ஆத்மா இரண்டு அல்லது அநேகமா யிருக்குமாயின், ஸஜாதீயத்தோடு ஆத்மாவிற்குச் சம்பந்த முண்டாகும். அந்த ஆத்மா ஏகமா யிருத்தலால், ஸஜாதீய ஆத்மாவோடு ஆத்மாவிற்குச் சம்பந்த மில்லை.

ஆத்மாவிற்கு விஜாதீயம் அநாத்மாவாம். அது கானல் ஜலம் போல ஆத்மாவில் கற்பிதமா யிருக்கின்றது. அக் கற்பிதத்தோடு ஆத்மாவிற்குச் சம்பந்தம் பொருந்தாது. கானல் ஜலத்தோடு பூமிக்குச் சம்பந்த முண்டாகின்ற தில்லை; சம்பந்த முண்டாகுமாயின், ஊஷர பூமி அந்த ஜலத்தினால் நனைதல் வேண்டும். எங்ஙனம் கானல் ஜலத்தோடு ஊஷர பூமிக்குச் சம்பந்த மில்லையோ, அங்ஙனமே ஆத்மாவில் கற்பிதமான விஜாதீய அநாத்மாவோடு ஆத்மாவிற்குச் சம்பந்த மில்லை.

ஆத்மாவிற்கு அவயவ மிருக்குமாயின், ஆத்மாவிற்கு ஸ்வகதத்தோடு சம்பந்த முண்டாம். ஆத்மா நித்தியமா யிருத்தலால் நிரவயவமாம். அதற்கு ஸ்வகதத்தோடு சம்பந்தம் பொருந்தாது. இவ்வாற்றால், ஸஜாதீய விஜாதீய ஸ்வகத சம்பந்தம் ஆத்மாவி லில்லை. ஆதலால் (ஆத்மா) அசங்கமாம்.

இவ்வாற்றால், சிஷ்யனே! சச்சிதாநந்தப் பிரஹ்ம ரூபமாயும் ஜந்மாதி விகார ரகிதமாயும், அசங்கமாயும் ஆத்மா இருக்கின்றது. "அது நீயா யிருக்கின்றாய்" என்று இது 339-வது பிரசங்கத்தில் கேட்ட கேள்விக்கு ஆசாரியர் கூறிய வுத்தரமாம்.

## "சம்சாரத்திற்குக் கர்த்தா யாவன்?" என்பதன் உத்தரம்.

### 370. ஜகத்திற்குக் கர்த்தா ஈசுவர னெனல்.

"ஜகத்திற்குக் கர்த்தா யாவன்?" என்னும் இரண்டாவது பிரசினத்தின் உத்தரத்தைக் கூறுவாம்:—

வியாபகமான சேதநத்தை யாசிரயித் திருப்பதும், அதனை விஷயஞ் செய்வதுமாகிய சதசத்திற்கு விலக்ஷணமான அற்புத

சக்தி ரூபமான அஞ்ஞானத்தினின்றும் ஜகத்தி னுற்பத்தி நாசங்களுண்டாகின்றன.

உற்பத்தி நாசங்களைச் சொல்லுவதனுல் ஜகத்தின் ஸ்திதியும் பொருளாற் கொள்ளப்படுகின்றது. இதனுல், இந்த அர்த்தம் சித்தித்தது:—

மாயையோடு கூடிய சேதநம் ஈசுவர னெனப் படுகின்றது. அந்த ஈசுவரன் ஜகத்தி னுற்பத்தி ஸ்திதி நாசங்களுக்கு ஹேதுவா யிருக்கின்ருர். இக் கூற்றினுல், ஜகத்திற்கு ஒரு கர்த்தா உண்டா? அல்லது ஜகத்து தானுகவே யுண்டாகின்றதா? என்னுங் கேள்விக்கு உத்தரம் கூறப்பட்டது. "ஜகத்திற்குக் கர்த்தா ஒரு ஜீவனு? அல்லது ஈசுவரனு? என்பதற்கும் உத்தரங் கூறப்பட்டது.

### 371. ஈசுவரன் சர்வஞ்ஞனும், சர்வ சக்திமானும், சுதந்திரனு மாவ னெனல்.

ஜகத்திற்குக் கர்த்தா ஈசுவரன். ஜகத்துத் தானுகவே யுண்டாகவில்லை. கர்த்தா வின்றி ஜகத் துண்டா யிருக்குமாயின், குயவனின்றிக் கட முண்டாதல் வேண்டும். ஆதலால், ஜகத்திற்கு ஒரு கர்த்தா உளன்.

அந்தக் கர்த்தா சர்வஞ்ஞனுவன். ஏனெனின், எவன் காரியத்திற்குக் கர்த்தா வாகின்றனனோ அவன் காரியத்தினையும் அதன் உபாதாநத்தினையும் அறிந்து செய்கின்ருன். ஆதலால், ஜகத்தின் கர்த்தாவும், ஜகத்தினையும், அத னுபாதாநத்தினையும் அறிந்து செய்கின்ருன். இவ்வாற்ருல், ஜகத்தின் கர்த்தா ஜகத்தினையும் ஜகத்தின் உபாதாநத்தினையும் அறிகின்ருன். அதனுல் சர்வஞ்ஞனுவன்.

(அவன்) சர்வ சக்தி யுள்ளவன். ஏனெனின், அற்ப சக்தியுள்ள ஜீவர்களால் இந்த ஜகத்தின் சிருஷ்டி மநதினுலும் சிந்தித்தற்கு யோக்ய மன்ரும். ஆதலால், அற்புத ஜகத்தின் கர்த்தா அற்புத சக்திமானு யிருக்கின்ருன்.

இவ்வாற்ருல், ஜகத்தின் கர்த்தா சர்வ சக்தி யுள்ளவனுவன். அவன் சுதந்தரன். ஏனெனின், ஸ்வற்ப சக்தி யுள்ளவன் பராதீநனுவன்; ஸர்வ சக்தியுள்ளவன் பராதீந னுகான். ஆதலால்

(அவன்) சுதந்தரன். இவ்வாற்றுல், ஜகத்தின் கர்த்தா சர்வஞ்ஞ னுயும், சர்வ சக்திமானுயும், சுதந்தரனுயு மிருக்கிறுன். அவ னையே ஈசுவர னென்பர்.

**372.** அற்பஞ்ஞனும், அற்ப சக்திமானும், பராதீநனுமா யுள்ளவன் ஜீவ னெனப் படுகின்றுன்.

அற்பஞ்ஞத் தன்மை முதலியன ஜீவனிடத்திலும் பரமார்த்த மா யில்லையாமாயினும், அவித்தையா லுண்டாகும் மித்தையான அற்பஞ்ஞத் தன்மை முதலியன ஜீவனிடத்தில் பிரதீதியாகின் றன ; அதனுல் ஜீவனிடத்திற் கூறப்படுகின்றன.

அவித்தையா லுண்டாகும் அற்பஞ்ஞத் தன்மை முதலியவற் றின் பிராந்தியே ஜீவத்தன்மையாம். அந்த அற்பஞ்ஞத் தன்மை முதலிய பிராந்தி ஈசுவர னிடத்தில் இருப்ப தில்லை. ஆனுல், மாயையா லுண்டாகும் சர்வஞ்ஞத் தன்மை முதலியன ஈசுவர னிடத்தில் இருக்கின்றன. இவ்வார்த்தை விஸ்தாரமாய் மேல் பிரதிபாதநஞ் செய்யப்படும்.

இவ்வாற்றுல், ஜகத்தின் கர்த்தா ஜீவ னல்லன் ; ஈசுவரனு வன்.

**373.** ஈசுவரன் வியாபகனும் நித்தியனுமாவ னேனல்.

அந்த ஈசுவரன் ஓரிடத்தி லின்றி எங்கும் வியாபகமா யிருக் கின்றுன். ஓரிடத்தி லிருப்பதாக அங்கீகரிக்கின், எந்த வஸ்து விற்குத் தேசத்தினுல் அந்த முண்டாகின்றதோ, அதற்குக் காலத்தினு லும் அந்த முண்டாகின்றது. ஆதலால் அநித்தியமாம். எது அநித்தியமாகுமோ அது சர்த்தாவினுல் உண்டாவதாம். அத னுல் ஈசுவரனுக்கும் கர்த்தாவை யங்கீகரித்தல் வேண்டும். அந்த ஈசுவரனுக்குக் கர்த்தாவாதல் பொருந்தாது. ஏனெனின், தான் தனக்குக் கர்த்தாவாதல் பொருந்தாது. தனக்குக் கர்த்தா தானே யென்று அங்கீகரிக்கின், ஆத்மாசிரய தோஷ முண்டாகும்.

தானே கிரியையின் கர்த்தாவும், தானே கிரியையின் கர்மமு மாயின் அப்போது ஆத்மாசிரய மாகும். எங்ஙனம் குயவன் கிரி யையின் கர்த்தாவும், கடம் கர்மமு மாகின்றதோ, அங்ஙனமே கிரி யைக்குக் கர்த்தாவும், கர்மமும் வெவ்வேறு யிருக்கின்றன ; ஒன் றுதல் பொருந்தாது. ஆதலால் ஆத்மாசிரய தோஷ மிருக்கின்றது. காரியத்தின் பெயர் கர்மமாம். காரியத்தின் விரோதியின் பெயர்

தோஷமாம். ஆத்மாசிரயம் காரியத்திற்கு விரோதி யாகையால் தோஷமாம். ஆதலால் ஈசுவரனுக்குக் கர்த்தாவாக வேறொன்றை யங்கிகரிக்கும்படி நேரும். அந்த வேறு கர்த்தாவும் முதற் கர்த்தாவைப் போல கர்த்தாவினு லுண்டான தென்றே கூறல் வேண்டும். அந்தக் கர்த்தாவையும் முதற் கர்த்தாவிற்குப் போல் இரண்டாம் கர்த்தாவுக்குப் பிந்நமாகவே சொல்லல் வேண்டும். முதற் கர்த்தாவான ஈசுரவனே இரண்டாவது கர்த்தாவின் கர்த்தாவாக அங்கீரிக்கின், அந்நியோந்நியாசிரய தோஷ முண்டாகும். ஆதலால், வேறு மூன்றுவது கர்த்தாவை யங்கீகரித்தல் வேண்டும். அம்மூன்றுவது கர்த்தாவின் கர்த்தா இரண்டாவது கர்த்தாவெனக் கொள்ளின், அந்நியோந்நியாசிரய தோஷ முண்டாகும்; முதலெனக் கொள்ளின் சக்கிரிகா தோஷ முண்டாகும். எங்ஙனம் சக்கரத்தின் சுழற்சி யுண்டாகின்றதோ, அங்ஙனமே, முதற் கர்த்தா இரண்டாவதால் ஜநிக்கற்பாலதும், இரண்டாங் கர்த்தா மூன்றுவதால் ஜநிக்கற்பாலதும், மூன்றுங் கர்த்தா முதலாவதால் ஜநிக்கற்பாலதும், அம்முதல் கர்த்தா மீண்டும் இரண்டாவதால் ஜநிக்கற் பாலதாம் என்று இவ்வாறு காரிய காரணத்தன்மைகளின் சுழற்சி யுண்டாம். சக்கிரிகா ஸ்தாநத்தில் எதுவும் சித்திக்கின்ற தில்லை. எல்லாவற்றிற்கும் பரஸ்பராபேக்ஷை யிருக்கின்றது. அந்நியோந்நியாசிரயத்தில் இரண்டன் பரஸ்பராபேக்ஷை யிருக்கின்றது. ஒன்றன் சித்தி யின்றி மற்றொன்றன் சித்தி யுண்டாவ தில்லை. ஆதலால், எங்ஙனம் குயவனுக்குக் கர்த்தா தானுகாது அவனது பிதாவாவனே, அங்ஙனமே, முதல் ஈசுவரனுகிய கர்த்தாவிற்கு வேறு கர்த்தா இருத்தல் வேண்டும். குயவனுடைய பிதா தன் புத்திரனிடத்தினின்றும் உற்பத்தியாவ தில்லை; பின்னரோ, அந்நிய பிதாவினின்றும் உற்பத்தியாகின்றனனே, அங்ஙனமே இரண்டாவது கர்த்தா முதற் கர்த்தாவினின்றும் உற்பத்தியாகாமல் வேறு கர்த்தாவினின்றுமே உற்பத்தியாவதாகக் கூறல் வேண்டும். குயவனுடைய பாட்டன் குயவனிடத்தினின்றும், அவன் பிதாவினிடத்தினின்றும் பிறக்காமல், நான்காவது குயவனது பிரபிதாமக னிடத்தினின்றும் பிறக்கின்றான். அங்ஙனமே மூன்றுவது கர்த்தாவும் முதலாவது இரண்டாவது கர்த்தாக்களினின்று முண்டாகின்ற தில்லை. ஆதலால் நான்காவதான கர்த்தாவை வேறாக அங்கீகரித்தல் வேண்டும். அந்த நான்காவதற்கு

ஐந்தாவதான வேறு கர்த்தா அங்கிகரித்தல் வேண்டும். இதனல் அநவஸ்தா தோஷ முண்டாகும். அநவஸ்தை யென்பது தாரைக் காம்.

கர்த்தாவின் தாரையை அங்கீகாரஞ் செய்யின் எந்தக் கர்த்தா ஜகத்தைச் செய்கின்ருரென்னும் நிச்சய முண்டாகாது. எவரேனு மொருவரை ஜகத்திற்குக் கர்த்தாவாகக் கொள்ளுதலில் ஒரு யுக்தியு மில்லை. அந்த யுக்தியின் அபாவத்திற்கே விநிகமந விரக மென்று பெயர். தாரைக்கு ஓரிடத்தில் விஶ்ராந்தியை அங்கீகரிக்கின், எந்தக் கர்த்தாவில் தாரையின் அந்த மங்கீகரிக்கப்படுகின்றதோ, அந்தக் கர்த்தாவையே ஜகத் கர்த்தாவாக அங்கீகரித்தல் யோக்யமாம். (அதற்கு) முற்பட்டவை யாவும் நிஷ்பலமாம். இதனையே பிராக் லோபம் என்பர். பின் (முன்) னுள்ள அபாவத்திற்குப் பிராக் லோப மென்று பெயராம்.

இவ்வாற்ருல், ஈசுவரனுக்குத் தேசத்தினு லந்த முண்டென அங்கீகரிக்கின், உத்பத்தியினை அங்கிகரித்தல் வேண்டும். உற்பத்தியினை அங்கீகரிக்கின் ஆத்மாசிரய முதலிய ஆறு தோஷங்களுண்டாகின்றன. ஆதலால், ஈசுவரனுக்குத் தேசத்தினல் அந்தம் இல்லை. ஆனல், ஈசுவரன் வியாபகன்; இதனுலேயே நித்தியனுவன்.

### 374. ஈசுவரனுக்கும் ஜீவனுக்கும் சொரூபமாகப் பேத மில்லையெனல்.

அந்த வியாபக ஈசுவரனுக்கும், ஜீவனுக்கும் சொரூபமாகப் பேத மில்லை; உபாதியால் பேத முண்டு. ஏனெனின், அவச்சேத வாதத்தில், மாயா விசிஷ்ட சேதநம் ஈசுவர னெனப்படும்; அவித்தியா விசிஷ்ட சேதநம் ஜீவ னெனப்படும். ஆபாஸ வாதத்தில், ஆபாஸ சகித மாயா விசிஷ்ட சேதநம் ஈசுவர னெனப்படும்; ஆபாஸ சகித அவித்யா விசிஷ்ட சேதநம் ஜீவ னெனப்படும். ஆபாஸ வாதத்தில் ஆபாஸ சகித அவித்தைக்கும் (ஆபாஸ சகித) மாயைக்கும் பேத மிருக்கின்றது; சேதநங்கட்குப் பேத மில்லை.

அங்ஙனமே, அவச்சேத வாதத்திலும் அவித்தைக்கும் மாயைக்கும் பேத மிருக்கின்றது; சொரூபமாகச் சேதநத்திற்குப் பேத மில்லை. அஞ்ஞாநத்தி லுள்ள சேதநத்தின் பிரதி பிம்பம் ஜீவனும்; பிம்பம் ஈசுவரனும்.

இந்தப் பக்ஷத்திலும் சேதநத்திற்குச் சொரூபமாகப் பேத மில்லை. பின்னரோ, ஒரு சேதநத்திலேயே ஜீவத்தன்மையும், ஈசுவரத்தன்மையும் ஆரோபிக்கப்பட் டிருக்கின்றன. இவ்வார்த் தை மேற் புகலப்படும். இவ்வாற்றால், ஜகத்தின் கர்த்தா சர்வஞ்ஞ னும், சர்வ சக்திமானும், ஸ்வதந்தரனுமு முள்ள ஈசுவரனே யாவன்.

அந்த ஈசுவரன் வியாபகன். அவனுக்கும், ஜீவனுக்கும் விசே ஷண மாத்திரத்தினாற் பேதமாம்; ஸ்வரூபமாகப் பேத மில்லை. இஃது இரண்டாவது பிரஸ்நத்தின் உத்தரமாம்.

## "மோக்ஷத்திற்குக் காரணம் யாது?" என்பதன் உத்தரம்.

### 375. மோக்ஷத்திற்குக் காரணம் ஞானமா மேனல்.

"மோக்ஷத்திற்குச் சாதநம் ஞானமா? அல்லது, கர்மமா? அல்லது, உபாஸனையா? அல்லது, இரண்டுமா?" என்னுங் கேள் விக்கு உத்தரங் கூறுகின்றோம்.

முக்திக்குக் காரணம் கர்மமு மன்று; உபாஸனையு மன்று; ஆனால் ஞானமே காரணமாம். ஏனெனின், ஆத்மாவி னிடத்தில் பந்தம் சத்தியமா யிருக்குமாயின், அதன் நிவிருத்தி ரூப மோக்ஷம் ஞானத்தின லுண்டாகாது; ஆனால் கர்மம் அல்லது, உபாஸனை யின லுண்டாகும். அந்தப் பந்தம் ஆத்மாவினிடத்தில் சத்தியமா யிருப்ப தில்லை; பின்னரோ, ரஜ்ஜு சர்ப்பம் போல் மித்தையா யிருக்கின்றது. அந்த மித்தையின் நிவிர்த்தி அதிஷ்டாந ஞானத் தினனேயே பொருந்துகின்றது. கர்மம் அல்லது உபாஸனையினால் நிவிருத்தியாவ தில்லை. எங்ஙனம் ரஜ்ஜுவின் சர்ப்பம் எந்தக் கிரி யையினாலும் நிவிருத்தி யாகாமல் கேவலம் ரஜ்ஜு ஞானத்தினால் நிவிருத்தி யாகின்றதோ, அங்ஙனமே ஆத்மாவின் அஞ்ஞானத்தி னால் தோற்றும் பந்தத்தின் பிரதீதியும், அஞ்ஞானமும் ஆத்மாவின் ஞானத்தினாலேயே நிவிருத்தி யாகின்றது.

### 376. கர்மோபாஸனைகள் மோக்ஷ சாதநங்கள் அன் றேனல்.

கர்மத்தின் பலன் மோக்ஷமாயின், மோக்ஷம் அநித்தியமா கும். ஏனெனின், கிருஷியாதி கர்மங்களின் பலன் அந்நாதிக ளாம். அவை அநித்தியமாம்; யஞ்ஞாதி கர்மங்களின் பலனாகிய

சுவர்க்காதிகளும் அநித்தியமாம் என்பது நியமமாம். மோக்ஷமும் கர்மத்தின் பலனென்று அங்கீகரிக்கின் அநித்தியமாகும். ஆதலால் கர்மத்தின் பலன் மோக்ஷ மன்றாம்.

உபாஸனையின் பல னென்று அங்கீகரிக்கினும் மோக்ஷம் அநித்தியமாகும். ஏனெனின், உபாஸனையும் மாநத கர்மமேயாம். கர்ம பலன் அநித்தியமா யிருத்தலால் உபாஸனா ரூப கர்மத்தின் பல னும் மோக்ஷ மன்றாம்.

377. கர்மத்தைச் செய்கின்றவனுக்குக் கர்மத்தினால் ஐந்து வித உபயோகங்கள் உண்டாகின்றன:—

பதார்த்தத்தி னுற்பத்தி, பதார்த்தத்தின் நாசம், பதார்த்தத்தின் பிராப்தி, பதார்த்தத்தின் விகாரம், சம்ஸ்காரம் என்பனவாம். அந்நிய ரூபத்தை யடைதல் விகாரமாம். சம்ஸ்காரம், மலத்தின் நிவிருத்தியும் குணத்தின் உற்பத்தியும் என இருவகைத்தாம். இவ் வைந்துவித உபயோகங்களும் கர்மத்தினால் உண்டாகின்றன. அவற்று ளொன்றும் முமுக்ஷுவிற்குப் பொருந்தா. ஆதலால், முமுக்ஷு ஞாநத்தின் சாதநமான சிரவணாதிகளிலேயே பிரவிர்த்திக்கின்றான்; கர்மத்தில் பிரவிர்த்திக்கின்றதில்லை.

குலாலனுடைய கர்மத்தினால் குலாலனுக்குக் கடத்தின் உற்பத்தியாகிய உபயோக முண்டாகின்றது. அதுபோல் முமுக்ஷுவிற்குக் கர்மத்தினால் மோக்ஷத்தின் உற்பத்தியாகிய உபயோகம் பொருந்தாது. ஏனெனின், அநர்த்தத்தின் நிவிருத்தியும் பரமாநந்தத்தின் பிராப்தியும் மோக்ஷமாம். அந்த அநர்த்தத்தின் நிவிருத்தி ஆத்மாவினிடத்தில் நித்திய சித்தமா யிருக்கின்றது. அது ரஜ்ஜுவினிடத்தில் சர்ப்பத்தின் நிவிருத்தி நித்திய சித்தமா யிருப்பது போலாம். ஆத்மா பரமாநந்த ஸ்வரூபமா யிருத்தலால், பரமாநந்தப் பிராப்தியும் நித்திய சித்தமாம். இவ்வாற்றால், ஸ்வபாவசித்தமான மோக்ஷத்தின் உற்பத்தி, கர்மத்தினால் பொருந்துவ தில்லை. எந்த வஸ்து முன் னிருக்க வில்லையோ, அதன் உற்பத்தி கர்மத்தினா லுண்டாகும்; சித்தமாயுள்ள வஸ்துவின் உற்பத்தி யுண்டாவ தில்லை.

378. வேதாந்த சிரவணமும் மோக்ஷத்தின் உற்பத்தியின் பொருட்டாகக் கூறப்பட வில்லை. பின்னரோ, "ஆத்மா நித்திய முக்தன்; கிஞ்சித் மாத்திரமும் கர்த்தவ்விய மில்லை" என்

னும் வார்த்தையினை அறிவதன் பொருட்டுச் சிரவணமாம். இதனை யறிவதனால், கர்த்தவ்வியப் பிராந்தி நிவிருத்தியாய் விடுகின்றது.

வேதாந்த சிரவணத்தின் பின்னரும் எவனுக்குக் கர்த்தவ்வியம் தோற்றுகின்றதோ அவன் தத்துவம் அறிந்தவ னல்லன். இக்காரணத்தினால் நித்திய நிவிருத்தியான அநர்த்தத்தின் நிவிருத்தியும், நித்தியப் பிராப்தமான ஆநந்தத்தின் பிராப்தியும் வேதாந்த சிரவணத்தின் பயனென்று தேவ குருவால் நைஷ்கர்மிய சித்தி நூலிற் கூறப்பட் டிருக்கின்றது. ஆதலால், மோக்ஷத்தின் உற்பத்தி ரூப கர்மத்தி னுபயோகம் முமுக்ஷுவிற்குப் பொருந்துவ தில்லை.

379. எங்ஙனம் தடியா லடித்தல் வடிவ செய்கைக்குக் கட நாச ரூப உபயோக முண்டாகின்றதோ, அங்ஙனமே முமுக்ஷுவிற்குக் கர்மத்தினால் எந்தப் பதார்த்தத்தின் நாச ரூப உபயோகமும் பொருந்துவ தில்லை. ஏனெனின், அந்நிய பதார்த்தங்களின் நாசம் முமுக்ஷுவினால் இச்சிக்கப்பட மாட்டாது; பந்த நாசமே கர்மத்தி னுபயோகமாகக் கூறல் வேண்டும். அந்தப் பந்தம் ஆத்மாவி லிருப்ப தில்லை; மித்தையாகப் பிரதீதி யாகின்றது. அந்த மித்தியாப் பிரதீதியின் நாசம் கர்மத்தினால் பொருந்துவ தில்லை. ஆத்மாவின் யதார்த்த ஞானத்தினானேயே மித்தியாப் பிரதீதியின் நாசம் பொருந்துகின்றது. ஆதலால், முமுக்ஷுவிற்குப் பதார்த்தத்தின் நாச ரூப உபயோகமும் கர்மத்தினால் பொருந்துவ தில்லை.

எங்ஙனம் கமந (நடத்தல்) ரூப கர்மத்தினால் கிராமத்தின் பிராப்தி யுண்டாகின்றதோ, அங்ஙனமே மோக்ஷத்தின் பிராப்தி ரூப உபயோகம் கர்மத்தினால் பொருந்துவ தில்லை. ஏனெனின், நித்திய முக்தமான ஆத்மாவிற்கு மோக்ஷத்தின் பிராப்தி கூறுதல் பொருந்தாது. எவனுக்குப் பந்த மிருக்கின்றதோ, அவனுக்கு மோக்ஷத்தின் பிராப்தி கூறுதல் பொருந்தும். ஆத்மாவில் பந்த மில்லாததினால் மோக்ஷப் பிராப்தி ரூபமான கர்மத்தி னுபயோகம் முமுக்ஷுவிற்குப் பொருந்தாது.

எங்ஙனம் பாக (சமையல்) ரூப கர்மத்தினால் அந்நத்தின் விகார ரூப உபயோகம் பாசகனுக்கு உண்டாகின்றதோ, அங்ங

னமே முமுக்ஷுவிற்குக் கர்மத்தினல் விகார ரூப உபயோகமும் பொருந்துவ தில்லை. ஏனெனின், வேறொரு விகாரமும் பொருந் தாது. ஆத்மாவில் முதலில் பந்தத்தை யங்கீகரித்து மோக்ஷ தசையில் சதுர்ப்புஜாதி விலக்ஷண ரூபத்தின் அடைவு அங்கீகரிக் கின், அந்நிய ரூபத்தின் பிராப்திரூப விகாரம் முமுக்ஷுவிற்குக் கர்மத்தி னுபயோகமாதல் பொருந்தும். அந்த அந்நிய ரூபத்தின் பிராப்தி ஆத்மாவில் அங்கீகார மில்லை. ஆதலால், கர்மத்தினல் விகார ரூப உபயோகமும் முமுக்ஷுவிற்குப் பொருந்துவ தில்லை.

எங்ஙனம் வஸ்திரத்தினைத் தோய்த்தல் ரூப கர்மத்திற்கு மலத்தின் நிவிருத்தி (அழுக்கு நீங்குதல்) ரூப சம்ஸ்கார முண் டாகின்றதோ, அங்ஙனமே மலத்தின் நிவிருத்தி ரூப சம்ஸ்கார மும் முமுக்ஷுவிற்குக் கர்மத்தினல் உபயோகப் படுகின்ற தில்லை. ஏனெனின், வேறொன்றன் மல நிவிருத்தியை முமுக்ஷு இச் சிப்ப தில்லை. ஆத்மாவின் மல நிவிருத்தி கூறல் வேண்டும். அந்த ஆத்மா நித்திய சுத்தம்; அதனிடத்தில் மல மிருப்ப தில்லை. ஆத லால், மலத்தின் நிவிருத்தி ரூப சம்ஸ்காரம் பொருந்துவ தில்லை.

அந்தக்கரணத்தி லுள்ள பாப ரூப மலத்தின் நிவிருத்தி கர் மத்தினல் உபயோக மெனின், இவ்வார்த்தை சத்தியமாம். ஆனல் சுத்த அந்தக்கரண முடைய முமுக்ஷுவினை விசாரிக்குமிடத்து அவனுடைய அந்தக்கரணத்திலும் பாப மில்லை. அதனல் பாப ரூப மலத்தின் நிவிருத்தி ரூப சம்ஸ்காரமும் முமுக்ஷுவிற்குக் கர்மத்தினல் உபயோகமாதல் பொருந்தாது. அஞ்ஞானத்தை மல மெனின் அந்த அஞ்ஞானம் ஆத்மாவி லிருப்பினும், அதன் நிவி ருத்தி கர்மத்தினல் உண்டாவ தில்லை. ஏனெனின், அஞ்ஞானத் தின் விரோதி ஞானமாம்; கர்ம மன்றாம். ஆதலால், முமுக்ஷு விற்கு மலத்தின் நிவிருத்தி ரூப சம்ஸ்காரம், கர்மத்தினல் உப யோகமாதல் பொருந்தாது.

எங்ஙனம் வஸ்திரத்திற்குக் குசுமத்தில் நனைத்தல் ரூப கர்ம த்திற்கு, ரக்த குணத்தின் உற்பத்தி ரூப சம்ஸ்காரம் உபயோக மாகின்றதோ, அங்ஙனமே முமுக்ஷுவிற்குக் கர்மத்தினல் குண த்தின் உற்பத்தி ரூப சம்ஸ்காரம் உபயோகமாதல் பொருந்தாது. ஏனெனின், அந்நியவற்றில் அந்தக் குணத்தின் உற்பத்தி கூறு தல் பொருந்தாது; ஆத்மாவிலேயே கூறல் வேண்டும். அந்த ஆத்மா நிர்க்குணமாம். அதனிடத்தில் குணேற்பத்தி பொருந்

தாது. ஆதலால், முமுக்ஷுவிற்குக் குணத்தின் உற்பத்தி ரூப சம்ஸ்காரமும் கர்மத்தின் உபயோகமாதல் பொருந்தாது. இப் பிரகரணத்தில் உபயோக மென்பது பலத்திற்காம். கர்மத்திற்கு ஐந்து பிரகாரமான பலன்களே உண்டாகின்றன ; வேறு பலன் உண்டாகின்ற தில்லை. அவ் வைந்து வித கர்ம பலனும் முமுக்ஷு விற்குப் பொருந்துகின்ற தில்லை. ஆதலால், முமுக்ஷு கர்மத் தினைத் தியாகஞ் செய்து ஞானத்திற்குச் சாதனமான சிரவணத்தி லேயே பிரவர்த்திக் கின்றான்.

உபாஸனையும் மானத கர்மமே யாம். ஆதலால், அதன் கண்டனத்தில் வேறாக யுக்தி கூறப்பட வில்லை.

இவ்வாற்றால், கேவல கர்ம மாவது, உபாஸனையாவது மோக்ஷ த்திற்கு ஹேது வன்றாம் ; பின்னரோ, கேவல ஞானம் மோக்ஷ த்திற்கு ஹேதுவாம்.

380. ஆக்ஷேபம்:—கர்மமும் உபாசனையும் ஞானத்திற்கும் மோக்ஷத்திற்கும் ஏதுவாம் எனல்.

சிலர் கர்ம உபாஸனைகளோடு கூடிய ஞானத்தை மோக்ஷத் திற்கு ஹேதுவாக அங்கீகரிக்கின்றார்கள். அதில் யுக்தி திருஷ் டாந்தங்களுஞ் சொல்லுகின்றார்கள்.

எங்ஙனம் ஆகாசத்தில் ஒரிறகினால் பக்ஷிகளால் பறக்க முடி யாது ; ஆனால், இரண்டு இறகுகளால் பறத்தல் உண்டாகின்ற தோ, அங்ஙனமே, மோக்ஷ லோகத்திற்கும் ஞான ரூப ஒரு பக்ஷ த்தினால் செல்லல் கூடாது ; ஆனால், ஒரு பக்ஷமோ உபாசனா சகித கர்மமாம் ; இரண்டாவது பக்ஷம் ஞாந மாம். உபாசனை யும் மானத கர்மமே யாம். ஆதலால், (கர்மமும் உபாஸனையும்)ஒரு பக்ஷமேயாம்.

381. வேறு திருஷ்டாந்தம்:—எங்ஙனம், சேது தரிசநத்தி னால் பாபம் நாசமாகின்றது ; அந்தச் சேது தரிசநமும் பிரத்தி யக்ஷ ரூப ஞானமாம். சிரத்தா பக்தியுடன் போக வேண்டிய நியமத்தை அஃது அபேக்ஷிக்கின்றது. சிரத்தாதிக ளில்லாதவ னுக்குச் சேது தரிசநத்தினால் பல னுண்டாகின்ற தில்லை. எங்ங னம், சேதுவின் பிரத்தியக்ஷ ஞானம் பல உற்பத்தியில் சிரத்தை நியமாதிகளை யபேக்ஷிக்கின்றதோ, அங்ஙனமே, பிரஹ்ம ஞான மும் மோக்ஷரூப பல உற்பத்தியில் கர்ம உபாஸனைகளை யபேக்ஷிக் கின்றது.

கேவல ஞானத்தினுல் மோக்ஷ முண்டாகு மென்று அங்கீகரிக்கின்றவனும் கர்ம உபாஸனைகளை ஞானத்திற்கு ஹேதுவாக அங்கீகரிக்கின்ருன். சுத்தமாயும், நிச்சலமாயு முள்ள அந்தக்கரணத்தில் ஞான முண்டாகின்றது. அந்த அந்தக்கரணம் சுப கர்மத்தினுல் சுத்தமாகின்றது. உபாஸனையினுல் நிச்சலமாகின்றது. இவ்வாற்ருல், அந்தக்கரணத்தின் சுத்தி நிச்சலத் தன்மை வாயிலாகக் கர்மோபாஸனைகள் ஞானத்திற்கு ஹேதுவாக அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன.

382. எங்ஙனம், ஞானத்திற்கு ஹேதுவாகக் கர்ம உபாஸனைகள் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றனவோ, அங்ஙனமே ஞானத்தின் பலனுகிய மோக்ஷத்திற்கு ஹேதுவாகவும் அங்கீகாரஞ் செய்தல் யோக்யமாம்.

திருஷ்டாந்தம்:—ஜலம் விடுதல் விருக்ஷத்தின் உற்பத்திக்கும், விருக்ஷத்தின் பலத்தின் உற்பத்திக்கும் ஹேதுவாகின்றது. காட்டி லுள்ள மரங்களின் பலன்கள் ஜலம் விடாமலே யுண்டாகின்றன வென்று கூறும் பக்ஷத்தில், அதுவும் விருக்ஷத்தின் மூலத்தில் பூமியி லுள்ள ஜலத்தின் சம்பந்த மிருக்கின்றது; அதனுல் பல னுண்டாகின்றது. ஜல சம்பந்த மில்லாவிடின் விருக்ஷமே காய்ந்துபோம்; பலனு முண்டாகாது. அது போலக் கர்ம உபாஸனைகள் ஞானேற்பத்திக்கும், ஞானத்தின் பலனுகிய மோக்ஷத்திற்கும் ஹேதுவா யிருக்கின்றன. இவ்வாற்ருல், கர்மம் உபாஸனை ஞானம் என்னும் மூன்றும் மோக்ஷத்திற்கு ஹேதுக்களா யிருக்கின்றன. ஆதலால், ஞானியுங் கர்மஞ் செய்தல் வேண்டும்.

383. அல்லது, கர்ம உபாஸனைகள் ஞானத்தை ரக்ஷிப்பதற்கு ஹேதுக்களா யிருக்கின்றன. ஏனெனின், கர்மோபாஸனைகளை ஞானி விடும்பக்ஷத்தில் உண்டான ஞானமும் ஜல மின்றி யிருக்கின்ற விருக்ஷம் போன்று நஷ்டமாய் விடும். ஏனெனின், சுத்தமான அந்தக்கரணத்தில் ஞான முண்டாகின்றது. சுப கர்மத்தைச் செய்யாவிடின், ஞானிக்குப் பாப முண்டாகும். உபாஸனையின் தியாகத்தினுல் அந்தக்கரணம் மீண்டும் சஞ்சலத்தை யடையும். அந்த மலினமும் சஞ்சலமுமா யுள்ள அந்தக்கரணத்தில் ஞானம் இருப்ப தில்லை. அது வறண்ட பூமியி லுண்டாயிருக்கும் விருக்ஷமும் இல்லாதது போலாம்.

வேறு திருஷ்டாந்தம்:—சம்ஸ்காரத்தினல் சுத்தஞ் செய்யப் பட்ட இடத்தில் வேதாத்தியயநஞ் செய்யும் பிரஹ்மசாரி வசிக் கின்ருன். சுத்தஞ் செய்யப்பட்ட ஸ்தாநமும் சில நிமித்தத்தினல் மீண்டும் மலிநமாகுமாயின், (அவன்) அவ்விடத்தை விட்டுவிடு கின்ருன். அதுபோல் கர்மத்தை விடுவதனல் மலிநமும், உபா ஸனையை விடுவதினல் சஞ்சலமுமுண்டாயிருக்கிற அந்தக்கரணத் தில் ஞாநமிருப்பதில்லை. ஆதலால், கர்மமும், உபாஸனையும் ஞாந த்தை ரக்ஷிப்பதற்கு ஹேதுக்களாகின்றன. இவ்வாற்ருல், கர்மம் உபாஸனை ஞாநம் என்னும் மூன்றும் மோக்ஷத்திற்கு ஹேது வாக அங்கீகரிக்கப் படுகின்றன. அங்ஙனமே, கர்மோபாஸனை கள் ஞாந ரக்ஷணைக்கு ஹேதுவாயும், கேவலம் ஞாநம் மோக்ஷத்திற்கு ஹேதுவாயும் அங்கிகரிக்கப் படுகின்றன. இவ் விரு பக்ஷங்களிலும் ஞாநிக்குக் கர்மோபாஸனைகள் கர்த்தவ்யங் களாம். இதனைச் சமுச்சய வாதமென்பர்.

### 384. கர்ம உபாஸனைகளோடு ஞாநத்திற்கு விரோதமுண்டெனல்.

அது (சமுச்சய வாதம்) நலமுடையதன்று. ஏனெனின், தேகத்திற்கு வேருக ஆத்மாவையறியாததால் கர்மம் உண்டா கின்றதில்லை. ஏனெனின், ஜந்மாந்திரத்தினது போகத்தின் பொருட்டுக் கர்மத்தைச் செய்கின்ருன். தேகமோ அக்கினியில் தகிக்கப்பட்டுப் போகின்றது. அதனல், ஜந்மாந்தரத்தின் போகம் பொருந்தாது. ஆதலால், சரீரத்திற்கு வேருன ஆத்மா வின் ஞாநம் கர்மத்திற்கு ஹேதுவாம். அது சரீரத்திற்கு வேருயினும், ஆத்மா கர்த்தா போக்தா ரூபமாக விருக்கின்ற தென்னும் ஞாநம் கர்மத்திற்கு ஹேதுவாயிருக்கின்றது. "நான் புண்ணிய பாபங்களைச் செய்கின்றேன். அவற்றின் பலன் எனக் குண்டாகும்" என்று எவனுக்கு ஞாநம் இருக்கின்றதோ, அவன் கர்மத்தைச் செய்கின்ருன். ஞாநியோ ஆத்மாவை இவ்வாறு அறி கின்றதில்லை. ஆனல் "புண்ணிய பாபங்கள் சுக துக்கங்களின் றிய அசங்கமான பிரஹ்ம ரூபமாய் ஆத்மா இருக்கின்றது" என் னும் ஞாநம் வேதாந்த வாக்கியத்தாலுண்டாகின்றது. அந்த ஞாநம் கர்மத்திற்கு ஹேதுவன்று; மாருன விரோதியாயிருக் கின்றது. ஆதலால், ஞாநியினல் கர்மமுண்டாகின்றதில்லை.

கர்த்தா கர்ம பலன்களின் பேத ஞாநம், கர்மத்திற்கு ஹேது வாம். அந்தக் கர்த்தாவும், கர்ம பலனும் ஆத்மாவிற்கு வேருக

ஞானிக்குத் தோற்றுகின்ற தில்லை. எல்லாம் ஆத்ம ஸ்வரூபமாகவே பிரதீதி யாகின்றன. இதனாலும் ஞானியினால் கர்ம முண்டாகின்ற தில்லை.

ஞானிக்குக் கர்மம் இல்லை யென்பதைப் பாஷியகாரர் அநேக விதமாகச் சொல்லியிருக்கின்றார். கர்மத்திற்கும், ஞானத்திற்கும் பலத்தால் விரோத முண்டு. இதனாலும் ஞாந கர்மங்களின் சமுச்சயம் பொருந்துவ தில்லை. கர்மத்தின் பலன் அநித்திய சமுசாரமாம். ஞானத்தின் பலன் நித்திய மோக்ஷமாம்.

385. ஆத்மாவில் ஜாதி, ஆசிரமம், அவஸ்தை என்பவற்றின் அத்தியாஸம் கர்மத்திற்கு ஹேதுவா யிருக்கின்றது. ஏனெனின், ஜாதி ஆசிரம அவஸ்தைகட்கு யோக்யமான பிந்ந பிந்ந கர்மங்கள் கூறப்பட் டிருக்கின்றன. அதனால், ஜாதி முதலியவற்றின் அத்தியாஸம் கர்மத்திற்கு ஹேதுவா யிருக்கின்றது.

ஜாதி ஆசிரம அவஸ்தைகள் தேகத்தின் தர்மங்கள். கர்மிக்குத் தேகத்தில் ஆத்ம புத்தி இல்லை. ஆனால், கர்மி தேகத்திற்கு வேறான ஆத்மாவைக் கர்த்தாவாக அறிகின்றான். இவ் வார்த்தை முன்னர்க் கூறப்பட் டிருக்கின்றது. ஆதலால், ஆத்மாவி னிடத்தில் ஜாதி ஆசிரம அவஸ்தைகளின் பிரதீதி கர்மிக்கும் பொருந்தாதா மாயினும், கர்மிக்குத் தேகத்தினும் பிந்நமான ஆத்மாவின் அபரோக்ஷ ஞாந மில்லை. ஆனால், சாஸ்திரத்தினால் பரோக்ஷ ஞாந மிருக்கின்றது. தேகத்தில் ஆத்ம ஞாநம் அபரோக்ஷமா யிருக்கின்றது. தேகத்தினும் பிந்நமான ஆத்மாவின் அபரோக்ஷ ஞாந மிருக்குமாயின், அது தேகத்தில் அபரோக்ஷ ஆத்ம ஞாநத்திற்கு விரோத மாகும். பரோக்ஷ ஞாநத்திற்கு அபரோக்ஷ ஞாநத்தோடு விரோத மில்லை. ஆதலால், தேகத்தினும் பிந்நமான கர்த்தாவாகிய ஆத்மாவின் ஞாநமும், தேகத்தில் ஆத்ம புத்தியும் இரண்டும் ஒருவனுக்குப் பொருந்து கின்றன.

திருஷ்டாந்தம்:—மூர்த்தியில் ஈசுவர ஞாநம் சாஸ்திரத்தினால் பரோக்ஷமா யிருக்கின்றது. பாஷாண புத்தி அபரோக்ஷமா யிருக்கின்றது; அவற்றிற்கு விரோத மின்று. இரண்டும் ஒருவனுக்கு உண்டாகின்றன. ரஜ்ஜுவில் எவனுக்குச் சர்ப்பத்தினும் வேறான அபரோக்ஷ ஞாந மிருக்கின்றதோ, அவனுக்கு அபரோக்ஷ சர்ப்பப் பிராந்தி நிவிருத்தி யாகின்றது.

இதனுல், அபரோக்ஷப் பிராந்திக்கு அபரோக்ஷ ஞானத்தோடு விரோத முண்டு ; பரோக்ஷத்தோடு விரோத மில்லை யென்னும் நியமம் சித்த மாயிற்று. ஆதலால், தேகத்தினும் பிந்நமான ஆத்மாவின் பரோக்ஷ ஞானமும், தேகத்தில் அபரோக்ஷ ஞானமும் பொருந்துகின்றன. அவ்விரண்டும் கர்மத்திற்கு ஹேதுக்களாம்.

தேகத்தினும் பிந்ந மாகவும், கர்த்தா ரூபமான ஆத்மாவின் ஞானம் கர்மத்திற்கு ஹேதுவா யிருக்கின்றது. அந்தக் கர்த்தா ரூபமான ஆத்மாவின் ஞானம் பிராந்தி ரூபமா யிருக்கின்றது. வித்துவானுக்குப் பிராந்தி இல்லை. ஆதலால், வித்துவானுக்குக் கர்மாதிகார மில்லை.

தேகத்தில் அபரோக்ஷ ஆத்ம புத்தி இருக்கு மாயின் அப்போது தேகத்தின் தர்மங்களாகிய ஜாதி ஆசிரம அவஸ்தைகள் பிரதீதியாம். அந்தத் தேகத்தி லுண்டாம் ஆத்ம புத்தியும் வித்துவானுக் கில்லை. ஆனுல், பிரஹ்ம ரூபமாக ஆத்மாவின் அபரோக்ஷ ஞான மிருக்கின்றது. ஆதலால், ஜாதி ஆசிரம அவஸ்தைகளின் பிராந்தியின் அபாவத்தினுலும் வித்துவானுக்குக் கர்மாதிகார மில்லை.

"நான் உபாஸகன், தெய்வம் உபாஸியம்" என்னும் புத்தியால் உபாஸனை சித்திக்கின்றது. வித்துவானுக்கு அவ்வுபாஸிய உபாஸக பாவங்களும் பிரதீதி யாகின்ற தில்லை. "என்னுடைய தேகாதிகளின் சங்காதமும், தெய்வதைகளின் தேகாதிகளின் சங்காதமும் சொப்பநம்போல் கற்பிதங்கள் ; சேதந மொன்றே யுள்ளது. இது வித்துவானுடைய நிச்சயமாம். ஆதலால், ஞானத்திற்கு உபாஸனையோடு விரோத மிருக்கின்றது.

386. பக்ஷியின் பறத்தல் திருஷ்டாந்தம் பொருந்தாது. ஏனெனின், பக்ஷியின் இரண் டிறகுகளும் ஒரேகாலத்தி லிருக்கின்றன. அவற்றிற்குப் பரஸ்பரம் விரோத மில்லை. ஞானத்திற்கோ கர்மோபாஸனைகளோடு விரோத முண்டு; ஒரு காலத்தில் பொருந்தா.

387. ஞானத்தில் கர்மோபாஸனைகளின் அபேக்ஷை யில்லை யெனல்.

சேது ஞானத்தின் திருஷ்டாந்தமும் பொருந்தாது. ஏனெனின், சேது தரிசநம் திருஷ்ட பலத்திற்கு ஹேது வன்று; ஆனுல், அதிருஷ்ட பலத்திற்கு ஹேதுவா யிருக்கின்றது.

பிரத்தியக்ஷமாய்ப் பிரதீதியாகும் பலம் திருஷ்ட பலமெனப் படும். எங்ஙனம் போஜநத்தின் பலனாகிய திருப்தி பிரத்தியக்ஷமா யிருத்தலால் போஜநம் திருஷ்ட பலத்திற்கு ஹேதுவா யிருக்கின்றதோ, அங்ஙனமே, சேதுவின் தரிசநத்தினால் பிரத்தியக்ஷ பலன் பிரதீதி யாகின்ற தில்லை. ஆனால், பாபத்தின் நாசரூப பலன் சாஸ்திரத்தினால் அறியப்படுகின்றது. எது சாஸ்திரத்தினால் பலன் அறியப்படுவதாய், பிரத்தியக்ஷமாய்ப் பிரதீதியாகாததா யிருக்கின்றதோ அஃது அதிருஷ்ட பலனெனப்படும்.

எங்ஙனம், யஞ்ஞாதி கர்மம் ஸ்வர்க்காதி அதிருஷ்ட பலத்திற்கு ஹேதுவாமோ, அங்ஙனமே, சேதுவின் தரிசநமும் பாப நாசரூப அதிருஷ்ட பலத்திற்கு ஹேதுவா யிருக்கின்றது. எது அதிருஷ்ட பலத்திற்கு ஹேதுவாகின்றதோ, அது பலத்தின் உற்பத்தியில் சாஸ்திரம் எவ்வளவு சகாய மென்று போதித்திருக்கின்றதோ, அதனோடுகூடி பலத்திற்கு ஹேதுவாகின்றது; கேவலம் ஹேதுவாகின்ற தில்லை. ஆதலால், சிரத்தை நியமாதிகளுடன் கூடிய சேது தரிசநம் பாப நாச ரூப பலத்திற்கு ஹேதுவாம். சிரத்தை நியமாதிக ளில்லாத சேது தரிசநம் பாப நாசத்திற்கு ஹேதுவாகின்ற தில்லை. ஏனெனின், சேது தரிசநத்தினால் பிரத்தியக்ஷமாக ஒரு பலனும் பிரதீதி யாகின்ற தில்லை; கேவலம் சாஸ்திரத்தினால் (பலன்) அறியப்பட் டிருக்கின்றது. அந்தச் சாஸ்திரம் சிரத்தாதிகளோடு கூடிய சேது தரிசநத்தினால் பலத்தைப் போதிக்கின்றது. கேவல தரிசநத்தினால் பலத்தின் உற்பத்தியில் ஒரு பிரமாணமும் இல்லை. ஆதலால், பலத்தின் உற்பத்தியில் சேது தரிசநம், சிரத்தை, நியமம், பக்திகளை அபேக்ஷிக்கின்றது.

388. பிரஹ்மவித்தை தன் பலத்தின் உற்பத்தியில் கர்மோபாஸனைகளை யபேக்ஷிக்கின்ற தில்லை. ஏனெனின், பிரஹ்ம வித்தையின் பலனும் சுவர்க்கம்போல் லோக விசேஷமான அதிருஷ்டமாயின், அந்த லோக விசேஷமும் கேவலப் பிரஹ்ம வித்தையாற் கிடைப்பதாகச் சாஸ்திரம் போதித் திராமல் கர்மோபாஸனையோடு கூடிய பிரஹ்ம வித்தையால் போதித்திருக்குமாயின், பிரஹ்ம வித்தையும் சேது தரிசநம் போல் பலத்தின் உற்பத்தியில் கர்மோபாஸனைகளை யபேக்ஷிக்கும். அந்தப் பிரஹ்ம வித்தையின் பலனாகிய மோக்ஷம் சுவர்க்கம் போல் லோக விசேஷ ரூப அதிருஷ்டமாகவே யில்லை. ஆனால், மோக்ஷம் நித்தியப்

பிராப்தமா யிருக்கின்றது. பிராந்தியினல் பந்தம் பிரதீதியாகின்றது. அந்தப் பிராந்தியின் நிவிருத்தியே பிரஹ்ம வித்தையின் பலனும். அந்தப் பிராந்தி நிவிருத்தி கேவலம் பிரஹ்ம வித்தையால் எனக்குப் பிரத்தியக்ஷமா யிருக்கின்றது. ரஜ்ஜு ஞானத்தினல் சர்ப்பப் பிராந்தியின் நிவிருத்தி எல்லோருக்கும் பிரத்தியக்ஷமாம். ஆதலால், பிராந்தி நிவிருத்தி அதிஷ்டாந ஞானத்தின் திருஷ்ட பலனும்.

திருஷ்ட பலத்தின் உற்பத்தி எவ்வளவு சாமக்கிரிகளால் பிரத்தியக்ஷமாய்ப் பிரதீதி யாகின்றதோ, அச் சாமக் கிரிகள் திருஷ்ட பலத்திற்கு ஹேதுக்க ளெனப் படுகின்றன.

எங்ஙனம், துரி தந்து வேமாக்களால் படத்தி னுற்பத்தி பிரத்தியக்ஷமா யிருக்கின்றது; ஆதலால், துரி தந்து வேமாக்கள் படத்திற்கு ஹேதுக்க ளாகின்றனவோ, கேவல போஜநத்தினல் திருப்தி ரூப பலன் பிரத்தியக்ஷமாய்ப் பிரதீதி யாகின்றது; ஆதலால் கேவல பொஜனம் திருப்திக்கு ஹேதுவா யிருக்கின்றதோ, அங்ஙனமே கேவல அதிஷ்டாந ஞானத்தினல் பிராந்தியின் நிவிருத்தி பிரத்தியக்ஷமாய்ப் பிரதீதி யாகின்றது. ஆதலால், கேவல அதிஷ்டாநத்தின் ஞானமே பிராந்தி நிவிருத்திக்கு ஹேதுவா யிருக்கின்றது.

எங்ஙனம், ரஜ்ஜு ஞாநம் பிராந்தி நிவிருத்தியில் வேறென்றையும் அபேக்ஷிக்கின்ற தில்லையோ, அங்ஙனமே பந்தப் பிராந்திக்கு அதிஷ்டாநமான நித்திய முக்த ஆத்மாவின் ஞாநமும், பந்தப் பிராந்தியின் நிவிருத்தியில் கர்மோபாஸனைகளை அபேக்ஷிக்கின்ற தில்லை.

389. ஞாநத்தின் பலமாகிய மோக்ஷத்தைச் சுவர்க்கம் போல் லோக விசேஷமான அதிருஷ்டமென அங்கீகரிக்கின், அது வேத வாக்கியத்தோடு விருத்தமாம். ஏனெனின், ஞாநியின் பிராணன் எந்த லோகத்திற்கும் செல்லுவ தில்லையென்று வேதத்தில் கூறப்பட் டிருக்கின்றது. லோக விசேஷத்தை அங்கீகரிப்பதனல் ஸ்வர்க்கம் போல் மோக்ஷம் அநித்தியமாகும். ஆதலால், மோக்ஷம் லோக விசேஷ ரூப மன்றும்.

லோக விசேஷத்தை மோக்ஷமென அங்கீகரிக்கின் அவனுக்கும் கேவலம் ஞாநத்தினலேயே மோக்ஷ லோகத்தின் அடைவு

அங்கீகரித்தல் யோக்யமாம். ஏனெனின், சாஸ்திரத்தினால் பிரதிபாதிக்கப்பட்ட அர்த்தம் சாஸ்திரா நுசாரமாகவே அங்கீகரிக்கப் படுகின்றது. அந்தச் சாஸ்திரமானது மோக்ஷம் கேவலம் ஞானத்தினு லுண்டாவதாகக் கூறுகின்றது. ஆதலால், கேவல ஞானம் மோக்ஷத்திற்கு ஹேதுவாம். கர்மம் உபாஸனை ஞானம் என்னும் மூன்றும் ஹேது வன்றாம்.

390. விருக்ஷத்தின் திருஷ்டாந்தமும் பொருந்ாது. ஏனெனின், ஜலம் விடுதல் விருக்ஷத்தின் உற்பத்தி ரக்ஷணைகளில் ஹேதுவா யிருக்கினும், விருக்ஷத்தின் பலோற்பத்தியில் காரண மன்று. முதிர்ந்த மரத்திற்கு ஜலம் விடுதல் விருக்ஷத்தின் ரக்ஷணையின் பொருட்டாம்; பலத்தின் பொருட் டன்றாம். ஜலத்தாற் புஷ்டியான விருக்ஷமே பலத்திற்கு ஹேதுவாம்; ஜலம் விடுதல் ஹேது வன்றாம். அங்ஙனமே, கர்மோபாஸனைகளும் ஞானத்தின் உற்பத்தியில் உபயோகமாம்; மோக்ஷத்திலன்றாம். ஆதலால், ஞானோற்பத்தியின் பூர்வமே அந்தக்கரணத்தின் சுத்தியின் பொருட்டும், நிச்சலத் தன்மையின் பொருட்டும் கர்மோபாஸனைகள் செய்யத் தக்கனவாம். ஞான முண்டான பின்னர் மோக்ஷத்தின் பொருட்டு (இவற்றை யநுஷ்டிக்க) வேண்டிய தில்லை.

ஞானத்தின் உற்பத்தியின் பூர்வமும் எதுவரையில் அந்தக்கரணத்தில் மல விக்ஷேபங்கள் இருக்கின்றனவோ, அது பரியந்தமே (கர்மோபாஸனைகளைச்) செய்தல் வேண்டும். எவனுடைய அந்தக்கரணம் சுத்தமாயும்,நிச்சலமாயு மாகின்றதோ,அந்த ஜிஞ்ஞாசுவானவன் சிரவணத்திற்கு விரோதியான கர்மோபாஸனைகளைத் தியாகஞ் செய்தல் வேண்டும். மல மென்பது பாவத்திற்காம். அஃது அசுப வாஸனைக்கு ஹேதுவா யிருக்கின்றது. எது பரியந்தம் மல மிருக்கின்றதோ அது பரியந்தம் அசுபவாசனை யிருக்கின்றது. எப்போது அசுபவாசனை யுண்டாக வில்லையோ அப்போது மலத்தின் அபாவம் நிச்சயிக்கப் படுகின்றது. அந்தக்கரணத்தின் சஞ்சலத் தன்மையும் ஏகாக்கிரத் தன்மையும் அநுபவ சித்தமா யிருக்கின்றன. ஆதலால், உத்தம ஜிஞ்ஞாசுவிற்கும், வித்துவானுக்கும் கர்மோ பாஸனைகள் நிஷ்பலமா யிருக்கின்றன.

### 391. கர்மோபாஸனைகளால் ஞானத்தின் இரக்ஷிப்பு உண்டாகா தெனல்.

"ஞானத்தின் ரக்ஷையின் பொருட்டுக் கர்மோபாசனைகளைச் செய்தல் வேண்டும். எங்ஙனம் ஜலத்தினால் உண்டாகும் விருக்ஷம் ஜலத்தினால் இரக்ஷிக்கப்படுகின்றதோ, ஜல சம்பந்த மில்லாவிடின் முதிர்ந்த விருக்ஷமும் காய்ந்து விடுகின்றதோ, அங்ஙனமே, கர்மோபானைகளா லுண்டாகும் ஞானம் கர்மோபாஸனைகளால் இரக்ஷிக்கப்படுகின்றது. ஞானி கர்மோபாஸனைகளைச் செய்யா விடின், அந்தக்கரணம் மீண்டும் மலினமும் சஞ்சலமு மாய்விடும். அந்த மலினமும் சஞ்சலமு முடைய அந்தக்கரணத்தில், நீரில்லா நிலத்திலுள்ள விருக்ஷம் போல, உண்டாயிருந்த ஞானமும் நஷ்ட மாய்விடும். ஆகையால், ஞானியும் கர்மோபாஸனைகளைச் செய்தல் வேண்டும்." என்று முன் கூறப்பட்டது. அது பொருந்தாது. ஏனெனின், ஆபாஸ சகித, அல்லது சேதந சகித அந்தக்கரணத்தின் "நான் அசங்கப் பிரஹ்மம்" என்னும் விருத்தி வேதாந்தத்தின் பலரூப ஞானமாம். அது கர்மோபாஸனைக ளின்றி நாச மாகும்; அல்லது சேதந சொரூப ஞானத்தின் நாச முண்டாகும்.

சொரூப ஞானமோ நித்தியமாம். ஆதலால், அதற்கு நாசமும் இரக்ஷிப்பும் பொருந்தா. ஆனால், வேதாந்தத்தின் பயனாகிய பிரஹ்மவித்யா ரூப ஞானத்தின் உற்பத்தி கர்மோசனைகளால் உண்டாகின்றது. கர்மோபாஸனைகளை விடுதலால் உற்பத்தியான வித்தையும் நஷ்டமாய்விடும். ஆதலால், அதன் ரக்ஷிப்பின் பொருட்டுக் கர்மோபாஸனைகளைச் செய்தல் வேண்டுமென்று கூறின், அது பொருந்தாது. ஏனெனின், ஒரு முறை யுண்டான அந்தக்கரணத்தின் பிரஹ்மாகார விருத்தியால் அஞ்ஞானம், பிராந்தி என்பவற்றின் நாசரூப பலன் அதே சமயத்தில் சித்திக்கின்றது. அஞ்ஞானம் பிராந்தி என்பவற்றின் நாசத்தின் பின்னர் மீண்டும் விருத்தியை ரக்ஷித்தலின் உபயோக மில்லை. கர்மோபாஸனைகளால் அந்தக்கரண விருத்தியை இரக்ஷித்தலும் பொருந்தாது. ஏனெனின், கர்மோபாஸனைகளை யநுஷ்டிக்கும்போது கர்மோசனைகளினது சாமக்கிரிகளின் விருத்திரூப ஞானமே உண்டாகும்; பிரஹ்மத்தின் ஞாந முண்டாக மாட்டாது. வேறு விருத்தி யுண்டாதலால் முதல் விருத்தி இருப்ப தில்லை. ஆதலால், கர்மோபாஸனைகள் ஞானோற்பத்திக்குப் பரம்பரையாய்

ஹேதுக்களாம்; உண்டான விருத்திக்கு விரோதிகளாம். ஆத லால், கர்மோபாஸனைகளால் ஞானம் இரக்ஷிக்கப்படமாட்டாது.

392. ஞானிக்குப் பாபமும் சஞ்சலத்தன்மையு மின்மையால் கர்மோபாஸனைகளின் உபயோக மில்லை யெனல்.

"ஞானிக்குக் கர்மத்தை விடுவதனுல் பாப முண்டாகின்றது" என்று முன் கூறப்பட்டது. அவ்வார்த்தை பொருந்தாது. ஏனெ னின், சுப கர்மத்தை விடுதல் பாபத்திற்கு ஹேதுவாகாது; பின்ன ரோ, நிஷித்த கர்மத்தின் அநுஷ்டானமே பாபத்திற்கு ஹேது வாம். இதனைப் பாஷியகாரர் அநேகப் பிரகாரமாகப் பிரதிபாதித் திருக்கின்றார். ஆதலால், கர்மத்தை விடுதலால் பாப முண்டாகின்ற தில்லை. ஞானிக்கோ எவ்விதத்திலும் பாப முண்டாகாது. ஏனெ னின், புண்ணிய பாபங்கள் அவற்றின் ஆசிரயமான அந்தக்கர ணம் என்பவை பரமார்த்தமாக வில்லை. அவித்தையால் மித்தை யாய்ப் பிரதீதியாகின்றன. அந்த அவித்தையும் மித்தியாப் பிரதீதியும் ஞாநவானுக் கில்லை. ஆதலால், சுபகர்மத்தை விடுவதனு லேனும் அசுபகர்மத்தைச் செய்வதனுலேனும் ஞானிக்குப் பாப முண்டாகாது.

393. இவ்விடத்தில் இது சித்தாந்தமாம்:—ஞானம், மந்தம் திடம் என இருவகைத்தாம். சம்சயாதிகளோடு கூடிய ஞானம் மந்த ஞாநமெனப்படும். சம்சயாதிக ளில்லாத ஞானம் திட(ஞாந) மெனப்படும். திட ஞாந முள்ளவனுக்குச் செய்யவேண்டிய தொ ன்று மில்லை. ஒரு முறை யுண்டாகிய சம்சய மில்லாத அந்தக் கரணத்தின் விருத்திரூப ஞாநமே அவித்தையை நாசஞ் செய்து விடுகின்றது. அந்த ஞாநம் நாசமாயினும் நன்று யறியப்பட்ட ஆத்மாவில் மீண்டும் பிராந்தி யுண்டாகின்ற தில்லை. ஏனெனின், பிராந்திக்குக் காரணமான அவித்தை ஒரு முறை யுண்டான ஞாநத்தினல் நஷ்டமாய் விட்டது ஆதலால், பிராந்தி அவித்தை களின் அபாவத்தினல் விருத்தி ஞாநத்தின் ஆவிர்த்திக்கு ஓர் உபயோகமு மில்லை.

ஜீவன் முக்தியின் ஆநந்தத்தின் பொருட்டு விருத்தியின் ஆவிருத்தி அபேக்ஷிக்கப்படுமாயின், அடிக்கடி வேதாந்த அர்த் தத்தின் சிந்தனையினையேசெய்க. வேதாந்தார்த்தத்தைச் சிந்திப்பத னாலேயே அடிக்கடிப் பிரஹ்மாகார விருத்தி யுண்டாகின்றது. கர் மோபாஸனைகளால் (பிரஹ்மாகார விருத்தி) யுண்டாகின்ற தில்லை.

ஏனெனின், கர்மோபாஸனைகள் அந்தக்கரணத்தின் சுத்தி நிச்சலத்தன்மை என்பவற்றின் வாயிலாகவே ஞானத்தில் உபயோகமாகின்றன. வேறு விதமாக (அவை) உபயோகப்படுகின்றதில்லை. வித்துவானுடைய அந்தக்கரணத்தில் பாபமும் சஞ்சலத் தன்மையு மில்லை; ராகத் துவேஷங்களின் வாயிலாகப் பாபத்திற்குஞ் சஞ்சலத் தன்மைக்குங் காரணம் அவித்தையாம். அந்த அவித்தை ஞானத்தால் நாசமாகின்றது. ஆதலால், வித்துவானுக்குப் பாபமும், சஞ்சலத்தன்மையு மில்லாமையால் கர்மோபாஸனைகளின் உபயோக மில்லை.

394. ஞானிகளினது பிராரப்தத்தின் விலக்ஷணத் தன்மையும், அவர்களுக்கு ஜீவன் முக்திச் சுகத்தின் பொருட்டும் உபாஸனையிற் பிரவிருத்தி யுண்டாகாமையும்.

"ராகத் துவேஷாதிகள் அந்தக்கரணத்தின் சகஜ தர்மங்களாம். எது பரியந்தம் அந்தக்கரண மிருக்கின்றதோ அது பரியந்தம் ராகத் துவேஷங்கள் ஞானிக்கும் எவ்விதத்தினாலும் நாசமாகா. அந்த ராகத் துவேஷங்களால் ஞானியின் அந்தக்கரணமும் சஞ்சலப்படும். ஆதலால், சஞ்சலத் தன்மையை நீக்குதற் பொருட்டு ஞானியும் உபாஸனையைச் செய்தல் வேண்டும்.

அந்தக்கரணத்தின் சஞ்சலத் தன்மையால் ஞானிக்கு விதேக மோக்ஷத்தில் ஹானி யில்லை யாயினும், சஞ்சலமான அந்தக்கரணத்தில் சொரூபாநந்தத்தின் பான முண்டாகா தாகலின், சஞ்சலத் தன்மை ஜீவன் முக்திக்கு விரோதியாம். ஆதலால், ஜீவன் முக்தியின் பொருட்டுச் சஞ்சலத் தன்மையைப் போக்க உபாஸனை செய்தல் வேண்டும்" என்று ஒருகால் இவ்வாறு கூறின், அது பொருந்தாது. ஏனெனின், திடபோதம் எவன் அந்தக்கரணத்தி லுண்டா யிருக்கின்றதோ, அவனுக்குச் சமாதியும், விக்ஷேபமும் சமமாம். ஆதலால், அந்தக்கரணத்தின் நிச்சலத் தன்மையின் பொருட்டு வித்துவானுக்கு எவ்வித யத்தநத்தின் ஆரம்பமும் பொருந்தாது. அங்ஙனமாயினும், வித்துவானுடைய பிரவிருத்தியும், நிவிருத்தியும் பிராரப்தத்தின் அதீனமா யிருக்கின்றன. பிராரப்த கர்மம் எல்லோருக்கும் விலக்ஷணமா யிருக்கின்றது. ஜனகாதிகள் போல் சில வித்துவான்களுக்குப் பிராரப்தம் போகத்திற்கு ஹேதுவாகின்றது. சுக தேவர், வாம தேவர் முத

லியோர்கள் போலச் சிலருக்குப் பிராரப்தம் நிவிருத்திக்கு ஹேதுவாகின்றது.

எவன் பிராரப்தம் போகத்திற்கு ஹேதுவாகின்றதோ, அவனுக்குப் பிராரப்தத்தால் போக இச்சையும் போக சாதநத்தின் பிரயத்நமு முண்டாகின்றன. எவன் பிராரப்தம் நிவிருத்திக்கு ஹேதுவா யிருக்கின்றதோ, அவனுக்கு ஜீவன் முக்தியினது ஆநந்தத்தின் இச்சையும், போகத்தில் வெறுப்பு முண்டாகின்றன.

ஜீவன் முக்தி ஆநந்தத்தின் இச்சை யுள்ளவன் பிரஹ்மாகார விருத்தியின் ஆவிர்த்தியின் பொருட்டு வேதாந்த அர்த்தத்தின் சிந்தநமே செய்தல் வேண்டும். உபாஸனே (செய்ய) வேண்டிய தில்லே. ஏனெனின், அந்தக்கரணத்தின் நிச்சலத்தன்மை மாத்திரத்தால் பிரஹ்மாநந்தம் விசேஷ ரூபமாகப் பாநமாவதில்லே; பின்னரோ, பிரஹ்மாகார விருத்தியிலுலேயே பாநமாகின்றது. அந்தப் பிரஹ்மாகார விருத்தி வேதாந்த சிந்தனே யாலேயே யுண்டாகின்றது; உபாஸனேயா லுண்டாகின்ற தில்லே. அந்தக்கரணத்தின் சஞ்சலத் தன்மையும் வித்துவானுக்கு வேதாந்தத்தின் சிந்தநத்திலுலேயே நீங்கி விடுகின்றது. ஆதலால், அந்தக்கரணத்தின் நிச்சலத் தன்மையின் பொருட்டும் உபாஸனேயில் பிரவிருத்தி யுண்டாகின்ற தில்லே. இவ்வாற்ருல், எவனுக்குத் திடபோத முண்டா யிருக்கின்றதோ, அவனுக்குக் கர்மோபாஸனேகளில் பிரவிருத்தி யுண்டாகின்ற தில்லே.

### 395. திட அதிட ஞாநிகளுக்கும், உத்தம மந்த ஜிஞ்ஞாஸுக்களுக்கும் கர்மோபாசனேயில் அதிகார மில்லே யெனல்.

எவனுக்கு மந்த போத மிருக்கின்றதோ, அவனும், மநந நிதித்தியாஸனங்களேயே செய்தல் வேண்டும்; கர்மோ பாஸனேகளேச் செய்ய வேண்டிய தில்லே. ஏனெனின், எவனுக்கு மந்த போத முண்டாயிருக்கின்றதோ, அவன் உத்தம ஜிஞ்ஞாசு ஆவன். அந்த உத்தம ஜிஞ்ஞாசுவிற்கு மநந நிதித்தியாஸநங்களே விட வேறு கர்த்தவ்ய மில்லே. இவ்வார்த்தை சாரீரகத்தில் சூத்திரகாரராலும் பாஷிய காரராலும் பிரதிபாதிக்கப்பட் டிருக்கின்றது.

வித்துவானுக்கு மநந நிதித்தியாஸனங்களிலும் கர்த்தவ்ய மில்லே. ஜீவன் முக்தியின் ஆநந்தத்தின்பொருட்டு மநந நிதித்யாஸனங்

களில் வித்துவான் பிரவர்த்திக்கின்றான். அவனும் தன் இச்சையாற் பிரவர்த்திக்கின்றான். "நான் வேதத்தின் ஆஞ்ஞைப்படி நடக்காத பட்சத்தில் எனக்கு ஜநந மரண சமுசார முண்டாம்" என்னும் புத்தியால் செய்யப்படுவது கர்த்தவ்ய மெனப்படும். அந்த ஜந்மாதிகளின் உணர்ச்சி வித்துவான்களுக் குண்டாகின்றதில்லை. ஆதலால், தன்னிச்சையால் வித்துவான் மநந நிதித்தியாஸனங்களைச் செய்கின்றான். அது கர்த்தவ்ய மன்று.

இவ்விதத்தால், மந்த போதம் அல்லது திடபோத முண்டானவனுக்குக் கர்மோபாஸனைகள் கர்த்தவ்ய மன்றாம்.

396. எவனுக்குப் போத முண்டாக வில்லையோ, ஆனால், ஆத்மாவை அறியவேண்டு மென்னும் தீவிரமான இச்சை யிருக்கின்றதோ, போகத்தில் இச்சை யில்லையோ, அவனுடைய அந்தக்கரணம் சுத்தமா யிருக்கின்றது. ஆதலால், அவனும் உத்தம ஜிஞ்ஞாசுவே ஆவன். அவனுக்கும் போதத்தின் பொருட்டுச் சிரவணுதிகளே கர்த்தவ்யமாம்; கர்மோபாஸனைக ளன்றாம். ஏனெனின், கர்மோபாஸனைகளின் பலன் அவனுக்குச் சித்தித்திருக்கின்றது.

ஞாநத்தின் சாமானிய இச்சையினால் எவன் சிரவணத்திற் பிரவர்த்தித்திருக்கின்றனனோ, எவன் அந்தக்கரணம் போகத்தில் ஆசக்தியுள்ளதா யிருக்கின்றதோ, அவன் மந்த ஜிஞ்ஞாசு ஆவன். அவனும் சிரவணத்தை விட்டு மீண்டும் கர்மோபாஸனைகளிற் பிரவிர்த்திக்க வேண்டிய தில்லை. கர்மோபாஸனைகளின் பலன்களாகிய அந்தக்கரணத்தின் சுத்தியும், நிச்சலத்தன்மையும் அவனுக்குச் சிரவணத்தினாலேயே உண்டாய்விடும். சிரவணத்தின் ஆவிருத்தியால் அந்தக்கரணத்தின் தோஷம் நீங்கி இந்த ஜந்மத்திலாவது, வேறு ஜந்மத்தி லாவது, பிரஹ்ம லோகத்தி லாவது ஞாந முண்டாகும். ஆவிருத்தி யென்பது அடிக்கடி யென்பதறாம். சிரவணத்தை விட்டுக் கர்மோபாஸனைகளிற் பிரவிருத்திக்கின்றவன் ஆரூடபதிதன் எனப்படுகின்றான். இவ்வாறு ஞாநிக்கும் உத்தம ஜிஞ்ஞாசுவிற்கும் கர்மோபாஸனைகளில் அதிகார மில்லை; வேதாந்த சிரவணத்தில் பிரவிர்த்தித்துள்ள மந்தஜிஞ்ஞாசுவிற்கும் அதிகார மில்லை. எவனுக்கு ஞாநத்தின் இச்சையிருந்தும் போகத்தில் புத்தி பற்றி யிருக்கின்றதோ, அதனாற் சிரவணத்தில் எவன் பிரவிருத்திக்கின்ற தில்லையோ, இவ்வாறாய மந்த ஜிஞ்

ஞாசுவிற்கு நிஷ்காம கர்மத்திலும் உபாஸனையிலும் அதிகார மிருக்கின்றது.

போகத்திலேயே எவனுக்கு ஆசை யிருக்கின்றதோ ஞானத்தில் இச்சை யில்லையோ, அவன் பகிர் முகன் ஆவன். அவனுக்கு ஸகாம கர்மத்திலும் அதிகார மிருக்கின்றது. ஆதலால், ஞானிக்குக் கர்மோபாஸனைகளில் அதிகார மில்லை. கர்மோபாஸனைகட்கு ஞானம் விரோதியாம்.

### 397. திட ஞானத்திற்குக் கர்மோபாசனைகள் விரோதிக ளல்ல; ஆனால் மந்த ஞானத்திற்கு விரோதிகளா மெனல்.

கர்மோபாஸனைகளும் அந்தக்கரணத்தின் சுத்தி நிச்சலத் தன்மைகள் வாயிலாக ஞானோற்பத்திக்கு ஏதுக்களாம். ஆனால், ஞானோற்பத்திக்குப் பின் கர்மோபாஸனைகளைச் செய்யின், உண்டான ஞானமும் நஷ்டமாய் விடும். ஆதலால், அவை ஞானத்திற்கு விரோதிகளாம்; இரக்ஷைக்கு ஹேது வன்று. ஏனெனின், "நான் கர்த்தா. யஞ்ஞாதிகள் எனக்குக் கர்த்தவ்யமாம். யஞ்ஞாதிகளுக்குச் சுவர்க்காதிகள் பலன்" என்னும் பேத புத்தியால் கர்மஞ் செய்யப்படுகின்றது.

"நான் உபாஸகன், தைவம் உபாஸியம்" என்னும் பேத புத்தியால் உபாஸனை சித்திக்கின்றது அவ்விரண்டு பிரகாரமான புத்திகளும் 'சர்வம் பிரஹ்மம்' என்னும் புத்தியை நிவர்த்தி செய்கின்றன. ஆதலால், கர்மோபாஸனைகள் ஞானத்திற்கு விரோதிகளாம்.

ஞானி ஆத்மாவை அசங்கமாக அறிந்திருப்பினும், தேகத்தின் போஜனாதி வியவகாரங்களை யேனும், ஜனகாதிகளின் வியவகாரங்களைப் போல் அதிகமான ராஜ்ப பாலனாதி வியவகாரங்களை யேனும் செய்கின்றான். அந்த வியவகாரத்திற்கு ஞானம் விரோதி யன்று. வியவகாரம் ஞானத்திற்கும் விரோதி யன்று. ஏனெனின், எந்த ஆத்ம ஸ்வரூபம் ஞானத்தால் அசங்கம் என்று அறியப்படுகின்றதோ, அந்த ஆத்மாவில் வியவகாரம் பிரதீதியாமாயின், வியவகாரத்திற்கு விரோதி ஞானமும், ஞானத்திற்கு விரோதி வியவகாரமும் ஆம். வித்துவானுக்கு ஆத்மாவில் அந்த வியவகாரம் பிரதீதியாகின்ற தில்லை. ஆனால், எல்லா வியவகாரங்களும் தேகாதிகளை ஆசிரயித்துக் கொண் டிருக்கின்றன. ஆத்மாவில்

வியவகார சகித தேகாதிகளின் சம்பந்தமே யில்லை. இத்தன்மைய புத்தியோடு ஞாநி சகல வியவகாரங்களையுஞ் செய்கின்றான். இக் காரணத்தால் வித்துவானுடைய பிரவிருத்தியும் நிவிருத்தியே யெனப்படுகின்றது.

398. எங்ஙனம் வேறு வியவகாரங்கள் ஞாநத்திற்கு விரோதியன்றோ, அங்ஙனமே கர்மோபாஸனைகளையும் அந்நிய பகிர்முக புருஷர்களைச் செய்வித்தற் பொருட்டு ஆத்மாவை யசங்க மென்றறிந்தும், கிரியையைத் தேகம் வாக்கு அந்தக்கரணம் என்பவற்றை யாசிரயித்ததாய் அறிந்தும் கர்மோபாசனைகளைச் செய்யின், ஞாநத்திற்கு அவை விரோதி யாகா. ஏனெனின், வித்துவான் அசங்க மென்றறிந்த ஆத்மாவைக் கர்த்தா வென்று அறிந்து கர்மோபாஸனைகளைச் செய்யின் ஞாநத்திற்கு அவை விரோதியாம். அந்த ஆத்மாவின் அசங்க வடிவ திட நிச்சயம் கர்மோபாஸனைகளால் வித்துவானுக்கு நீங்குகின்ற தில்லை. ஆதலால், ஆபாஸ ரூபமான கர்மோபாஸனைகள் திட ஞாநத்திற்கு விரோதி யாகா. இக்காரணத்தினுல் ஜநகாதிகள் ஆபாஸ ரூப கர்மஞ் செய்திருக்கின்றார்கள்.

ஆத்மாவை யசங்க மென்றறிந்து மற்ற வியவகாரங்கள் போல் தேகாதிகளின் தர்மங்களையு மறிந்து வித்துவான் செய்யுஞ் சுபக்கிரியைகள் ஆபாஸ ரூப கர்மங்க ளெனப்படும். அவற்றிற்கு ஞாநத்தோடு விரோத மில்லை. பாஷியகாரர் கர்மோபாஸனைகளுக்கு ஞாநத்தோடு எந்த விரோதங் கூறி யிருக்கின்றனரோ, அது ஆத்மாவில் கர்த்தா வென்னும் புத்தியினுல் செய்யப்படும் கர்ம உபாஸனைகட்கு ஞாநத்தோடு விரோதங் கூறி யிருக்கின்றார்; ஆபாஸ ரூபத்தாற் கூற வில்லை.

399. அங்ஙனமாயினும், மந்த போதத்திற்கு ஆபாஸரூப கர்மோபாஸனைகளும் விரோதிகளாம். ஏனெனின் சம்சயாதிகளோடு கூடிய போதம் மந்த போத மெனப்படும். எவன் அந்தக்கரணத்தில் " ஆத்மா அசங்கனு? அல்லது அசங்க னன்று?" என்று ஒருகால் சந்தேக முண்டாகின்றதோ, அவன் அடிக்கடி " ஆத்மா அசங்கன், எனக்குக் கிஞ்சித் மாத்ரமும் கர்த்தவ்ய மில்லை" என்னும் அர்த்தத்தினைச் சிந்தனை செய்தல் வேண்டும். அப்போதோ சம்சயம் நீங்கித் திட போத முண்டாய் விடும். கர்மோபாஸனைகளைச் செய்யினே, உண்டான மந்த போதமும் நீங்கி

"நான் கர்த்தா போக்தா" என்னும் விபரீத நிச்சய முண்டாய் விடும். ஆதலால், மந்த போத முண்டாவதற்கு முன்னரே கர்மோபாஸனைகளைச் செய்தல் வேண்டும்; பின்னர் அவற்றைச் செய்ய வேண்டிய தில்லை. மந்த போத முள்ளவன் கர்மோபாஸனைகளைச் செய்யின், உண்டான போதமும் நஷ்டமாய் விடும்.

திருஷ்டாந்தம்:—பக்ஷி தனது முட்டைகளை இறகு முளைக்கு முன்னர் (அவயங்) காக்கின்றது; இறகு முளைத்த பின் காக்கின்ற தில்லை. இறகு முளைத்த பின்னரும் முட்டையினைக் காக்குமாயின், முட்டையி லுள்ள ஜலத்தினுல் பாலக பக்ஷியின் இறகு அழுகிப் போகும். அது போல், ஞானோற்பத்திக்கு முன்னரே கர்மோபாஸனைகளைச் சேவித்தல் வேண்டும்; ஞானோற்பத்திக்குப் பின்னர் அனுஷ்டிக்க வேண்டிய தில்லை. ஞானத்தின் உற்பத்திக்குப் பின்னும் கர்மோபாஸனைகளை யநுஷ்டிக்கின், பாலக பக்ஷி நஷ்ட மாவது போல் மந்த ஞானமும் நஷ்டமாய் விடும். எங்ஙனம் விருத்த (வயது முதிர்ந்த) பக்ஷி, முட்டையின் சம்பந்தத்தினுல் நஷ்ட மடைவ தில்லையோ, அங்ஙனமே திட போதம் நஷ்டமாவ தில்லை. விருத்த பக்ஷிக்கு முட்டை உபயோகப் படாதது போல், திடபோதத்திற்குக் கர்மோபாஸனைகளால் உபயோகமுமில்லை. இவ்வாற்றுல், மோக்ஷத்தின் பொருட்டு ஞானிக்குக் கிஞ்சித் மாத்திரமும் கர்த்தவ்ய மில்லை. இது மூன்றுவது பிரஶ்நத்தின் உத்தரமாம்.

400. கூறிய அர்த்தம் சர்வ வேதத்தின் சாரமா மெனல்.

சிஷ்யனுக்கு ஆசாரியர் கூறிய விடை வேதாநுசாரமாகக் கூறியதாம். ஆதலால், இது யதார்த்தமா மெனக் கூறுகின்றார்:—

சிஷ்யனே! யான் உனக்குக் கூறியது சர்வ வேதத்தின் சாரமாம். ஆதலால், இதனை நீ நம்புவாயாக. இதனை யுணர்வதினுல் அநாயாச மெனப்படும் துக்க மின்றி அபாரமான ஜநந மரண ரூப சம்சாரம் நாசமாய் விடும்.

401. பாஷையின் சம்பிரதாயம்.

துக்கம் என்பது ஆயாசத்திற்காம்; அத னபாவத்தின் பெயர் அநாயாசமா மாயினும், சந்தத்தின் பொருட்டு அநாயாச மென்று படிக்கப் பட்டது. பாஷையில் சந்தத்தின் பொருட்டு குரு அக்ஷரத்தின் ஸ்தாநத்தில் லகு அக்ஷரமும், லகு அக்ஷரத்

வியவகார சகித தேகாதிகளின் சம்பந்தமே யில்லை. இத்தன்மைய புத்தியோடு ஞானி சகல வியவகாரங்களையுஞ் செய்கின்றான். இக் காரணத்தால் வித்துவானுடைய பிரவிருத்தியும் நிவிருத்தியே யெனப்படுகின்றது.

398. எங்ஙனம் வேறு வியவகாரங்கள் ஞானத்திற்கு விரோதியன்றோ, அங்ஙனமே கர்மோபாஸனைகளையும் அந்நிய பகிர்முக புருஷர்களைச் செய்வித்தற் பொருட்டு ஆத்மாவை யசங்க மென்றறிந்தும், கிரியையைத் தேகம் வாக்கு அந்தக்கரணம் என்பவற்றை யாசிரயித்ததாய் அறிந்தும் கர்மோபாசனைகளைச் செய்யின், ஞானத்திற்கு அவை விரோதி யாகா. ஏனெனின், வித்துவான் அசங்க மென்றறிந்த ஆத்மாவைக் கர்த்தா வென்று அறிந்து கர்மோபாஸனைகளைச் செய்யின் ஞானத்திற்கு அவை விரோதியாம். அந்த ஆத்மாவின் அசங்க வடிவ திட நிச்சயம் கர்மோபாஸனைகளால் வித்துவானுக்கு நீங்குகின்றதில்லை. ஆதலால், ஆபாஸ ரூபமான கர்மோபாஸனைகள் திட ஞானத்திற்கு விரோதி யாகா. இக்காரணத்தினால் ஜநகாதிகள் ஆபாஸ ரூப கர்மஞ் செய்திருக்கின்றார்கள்.

ஆத்மாவை யசங்க மென்றறிந்து மற்ற வியவகாரங்கள் போல் தேகாதிகளின் தர்மங்களையு மறிந்து வித்துவான் செய்யுஞ் சுபக்கிரியைகள் ஆபாஸ ரூப கர்மங்க ளெனப்படும். அவற்றிற்கு ஞானத்தோடு விரோத மில்லை. பாஷியகாரர் கர்மோபாஸனைகளுக்கு ஞானத்தோடு எந்த விரோதங் கூறி யிருக்கின்றனரோ, அது ஆத்மாவில் கர்த்தா வென்னும் புத்தியினால் செய்யப்படும் கர்ம உபாஸனைகட்கு ஞானத்தோடு விரோதங் கூறி யிருக்கின்றார்; ஆபாஸ ரூபத்தாற் கூற வில்லை.

399. அங்ஙனமாயினும், மந்த போதத்திற்கு ஆபாஸரூப கர்மோபாஸனைகளும் விரோதிகளாம். ஏனெனின் சம்சயாதிகளோடு கூடிய போதம் மந்த போத மெனப்படும். எவன் அந்தக்கரணத்தில் "ஆத்மா அசங்கனா? அல்லது அசங்க னன்றா?" என்று ஒருகால் சந்தேக முண்டாகின்றதோ, அவன் அடிக்கடி "ஆத்மா அசங்கன், எனக்குக் கிஞ்சித் மாத்ரமும் கர்த்தவ்ய மில்லை" என்னும் அர்த்தத்தினைச் சிந்தனை செய்தல் வேண்டும். அப்போதோ சம்சயம் நீங்கித் திட போத முண்டாய் விடும். கர்மோபாஸனைகளைச் செய்யினோ, உண்டான மந்த போதமும் நீங்கி

"நான் கர்த்தா போக்தா" என்னும் விபரீத நிச்சய முண்டாய் விடும். ஆதலால், மந்த போத முண்டாவதற்கு முன்னரே கர்மோபாஸனைகளைச் செய்தல் வேண்டும்; பின்னர் அவற்றைச் செய்ய வேண்டிய தில்லை. மந்த போத முள்ளவன் கர்மோபாஸனைகளைச் செய்யின், உண்டான போதமும் நஷ்டமாய் விடும்.

திருஷ்டாந்தம்:—பக்ஷி தனது முட்டைகளை இறகு முளைக்கு முன்னர் (அவயங்) காக்கின்றது; இறகு முளைத்த பின் காக்கின்ற தில்லை. இறகு முளைத்த பின்னரும் முட்டையினைக் காக்குமாயின், முட்டையி லுள்ள ஜலத்தினுல் பாலக பக்ஷியின் இறகு அழுகிப் போகும். அது போல், ஞாநோற்பத்திக்கு முன்னரே கர்மோபாஸனைகளைச் சேவித்தல் வேண்டும்; ஞாநோற்பத்திக்குப் பின்னர் அனுஷ்டிக்க வேண்டிய தில்லை. ஞாநத்தின் உற்பத்திக்குப் பின்னும் கர்மோபாஸனைகளை யநுஷ்டிக்கின், பாலக பக்ஷி நஷ்ட மாவது போல் மந்த ஞாநமும் நஷ்டமாய் விடும். எங்ஙனம் விருத்த (வயது முதிர்ந்த) பக்ஷி, முட்டையின் சம்பந்தத்தினுல் நஷ்ட மடைவ தில்லையோ, அங்ஙனமே திட போதம் நஷ்டமாவ தில்லை. விருத்த பக்ஷிக்கு முட்டை உபயோகப் படாதது போல், திடபோதத்திற்குக் கர்மோபாஸனைகளால் உபயோகமுமில்லை. இவ்வாற்றுல், மோக்ஷத்தின் பொருட்டு ஞாநிக்குக் கிஞ்சித் மாத்திரமும் கர்த்தவ்ய மில்லை. இது மூன்றுவது பிரஶ்நத்தின் உத்தரமாம்.

400. கூறிய அர்த்தம் சர்வ வேதத்தின் சாரமா மெனல்.

சிஷ்யனுக்கு ஆசாரியர் கூறிய விடை வேதாநுசாரமாகக் கூறியதாம். ஆதலால், இது யதார்த்தமா மெனக் கூறுகின்றுர்:—

சிஷ்யனே! யான் உனக்குக் கூறியது சர்வ வேதத்தின் சாரமாம். ஆதலால், இதனை நீ நம்புவாயாக. இதனை யுணர்வதினுல் அநாயாச மெனப்படும் துக்க மின்றி அபாரமான ஜநந மரண ரூப சம்சாரம் நாசமாய் விடும்.

401. பாஷையின் சம்பிரதாயம்.

துக்கம் என்பது ஆயாசத்திற்காம்; அத னபாவத்தின் பெயர் அநாயாசமா மாயினும், சந்தத்தின் பொருட்டு அநாயாச மென்று படிக்கப் பட்டது. பாஷையில் சந்தத்தின் பொருட்டு குரு அக்ஷரத்தின் ஸ்தாநத்தில் லகு அக்ஷரமும், லகு அக்ஷரத்

வியவகார சகித தேகாதிகளின் சம்பந்தமே யில்லை. இத்தன்மைய புத்தியோடு ஞானி சகல வியவகாரங்களையுஞ் செய்கின்றான். இக் காரணத்தால் வித்துவானுடைய பிரவிருத்தியும் நிவிருத்தியே யெனப்படுகின்றது.

398. எங்ஙனம் வேறு வியவகாரங்கள் ஞானத்திற்கு விரோதியன்றோ, அங்ஙனமே கர்மோபாஸனைகளையும் அந்நிய பகிர்முக புருஷர்களைச் செய்வித்தற் பொருட்டு ஆத்மாவை யசங்க மென்றறிந்தும், கிரியையைத் தேகம் வாக்கு அந்தக்கரணம் என்பவற்றை யாசிரயித்ததாய் அறிந்தும் கர்மோபாசனைகளைச் செயின், ஞானத்திற்கு அவை விரோதி யாகா. ஏனெனின், வித்துவான் அசங்க மென் றறிந்த ஆத்மாவைக் கர்த்தா வென்று அறிந்து கர்மோபாஸனைகளைச் செய்யின் ஞானத்திற்கு அவை விரோதியாம். அந்த ஆத்மாவின் அசங்க வடிவ திட நிச்சயம் கர்மோபாஸனைகளால் வித்துவானுக்கு நீங்குகின்ற தில்லை. ஆதலால், ஆபாஸ ரூபமான கர்மோபாஸனைகள் திட ஞானத்திற்கு விரோதி யாகா. இக்காரணத்தினால் ஜநகாதிகள் ஆபாஸ ரூப கர்மஞ் செய்திருக்கின்றார்கள்.

ஆத்மாவை யசங்க மென் றறிந்து மற்ற வியவகாரங்கள் போல் தேகாதிகளின் தர்மங்களையு மறிந்து வித்துவான் செய்யுஞ் சுபக்கிரியைகள் ஆபாஸ ரூப கர்மங்க ளெனப்படும். அவற்றிற்கு ஞானத்தோடு விரோத மில்லை. பாஷியகாரர் கர்மோபாஸனைகளுக்கு ஞானத்தோடு எந்த விரோதங் கூறி யிருக்கின்றனரோ, அது ஆத்மாவில் கர்த்தா வென்னும் புத்தியினால் செய்யப்படும் கர்ம உபாஸனைகட்கு ஞானத்தோடு விரோதங் கூறி யிருக்கின்றார்; ஆபாஸ ரூபத்தாற் கூற வில்லை.

399. அங்ஙனமாயினும், மந்த போதத்திற்கு ஆபாஸரூப கர்மோபாஸனைகளும் விரோதிகளாம். ஏனெனின் சம்சயாதிகளோடு கூடிய போதம் மந்த போத மெனப்படும். எவன் அந்தக்கரணத்தில் "ஆத்மா அசங்கனு? அல்லது அசங்க னன்று?" என்று ஒருகால் சந்தேக முண்டாகின்றதோ, அவன் அடிக்கடி "ஆத்மா அசங்கன், எனக்குக் கிஞ்சித் மாத்ரமும் கர்த்தவ்ய மில்லை" என்னும் அர்த்தத்தினைச் சிந்தனை செய்தல் வேண்டும். அப்போதோ சம்சயம் நீங்கித் திட போத முண்டாய் விடும். கர்மோபாஸனைகளைச் செய்யினோ, உண்டான மந்த போதமும் நீங்கி

"நான் கர்த்தா போக்தா" என்னும் விபரீத நிச்சய முண்டாய் விடும். ஆதலால், மந்த போத முண்டாவதற்கு முன்னரே கர்மோபாஸனைகளைச் செய்தல் வேண்டும்; பின்னர் அவற்றைச் செய்ய வேண்டிய தில்லை. மந்த போத முள்ளவன் கர்மோபாஸனைகளைச் செய்யின், உண்டான போதமும் நஷ்டமாய் விடும்.

திருஷ்டாந்தம்:—பக்ஷி தனது முட்டைகளை இறகு முளைக்கு முன்னர் (அவயங்) காக்கின்றது; இறகு முளைத்த பின் காக்கின்ற தில்லை. இறகு முளைத்த பின்னரும் முட்டையினைக் காக்குமாயின், முட்டையி லுள்ள ஜலத்தினால் பாலக பக்ஷியின் இறகு அழுகிப் போகும். அது போல், ஞானோற்பத்திக்கு முன்னரே கர்மோபாஸனைகளைச் சேவித்தல் வேண்டும்; ஞானோற்பத்திக்குப் பின்னர் அனுஷ்டிக்க வேண்டிய தில்லை. ஞானத்தின் உற்பத்திக்குப் பின்னும் கர்மோபாஸனைகளை யநுஷ்டிக்கின், பாலக பக்ஷி நஷ்ட மாவது போல் மந்த ஞானமும் நஷ்டமாய் விடும். எங்ஙனம் விருத்த (வயது முதிர்ந்த) பக்ஷி, முட்டையின் சம்பந்தத்தினால் நஷ்ட மடைவ தில்லையோ, அங்ஙனமே திட போதம் நஷ்டமாவ தில்லை. விருத்த பக்ஷிக்கு முட்டை உபயோகப் படாதது போல், திடபோதத்திற்குக் கர்மோபாஸனைகளால் உபயோகமுமில்லை. இவ்வாற்றால், மோக்ஷத்தின் பொருட்டு ஞானிக்குக் கிஞ்சித் மாத்திரமும் கர்த்தவ்ய மில்லை. இது மூன்றாவது பிரஶ்நத்தின் உத்தரமாம்.

400. கூறிய அர்த்தம் சர்வ வேதத்தின் சாரமா மெனல்.

சிஷ்யனுக்கு ஆசாரியர் கூறிய விடை வேதாநுசாரமாகக் கூறியதாம். ஆதலால், இது யதார்த்தமா மெனக் கூறுகின்றார்:—

சிஷ்யனே! யான் உனக்குக் கூறியது சர்வ வேதத்தின் சாரமாம். ஆதலால், இதனை நீ நம்புவாயாக. இதனை யுணர்வதினால் அநாயாச மெனப்படும் துக்க மின்றி அபாரமான ஜநந மரண ரூப சம்சாரம் நாசமாய் விடும்.

401. பாஷையின் சம்பிரதாயம்.

துக்கம் என்பது ஆயாசத்திற்காம்; அத னபாவத்தின் பெயர் அநாயாசமா மாயினும், சந்தத்தின் பொருட்டு அநாயாசு மென்று படிக்கப் பட்டது. பாஷையில் சந்தத்தின் பொருட்டு குரு அக்ஷரத்தின் ஸ்தாநத்தில் லகு அக்ஷரமும், லகு அக்ஷரத்

தின் ஸ்தாநத்தில் குரு அக்ஷரமும் படித்தல் தோஷ மன்றும். மோக்ஷத்தின் ஸ்தாநத்தில் மோச்சம் (மோக்கம்) என்றே பஷை யில் பிரயோக முண்டாகின்றது. ஏனெனின், இது பாஷையின் சம்பிரதாயமாம். இவ்வள வக்ஷரங்கள் பாஷையி லில்லை. எவ ரும் எழுதின் பண்டிதர் அசுத்த மென்பர். "க்ஷ"வின் ஸ்தாநத் தில் "ச"வும், "க"வின் ஸ்தாநத்தில் "ஷ"வும், "ண"காரத்தின் ஸ்தாநத்தில் "ன" காரமும், "க்ரு"—"ல்ரு" ஸ்தாநங்களில் "ரி"—"லி" என்பனவும், "ஶ"காரத்தின் ஸ்தாநத்தில் "ஸ" காரமும் பாஷையில் எழுதுதல் யோக்யமாம்.

402. கூறிய அர்த்தத்தின் சங்கிரகம்.

"ஜகத் கர்த்தா ஈசுவரன்; அவன் உனக்கு வே றன்று. நீ சச்சிதாநந்த ரூபப் பிரஹ்மம்" என்று ஆசாரியர் முன்ன ருப தேசித்ததை மீண்டும் தயையுடன் (சிஷ்யனுக்குக்) கூறுகின்றார். சிஷ்யனே! தீநத் தன்மையை விட்டு உன் ஸ்வரூபத்தைப் பார். நீயோ ஜநந மில்லாத சுத்தப் பிரஹ்மம். திருசியத்தினைப் பிரகா சஞ் செய்கின்றாய். உன் அஞ்ஞாநத்தினால் ஜகத்தை யெல்லாம் நீ சிருஷ்டித்த (பின்னர்), எல்லா வற்றையும் சம்மாரஞ் செய்து, அவிநாசியா யிருக்கின்றாய். மித்யாப் பிரபஞ்சத்தைப் பார்த்துக் கிஞ்சித்தும் துக்கத்தை யடைகின்ற தில்லை. நீ தேவதைகளுக் கெல்லாம் தேவனா யிருக்கின்றாய். நீ எல்லாச் சுக சமூகமா யிரு க்கின்றாய். நீயே ஜீவேசுவர ஜகத்தாய் மாயையினால் விளங்கு கின்றாய். அது ரஜ்ஜுவில் சர்ப்பமும், கிளிஞ்சிலில் வெள்ளியும் விளங்குவது போலாம்.

403. ஞாந சாதநத்தைக் கூறுகின்றேன்:—சிஷ்யனே! ராக மாகிய பதார்த்தத்தி லுள்ள திடமான ஆசக்தியைத் தகித்து விடு; லோபத்தினை யொழித்து விடு; துவேஷத்தினைக் கொன்று விடு; காமத்தினை நீக்கிவிடு. ராகம், லோபம், துவேஷம், காமம் என்பவற் றைக் கொள்வதனால் சகல ராஜஸ தாமச விருத்திகளும் கொள் ளப்படுகின்றன. இதனால், சகலமான ராஜஸ தாமஸ விருத்திகளை யும் நாசஞ் செய்க வென்னும் அர்த்தம் சித்தமாயிற்று. இராஜஸீ விருத்தியும், தாமஸீ விருத்தியும் ஞாநத்திற்கு விரோதிகளா யிருக்கின்றன. அவற்றின் நாச மின்றி ஞாந முண்டாகின்ற தில்லை. ஆதலால், அவற்றின் நிவிருத்தி ஜிஞ்ஞாசுவினால் அபே க்ஷிக்கப் படுவதாம்.

விவேகம், வைராக்கியம், சமாதி ஷட்க சம்பத்தி, முமுக்ஷுத்துவம் என்னும் நான்கும் ஞாந சாதநங்களாம். அவற்றுள், விவேகம் பிரதாநமாம். ஏனெனின், விவேகத்தினால் வைராக்கியாதிக ளுற்பத்தியாகின்றன. அதனால் ஆசாரியர் இப்போது விவேகத்தை யுபதேசிக்கின்றார்:—

சிஷ்யனே! பாரவாரமாகிய சம்சாரத்தைக் கானல் ஜலத்திற்குச் சமாநமாக மித்தை யென்று நீ யடிக்கடி அறிவாயாக. பாரவார மென்பது சம்சாரத்திற் காம். அபாரவார மென்பது ஆத்மாவிற்காம். பாரவாரம் மித்தை யென்றதனால், அபாரவாரம் மித்தை யன்று, சத்தியமாம் என்பது அர்த்தத்தினாற் கூறப்பட்டதாம்.

வித்தையாடி செய்யும் ஜால வித்தைகளைப் பார்க்கும் புத்திரனைப் பார்த்துப் பிதா "புத்திரனே! இந்த மாவிருக்ஷ முதலியன இந்திர ஜாலக்காரனாற் செய்யப்பட்டனவாம். அவை மித்தையாம்" என்றான். இவ்வாறு கூறினதினால் இந்திர ஜாலக்காரனை மித்தை யென் றறிகின்ற தில்லை; பின்னரோ, அவனைச் சத்தியமாக அறிகின்றான். அது போல, ஜகத்தினை மித்தை யென்று கூறுவதனால் ஆத்மாவினைச் சத்திய மென்று அறிந்து கொள்ளுவன் என்னும் அபிப்பிராயத்தினால் ஆசாரியர் பாரவாரத்தை மித்தையாகக் கூறினர். இவ்வாற்றால், ஜகத்து மித்தையாம்; ஆத்மா சத்தியமா மென்று (குரு) விவேகத்தை யுபதேசித்தார். அந்த விவேகத்தினால் அந்நிய சாதநங்கள் தாமாகவே உண்டாகின்றன. ஆதலால், விவேகத்தின் உபதேசத்தால் சகல சாதநங்களின் உபதேசமும் அர்த்தத்தினால் கூறப்பட்டதாம். ஞாநத்தின் பகிரங்க சாதநங்களைக் கூறினோம்.

அந்தரங்க சாதநமான சிரவணத்தைக் கூறுகின்றோம்:— சிஷ்யனே! ஞாநரூப சூரியனைச் சிரவணத்தினால் சம்பாதித்து அஞ்ஞாநரூப தமஸை நாசஞ் செய்வாயாக. தமஸென்பது இருளிற்கும், அஞ்ஞாநத்திற்கும் பெயராம். இருள் உபமாநமாம்; அஞ்ஞாநம் உபமேயமாம். முதலிலுள்ள இருள் என்னும் பதம் உபமேய வாசகமாம்; இரண்டாவது, உபமாந வாசகமாம். எதற்கு உவமை கொடுக்கப்பட் டிருக்கின்றதோ அஃது உபமேயமாம்; எதன் உவமை கொடுக்கப்பட் டிருக்கின்றதோ அஃது உபமாநமாம்.

404. ஞானத்தின் சொரூபம் அந்நிய (சாங்கியம் நியாய முதலிய) சாஸ்திரங்களில் நாநாப் பிரகாரமாக அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால், மகா வாக்கியாநுசாரமாக ஞானத்தின் சொரூபத்தைக் கூறுகின்றோம்:—

சிஷ்யனே! ஜீவ ஈசுவரர்களிடத்துள்ள அவித்தை மாயையின் பாகங்களை விட்டு, அவற்றின் எந்தப் பேதம் பிரதீதியாகின்றதோ அதனை நீக்கி, சிவேசுரவர்களிடத் துள்ள சேதந பாகத்தைப் பேத ரகிதமாக அறிக. இவ்வாறு கூறியதனால், மகா வாக்கியங்களில் பாகத்தியாக லக்ஷணையினால் ஜீவ ஈசுவரர்களது ஏகதன்மையை யறிக என்று கூறியதாம். வேதத்தின் சாரத்தை விசாரித்து உன்னை நீ காத்துக்கொள். தாஸனிடத்து ஆசை வைத்து இதனை (இப் பிரபஞ்சத்தை)ப் பார்க்க லாகாது.

முற் கூறிய அர்த்தத்தினைச் சுருக்கிக் கூறுவாம்:—சிஷ்யனே! அழியத் தக்க சங்காதமாகிய தேகாதி நீயல்லை. ஆனால், அழியாத பிரஹ்மம் நீ. விருக்ஷ ரூப சம்சாரம் மித்தையாம். எங்ஙனம் ஆகாசத்தில் நீலத்தன்மையும், கூடார ரூபத் தன்மையு மில்லாமல் மித்தையாகப் பிரதீதியாகின்றனவோ, அங்ஙனமே சம்சாரமும் ஆத்மாவில் இல்லாமல் மித்தையாகப் பிரதீதியாகின்றது. சுருதி ஸ்மிருதிகளில் சம்சாரத்தை விருக்ஷ ரூபமாகக் கூறியிருத்தலால், இவ்விடத்திலும் விருக்ஷ சப்தம் சம்சாரத்தில் பிரயோகிக்கப்பட்டிருக்கின்றது.

### 405. வேறு வகையால் மோக்ஷத்திற்குச் சாதநம் ஞானமா மென்று கூறுதல்.

மோக்ஷத்திற்குச் சாதநம் ஞானமா மென்னும் அர்த்தத்தினை வேறு பிரகாரமாகக் கூறுகின்றார்:—

சிஷ்யனே! தேகாபிமாநியான அஞ்ஞாநியும், ஞாநியும் பந்த மோக்ஷங்களுக்கு இருப்பிடங்களாவர். அஞ்ஞாநியோ பந்தத்திற் கிருப்பிடம். ஞாநி மோக்ஷத்திற் கிருப்பிடம். இராகமும் விராகமும் அவர்களது துவஜங்களாம். எங்ஙனம் துவஜம் ராஜாவின் நகரத்திற்குச் சிந்ந (அடையாள)மா யிருக்கின்றதோ, அங்ஙனமே ராக விராகங்கள் அவர்களின் சிந்நங்களாம். அஞ்ஞாநிக்கு ராகம் சிந்நமாம்; ஞாநிக்கு விராகம் சிந்நமாம். அஞ்ஞாநியி னிடத்தும் விராக முண்டாகின்றது. ஆதலால், ஞாநிக்கு அஞ்ஞானியினும்

விலக்ஷணமான விராகம் கூறப்பட் டிருக்கின்றது. சிஷ்யனே! சப்தாதி விஷயங்களிற் சத்தியத்தன்மையின் பிராந்தியும், ரஜ்ஜு சர்ப்பம்போல் விஷயம் பிராந்திரூப மென்னும் நிச்சய புத்தியும், காற்று த்வஜத்தினை யசைத்தல் போன்று ராக விராகங்களை யசைப்பிக் (சஞ்சலப்படுத்து) கின்றன; அவற்றை நாசமாக விடு கின்றதில்லை. விஷயத்தில் சத்திய புத்தியால் ராகத்தின் தளர்ச் சித் தன்மை நீங்குகின்றது. விஷயத்தில் பிராந்தி புத்தியால் விராகத்தின் தளர்ச்சித் தன்மை நீங்குகின்றது.

406. விஷயம் அசத்தியம். ஆதலால், அதில் உண்டாம் சத்திய புத்தி பிராந்தி ரூபமாம். பிராந்தி ஞானமும், அதற்கு விஷயமான மித்தியா வஸ்துவும் ஆகிய இரண்டும் பிராந்தி யெனப்படும். இங் ஙனம் கூறியதனால், அஞ்ஞானியின் விராகத்தினும் ஞானியின்விரா கத்திற்குப் பேதம் கூறப்பட்டதாம். ஏனெனின், அஞ்ஞானியின் விராகம் விஷயத்தில் மித்தியா புத்தியா லுண்டான தன்று. ஆத லால், (அது) மந்தமா யிருக்கின்றது. "விஷயம் மித்தை" யென் னும் புத்தி அஞ்ஞானிக் குண்டாகின்ற தில்லை. சாஸ்திரத்தினு லும், யுக்தியினுலும் விஷயம் மித்தையென்று அஞ்ஞானியும் அறிந் திருந் திருப்பினும், விஷயம் மித்தையென்னும் அபரோக்ஷ புத்தி ஞானிக்கே யுண்டாகின்றது; அஞ்ஞானிக் குண்டாகின்ற தில்லை. ஆதலால், அஞ்ஞானிக்கு விஷயத்திலுள்ள பரோக்ஷமான மித்தியா புத்தியால் அபரோக்ஷமான சத்தியப் பிராந்தி நிவிருத்தியாகின்ற தில்லை. இவ்வாற்றுல், அஞ்ஞானிக்கு விஷயத்தில் விராக முண்டா கும் போது பரோக்ஷ மித்தியா புத்தி யிருக்கின்றது. ஆயினும், பரோக்ஷ மித்தியா புத்தியினும் பிரபலமாக அபரோக்ஷ சத்திய புத்தி யிருக்கின்றது. ஆதலால், அஞ்ஞானிக்குப் பரோக்ஷ மித் தியாபுத்தி விராகத்துக்கு ஹேது வன்று. ஆனுல், பிரபலமான சத்திய புத்தியால் விஷயத்தில் ராகமே உண்டாகின்றது. விராக முண்டா மாயினும் அதற்கு மித்தியா புத்தி காரண மன்று; ஆனுல், விஷயத்தில் தோஷ திருஷ்டியினுல் உண்டாகின்றது.

ஞானி சர்வப்பிரபஞ்சத்தையும் அபரோக்ஷ ரூபத்தால் மித் தையாக அறிகின்றுன். அவ்வபரோக்ஷ மித்தியா புத்தியால் அப ரோக்ஷ சத்திய புத்தி நிவிருத்தி யாகின்றது. ஆதலால், ராகத் திற்கு ஹேதுவான விஷயத்தி லுள்ள சத்திய புத்தி ஞானிக் கிருக் கின்ற தில்லை, விராகத்திற்கு ஹேதுவான விஷயத்தில் மித்தியா

புத்தி ஞாநிக் கிருக்கின்றது. ஞாநிக்கு விஷயத்தில் சத்திய புத்தி மீண்டும் உண்டாகுமாயின் ராகமும் மீண்டு முண்டாகி விராகம் நிவிருத்தியாம். அவ் வபரோக்ஷமாய் மித்தை யென் றறிந்த பதார்த்தத்தில் மீண்டும் சத்திய புத்தி யுண்டாகின்ற தில்லை. எங் ஙனம், அபரோக்ஷமாய் மித்தை யென் றறிந்த ரஜ்ஜுவி லுள்ள சர்ப்பத்தில் சத்திய புத்தி மீண்டும் உண்டாகின்ற தில்லையோ, அங்ஙனமே ஞாநிக்கு மீண்டும் சத்திய புத்தி யுண்டாகின்ற தில்லை. இவ்வாற்றால், ஞாநிக்கு ராகத்தின் உற்பத்தியும் விராகத் தின் நிவிருத்தியும் உண்டாகின்ற தில்லை. ஆதலால், ஞாநியின் விராகம் திடமாம்.

தோஷ திருஷ்டியால் அஞ்ஞாநிக் குண்டாகும் விராகம் நிவிருத்தியாய்விடும். ஏனெனின், எந்தப் பதார்த்தத்தில் தோஷ திருஷ்டி யுண்டாகின்றதோ அந்தப் பதார்த்தத்திலேயே அந்நிய காலத்தில் நற்புத்தியும் முண்டாகின்றது. அஃது எல்லாப் புருஷர்களுக்கும் பசுதர்மத்தின் அந்தத்தில் ஸ்திரீயினிடத்தில் தோஷ திருஷ்டியுண்டாய்க் காலாந்தரத்தில் மீண்டும் நற்புத்தி யுண்டாகின்றது போலாம். இவ்வாற்றால், தோஷதிருஷ்டி நீங் கும்போது அஞ்ஞாநியின் விராகமும் நீங்கி விடும். ஆதலால், அஞ் ஞாநிக்குத் திடமான விராக முண்டாகின்ற தில்லை. இவ்வாற்றால், ராகமும், விராகமும் அஞ்ஞாநிக்கும் ஞாநிக்கும் சிந்நமெனப் பட்டன.

வேறு சிந்நங்களையும் கூறுகின்றோம்:—சிஷ்யனே! எங்ங னம் வீட்டின் மீது யானை முதலியவற்றின் மூர்த்திக ளிருக்கின் றனவோ, அங்ஙனமே பந்த மோக்ஷங்களுக்கு இருப்பிடங்களா கிய அஞ்ஞாநி ஞாநிகளின் அந்தக்கரணங்களில் சாக்ஷ்ய சாக்ஷி யென்னும் மூர்த்திகள் இருக்கின்றன. அஞ்ஞாநியின் அந்தக்கர ணத்தில் சாக்ஷ்ய ரூப மூர்த்தி யிருக்கின்றது. ஞாநியின் அந்தக் கரணத்தில் சாக்ஷி ரூப மூர்த்தி இருக்கின்றது. சாக்ஷிக்கு விஷய மான பிரபஞ்சத்தினைச் சாக்ஷ்ய மென்பர். சாக்ஷ்ய ரூப மூர்த்தி மலிநமா யிருக்கின்றது. சாக்ஷி ரூப மூர்த்தி சுத்தமா யிருக்கின் றது. இவற்றுள் சாக்ஷ்யத்தில் அழுந்துவோர் இராகிகளாவர்; சாக்ஷியில் அழுந்துவோர் தியாகி விராகிகளாவர். சஞ்சலப் பிராந்தியை நிஜமென் றறிந்தவன் துக்கமாகிய கிணற்றில் முழுகு கின்றான். அசலப் பிரஹ்மத்தின் நிஜஸ்வரூபத்தை யறிகின்றவன் ஆநந்த ஸ்வரூபத்தினை யடைகின்றான்.

407. இலக்ஷணை மூன்று விதமாம்.

பாகத்தியாக லக்ஷணையினுல் என்று 304-வது பிரசங்கத்தில் விசேஷமாகக் கூறப்பட்டிருக்கின்றது. அதில் ஏதுவைக் கூறுதற்கு இலக்ஷணையின் பேதத்தைக் கூறுவாம். பண்டிதர்களாகிய புத்திமான்கள் ஜஹதீ லக்ஷணை(விட்ட லக்கணை), அஜஹதீ லக்ஷணை (விடாத லக்கணை), பாகத்தியாக லக்ஷணை (விட்டுவிடாத லக்கணை) என்று லக்ஷணையினை மூன்று வகையாகக் கூறுகின்றனர். அவற்றுள், முதல் இரண்டும் மகா வாக்கியத்திற் பொருந்தா; பாகத்தியாக லக்ஷணையினுல் தனது சொரூபமாகிய பிரஹ்ம ரூபத்தை யறிவிக்கின்றது.

408. சிஷ்யன் கேட்கின்றுன்:—சாமாநிய ஞாநத்தின் பின்னர் விசேஷத்தின் ஞாந முண்டாகின்றது. எங்ஙனம் சாமாநியமாய்ப்பிராஹ்மணனென்னும் ஞாந முண்டாய பின்னர் † சாரஸ்வதன் என்பதாதி விசேஷ ஞாந முண்டாகின்றதோ, அங்ஙனமே லக்ஷணையின் சாமாநிய ஞாந முண்டான பின் ஜஹதீ முதலியவற்றின் விசேஷ ஞாந முண்டாகின்றது. லக்ஷணையின் சாமாநிய வடிவ மறிந்தா லன்றி ஜஹதீ முதலிய விசேஷ ரூபத்தின் ஞாந முண்டாகாது.

இவ்வபிப்பிராயத்தால் சிஷ்யன் கூறுகின்றுன்:—பிரபுவே! எதனை லக்ஷணை யென்று கூறுகின்றனர். இதனை நான் அறியேன். ஆதலால், லக்ஷணையின் சாமாநிய ரூபத்தை யறிவித்துப் பின் ஜகதி முதலிய லக்ஷணைகளின் மூன்று பேதத்தைக் கூறுவது விசேஷமாம். ஆதலால், அவற்றின் தனித் தனி லக்ஷணங்களைக் காட்டியருளல் வேண்டும்.

409. குரு வாக்கியம்.

சிஷ்யனே! ஏகாக்கிர சித்தத்துடன் நான் கூறுவதைக் கேள்; லக்ஷணைகளையும் அவற்றின் பேதங்களையும் அறிவாய். பதத்திற்கும், அர்த்தத்திற்கு முள்ள சம்பந்தம் விருத்தி யெனப்படும். அஃதிரண்டு பிரகாரமாம். ஒன்று சக்தி விருத்தியாம்; மற்றென்று, லக்ஷணு விருத்தியாம். அவற்றிற்கு விவேகத்தோடு கூடிய அர்த்தத்தை லக்ஷணத்தோடு கேட்பாயாக.

---

† திராவிடன், தெலுங்கன், கௌடன், மகாராஷ்டிரன் என்பன போன்று, சரஸ்வதி நதிக் கரையில் ஜநித்தவனுக்குச் சாரஸ்வதன் என்று பெயராம்.

40

410. நியாயக் கிரமமான சக்தி லக்ஷணம்.
(ஈசுவரேச்சை) சக்தி லக்ஷணம்.

இந்தக் கடபதத்தினால் கலசரூப அர்த்தத்தின் ஞாநம் கேட்டலானேயே நம் எல்லோருக்கும் உண்டாகுக என்பது ஈசுவர இச்சையாம். இதனை நியாய சாஸ்திரத்தில் சக்தி யென்பர்.

411. தன் (வேதாந்த சித்தாந்தத்தின்) ரீதியாக சக்தி லணக்ஷம்.
(பதத்தி லுள்ள அர்த்த ஞாநத்தை யுண்டு பண்ணும்
சாமர்த்தியம்).

கட பதத்தைக் கேட்பவனுக்குக் கலச ரூப அர்த்த ஞாநத்தினை யுண்டு பண்ணும் கடபதத்திலுள்ள சாமர்த்தியமே கடபதத்திற் சக்தியாம். அங்ஙனமே பட பதத்தைக் கேட்பவனுக்கு வஸ்திர ரூப அர்த்தத்தின் ஞாநத்தினை யுண்டு பண்ணும் பட பதத்திலுள்ள சாமர்த்தியமே பட பதத்திலுள்ள சக்தி விருத்தியாம். இவ்வாறு, எல்லாப் பதங்களிலும் அறியத் தக்கதாம்.

திருஷ்டாந்தம்:—எங்ஙனம் நெருப்பில் தன்னோடு சேரும் பதார்த்தத்தைத் தகிக்கும் சாமர்த்திய ரூப சக்தி இருக்கின்றதோ அங்ஙனமே, சுரோதாவின் கர்ணேந்திரியத்துடன் சேரும் வஸ்துவின் ஞாநத்தை யுண்டு பண்ணும் பதத்திலுள்ள சாமர்த்தியம் சக்தி யெனப்படும். சாமர்த்தியம், பலம், வலி, ஆற்றல் என்பன பரியாய பதங்களாம். எங்ஙனம் அக்கினியில் தகிக்கின்ற சக்தி இருக்கின்றதோ அங்ஙனமே, ஜலத்தில் நனைக்கின்றதற்கும், தாகத்தினை நிவிர்த்திக்கின்றதற்கும், பொடிகளைத் திரட்டுதற்கும் உள்ள சாமர்த்தியமே சக்தியாம்.

இவ்வாறு, சர்வ பதார்த்தங்களிலும் தத்தங் காரியத்தைச் செய்யும் சாமர்த்தியமே சக்தியாம். இது வேதத்தின் சித்தாந்தமாம். இதனை நிச்சயமாய் மநதிற் கொள்வாயாக. நியாய சித்தாந்தம் தள்ளத் தக்கதாம்.

412. பிரஶ்நம்:—வர்ண சமுதாயத்தினும் வேறாகச் சக்தி
யில்லையாகலின் ஈசுவரரது இச்சை சக்தியா மெனல்.

அற்றேல், வங்கியில் அதன் சொரூபத்திற்கு வேறாகச் சக்தி பிரதீதியாகின்ற தில்லை. தகிப்பதற் கேதுவான அக்கினியிலுள்ள சாமர்த்தியமே அக்கினியில் சக்தி யென்று முற்கூறியது பொருந்ாது. ஏனெனின், தாகத்திற்குக் காரணமாக்

தன்மை கேவலம் அக்கிநியிற்று னிருக்கின்றது. அக்நியி னிடத்து அப்பிரசித்தமான சாமர்த்தியம் இருக்கின்றதாக அங்கீகரித்து அதனிடத்துக் காரணத் தன்மையைக் கற்பித்தலாலும், பிரசித்த மான அக்கிநியி னுள்ள காரணத் தன்மையை விடுதலாலும் ஒரு பிரயோஜநமு மில்லை. எங்ஙனம் திருஷ்டாந்தத்தில் சக்தி சம்ப விக்க வில்லையோ, அங்ஙனமே பதத்தினிடத்திலும், அக்ஷர சமு தாயமாகிய பதத்தின் ஸ்வரூபத்தின் வேறுகச் சக்தி விளங்கு கின்ற தில்லை; அச் சக்திக்குப் பிரயோஜநமு மில்லை. இவ்வேது வினுல், ஈசுவர இச்சா ரூபமான நியாய மதத்திற் கூறிய சக்தியே என் புத்திக்கு சம்மதமா யிருக்கின்றது.

சென்ற பிரஸ்நத்தின் உத்தரம்.

413. சித்தாந்த ரீதியாக அக்கிநி முதலியவற்றில் தாக முதலிய காரியத்தை யுண்டு பண்ணும் சாமர்த்திய ரூப சக்தியின் பிரதிபாதநம்.

குரு கூறுகின்றார்.

நண்பனே! பிரதிபந்தகங்க ளுள்ள அக்நியினுல் தாக முண்டா கின்ற தில்லை. உத்தேஜகங்கள் சமீபத்தில் இருந்தால் அக்நியுடன் கூடிய பதார்த்தம் பிரதிபந்த முள்ள போதும் தகிக்கப்படுகின் றது. சக்தி யின்றிக் கேவலம் அக்கிநியே தகித்தற்குக் காரண மாமாயின், உத்தேஜக சகித பிரதிபந்த காலம், பிரதிபந்த ரகித காலங்களிற் போன்று உத்தேஜக ரகித பிரதி பந்த காலத்திலும், தாக முண்டாதல் வேண்டும். ஏனெனின், தாக காரணமான கேவலம் அக்கிநி அக்காலத்திலும் இருக்கின்றது. எம்முடைய மதத்திலோ இந்தத் தோஷ மில்லை. ஏனெனின், எம்முடைய மதத்தில் அக்கிநியின் சக்தி, அல்லது சக்தியோடு கூடிய அக் கிநி தாகத்திற்கு ஹேதுவா யிருக்கின்றது; கேவலம் அக்கிநி ஹேது வன்று.

பிரதிபந்த மிருக்குமிடத்துப் பிரதிபந்தத்தால் அக்கிநிக்கு நாசம், அல்லது திரோதாநம் உண்டாகாதா மாயினும், அக்கிநி யின் சக்திக்கு நாசமாவது, மறைப்பாவது உண்டாகின்றது. ஆதலால், தாகத்திற் கேதுவான சக்தி, அல்லது சக்தியோடு கூடிய அக்கிநியின் அபாவத்தினுல் தாக முண்டாகின்ற தில்லை.

எவ்விடத்தில் பிரதிபந்தத்தின் சமீபத்தில் உத்தேஜகம் வந்திருக்கின்றதோ, அவ்விடத்தில் பிரதிபந்தகமோ அக்கினியின் சக்தியை நாசமாக்கி விட்டது, அல்லது மறைத்து விட்டது; ஆனால் உத்தேஜகம் மீண்டும் சக்தியை உண்டாக்குகின்றது, அல்லது வெளிப்படுத்துகின்றது. ஆதலால், பிரதிபந்தங்க ளிருப்பினும், உத்தேஜகங்களினது மாகாத்மியத்தினால் தாகத்திற்குக் காரண மான சக்தி, அல்லது சக்தியோடு கூடிய அக்கினி யிருத்தலால் தாக முண்டாகின்றது.

இவ்விதமாகப் பிரதிபந்தத்தால் நாச மடைவதும், உத்தே ஜகத்தா லுண்டாவதுமான அக்கினியின் சக்தி தாகத்திற்கு ஏது வாயிருக்கின்றது. காரியத்திற்கு விரோதி பிரதிபந்தம் – பிரதி பந்தகம் எனப்படும். பிரதிபந்தக மிருக்கக் காரியத்திற்குச் சாதகமா யிருப்பது உத்தேஜக மெனப்படும்.

அக்கினி ஸ்தானத்தில் பிரதிபந்தகமும் உத்தே ஜகமும் மணி மந்திர ஔஷதங்களாம். எந்த மணி, அல்லது மந்திரம், அல் லது ஔஷதம் சமீபத்தில் இருத்தலால் தாக முண்டாகிற தில்லை யோ அது பிரதி பந்தகமாம். எந்த மணி மந்திர ஔஷதங்க ளின் சந்நிதானத்தால் பிரதிபந்தகங்க ளிருக்கவும் தாக முண்டா கின்றதோ அஃது உத்தேஜகமாம்.

414. சிஷ்யனே ! அக்கினியிற் போன்று ஜல முதலிய சகல பதார்த்தங்களிலு முள்ள சக்தியை நீ யறிவாயாக. சக்தி யின்றி எந்த ஹேதுவினாலும் எக்காரியமு முண்டாகின்ற தில்லை. இவ்வா றாகச் சக்தியின் பிரயோஜனங் கூறப்பட்டது. "அக்கினியில் அதன் சொரூபத்திற்கு வேறாகச் சக்தி பிரதீதியாகின்ற தில்லை" என்று முன் சிஷ்யன் கேட்ட கேள்விக்குச் சமாதானம் கூறுவ தற்காகச் சக்தியின் அநுபவத்தைக் காட்டுவாம்:—

இப்போது (தடை யுள்ளபோது) இதில் (பிரகாசிக்கின்ற நெருப்பில்) சக்தி (தாக சாமர்த்தியம்) இல்லை. மீண்டும் உத்தே ஜக மிருக்குங் காலத்து வேறு சக்தி யுண்டாகின்றது. இந்தச் சக்தி பிரசித்த அநுபவமாம். டீகா நாதர் சம்பந்தமான இதனை மறைத்தல் முடியாது. சித்தாந்தத்தின் பிரகாரம் சக்தியின் சொரூபமும் பிரமாணமும் நிரூபணஞ் செய்யப்பட்டன.

### 415. அந்நிய மதங்களின் சக்தியைக் கண்டித்தல்.

பத சக்தி ஈசுவரனது இச்சா ரூபமென்று கூறியது பொருந்தாது. ஏனெனின், ஈசுவரனுடைய இச்சை ஈசுவரனுடைய தர்மமாம். ஆதலால், அது ஈசுவர னிடத்தி லிருக்கின்றது. இச்சை, பதத்தின் சக்தி யென்று கூறுதல் பொருந்தாது. பதத்தின் தர்மம் சக்தியாமாயின், பதத்தின் சக்தி யென்று கூறுதல் பொருந்தும். ஆதலால், பதத்தின் சாமர்த்திய ரூபமே பதத்தின் சக்தியாம். ஈசுவர னுடைய இச்சை பதத்தின் சமீபமு மில்லை. அதனைப் பதத்தின் சக்தி யென்று கூறுதல் பொருந்தாது.

### 416. வையாகரண முறைப்படி சக்தி லக்ஷணம் (பதத்தி லுள்ள அர்த்தத்தின் யோக்கியதை).

பதத்தி னிடத்திலுள்ள அர்த்த ஞானத்தின் ஏதுத் தன்மை பதத்தில் சக்தியாம். எங்ஙனம்:—கட பதத்தில் கலசரூப அர்த்த ஞானத்திற்கு ஏதுவாந் தன்மைரூப யோக்கியதை யிருக்கின்றது; அதுவே சக்தியாம். இவ்வாறு, வையாகரண பூஷணக் கிரந்தத்தில் ஹரியின் காரிகையை மேற் கோளாகக் கொடுத்துச் சக்தி கூறப்பட்டிருக்கின்றது. அல்லது, வையாகரணத்தின் பூஷண மென்பது உத்தம வையாகரண மாதலால், ஹரியின் - காரிகை யென்பது சுலோகமாம். அதனைப் பார்த்துக் கூறப்படுகின்றது.

### 417. வையாகரண மதக் கிரமமான சக்தியின் கண்டனம். குரு வாக்கியம்.

சிஷ்யனே! வையாகரண மதத்தில் ஒரு பிரபலமான தோஷ மிருக்கின்றது. அதனைக் கேள். அர்த்த ஞானத்திற்கு ஏதுவாந் தன்மை வடிவ யோக்யதை யைச் சக்தி யென்று கூறும் வையாகரணியை உன்னுடைய மதத்தில் பதத்திற் சாமர்த்திய மிருக்கின்றதா? இல்லையா? என்று கேட்டல் வேண்டும். முதற் பக்ஷத்தைக் கூறின், நம் முடைய மதத்தின் சக்தி வலியாற் சித்திக்கின்றது. வையாகரணி, பதத்தில் சாமர்த்திய மிருக்கின்ற தென்று கூறும்பக்ஷத்தில், இந்த லோகப் பிரசித்த சாமர்த்திய ரூப சக்தியினையே பதத்திலும் கொள்ளல் வேண்டும்; பதத்தில் அர்த்த ஞானத்தினை யுண்டு பண்ணுந் தன்மையான யோக்கியதையைச் சக்தியென்று கொள்ள லாகாது.

இதன் கருத் தென்ன வெனில், எவன் பதத்தில் சாமர்த்தியத்தை யங்கீகரிக்கின்றானோ, அவனுக்குச் சாமர்த்தியத்தின் பின்ன ரூபமாகச் சக்தியை அங்கீகரிப்பது தகுதி யன்று ; சாமர்த்திய ரூபமே சக்தி யென்று கொள்வது தகுதியாம். ஏனெனின், சாமர்த்தியம், பலம், ஆற்றல், சக்தி யென்னு மிந் நான்கும் ஒரே வஸ்துவிற்குப் பெயர் என்பது லோகத்திற் பிரசித்தமாம். ஆற்ற லில்லாதவனை, உலகத்தில் பல மில்லாதவ னென்றும், சாமர்த்திய மில்லாதவன் என்றும், சக்தி யில்லாதவ னென்றும் கூறுகின்றார்கள். அன்றியும், வறுக்கப் பட்ட விதையைப் பார்த்து இதில் முளைக்கும் படியான சாமர்த்திய மில்லை, பல மில்லை, சக்தி யில்லை, ஆற்ற லில்லை யென்று கூறுகின்றார்கள்.

இவ்வாற்றால் சாமர்த்தியத்திற்கும், சக்திக்கும் மொன்றுந் தன்மை லோகத்தில் பிரசித்தமாம் அக்கிரியிலும், சாமர்த்திய ரூபமே சக்தி யென்பது நிச்சயிக்கப்பட்டதாம். ஆதலால், பதத்திற் சாமர்த்திய ரூபமே சக்தி யென்று கொள்ளுவது யுக்தமாம். பதத்தில் சாமர்த்தியத்தை யங்கீகரித்து அதற்கு வேறான யோக்கியதையைச் சக்தியாகக் கூறுவது உலகத்திற்கு விரோதமே யன்றி வேறு பிரயோஜன மில்லை. கேவலம் உலகப் பிரசித்தியின் விரோதமே பலனும்.

418. சாமர்த்தியத்தினையே யாம் யோக்கியதை யென்று கொள்ளுகின்றோ மென்று (வையாகரணி) கூறும் பக்ஷத்தில், நம்முடைய மதமே சித்திக்கின்றது. சாமர்த்தியத்தை யங்கீகரிக்கின், சாமர்த்திய ரூப சக்தி பதத்தில் சம்பவிக்கின்றது. அச் சாமர்த்தியத்தை அங்கீகரிப்பதே யில்லை. ஆதலால், அர்த்த ஞானத்தை யுண்டு பண்ணும் தன்மைரூப யோக்கியதையே பதத்தில் சக்தியா மென்று கூறின், அவனை இது கேட்டல் வேண்டும்:—சாமர்த்தியத்தின் அபாவம் கேவலம் பதத்தினிடத்தேயே அங்கீகாரஞ் செய்கின்றனையா ? அல்லது, நெருப்பு முதலிய சர்வ பதார்த்தங்களிலும் சாமர்த்தியத்தின் அபாவத்தினை அங்கீகாரஞ் செய்கின்றனையா ? இரண்டாவது பக்ஷத்தைக் கூறின், நெருப்பு முதலிய பதார்த்தங்களில் சாமர்த்திய ரூப சக்தி யிருப்பதாகப் பிரதிபாதிக்குமிடத்திற் கூறிய யுக்தியால் இந்த ஆக்ஷேபங் கண்டிக்கப் படுகின்றது.

முதற் பக்ஷத்தைக் கூறின், அதில் இரண்டாவது பக்ஷத்திற் கூறிய தோஷ மில்லை. ஏனெனின், அக்கினி முதலிய சர்வ பதார்த்தங்களிலும் சாமர்த்திய ரூப சக்தியை யங்கீகரிக்காவிடின் பிரதிபந்தகத்தினல் தாகத்தி னபாவம் பொருந்தாது. இஃது இரண்டாவது பக்ஷத்தில் தோஷமாம். அந்தத் தோஷம் முதற் பக்ஷத்தி லில்லை. ஏனெனின், நெருப்பு முதலிய சர்வ பதார்த்தங் களினுமோ சாமர்த்திய ரூப சக்தி யிருக்கின்றது. ஆதலால், பிரதி பந்தகத்தினல் தாகத்தி னபாவம் சம்பவியா தென்ப தில்லை. ஆனல், பதத்தில் அர்த்த ஞானத்தினை யுண்டு பண்ணுந் தன்மை ரூப யோக்கியதையின் பிந்நமான சாமர்த்திய ரூப சக்தி யில்லை. ஆனல், பதத்தில் அர்த்தத்தின் யோக்யதையே சத்தியமாமென் பது முதற் பக்ஷமாம். அதில் பிரதிபந்தகத்தினல் தாகத்தின் அசம்பவ ரூப தோஷமோ இல்லை.

அங்ஙனமாயினும், பதத்திலும் வந்நியினைப் போலச் சாமர்த் தியத்தினை அவசியம் அங்கீகரிக்க வேண்டுமென்று கூறுகின்ருர். பதத்தில் சாமர்த்தியத்தின் அங்கீகார மில்லையாயின், சாமர்த்திய மில்லாத பதம் அர்த்த ஞானத்தை யுண்டு பண்ணுவதாம் என்பது மதத்தின் நிச்சயமாம். அஃது அசங்கதமாம்; ஏனெனின், அசா மர்த்திய பதம் அர்த்த ஞானத்தை யுண்டாக்குகின்றதென்று கூறு வது நபும்சகனுக்கு அமோக வீரிய மிருக்கின்றதென்று கூறுவது போன்று கூறும் பொழுதே விரோத முடையதா யிருக்கின் றது. சாமர்த்தியத்தோடு கூடியதற்குச் சமர்த்த மென்று பெய ராம். சாமர்த்திய மின்றியதற்கு அசமர்த்த மென்று பெயராம்.

அசமர்த்தத்தால் ஒரு காரியமும் உண்டாக வில்லை யென்பது உலகத்தில் பிரசித்தமாம். இதனல், அசமர்த்த பதத்தினலும் அர்த்தத்தின் ஞான ரூப காரியம் பொருந்துவ தில்லை. ஆதலால், பதத்தில் சாமர்த்தியத்தினை யங்கீ கரித்தல் யோக்யமாம். எப் பொழுது சாமர்த்தியம் பதத்தில் அங்கீகரிக்கப் படுகின்றதோ, அப்பொழுது சக்தியும் பதத்தில் சாமர்த்திய ரூபமாகவே அங்கீ கரித்தல் யோக்யமாம். இவ்வாற்ருல், அர்த்த ஞானத்தை யுண்டு பண்ணுந் தன்மை ரூப யோக்கியத் தன்மை பதத்திற் சக்தி யன்று; ஆனல், சாமர்த்திய ரூபமே சக்தியாம்.

வையாகரண மதத்தில் வேறு தோஷங்களைப் பார்க்க வேண்டுமாயின் சக்தி நிரூபணத்தில் தர்ப்பணக் கிரந்தத்தினைப் பார்க்குக. அதிற் கூறிய தூஷணம் கடினமா யிருத்தலால் இங்கு எழுதப்பட வில்லை.

## 419. பட்டர் மதப்படி சக்தி லக்ஷணம்

(பதத்திற்கு அர்த்தத்தோடு பேதாபேத வடிவ தாதாத்மியம்.)

பதத்திற்கு அர்த்தத்தோடுள்ள தாதாத்மிய சம்பந்தத்தினைச் சக்தியென்று பட்டர் மதத்தை யநுசரித்தவர்கள் கூறுகின்றார்கள். இதனை நீ உணர்வாயாக. அந்தத் தாதாத்மிய சம்பந்தத்தினைப் பேதாபேத ரூபமென்று கூறுகின்றார்கள். இது அவர்களுடைய அபிப்பிராயமாம்:—

அக்கினி யென்னும் பதத்திற்கு நெருப்பு என்னும் அர்த்தத்தோடு அத்தியந்தம் பேத மில்லை. அத்தியந்தம் பேத மிருக்குமாயின், எங்ஙனம் அக்கினி பதத்தினும் அத்தியந்தம் பிந்நமான ஜல முதலியவற்றிற்கு அக்கினி பதத்தினால் பிரதீதியாகின்ற தில்லையோ, அங்ஙனமே, அக்கினி பதத்தால் அக்கினிரூப அர்த்தத்தின் பிரதீதி உண்டாகாது. பதத்தினும் அத்தியந்தம் பிந்நமான அர்த்தத்தின் பிரதீதி உண்டாகின்ற தில்லை.

எங்ஙனம் பதத்திற்குத் தன தர்த்தத்தோடு அத்தியந்தம் பேதம் இன்றோ, அங்ஙனமே அத்தியந்தம் அபேதமு மின்றாம். அத்தியந்த அபேதம் வாச்சிய வாசகங்கட் கிருக்குமாயின், எங்ஙனம் அக்கினி பதத்தின் வாச்சியமான நெருப்பினால் முகத்தின் தாக முண்டாகின்றதோ, அங்ஙனமே நெருப்பின் வாசகமான அக்கினி பதத்தை யுச்சாரணஞ் செய்வதனாலும் முகத்தின் தாக முண்டாதல் வேண்டும். ஆனால் பதத்தை யுச்சரிப்பதனால் (முகத்தின்) தாக முண்டாகின்ற தில்லை. ஆதலால், அத்தியந்த அபேதமு மில்லை. பின்னரோ, அக்கினி பதத்திற்கு நெருப்பு ரூப அர்த்தத்தோடு பேத சகித அபேத மிருக்கின்றது. பேத மிருத்தலால் (முகத்தின்) தாக முண்டாகின்ற தில்லை. அபேத மிருத்தலால், அக்கினி பதத்தினால் ஜல முதலிய வற்றிற்குப் போன்று நெருப்பின் பிரதீதியின் அசம்பவமு மில்லை. எங்ஙனம் அக்கினி பதத்திற்கு நெருப்பு ரூப அர்த்தத்தோடு பேத சகித அபேத மிருக்கின்றதோ, அங்ஙனமே உதகம், வநம், ஜலம், தகம், ஜீவநம் என்னும் பதங்கட்கு ஜல ரூப அர்த்தத்தோடு பேத சகித அபேத மிருக்கின்றது. அத்தியந்தம் பேத மிருக்குமாயின், எங்ஙனம் உதக முதலிய பதங்களோடு அத்தியந்தம் பிந்நமாயுள்ள அக்கினி முதலியவற்றிற்கு உதக முதலிய பதங்களால் பிரதீதி யுண்டாகின்ற தில்லையோ, அங்ஙனமே ஜலரூப

அர்த்தமும் உதக முதலிய பதங்களால் பிரதீதியாவ தில்லை ; அத ஞல் அத்தியந்தம் பேத மில்லை. அத்தியந்தம் அபேதமு மில்லை. அத்தியந்த அபேத மிருக்குமாயின், எங்ஙனம் ஜலத்தால் முகத்தில் குளிர்ச்சி யுண்டாகின்றதோ, அங்ஙனமே உதக முதலிய பதங்களின் உச்சாரணங்களிஞலும் முகத்தில் சீதளத்தன்மை யுண்டாதல் வேண்டும்; ஆனல், பதத்திஞல் சீதளத்தன்மை யுண் டாகின்ற தில்லை ; ஆதலால், அத்தியந்த அபேத மில்லை. பின்னரோ, பேத சகித அபேத மிருப்பதஞல் இரண்டு தோஷங்களு மில்லை.

இவ்வாற்ருல், யாண்டும் தத்தம் வாச்சியங்களோடு வாசக பதங்கட்குப் பேத சகித அபேத மிருக்கின்றது. அந்தப் பேத சகித அபேதத்தினையே பட்டரை யநுசரித்தவர்கள் தாதாத்மிய சம்பந்த மென்று கூறுகின்ருர்கள் ; பேதாபேத மென்றும் கூறுகின்ருர்கள். அந்தப் பேதாபேத ரூப தாதாத்மிய சம்பந்தமே சர்வ பதங்களிலு முள்ள தத்தம் அர்த்தத்தின் சக்தியாம். தாதாத்மிய சம்பந்தத்திற்கு வேருகச் சாமர்த்திய ரூப சக்தி இல்லை. பேதாபேதத்தில் யுக்தி கூறப்பட்டது.

420. இனிப் பிரமாணத்தினைக் கூறுவாம்:—மாண்டூக்கிய முதலிய வேத வாக்கியங்களில் "ஓம் அக்ஷரம் பிரஹ்ம"மென்று கூறப்பட் டிருக்கின்றது. அங்கு வியாகரணத்தின் பிரகாரம் பிரகாச ரூபமாய் எல்லாவற்றையும் ரக்ஷிப்பது ஓம் அக்ஷரத்தின் அர்த்தமாம். இவ்வாறு பிரஹ்ம மிருக்கின்றது. ஆதலால், ஓம் அக்ஷரம், பிரஹ்மத்தின் வாசகமாம் ; பிரஹ்மம் வாச்சிய மாம்.

வாச்சிய வாசகங்களுக்குத் தம்மில் அத்தியந்தம் பேத மிருக்குமாயின், வாசகமாகிய ஓம் அக்ஷரத்திற்கும், வாச்சியமாய பிரஹ்மத்திற்கும் மாண்டூக்கியாதி உபநிஷத்துக்களில் அபேதம் கூறப்பட்டிராது. "ஓம் அக்ஷரம் பிரஹ்ம"மென்று அபேதங் கூறப்பட்டிருக்கின்றது. ஆதலால், வாச்சிய வாசகங்களின் அபேதத்தில் வேத வசநம் பிரமாணமாம்.

சர்வ ஜநங்களின் பிரதீதியினுலும் வாச்சிய வாசகங்களுக்குப் பேதஞ் சித்திக்கின்றது. எங்ஙன மெனின், அக்கினி முதலிய பதங்கள் வாக்கிலிருக்கின்றன; நெருப்பு முதலிய அவற்றின் அர்த்தங்கள் வாக்கின் வெளியில் அடுப்பு முதலிய விடங்களில் இருக்கின்றன. அங்ஙனமே, ஓ மென்னும் அக்ஷர ரூப பதம் வாக்கி

விருக்கின்றது; அதன் அர்த்தமாகிய பிரஹ்மம் வாக்கி லில்லை; ஆனால், வாக்கிற்கு வெளியில், அஃதாவது தன் மகிமையி லிருக்கின்றது. பிரஹ்மம் வியாபகமா யிருத்தலால், வாக்கில் பிரஹ்மத்தின் அபாவ மில்லையாயினும், பிரஹ்மத்தில் வாக் கிருக்கின்றது. வாக்கில் பிரஹ்ம மில்லை. இவ்வாற்றால், பதம் வாக்கிலும், அர்த்தம் வாக்கிற்கு வெளியிலும் எல்லோருக்கும் விளங்குகின்றன. ஆதலால், பதத்திற்கும் அர்த்தத்திற்கு முள்ள பேதம் லோகத்தில் பிரசித்தமாம்.

இவ்வாற்றால், வாச்சிய வாசகங்களின் பேதத்தில் சர்வ லோகத்தி லுள்ளவர்களது அநுபவமும் பிரமாணமாம். அவற்றின் அபேதத்தில் வேத வசநம் பிரமாணமாம். ஆதலால், பதத்திற்கு அர்த்தத்தோடு பேதாபேத ரூப தாதாத்மிய சம்பந்தம் அப்பிரமாண மன்றாம்; ஆனால் பிரமாண சித்தமாம்.

421. பிரசங்கத்தினால் அந்நிய ஸ்தாநங்களிலும் பேதாபேத தாதாத்மிய சம்பந்தத்தினை யறிவிப்பாம்:—ரூபம், ரஸம், கந்த முதலியன குணங்களாம். அவற்றின் ஆசிரயம் குணி யெனப்படும். அது ரூபாதிகளின் ஆசிரயமான பூமி குணியா யிருப்பது போலாம். அநேகங்களி லிருக்கின்ற ஒரு தர்மம் ஜாதி யெனப்படும். எங்ஙனம், எல்லாப் பிராமண சரீரங்களிலும் ஒரு பிராமணத்துவ மிருக்கின்றது. எல்லாச் சூத்திரர்க ளிடத்திலும் சூத்திரத்துவ மிருக்கின்றது. எல்லா ஜீவர்க ளிடத்திலும் ஜீவத்துவ மிருக்கின்றது. புருஷர்க ளிடத்தில் புருஷத்துவம் இருக்கின்றது. எல்லாக் கடங்களிலும் கடத்துவ மிருக்கின்றது. உலகத்தி லெதற்குப் பிராமணத்துவம், சூத்திரத்துவம், ஜீவத்துவம், புருஷத்துவம், கடத்துவ முதலிய வற்றைச் சொல்லுகின்றார்களோ, அந்தப் பிராமணாதி சரீரங்களி னிடத்துப் பிராஹ்மணத்துவாதி ஜாதிக ளிருக்கின்றன. ஜாதிக் காசிரயமான பிராமணாதிகள் வியக்தி யெனப்படும். போதல் வருதல் முதலியன கிரியைக ளெனப்படும். அவற்றை யுடையது கிரியைக் காசிரயமாம். இவ்வளவு பதார்த்தங்கட்குத் தாதாத்மிய சம்பந்த மிருக்கின்றதென்பதை நீ யறிந்து காரண காரியங்களைக் குண குணியாதிகளிற் சேர்க்குக. அபிப்பிராயம் இதுவாம்:—குண குணிகட்குப் போலக் காரண காரியங் கட்கும் தாதாத்மிய சம்பந்த மிருக்கின்றது. குணத்திற்கும் குணிக்கும் தம்மில் தாதாத்மிய சம்பந்த

மிருக்கின்றது; ஜாதிக்கும், வியக்திக்கும் தம்மில் தாதாத்மிய சம்பந்த மிருக்கின்றது; அங்ஙனமே, கிரியைக்கும் கிரியை யுடைய தற்கும் தாதாத்மிய சம்பந்த மிருக்கின்றது. காரணத்திற்கும் காரியத்திற்கும் தாதாத்மிய சம்பந்த மிருக்கின்றது. தாதாத்மிய மென்பது பேத சகித அபேதத்திற்காம்.

நிமித்த காரணத்திற்கும் காரியத்திற்கும் பேதாபேத ரூப தாதாத்மிய மில்லை. ஆனால் அத்தியந்தம் பேத மிருக்கின்ற தாமாயினும், உபாதாந காரணத்திற்கும் காரியத்திற்கும் பேதா பேத ரூப தாதாத்மியமே சம்பந்தமாம். எங்ஙனம்:—கடத்திற்கு நிமித்த காரணமான குலாலன் தண்டம் முதலியவற்றிற்குக் கட ரூப காரியத்தோடு அத்தியந்த பேதமு மிருக்கின்றது. ஆனல், உபாதாந காரணமான மட் பிண்டத்திற்கும் கட ரூப காரியத்திற்கும் பேத சகித அபேத மிருக்கின்றது. மட் பிண்டத்தினும் கடம் அத்தியந்தம் பிந்நமாயின், எங்ஙனம் மட் பிண்டத்தினும் அத்தியந்தம் பிந்நமான தைலத்தி னுற்பத்தி யுண்டாகின்ற தில்லையோ, அங்ஙனமே கடத்தி னுற்பத்தியு முண்டாகாது.

உபாதாந காரணத்திற்குக் காரியத்தோடு அத்தியந்தம் அபேத மிருப்பினும், மண்ணி னின்றும் கட முற்பத்தி யாகாது. ஏனெனின், தன் ஸ்வரூபத்தினின்று தன் னுற்பத்தி யுண்டாகாது. ஆதலால் உபாதாந காரணத்திற்குக் காரியத்தோடு பேத சகித அபேத மிருக்கின்றது; அதனல் அத்தியந்தம் பேத பக்ஷத்திற்குத் தோஷ மில்லை. பேத மிருக்கின்றது. அதனல் அபேத பக்ஷத்திற்குத் தோஷ மில்லை. இவ்வாற்றல், உபாதாந காரணத்திற்குக் காரியத்தோடு பேதாபேதம் யுக்தியாற் சித்திக்கின்றது. பிரதீதியினலும் உபாதாநத்தோடு காரியத்திற்குப் பேதாபேதமே சித்திக்கின்றது. "இது மண், இது கடம்" என் றிவ்வாருய பிந்நப் பிரதீதியினல் பேதம் சித்திக்கின்றது விசாரித்துப் பார்க்குமிடத்தோ, கடத்தின் வெளியிலும் உள்ளிலும் மண்ணினும் வேறொரு வஸ்துவும் பிரதீதியாகின்ற தில்லை. ஆனல் மண்ணே பிரதீதி யாகின்றது; ஆதலால் அபேதம் சித்திக்கின்றது.

இவ்வாற்றல், உபாதாந காரணத்திற்குக் காரியத்தோடு பேதாபேத ரூப தாதாத்மிய சம்பந்த மிருக்கின்றது. அங்ஙனமே, குணத்திற்கும் குணிக்கும் பேதாபேத மிருக்கின்றது. கடத்தின்ரூபத்திற்குக் கடத்தோடு அத்தியந்தம் பேத மிருக்கு

மாயின், எங்ஙனம் கடத்தோடு படத்திற்கு அத்தியந்தம் பேத மிருக்கின்றதோ; அந்தப் படம் கடத்தின் ஆசிரித மின்றிச் சுதந்திரமா யிருக்கின்றதோ, அங்ஙனமே கடத்தின் ரூபமும் கடத்தின் ஆசிரிதமாகா திருத்தல் வேண்டும். குணத்திற்கும் குணிக்கும் அத்தியந்தம் அபேத மிருக்குமாயினும், கடத்தின் ரூபம் கடத்தின் ஆசரித மாதல் பொருந்தாது. ஏனெனின், தானே தனக்கு ஆசிரயமா யிராது. ஆதலால் குண குணிகளுக்குப் பேதாபேத ரூப தாதாத்மிய சம்பந்த மிருக்கின்றது.

இந்த யுக்தியினை ஜாதிக்கும் வியக்திக்கும், அங்ஙனமே கிரியைக்கும் கிரியை யுடையதற்கு முள்ள பேதாபேத ரூப தாதாத்மிய சம்பந்தத்தில் அறிதல் வேண்டும். கண்டனஞ் செய்யப்படும் மதம் எதுவோ அதில் அநேக யுக்திகளைக் கூறுவதனுல் பிரயோஜந மில்லை யாகலின், வேறு யுக்திகளைக் கூற வில்லை.

## 422. பட்டர் மத கண்டநம்.

ஒரு வஸ்துவிற்கு ஒரே யிடத்தில் பேதாபேத மிருப்பது விருத்தமாம். ஆதலால் யாவும் அசுத்த மென்று யுக்திமான்கள் கூறுகின்றார்கள். இதன் அபிப்பிராயம் இதுவாம்:—ஒரு கடத்தில் தன் அபேதமும், பிற வஸ்துக்களின் பேதமு மிருப்பினும், எதன் அபேத மிருக்கின்றதோ அதன் பேத மில்லை; எதன் பேத மிருக்கின்றதோ அதன் அபேத மில்லை யென்னும் அபிப்பிராயத்தினுல், ஒரு வஸ்துவிற்குப் பேதாபேதம் விருத்தமெனப் பட்டது. ஒரு கடத்திற்கே தன்னி லபேதமும் பிறிதில் பேதமு மிருக்கின்றது. ஆனுல் எதில் அபேத மிருக்கின்றதோ அதில் பேத மில்லை; எதிற் பேத மிருக்கின்றதோ அதில் அபேத மில்லை யென்னும் அபிப்பிராயத்தினுல், ஒரு வஸ்துவின் பேதமும், அபேதமும் ஒன்றனிடத்து விருத்த மென்று கூறப் பட்டிருக்கின்றது.

பேதாபேதங்கள் தம்மில் விரோதிகளாம். ஒரு வஸ்துவில் எதற்குப் பேத மிருக்கின்றதோ அதற்கு அபேதமும், எதற்கு அபேத மிருக்கின்றதோ அதற்குப் பேதமும் விரோதமுடையனவாம். ஆதலால், வாச்சிய வாசகம், குண குணி, ஜாதி வியக்தி, கிரியை கிரியை யுடையது, உபாதாந காரணம் காரியம், என்பவற்றிற்குப் பேதாபேத ரூப தாதாத்மிய சம்பந்தம் அங்கீ கரிப்பது அசுத்தமாம்.

423. "வாக்கில் வாசகமும், வெளியில் வாச்சியமும் இருத்தலால் பேதமும், சுருதியில் ஓம் அக்ஷரம் பிரஹ்ம மென்று கூறப்பட் டிருத்தலால் அபேதமுமாம்" என்று முன் வாச்சிய வாசகங்களின் பேதாபேதத்தில் பிரமாணமாகக் கூறப்பட்டன. அதற்குச் சமாதானம்:—(பிரணவ வர்ணமாகிய) ஓம் அக்ஷரத்திற்கும் பிரஹ்மத்திற்கும் வேதத்தில் அபேதம் கூறப்பட் டிருக்கின்றது. அவ் வேத வசநத்திற்கு வாச்சிய வாசகங்களின் அபேதத்தில் தாத்பரிய மில்லை. ஆனால் அதில் வேறு இரகசியமான அபிப்பிராய மிருக்கின்றது. அந்த அபிப்பிராயத்தினைப் பட்டர் அறிய வில்லை. ஓம் அக்ஷரம் பிரஹ்ம மென்று கூறப்பட் டிருக்கின்றவாக்கியத்திற்கு, ஓம் அக்ஷரத்திற்கும் பிரஹ்மத்திற்கும் அபேத முண் டென்பதில் தாற்பரிய மில்லை; ஆனால், "ஓம் அக்ஷரத்தைப் பிரஹ்ம ரூபமாக உபாஸனை செய்க" என்னு மர்த்தத்தில் தாற்பரியமாம். எங்ஙனம் உபாஸனை விதிக்கப்பட் டிருக்கின்றதோ அங்ஙனமே உபாஸியத்தின் சொரூபமு மிருத்தல் வேண்டு மென்னும் நியம மில்லை. ஆனால், வஸ்துவின் சொரூபத்தைவிட்டு வேறு ஸ்வரூப மாகவும் அதனிடத்தில் உபாஸனை செய்யப் படுகின்றது.

சாளக்கிராமத்தையும், பாணத்தையும் விஷ்ணு ரூபமாயும் சிவ ரூபமாயும் உபாஸிக்குமாறு கூறப்பட் டிருக்கின்றது. ஆண்டு, சங்கு சக்கராதிகளுடன் கூடிய சதுர்ப்புஜ மூர்த்தி சாளக்கிராமத்தி லில்லை. கங்கையா லலங்கரிக்கப்பட்ட ஜடை முடி, உடுக்கை, தோல், கபால மென்பவற்றோடு கூடிப் பத்திரா முத்திரையால் சரணடைந்தவர்களுக்குத் திரிகுண ரஹிதமான ஆத்மோபதேசம் செய்யும் மூர்த்தி பாணத்தி லில்லை. ஆனால், இரண்டும் சிலாரூபங்களாம். சாஸ்திரத்தின் ஆஞ்ஞையால் அவற்றின் சிலாரூப திருஷ்டியை விட்டு இரண்டிலும் கிரமமாக விஷ்ணு ரூபமும், சிவ ரூபமும் உபாஸிக்கப்படுகின்றன. ஆதலால், உபாஸியத்தினது ஸ்வரூபத்தின் அதீநமாக உபாசனை யில்லை; பின்னரோ, விதியின் அதீநமா யிருக்கின்றது. எங்ஙனம் சாஸ்திரத்தின் வசநம் விதிக்கின்றதோ, அங்ஙனமே உபாஸனை செய்தல் வேண்டும்.

சாந்தோக்கிய உபநிஷத்தில் பஞ்சாக்கினி வித்தியாப் பிரகரணத்தில் சுவர்க்க லோகம், மேகம், பூமி, புருஷன், ஸ்திரீ இவ்வைந்து பதார்த்தங்களையும் அக்கினி ரூபமாக உபாஸிக்குமாறு

கூறப்பட் டிருக்கின்றது. சிரத்தை, சோமம், மழை, அந்நம், வீரியம் இவ் வைந்து பதார்த்தங்களையும் பஞ்சாக்கினிகளின் ஆகுதி ரூபமாக உபாசனை செய்யுமாறு கூறப்பட்டிருக்கின்றது. அவ்விடத்தில் ஸ்வர்க்காதிகள் அக்கினி யன்று. சிரத்தை, சோமம் முதலியன ஆகுதியு மன்று. அங்ஙன மாயினும், வேதத்தி னுஞ்ஞையினால், ஸ்வர்க்க லோகாதிகள் அக்கினி ரூப மாகவும், சிரத்தாதிகள் ஆகுதி ரூபமாகவும் உபாசனை செய்யப்படுகின்றன. இவ்வாற்றால், ஓம் அக்ஷரத்திற்குப் பிரஹ்ம ரூபத்தினால் உபாஸனை கூறப்பட் டிருக்கின்றது. ஆண்டு ஓம் அக்ஷரம் பிரஹ்ம ரூப மன்றாயினும், பிரஹ்ம ரூபமாய் உபாஸித்தல் பொருந்துகின்றது.

உபாசனை வாக்கியத்தில் வஸ்துவின் அபேதம் அபேக்ஷிக்கப்படுவ தின்று. ஆனால், பிந்ந வஸ்துவினையும் அபிந்ந ரூபத்தால் உபாஸித்த லுண்டாகின்றது. விசாரித்துப் பார்க்கு மிடத்துப் பிரஹ்மத்தின் வாசகமான ஓம் அக்ஷரத்திற்குத் தனது வாச்சியமான பிரஹ்மத்தோடு அபேதம் பொருந்துதலு மாகின்றது. கடாதி அந்நிய பதங்கட்குத் தத்தம் ஜட வடிவ அர்த்தத்தோடு அபேதம் பொருந்தாது. ஏனெனின், எல்லா நாம ரூபங்களும் பிரஹ்மத்திற் கற்பிக்கப்பட் டிருக்கின்றன. பிரஹ்மம் அதிஷ்டாநமா யிருக்கின்றது. ஓம் அக்ஷரமும் பிரஹ்மத்தின் நாமமாம். ஆதலால், பிரஹ்மத்திற் கற்பிதமா யிருக்கின்றது. கற்பித வஸ்து அதிஷ்டாநத்தினாலும் பிந்ந மாகாமல் அதிஷ்டாந ரூப மாகவே இருக்கின்றது. ஆதலால், ஓம் அக்ஷரம் பிரஹ்ம ரூபமாம்.

கடாதி பதங்களுக்கு ஜடரூப தமது அர்த்தங்கள் அதிஷ்டாந மன்று. ஆனல் வாச்சிய சகித கடாதி பதங்கள் பிரஹ்மத்திற் கற்பிதங்களாம்; பிரஹ்மம் அவற்றின் அதிஷ்டாநமாம். ஆதலால், பிரஹ்மத்தோடு எல்லாவற்றிற்கும் அபேதம் பொருந்துதலு மாகின்றது. ஆனல், கடாதி பதங்கட்குத் தம் ஜட ரூப வாச்சியார்த் தங்களோடு அபேதம் எவ்விதத்தினாலும் பொருந்தாது. ஆதலால், பட்டர் மதத்தில் வாச்சிய வாசகங்களுக்கு அபேதம் அசங்கதமாம்.

424. வாச்சிய வாசகங்களுக்குக் கேவலம் பேதம் அங்கீகரிப்பவர் மதத்தில், இத்தோஷம் பட்டராற் கூறப்பட் டிருக்கின்றது:—கடபதத்தின் வாச்சியம் கடபதத்தினும் அத்தியந்தம்

பிந்நமா யிருக்கின், எங்ஙனம் கடபதத்தினும் அத்தியந்தம் பிந்நமான வஸ்திர ரூப அர்த்தத்தின் பிரதிதீ யுண்டாகின்ற தில்லையோ அங்ஙனமே, கடபதத்தின் அத்தியந்தம் பிந்நமான கலச ரூப அர்த்தத்தின் பிரதீதியு முண்டாவ தில்லை. கட பதத்தினும் பிந்நமாக வாச்சியத்தைக் கொண்டு அதற்குக் கட பதத்தால் பிரதீதியை யங்கீகரிக்கின், எங்ஙனம் கட பதத்தின் அத்தியந்தம் பிந்நமான கலச ரூப அர்த்தத்தின் பிரதீதி யுண்டாகின்றதோ, அங்ஙனமே, அத்தியந்தம் பிந்நமான வஸ்திரத்திற்கும் கட பதத்தால் பிரதீதியாதல் வேண்டும். இந்தத் தோஷமும் சாமர்த்தியத்தை அல்லது இச்சாரூப சக்தியை அங்கீகரியாதவர் மதத்திலிருக்கின்றது.

சக்தியினை யங்கீகரிப்பவர் மதத்தில் தோஷ மில்லை; எனெனின், கட பதத்தின் வாச்சிய கலசமும் அதன் அவாச்சியமான வஸ்திராதிகளுமாய அவ் விரண்டும் கட பதத்தின் பிந்நங்களா யிருக்கின்றன. ஆனால் கட பதத்தில் கலச ரூப அர்த்த ஞாநத்தினைச் செய்யும் சக்தி யிருக்கின்றது; வேறு அர்த்தத்தின் ஞாநத்தினைச் செய்யும் சக்தி யில்லை. ஆதலால் கட பதத்தால் கலச ரூப அர்த்தத்திற்கு வேறான அர்த்தம் பிரதீதி யாகின்றதில்லை. இவ்வாற்றால், எந்தப் பதத்திற்கு எந்த அர்த்தத்தில் சக்தி யிருக்கின்றதோ அவ்வர்த்தமே அப்பதத்தால் பிரதீதியாகின்றது; வேறு அர்த்தம் பிரதீதி யாகின்ற தில்லை. ஆதலால் வாச்சிய வாசகங்களின் அத்தியந்த பேதத்தில் தோஷ மில்லை. அவற்றிற்குப் பேத சகித அபேதரூப தாதாத்மிய சம்பந்தம் பொருந்தாது.

425. பேதமும் அபேதமும் தம்மில் விரோதிகளாம். அங்ஙனமே, உபாதாந காரணத்திற்குக் காரியத்தோடு பேத சகித அபேத மில்லை ; கேவலம் பேதம் இருக்கின்றது. கேவல பேதத்திற் சொன்ன தோஷம் நையாயிக மதத்திலும் சக்தி வாதியின் மதத்திலும் இல்லை. எனெனின், காரண காரியங்களின் அத்தியந்த பேதத்தில் இந்தத் தோஷ மிருக்கின்றது:—மண்ணினும் அத்தியந்தம் பிந்நமான கடத்தி னுற்பத்தி யுண்டாமாயின், அத்தியந்தம் பிந்நமான தைலத்திற்கும் மண்ணினின்று உற்பத்தியாதல் வேண்டும். அத்தியந்தம் பிந்நமான தைலத்தின் உற்பத்தியாகா விடின், அத்தியந்தம் பிந்நமான கடமும் மண்ணினின்று உற்பத்தியாக வேண்டுவ தில்லை.

426. இந்தத் தோஷம் நையாயிக மதத்தி லில்லை. ஏனெனின், சகல வஸ்துக்களி னுற்பத்தியில் நையாயிகர் பிராகபாவத்தைக் காரணமெனக் கொண்டிருக்கின்றார்கள். எங்ஙனம் கடத்தி னுற்பத்தியில் தண்டம் சக்கரம் குலாலன் காரணமாமோ, அங்ஙனமே கடத்தின் பிராகபாவமும் கடத்திற்குக் காரணமாம். அவ்வாறே சகல பதார்த்தங்களின் பிராகபாவம், சகல பதார்த்தங்களி னுற்பத்தியில் காரணமா யிருக்கின்றது.

கடத்தின் பிராகபாவம் கடத்தி னுபாதாந காரணமான மண்ணில் இருக்கின்றது ; மற்றவற்றி லில்லை. எண்ணெயின் பிராகபாவம் எள்ளி லிருக்கின்றது ; மற்றவற்றி லில்லை. இவ்வாறு சர்வ காரியங்களின் பிராகபாவமும் தத்தம் உபாதாந காரணத்தி லிருக்கின்றது. எந்தப் பதார்த்தத்தில் எதன் பிராகபாவ மிருக்கின்றதோ, அந்தப் பதார்த்தத்தி லிருந்து அதன் உற்பத்தி யுண்டாகின்றது ; அந்நியவற்றி னுற்பத்தி யுண்டாகின்றதில்லை. மண்ணில் கடத்தின் பிராகபாவ மிருக்கின்றது. அதனால் மண்ணினின்றும் கடத்திற்கே யுற்பத்தி யுண்டாகின்றது. தைலத்தி னுற்பத்தி யுண்டாகின்ற தில்லை. எண்ணெயின் பிராகபாவம் எள்ளி லிருக்கின்றது. அதனால் எள்ளி னின்று எண்ணெயே உண்டாகின்றது ; கட முண்டாகின்ற தில்லை. இவ்வாறு சர்வ காரியங்களிலும் பிராகபாவம் காரணமா யிருக்கின்றது. ஆதலால், காரண காரியங்களுக்கு அத்தியந்தம் பேத மங்கீகரித்தலால் நையாயிக மதத்தில் தோஷ மில்லை.

427. சாமர்த்திய ரூப சக்திவாதியின் மதத்திலும் தோஷமில்லை. ஏனெனின், மண்ணில் கடத்தின் சாமர்த்திய ரூப சக்தியிருக்கின்றது ; தைலத்தின் சக்தி யில்லை. எள்ளில் எண்ணெயின் சாமர்த்திய ரூப சக்தி யிருக்கின்றது ; கடத்தின் சாமர்த்திய ரூப சக்தி யில்லை ; ஆதலால் மண்ணின்றும் கடமே உண்டாகின்றது ; தைல முண்டாகின்ற தில்லை. அங்ஙனமே, எள்ளினின்றும் எண்ணெயே யுண்டாகின்றது ; கட முண்டாகின்ற தில்லை.

இவ்வாற்றால், உபாதாந காரணத்திற்கும் காரியத்திற்கும் அத்தியந்தம் பேதத்தைக் கொள்ளுதலில் தோஷ மில்லை; 'பேதாபேதம் அசங்கதமாம்' பேதத்திலும் அபேதத்திலும் பட்டாராற் கூறப்பட்ட இரண்டு விதமான தோஷங்களும் பட்டர் மதத்தில் அவசிய மிருக்கின்றன. ஏனெனின், பட்டர் பேத சகித

அபேதத்தை அங்கீகரித் திருக்கின்றார். இதனால், காரண காரியங்களுக்குப் பேதமு மிருக்கின்றது, அபேதமு மிருக்கின்றதென்னும் அர்த்தம் சித்திக்கின்றது. பேத மிருத்தலால், பேத பக்ஷத்திற் கூறிய தோஷ முண்டாம். அபேத மிருத்தலால், அபேத பக்ஷத்திற் கூறிய தோஷ முண்டாம். எங்ஙனம், திருடனுக்குத் திருட்டுத் தோஷமும், சூதாடிக்குச் சூதாட்ட தோஷமும் என ஒவ்வொன்று செய்பவனுக்கு (ஒவ்வொரு தோஷம்) கூறப்பட்டிருக்கின்றது; அவ்விரண்டையு மநுஷ்டிக்கின்றவனுக்கு, திருடு-சூது என்னும் இரண்டு தோஷங்களு முண்டாகின்றனவோ, அங்ஙனமே குண குணி முதலியவற்றின் பேதாபேதங்களை அங்கீகரித்தலினாலும் பேத பக்ஷத்திலும் அபேத பக்ஷத்திலுங் கூறிய இரண்டு தோஷங்களு முண்டாம்.

சக்தி வாதியின் மதத்தில் கேவலம் பேதத்தை அங்கீகரிப்பதனால் தோஷ மில்லை. ஏனெனின், குணியில் குணத்தைத் தரிக்கும் சக்தி யிருக்கின்றது; வேறொன்றன் சக்தி யில்லை. ஆதலால், பேத பக்ஷத்தில், கடத்தின் ரூபாதிகள் கடத்திற்குப் பிந்நமா யிருப்பது போல், படாதிகளும் கடத்திற்குப் பிந்நமா யிருக்கின்றன; ரூபாதிகள் போல் படாதிகளும் கடத்திலிருத்தல் வேண்டும்; அல்லது, படாதிகள் போல் ரூபாதிகளும் இருக்கலாகாது என்னும் தோஷம் கூறப்பட்டிருக்கின்றது. இந்தத் தோஷம் சக்தியை அங்கீகரியாதவன் மதத்தி லிருக்கின்றது. சக்தி வாதியின் மதத்தில் கேவல பேதம் அங்கீகரிப்பதனாலும் தோஷ மில்லை.

மாறாய், பட்டர் மதத்தில் பேதாபேதங்க ளிரண்டையும் அங்கீகரித்தலினால் இரண்டு பக்ஷங்களின் தோஷங்களும், கூறிய திருஷ்டாந்தங்களால் இருக்கின்றன. பேதாபேதமாகிய விரோதி தர்மங்களின் அஸம்பவ தோஷமும் இருக்கின்றது. அவ்வாறே, ஜாதி வியக்திகளுக்கும், கிரியை கிரியை யுடையவற்றிற்கும் கேவலம் அபேத மிருப்பினும், வியக்தியில் ஜாதியைத் தரிக்கும் சக்தி யிருக்கின்றது. கிரியை யுடையதில் கிரியையைத் தரிக்கும் சக்தி இருக்கின்றது; வே றொன்றைத் தரிக்கும் சக்தி யில்லை.

இவ்வாற்றால், உபாதாந காரணத்திற்கும், காரியத்திற்கும், அவ்வாறே குண குணி முதலிய வற்றிற்கும் பேதாபேத ரூப

தாதாத்மிய சம்பந்தம் அஸங்கதமாம். சர்வ காலத்திலும் தம்மில் பேதம் அங்கீகரித்தலில் பட்டராற் கூறப்பட்ட தோஷத்தைச் சக்தி விழுங்குகின்றது.

வேதாந்த சித்தாந்தத்திலும் காரியம் குணம் ஜாதி கிரியை என்பவற்றிற்கு உபாதாந காரணம் குணி வியக்தி கிரியை யுடையது என்பவற்ரோடு அத்தியந்தம் பேத மில்லை. ஆனால், தாதாத்மிய சம்பந்தமே அங்கீகாரஞ் செய்யப்பட் டிருக்கின்றதா மாயினும், வேதாந்த மதத்தில் பேதாபேத ரூப தாதாத்மிய மில்லை. ஆனால், பேதாபேதத்தின் விலக்ஷணமான் அநிர்வசநீய ரூப தாதாத்மிய சம்பந்த மிருக்கின்றது. பேதத்தின் விலக்ஷணமா யிருத்தலால் பேத பக்ஷத்திற்குத் தோஷ மில்லை. அபேதத்திற்கு விலக்ஷணமா யிருத்தலால், அபேத பக்ஷத்திற்குத் தோஷ மில்லை. இவ்வாற்ருல், பேதாபேதங்களின் விலக்ஷணமான அநிர்வசநீய தாதாத்மிய சம்பந்த மிருக்கின்றது. ஆனால், பேதாபேத ரூப தாதாத்மியம் அசங்கதமாம். ஆதலால், "வாச்சிய வாசகங்களின் பேதாபேத ரூப தாதாத்மிய சம்பந்தமே சக்தி" யென்று சொன்ன பட்டரைச் சார்ந்தவர்களின் பக்ஷம் நல முடைய தன்ரும். ஆனால், பதத்தைக் கேட்ட மாத்திரத்தில் அர்த்த ஞானத்தை யுண்டு பண்ணுதற்குப் பதத்திலுள்ள சாமர்த்தியம் யாதோ, அதுவே பதத்தில் சக்தியாம். இவ்விதமாகச் சக்தி நிரூபிக்கப் பட்டது.

## 428. சக்கிய லக்ஷணம்.

லக்ஷணையின் ஞானத்தில் சக்கியத்தின் ஞானம் உபயோகியா யிருக்கின்றது. ஏனெனின், சக்கிய சம்பந்தம் லக்ஷணையின் ஸ்வரூபமாம். சக்கியத்தை யுணர்ந்தா லன்றி சக்கிய சம்பந்த ரூப லக்ஷணையின் ஞான முண்டாகாது. ஆதலால், சக்கியத்தின் லக்ஷணத்தைக் கூறுகின்ரேம்.

எந்தப் பதத்தில் எந்த அர்த்தத்தின் சக்தி யிருக்கின்றதோ அந்தப் பதத்திற்கு அந்த அர்த்தம் சக்கியமா மென உணர்க. சக்கியார்த்தத்தினையே வாச்சியார்த்த மென்றும் கூறுவர்.

எங்ஙனம்: அக்கினி பதத்திற்கு நெருப்பு வடிவ அர்த்தத்தின் சக்தி யிருக்கின்றது. ஆதலால், அக்கினி பதத்திற்கு நெருப்பு சக்கியார்த்தம் அல்லது, வாச்சியார்த்த மெனப்படுகின்றது. வாச்சியார்த்தத்தினைப் போதிக்கின்ற பதம் வாசக மெனப்படும்.

429. லக்ஷியார்த்தம் லக்ஷணை யென்பவற்றின் சாமாநியரூபம். இனி லக்ஷணையும் ஜஹதீ முதலிய பேதத்தின் லக்ஷணமும்.

வாச்சியார்த்தத்தின் சம்பந்தம் லக்ஷணை யென அறிக. எந்த அர்த்தத்தின் ஞானம் பதத்தின் சக்தியா லுண்டாகின்றதில்லையோ, ஆனால்,லக்ஷணையினால் ஞான முண்டாகின்றதோ, அது பதத்தின் லட்சியார்த்தம் எனப்படும்.

430. ஜஹதி, அஜஹதி, பாகத் தியாக லக்ஷணைகளின் லக்ஷணம்.

யாண்டு வாச்சியார்த்தம் முற்றும் விடப்பட்டும் அதன் சம்பந்தம் பிரதீதியாகின்றதோ, ஆண்டு ஜகதி லக்ஷணை கூறப்படுகின்றது. "கங்கையில் கிராம மிருக்கின்ற" தென்று ஒருவன் கூறுமிடத்து கங்கை யென்னும் பதத்திற்குக் கரையில் ஜஹதி லக்ஷணை இருக்கின்றது. ஏனெனின், கங்கா பதத்திற்கு வாச்சியார்த்தம் தேவ நதியின் பிரவாகமாம்; அப்பிரவாகத்தில் கிராம மிருப்பது அசம்பவமாம். ஆதலால், வாச்சியார்த்தம் முழுமையும் விட்டுக் கரையில் கங்கை யென்னும் பதத்திற்கு ஜகதி லட்சணை இருக்கின்றது.

வாச்சியத்தின் சம்பந்தத்திற்கு லக்ஷணை யென்று பெயர். "கங்கையில் கிராமம்" என்னு மிடத்தில் கங்கா பதத்தின் வாச்சியமான பிரவாகத்திற்குக் கரையோடு சம்யோக சம்பந்த மிருக்கின்றது. ஆதலால், கங்கா பதத்தின் வாச்சியத்திற்குக் கரையோடுள்ள சம்பந்தம் லக்ஷணையாம். வாச்சியம் முற்றிலும் விட்டிருத்தலால் ஜகதி லக்ஷணையாம்.

431. வாச்சியார்த்தத்தோடு வாச்சியத்தின் சம்பந்தியின் ஞானம் எந்தப் பதத்தினால் உண்டாகின்றதோ அந்தப் பதத்தில் அஜகதி லக்ஷணை அங்கீகரிக்கப்படுகின்றது. "சிவப்பு ஓடுகின்றது" என்று ஒருவன் கூறுமிடத்துச் சிவப்பு என்னும் பதத்திற்குச் சிவப்பு வர்ணத்துடன் கூடிய குதிரையில் அஜகதி லக்ஷணையாம். ஏனெனின், சிவப்பு என்பது சிவப்பு வர்ணத்திற்காம்; ஆதலால், சிவப்பு என்னும் பதத்தின் வாச்சியம் சிவப்பு நிறமாம். கேவலம் அதில் ஓடுதல் சம்பவியாது. இக் காரணத்தினால் சிவப்பு என்னும் பதத்தின் வாச்சியமான சிவப்பு நிறத்தோடு கூடிய குதிரையி னிடத்தில் சிவப்பு என்னும் பதத்திற்கு அஜகதி

லக்ஷணை யிருக்கின்றது. குணத்திற்கும், குணிக்கும் தாதாத்மிய சம்பந்தம் கூறப்படுகின்றது. சிவப்பும் ரூபத்தின் பேத மாதலால் குணமாம். ஆதலால், சிவப்பு என்னும் பதத்தில் வாச்சிய மான சிவப்புக் குணத்திற்குக் குணியாகிய குதிரையோ டுள்ள தாதாத்மிய சம்பந்தம் லக்ஷணை யாம். வாச்சியத்தினை விடாமல் அதிகத்தைக் கிரகிப்பதனால் அஜகதி லக்ஷணையாம்.

432. பதத்தின் வாச்சியார்த்தத்தில் ஒரு பாகத்தை விட்டு ஒரு பாகத்தைக் கிரகிப்பது பாகத் தியாக லக்ஷணை யெனப்படு கின்றது. அதனையே ஜகதி அஜஹதி லக்ஷணை யென்றும் கூறு வர். முன் பார்த்த பொருளையே வேறிடத்தில் பார்த்து " அது இதுதான் " என்று ஒருவன் கூறுவா னாயின், ஆண்டுப் பாகத்தி தியாக லக்ஷணை யிருக்கின்றது. ஏனெனின், சென்ற காலத்திலும், வேறிடத்திலு மிருக்கும் பொருள் ' அது ' எனப் படும். ஆதலால், சென்ற காலத்துடனும் வேறிடத் துடனும் கூடிய பொருள் " அது " என்னும் பதத்தின் வாச்சி யார்த்த மாம்.

நிகழ் காலத்தில் சமீப இடத்தி லிருக்கும் வஸ்து இது எனப் படும். ஆதலால், நிகழ்காலத்துடனும் சமீப தேசத்துட னுங் கூடிய வஸ்து " இது " என்னும் பதத்தின் வாச்சியார்த்த மாம். சென்ற காலத்துடனும், வேறிடத்துடனும் கூடிய வஸ் துவே நிகழ் காலத்துடனும் சமீப தேசத்துடனும் கூடி யிருக் கின்றது என்பது ("அதுவே இது" என்னும் வாசக) சமுதாயத் தின் வாச்சியார்த்தமாம்; அது சம்பவியாது. ஏனெனின், சென்ற காலத்திற்கும் நிகழ் காலத்திற்கும் விரோத மிருக்கின் றது. அங்ஙனமே அந்நிய தேசத்திற்கும் சமீப தேசத்திற்கும் விரோத மிருக்கின்றது. ஆதலால், இரண்டு பதங்களிலு முள்ள தேச காலங்களாகிய வாச்சிய பாகங்களை விட்டு வஸ்து மாத்தி ரத்தில் இரண்டு பதங்கட்கும் பாகத் தியாக லக்ஷணை இருக்கின் றது.

மகா வாக்கியங்களில் லக்ஷணை.

" தத்துவமஸி " என்னும் மகா வாக்கியத்தில் லக்ஷணை யினைக் காண்பித்தற்காகத் " தத் " " த்வம் " என்னும் பதங்க ளின் வாச்சியார்த்தங்களை வர்ணிப்பாம்:—

433. "தத்" பதத்தின் வாச்சியார்த்தம்.

சர்வ சக்திமானும் அஃதாவது சர்வ சாமர்த்திய முடைய வனும், சர்வஞ்ஞனும் அஃதாவது முற்றறி வுடையவனும், விபுவும் அஃதாவது வியாபகனும், ஈசனும் அஃதாவது எல்லாவற்றையும் பிரேரிப்பவனும், சுதந்திரனும் அஃதாவது கர்மாதீந மில்லாதவனும், பரோக்ஷனும் அஃதாவது ஜீவப் பிரத்தியக்ஷத்திற்கு விஷய மாகாதவனும், மாயியும் அஃதாவது மாயையைச் சுவாதீந முடையவனும், பந்த மோக்ஷ மின்றியவனும் அஃதாவது பந்த முள்ளதற்கு மோக்ஷ முளதாம், ஈசுவரன் பந்த மில்லாதவனாகலின் அவனிடத்து மோக்ஷமு மில்லை என்னும் இத்துணைத் தர்மங்களுடன் கூடிய ஈசுவர சேதநம் "தத்" பதத்தின் வாச்சியார்த்தமாம்.

434. "த்வம்" பத வாச்சிய நிரூபணம்.

ஈசுவர தர்மங்களுக்கு விபரீதமான தர்மங்கள் எதனிடத்திலிருக்கின்றனவோ அந்த ஜீவ சேதநத்தைத் த்வம் பதத்தின் வாச்சியமாக அறி. இதன் கருத்து இதுவாம்:—(ஜீவன்) அற்பசக்திமான், அற்பஞ்ஞன், பரிச்சிந்நன், அநீசன், கர்மாதீநன், அவித்தியா மோகிதன், பந்த மோக்ஷ முடையவன், பிரத்தியக்ஷன் ஆவன். ஏனெனின், தன் ஸ்வரூபம் எவனுக்கும் பரோக்ஷமன்று; பிரத்தியக்ஷமேயாம். ஈசுவரனுடைய ஸ்வரூபம் தன (ஈசுவரனு)க்குப் பிரத்தியக்ஷமா மாயினும், ஜீவர்களுக்குப் பிரத்தியக்ஷ மன்று; ஆதலால், பரோக்ஷ மெனப்படுகின்றது. ஜீவனுடைய ஸ்வரூபத்தினை ஜீவனும் ஈசுவரனும் இருவரும் அறிவர்; ஆதலால், பிரத்தியக்ஷ மெனப்படுகின்றது. இத்துணைத் தர்மங்களுடன் கூடிய ஜீவ சேதநம் "த்வம்" பதத்தின் வாச்சிய மெனப்படுகின்றது.

435. வாச்சியார்த்தத்தில் ஏகத்துவத்தின் விரோதமும் லக்ஷணையின் கர்த்தவ்யத் தன்மையும்.

ஸாம வேதத்தின் சாந்தோக்கிய உபநிஷத்தில் உத்தாலக முநி தன் புத்திரனாகிய ஸ்வேத கேதுவிற்கு ஜகத்தை யுண்டு பண்ணும் ஈசுவரனைக் காட்டித் தத்துவமஸி (அது நீ) யென்று கூறினர். அதன் வாச்சியார்த்த மிதுவாம்:—"தத்" என்பது அது அஃதாவது ஜகத்தை யுண்டு பண்ணும் சர்வ சக்தி, சர்வஞ்ஞத் தன்மை முதலிய தர்ம சகித ஈசுவரனும். "த்வம்" என்

பது நீ அஃதாவது அற்ப சக்தி, அற்பஞ்ஞத் தன்மை முதலிய தர்மங்களை யுடைய ஜீவனும். "அஸி" என்பது இருக்கின்றாய் (என்பதாம்). ஈண்டு "அது நீயா யிருக்கின்றாய்" யென்று கூறி யதனால் ஈசுவர ஜீவர்களின் ஏகத்தன்மை வாச்சியார்த்தத்தால் விளங்குகின்றது. அது பொருந்தாது. ஏனெனின், சர்வ சக்தி மான் அற்ப சக்திமான், சர்வஞ்ஞன் அற்பஞ்ஞன், வியாபகன் பரிச்சின்னன், சுதந்திரன் கர்மாதீனன், பரோக்ஷன் பிரத்தி யக்ஷன், மாயையை ஸ்வாதீனத்தில் வைத்திருப்பவன், அவித்தி யா மோகிதன் என்னும் இத்தன்மைய இருவரும் ஒன்றெனக் கூறுதல் "நெருப்பு குளிர்ந்திருக்கின்ற" தென்பதற்குச் சமானமாகும். ஆதலால், நல்ல புத்தி யுள்ளவனே! நீ லக்ஷணை யால் லக்ஷியார்த்தத்தை யறி; வாச்சியார்த்தத்தில் விரோதமிருக் கின்றது. என் அன்பனே! மகா வாக்கியத்தில் ஜகதி லக்ஷணை யும், அஜகதி லக்ஷணையும் பொருந்தா. ஆதலால், பாகத் தியாக லக்ஷணையினை மகா வாக்கியத்தில் அறிதல் வேண்டும்; அதனால், விரோதம் பரிகாரமாகும்.

436. மகா வாக்கியத்தில் ஜகதி லக்ஷணையின் அசம்பவம். ஜகதியின் அசம்பவத்தினைப் பிரதிபாதித்தல்.

சகல வேதாந்தத்தாலும் அறியத் தக்கவை சாக்ஷி சேதன மும், பிரஹ்ம சேதனமும் ஆம். அந்தச் சாக்ஷி சேதனமும், பிரஹ்ம சேதனமும் த்வம் பத தத் பதங்களின் வாச்சியார்த்தங்களில் பிர வேசித் திருக்கின்றன. ஜகதி லக்ஷணை யிருக்குமிடத்தில் வாச் சியம் முழுமையும் விட்டு, வாச்சியத்தின் சம்பந்தி வேறு ஞேய மாம். ஆதலால், மகா வாக்கியத்தில் ஜகதி லக்ஷணையை யங்கீகரிக் கின் வாச்சியத்திலுள்ள சேதனத்தை விட வேறு புதிதான ஒன்று ஞேயமாகும். சேதனத்தினும் பின்னமானது அசத்து ஜட துக்க ரூபமாம். அதை அறிகின்றதனால் புருஷார்த்த சித்தி யுண்டாவ தில்லை. ஆதலால், மகா வாக்கியத்தில் ஜகதி லக்ஷணை யில்லை.

437. மகா வாக்கியத்தில் அஜஹதியின் அசம்பவம். அஜகதி லக்ஷணையின் அசம்பவப் பிரதிபாதனம்.

அன்பனே! அஜகதி லக்ஷணை யிருக்கும் இடத்தில் வாச்சி யார்த்தம் முற்று மிருக்க, வாச்சியத்திற் கதிகமும் கிரகிக்கத்

தக்கதாம். மகா வாக்கியத்தில் அஜகதி லக்ஷணையினை அங்கிகரிக்கின், வாச்சியார்த்தம் முற்று மிருக்கும். வாச்சியார்த்தம் மகா வாக்கியத்தில் விரோதத்தோடு கூடியதா யிருக்கின்றது. விரோதத்தை நீக்குவதற்காக லக்ஷணை அங்கிகரிக்கப்படுகின்றது. அஜகதி லக்ஷணையை யங்கிகரிப்பதால் மகா வாக்கியத்தில் விரோதம் நீங்குகின்ற தில்லை. ஆதலால், அஜகதியின் கிரமம் மகா வாக்கியத்தில் கொள்ளத்தக்க தன்றாம்.

438. மகா வாக்கியத்தில் பாகத் தியாகத்தை அங்கீகரித்தல். பாகத் தியாக லக்ஷணையின் பிரகாரம்.

அன்பனே! தத் பதத்தின் வாச்சியம் ஈசுவரனும். த்வம் பத்தின் வாச்சியம் ஜீவனும். இவர்களுக்குத் தம்மிலுள்ள விரோத தர்மங்களைவிட்டுச் சுத்தமாயும் அசங்கமாயு மிருக்கின்ற சேதநத்தினை லக்ஷணையால் அறிவாயாக. இது பாகத் தியாக லக்ஷணை யாம். இவ்விடத்தில் இது சித்தாந்தமாம். ஜீவேசுவரர்களின் ஸ்வரூபங்கள் அநேகப் பிரகாரமாக அத்வைதக் கிரந்தங்களிற் கூறப்பட்டிருக்கின்றன.

விவரணக் கிரந்தத்தில் அஞ்ஞாநத்திற் பிரதிபிம்பம் ஜீவனும், பிம்பம் ஈசுவரனு மெனப்படுகின்றான். வித்தியாரண்ய ஸ்வாமிகள் மதத்தில் சுத்த சத்துவகுண ஸகித மாயையில் உள்ள ஆபாஸம் ஈசுவரனும், மலிந சத்துவகுண சகித அந்தக்கரணத்தின் உபாதாந காரணமான அவித்தியாம்சத்தில் உள்ள ஆபாஸம் ஜீவனு மெனப்படுகின்றது.

439. ஜீவேசுவரர்களின் சொருபத்தில் பஞ்சதசிக்காரர், விவரணக்காரர் முதலியோர்களின் மதம். ஆபாஸப் பிரதிபிம்ப அவச்சேத வாதங்கள்.

பஞ்சதசிக் கிரந்தத்தில் வித்தியாரண்ய ஸ்வாமிகள் அந்தக்கரணத்திலுள்ள ஆபாஸனை ஜீவனென்று கூறி யிருக்கின்றார்கள். அங்ஙன மாயினும், அந்தக்கரணத்திலுள்ள ஆபாஸனை ஜீவனென்று கொள்ளின், சுழுத்தியில் அந்தக்கரண மிருப்பதில்லை. ஆதலால் (சுழுத்தியில்) ஜீவனு மில்லாதிருத்தல் வேண்டும். பிராஞ்ஞ ரூப ஜீவன் சுழுத்தியி லிருக்கின்றான். ஆதலால், வித்தியாரண்ய ஸ்வாமிகளுக்கு இஃது அபிப்பிராயமாம்:—

அந்தக்கரண ரூப பரிணமத்தை யடையும் அவித்யாம்சத்திலுள்ள ஆபாஸன் ஜீவனும். அந்த அவித்தியாம்சம் சுழுத்தியிலு



மிருக்கின்றது. ஆதலால், பிராஞ்ஞனது அபாவ மில்லை. கேவலம் ஆபாஸங்களே ஜீவேசுவரர்கள் அன்று. ஆனால், மாயையின் அதிஷ்டாந சேதநமும், மாயாசகித ஆபாஸனும் ஈசுவரனும். அவித்யாம்சத்தின் அதிஷ்டாந சேதநமும், அவித்யாம்சத்தோடு கூடிய ஆபாசனும் ஜீவனும். ஈசுவர வுபாதியில் சுத்த சத்துவகுண மிருத்தலால் ஈசுவர னிடத்தில் சர்வ சக்தி, சர்வஞ்ஞத் தன்மை முதலிய தர்மங்கள் இருக்கின்றன. ஜீவனுடைய உபாதியில் மலிந சத்துவகுண மிருத்தலால் ஜீவனிடத்தில் அற்ப சக்தி அற்பஞ்ஞத் தன்மை முதலியதர்மங்க ளிருக்கின்றன. இதனை ஆபாஸ வாதம் என்பர்.

440. விவரண மதத்தில் ஜீவேசுவரர் இருவர்களுக்கும் உபாதி ஒரே அஞ்ஞாநமாம். ஆதலால், இருவரும் அற்பஞ்ஞர் களா யிருத்தல் வேண்டும். அங்ஙன மாயினும், எந்த உபாதியில் பிரதிபிம்ப முண்டாகின்றதோ அதன் சுபாவம் இதுவாம்:— பிரதி பிம்பத்தில் தன் தோஷத்தை யுண்டு பண்ணுகின்றது; பிம்பத்தி லுண்டுபண்ணுகின்ற தில்லை.

கண்ணாடியாகிய உபாதியில் முகத்தின் பிரதிபிம்ப முண்டாகின்றது. கழுத்தின் மீதுள்ள முகம் பிம்பமாம். கண்ணாடியாகிய உபாதியின் பொன்மை கறுமை சிறுமை முதலிய பல தோஷங்கள் பிரதிபிம்பத்தில் தோற்றுகின்றன; கழுத்தின் மீதுள்ள பிம்பத்தில் தோற்றுகின்ற தில்லை. அது போல் கண்ணாடி ஸ்தாநத்து அஞ்ஞாநத்தி லுள்ள பிரதிபிம்ப ரூபமான ஜீவனிடத்தில் அஞ்ஞாநத்தினு லுண்டான அற்பஞ்ஞத் தன்மை முதலிய தோஷங்கள் இருக்கின்றன. பிம்பரூப ஈசுவரனிடத்தில் தோஷங்க ளில்லை. ஆதலால், ஈசுவரனிடத்தில் சர்வஞ்ஞத் தன்மை முதலியன விருக்கின்றன. ஜீவனிடத்தில் அற்பஞ்ஞத் தன்மை முதலியன இருக்கின்றன.

441. ஆபாஸத்திற்கும் பிரதிபிம்பத்திற்கும் இத்துணைப் பேத முண்டு:—ஆபாஸ பக்ஷத்தில் ஆபாஸன் மித்தை. பிரதிபிம்ப வாதத்தில் பிரதிபிம்பம் மித்தை யன்று; சத்தியமாம். ஏனெனின், பிரதிபிம்ப வாதியின் சித்தாந்தம் இதுவாம். கண்ணாடியில் தோற்றும் முகத்தின் பிரதிபிம்பம் முகத்தின் சாயை யன்று. ஏனெனின், சாயையின் சுபாவம் இதுவாம்:—எந்தத் திக்கில் சாயை யுடையவன் முகமும் பின்புறமும் இருக்கின்றனவோ

அந்தத் திக்கிலேயே சாயையின் முகமும் பின்புறமும் இருக்கின்றன. கண்ணாடியில் பிரதிபிம்பத்தின் முகமும் பின்புறமும் பிம்பத்திற்கு எதிரா யிருக்கின்றன. ஆதலால், கண்ணாடியில் சாயாரூபப் பிரதிபிம்ப மில்லை. ஆனால்,கண்ணாடியை விஷயமாக்குவதற்காக நேத்திர வாயிலாக வெளிப்பட்ட அந்தக்கரணத்தின் விருத்தி, கண்ணாடியை விஷயஞ் செய்து அக்காலத்திலேயே கண்ணாடியி னின்றும் நிவிர்த்தியாய்க் கழுத்தி லிருக்கும் முகத்தை விஷயமாக்குகின்றது.

எங்ஙனம், சுற்றும் வேகத்தினால் கொள்ளிக் கட்டையின் சக்கரந் தோற்றுகின்றது, அது சக்கர மன்றே, அங்ஙனமே கண்ணாடியையும், முகத்தையும் விஷய மாக்குவதில் விருத்தியின் வேகத்தால் முகம் கண்ணாடியி லிருக்கின்றதாகத் தோன்றுகின்றது. ஆனால், முகம் கழுத்திலேயே இருக்கின்றது; கண்ணாடியி லில்லை; சாயையு மன்று. விருத்தியின் வேகத்தால் கண்ணாடியில் உண்டாகும் முகத்தின் தோற்றம் எதுவோ அதுவே பிரதிபிம்பமாம்.

இவ்வாற்றால், கண்ணாடியாகிய உபாதியின் சம்பந்தத்தால் கழுத்தின்மீ துள்ள முகமே பிம்பரூபமாகவும், பிரதிபிம்ப ரூபமாகவும் பானமாகின்றது. விசாரித்துப் பார்க்குமிடத்து, பிம்பப் பிரதிபிம்ப பாவங்க ளில்லை. அது போல் அஞ்ஞான ரூப உபாதியின் சம்பந்தத்தால் அசங்க சேதநத்தில் பிம்ப ஸ்தாநத்து ஈசுவர பாவமும், பிரதிபிம்ப ஸ்தாநத்து ஜீவ பாவமும் பிரதீதியாகின்றன. விசார திருஷ்டியினால் ஈசுவரத் தன்மையும் ஜீவத் தன்மையும் இல்லை.

அஞ்ஞானத்தினால் சேதநத்தில் ஜீவத் தன்மையின் தோற்றம் எதுவோ அதுவே அஞ்ஞானத்தி லுள்ள பிரதிபிம்ப மென்று கூறப்படுகின்றது. ஆதலால், பிம்ப பாவமும் பிரதிபிம்ப பாவமும் மித்தையாம். ஸ்வரூபமாகப் பிம்பப் பிரதிபிம்பங்கள் சத்தியங்களாம். ஏனெனின், பிம்பப் பிரதிபிம்பங்களின் ஸ்வரூபம் திருஷ்டாந்தத்திலோ முகமாம்; தார்ஷ்டாந்தத்திலோ சேதநமாம். அந்த முகமும் சேதநமும் சத்தியமாம்.

இவ்வாற்றால்,பிரதிபிம்பம் ஸ்வரூபமாகச் சத்தியமா யிருத்தலால், சத்திய மெனப்படுகின்றது. ஆபாஸத்தின் ஸ்வரூபம் சாயை

யெனக் கொண்டிருக்கின்றனர்; ஆதலால் மித்தையாம். இது ஆபாஸ வாதம், பிரதிபிம்ப வாதங்களின் பேதங்களாம்.

442. சில கிரந்தங்களில், சுத்த சத்துவகுண சகித மாயா விசிஷ்ட சேதநம் ஈசுவர னெனப்படுகின்றது. மலிந சத்துவ குண சகித அந்தக்கரணத்தின் உபாதாநமான அவித்தையின் அம்ச விசிஷ்ட சேதநம் ஜீவ னென்று கூறப்படுகின்றது. இதனை அவச்சேத வாத மென்பர்.

வேதாந்தத்தின் பிரக்கிரியைகள் யாவும் அத்வைத ஆத்மாவை யறிவித்தற் பொருட்டேயாம். ஆதலால், எந்தப் பிரக்கிரியையால் ஜிஞ்ஞாசுவுக்குப் போத முண்டாகுமோ, அந்தப் பிரக்கிரியையே அவனுக்கு நல முடையதாம். அங்ஙன மாயினும் வாக்கிய விருத்தியினும், உபதேச ஸஹஸ்ரி என்னுங் கிரந்தத்தினும் பாஷியக் காரரால் ஆபாஸ வாதமே எழுதப்பட் டிருக்கின்றது. ஆதலால், ஆபாஸ வாதமே முக்கியமாம்.

### 443. நான்கு மகா வாக்கியங்களிலும் பாகத் தியாகத்தினை யறிவித்தல்.

அவ்வாறே, மாயை, மாயையினுள்ள ஆபாஸன், மாயையின் அதிஷ்டாந சேதநம் இம் மூன்றுஞ் சேர்ந்து சர்வ சக்தி, சர்வஞ்ஞத் தன்மை முதலிய தர்மங்களுடன் கூடிய ஈசுவரன் எனப்படும். அதுவே தத் பதத்தின் வாச்சியமாம். வியஷ்டி அவித்தை, அதி னுள்ள ஆபாஸம், அதன் அதிஷ்டாந சேதநம் இம் மூன்றுஞ் சேர்ந்து அற்ப சக்தி, அற்பஞ்ஞத் தன்மை முதலிய தர்மங்களுடன் கூடிய ஜீவன் எனப்படும். அது த்வம் பதத்தின் வாச்சியமாம். இவ்விரண்டன் ஏகத்துவத்தையும் தத்துவ மஸி வாக்கியம் போதிக்கின்றது. அது பொருந்தாது. ஆதலால் ஆபாஸ சகித மாயை, மாயையா லுண்டான சர்வ சக்தி, சர்வஞ்ஞத் தன்மை முதலிய தர்மங்கள் என்னும் இத்துணை வாச்சியங்களை விட்டு, சேதந பாகத்தில் தத் பதத்திற்குப் பாகத் தியாக லக்ஷணை சித்திக்கின்றது.

அவ்வாறே, ஆபாஸ சகித அவித்தியாம்சம், அவித்தையா லுண்டான அற்ப சக்தி அற்பஞ்ஞத் தன்மை முதலிய தர்மங்களாய த்வம் பதத்தின் வாச்சிய பாகத்தை விட்டுச் சேதந பாகத்தில் த்வம் பதத்திற்குப் பாகத் தியாக லக்ஷணை சித்திக்கின்றது.

இவ்வாறு பாகத் தியாக லக்ஷணையால், ஈசுவர ஜீவர்களின் ஸ்வரூபத்திலுள்ள லக்ஷியமான சேதந பாகங்களின் ஏகத் தன்மையைத் "தத்துவ மஸி" என்னும் மகா வாக்கியம் போதிக்கின்றது. அது போல " அயம் ஆத்மா பிரஹ்மம் என்னும் மகா வாக்கியத்தில், ஆத்ம பதத்திற்கு ஜீவன் வாச்சியமாம். பிரஹ்ம பதத்திற்கு ஈசுவரன் வாச்சியமாம். பிரஹ்ம பதத்திற்குச் சுத்தம் வாச்சிய மன்று; ஈசுவரனே வாச்சிய மென்பது நான்காவது தரங்கத்தில் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது. முன் போல் இரண்டு பதங்களுக்கும் லக்ஷணை யிருக்கின்றது. லக்ஷியார்த்தம் பரோக்ஷ மன்று என்னும் பொருளை அறிவித்தற்காக அய மென்னும் பத மிருக்கின்றது. "அயம்" அஃதாவது எல்லோர்க்கும் அபரோக்ஷமான ஆத்மா பிரஹ்ம மென்பது வாக்கியத்தின் அர்த்தமாம்.

" அஹம் பிரஹ்மாஸ்மி " என்னும் மகா வாக்கியத்தில், அஹம் பதத்திற்கு ஜீவன் வாச்சியமாம்; பிரஹ்ம பதத்திற்கு ஈசுவரன் வாச்சியமாம் என்னும் இவ் விரண்டு பதங்களுக்கும் சேதந பாகத்தில் லக்ஷணை யிருக்கின்றது."நான் பிரஹ்மமாயிருக்கின்றேன் " என்பது வாக்கியத்தின் அர்த்தமாம். "பிரஞ் ஞாநம் ஆநந்தம் பிரஹ்மம் " என்னும் மகா வாக்கியத்தில், பிரஞ் ஞாந பதத்திற்கு ஜீவன் வாச்சியமாம்; பிரஹ்ம பதத்திற்கு ஈசுவரன் வாச்சியமாம். இலக்ஷணை முன் போலாம்.

இலக்ஷியமான பிரஹ்மாத்மா ஆநந்த குணமுடைய தன்று; ஆநந்த ரூபமா யிருக்கின்றது என்னும் அர்த்தத்தினை அறிவித்தற் பொருட்டு ஆநந்தம் என்னும் பத மிருக்கின்றது. ஆத்மாவின் அபிந்நமான பிரஹ்மம் ஆநந்த ரூப மென்பது வாக்கியார்த்தமாம். எங்ஙனம் மகா வாக்கியத்தில் பாகத் தியாக லக்ஷணை இருக்கின்றதோ, அங்ஙனமே அந்நிய வாக்கியங்களிலும் சத்தியம் ஞாநம் அநந்தம் என்னும் பதங்களும் சுத்தப் பிரஹ்மத்தைப் பாகத் தியாக லக்ஷணையினாலேயே போதிக்கின்றன; சக்தியால் போதிக்கின்ற தில்லை. ஏனெனின், சுத்தப் பிரஹ்மம் எந்தப் பதத்திற்கும் வாச்சிய மன்றென்பது சித்தாந்தமாம். ஆதலால், எல்லாப் பதங்களும் விசிஷ்டத்தின் வாசகங்களும், சுத்தத்தின் லக்ஷியங்களு (இலக்ஷணையினாற் பொரு ளுணர்த்துவனவு) மாம்.

மாயையின் ஆபேக்ஷிக சத்தியத் தன்மையும், சேதநத்தின் நிரபேக்ஷிக சத்தியத் தன்மையும் சேர்ந்து சத்திய மென்னும் பதத்தின் வாச்சியமாகின்றது. நிரபேக்ஷிக சத்தியம் லக்ஷிய மாம்.

புத்தி விருத்தி ரூப ஞாநமும், ஸ்வயம் பிரகாச ஞாநமும் ஆகிய இரண்டுஞ் சேரின் ஞாந பதத்தின் வாச்சியமாம் ; ஸ்வயம் பிரகாச பாகம் லக்ஷியமாம். விஷய சம்பந்தத்தா லுண்டாம் சுகாகாரமான சாத்துவிக அந்தக்கரண விருத்தியும், பரமப் பிரேமைக் கிடமான ஸ்வரூப சுகமுமாகிய இரண்டும் சேர்ந்து ஆநந்த பதத்தின் வாச்சியமாம். விருத்தி பாகத்தினை விட்டு சுவரூப பாகம் லக்ஷியமாம். இவ்வாறு, சகல பதங்கட்கும் சுத்தப் பிரஹ்மத்தில் லக்ஷணை சங்க்ஷேப சாரீரகத்தில் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது.

### 444. முற் கூறிய பொருளின் சுருக்கம்.

“ கங்கையி னிடத்துச் சேறி ” என்னு மிடத்தில் ஜகதி லக்ஷணையை யறிக ; “ சிவப்பு ஓடுகின்றது ” என்னு மிடத்தில் அஜகதி லக்ஷணையை யறிக. “ அதுவே இது ” என்னு மிடத்தில் பாகத் தியாக லக்ஷணை யிருக்கின்றது. இதற்கு ஜகதி அஜகதி லக்ஷணை யென்பது வேறு பெயராம். “தத்துவமஸி” முதலிய மகா வாக்கியங்களில் ஜகதி லக்ஷணையினையும், அஜகதி லக்ஷணையினையும் நீக்கிப், பாகத் தியாக லக்ஷணை காட்டப்பட்டிருக்கின்றது. பிரஹ்மம் எந்தப் பதத்திற்கும் வாச்சிய மல்ல வென்று வேதங் கூறுகின்றது. ஆதலால், எல்லாப் பதங்களிலும் நீ இவ்வாறு அறிதல் வேண்டும். மாயையின் ஆபேக்ஷிக சத்தியத் தன்மையும், பிரஹ்மத்தின் நிரபேக்ஷிக சத்தியத் தன்மையும், ஆகிய இரண்டுஞ் சேர்ந்து சத்திய பதத்தின் வாச்சியமா மென்று முநி கூறுகின்றனர். பிரஹ்மத்திலுள்ள சத்தியத் தன்மை லக்ஷிய பாகமென அறிக. புத்தி விருத்தியும் ஞாநமும் சேர்ந்து ஞாந பதத்தின் வாச்சியமாம். புத்தி விருத்தியை விட்டு ஞாந சுவரூபம் லட்சியமாம் ; ஆத்மாவும் விஷய சுகமும் சேர்ந்து ஆநந்த பதத்தின் வாச்சியமாம். விஷய சுகத்தை விட்டு ஆத்ம சுகத்தை (ஆநந்த பதத்தின்) லக்ஷியமாக அறிக.

445. பிரஸ்நம்:—இரண்டு பதங்களிலும் லக்ஷணையை அங்கீகரித்தல் நிஷ்பலமாம்.

மகா வாக்கியங்களில் விரோதத்தை நீக்குதற்காக இரண்டு பதங்களிலும் லக்ஷணை அங்கிகரிக்கப்பட்டது. அங்கு ஒரு பதத்தில் லக்ஷணையை அங்கீகரிப்பதனாலேயே விரோதம் நிவிருத்தியாய் விடும். இரண்டு பதங்களிலும் லக்ஷணையை அங்கீகரிப்பது பிரயோஜந மில்லை யென்று சிலர் கூறுகின்றனர். இதன் தாற்பரியம் இதுவாம்:—சர்வஞ்ஞத் தன்மை முதலியவற்றோடு கூடியதற்கு அற்பஞ்ஞத் தன்மை முதலியவற்றோடு கூடியதோடு ஏகத்துவம் பொருந்தாதா மாயினும், ஒரு பதத்தின் லக்ஷியமாகிய சுத்தத்திற்கு விசிஷ்டத்தோடு ஏகத்தன்மை பொருந்துகின்றது.

திருஷ்டாந்தம்:—"சூத்திர மனிதன் பிராஹ்மணன்" என்றிவ்வாறு சூத்திரத்துவ தர்ம விசிஷ்ட மனிதனுக்குப் பிராஹ்மணத்துவ தர்ம விசிஷ்டத்தோடு ஏகத்தன்மை கூறுதல் விருத்தமாம். மனிதன் பிராஹ்மணன் என்றிவ்வாறு சூத்திரத்துவ தர்ம மின்றிய சுத்த மனிதனுக்குப் பிராமணத்துவ விசிஷ்டத் தன்மையைக் கூறுதலில் விரோத மில்லை.

அங்ஙனமே, அற்பஞ்ஞத் தன்மை முதலிய தர்ம விசிஷ்ட சேதநத்திற்கும், சர்வஞ்ஞத்துவ முதலிய தர்ம விசிஷ்டத்திற்கும் ஏகத்துவம் விருத்தமுமாம். ஆனால், ஜீவேசுர வாசக பதங்களுக்குச் சேதநத்தில் லக்ஷணையால் சேதந மாத்திரத்திற்குச் சர்வஞ்ஞத் தன்மை முதலிய தர்ம விசிஷ்டத்தோடாவது, அற்பஞ்ஞத் தன்மை முதலிய தர்ம விசிஷ்டத்தோடாவது ஏகத் தன்மை கூறுதலில் விரோத மில்லை. ஆதலால், இரண்டு பதங்களில் லக்ஷணையை அங்கீகரிப்பதில் ஒரு யுக்தியு மில்லை.

## சென்ற பிரஸ்நத்தின் உத்தரம்.

446. சமாதானம்:—இரண்டு பதங்களிலும் லக்ஷணை சபலமாம்.

ஒரு பதத்தில் லக்ஷணையை அங்கிகரிக்கின்றவனை, இரண்டு பதங்களில் எந்தப் பதத்தில் லக்ஷணை யிருக்கின்றது என்று கேட்பாம். எல்லா மகா வாக்கியங்களின் முதற் பதத்தில் லக்ஷணை யிருக்கின்றதா; இரண்டாவதி லில்லை.

அல்லது, இரண்டாவது பதத்தில் லக்ஷணை எல்லா வாக்கியங்களிலு மிருக்கின்றது; முதற் பதத்தி லில்லையென்று கூறுவானாயின், சிஷ்யனே! அவனைப் பார்த்து இது கூறுவாயாக. மூடனே! (முதற் பதத்திலாவது இரண்டாம் பதத்திலாவது நியமமாக லக்ஷணை எல்லா வாக்கியங்களிலும் இருக்கின்றதென்று கொள்ளின், வாக்கியங்களுக்குப் பரஸ்பரம் விரோத முண்டாம். ஏனெனின், "அஹம் பிரஹ்மாஸ்மி," "பிரஞ்ஞான மாநந்தம் பிரஹ்மம்," "அயமாத்மா பிரஹ்மம்" என்னும் இம் மூன்று வாக்கியங்களில், முதலாவது பதம் ஜீவ வாசகமாம். "தத்துவமஸி" வாக்கியத்தில் முதற் பதம் ஈசுவரனை யறிவிப்பதாம்.

முதற் பதத்தில் எல்லா வாக்கியங்களிலும் லக்ஷணையை அங்கீகரித்தால் சேதந சர்வஞ்ஞத் தன்மையாதி விசிஷ்ட அம்சம் யாவும் ஈசுவர ரூபமா யிருக்கின்றதென்று முதல் மூன்று வாக்கியங்களுக்கும் அர்த்தமாகும். சேதநம் அற்பஞ்ஞத் தன்மை முதலியவற்றோடு கூடிய சமுசாரியாகிய ஜீவ ரூபமென்று தத்துவமஸி என்னும் வாக்கியத்திற்கு அர்த்தமாகும். ஏனெனின், மூன்று வாக்கியங்களிலும் முதற் பதம் ஜீவ வாசகமாம். அதற்குச் சேதந பாகத்தில் லக்ஷணை யுண்டு. இரண்டாவதாகிய ஈசுவர வாசக பதத்திற்கு வாச்சியம் கிரகிக்கப்பட்டிருக்கின்றது.

"தத்துவமஸி"யில் முதலாவது ஈசுவர வாசக பதமாம். அதற்குச் சேதந பாகத்தில் லக்ஷணை யுண்டு. இரண்டாவது ஜீவ வாசக பதமாம். அதன் வாச்சியம் கொள்ளப்படுகின்றது. இவ்விதமாக (முதற் பதத்தில்) லக்ஷணையை நியமஞ் செய்யின், வாக்கியங்களுக்குப் பரஸ்பரம் விரோத முண்டாகும். அவ்வாறே, எல்லா வாக்கியங்களின் இரண்டாவது பதத்தில், அஃதாவது முதற் பதத்தில் லக்ஷணையை யங்கீகரிக்கின், மூன்று வாக்கியங்களிலும் முதலாவதாகிய ஜீவ பதத்திற்கு வாச்சியத்தின் கிரகணமும், இரண்டாவதாகிய ஈசுவர பதத்திற்குச் சேதந பாகத்தில் லக்ஷணையும் கொள்ளப்படுகின்றன. ஆதலால், அற்பஞ்ஞத் தன்மை முதலிய தர்ம விசிஷ்ட சேதந மிருக்கின்றது என்று மூன்று வாக்கியங்களுக்கும் அர்த்தமாகும். "தத்துவமஸி" வாக்கியத்தில் முதலாவதாகிய ஈசுவர பதத்திற்கு வாச்சியத்தின் கிரகணமும், இரண்டாவதாகிய ஜீவ பதத்திற்குச் சேதந பாகத்தில் லக்ஷணையும் கொள்ளப்படுகின்றன. ஆதலால், சர்வஞ்ஞத் தன்மை முதலிய தர்ம

விசிஷ்ட சேதந மிருக்கின்றதென்று "தத்துவமஸி" வாக்கியத்திற்கு அர்த்த முண்டாதலால், பரஸ்பரம் விரோதமே யுண்டாகும்.

இவ்வாற்ருல், முதற் பலத்திலாவது இரண்டாவது பதத்திலாவது லக்ஷணையின் நியமம் பொருந்தாது. ஆதலால், நல்லிலக்கணமுடைய ஆசாரியர்கள் இரண்டு பதங்களிலும் லக்ஷணையினைக் கூறுகின்ருர்கள்.

### 447. ஈசுவர வாசக பதத்தில் லக்ஷணை யுண் டேன்பதன் உத்தரம்.

முதற் பதத்திலாவது இரண்டாவது பதத்திலாவது லக்ஷணை யிருக்கின்றதென்று நியமம் செய்யாது, எல்லா வாக்கியங்களிலும் ஈசுவர வாசக பதத்தில் லக்ஷணை யிருக்கின்றதென்று நியமஞ் செய்யின், அந்த ஈசுவர வாசக பதம் முதலாவ தாகவாவது இரண்டாவ தாகவாவது இருத்தல் கூடும்; அதனுல், வாக்கியங்களுக்குப் பரஸ்பரம் விரோத மில்லை என்று கூறின், அதன் சமாதாநம்:—ஈசுவர வாசக பதத்தினையே லக்ஷக மெனின், சர்வ அநர்த்தங்களும், அற்பஞ்ஞத் தன்மை பராதீநத் தன்மை, ஜநந மரண முதலிய துக்க சாதநங்களுமாகிய இவற்றிற் கிருப்பிடமான சமுசாரியாகிய ஜீவன் சுருதி வாக்கியங்களில் ஞேயமாகின்ருன். அதனுல், மோக்ஷத்திற்கு ஹாநி யுண்டாம்.

இதன் தாற்பரியம் இதுவாம்:—ஈசுவர வாசக பதத்திலேயே லக்ஷணையை அங்கீகரிக்கின், மகா வாக்கியத்திற்கு இவ்வர்த்த முண்டாகும்:—"தத் பதத்திற்கு லக்ஷியமான அத்வயமாயும் அசங்கமாயும் மாயா மல ரகிதமாயும் இருக்கின்ற சேதநம், காம கர்ம அவித்தைகளின் அதீநமாய், அற்ப அறிவு, அற்ப சக்தி, பரிச்சிந்நம், புண்ணிய பாவங்கள், சுக துக்கங்கள், ஜநந மரணங்கள், கமநாகமநங்கள் முதலிய அநேக அநர்த்தங்களுக்குப் பாத்திரமாம்". மகா வாக்கியத்திற்கு, இவ்வாறு அர்த்த முண்டாயின், ஜிஞ்ஞாசுவிற்கு இந்த அர்த்தத்தில் புத்தியை ஸ்திரப் படுத்தும்படி நேரிடும். எதில் புத்தி நிலைக்கின்றதோ, பிராண வியோகத்தின் பின்னர் அதனையே அடைகின்ருன். இதனுல் வேத வாக்கிய விசாரத்தால் முமுக்ஷுவிற்கு அநர்த்தமே பிராப்த மாகும்; ஆநந்தத்தின் பிராப்தி உண்டாவ தில்லை.

ஆதலால், ஈசுவர வாசக பதத்தில் லக்ஷணை இருக்கின்றது ; ஜீவ வாசக பதத்தில் (லக்ஷணை) இல்லை யென்னும் நியமம் அசங்கத மாம்.

### 448. ஜீவ வாசக பதித்தில் லக்ஷணை யிருக்கின்ற தென்பதன் உத்தரம்.

எல்லா மகா வாக்கியங்களிலும் ஜீவ வாசக பதத்தில் லக்ஷணை யிருக்கின்றது; ஈசுவர வாசகத்தில் இல்லை. ஆதலால், புருஷார்த்தத்திற்கு ஹாநி யில்லை. ஏனெனின், ஜீவ வாசக பதத்தில் லக்ஷணையை அங்கீகரிக்கின், "த்வம் பதத்தின் லக்ஷிய மான சேதந பாகம், சர்வ சக்திமானும் சர்வஞ்ஞனும் சுதந்திரனும் ஜந்மாதி பந்த ரகிதனுமா யிருக்கின்ற ஈசுவர ரூபமா யிருக்கின்ற" தென்று மகா வாக்கியத்திற்கு அர்த்தமாகும். இந்த அர்தத்தில் புத்தியை நிறுத்துவதினால் ஜிஞ்ஞாஸுவுக்கு அதி உத்தமமான ஈசுவர பாவமே பிராப்தமாகும். ஆதலால், ஜீவ வாசக பதத்தில் லக்ஷணையின் நியமஞ் செய்யப்படும் என்று கூறின், அதன் சமாதாநம்:—த்வம் பதத்தின் லக்ஷியமாகிய சாக்ஷியை ஈசுவர ரூபமாகக் கூறுதல் பொருந்தாது. ஆதலால், யதீசுவரோத்தம சுவாமிகள் இரண்டு பதங்களிலும் லக்ஷணையினைக் கூறுகின்றார்கள். இதன் தாற்பரியம் இதுவாம்:—ஜீவ வாசக பதத்தில் லக்ஷணையை யங்கீகரித்து, ஈசுவர வாசகத்தில் லக்ஷணையை அங்கீகரியானாயின், அவனை த்வம் பதத்தின் லக்ஷணை வியாபக சேதநத்தி லிருக்கின்றதா? அல்லது எவ்வள விடத்தில் ஜீவனுடைய உபாதி இருக்கின்றதோ அவ்வள விடத்திலுள்ள சாக்ஷி சேதநத்தி லிருக்கின்றதா? என்று கேட்டல் வேண்டும்.

வியாபக சேதநத்தில் த்வம் பதத்தின் லக்ஷணையைக் கூறின், அது பொருந்தாது. ஏனெனின், வாச்சியார்த்தத்தில் எது பிரவேசிக்கின்றதோ அதில் பாகத் தியாக லக்ஷணை சம்பவிக்கின்றது. வாச்சியத்தில் வியாபக சேதநம் பிரவேசிக்கின்ற தில்லை. ஆனால், ஜீவனுடைய உபாதி தேசத்தி லிருக்கின்ற சாக்ஷி சேதநம் வாச்சியத்திற் பிரவேசிக்கின்றது. ஆதலால், சாக்ஷி சேதநத்தின் கண்ணேயே த்வம் பதத்தின் லக்ஷணை இருக்கின்றது; வியாபக சேதநத்தில் இல்லை. அந்தச் சாக்ஷி சேதநத்தில் எல்லோருடைய இருதயங்களையும் பிரேரித்தல், சர்வப் பிரபஞ்சத்திலும் வியாபித்

திருத்தல் முதலிய ஈசுவர தருமங்கள் சம்பவியா. சாக்ஷி எப்போதும் அபரோக்ஷமா யிருக்கின்றது; அதனிடத்தில் பரோக்ஷத் தன்மையாகிய ஈசுவர தர்மங்களின் அத்தியந்த அசம்பவ மிருக்கின்றது.

மாயாரகிதனை மாயாவிசிட்ட னென்று கூறுதல் சம்பவியாது. தண்ட மில்லாதவனைத் தண்டி என்று கூறுதலும், சம்ஸ்கார மின்றிய த்விஜ பாலனைச் சம்ஸ்கார விசிட்ட னென்று கூறுதலும் சம்பவியா. ஆதலால், சாக்ஷிசேதநத்திற்கு ஈசுவரனோடு அபேதங் கூறின், மகாவாக்கியம் அசம்பவ அர்த்தத்தைப் பிரதிபாதிப்ப தாகும்.

449. இரண்டு பதங்களில் லக்ஷணையும் ஓதப் புரோத பாவமும்.

இரண்டு பதங்களிலும் லக்ஷணையே அங்கீகரிக்கிற் றோஷமில்லை. ஏனெனின், ஏகத்துவ விரோதியான தர்மங்க ளெல்லாவற்றையும் விட்டு இரண்டு பதங்களிலு முள்ள பிரகாச ரூப சேதநமாகிய வாச்சிய பாகம் எதுவோ அவ்வெல்லாத் தர்மங்களு மின்றிய சேதநத்தில் இரண்டு பதங்களுக்கும் இலக்ஷணையாம்.

உபாதியினாலும், உபாதியினாலாகிய தர்மங்களினாலும் சேதநத்திற்குப் பேத மிருக்கின்றது ; ஸ்வரூபமாக இல்லை. உபாதியையும் உபாதியினா லுண்டாகும் தர்மங்களையும் விடுவதனால் இரண்டு பதங்களின் லக்ஷியமான சேதநத்திற்கு ஏகத்துவம் சம்பவிக்கின்றது. கடாகாசத்தில் கட திருஷ்டியை விட்டு மட விசிஷ்ட ஆகாசத்தோடு ஏகத்துவம் பொருந்துகின்ற தில்லை. மட திருஷ்டியை விடுவதனால் ஏகத்துவம் பொருந்துகின்றது.

எல்லா வாக்கியங்களிலும் "தத் துவம்", "துவம் தத்" என்றிவ்வாறு ஓதப் புரோத பாவத்தின் கிரமத்தை அறிக. இந்த ஓதப் புரோத பாவத்தைச் செய்தலால் வாக்கியத்தின் அர்த்தத்திலுள்ள பரோக்ஷத் தன்மை பரிச்சிந்நத் தன்மைப் பிராந்தி நாசமாகின்றது.

"தத் துவம்" என்று கூறுவதனால் தத் பதத்தின் அர்த்தத்திற்குத் துவம் பதத்தின் அர்த்தத்தோடு அபேதங் கூறப்பட்டது. அந்தத் துவம் பதத்தின் அர்த்தமாகிய சாக்ஷி நித்திய அபரோ

க்ஷமா யிருக்கின்றது. அதனால், பரோக்ஷத் தன்மைப் பிராந்தி நாசமாகின்றது.

"த்வம் தத்" என்று கூறுவதனால் துவம் பதத்தின் அர்த்தத்திற்குத் தத் பத அர்த்தத்தோடு அபேதங் கூறப்பட்டதாகின்றது. அந்தத் தத் பதத்தின் அர்த்தம் வியாபகமா யிருத்தலினால் பரிச்சிந்நத் தன்மைப் பிராந்தி நாசமாகின்றது.

அங்ஙனமே "அகம் பிரஹ்மம்", "பிரஞ்ஞாநம் பிரஹ்மம்", "ஆத்மா பிரஹ்மம்" என்னும் இவற்றால் பரிச்சிந்நத் தன்மை நாசமாகின்றது. "பிரஹ்மம் அகம்", பிரஹ்மம் பிரஞ்ஞாநம்", "பிரஹ்மம் ஆத்மா" என்னும் இவற்றாற் பரோக்ஷத் தன்மை நாசமாகின்றது.

சிஷ்யனே! எங்கு வேத வாக்கியங்களும் ஸ்மிருதி வாக்கியங்களும் ஜீவப் பிரஹ்மங்களின் ஏகத்துவத்தைக் கூறுகின்றனவோ, அங்கு முற்றும் பாகத்தியாகத்தையே யதார்த்தமா யறிக.

450. கிரந்தத்தின் (333-ல் கூறியதின்) சமாப்தி.

இவ்விதமான குருபதேசத்தினைக் கேட்டுச் சிஷ்யன் அப்பொழுதே கிருத கிருத்திய னானான். இதன் யதார்த்தத்தை விசாரிக்கின்றவனுடைய சம்சாரம் நசித்துப்போம். மித்தையான குருவினால் சம்ஸ்கிருத பாஷையில் இக் கிரந்த முபதேசிக்கப்பட்டது. இதைக் கேட்கின்றதனால் அஞ்ஞாநம் நாசமாகின்றது. இது அந்தக் கிரந்தத்தின் பாஷா ரூபமாகச் செய்யப்பட்டது. அக்கிருததேவனுக்குச் சொப்பநத்தில் இவ்வுபதேசத்தைக் குரு செய்தார். அதனால் துக்க மூலமான மித்தியா வநத்தின் சொரூபம் நசிக்கவில்லை.

451. பிரஶ்நம்:—அர்த்த சகிதமாகக் கிரந்தத்தினைப் படிப்பினும் வநம் துக்கத்திற்குக் காரணமாகத் தோற்றுகின்ற தெனல்.

அக்கிருத தேவ வாக்கியம்.

பகவன்! நீங்கள் அர்த்தத்தோடு இந்த நூலைப் படிப்பித்தீர்கள். அஃது எனது ஹிருதயத்தில் வந்தது; ஆனால் துக்கத்திற்குக் காரணமான வநம் எனக் கின்னும் விளங்கிக்கொண் டிருக்கின்றது; எந்த உபாயத்தால் அது நசித்துப் போகுமோ அதனைக் கூறி யருள்வீராக.

## சென்ற பிரஸ்நத்தின் உத்தரம்.

452. வநத்தின் நாசத்திற்கு ஏது இதுவே (முற்கூறியதே) யாமென்றும், அக்கிருத தேவனது சொப்பநத்தின் சமாப்தியு(நாசமு)ம்.

சிஷ்யன் வார்த்தையைக் கேட்டுக் குரு கூறுகின்றார்:—சிஷ்யனே! வநம் நசிக்கும்படியான உபாயத்தைக் கேட்பாயாக. இத்தன்மையான உபாயத்தினைவிட வேறு உபாய மில்லை. வநத்தினை நாசஞ் செய்யும் ஏது இதுவேயாம். மகா வாக்கியத்தின் அர்த்தத்தை விசாரணைசெய்து 'நான் அக்கிருதன்" என்று நிச்சயித்துக் கூறுவா யென்றனர். சிஷ்யன் அங்ஙனமே வாக்கியத்தினை விசாரணை செய்து "நான் அக்கிருதன்" என்று உரத்துக் கூறினான்; நித்திரை யொழிந்து கண் விழித்துக் கொண்டான்; அந்த க்ஷணமே வநம், கிரந்தம், குரு எல்லாம் நாசமாய்விட்டன; வந துக்கத்தை மறந்து தான் அக்கிருதன் என்று நன்கறிந்து சுகியாயினான்.

453. மித்தியா குரு வேதங்களால் அஞ்ஞாந ஜந்ய மித்தியா ஜகத்தின் பரிகார முண்டாகின்றது.

அக்கிருத தேவனிடத்து நித்திரையால் எவ்வாறு வந துக்க முண்டாயிற்றோ, அவ்வாறே ஆத்மாவில் அஞ்ஞாநத்தால் ஜகத்தின் துக்கம் பிரதீதியாகின்றது. எவ்வாறு மித்தையான குருவினாலும், கிரந்தத்தினாலும் மித்தையான வநம் நசித்ததோ, அவ்வாறே மித்தையான குருவினாலும், வேதத்தினாலும் மித்தையான ஜகத்தின் துக்கம் பரிகார மாகின்றது.

* இனியநல் வாக்கி யத்தி னிலக்கியப் பொருளை நன்கு
தனிமையா யுணர்ந்து கொண்டு தகுந்தசிஞ் ஞாசு பூர்ணப்
புனிதமாங் கிருத கிருத்தியம் பூண்டனன் தயாளு தீந
தனிநிரா வரண மாயுந் தாதுவே நானு கின்றேன்.

குரு வேதாதி சாதந மித்யா வர்ணந மென்னும்
பெயரினை யுடைய
ஆருந் தரங்கம் முற்றிற்று.

---

ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணமஸ்து.

---

* வாக்கியங்களின் லக்ஷியார்த்தத்தை யறிந்து ஜிஞ்ஞாசு பூர்ண கிருத கிருத்திய னாகின்றான். தீனதயாளுவாயும் நிராவரணமாயு மிருக்கின்ற தாதுவே நான்.

ஸ்ரீ கணேசாய நமஃ.
ஸ்ரீ நடேசாய நமஃ.

# விசாரசாகரம்.

## ஏழாந் தரங்கம்.

### ஜீவன் முத்தி விதேக முத்தி வர்ணநம்.

நைவி லாமந முடையவா ரியனரு ளாலே
கையி லாமல கம்மென வறிவினை யறிந்து
சைவி லாவகை சார்ந்தன னடியிணை பணிந்து
நொய்வி லாவகை நுவலுவ னேழதாந் தரங்கம்.

454. ஞாநியின் வியவகாரத்தில் நியம மில்லை யெனல்.

உத்தம மத்தியம கநிஷ்டாதி காரிகளான மூவரும் இவ்வாறு குருபதேசத்தைக் கேட்டு ஒரு சம்சயமு மின்றி ஆத்மாவே பிரஹ்ம மென்னும் உத்தமமான ஞாநத்தை யடைந்தனர். குரு மூவர்க்கும் ஏக காலத்தில் உபதேசஞ் செய்தா ராயினும், குரு உபதேசத்தால் பிரஹ்ம சாக்ஷாத்காரம் உத்தமமான தத்துவ திருஷ்டிக் குண்டாயிற்று.

காய்ந்த அரசஞ் சருகுகள் காற்றினல் அங்கு மிங்கும் பறந்து ஓடுவது போல எஞ்சிய கர்மமான பிராரத்தத்தால் ஞாநி கிரியைகளைச் செய்கின்றவனுகக் காணப்படுகின்றான்; ஒரு காலத்தில் ரதம், குதிரை, யானை யென்பவற்றி லேறித் தோட்ட முதலியவற்றைப் பார்க்கின்றான்; ஒருகால் காலில் ஒன்று மில்லாமல் திரும்பி வருகின்றான். அவன் படுக்கையோ அநேக விதமாம்; உத்தம போஜநம் போகமாம். ஒருகால் போஜந மின்றி மலையின் குகையி லிருந்துகொண்டு கற் றரையிற் படுத்துக்கொண்டு இரவைப் போக்குகின்றான். ஒருகால் இவனை லட்சம், ஆயிரம் பெயர்கள் நமஸ்கரிக்கின்றார்கள், பூஜிக்கின்றார்கள். ஒருகாலத்தி லிவன் உபய லோகப் பிரஷ்ட னென்று கர்மியால் வெறுக்கப்படுகின்றான். எவன் இவனைப் பூஜிக்கின்றானே அவன் சஞ்சித சுகிர்தத்தை யடைகின்

ளுன். தோஷ திருஷ்டியுடன் இவனைப் பார்க்கின்றவன் பாப பல த்தையடைகின்ளுன். இவ்வாறு ஞாநியின் தேக வியவகாரம் நியம மின்றி யிருக்கின்றது. தத்துவத்தை நிச்சயமாக வறிந்தவனுக்கு ஒருகாலத்தும் பிராந்தியும் சந்தேகமு முண்டாகா. அவனுக்குச் செய்யவேண்டியது ஒன்று மில்லை. அவனுக்குப் பயம், பேதப் பிராந்தி நாசமாய்விட்டன; வேதப் பிரமாணத்தால் சுவயம் பிர காசமான அத்வயப் பிரஹ்மத்தின் ஞாநம் உண்டா யிருக்கின்றது.

## ஞாநியின் வியவகாரத்தில் நியமத்தை ஆக்ஷேபித்தல்.

455. ஞாநி சமாதி சரீர நிர்வாக மென்பவற்றினும் அதிகமான காரியத்தில் பிரவிருத்திக்கலாகா தென்னும் நியமத்தின் ஆக்ஷேபம்.

ஞாநியின் வியவகாரத்தில் நியம முண்டென்று சிலர் கூறுகின் றனர். திரிபுடியைத் துக்கத்திற்குக் காரண மென்று அறிந்து, பிரியத்தோடு (ஞாநி) சமாதி செய்கின்ளுன். கிஞ்சித் வியவகார மிருக்குமாயின் அது பிச்சை வாங்கிப் புசித்தலும் ஜல பானஞ் செய்தலுமாம்; சமாதி சுகத்தை மறக்கின்ற தில்லை; திரிபுடியி னின்றும் அருவருப்பால் நீங்குகின்ளுன். இக் காரணத்தால் ஞாநி சமாதிக்குப் பிரயத்தநம் அடிக்கடி செய்கின்ளுன். சமாதி சுக த்தை விட்டுப் பிரமிக்கின்றவன் நாய் கழுதைப் பிரேதத்திற் கொப்பாவன். கௌடபாதா சாரியா ருடைய காரிகையில் சமாதி யின் பிரகாரம் கூறப்பட்டிருக்கின்றது. இவ்விதமாய் ஞாநியான வன் விக்ஷேபத்தைப் போக்கிச் சகல சுகத்தின் சாரத்தையும் அடைகின்ளுன். சமாதி சுகம் அஷ்டாங்க மின்றி யுண்டாகின்ற தில்லை. அந்தச் சமாதிசுகத்திற்குக் காரணம் அந்த அஷ்டாங் கங்களேயாம். அந்தச் சமாதியின் அநுகூலமான அஷ்டாங்கங் களை யிப்பொழுது கேட்பாயாக. இயம நியமாதிகள் ஐந்தைந்து, அநேகவித ஆஸநங்கள், அநேகவிதப் பிராணுயாமம், அநேக விதப் பிரத்தியாகாரம், தாரணை, தியாநம், ஸவிகற்ப சமாதி என்பன. இவ்வஷ்டாங்கங்களைச் சாதித்து நிர்விகற்ப சமாதி அநுஷ் டிக்கத்தக்கதாம்.

இவ்வாறு சமாதியின் கர்த்தவ்யத்தினைக் கேட்டு இவர்கள் பேய்பிடித்தவர்கள் போல் பிதற்றுகின்ருர்கள் என்று நினைத்துத் தத்துவதிருஷ்டி மேல் ஒன்றும் பேசாமல் சிரித்தான்.

இதன் தாற்பரியம்:— ஞாநியின் சரீர வியவகாரத்திற்கு நியம மில்லை. ஏனெனின், ஞாநியின் வியவகாரத்தில் அஞ்ஞாந மும் அதன் காரியமான பேதப் பிராந்தியும், அங்ஙனமே பேதப் பிராந்தியின் காரியமான ராகத் துவேஷங்களுமோ இல்லை. ஆனால் ஞாநிக்கும் பிராரப்த கர்மத்தின் சேஷ மிருக்கின்றது. அதுவே அவனுடைய வியவகாரத்திற்குக் காரணமா யிருக்கின்றது. அப் பிராரப்த கர்மம் புருஷ பேதத்தால் நாநாவிதமா யிருக்கின்றது. ஆதலால் ஞாநியின் பிராரப்த கர்ம ஜந்நிய வியவகாரத்தில் நியம மில்லை. இது சித்தாந்த பக்ஷமாம்.

சிலர் இவ்வாறு கூறுகின்றனர்:— ஞாநியின் வியவகாரத்தில் வேறு எந்தக் கர்மத்தின் நியமமு மில்லை; ஆனால் ஞாநிக்கு நிவி ருத்தியின் பொருட்டு நியம முண்டு. பிரவிருத்தி யுண்டானல், தேக ஸ்திதிக்குக் காரணமான பிக்ஷை வாங்கிப் புசித்தலிலும், கௌபீந ஆச்சாதந மாத்திர கிரகணத்திலும் பிரவிருத்தி யுண் டாகின்றது; வேறு பிரவிருத்தி யுண்டாகின்ற தில்லை. ஏனெ னின், ஞாந முண்டாவதற்கு முன் ஞாந விருப்ப காலத்தில் விஷ யத்தில் தோஷ திருஷ்டியால் வைராக்கிய முண்டாகின்றது. அந்த வைராக்கியம் ஞாந முண்டான பின்னரும் தோஷ திருஷ்டி யால் அங்ஙனமே விஷயத்தில் மித்தியா புத்தியால் இருக்கின்றது.

அபரோக்ஷமாகப் பொய் யென் றறிந்த பதார்த்தத்தில் சத் திய புத்தி யுண்டாகின்ற தில்லை. தோஷ திருஷ்டியால் ராக முண் டாகின்ற தில்லை. பிரவிருத்தி ராகத்தா லுண்டாகின்றது. ஞாநி க்கு ராகம் சம்பவியாமையினல் பிரவிருத்தி யுண்டாகின்ற தில்லை. சரீர நிர்வாகத்தின் பொருட்டு போஜனாதிகளி லுண்டாகும் பிர விருத்தியோ ராக மின்றிப் பிராரப்த கர்மத்தினல் பொருந்து கின்றது.

சஞ்சிதம், ஆகாமியம், பிராரப்தம் எனக் கர்மம் மூன்று விதமாம். சென்ற சரீரங்களிற் செய்யப்பட்டுப் பலனை ஆரம்பிக் காம லிருக்கும் கர்மம் சஞ்சித மெனப்படும். எதிர்காலத்திற் (செய்யப்படும்) கர்மம் ஆகாமிய மெனப்படும். முன் சரீரங்களிற் செய்யப்பட்டு வர்த்தமாந சரீரத்திற்கு ஏதுவா யிருக்கும் கர்மம் பிராரப்த மெனப்படும். அவற்றுள், சஞ்சித கர்மத்திற்கு ஞாநத் தினல் நாச முண்டாகின்றது.

ஞானிக்கு ஆத்மாவி னிடத்தில் கர்த்திருத்துவப் பிராந்தி இல்லை. ஆதலால் அவனுக்கு ஆகாமிய கர்மத்தின் சம்பவ மில்லை.

எந்தப் பிராரப்த கர்மமானது ஞானியின் சரீரத்தை யாரம்பித்திருக்கின்றதோ அந்தப் பிராரப்த கர்மம் சரீர ஸ்திதிக்குக் காரணமான பிக்ஷை முதலியவற்றிற் பிரவிருத்தியை யுண்டாக்குகின்றது. பிராரப்த கர்மம் போக மின்றி நாச மடையாது.

சில விடங்களில், "சஞ்சித ஆகாமிய கர்மங்களைப் போல் ஞானிக்குப் பிராரப்த கர்மமும் இருப்ப தில்லை. ஆதலால், போஜந முதலிய பிரவிருத்திகளும் ஞானிக்குச் சம்பவியா" என்று எழுதப்பட்டிருக்கின்றது. அதன் அபிப்பிராயம் இதுவாம்:—ஞானியின் திருஷ்டியால் ஆத்மாவில் கர்மம் அதன் பலன் என்பவற்றின் சம்பந்த மில்லை. ஆதலால் ஆத்மாவில் எல்லாக் கர்மங்களுக்கும் நிஷேத முண்டாகின்ற தென்னும் அபிப்பிராயத்தால் பிராரப்தம் நிஷேதிக்கப்பட் டிருக்கின்றது. ஞானத்திற்கு முன் செய்த பிராரப்தத்திற்கு ஞானியின் சரீரத்தில் போக முண்டாகின்ற தில்லை யென்னும் அபிப்பிராயத்தால் பிராரப்தம் நிஷேதிக்கப்பட வில்லை. எனெனின், "ஞானியின் சஞ்சித கர்மம் ஞானத்தால் நாச மடைகின்றது; ஆகாமிய(கர்ம)த்தின் சம்பந்த முண்டாகின்ற தில்லை; பிராரப்தம் போகத்தால் நசித்துப்போகின்றது" என்று இவ்வாறு சூத்திரகாரர் எழுதியிருக்கின்றார்.

ஆதலால் பிராரப்த பலத்தால் சரீரத்தினை நிர்வகிக்கும் கிரியை ஞானிக்கு உண்டாகின்றது; அதிகமானவை யுண்டாகின்ற தில்லை.

456. ஆனால், கர்மம் அநேக விதமாம். எங்கு ஒரு கர்மம் அநேக சரீரங்களை ஆரம்பிக்கின்றதோ இவ்வாறாய கர்மத்தா லுண்டான முதல் சரீரத்தில் ஒருவனுக்கு ஞான முண்டாயின், அங்கு ஞானிக்கு வேறு சரீரத்தின் பிராப்தி யுண்டாதல்வேண்டும். எனெனின், எது பலத்தைக் கொடுக்க ஆரம்பித்திருக்கின்றதோ அது பிராரப்த மெனப்படும்; அது போக மின்றி நாச மடைவ தில்லை. அநேக சரீரங்களுக்கு ஹேதுவான கர்மம் ஒன்று. அதனா லுண்டான முதற் சரீரத்தில் ஞான முண்டாமாயின், ஞானத்திற்குப் பிறகும் அந்தக் கர்மத்திற்குப் பலனாகிய அநேக சரீரங்க ளுண்டாக வேண்டியனவா யிருக்கின்றன. ஆதலால் ஞானிக்கும் வேறு சரீரங்களின் அடைவு உண்டாதல் வேண்டும்.

457. பிராரப்த கர்மத்தின் பயனாக எத்தனை சரீரங்க ளுண்டாக வேண்டுமோ அத்தனை சரீரங்களும் ஞாநிக் குண்டாம்; பிராரப்த போகத்திற்கு அதிகமாக உண்டாகின்ற தில்லை. இதனால், ஞாநமும் ஸபலமாகின்றது என்று ஒருவன் கூறுவானாயின், அது பொருந்தாது. ஏனெனின், இது வேதத்தின் மூரசாம்:— ஞாநியின் பிராணன் அந்நிய லோகத்திலாவது இவ்வுலகத்தின் அந்நிய சரீரத்திலாவது செல்லுகின்ற தில்லை. ஆனால் அவ்விடத்திலேயே அந்தக்கரணம் இந்திரியங்களோடு லயமாகிவிடுகின்றது. பிராணன் போத லின்றி வேறு சரீரத்தின் பிராப்தி பொருந்துகின்ற தில்லை. ஆதலால், ஞாநிக்குப் பிராரப்த சேஷத்தால் வேறு சரீர முண்டாகு மென்று கூறுவது பொருந்தாது.

ஆனால், இது சமாதாநமாம்:— யாண்டு ஒரு கர்மம் அநேக சரீரங்களை ஆரம்பிக்கின்றதோ, ஆண்டு அந்திம சரீரத்திலேயே ஞாந முண்டாகின்றது; பூர்வ சரீரத்தில் ஞாந முண்டாவ தில்லை. ஏனெனின், அநேக சரீரங்களை ஆரம்பிக்கும் பிராரப்தமே ஞாநத்திற்குப் பிரதிபந்தகமாம்.

எங்ஙனம், விஷயத்தில் ஆசக்தி, புத்தி மந்தத் தன்மை, பேதவாதி வசநத்தில் விசுவாசங்கள் ஞாநத்திற்குப் பிரதிபந்தங்களோ, அங்ஙனமே விலக்ஷணப் பிராரப்தமும் ஞாநத்திற்குப் பிரதிபந்தகமாம்.

ஞாநத்தின் பிரதிபந்தகங்க ளிருக்க யாண்டு ஞாந சாதநங்களான சிரவணாதிக ளிருக்கின்றனவோ ஆண்டுப் பிரதிபந்தகம் நிவிருத்தியாகவே முதல் ஜந்மத்தில் செய்த சிரவணாதிகளாலேயே வேறு சரீரத்தில் ஞாந முண்டாகின்றது. எங்ஙனம் - வாமதேவர் பூர்வ ஜந்மத்தில் சிரவணாதிகளைச் செய்தார். அப்போது பிராரப்தத்தின் பலனாகிய ஒரு சரீரம் எஞ்சி யிருந்தமையின் ஞாந முண்டாக வில்லை. சிரவணாதிகள் செய்துகொண்டிருக்க வர்த்தமாந சரீரம் போய் வேறு சரீரம் அடையப்பட்டமையின், முன் ஜந்மத்தில் செய்த சிரவணாதிகளினால் (அவருக்குக்) கர்ப்பத்தில் ஞாந முண்டாயிற்று. ஆதலால், ஞாநத்திற்குப் பின் வேறு சரீரத்தின் சம்பந்த முண்டாகாது. வர்த்தமாந சரீரத்தின் சேஷ்டைகள் பிராரப்தத்தால் உண்டாகின்றன. ஆண்டுச் சரீர நிர்வாகத்திற்கு எவ்வளவு கிரியைகள் வேண்டுமோ அவ்வ

ளவே உண்டாகின்றன. ராகத்தா லுண்டாகும் அதிக சேஷ்டைக ளுண்டாகின்ற தில்லை. ஆதலால், சகலப் பிரவிருத்தியும் இல்லாத வன் ஞாநி யாகின்றான்.

458. இவ்வாறு நிவிருத்திப் பிரதாநமாக ஞாநியின் வியவ கார முண்டாகின்றது.

இதனிடத்து இவ்வாறாய சங்கை யிருக்கின்றது:— மநத்தின் சுபாவம் அதிக சஞ்சலமானது. மநத்தின் ஸ்திதி நிராலம்ப மா கின்ற தில்லை. யாதேனும் ஓர் ஆலம்ப (ஆசிரய)த்தால் மநத்தின் ஸ்திதி யுண்டாகின்றது. ஆதலால், மநத்தின் யாதேனும் ஓர் ஆலம்பத்தின் அடைவின் பொருட்டும் ஞாநிக்குப் பிரவிருத்தி யுண்டாகும்.

அதன் சமாதாநம் இதுவாம்:— சமாதி யில்லாத புருஷனது மநம் சஞ்சல மடையினும், சமாதியால் மநம் ஜயிக்கப்படும். ஞாநி சமாதியில் நிலைக்கின்றான். அதனால் ஞாநிக்குப் பிரவிருத்தி யுண் டாகின்ற தில்லை.

459. சமாதியின் அஷ்டாங்கங்கள்.

அச் சமாதி இந்த எட்டு அங்கங்களா லுண்டாகின்றது. அவை இயமம், நியமம், ஆசநம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியாநம், ஸவிகற்ப சமாதி என்பனவாம்.

460. அஹிம்ஸை, சத்தியம், அஸ்தேயம் (திருடாமை), பிரஹ்மசரியம், அபரிக்கிரகம் என்னும் இவ் வைந்தும் இயம மெனப்படும்.

461. சௌசம், சந்தோஷம், தவம், ஸ்வாத்தியாயம், ஈசு வரப் பிரணிதாநம் என்னும் இவ்வைந்தும் நியம மெனப்படும்.

ஞாந சமுத்திரக் கிரந்தத்தில் பத்துவித இயமமும், பத்து வித நியமமும் கூறப்பட்டிருக்கின்றன. அது புராணக் கிரமமாய்ச் சொல்லப்பட் டிருக்கின்றது. வேதாந்த சம்பிரதாயத்தில் இயம நியமங்கட்கு ஐந்து ஐந்து பேதங்களே யுள.

462. ஆசநங்களின் பேதம் அநந்தமாம். அவற்றுள், ஸ்வஸ் திகம், கோமுகம், வீரம், கூர்மம், பத்மம், குக்குடம், உத்தாநம், கூர்மகம், தநுஷம், மத்ஸ்யம், பச்சிமதாநம், மயூரம், ஸவம்.

சிம்ஹம், பத்ரம், சித்தம் என்றல் முதலிய 84 ஆசநங்கள் யோக கிரந்தங்களில் எழுதப்பட் டிருக்கின்றன. அவற்றின் லக்ஷணங்களும் ஆண்டு எழுதப்பட் டிருக்கின்றன. கிரந்தம் விரியு மென்னும் பயத்தினுலும், வேதாந்தத்தில் அத்தியந்தம் உபயோக மின்மையினுலும் அவற்றின் லக்ஷணங்களை இவ்விடத்தில் எழுதவில்லை. அவற்றுள்ளும், சிம்ஹம், பத்ரம், பத்மம், சித்தம் என்னும் நான்கு ஆசநங்களும் பிரதாநங்களாம்.

அந்நான்கனுள்ளும், சித்தாசநம் அத்தியந்தம் பிரதாநமாம். அதன் லக்ஷணம் இதுவாம் :— இடது குதிக் காலைக் குத லிங்கங்களின் மத்தியான யோநியில் அழுத்திக்கொண்டு வலது குதிக்காலை லிங்கத்தின் பேரி லழுத்திக்கொண்டு புருவங்களின் மத்தியில் திருஷ்டியை வைத்துக் கட்டை போல் நிமிர்ந்து சலந மின்றிச் சரீர மிருப்பது சித்தாசநமாம்.

சிலர் இதன் லக்ஷணத்தை வேறு விதமாகவும் கூறுகின்றனர் :— இடது குதிக் காலை யோநி ஸ்தாநத்தில் வைக்காமல் லிங்கத்தின்பேரில் வைத்து அதன்பேரில் வலது குதிக் காலை வைக்க வேண்டியது. ஏனைய லக்ஷணங்கள் முன்போன்றனவே யாம். இந்தச் சித்தாசநமே அதிக சிரேஷ்டமானது. எனெனில், சில ஆசநங்கள் ரோக நாசத்திற்கு எதுவாம். சில ஆசநங்கள் பிராணுயாமாதி சமாதி அங்கங்களுக்குச் சாதகங்களா யிருக்கின்றன. சித்தாசநம் சமாதி காலத்தி லுண்டாகின்றது. ஆதலால், இது அதிக பிரதாந மானது. இதனையே வஜ்ஜிராஸந மென்றும் முக்தாஸந மென்றும் குப்தாஸந மென்றும் கூறுவர்.

463. ஆசந சித்தியின் பின்னர்ப் பிராணுயாமமும் செய்தல் வேண்டும். அந்தப் பிராணுயாமம் அநேகப் பிரகாரமா மாயினும், அதன் லக்ஷணம் சுருக்கமாகக் கூறப்படுகின்றது:—

மூக்கின் இடது துவாரத்தின் வழியாய் இடை யென்னும் நாடியால் வாயுவைப் பூரித்தல் வேண்டும்; அதனைப் பூரகம் என்று கூறுவர். மூக்கின் வலது துவாரத்தால் வாயுவை விடல் வேண்டும்; அதனை ரேசகம் என்று கூறுவர். சுழுமுனையால் வாயுவை யடக்கல் வேண்டும்; அதனைக் கும்பகம் என்று கூறுவர். இவ்வாற்றுல் பூரக ரேசக கும்பகங்களுக்குப் பிராணுயாம மென்று பெயர்.

அந்தப் பிராணுயாமம் இரண்டு பிரகாரமாம்:—ஒன்று அகர்ப்பம், மற்றொன்று ஸகர்ப்பமாம். பிரணவோச்சாரண மின்றிய பிராணுயாமம் அகர்ப்ப மெனப்படும். பிரணவோச்சாரணத்தோடு கூடிய பிராணுயாமம் ஸகர்ப்ப மெனப்படும்.

464. விஷயங்களினின்றும் சகல இந்திரியங்களையும் நிரோதனஞ் செய்வது பிரத்தியாகார மெனப்படும். அந்தராய மி(இடையி)ன்றி அந்தக்கரணம் நிலைத்தல் தாரணை யெனப்படும். அந்தராயத்தோடு கூடி அத்விதீய வஸ்துவினிற் செல்லும் அந்தக்கரணத்தின் பிரவாகம் தியாந மெனப்படும்.

465. எழுந்த ஸம்ஸ்காரங்களின் திரஸ்காரமும், அடங்கிய ஸம்ஸ்காரங்களின் பிரகடமு முண்டாய் அந்தக்கரணம் ஏகாக்கிரமாய்ப் பரிணமித்தல் சமாதி யெனப்படும்.

அந்தச் சமாதி இரண்டு பிரகாரமாம்:—ஒன்று ஸவிகற்ப சமாதி யாம்; மற்றொன்று நிர்விகற்ப சமாதி யாம்.

ஞாதா ஞாந ஞேய ரூப திரிபுடி விளக்கத்தோடு கூடிய அத்விதீயப் பிரஹ்மத்தி லுள்ள அந்தக்கரண விருத்தியின் ஸ்திதி ஸவிகற்ப சமாதி யெனப்படும்.

அந்த ஸவிகற்ப சமாதி இரண்டு பிரகாரமாம்:—ஒன்று சப்தாநுவித்தமாம்; மற்றொன்று சப்தாநநுவித்தமாம்.

அகம் பிரஹ்மாஸ்மி என்னும் சப்தத்தோடு அநுவித்தம், அஃதாவது கூடியது சப்தாநுவித்தம் எனப்படும். சப்த மின்றிய தனை ஸப்தாநநுவித்தம் என்பர்.

திரிபுடியின் பாந மின்றிய அகண்டப் பிரஹ்மாகாரமான அந்தக்கரண விருத்தியின் ஸ்திதி நிர்விகற்ப சமாதி எனப்படும்.

இவ்வாற்ருல், ஸவிகற்ப நிர்விகற்ப ரூபத்தால் சமாதி இருவகையாகின்றது. அவற்றுள், ஸவிகற்ப சமாதி சாதந மாம்; நிர்விகற்ப சமாதி பல மாம்.

சாதந ரூப ஸவிகற்ப சமாதியில் திரிபுடி ரூபத் துவைதம் பிரதீதியா மாயினும், அந்தத் துவைதம் இவ்வாற்ருல் பிரஹ்மரூபமாகப் பிரதீதி யாகின்றது. மண் விகாரத்தை மண் ரூபமாக அறிதலால், விவேகிக்கு மண் விகாரமாகக் கடாதிகளின் பிரதீதி

யுண்டாயினும் மண் ரூபமாகவே பிரதீதி யாகின்றது. அதுபோல் ஸவிகற்ப சமாதியில் திரிபுடிரூபத் துவைதம் பிரஹ்ம ரூபமாகவே பிரதீதி யாகின்றது.

நிர்விகற்ப சமாதியிலும் ஸவிகற்ப சமாதியிற் போல் திரிபுடி ரூபத் துவைத மிருக்கின்றதா மாயினும் அது பிரதீதி யாகின்ற தில்லை. அது ஜலத்தில் உப்பைப் போடுவதால் ஆண்டு உப்பு இருந்தும் நேத்திரத்திற்கு அது எவ்வாற்றாலும் பிரதீதியாகாதது போலாம்.

இவ்வாற்றால் ஸவிகற்ப நிர்விகற்ப சமாதிகளுக்கு இப் பேதஞ் சித்தித்தது:--- ஸவிகற்ப சமாதியில் பிரஹ்ம ரூபமாகத் துவைதம் பிரதீதியாதலும், நிர்விகற்ப சமாதியில் திரிபுடி ரூபத் துவைதம் பிரதீதி யாகாமையும் ஆம்.

## 466. சுழுத்திக்கும் நிர்விகற்ப சமாதிக்கும் பேதம்.

அவ்வாறே சுழுத்திக்கும் நிர்விகற்ப சமாதிக்கும் இது பேதமாம்:—சுழுத்தியில் அந்தக்கரணம், பிரஹ்மாகார விருத்திகளின் அபாவம் இருக்கின்றது. நிர்விகற்ப சமாதியில் பிரஹ்மாகாரமான விருத்தி அந்தக்கரணம் இருக்கின்றன ; அவற்றின் அபாவமில்லை. இவ்வாற்றால், சுழுத்தியில் விருத்தி சகித அந்தக்காணத்தின் அபாவமுண்டாகின்றது. நிர்விகற்ப சமாதியில் விருத்தி சகித அந்தக்காண மிருக்கின்றது; அது பிரதீதி யாகின்றதில்லை.

நிர்விகற்ப சமாதியில் அந்தக்கரணத்தின் எந்தப் பிரஹ்மாகார விருத்தி யுண்டாகின்றதோ, அதற்கு ஏது சவிகற்ப சமாதியின் அப்பியாஸமாம். ஆதலால், சாதந ரூப எட்டங்கங்களில் ஸவிகற்ப சமாதி எண்ணப்பட் டிருக்கின்றது. நிர்விகற்ப சமாதி பலமாம்.

## 467. நிற்விகற்ப சமாதி இரு வகைத் தெனல்.

அந்த நிர்விகற்ப சமாதியும் இரு வகைத்தாம்:---ஒன்று அத்வைத பாவனா ரூபம் ; மற்றொன்று அத்வைத அவஸ்தாந ரூபமாம்.

அத்வைதப் பிரஹ்மாகாரமான அந்தக்காணத்தின் அஞ்ஞாத விருத்தியோடு கூடியது அத்வைத பாவனா ரூப நிர்விகற்ப சமாதி யெனப்படும்.

இந்தச் சமாதியில் அப்பியாசம் அதிகமாவதனால் பிரஹ்மாகார விருத்தியும் சாந்தமாய் விடுகின்றது. ஆதலால், விருத்தியின்றியதனை அத்வைத அவஸ்தாந ரூப நிர்விகற்ப சமாதி என்பர்.

எங்ஙனம் காய்ச்சின இரும்பின்மீது விடப்பட்ட ஜலத்திவலை அவ்விரும்பிலேயே பிரவேசிக்கின்றதோ அங்ஙனமே அத்வைத பாவனாரூப சமாதியின் திடமான அப்பியாஸத்தினால் அத்தியந்தப் பிரகாசமான பிரஹ்மத்தில் விருத்தி லயமாகின்றது. அது அத்வைத அவஸ்தாந ரூப நிர்விகற்ப சமாதிக்குச் சாதனமா யிருக்கின்றது.

### 468. அத்வைத அவஸ்தாந ரூப சமாதிக்கும் சுழுத்திக்கும் பேதம்.

அத்வைத அவஸ்தாந ரூப சமாதிக்கும் சுழுத்திக்கும் இவ்வளவு பேத முண்டு :—

சுழுத்தியில், அஞ்ஞானத்தில் விருத்தியின் லய முண்டாகின்றது.

அத்வைத அவஸ்தாந ரூப சமாதியில், பிரஹ்மப் பிரகாசத்தில் விருத்தியின் லய முண்டாகின்றது.

சுழுத்தியின் ஆநந்தம் அஞ்ஞானாவிருதமா யிருக்கின்றது.

சமாதியில் நிராவரணமான பிரஹ்மாநந்தத்தின் பாந முண்டாகின்றது.

### 469. லயம், விக்ஷேபம், கஷாயம், ரஸாஸ்வாதம் என நான்கு நிர்விகற்ப சமாதியின் விக்கிநங்கள்.

ஆனால், நிர்விகற்ப சமாதியில் நான்கு விக்கிநங்க ளிருக்கின்றன. அவற்றை நிஷேதஞ் செய்தற் பொருட்டு (அவற்றின் சொரூபத்தைக்) கூறுகின்றேன் :—

லயம், விக்ஷேபம், கஷாயம், ரஸாஸ்வாதம் என விக்கிநங்கள் நான்காம்.

ஆலஸ்யத்தினு லாவது, நித்திரையினு லாவது விருத்தி யில்லாம லிருத்தற்கு லய மென்று பெயர். அந்த லயத்தால் சுழுத்திக்குச் சமாநமான அவஸ்தை யுண்டாகின்றது; பிரஹ்மாநந்

தத்தின் பாநமுண்டாவதில்லை. ஆதலால், நித்திரை ஆலஸ்ய முதலிய காரணங்களால் எப்போது விருத்தி தனது உபாதாந மான அந்தக்கரணத்தில் லயமாகின்றதைப் பார்க்கின்றனனோ அப்போது யோகியானவன் சாவதாநனாய் நித்திரை முதலிய வற்றைத் தடுத்து விருத்தியை விழிப்பிக்குக. இவ்வாறு லயரூப விக்கிநத்தின் விரோதியான நித்திரை ஆலஸ்யம் என்பவற்றின் நிரோதசகித விருத்தியின் பிரவாகரூப ஜாகரணதையை (விழிப்பை) கௌடபாதாசாரியர் சித்த சம்போதநமென்று கூறி யிருக்கின்றார்.

470. விக்ஷேபத்தின் அர்த்தம் இதுவாம்:—ராஜன் - பூனை முதலியவற்றின் பயத்தால் சிட்டுக்குருவிகள் வீட்டுக்குள் பிரவேசிக்கின்றன. அப்போது பய வியாகூலங்களுக்குக் கிரகத்திற்குள் அக்காலத்தில் இடம் காணப்படுகின்றதில்லை; ஆதலால், மீண்டும் (அவை)வெளியே வந்து பயத்தை அல்லது மாண ரூப துக்கத்தை யடைகின்றன. அதுபோல், அநாத்ம பதார்த்தங்களைத் துக்கரூபமெனவென அறிந்து, அத்வைதாநந்தத்தை விஷய மாக்குவதற்காக அந்தர் முகமாகிய விருத்தி, ஆண்டு விருத்திக்கு விஷயமாகிய சேதநம் அதி சூக்ஷ்மமா யிருத்தலால், கிஞ்சித் காலமும் விருத்தி நிலைத்த வின்றி அக் காலத்திலேயே சேதந ஸ்வரூபாநந்தத்தின் லாப முண்டாகின்றதில்லை யாகலின், விருத்தி பகிர் முகமாய் விடுகின்றது. இவ்வாற்றால், பகிர்முக விருத்தி விக்ஷேப மெனப்படும். அந்த விருத்தியின் ஸ்திரத் தன்மை யின்றிச் சொரூபாநந்தத்தின் லாப முண்டாகின்றதில்லை. ஆதலால், அந்தர்முக விருத்தி யுண்டாயினும் எவ்வளவு காலம் விருத்தி பிரஹ்மாகாரமாக வில்லையோ அவ்வளவு காலம் பாஹ்ய பதார்த்தங்களில் தோஷ பாவனையால் விருத்தியை யோகி பகிர்முகமாக விடுகின்றதில்லை. ஆனால், விருத்தியின் அந்தர்முகத் தன்மையினையே நிலைபெறச் செய்வன்.

விக்ஷேப ரூப விக்கிநத்தின் விரோதியான யோகியின் பிரயத்நத்தைக் கௌடபாதாசாரியர் சம மென்று கூறி யிருக்கின்றார்.

471. ராகாதி தோஷத்தினைக் கஷாய மென்பர். ராகாதி தோஷங்கள் இருவகையாம்:— ஒன்று பாஹ்யமாம்; மற்றொன்று ஆந்தரமாம்.

எவற்றிற்குப் புத்திரன் ஸ்திரீ தநாதி விஷயங்கள் இருப்பன வாகின்றனவோ, அவை பாஹியமாம். சென்ற காலத்தின் அல்லது வருங் காலத்தின் சிந்தநா ரூப மநோ ராச்சியம் ஆந்தர மெனப் படும். இவ்விருவகை ராகாதிகளும் சமாதியிற் பிரவிருத்தித்த யோகியி னிடத்துச் சம்பவியா. ஏனெனின்,

சித்தத்திற்கு ஐந்து பூமிகைக ளிருக்கின்றன :— க்ஷேபம், மூடத்தன்மை, விக்ஷேபம், ஏகாக்கிரத்தன்மை, நிரோத பூமிகை என்பனவாம். அவற்றுள், உலக வாசனை, தேக வாசனை, சாஸ்திர வாசனை என்றல் முதலிய ரஜோ குணத்தின் பரிணமங்களாகிய திட அநாத்ம வாசனையை க்ஷேப மென்பர். நித்திரை ஆலஸ்ய முதலிய தமோகுண பரிணமங்களை மூடத்தன்மை என்பர். தியா நத்திற் பிரவிருத்தித்த சித்தம் ஒரு காலத்தில் வெளியே செல்லு வதனை விக்ஷேப மென்பர். அந்தக்கரணத்தின் அதீத பரிணம மும், வர்த்தமான பரிணமமும் சமாநாகார மாதலை ஏகாக்கிரத் தன்மை யென்பர்.

இந்த ஏகாக்கிரத் தன்மையின் லக்ஷணம் யோக சூத்திரத் தில் பதஞ்சலி பகவானல் கூறப்பட் டிருக்கின்றது. அதன் தாற் பரியம் இதுவாம் :— சமாதி காலத்தில் யோகியின் அந்தக்கரணத் தில் ஏகாக்கிரத்தன்மை யுண்டாகின்றது. அந்த ஏகாக்கிரத்தன்மை விருத்தியின் அபாவ ரூப மன்று. ஆனல், சமாதி காலத்தி லுண் டாம் அந்தக்கரணத்தின் பரிணமங்க ளெல்லாம் பிரஹ்மத்தினையே விஷயஞ் செய்கின்றன. ஆதலால், அந்தக்கரணத்தின் அதீத பரி ணமமும், வர்த்தமாந பரிணமமும் கேவலம் பிரஹ்மாகார மாத லால் சமாநாகார மாகின்றன. அந்த ஏகாக்கிரத் தன்மையின் விரிவை நிரோத மென்பர்.

இவ் வைந்து பூமிகைகளும் அந்தக்கரணத்தினவாம். பூமிகை யென்பது அவஸ்தையாம்.

இவ் வைந்து பூமிகளோடு கூடிய அந்தக்கரணத்திற்கு முறையே க்ஷிப்தம், மூடம், விக்ஷிப்தம், ஏகாக்கிரம், நிருத்தம் என்று பெயராம். அவற்றுள், க்ஷிப்த மூட அந்தக்கரணங்க ளுக்கோ சமாதியில் அதிகார மில்லை. விக்ஷிப்த அந்தக்கரணத் திற்கு அதிகார மிருக்கின்றது. ஏகாக்கிர நிருத்த அந்தக்கரணங்

கள் சமாதி காலத்தில் உண்டாகின்றன. இது யோக சாஸ்திரங் களிற் கூறப்பட் டிருக்கின்றது.

ராகாதி தோஷத்தோடு கூடிய அந்தக்கரணம் க்ஷிப்தமாகவே இருக்கின்றது. அந்த க்ஷிப்த அந்தக்கரணத்திற்கு யோகத்தில் அதிகார மில்லை. ஆகையால் ராகாதி தோஷ ரூப கஷாயம் சமாதிக்கு விக்கிந மென்று கூறுவது பொருந்தாது.

அங்ஙனமாயினும், இது சமாதானமாம்:—பாஹ்யமாகவாவது, ஆந்தரமாகவாவ திருக்கும் ராகாதிகள் க்ஷிப்த அந்தக்கரணத்திலேயே யுண்டாகின்றன. அந்த அந்தக்கரணத்திற்கு அதிகாரமு மில்லை. ஆயினும், அநேக ஜந்மங்களில் முன் அநுபவிக்கப்பட்ட பாஹ்ய ஆந்தர ராகத் துவேஷங்களின் சூக்ஷ்ம சம்ஸ்காரம் விக்ஷிப்தாதியை யுடைய அந்தக்கரணத்திலும் சம்பவிக்கும். ஆதலால், ராகத் துவேஷங்களுக்குக் கஷாய மென்று பெய ரில்லை. ஆனால், ராகத் துவேஷாதிகளின் சம்ஸ்காரத்திற்குக் கஷாய மென்று பெயராம். அந்தச் சம்ஸ்காரம் அந்தக்கரண மிருக்கும் வரையில் நீங்குகின்ற தில்லை; ஆதலால், சமாதி காலத்திலும் அந்தக்கரணத்தி லிருக்கின்றது. ஆனால், ராகத் துவேஷாதிகளின் உற்பூத சம்ஸ்காரம் சமாதிக்கு விரோதமாம்; அநுற்பூதம் விரோதி யன்று. வெளிப்பட்டதனை உற்பூதம் என்பர்; வெளிப்படாததனை அநுற்பூதம் என்பர்.

சமாதியில் பிரவிருத்தித்த யோகிக்கு ராகத் துவேஷங்களினது சம்ஸ்காரத்தின் பிரகடத்தன்மை யுண்டாமாயின் (அதனை) விஷயத்தில் தோஷ திருஷ்டியால் அமிழ்த்தல் வேண்டும்.

விக்ஷேபத்திற்கும் கஷாயத்திற்கும் இப்பேத முளது. பாஹ்ய விஷயாகார விருத்திக்கு விக்ஷேப மென்று பெயர்.

யோகியின் பிரயத்நத்தினால் யாண்டு விருத்தி அந்தர்முகமாயினும், ராகாதிகளின் உற்பூத சம்ஸ்காரத்தினால் அந்தர்முகமான விருத்தியும் அடக்கப்பட்டுப் பிரஹ்மத்தை விஷயஞ் செய்கின்ற தில்லையோ அவ்விருத்தியினைக் கஷாய மென்பர். விஷயத்தில் தோஷதர்சநத்தோடு கூடிய யோகியின் பிரயத்நத்தினால் கஷாயமாகிய விக்கிநம் நிவிருத்தி யாகின்றது.

472. ரஸாஸ்வாதத்தின் பொருள் இதுவாம்:—யோகிக்குப் பிரஹ்மாநந்தத்தின் அநுபவ முண்டாகின்றது; விக்ஷேப ரூப துக்

கத்தின் நிவிருத்தியின் அநுபவ முண்டாகின்றது. சிலவிடத்துத் துக்க நிவிருத்தியினாலும் ஆநந்த முண்டாகின்றது.

எங்ஙனம், சுமையைத் தூக்கும் புருஷனுக்குச் சுமையை இறக்குவதனால் ஆநந்த முண்டாகின்றது. ஆண்டு ஆநந்தத்தில் வேறு விஷயம் காரண மன்று; சுமையா லுண்டான துக்கத்தின் நிவிருத்தியினால் "எனக்கு ஆநந்த முண்டாயிற்று" என்று கூறுகின்றான். ஆதலால், துக்க நிவிருத்தியும் ஆநந்தத்திற்கு ஏதுவாம். அங்ஙனமே, யோகிக்குச் சமாதியில் விக்ஷேபத்தா லுண்டான துக்க நிவிருத்தியினால் எந்த ஆநந்த முண்டாகின்றதோ அதன் அநுபவத்திற்கு ரஸாஸ்வாத மென்று பெயர்.

துக்க நிவிருத்தியினா லுண்டாய ஆநந்தத்தின் அநுபவத்தினாலேயே யோகி சாந்தி யடைந்து விடின் சகல உபாதிகளு மின்றிய பிரஹ்மாநந்தாகார விருத்தியி னபாவத்தினால் அதன் அநுபவம் சமாதியில் உண்டாகாது. ஆதலால், துக்க நிவிருத்தியா லுண்டாகும் ஆநந்தத்தின் அநுபவ ரூப ரஸாஸ்வாதமும் சமாதியில் விக்கிந மாகும்.

இச்சித்த பதார்த்தத்தின் பிராப்தி யின்றியும் விரோதியின் நிவிருத்தியால் ஆநந்த முண்டாகின்ற தென்பதில் வேறு திருஷ்டாந்தம்:—பூமியிற் புதைய லிருக்கின்றது. அந்த நிதி கொடிய விஷமுடைய சர்ப்பத்தினால் காக்கப்பட் டிருக்கின்றது. ஆண்டு நிதியை யடைவதன் முன்னும், அதனை யடைவதற்கு விரோதியா யிருந்த சர்ப்பத்தின் நிவிர்த்தியினாலும் ஆநந்த முண்டாகின்றது. ஆண்டு சர்ப்ப நிவிருத்தியா லுண்டான ஆநந்தத்தில் ஒருவன் திருப்தி யடைந்து, புதைய லெடுக்கும் யத்நத்தை விட்டு விடின் புதையலை யடைதலா லுண்டாகும் பரமாநந்தத்தின் அடை வுண்டாகாது. அதுபோல், அத்வைதப் பிரஹ்ம ரூபம் புதையலாம்; தேகாதி அநாத்ம பதார்த்தங்களின் பிரதீதி ரூப விக்ஷேபம் சர்ப்பமாம். விக்ஷேப ரூப சர்ப்பத்தின் நிவிருத்தியால் உண்டாகும் அவாந்தர ஆநந்த ரூப ரஸத்தின் அநுபவம் ஆஸ்வாதநமாம். அது புதையல் வடிவ அத்வைதப் பிரஹ்மத்தினை யடைவதா லுண்டாகும் மஹாநந்தத்தின் அடைவிற்குப் பிரதிபந்தகமா யிருத்தலால் விக்கிந மெனப்படுகின்றது.

அல்லது, ரஸாஸ்வாதத்திற்கு இது வேறு பொருளாம் :— சவிகற்ப சமாதியின்பின் நிர்விகற்ப சமாதி யுண்டாகின்றது. சவிகற்ப சமாதியில் திரிபுடி பிரதீதி யாகின்றது. ஆதலால், சவிகற்ப சமாதியின் ஆநந்தம் திரிபுடி ரூப உபாதி சகிதமா யிருத்தலால் ஸோபாதிக மெனப்படுகின்றது. நிர்விகற்ப சமாதியில் திரிபுடி பிரதீதி யாகின்ற தில்லை. ஆகையால், நிர்விகற்ப சமாதியில் நிருபாதிக ஆநந்த முண்டாகின்றது. இவ்வாற்றால், சவிகற்ப சமாதியின் பின்னரும் நிர்விகற்ப சமாதியின் ஆரம்பத்திலும் சவிகற்ப சமாதியின் சோபாதிகாநந்தம் விடமுடியாது அநுபவிக்கப்படுகின்றது; அது ரஸாஸ்வாத மெனப்படும். ஆதலால், விக்ஷேப நிவிருத்தியா லுண்டாகும் ஆநந்தத்தின் அநுபவம், அல்லது, சவிகற்ப சமாதியினது ஆநந்தத்தின் அநுபவம் ரஸாஸ்வாத மெனப்படும். அவ் விருவித ரஸாஸ்வாதங்களும் நிர்விகற்ப சமாதியின் பரமாநந்தாநுபவத்திற்கு விரோதிக ளாதலால் விக்கிநங்க ளாகின்றன. ஆதலால், ரஸாஸ்வாதத்தினையுந் தியாகஞ் செய்க.

இவ்வாறு, நிர்விகற்ப சமாதியில் நான்கு விக்நங்க ளிருக்கின்றன. அந்நான்கு விக்நங்களும் சமாதியின் ஆரம்பத்தி லுண்டாகின்றன.

### 473. ஞாநிக்குப் பாஹ்யப் பிரவிருத்தி சம்பவியா தென்னும் ஆக்ஷேபத்தின் சமாப்தி.

ஆதலால், சாவதாநமாய் நான்கு விக்கிநங்களையும் தடுத்துச் சமாதியில் பரமாநந்தத்தினை வித்துவான் அநுபவிக்கின்றான். அவனையே ஜீவன் முக்தனென்பர்.

இவ்வாற்றால், ஞாநியின் சித்தம் நிராலம்பமா யிருக்கின்றதில்லை. எப்பொழுது பிராரப்த பலத்தால் சமாதியினின்றும் எழுகின்றனனோ அப்போதும் (அவனுக்குச்) சமாதியில் அநுபவித்த பரமாநந்தத்தின் ஸ்மிருதி யுண்டாகின்றது. ஆதலால், எழுந்த காலத்திலும் ஞாநியின் சித்தம் நிராலம்பமா யில்லை.

போஜநாதிகளி லுண்டாகும் ஞாநியின் பிரவிருத்தி கேவலம் பிராரப்தத்தா லுண்டாகின்றது. ஆனால், போஜநாதி வியவகாரங்களில் ஞாநி துக்க மிருக்கின்றதாக நினைத்துப் பிரவிருத்திக்கின்றான். ஏனெனின், போஜநாதிகளிற் பிரவிருத்தியும் சமாதி சுகத்

திற்கு விரோதியாம். எவனுக்குச் சரீர நிர்வாகமான போஜநா திப் பிரவிர்த்தியே துக்க ரூபமாய்ப் பிரதீதியாகின்றதோ அவ னுக்கு அதிகப் பிரவிருத்தி யுண்டாகின்ற தில்லை.

இவ்விதமாக அநேக ஆசாரியர்கள் இந்தப் பக்ஷத்தையே எழுதி யிருக்கின்றார்கள். ஜீவன் முக்தியின் ஆநந்தமும் பாஹியப் பிரவிருத்தியி லுண்டாகின்ற தில்லை; ஆனால், நிவிருத்தியி லுண் கின்றது. ஆதலால், ஜீவன் முத்தியின் சுகத்தை யிச்சிக்கின்ற ஞானிக்குப் பாஹியப் பிரவிருத்தி யுண்டாகின்ற தில்லை.

## 455-473-ல் நிகழ்ந்த ஆக்ஷேபத்தின் சமாதாநம்.

### 474. ஞாநி நிரங்குசனு யிருக்கின்றான். பிராரப்தத்தினுல் வியவாகாரஞ் சித்திக்கின்றது எனல்.

அங்ஙன மாயினும், ஞாநிக்கு நிவிருத்தியிலும் நியம மிருப்ப தாகக் கூறுவது பொருந்தாது. ஏனெனில், நிவிர்த்தியிலாவது பிர விருத்தியிலாவது வேதத்தின் ஆஞ்ஞா ரூப விதியோ ஞாநிக் கிருப்ப தில்லை. ஞாநிக்கு வியவகாரத்தில் நியம மில்லாமையால் ஞாநி நிரங்குசனுவன். அவன் வியவகாரம் பிராரப்தத்தினு லுண் டாகின்றது. எந்த ஞாநியின் பிராரப்தம் பிக்ஷா போஜந மாத்ர பலத்திற்கு ஏதுவாகின்றதோ, அவனுக்குப் பிக்ஷா போஜந மாத்தி ரத்திற் பிரவிருத்தி யுண்டாகின்றது. "எவன் பிராரப்தம் அதிக போகத்திற்கு ஏதுவாகின்றதோ, அவனுக்கு அதிகத்திலும் பிர விருத்தி யுண்டாகின்றது." எவன் பிராரப்தம் பிக்ஷா போஜந மாத் திரத்திற்கு ஹேதுவாகின்றதோ அவனுக்கே ஞாந முண்டாகும். எவன் பிராரப்தம் அதிக வியவகாரத்திற்கு ஹேதுவாகின்றதோ அவனுக்கு ஞாந முண்டாவ தில்லை. ஆதலால், பிக்ஷா போஜநாதி வியவகாரத்தினும் அதிக வியவகாரம் ஞாநிக்குண்டாவ தில்லை. எவ னுக்கு அதிகப் பிரவிருத்தி உண்டாகின்றதோ அவன் ஞாநி யல் லன்" என்று ஒருவன் கூறுவானுயின்,

அச்சங்கை பொருந்தாது. ஏனெனின், யாஞ்ஞவல்கியர், ஜந கர் முதலியோர் ஞாநிகளெனப்படுகின்றனர். சபையில் ஜய மடைந்து தநத்தைச் சேர்க்கும் வியவகாரம் யாஞ்ஞ வல்கியர்க்கும், ராஜ்ய பரிபாலந வியவகாரம் ஜநகருக்கும் கூறப்பட்டிருக்கின்றன. அன்றியும், வாசிட்ட கிரந்தத்தில் அநேக ஞாநி புருஷர்களின் விய

வகாரம் நாநாப் பிரகாரமாகக் கூறப்பட்டிருக்கின்றது. ஆதலால், ஞாநியின் பிரவிருத்தியிலாவது நிவிருத்தியிலாவது நியம மில்லை.

யாஞ்ஞவல்கியர் சபையில் ஜய மடைந்த பின்னர் வித்வத் சந்நியாஸ ரூப நிவிருத்தியையே தரித்தார். அன்றியும், பிரவிருத்தியில் துக்கத்திற்கு ஹேதுவான அநேக தோஷங்களையும் கூறியிருக்கின்றாராயினும், யாஞ்ஞவல்கியர்க்கு வித்வத் சந்நியாஸத்தின் பூர்வம் ஞாந மிருந்த தில்லை யென்று கூறுதல் பொருந்தாது; ஆனால், ஞாநமோ முன்னும் இருந்தது. ஆயினும், வித்வத் சந்நியாஸத்திற்கு முன் ஜீவன் முக்தியின் ஆநந்தம் அடையப்பட வில்லை. ஆதலால், ஜீவன் முக்தியின் ஆநந்தத்தின் பொருட்டுச் சேர்த்து வைத்திருந்ததை யெல்லாம் தியாகஞ் செய்துவிட்டார். யாஞ்ஞவல்கியருடைய பிராரப்தம் சிறிது காலம் அதிக போகத்திற்கு ஏதுவா யிருந்தது; பிற்காலம் சொற்ப போகத்திற்கு ஏதுவா யிருந்தது. ஆதலால், முதலிலோ யாஞ்ஞவல்கியருக்கு அருவருப்பில்லாத அதிக போகமும், பின் அருவருப்பினால் சர்வ போகத் தியாகமும் உண்டாயின.

ஜநகருடைய பிராரப்தம் மரண பரியந்தம் ராஜ்ய பரிபாலநாதி ஐஸ்வர்ய போகத்திற்கு ஹேதுவா யிருந்தது. ஆதலால், எப்போதும் தியாகத்தின் அபாவமே யிருந்தது. போகத்தில் அருவருப்பும் (அவருக்கு) உண்டாக வில்லை. வாமதேவாதிகளுடைய பிராரப்தம் சொற்ப போகத்திற்கு ஹேதுவா யிருந்தது. அவர்களுக்கு எப்போதும் போகத்தில் அருவருப்பு இருந்தமையின், பிரவிருத்தியின் அபாவமே கூறப்பட் டிருக்கின்றது. சிகித்துவஜனுக்கு ஞாநத்தின் பின் அதிகப் பிரவிருத்தி யுண்டாயிருந்ததாக வாசிட்டத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

இவ்வாறு ஞாநிகளுக்கு அநேகவிதமான விலக்ஷண வியவகாரங்கள் கூறப்பட்டிருக்கின்றன. அவர்கள் எல்லோர்க்கும் ஞாநம் சமாநமாம். அதன் பயனாகிய மோக்ஷமும் சமாநமாம். பிராரப்த பேதத்தால் வியவகாரத்தின் பேத மிருக்கின்றது. வியவகாரம் குறைதலால் ஜீவன் முக்தியின் சுகம் அதிகப்படுகின்றது. வியவகாரம் அதிகரித்தலால் ஜீவன் முக்தியின் சுகம் குறைகின்றது.

475. ஞாநிக்கு விதேக மோட்சத்தின் தியாகமாவது பரலோகத்தின் இச்சையாவது உண்டாகின்ற தில்லை.

இதிற் சிலர் இவ்வாறு சங்கிக்கின்றனர்:—ஜீவன் முத்தியின் சுகத்தை விட்டுத் துச்சமான போகத்திற் பிரவிருத்திக்கின்றவன் விதேக மோக்ஷத்தையும் விட்டு வைகுண்டாதி லோகங்களை யிச்சித்து அந்த லோகங்களுக்குச் செல்வான்.

அந்தச் சங்கை பொருந்தாது. ஏனெனின், ஜீவன் முக்திச் சுகத்தின் தியாகமும் போகத்திற் பிரவிருத்தியும் ஞாநியின் பிராரப்த பலத்தினுல் சம்பவிக்கின்றன. விதேக மோக்ஷத்தின் தியாகமும் பரலோக கமநமும் சம்பவிக்கின்ற தில்லை. ஏனெனின், ஞாநியின் பிராணன் வெளியிற் செல்வ தில்லை; ஆதலால், பரலோகத்தின் கமநம் சம்பவிப்ப தில்லை; விதேக மோக்ஷத்தின் தியாகமும் சம்பவிப்ப தில்லை. ஏனெனின், ஞாநத்தினுல் அஞ்ஞாநத்தின் நிவிருத்தி யுண்டாய்ப் பிராரப்த போகத்தின் பின் ஸ்தூல சூக்ஷ்ம சரீராகாரமான அஞ்ஞாநம் சேதநத்தில் லயமாதலே விதேக மோக்ஷமென்பர். அஃது அவசிய முண்டாகின்றது. மூலாஞ்ஞாநம் எஞ்சியிருப்பினும், நஷ்டமான அஞ்ஞாநம் மீண்டும் உற்பத்தியாயினும் விதேக மோக்ஷம் சித்திக்கின்ற தில்லை. அந்த மூலாஞ்ஞாநத்திற்கு விரோதியான ஞாந முண்டாகவே அஞ்ஞாநம் எஞ்சி யிருப்ப தில்லை. பிரமாணத்தால் நாசமான அஞ்ஞாநம் மீண்டும் உற்பத்தி யாவ தில்லை. ஆதலால், விதேக மோக்ஷத்தின் அபாவ முண்டாகின்ற தில்லை.

விதேக மோக்ஷத்தின் தியாகத்திலும், பரலோக கமநத்திலும் ஞாநிக்கு இச்சையும் பொருந்துகின்ற தில்லை. ஏனெனின், ஞாநிக்கு இச்சை கேவலம் பிராரப்தத்தினு லுண்டாகின்றது. எவ்வளவு சாமக்கிரிக ளின்றிப் பிராரப்தத்தின் போகம் சம்பவிக்கின்ற தில்லையோ அவ்வளவு சாமக்கிரிகளைப் பிராரப்தம் உண்டாக்குகின்றது. இச்சை யின்றிப் போகம் சம்பவிக்கின்ற தில்லை. ஆதலால், ஞாநியி னிச்சையும் பிராரப்தத்தின் பலனும்.

அந்நிய லோகத்திலாவது, இந்த லோகத்திலாவது அந்நிய சரீரத்தின் சம்பந்தம் ஞாநிக்குப் பிராரப்தத்தினுலும் உண்டாகின்ற தில்லை யென்று பூர்வம் இந்தத் தரங்கத்தில் பிரதிபாதநஞ் செய்யப்பட்டிருக்கின்றது.

ஆதலால், ஞாநிக்குப் பிராரப்தத்தினல் விதேக மோக்ஷத்தின் தியாகத்திலாவது, பரலோக கமநத்திலாவது இச்சை யுண்டாகின்ற தில்லை.

476. ஞாநிக்கு மந்தப் பிராரப்தத்தினல் ஜீவன் முத்திச் சுகத்தின் விரோதியான பிரவிருத்தி யுண்டாதல்.

ஜீவன்முக்திச் சுகத்திற்கு விரோதியான வர்த்தமாந சரீரத்திலுள்ள அதிக போகத்தின் இச்சையோ, பிக்ஷா போஜநாதிகளிற் போல் ஜநகாதிகளுக்குச் சம்பவிக்கின்றது.

இவ்விடத்து இது இரகசியமாம்:— ஞாநியின் பாஹியப் பிரவிருத்தி ஜீவன் முக்திக்கு விரோதி யன்று. ஆனல், ஜீவன் முக்தியின் விலக்ஷண சுகத்திற்கு விரோதியாம். ஏனெனின், ஆத்மா நித்திய முக்தமாம்; அவித்தையினல் (அதற்குப்) பந்தம் பிரதீதியாகின்றது. எந்தக் காலத்தில் ஞாந முண்டாகின்றதோ அந்தக் காலத்தில் அவித்தையினு லுண்டான பந்தப் பிராந்தி நஷ்டமாகின்றது. ஞாந முண்டான பின்னர்ப் பந்தப் பிராந்தி யுண்டாகின்ற தில்லை. சரீரத்தோடு கூடியிருப்பவனுக்குப் பந்தப் பிராந்தியின் அபாவமே ஜீவன் முக்தி யென்று கூறப்படும். தேகாதிகளின் பிரவிருத்தியிலும் நிவிருத்தியிலும் ஞாநிக்கு ஆத்மாவினிடத்தில் பந்தப் பிராந்தி யுண்டாகின்ற தில்லை. ஆதலால், பாஹியப் பிரவிருத்தியினுலும் ஜீவன் முக்தி நிவிருத்தி யாகின்ற தில்லை. ஆயினும், பாஹியப் பிரவிருத்தியில் ஜீவன் முக்தனுக்கு விலக்ஷண சுக முண்டாகின்ற தில்லை. ஏகாக்கிரத்தன்மை ரூப அந்தக்கரண பரிணாமத்தினுற் சுகமுண்டாகின்றது. அந்த ஏகாக்கிரத் தன்மையாகிய பரிணாமம் பாஹிய விருத்தியி லுண்டாகின்ற தில்லை.

இவ்வாற்ருல், பிராரப்த பேதத்தினல் ஞாநிகளின் வியவகாரம் நாநாப் பிரகாரமா யிருக்கின்றது. ஆனல், எவனது பிராரப்தம் அதிகப் பிரவிருத்திக்கு ஹேதுவா யிருக்கின்றதோ அவனுடைய (பிராரப்தம்) மந்தப் பிராரப்த மெனப்படுகின்றது. ஏனெனின், அதிகப் பிரவிருத்தி ஏகாக்கிரத் தன்மைக்கு விரோதியாயிருக்கின்றது. ஏகாக்கிரத் தன்மை யின்றி நிருபாதிகாநந்தம் பிரதீதியாகின்ற தில்லை. இது சமாதி நிரூபணத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

477. ஞானியின் வியவகாரத்திற்கு நியம மின்மை.

“ஞானிக்குச் சகல அநாத்ம பதார்த்தங்களிலும் மித்தியா புத்தி யுண்டாகின்றது; ராக முண்டாகின்ற தில்லை. ஆதலால், பிரவிருத்தி சம்பவியாது” என்று முன் கூறப்பட்டது. அச்சங்கை யும் பொருந்தாது. ஏனெனின், எங்ஙனம், தேகத்தில் மித்தியா புத்தியும் ஞானிக்கு உண்டாகின்றதா மாயினும், தேகத்திற்கு அநு கூலமான பிக்ஷாதிகளில் கேவலம் பிராரப்தத்தினால் பிரவிருத்தி யுண்டாகின்றதோ, அங்ஙனமே, எந்த ஞானிக்கு அதிக போகத் தின் பொருட்டுப் பிராரப்த மிருக்கின்றதோ அந்த ஞானிக்கு அதி கப் பிரவிருத்தியு முண்டாகின்றது.

எங்ஙனம் வித்தையாடியின் வேடிக்கையை மித்தை யென் றறிந்து (அதைப் பார்க்க) எல்லா ஜநங்களும் பிரவிருத்திக்கின் றார்களோ, அங்ஙனமே ஸர்வ பதார்த்தங்களிலும் ஞானிக்கு மித் தியா புத்தி யிருக்கினும், பிரவிருத்தி யுண்டாகின்றது.

478. “எவனுக்கு எந்தப் பதார்த்தத்தில் தோஷ திருஷ்டி யிருக்கின்றதோ அவனுக்கு அந்தப் பதார்த்தத்தில் பிரவிருத்தி யுண்டாகின்ற தில்லை. ஞானிக்கு அநாத்ம பதார்த்தத்தில் தோஷ திருஷ்டி யிருக்கின்றது; ராக மில்லை. ஆதலால், பிரவிருத்தி பொருந்துகின்ற தில்லை என்று கூறின்,

அதுவும் பொருந்தாது. ஏனெனின், எந்த அபத்தியஞ் செய் வதால் ரோகியால் அந்வய வியதிரேகங்களால் தோஷ மிருப்பதாக நிச்சயிக்கப்பட்டிருக்கின்றதோ, அந்த அபத்தியஞ் செய்வதில் பிராரப்தத்தால் எங்ஙனம் ரோகிக்குப் பிரவிருத்தி யுண்டாகின் றதோ, அங்ஙனமே ஞானிக்குத் தோஷ திருஷ்டி யிருப்பினும் பிரா ரப்தத்தினால் சர்வ வியவகாரங்களிலும் பிரவிருத்தித்தல் பொரு ந்துகின்றது. இவ்வாற்றால், ஞானியின் வியவகாரத்திற்கு நியம மில்லை.

இந்தப் பக்ஷம் வித்தியாரண்ய ஸ்வாமிகளால் விஸ்தாரமாய்த் திருப்தி தீபிகையில் பிரதிபாதநஞ் செய்யப்பட்டிருக்கின் றது. ஆதலால், தத்துவ திருஷ்டியின் வியவகாரம் நியம மின்றி யிருக்கின்றது. சமாதி ரூப நியம விதியைக் கேட்டுத் தத்துவ திருஷ்டி சிரிக்கின்றான்.

## 479. தத்துவ திருஷ்டியின் தேசாதி அபேக்ஷை யில்லாத தேக வீழ்ச்சி.

இவ்வாறு சிறிதுகாலஞ் சஞ்சாரஞ் செய்து நல்ல ஞான மடைந்த தத்துவ திருஷ்டி தனது பிராரப்த போகங்களை யநுபவித்தான். பின்னர் அவன் பிராணன் அவ்விடத்திலேயே லீநமாய்விட்டது.

பிராரப்த போகத்தின் பின்னர் ஞானியின் பிராணன் கமநஞ் செய்வதில்லை; ஆதலினால், தத்துவ திருஷ்டியின் பிராணன் லீநமாய்விட்டதென்று கூறப்பட்டது.

ஞானிக்குச் சரீரத்தை விடுவதில் கால விசேஷங்களின் அபேக்ஷை யில்லை. உத்தராயணத்திலாவது தக்ஷிணாயநத்திலாவது சரீரத்தை விடுதல் கூடும்; எவ்விதத்தினாலும் அவன் முக்தனே.

அங்ஙனமே, தேச விசேஷத்தின் அபேக்ஷையு மில்லை. காசி முதலிய புண்ணிய தேசங்களிலாவது, அத்தியந்தம் மலிந தேசங்களிலாவது ஞானிக்குத் தேக வீழ்ச்சி யுண்டாம். எவ்விதத்தினாலும் அவன் முக்தனே.

அங்ஙனமே, ஆஸந விசேஷங்களின் அபேக்ஷையு மில்லை. பூமியில் சவாசநத்தி லிருந்துகொண்டாவது, சித்தாசநத்தி லிருந்துகொண்டாவது சரீரத்தை விடுதல் கூடும்.

அங்ஙனமே சாவதாநமாய்ப் பிரஹ்ம சிந்தனை செய்துகொண்டாவது. ரோகத்தினால் வியாகூலத்தை யடைந்து ஐயோ ஐயோ வென் றலறிக்கொண்டாவது தேகத்தை விடுதல் கூடும்; எவ்விதத்தினாலும் (அவன்) முக்தனே. ஏனெனின், எந்தக் காலத்தில் ஞானத்தால் அஞ்ஞானம் நிவிர்த்தியாயிற்றோ, அந்தக் காலத்திலேயே ஞானி முக்தனாய்விட்டான். ஆதலால், ஞானிக்கு விதேக மோக்ஷத்தில் தேச கால ஆஸநாதிகளின் அபேக்ஷை யில்லை.

எங்ஙனம் ஞானிக்குத் தேக வீழ்ச்சியில் தேச காலாதிகளின் அபேக்ஷை யில்லையோ, அங்ஙனமேயே ஞானத்தின் நிமித்தமான சிரவணத்திலும் தேச கால ஆஸநாதிகளின் அபேக்ஷை யில்லை.

480. உபாஸகனுக்குத் தேச காலாதிகளின் அபேக்ஷை யிருக்கின்றது. பீஷ்மாதிகள் ஞானிகளாகக் கூறப்படுகின்றார்கள். பீஷ்மர்

உத்தராயணத்தி லன்றிப் பிராணத் தியாகம் செய்ய வில்லை யாயினும், பீஷ்மர் முதலியோர் அதிகாரி புருஷர்க ளாவர். ஆதலால், உபாஸகர்களுடைய உபதேசத்தின் பொருட்டு அவர்கள் கால விசேஷத்தை யபேக்ஷித்தார்கள்.

வசிஷ்டர் பீஷ்மர் முதலியோர் அதிகாரிகளா யிருந்தமையினுனே, அவர்களுக்கு அநேக ஜன்மங்கள் உண்டாயின. ஏனெனின், அதிகாரி புருஷனுக்கு ஒரு கற்ப பரியந்தம் பிராரப்த மிருக்கின்றது. கற்பம் முடிந்தா லன்றி விதேக மோக்ஷ முண்டாகின்றதில்லை. கற்பத்திற்குள்ளேயே அவர்களுக்கு இச்சையின் வலியால் அநேக சரீரங்க ளுண்டாகின்றன. அங்ஙனமாயினும், ஆத்ம ஸ்வரூபத்தில் அவர்களுக்கு ஜநந மரணப் பிராந்தி யுண்டாகின்றதில்லை. ஆதலால், அவர்கள் ஜீவன் முக்தர்க ளாவர். இந்த அதிகாரி புருஷர்களின் வியவகார முற்றும் பிறருடைய உபதேச நிமித்தமாம்; ஏனைய ஞாநிகளின் வியவகாரத்தில் ஒரு நியமமு மில்லை. இந்த அபிப்பிராயத்தால் தத்துவ திருஷ்டியின் தேக வீழ்ச்சிக்குத் தேச கால ஆசநாதிகள் ஒன்றும் கூறப்பட வில்லை.

### 481. அதிருஷ்டியின் தேசாதி அபேக்ஷையோடு கூடிய தேக வீழ்ச்சி.

இரண்டாவது சிஷ்யனாகிய அதிருஷ்டியானவன் அந்தக் கங்கைக் கரையைச் சுப ஸ்தாநமாகக் கொண்டு ஏகாந்தமும், அதி பவித்திரமுமான இடத்தில் பிரஹ்மத் தியாநஞ் செய்து சாஸ்திரப்படி தேகத்தை விட்டு முற் கூறிய மார்க்கமாய்ச் சென்று பிரஹ்மத்தை யடைந்து அதிக ஆநந்தத்தை யடைந்தான்.

எங்ஙனம் ஞாநிக்குத் தேச காலங்களின் அபேக்ஷை யில்லையோ அங்ஙனமே உபாஸகனுக்கு அதற்கு எதிர்மறையாக (தேச காலங்களின் அபேக்ஷை யுண் டென்று) அறிக.

உத்தமமான தேசங்களிலும், உத்தமமான உத்தராயணாதி காலங்களிலும் உபாஸகன் சரீரத்தை விடின் அப்போது உபாஸனையின் பல னுண்டாகின்றது.

ஞாநிக்கு மரண சமயத்தில் சாவதாநத்தன்மையால் ஞேயத்தின் ஸ்மிருதி யிருக்கவேண்டு மென்னும் அபேக்ஷை யில்லை. உபாஸகனுக்கு மரண சமயத்தில் தியேயத்தினது ஸ்வரூபத்தின் ஸ்மிருதி யிருத்தல் வேண்டு மென்னும் அபேக்ஷை யிருக்கின்றது.

எந்தத் தியேயத்தை முன்னர்த் தியாநஞ் செய்திருக்கின்ருனே அந்தத் தியேயத்தின் ஸ்மிருதி மாண சமயத்தி லுண்டானுல் அப்போது உபாஸனையின் பல னுண்டாகின்றது.

எங்ஙனம் தியேயத்தின் ஸ்மிருதி வேண்டுமோ அங்ஙனமே, தியேயப் பிரஹ்மத்தை யடைய 5-வது தரங்கத்திற் கூறிய மார்க்கத்தின் ஸ்மிருதியும் வேண்டும். ஏனெனின், மார்க்க சிந்தனையும் உபாஸனைக்கு அங்கமாம்.

ஞாநத்தின் பொருட்டுச் செய்யும் சிரவணத்தில் தேச கால ஆஸநங்களின் அபேக்ஷையில்லை. தியாநத்தில் உத்தமமான தேசம், நிரந்தரமான காலம், சித்தாதி ஆஸநங்கள் முதலியன அபேக்ஷிக்கப்படுகின்றன. அதனுல், அதிருஷ்டிக்கு உத்தம தேசமான கங்கா தீரத்தி லிருப்பும், மாண சமயத்திலும் யோக சாஸ்திரக் கிரமப்படித் தேக வீழ்ச்சியும் கூறப்பட்டன.

## தர்க்க திருஷ்டியின் நிச்சயமும் பதி னெட்டுப் பிரஸ்தாநங்களும்.

### 482. சகல சாஸ்திரங்களுக்கும் பிரஹ்ம ஞாநத்தின் காரணத் தன்மை.

மூன்ருவது சிஷ்யனுகிய தர்க்க திருஷ்டி குரு முகமாக வுபதேசம் பெற்று, கேட்ட அர்த்தத்தில் பிற சாஸ்திரங்களின் விரோதத்தைத் தள்ளுவதற்காகச் சர்வ சாஸ்திரங்களின் அபிப்பிராயத்தையும் விசாரணை செய்து இவ்வாறு நிச்சயஞ் செய்தான்:—

சர்வ சாஸ்திரங்களின் பரமப் பிரயோஜநம் மோக்ஷமாம். மோக்ஷத்திற்குச் சாதநம் ஞாநமாம். அந்த ஞாநம் அத்வய நிச்சய ரூபமாம். பேத நிச்சயம் யதார்த்த ஞாந மன்ரும். எல்லாச் சாஸ்திரங்களும் சாக்ஷாத்தாகவாவது, பரம்பரையாகவாவது பிரஹ்ம ஞாநத்திற்கு ஹேதுக்களாம்.

ஸம்ஸ்கிருத வைகரி வாக்கின் பதினெட்டுப் பிரஸ்தாநங்களிருக்கின்றன. அவற்றுள், சில கர்மத்தைப் பிரதிபாதநஞ் செய்கின்றன. சில விஷய சுகத்தின் உபாயங்களைக் கூறுகின்றன. சில பிரஹ்மத்திற்குப் பிந்நமான தேவதைகளி னுபாஸனையைப் போதிக்கின்றன.

அங்ஙனமே ஞானத்தின் பொருட்டுள்ள நியாய சாங்கியாதி சாஸ்திரங்களும் பேத ஞானத்தையே யதார்த்த ஞானமென்று கூறுகின்றன.

ஆதலால், எல்லாவற்றிற்கும் அத்வைதப் பிரஹ்மத்தைப் போதிக்குந் தன்மை பொருந்தாதா மாயினும், சகல சாஸ்திரங்களின் கர்த்தாக்களும் சர்வஞ்ஞர்களாயும் கிருபாநிதிகளாயு மிருக்கின்றார்கள். ஆதலால், அவர்களாற் செய்யப்பட்ட மூல சூத்திரங்களின் அர்த்தம் வேதாநுசாரமாகவே யிருக்கின்றது. ஆனால், அவற்றின் வியாக்கியான கர்த்தாக்கள் பிராந்தர்களா யிருந்தார்கள்; மூல சூத்திரகாரருடைய அபிப்பிராயங்களுக்கு விலக்ஷணமாய் அர்த்தஞ் செய்தார்கள். அச்சூத்திரங்கட்கு வேதத்திற்கு விருத்தமான அர்த்த மின்று. ஆனால், சகல சாஸ்திரங்களின் அர்த்தமும் வேதாநுசாரமாகவே யிருக்கின்றது. இதைத் தர்க்க திருஷ்டி உத்தம சம்ஸ்காரத்தால் நிச்சயஞ் செய்தான்-

### 483. வித்தையின் பதினெட்டுப் பிரஸ்தாநங்கள்.

வித்தையின் 18 பிரஸ்தாநங்கள் இவையாம்:—வேதங்கள் 4, உபவேதங்கள் 4, வேதாங்கங்கள் 6, புராணம், நியாயம், மீமாம்சை, தர்ம சாஸ்திரம் என்றிவ்வாறு வைகரி வாக்கு ரூப வித்தையின் 18 பேதங்களாம். அவற்றைப் பிரஸ்தாநங்களென்பர்.

### 484. நான்கு வேதங்களுக்கும் பிரஹ்ம ஞானத்தில் தாற்பரியமாம்.

இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்று வேதங்கள் நான்காம். அவற்றுள், சில வசநங்கள் ஞேயப் பிரஹ்மத்தினைப் போதிக்கின்றன. சில தியேயத்தினைப் போதிக்கின்றன. எஞ்சியவை கர்மத்தினைப் போதிக்கின்றன. கர்மத்தைப் போதிக்கும் வேத வசநத்திற்கும் அந்தக்கரண சுத்தி வாயிலாக ஞானமே பிரயோஜநமாம்.

பிரவிருத்தியில் எந்த வேத வசநத்திற்கும் அபிப்பிராயமில்லை. ஆனால், நிஷித்த மாகிய ஸ்வாபாவிகப் பிரவிருத்தியினின்றும் நிவிர்த்திப்பதில் அபிப்பிராயமாம். ஆதலால், அபிசாராதி கர்மத்தைப் பிரதிபாதிக்கின்ற அதர்வண வேதத்திற்கும் நிவிருத்தியில் தாற்பரியமாம். துவேஷத்தினால் சத்துருவைக் கொல்வதில்

ஒருவன் பிரவிருத்திப்பானாயின், அவனை விஷம் கொடுத்தலி னால், அல்லது சுடுவதனால் கொல்லாம லிருப்பதற்காக அபிசார கர்மங்களாகிய சியேந யாகாதிகள் கூறப்பட்டிருக்கின்றன. சத் துருவைக் கொல்லும் பொருட்டான கர்மம் அபிசார மெனப்படும். இத்தன்மையது சியேந மென்னும் யஞ்ஞமாம்.

சியேந யாகத்தைப் போதிக்கின்ற வேத வசநத்திற்குச் சத் துருவைக் கொல்ல இச்சிக்கின்றவன் சியேந யாகத்தில் பிரவிருத் திக்க என்பது அர்த்த மன்று. ஆனால், சத்துருவைக் கொல்ல இச் சிக்கின்றவன் சியேந யாகத்திற்கு வேறான விஷங் கொடுத்தல் முத லிய சத்துருவைக் கொல்லும் உபாயங்களில் பிரவிர்த்தித்தல் கூடா தென்பதாம். இவ்விதமாகத் துவேஷத்தாற் கிடைத்த விஷங் கொடுத்தல் முதலியவற்றினின்றும் நிவிருத்திப்பதில் சியேந யாகத் தை அறிவிக்கும் வசநத்திற்கு அபிப்பிராயமாம்; பிரவிருத்தியி வில்லை. ஏனெனின், பிரவிருத்தி துவேஷத்தாற் பிராப்தமாம். எது அந்நியத்தாற் பிராப்தமாகின்றதோ, அது வாக்கியத்திற்கு அபிப் பிராயமாகாது.

இவ்வாறு அதர்வண வேதம் முழுவதற்கும் நிவிருத்தியில் தாற்பரியமாம். ஏனைய மூன்று வேதங்களில் கர்மத்தைப் போதிக் கும் வாக்கியங்கட்கு அந்தக்கரண சுத்தி வாயிலாக ஞானத்தி லுப யோக முண் டென்பது ஸ்பஷ்டமாம்.

### 485. நான்கு உபவேதங்களுக்கும் பிரஹ்ம ஞானத்தில் தாற்பரிய மெனல்

நான்கு உப வேதங்கள்:—ஆயுள் வேதம், தநுர் வேதம், காந்த ர்வ வேதம், அர்த்த வேதம் என்று உப வேதங்கள் நான்காம். அவற்றுள்,

ஆயுள் வேதத்தின் கர்த்தாக்கள் பிரஹ்மா, பிரஜா பதி, அசு விநி குமாரர்கள், தந்வந்திரி முதலியவர்க ளாவர். சரகம் வாக் பட்டம் முதலிய சிகிச்சா சாஸ்திரங்களும், வாத்ஸ்யாயந ராற் செய்யப்பட்ட காம சாஸ்திரமும் ஆயுள் வேதத்தில் அடங் கியனவாம். ஏனெனின், காம சாஸ்திரத்திற்கு விஷயமான வித்தை யாதியின் ஸ்தம்பநாதிகளும் சரகர் முதலியோரால் கூறப்பட் டிருக்கின்றன. அந்த ஆயுள் வேதத்திற்கு வைராக்கியத்திலேயே அபிப்பிராயமாம். ஏனெனின், ஆயுள் வேதத்தின்படி ரோகாதிகள்

நிவிருத்தியாயினும், மீண்டும் ரோகாதிக ளுண்டாகின்றன. ஆதலால், இலௌகிக வுபாயங்க ளெல்லாம் துச்சமா யிருக்கின் றன. இவ் வர்த்தத்தில் ஆயுள் வேதத்திற்கு அபிப்பிராயமாம். ஔஷத தாநம் முதலியவற்றால் புண்ணிய முண்டாக அந்தக் கரண சுத்தி வாயிலாகவும் ஞாநத்தில் ஆயுள் வேத முபயோக மாகின்றது.

விசுவாமித்திராற் செய்யப்பட்ட தநுர் வேதத்தில் ஆயுத நிரூபணஞ் செய்யப்பட்டிருக்கின்றது:—முக்தம், அமுக்தம், முக்தாமுக்தம், யந்திர முக்தம் என ஆயுதங்கள் நான்கு வகை யாம்.

சக்கராதிகள் கையால் விடப்படுவதால் முக்த மெனப்படுகின் றன. வாள் முதலியன அமுக்த மெனப்படுகின்றன. ஈட்டி முத லியன முக்தாமுக்த மெனப்படுகின்றன. அம்பு குண்டு முதலி யன யந்திர முக்த மெனப்படுகின்றன. இவ்வாறு நான்கு பிரகார மாக ஆயுதங்க ளிருக்கின்றன. அவற்றுள், முக்தத்தை அஸ்திர மென்பர்; அமுக்தத்தைச் சஸ்திர மென்பர்.

இந்த நான்குவித ஆயுதங்களுக்கும் பிரஹ்மா, விஷ்ணு, பசு பதி, பிரஜாபதி, அக்கிநி, வருணன் முதலிய தேவதைகளும் மந் திரங்களும் கூறப்பட்டிருக்கின்றன. க்ஷத்திரிய குமாரர்களும் அவர்களை யநுசரித்த பிராஹ்மணாதிகளும் அதிகாரிக ளென்று கூறப்படுகின்றார்கள். அவர்கள் பதாதிகள், ரதாரூடர்கள், அசுவா ரூடர்கள், கஜாரூடர்க ளென நான்கு பேதமாகக் கூறப்படுகின் றார்கள். மற்றும் யுத்தத்தில் சகுந மங்கலங்களும் கூறப்பட் டிருக்கின்றன.

இவ்வளவு அர்த்தமும் தநுர் வேதத்தின் முதற் பாதத்திற் கூறப்பட்டிருக்கின்றது. ஆசாரியருடைய லக்ஷணமும் அவரிட த்திலிருந்து சாஸ்திரத்தைக் கிரகிக்கின்ற முறைமையும் இரண்டாம் பாதத்திற் கூறப்பட்டிருக்கின்றன. குரு சம்பிரதாயத்தால் அடையப் பெற்ற சஸ்திரத்தின் அப்பியாசமும், மந்திர சித்தி தேவ தா சித்திகளின் பிரகாரங்களும் மூன்றாம் பாதத்திற் கூறப்பட் டிருக்கின்றன. சித்தியான மந்திரத்தின் பிரயோகம் நான்காம் பாதத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

இவ்வளவு விஷயங்கள் தநுர்வேதத்தில் இருக்கின்றன. இந்தத் தநுர்வேதம் பிரஹ்மா பிரஜாபதி முதலியோர்களினின்றும் விசுவாமித்திரருக்குக் கிடைத்தது. அவர் இதைப் பிரகடநஞ் செய்தார்; விசுவாமித்திர ரிடத்தினின்றும் தநுர் வேத முண்டாகவில்லை. துஷ்டர்கள் திருடர்கள் முதலியவர்களினின்றும் ஜநங்களை யிரக்ஷிக்கும் க்ஷத்திரியர்களின் தர்மத்தைத் தநுர் வேதம் போதிக்கின்றது. ஆகையால், அதற்கும் அந்தக்கரண சுத்தியால் ஞாந வாயிலாக மோட்சத்திலேயே அபிப்பிராயமாம்.

காந்தர்வ வேதம் பரதராற் பிரகடநஞ் செய்யப்பட்டிருக்கின்றது. அதில் ஸ்வர தாள மூர்ச்சநா சகித கீதம், நடநம், வாத்தியம் என்பன விஸ்தாரமாய் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. தேவதைகளின் ஆராதனையும், நிர்விகற்ப சமாதி சித்தியும் காந்தர்வ வேதத்தின் பிரயோஜநமாகக் கூறப்பட்டிருக்கின்றன. ஆதலால், அதற்கும் அந்தக்கரணத்தின் ஏகாக்கிரத் தன்மையால் ஞாந வாயிலாக மோட்சமே பிரயோஜநமாம்.

அர்த்த வேதமும் அநேக விதமாம்:—நீதி சாஸ்திரம், அசுவ சாஸ்திரம், சிற்ப சாஸ்திரம், பாக சாஸ்திர முதலிய தநப் பிராப்தியின் உபாயங்களைப் போதிக்கும் சாஸ்திரங்கள் அர்த்த வேதமெனப்படும். தநப் பிராப்தியின் சகல வுபாயங்களிலும் நிபுணனாயிருக்கும் புருஷனுக்கும் பாக்கிய மின்றித் தநங் கிடைக்கின்றதில்லை. ஆதலால், அர்த்த வேதத்திற்கும் வைராக்கியத்திலேயே தாத்பர்யமாம்.

### 486. நான்கு வேதங்களின் ஆறங்கங்களினது அர்த்தத்தோடு கூடிய பிரயோஜநம்.

நான்கு வேதங்களுக்கும் ஆறங்கங்க ளுள:—சிட்சை, கற்பம், வியாகரணம், நிருக்தம், ஜோதிஷம், பிங்களம் என்னும் இவ்வாறும் வேதத்திற் குபயோகமா யிருப்பதால் வேதத்தின் அங்கங்க ளெனப்படுகின்றன. அவற்றுள்,

சிக்ஷையைச் செய்தவர் பாணிநி. வேதத்தின் சப்தங்களில் அக்ஷரங்களினது ஸ்தாநங்களின் ஞாநமும் உதாத்த அநுதாத்த ஸ்வரித (ஸ்வர)ங்களின் ஞாநமும் சிக்ஷயா லுண்டாகின்றன. வேதத்தின் வியாக்கியாந ரூப அநேகப் பிரதிசாகை யென்னுங்

கிரந்தங்க ளுள. அவையும் சிலசூத் குட்பட்டனவா யிருக்கின்றன.

அங்ஙனமே, கற்ப சூத்திரங்களினின்றும் வேதத்தில் போதிக்கப்படுகின்ற கர்மங்களை யனுஷ்டிக்கும் முறை அறியப்படுகின்றது. யஞ்ஞத்தைச் செய்து வைக்கும் பிராமணன் ரித்விக் கென்று கூறப்படுகின்றான். அவர்களது வேறு வேறாகச் செய்ய யோக்யமான கர்மங்களின் கிரமங்களை யறிவிப்பன கற்ப சூத்திரங்களாம். இந்தக் கற்ப சூத்திரத்தைச் செய்தவர் காத்தியாயநர், ஆசுவலாயநர் முதலிய முநிக ளாவர். கற்ப சூத்திரமும் வேதத்திற் குபயோகியா யிருத்தலால் வேதத்தின் அங்கமாம்.

அங்ஙனமே, வியாகரணத்தால் வேதத்தினது சப்த (பத)ங்களின் சுத்தத் தன்மையின் ஞாந முண்டாகின்றது. அந்த வியாகரண சூத்திர ரூப எட்டு அத்தியாயங்கள் பாணிநி முநிவராற் செய்யப்பட் டிருக்கின்றன. காத்தியாயநரும், பதஞ்சலியும் அச் சூத்திரங்களுக்கு வியாக்யாந ரூபமாக வார்த்திகமும், பாஷ்யமுஞ் செய்திருக்கின்றார்கள். வேறு வியாகரணங்களில் வேதத்தினது சப்தங்கள் விசாரிக்கப்பட வில்லை. ஆதலால், புராணாதிகளில் (அவை) உபயோக முள்ளனவாம்; ஆனால் வேதத்திற் குபயோக மானவையன்று. பாணிநியாற் செய்யப்பட்ட வியாகரணம் வேதங்களின் சப்தங்களினது சித்தியையும் செய்கின்றது. ஆதலால், வேதத்தின் அங்கமாம்.

அங்ஙனமே, யாஸ்கர் என்னும் முநி 13 அத்தியாய வடிவ நிருக்தத்தைச் செய்திருக்கின்றார். அதில் வேத மந்திரங்களில் பிரசித்த மில்லாத பதங்களின் அர்த்தங்களைப் போதிக்கும் பொருட்டுப் பெயர்கள் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. ஆதலால், வைதிக அப்பிரசித்த பதங்களின் அர்த்த ஞாநத்தி லுபயோகியா யிருத்தலின் நிருக்தமும் வேதத்தின் அங்கமாம். ஸம்ஞையை (பெயரை)ப் போதிக்கின்ற ஐந்து அத்தியாய ரூபமான நிகண்டு என்னுங் கிரந்தத்தை யாஸ்கர் செய்திருக்கின்றார். அதுவும் நிருக்தத்திற்கு அந்தர்ப் பூதமா யிருக்கின்றது. அமரசிம்ஹன், ஹேமாத்ரி முதலியோராற் செய்யப்பட்ட பெயர்களைப் போதிக்கும் நிகண்டுகள் யாவும் நிருக்தத்தில் அடங்கியனவாம்.

அங்ஙனமே, ஆதித்தியர் கர்க்கர் முதலியவர்களாற் செய்யப்பட்ட சோதிஷமும் வேதத்தின் அங்கமா யிருக்கின்றது. எனெனின், வைதிக கர்மத்தின் ஆரம்பத்தில் காலத்தின் ஞானம் வேண்டும். அந்தக் காலத்தின் ஞானம் ஜோதிஷத்தா லுண்டாகின்றது; ஆகையால், வேதத்தின் அங்கமாம்.

பிங்கள முனிவரால் எட்டு அத்தியாயங்கள் அடங்கிய சூத்திரத்தால் சந்தஸ் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. அவற்றால் வேதத்திற் கூறிய காயத்திரி முதலிய சந்தசுகளின் ஞான முண்டாகின்றது. ஆகையால், பிங்களர் செய்த சூத்திரமும் வேதத்தின் அங்கமாம்.

இவ் வாறும் வேதத்தின் அங்கங்களாம். அவற்றுள், வேதத்தில் உபயோக மின்றிய அர்த்தங்களும் பிரசங்கத்தால் நிரூபிக்கப்பட்டன; பிரதானத்தன்மையால் நிரூபிக்கப்பட வில்லை. ஆதலால், வேதத்தின் பிரயோஜநமே இவ் வாறங்கங்களின் பிரயோஜநமாம்; வே றன்று.

487. பதினேண் புராண உப புராணங்களின் அர்த்தம்.

புராணங்கள் பதி னெட்டாம்:—அவை வியாஸ ரென்னும் முனிவராற் செய்யப்பட்டன. அவை பிரஹ்மம், பத்மம், வைஷ்ணவம், சைவம், பாகவதம், நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக்நேயம், பவிஷியத், பிரஹ்ம வைவர்த்தம், லிங்கம், வாராஹம், ஸ்கந்தம், வாமநம், கூர்மம், மாத்ஸ்யம், காருடம், பிரஹ்மாண்டம் என்பனவாம். இப் பதி னெண் புராணங்களும் வியாஸராற் செய்யப்பட்டன. அங்ஙனமே, காளி புராண முதலிய வேறு அநேக புராணங்க ளிருக்கின்றன. அவை உப புராணங்களாம். சிலர் உப புராணங்களும் 18 எனக் கூறுகின்றனர். அது நியம மன்று. உப புராணங்கள் அநேக மிருக்கின்றன. பாகவதம் இரண் டிருக்கின்றது; ஒன்று வைஷ்ணவ பாகவதமாம்; மற்றொன்று பகவதீ பாகவதமாம்; ஒவ் வொன்றிலும் பதி னெண் ணாயிரங் கிரந்தங்க ளுள; ஒவ் வொன்றிலும் 12 ஸ்கந்தங்க ளுள; ஆனால், அவற்றுள், ஒன்று புராணமாம், மற்றொன்று உபபுராணமாம். இவ்விரண்டும் வியாஸராற் செய்யப்பட்டனவாம். ஆதலால், இரண்டும் பிரமாணங்களாம். எங்ஙனம் வியாஸர் புராணங்களைச் செய்தனரோ, அங்ஙனமே சில உப புராணங்களையும் செய்திருக்கின்றார். சில உப புராணங்கள் பராசரர் முதலிய வேறு சர்வஞ்ஞ முனிகளாற் செய்யப்பட் டிருக்கின்றன. ஆகையால் உப புராணங்களும் பிரமாணங்களாம்.

உபநிஷத்தின் பொருளே புராண உப புராணங்களின் பொருளாம். இவ்வார்த்தை மேற் பிரதிபாதிக்கப்படும்.

### 488. நியாய வைசேஷிக சூத்திரங்களின் பலன்.

கௌதம முனிவரால் நியாய சூத்திரம் ஐந்து அத்தியாய ரூபமாகச் செய்யப்பட்டிருக்கின்றது. அதில் யுக்தி பிரதானமாம். யுக்தி சிந்தநத்தால் புருஷனுக்குத் தீவிர புத்தி யுண்டாகின்றது; அப்பொழுது மநநம் பண்ணுவதிற் சமர்த்த னாகின்றான். ஆகையால், யுக்திப் பிரதாநமான நியாய சூத்திரத்திற்கும் மநந வாயிலாக வேதாந்த ஜந்நிய ஞாநமே பலனாம்.

கணாத ரென்னும் முனிவர் பத்து அத்தியாய ரூபமான வைசேஷிக சூத்திரங்களைச் செய்திருக்கின்றார். அவையும் நியாயத்தில் அந்தர்ப்பூதமாம்.

### 489. தர்ம மீமாம்ஸை பிரஹ்ம மீமாம்ஸை என்னும் இரண்டு மீமாம்சைகளுக்கும் ஸங்கர்ஷண காண்டத்திற்கும் பலன்.

மீமாம்சை இருவகையாம்:—ஒன்று தர்ம மீமாம்சை, மற்றொன்று பிரஹ்ம மீமாம்சையாம். தர்ம மீமாம்சையினைப் பூர்வ மீமாம்சை யென்பர். பிரஹ்ம மீமாம்சையினை உத்தர மீமாம்சை யென்பர்.

தர்ம மீமாம்சை 12 அத்தியாயமாம். அதற்கு ஜைமினி என்னும் முனிவர் கர்த்தாவாவர். கர்மத்தை யனுஷ்டிக்கும் விதி இதிற் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால், விதியுடன் கர்மத்திற் பிரவிர்த்தித்தல் தர்ம மீமாம்சையின் பலனாம். கர்மத்திற் பிரவிர்த்திக்கின்றமையின், அந்தக்கரண சுத்தியும், அதினின்று ஞாநமும், ஞாநத்தால் மோக்ஷமு முண்டாகின்றன. இவ்விதமாகத் தர்ம மீமாம்சைக்கு மோக்ஷமே பலனாகின்றது. தர்ம மீமாம்சையின் 12 அத்தியாயங்களில் பரஸ்பர அர்த்த பேத மிருக்கின்றது. அது கடினமா யிருப்பதால் இவ்விடத்தில் எழுதப்பட வில்லை. ஜைமினியால் ஐந்து அத்தியாய ரூபமாகச் சங்கர்ஷண காண்டம் செய்யப்பட்டிருக்கின்றது. அதில் உபாஸனை கூறப்பட்டிருக்கின்றது. அந்தச் சங்கர்ஷண காண்டமும் தர்ம மீமாம்சையில் அந்தர்ப்பூதமா யிருக்கின்றது.

பிரஹ்ம மீமாம்சை நான்கு அத்தியாயமாக விருக்கின்றது. அதன் கர்த்தா வியாஸராவர். ஒவ்வொரு அத்தியாயத்திலும் நான்கு நான்கு பாதங்க ளிருக்கின்றன.

ஆண்டு முதல் அத்தியாயத்தில் இவ்வர்த்த முளது:—எல்லா உபநிஷத் வாக்கியங்களும் பிரஹ்மத்தைப் பிரதிபாதநஞ் செய்கின்றன; அந்நியவற்றைப் பிரதிபாதநஞ் செய்வ தில்லை.

உபநிஷத் வாக்கியங்களில் மந்த புத்தியுள்ள புருஷர்களுக்குப் பரஸ்பர விரோதங்கள் தோன்றுகின்றன. அவற்றின் பரிகாரம் இரண்டாவது அத்தியாயத்திற் கூறப்பட்டிருக்கின்றது.

மூன்றாவது அத்தியாயத்தில் ஞாந உபாஸநைகளின் சாதந விசாரம் கூறப்பட்டிருக்கின்றது.

நான்காவது அத்தியாயத்தில் ஞாந உபாஸநைகளின் பலன் கூறப்பட்டிருக்கின்றது.

இந்தப் பிரஹ்ம மீமாம்ஸாரூப சாரீரக சாஸ்திரமே சர்வ சாஸ்திரங்களிலும் பிரதாநமாம். முமுக்ஷுவிற்கு இதுவே கொள்ளத் தக்கதாம். இதற்கு வியாக்கியாநரூப கிரந்தங்கள் அநேக மிருப்பினும், ஜகத்குரு ஸ்ரீ சங்கர பகவத் பாதாசார்ய சுவாமிகளாற் செய்யப்பட்ட பாஷியரூப வியாக்கியாநமே முமுக்ஷுக்களாற் கேட்கத்தக்கதாம். அதற்கு ஞாந வாயிலாக மோக்ஷ பலன் விளக்கமாகவே யிருக்கின்றது.

### 490. ஸ்மிருதி முதலிய நூல்களின் கர்த்தாக்களும் பிரயோஜநமும்.

மநு, யாஞ்ஞவல்கியர், விஷ்ணு, யமன், அங்கிரா, வசிஷ்டர், தக்ஷர், ஸம்வர்த்தர், சாதாதபர், பராசரர், கௌதமர், சங்கர், லிகிதர், ஹாரீதர், ஆபஸ்தம்பர், சுக்கிரர், பிரஹஸ்பதி, வியாஸர், காத்தியாயநர், தேவலர், நாரதர் முதலிய ஸர்வஞ்ஞர்களால் வேதாநுசாரமாக ஸ்மிருதிக ளென்னும் கிரந்தங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. அவை தர்ம சாஸ்திர மெனப்படும். அவற்றில் வர்ணாசிரமங்களின் காயிக வாசிக மாநசிக தர்மங்கள் கூறப்பட்டிருக்கின்றன. அவற்றிற்கும் அந்தக்காண சுத்தி வாயிலாக ஞாந முண்டாய் மோக்ஷ சித்தியே பிரயோஜநமா யிருக்கின்றது. அங்ஙனமே, வியாஸரால் மகாபாரதமும், வால்மீகரால் ராமாயணமும் செய்யப்

பட்டிருக்கின்றன. அவற்றிற்கும் தர்ம சாஸ்திரத்தில் அந்தர்ப் பாவ முண்டா யிருக்கின்றது.

தேவதைகளை ஆராதிக்கும் பொருட்டுள்ள மந்திர சாஸ்திர மும் தர்ம சாஸ்திரத்தில் அந்தர்ப்பூதமா யிருக்கின்றது. தேவதை களின் ஆராதனைக்கு அந்தக்கரண சுத்தி பிரயோஜநமாம்.

அங்ஙனமே, சாங்கிய சாஸ்திரம், யோக சாஸ்திரம், வைஷ் ணவ தந்திரம், சைவ தந்திரம் முதலியனவும் தர்ம சாஸ்திரத்தில் அந்தர்ப்பூதமா யிருக்கின்றன. ஏனெனின், இவற்றிலும் மாநஸ தர்மத்தின் நிரூபண மிருக்கின்றது.

### 491. சாங்கிய சாஸ்திரத்தின் பலன்.

கபிலர் சாங்கிய சாஸ்திரத்தை ஆறு அத்தியாய வடிவமாகச் செய்திருக்கின்றார். அதன் முதல் அத்தியாயத்தில் விஷயம் நிரூபிக் கப்பட்டிருக்கின்றது. இரண்டாவது அத்தியாயத்தில் மகத்தத்து வம் அகங்காரம் முதலிய பிரதாநத்தின் காரியங்கள் கூறப்பட் டிருக்கின்றன. மூன்றாவது அத்தியாயத்தில் விஷயத்தினின்றும் வைராக்கிய முண்டாதல் கூறப்பட் டிருக்கின்றது. நான்காவது அத்தியாயத்தில் விரக்தர்களுடைய சரித்திரம் கூறப்பட் டிருக் கின்றது. ஐந்தாவது அத்தியாயத்தில் பரபக்ஷ கண்டநம் கூறப் பட்டிருக்கின்றது. ஆறாவது அத்தியாயத்தில் சகல அர்த்தங் களும் சுருக்கமாய்க் கூறப்பட்டிருக்கின்றன. பிரகிருதி புருஷர் களின் விவேகத்தினால் புருஷன் அஸங்கன் என்னும் ஞாநம் சாங் கிய சாஸ்திரத்தின் பிரயோஜநமாம். அந்தச் சாஸ்திரத்திற்கும் துவம் பதத்தின் லக்ஷியார்த்த சோதனை வாயிலாக மகாவாக்கிய ஜந்நிய ஞாநத்தி னுபயோக மிருத்தலால் மோக்ஷமே பலனும்.

### 492. யோக சாஸ்திரத்தின் பலனும், சாரீரகத்திற் புகன்ற தோடு விரோத மின்மையும்.

யோக சாஸ்திரம் நான்கு பாத ரூபமாம். அதன் கர்த்தா பதஞ்சலி முநிவ ராவர். அவர் சேஷாவதாரமாம். ஒரு (அத்திரி) ரிஷி சந்தியோபாஸனை செய்துகொண்டிருக்கும் போது அவ ருடைய அஞ்சலியில் வெளிப்பட்டுப் பூமியில் விழுந்தமையின், பதஞ்சலி யென்னும் பெயர் வழங்க லாயிற்று.

அவர் சரீரத்தின் ரோக ரூப மலத்தை நிவிர்த்திக்கும் பொருட்டுச் சிகிச்சை நூலைச் செய்திருக்கின்றார்; அசுத்த சட்

தங்களின் உச்சாரண ரூப வாக்கின் மலத்தைப் போக்கப் பாணிநி முனிவரின் வியாகரணத்திற்குப் பாஷியஞ் செய்திருக்கின்றார்; அங்ஙனமே, விக்ஷேப ரூப அந்தக்கரண மலத்தைப் போக்க யோக சூத்திரங்களைச் செய்திருக்கின்றார். ஆண்டு முதற் பாதத்தில் சித்த விருத்தியின் நிரோத ரூப சமாதியும் அதன் சாதநமான அப்பியாஸம் வைராக்கிய முதலியனவும் கூறப்பட்டிருக்கின்றன. அங்ஙனமே, இரண்டாவது பாதத்தில் விக்ஷேப சித்த முள்ளவர்களுக்குச் சமாதி சாதநமாகிய இயமம், நியமம், ஆஸநம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியாநம், சமாதியெனச் சமாதியின் எட்டு அங்கங்கள் கூறப்பட்டிருக்கின்றன. மூன்றாவது பாதத்தில் யோகத்தின் விபூதி (ஐசுவரியங்)கள் கூறப்பட்டிருக்கின்றன. நான்காவது பாதத்தில் யோகத்தின் பலனாகிய மோக்ஷம் கூறப்பட்டிருக்கின்றது.

இவ்வாற்றால், யோக சாஸ்திரமும் ஞாந சாதநமான நிதித்தியாஸநத்தைச் சம்பாதித்தல் வாயிலாக மோக்ஷத்திற்கு ஹேதுவாயிருக்கின்றது.

சாரீரக சூத்திரத்தில் சாங்கிய யோகங்களின் எந்தக் கண்டநஞ் செய்யப்பட்டிருக்கின்றதோ, அது உபநிஷத்திற்கு விருத்தமாக வுள்ள அவற்றின் வியாக்கியாநங்களைக் கண்டித்திருக்கின்றதே யன்றி மூல சூத்திரத்தைக் கண்டநஞ் செய்ய வில்லை.

### 493. பாஞ்சராத்திர பாசுபத தந்திரங்களின் பலன்.

அங்ஙனமே, நியாய வைசேஷிக சூத்திரங்களின் கண்டநமும் விருத்தமான வியாக்கியாநத்தின் கண்டநமாமென்றே கொள்க.

அங்ஙனமே, நாரதரால் பாஞ்சராத்திர மென்னும் தந்திரம் செய்யப்பட்டிருக்கின்றது. அதில் வாசுதேவனிடத்தில் அந்தக்கரணத்தை நிறுத்துதல் கூறப்பட்டிருக்கின்றது. அதற்கும் அந்தக்கரணத்தின் ஸ்திரத்தன்மையால் ஞாந வாயிலாக மோக்ஷமே பலனும். வைஷ்ணவ கிரந்தங்கள் யாவும் பாஞ்சராத்திரத்தில் அடங்குகின்றன. அந்தப் பாஞ்சராத்திரம் தர்ம சாஸ்திரத்தில் அடங்குகின்றது.

அங்ஙனமே, பாசுபத தந்திரத்தில் பசுபதியின் ஆராதநங் கூறப்பட்டிருக்கின்றது. அதன் கர்த்தா பசுபதியாம். அதற்கும்

அந்தக்காணத்தின் நிச்சலத் தன்மை வாயிலாக மோக்ஷ சாதநமான ஞாநம் பலனும்.

494. சைவநூல் முதலியவற்றின் பலனும் வாம மார்க்கமும்.

சைவ நூல்களெல்லாம் பாசுபத தந்திரத்தில் அடங்கி யிருக்கின்றன.

அங்ஙனமே, கணேசன், சூரியன், தேவி என்பவர்களினுபாஸனையைப் போதிக்கும் கிரந்தங்களுக்குச் சித்த ஏகாக்கிரத்தன்மை வாயிலாக ஞாநம் பலனும். இவை யாவும் தர்ம சாஸ்திரத்தில் அடங்குகின்றன. ஆனல், தேவியின் உபாஸனையைப் போதிக்கும் கிரந்தங்களுள் இரண்டு சம்பிரதாயங்களுள. ஒன்று தக்ஷிண சம்பிரதாயம், மற்றொன்று உத்தர சம்பிரதாயமாம். உத்தர சம்பிரதாயத்தை வாம மார்க்கமென்பர். அவற்றுள், தக்ஷிண சம்பிரதாயத்தின் ரீதியினுல் எந்த நூல்களில் தேவி யுபாஸனை யிருக்கின்றதோ அவை தர்ம சாஸ்திரத்தில் அடங்குகின்றன. வாம மார்க்கம் எந்நூல்களி லிருக்கின்றதோ அந் நூல்கள் தர்ம சாஸ்திரத்திற்கு விருத்தமாம்; ஆதலால், அவை அப்பிரமாணமாம்.

வாம தந்திரம் பாமசிவனாற் செய்யப்பட்டதாயினும், சகல சாஸ்திரங்களுக்கும் வேதத்திற்கும் விரோதமா யிருக்கின்றது; ஆதலால், அது பிரமாண மன்றும்.

விஷ்ணுவாற் புத்தாவதாரத்திற் செய்யப்பட்ட நாஸ்திகக் கிரந்தம் வேதத்திற்கு விருத்தமா யிருப்பதால் அப்பிரமாணமா யிருப்பதுபோல், சிவனாற் செய்யப்பட்ட வாம தந்திரமும் வேதத்திற்கு அத்தியந்தம் விருத்தமா யிருக்கின்றது. கள் முதலிய அசுத்தமான பதார்த்தங்களைக் கிரகிக்கலாமென்று அதிற் கூறப்பட்டிருக்கின்றது. உலகத்தை வஞ்சிக்கும்பொருட்டு உத்தம பதார்த்தங்களின் பெயரை மலிந பதார்த்தங்களுக்குக் கொடுத்திருக்கின்றார்கள். கள்ளிற்குப் பெயர் தீர்த்தம். மாமிசத்திற்குப் பெயர் சுத்தம். மத்திய பாந பாத்திரத்திற்(கட்சட்டிக்)குப் பெயர் பதுமை. வெண்காயத்திற்குப் பெயர் வியாஸர். வெள்ளைப்பூண்டிற்குச் சுகதேவரென்று பெயர். கள்ளைக் கட்டும் சாணுனுக்குப் பெயர் தீக்ஷிதர். வேசிஸயச் சேவிப்பவனுக்கும், சக்கிலிச்சி முதலிய சண்டாள

ஸ்திரீகளைச் சேவிப்பவனுக்கும், பிரயாகையைச் சேவிப்பவன் காசியைச் சேவிப்பவன் என்று கூறுகின்றார்கள். பைரவி சக்கரத்தில் இருக்கின்ற சண்டாளர் முதலியோரைப் பிராஹ்மணர் என்கின்றார்கள். அத்தியந்தம் வியபிசார ஸ்திரீயை யோகினி யென்பர். வியபிசாரியை யோகி யென்பர். இவ்வாறு அநேக பிரகாரமாக வாம மார்க்கத்தின் வியவகாரம் நிஷித்தமா யிருக்கின்றது. பூஜா காலத்தில் அநேக தோஷங்களுடன் கூடிய ஸ்திரீயை உத்தம சக்தி யென்று கூறுகின்றார்கள். ஜாதியில் சண்டாளியும், அதி வியபிசாரியுமான ரஜஸ்வலா(தூர)ஸ்திரீயை தேவி புத்தியால் பூஜை செய்கின்றார்கள். அவளது உச்சிஷ்டமான (எச்சிலான) கள்ளைக் குடிக்கின்றார்கள். அதிகமான கட்குடியால் அவள் வாந்தி செய்தால் அதைப் பூமியில் விழ விடாமல் ஆசாரியர் சகிதமாய் மற்றவர்கள் சாவதாநமாகச் சாப்பிடுகின்றார்கள். இவ் வாந்தியைப் பைரவி என்கின்றார்கள். (ஸ்திரீயின் யோநி)யில் நாக்கை வைத்துக்கொண்டு மந்திரம் ஜபிக்கின்றார்கள். மத்தியம், மாமிசம், மத்ஸியம், முத்திரை, மந்திரம் என்னும் பஞ்ச மகாரங்களையும் போக மோக்ஷத்தின் பொருட்டுச் சேவிக்கின்றார்கள். முதலாவது இரண்டாவது முதலிய மகாரங்களை அப்பிரசித்தமான பெயர்களால் வியவகரிக்கின்றார்கள். இவை முதலிய வாம தந்திரத்தின் சகல வியவகாரங்களும் இவ்வுலகத்தினின்றும் பரலோகத்தினின்றும் ஒருவனைப் பிரஷ்டனாக்கி விடுகின்றன. இக்காரணத்தினாற்றான் காது குத்திக்கொண்டிருக்கின்ற யோகிகள், அவதூத கோசாயிகள், அநேக சந்நியாசிகள், பிராஹ்மணர் முதலியோர்கள் வாம மார்க்கத்தைச் சேவிக்கின்றன ராயினும், உலகத்தாலும் வேதத்தாலும் நிந்திக்கப்பட்ட தென அறிந்து, இம்மார்க்கத்தை இரகசியமாய் வைத்துக்கொண் டிருக்கின்றார்கள்.

அதிகமாகக் கூறுவ தென்னை! வாம மார்க்கத்தைக் கேட்ட மிலேச்சனுக்கும் மயிர்க்குச் சுண்டாய் விடும். இவ்வாறு நிந்திக்கப்பட்டதா யிருக்கின்றது வாம மார்க்கமாம். தாழ்ந்தவர்களும் உண்ணுதவற்றை உண்ணுதல் முதலிய எல்லா நிந்திக்கப்படு மார்க்கங்களையும் வாம தந்திரத்திற் கூறுகின்றார்கள். மிகத் தாழ்ந்த வியவகாரங்கள் எழுத யோக்ய மன்றாகலின், விசேஷக் கிரமங்களை எழுத வில்லை. வாமதந்திரம் சர்வ விதத்திலும் தள்ளத் தக்கதாம்

## 495. நாஸ்திக மதம்.

நாஸ்திக மதமும் தள்ளத்தக்கதாம். இதில் மாத்தியமிகர், யோகாசாரர், ஸௌத்திராந்திகர், வைபாஷிகர், சார்வாகர், திகம்பரர் என அறுவகைப் பேத முடையோருளர். இவ்வறுவரும் வேதத்தைப் பிரமாணமாகக் கொள்ளுகின்றதில்லை. இவர்களது சித்தாந்தமும் பரஸ்பரம் விலக்ஷணமா யிருக்கின்றது.

1. மாத்தியமிகன் சூந்யவாதி யாவன். 2. யோகாசாரனுடைய மதத்தில் சகல பதார்த்தங்களும் விஞ்ஞானத்தினும் பிந்நமன்று. விஞ்ஞானமே தத்துவமாம். அந்த விஞ்ஞானம் க்ஷணிகமாம். 3. ஸௌத்திராந்திகனது மதத்தில் விஞ்ஞானத்தினுகாரம் பாஹிய பதார்த்தமாகிய விஷய மின்றி யுண்டாகின்றதில்லை. ஆதலால், விஞ்ஞானத்தினுல் பாஹிய பதார்த்தங்களின் அநுமானமுண்டாகின்றது. இவ்வாற்றால், ஸௌத்திராந்திகனது மதத்தில் பாஹிய பதார்த்தம் அநுமானப் பிரமாணத்திற்கு விஷயமாம்; பிரத்தியக்ஷமன்று; ஸ்திரமுமன்று. ஆனுல், எல்லாப் பதார்த்தங்களும் க்ஷணிகமாம். 4. வைபாஷிகனது மதத்தில் பாஹிய பதார்த்தம் க்ஷணிகமா யிருப்பினும், பிரத்தியக்ஷப் பிரமாணத்திற்கு விஷயமாம். இதுவே ஸௌத்திராந்திக மதத்திற்கும் வைபாஷிக மதத்திற்கு முள்ள பேதமாம். இந்நான்கு மதமும் சுகத (புத்த)ருடையது. 5. சார்வாக மதத்தில் பதார்த்தம் க்ஷணிகமன்று. ஆனுல், இம் மதத்தில் தேகமே ஆத்மாவாம். 6. திகம்பர மதத்தில் தேகம் ஆத்மா வன்று. தேகத்தினும் ஆத்மா பிந்நமாம். ஆனுல், தேகத்தின் பரிமாணம் எவ்வளவோ அவ்வளவு ஆத்மாவின் பரிமாணமாம்.

இவ்வாருக, இவர்களுக்குத் தம்முள் மத பேத மிருக்கின்றது. மற்றும் இவர்கட்குத் தம்முள் விலக்ஷணத் தன்மை அநேக மிருக்கின்றன; எல்லாம் வேத விருத்தமா யிருக்கின்றன. ஆகையால், இவர்கள் நாஸ்திகராவர். இதனுற்றான் அம் மதங்களை விசேஷமாய்க் கூறவு மில்லை; கண்டிக்கவு மில்லை.

## 496. சாகித்திய முதலியவற்றின் தாற்பர்ய பூர்வகமான தர்க்கதிருஷ்டியின் சாரத்தைக் கிரகிக்கும் நிச்சயம்.

இவ்வாற்ருல், வாம மார்க்க நாஸ்திக மதக் கிரந்தங்கள் ஸம்ஸ்கிருத வாக் ரூபமா யிருப்பினும், வேதத்திற்குப் பாஹியமா யிருக்

கின்றன. ஆகையால், வேதாநுசாரியான வித்தையின் பிரஸ்தாநங்கள் பதினெட்டேயாம்.

அன்றியும், மம்மடர் முதலியவர்களாற் செய்யப்பட்ட சாகித்தியக் கிரந்தமும் காம சாஸ்திரத்தில் அடங்குகின்றது. அங்ஙனமே, சகல காவியங்களுக்கும், சிலவற்றிற்குக் காம சாஸ்திரத்திலும் சிலவற்றிற்குத் தர்ம சாஸ்திரத்திலும் அடக்க மிருக்கின்றது.

இவ்வாற்ருல், அஷ்டாதச வித்தையின் பிரஸ்தாநங்கள் எல்லாம் பிரஹ்ம ஞாந வாயிலாக மோக்ஷத்திற்கு ஹேதுக்களாம். சில சாக்ஷாத் ஞாநத்திற்கு ஹேதுக்களாயும், சில பரம்பரையாக ஞாநத்திற்கு ஹேதுக்களாயும் இருக்கின்றன வென்று தர்க்க திருஷ்டி சகல சாஸ்திரங்களின் அபிப்பிராயங்களை நிச்சயஞ் செய்தான். உத்தர மீமாம்சை யொழிந்த பிற சாஸ்திரங்களெல்லாம் ஜிஞ்ஞாசுவால் தள்ளத்தக்கன வென்று சாரீரகத்திற் சூத்திர காரராலும் பாஷிய காரராலும் பிரதி பாதிக்கப்பட்டிருக்கின்றது. ஆகையால், வேறு சாஸ்திரங்களும் மோக்ஷத்திற் குபயோக மென்று கூறுதல் பொருந்தாதா மாயினும், சாரத்தைக் கிரகிக்கும் திருஷ்டியால் தர்க்க திருஷ்டி மேற்கூறிய சாரமான நிச்சயஞ் செய்தான்.

497. தர்க்க திருஷ்டி ஒரு வித்துவானைச் சந்தித்தல்.

குரு முகமாகக் கேட்கப்பட்ட அர்த்தத்தில் புத்தி ஸ்திரப் படுவதற்காகச் சகல சாஸ்திரங்களின் அபிப்பிராயத்தையும் விசாரித்தும் (தர்க்க திருஷ்டிக்கு) மீண்டும் சாஸ்திரத்தின் அபிப்பிராயம், தான் நிச்சயித்ததோ வேருே வென்று சந்தேக முண்டாயிற்று. ஏனெனின், தர்க்க திருஷ்டி கநிஷ்டாதிகாரி யென்று கூறப்பட்டமையின், அவனுக்கு அடிக்கடி குதர்க்கத்தாற் சந்தேக முண்டாகின்றது. அதனை நிவிர்த்திக்கும் பொருட்டுத் தன்னிச்சயத்தை வேறு வித்வானுடைய நிச்சயத்தோடு ஒப்பிட்டுப் பார்ப்பதற்குப் புறப்பட்டுப் போய் ஒரு வித்வானைச் சந்தித்துத் தன் அபிப்பிராயங்களை அவனிடம் வெளியிட்டான். அப்போது அவன் தர்க்க திருஷ்டியின் வசநத்தைக் கேட்டு நீ கூறிய வெல்லாம் முக்கிய சித்தாந்த மென்று கூறினுன். இவ்வாருக, தர்க்க திருஷ்டி சகல சம்சயங்களு மற்று அபரோக்ஷமாய்ப் பிரஹ்மத்தை யறிந்து ஜகத்து பந்த மோக்ஷங்கள் யாவும் மித்தை யென்று அறிந்தான்.

498. ஞாநிக்கு இச்சை சம்பவித்தலும், இச்சையி னபாவத்தின் அபிப்பிராயமும்.

பிராரப்தம் சேஷமா யிருந்தமையின், தாய் தந்தையரையும் தன் வீட்டையும் பார்க்கவேண்டு மென்கிற இச்சை யுண்டாய் அப்பொழுதே (தர்க்க திருஷ்டி) புறப்பட்டான்.

ஞாநிக்குச் சகல வியவகாரங்களும் அஞ்ஞாநிக் குண்டாவது போல் பிராரப்தத்தா லுண்டாகின்றன வென்று முன் கூறப்பட்டது. ஆகையால், இச்சை சம்பவிக்கின்றது. ஞாநிக்கு இச்சை யுண்டாகின்ற தில்லை யென்று சில சாஸ்திரங்களில் எழுதப்பட்டிருக்கின்றது; அதற்கு ஞாநியின் அந்தக்கரணம் பதார்த்தத்தின் இச்சாரூப பரிணாமத்தை யடைகின்ற தில்லை யென்பது அபிப்பிராய மன்று; ஏனெனின், அந்தக்காணத்திற்கு இச்சைமுதலியன சகஜ தருமங்களாம்.

அந்தக்காணம் பூதங்களின் சத்துவ குண காரியமாகக் கூறப்பட் டிருப்பினும், ரஜோ குண தமோ குணசகித சத்துவ குணத்தின் காரியமாம்; கேவலம் சத்துவ குணத்தின் காரிய மன்று. கேவலம் சத்துவ குணத்தின் காரியமாயின், அந்தக்காணத்திற்குச் சலிக்கும் சுபாவ முண்டாக வேண்டுவ தில்லை. அங்ஙனமே, காமக் குரோதாதி ராஜஸ விருத்தியும் மூடத்தன்மை முதலிய தாமச விருத்தியும் எந்த அந்தக்காணத்திற்கு முண்டாக வேண்டுவ தில்லை; உண்டாவதால், அந்தக்காணம் கேவலம் சத்துவ குணத்தின் காரிய மன்று. ஆனால், அப்பிரதாநமான ரஜோ குண தமோ குண சகிதமாயும், பிரதாநமான சத்துவ குண முடையதாயு மிருக்கின்ற பூதங்களி னின்றும் அந்தக்காண முண்டா யிருக்கின்றது. ஆதலால், அந்தக்காணத்தில் முக் குணங்களு மிருக்கின்றன. அந்த முக் குணங்களும் எல்லா அந்தக்காணங் களிலும் சமமாக வில்லை; ஆனால், மிகுதி-குறைவா யிருக்கின்றன. ஆகையால், குணங்களின் மிகுதித் தன்மை, குறைவுத் தன்மை களினால் யாவர்க்கும் விலக்ஷண சுபாவம் இருக்கின்றது. இவ்வாற்றால் அந்தக்கரணம் முக் குணங்களின் காரியமா யிருக்கின்றது.

அந்தக்காண மிருக்கின்றவரையில் ரஜோ குணத்தின் பரிணாம ரூபமான இச்சையின் அபாவம் பொருந்தாது. ஆகையால், ஞாநிக்கு இச்சை யுண்டாகின்ற தில்லை யென்பதற்கு அபிப்பிராயம்

இதுவாம்:—ஞானி அஞ்ஞானி இருவர்க்கும் இச்சை சமானமாகவே யிருக்கின்றது. ஆயினும், அஞ்ஞானி இச்சையாதிகளை ஆத்மாவின் தர்மமாக அறிகின்றான். ஞானி இச்சை புண்டாகும் காலத்திலும் இச்சையை ஆத்மாவின் தர்மமாக அறிகின்ற தில்லை. ஆனால், காமம், சங்கற்பம், சந்தேகம், ராகம், துவேஷம், சிரத்தை, பயம், லஜ்ஜை, இச்சை முதலியன அந்தக்காணத்தின் பரிணாமங்களாம்; ஆதலால், அவற்றை அந்தக்காணத்தின் தர்மங்களாக அறிகின்றான்.

இவ்வாற்றால், இச்சை முதலியன வுண்டாயினும், அவை ஆத்மாவின் தர்மமாக ஞானிக்குப் பிரதீதி யாகின்ற தில்லை. ஆகையால், ஞானியினிடத்தில் இச்சையின் அபாவம் கூறப்பட்டது.

அங்ஙனமே, மநம், வாக்கு, காயங்களினாற் செய்யப்படும் வியவகாரங்க ளெல்லாம் ஞானிக்கு ஆத்மாவினிடத்திற் பிரதீதி யாகின்ற தில்லை. ஆனால், கிரியைக ளெல்லாம் மநோ வாக்குக் காயங் களி லிருக்கின்றன.

ஆத்மா அசங்க மென்பது ஞானியின் நிச்சயமாம். ஆகையால், ஞானி சகல வியவகாரங்களுக்கும் கர்த்தாவாயினும், அகர்த்தாவே யாவன். இக்காரணத்தினால் சுருதியில் "ஞானத்திற்குப் பிறகு வர்த்தமான சரீரத்திற் செய்யப்படும் சுபாசுப கர்மங்களின் பலனாகிய புண்ணிய பாவங்களின் சம்பந்தம் ஞானிக்கு உண்டாகின்ற தில்லை" என்று கூறப்பட் டிருக்கின்றது.

பிராரப்த பலத்தினால் அஞ்ஞானிக் குண்டாவதுபோல் ஞானிக்கும் சகல வியவகாரங்களும் அவற்றின் இச்சையும் சம்பவிக்கின்றன.

## 499. சுபசந்ததி ராஜாவின் சரித்திரம்.

சுபசந்ததி ராஜாவினை விட்டு மூன்று புத்திரர்களும் புறப்பட்டுப் போனார்கள். அங்குப் புத்திரர்களுடைய சரித்திரம் கூறப்பட்டது. இப்போது அவர்கள் பிதாவின் சரித்திரத்தைக் கூறுகின்றேன்:—புத்திரர்கள் வீட்டை விட்டுப் போனபோது ராஜாவிற்குத் தீவிர வைராக்கிய மில்லாமையினால் அவர்களது பிரிவால் துக்க முண்டாயிற்று ; அங்ஙனமே மந்த வைராக்கிய மிருந்தமையின், விஷய போகத்திற் சுக முண்டாக வில்லை. வெளியிற் புறப்பட்டுப் போக இச்சை யிருந்தும், புத்திரர்கள் போய்விட்டமை

யின், ராஜ்யத்தை விட்டுப் போக முடியவில்லை; இதனாலும் துக்க முண்டாயிற்று. தீவிர வைராக்கிய மிருக்கின் ராஜ்யத்தை விட்டுப் போவான்; வைராக்கியம் தீவிர மின்றி மந்தமா யிருந்தமையின், ராஜ்யத்தை விட முடிய வில்லை: போகத்தில் ஆஸக்தி யில்லை. ஆகையால், இருவிதத்திலும் துக்கமே யுண்டாயிற்று; மந்த வைராக்கியத்தின் பலனாகிய உபாஸ்யத்தை யறிந்துகொள்ள வேண்டு மென்னும் இச்சையைக் கூறுகின்றார்.

### 500. தூங்காமல் விழித்திருக்கும் தேவன் யாவன் என்று சுபசந்ததி வித்வான்களோடு பிரஶ்நஞ் செய்தல்.

மந்த வைராக்கியம் சுபசந்ததியாகிய பிதாவிற் குண்டானதே அவனுக்குப் பெரும்பாக்கியம். இதனால் அவனுக்கு எந்தத் தெய்வம் உபாஸிக்கத் தக்கதென்று அறிந்து கொள்ள இச்சை யுண்டாயிற்று; பிறகு சிரேஷ்ட வித்வான்களை வரவழைத்து அவர்களைத் தகுந்த ஆஸநங்களில் உட்காரவைத்து அவர்களைப் பார்த்து, புருஷார்த்தத்தை யடைவதற்காக எல்லா ஜநங்களாலும் ஆராதிக்கத் தக்கதாயும், தூக்கம் விழிப் பற்றதாயும், பக்தர்களுக்கு விளங்குகின்றதாயு மிருக்கின்ற தெய்வம் யாது என்றுகேட்டான். அரசன் வார்த்தையைக் கேட்டு அவ்வித்வான்களுள் ஒருவன் அரசனை நோக்கிக் கூறத் தொடங்கினான்:—

### 501. விஷ்ணு உபாசகனது உத்தரம்.

கேளும் அரசனே! உம்மால் கேட்கப்பட்ட தேவன், சிவனும், பிரமனும் சேவிக்கின்றவராயும், சங்கு சக்கர கதா பத்மதாரியாயும், ஹிதஞ் செய்பவராயும், பரோபகாரியாயும், கிருபாளுவாயும், மங்கல மூர்த்தியாயு மிருக்கின்ற மகா விஷ்ணுவாவர்; அவர் நிஜபக்தர்களை யறிந்து அவர்களுக்கு க்ஷேமத்தை யளிக்கின்றார். சக்தி, கணேசர், சூரியன், சிவன் என்னும் இவர்களெல்லாம் அவராஞ்ஞையில் நடக்கின்றார்கள் என்று பாரதமும், பத்ம புராணமும், நிருசிம்ஹதாபநீ, ராமதாபநீ, கோபாலதாபநீ என்னு முபநிஷத்துக்களுமாகிய எல்லாக் கிரந்தங்களும் கூறுகின்றன. விஷ்ணு சொரூபத்தினின்றும் ஜகத்முற்று முண்டாகின்றது; மீண்டும் அவரிடத்தில் லயமாகின்றது. நாநாவித வேஷங்களாய அவதாரங்களைத் தரித்து எல்லாத் தேவர்களுக்குஞ் சகாயஞ் செய்திருக்கின்றார்.

ஆகையால், அவரை உபாஸிக்க. விஷ்ணுவிற்குச் சமாநமாய் உபாஸிக்கத்தக்க வேறொரு தெய்வமில்லை. விஷ்ணு பக்தனாகிய சிவன் உத்தமனா யிருப்பினும் அவன் உபாஸிக்கத்தக்க சொரூபத்தைத் தரிக்க வில்லை. சிவன் பிரேதம் போல் அமங்கள ஸ்வரூபி. ஆகையால், அவனை நாம் இவ்வாறு தியானிக்கலாகாது. சாம்பல், உடுக்கை, யானைத் தோல், கபாலம் என்பவற்றை யுடையவன் யாவர்க்கு க்ஷேமத்தை யுண்டுபண்ணப் போகின்றான்? அவன் புத்திரனாகிய கணேசனும், நரனும், மிருகமும் சேர்ந்தது போன்ற விலக்ஷண ரூபத்தைத் தரித்திருக்கின்றான். சடர் ஹடத்தினால் தேவியைத் தியானிக்கின்றனர்; அவளது சமாந ரூபத்தைத் தரித்து அவளைச் சேவிக்கின்றனர். ஸ்திரீயானவள் நிந்திக்கத் தக்கவளாயும், பவித்திரமின்றி அசுசியாயும், கணக்கிடப்படாத அவகுண விசித்திர முடையவளாயும், கபடகூட ஸ்வரூபியாயும், பராதீநமாயு மிருக்கின்றாள். தனது தந்திரத்தி லெழுதப்படாத இப்படிப்பட்ட வடிவத்தை விரும்புகின்றவன் எவனோ அந்தநரன் கழுதையைப் போன்றவனாய் அவளைச் சேவிக்கட்டும். இச்சூரியனோ இராப்பகலாய் ஒரு க்ஷணமேனும் நிச்சலமாயிருப்ப தின்றி அலைகின்றான். இவனை யுபாஸிப்பவனும் இவனைப்போலவே அலைவான். ஆகையால், ஏனைய எல்லாத் தேவதைகளையு மொழித்து, எப்போதும் விழிப்புள்ளவராயிருக்கின்ற மகாவிஷ்ணு ஒருவரே சேவிக்கத்தக்கவரென்று அறியத்தக்கது. நாரத பாஞ்சராத்திரத்தில் விஷ்ணுவின் பூஜாத் தியாந விதிகள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. விஷ்ணுவின் உபாஸனை யொழிந்த ஏனைய நான்கு உபாஸனைகளும் உலகத்தில் விளங்குகின்றன. அவற்றுள் ஒவ்வொன்றையும் நிஷேதித்ததனால் ஸ்மார்த்த உபாஸனையும் நிஷேதிக்கப்பட்டதாய் விட்டது. ஏனெனின், ஐந்து தேவதைகளையும் சம புத்தியோடு உபாஸிப்பதற்கு ஸ்மார்த்த உபாஸனை யென்பர். விஷ்ணுவின் சமத் தன்மை சிவன் முதலிய நான்கு தேவதைகளுக்கும் நிஷேதிக்கப்பட் டிருத்தலால், ஸ்மார்த்த வுபாஸனையும் அர்த்தாபத்தியினால் நிஷேதிக்கப்பட்டதாயிற்று.

### 502. சிவ உபாஸகனது உத்தரம்.

சிவ உபாஸகராகிய முநி மேற்கூறியதைக் கேட்டுக் கோபத்தோடு கண் சிவந்து கூறுகின்றார்:—அரசனே! என் வார்த்தையைக் கேளும். நான் கூறுவதற்குக் கோடிப் பிரமாணங்களுள. விரும்

பப்பட்ட யாவும் கொடுத்தருளும் பரமசிவனுக்குச் சமானம் யார்? மகாவிஷ்ணுவால் யாசிக்கப்பட்டுத் தம்முடைய சகல ஐசுவரியங்களையுங் கொடுத்துத் தாம் பஸ்மத்தைத் தரித்தார். இக்காரணத்தினலேயே தோலையும் கபாலத்தையும் தரித்தார். அவர்க்கு உயர்வு, தாழ்வு என்னும் விசார மில்லை; எல்லாஞ் சமந்தான். நிர்வாணமா யிருந்துகொண்டு வைராக்கியத்திற்குச் சமானமான சுகமில்லை யென்று உபதேசிக்கின்றார். இவ்விதமான பெருங் கொடையளிக்கின்றார்:—நரனும் நாரியும் காசியில் மரண மடைந்தால் சீக்கிரத்தில் சாயுஜ்ய மோக்ஷத்தை யடைகின்றார்கள்; கர்ப்பவாச சங்கடத்தை யடையார். அவர்கள் சிவனுக்குச் சமானமாகிச் சர்வ திவ்விய போகங்களையு மநுபவிக்கின்றார்கள். அப்போது லிங்க சரீரத்தை விட்டுப் பிரஹ்மத்தை யடையும்படியான அத்வைத உபதேசத்தைப் பரமசிவன் செய்கின்றார். உயர்வு தாழ்வு சிறிதும் பாராமல் எல்லோர்க்கும் அவர் முக்தி யளிக்கின்றார். அரசனே! அவர்க்குச் சமானமான தாதா யாவர்? பக்தி யுள்ளவர்கள் இல்லாதவர்களா யுள்ள எல்லோரையும் ரக்ஷிக்கின்றார். விஷ்ணுவின் சுபாவத்தை நாம் இவ்வாறு கேள்விப்படுகின்றோம்.—அவர் பக்தர்களை ரக்ஷிக்கின்றார்; அபக்தர்களை ரக்ஷிப்ப தில்லை யென்பது உலகப்பிரசித்தமா யிருக்கின்றது. ஹரி சேவகன், ஹரன் சேவிய னென்று வியாஸர் கந்த புராணத்திற் கூறியிருக்கின்றார். இராமேச்சுரத்தில் இராமச்சந்திரன் பரமசிவனைப் பூஜித் திருக்கின்றார். பாரத பத்ம புராணங்களிற் சகல தேவர்களினும் ஹரி உயர்வுடையோ ரென்று கூறியதற்குத் தாற்பரியம் அப்படி யன்று. ஏனெனின், பாரத தாற்பரிய நூலைப் பார்க்குமிடத்துச் சிவனுக்கே ஈசுரத்துவம் பிரதீதியாகின்றது. இவ்வாறு அப்பையதீக்ஷித ரென்னும் வித்துவான் சகல புராணங்களுக்கும் இதிஹாஸங்களுக்கும் தாற்பரியம் எழுதியிருக்கின்றார்.

ஆண்டு பாரதத்தி லுள்ள பிரசங்கம் இதுவாம்.—"அசுவத்தாமாவால் நாராயணாஸ்திரமும் ஆக்கிநேயாஸ்திரமும் பிரயோகிக்கப்பட்டபோது அநேக சைந்யங்கள் நாசமாயும் பஞ்ச பாண்டவர்களுள் ஒருவரும் மரிக்கவில்லை. அப்போது (அசுவத்தாமா) ரதத்தை விட்டு, தநுர் வேதத்தையும் ஆசாரியரையும் திரஸ்கரித்து வநத்திற்குச் சென்றார். ஆண்டு வியாஸ பகவான் அவரைச் சந்தித்துக் கூறுகின்றார். ஓ! பிராஹ்மணா! நீ ஆசாரியரையும் வேதத்தை

யும் திரஸ்காரஞ் செய்யலாகாது. இந்த அர்ச்சுநனும், கிருஷ்ண னும் நர நாராயண ரூபங்கள். இவர்கள் சிவனை மிகப் பூஜித்திருக் கின்றார்களாகலின், இவர்களுடைய பக்திக் கதீநமாகித் திரிசூலி யான மகாதேவன் இவர்களுடைய ரதத்திற்கு முன் னிற்கின்றார். ஆதலால், இவர்கள்மீது பிரயோகிக்கப்படும் அநேக சஸ்திராஸ்தி ரங்களின் சாமார்த்தியத்தை மஹாதேவர் நாசஞ் செய்கின்றார்.''

இந்தப் பாரதப் பிரசங்கத்தினால் நாராயண ரூப கிருஷ்ண னது விபூதி மகாதேவருடைய கிருபையால் உண்டாயிருக்கின்ற தென்பது சித்தித்தது. ஆதலால் விஷ்ணு சரித்திரத்தைப் பிரதிபா திக்கும் கிரந்தம் சிவனுடைய ஆதிக்கியத்தைப் பிரதிபாதிக்கின் றது. ஏனெனின், அக்கிரந்தத்தில் விஷ்ணு சேவியராகக் கூறப்பட் டிருக்கின்றார். அந்த விஷ்ணு பாரதப் பிரசங்கத்தால் சிவ பக்தனா யிருக்கின்றார். ஆதலால், எந்தச் சிவ பக்தியால் விஷ்ணு சேவிய ராரோ, அந்தச் சிவனே பரம சேவிய ராகின்றார். இவ்வாற்றால், அப்பையதீக்ஷிதர் சகல வைஷ்ணவ கிரந்தங்களிலும் சிவனே பிரதி பாத்தியராகக் கூறப்பட் டிருக்கின்ற தென்று கூறியிருக்கின் றார். ஹரியானவர் பக்தர்களுக்குள் உத்தமமானவர்; சிவனுக்கே மகேச னென்றும் மகாதேவ னென்றும் பெயர். ஏனைய தேவர்க ளுக்குத் தேவ ரென்றும் ஈச ரென்றும் பெயர். சிவ மென்பதற்கு மங்கள மென்று பொருள். சிவத்திற்குப் பிந்நமான வெல்லாம் அசிவமாம்; அஃதாவது அமங்கல ஸ்வரூபமாம். இந்த அமங்கள ரூப தெய்வங்களை விட்டு மங்கள ஸ்வரூப சிவனை உபாஸித்தல் வேண்டும். விஷத்தைப் பார்த்து மற்றெல்லாத் தேவர்களுக் கும் பய முண்டாயிற்று. அப்போது அவ் விஷத்தைக் கண் டத்தில் தரித்துப் பயத்தைப் போக்கினார். இவருடைய குமார ரான கணேசர் சகல விக்கிநங்களையும் உடனே போக்கு கின்றார். காரியத்தில் காரண குண மிருத்தலால் விக்கிநங் களை யெல்லாம் மூலத்தோடு நாசம் பண்ணுகின்றவர் சிவ னென் றறிதல் வேண்டும். ஜநந மரணங்களாகின்ற துக்க ரூப விக்கிநங்க ளெல்லாம் சிவத்தியாநத்தால் மூலத்தோடு நாசமா மென்று அறி யத்தக்கதாம். சேவிக்கத்தக்கவன் சதாசிவனே; விவேகி சமாதி யோடு விழிக்கக் கடவன். பாசுபத தந்திரத்தில் சிவ பூஜா விதிகள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. நாரத பாஞ்சராத்திர மதம் பொய் யென்று சூத்திர பாஷியத்திற் கண்டிக்கப்பட்டிருக்கின்றது.

அதனை யநுசரித்த இராமாநுஜாதிகளின் நவீந வைஷ்ணவ மதமும் கல்பதருவின் உரையாகிய பரிமளத்திற் கண்டிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலின், சிவ சேவையினிடத்து மநத்தினைச் செலுத்தின், புருஷார்த்தம் நன்கு சித்திக்கும்.

### 503. கணேச பூஜகனது உத்தரம்.

கணேசன் சிவன் புத்திரனென்று கூறியதையும்,காரணத்தின் குணம் காரியத்தி லிருக்கின்றதென்று கூறியதையுங் கேட்டுக் கணேச பூஜகன் கோபத்துடன் கூறுகின்றான்:—"அரசனே! நான் கூறுவதைக் கேட்பீராக. இவ்விருவரும் பொய் வசநத்தை மெய் போன்று சாதிக்கின்றனர். கணேசன் சிவ புத்திர னென்றும், பராதீந னென்றுங் கூறுகின்றனர். இவ்விஷயமாய் வியாஸர் புராணத்திற் கூறியிருக்கின்ற ஒரு கதையைக் கூறுகின்றேன் கேட்பீராக:—திரிபுர சங்காரஞ் செய்ய ஹரி ஹராதி எல்லாத் தேவர்களுஞ் சென்றார்கள். கணேசனைப் பூஜிக்காதவரையில் திரிபுரர்கள் சிறிதும் தோல்வியடைய வில்லை; பின்னர் மந வருத்தமுற்று எல்லோரும் கணேசனை ஆராதித்துத் திரிபுரர்களை ஜயித்தார்கள். எவனைப் பூஜித்ததனால் இவர்கள் ஜய மடைந்தார்களோ அவனே சேவிக்கத் தக்கவ னென்று அறிதல் வேண்டும். தசரதனுக்கு ராமன் புத்திரனா யிருந்ததுபோல் பரமசிவனுக்குக் கணபதி புத்திர ராயிருந்து விக்கிநங்களைப் போக்கினார். கணேச புராணம் வியாஸர் செய்திருக்கின்றார். அதில் எல்லாவற்றிற்குங் கணேசனே காரணம் என்று காட்டியிருக்கின்றார். அவருடைய துதிக்கையிலிருந்து அரி அரன் விதி ரவி சக்தி முதலியோர் யாவரும் ஜநித்தார்கள். எவர்கள் க்ஷண மாத்திரம் இவரைத் தியாநிக்கின்றார்களோ அவர்களுடைய விக்கிநங்க ளெல்லாம் உடனே ஒழிகின்றன. இப்படி விழிப்புள்ளவரா யிருக்கின்ற விநாயகக் கடவுளை இரவும் பகலும் பக்தியுடன் நிஷ்காமமாய்ப் பஜித்தல் வேண்டும்.

### 504. தேவி பக்தனது உத்தரம்.

சக்திக்குக் காரணம் கணேச னென்று கூறியதைக் கேட்டுப் பகவதீ பக்தன் கர்ச்சித்து அரசனைப் பார்த்துக் கூறத் தொடங்கினான்:—அரசனே! என் சத்தியமான வசநத்தைக் கேட்பீராக. இம்மூவரும் கூறிய வெல்லாம் அப்பிரமாணமாம். சக்தி யில்லையாயின், தேவர்க ளெல்லாம் கொல்லப்பட்ட சரீரத்திற்குச் சமாந

அமங்கலரென்று அறிக. சக்தியில்லாதவர் அசமர்த்தரெனப் படுவர். அவர்கள் எங்ஙனம் காரியத்தை யுண்டுபண்ணுவர்? எவர்கள் அதிகமாய்ச் சக்தியை யுபாசித்தார்களோ அவர்கள் சகலத்திற்கும் அதிகாரியானுர்கள். ஹரி, ஹரன், சூரியன், கண பதி என்பவர்கள் முக்கியமானவர்கள். இவர்களிடத்தில் நாநாவித மான சக்தி காணப்படுகின்றது. பிரபஞ்சத்தில் எதனைச் சக்தி யென்று கூறுகின்றுர்களோ அதனைப் பகவதியின் ரூபமென்று அறிக. பகவதிக்கு இரண்டு ரூபங்களுள; ஒன்று சாமாநியம், மற்ருென்று விசேஷம்.

எல்லாப் பதார்த்தங்களிலு முள்ள தத்தம் காரியத்தைச் செய்யுஞ் சாமர்த்திய ரூப சக்தி எதுவோ அது பகவதியின் சாமா நிய ரூபமாம். அஷ்ட புஜாதிகளுடன் கூடிய மூர்த்தி விசேஷ ரூபமாம்.

சாமாநிய ரூப சக்தியின் அம்சங்கள் எண்ணிறந்தனவா யிருக் கின்றன. எவனிடத்தில் சக்தியின் அம்சம் குறைவா யிருக்கின் றதோ அவன் அற்ப சக்திமான்; அசமர்த்தன் எனப்படுகின் ருன். எவனிடத்தில் சக்தியின் அம்சம் அதிகமா யிருக்கின்றதோ அவன் சமர்த்தன் எனப்படுகின்ருன். விஷ்ணு சிவன் முதலிய வர்களிடத்தில் சக்தியின் அம்சம் அதிகமா யிருக்கின்றமையின், அவர்கள் அதிக சமர்த்தரென்று கூறப்படுகின்ருர்கள்.

இவ்வாற்ருல், பகவதியின் சாமாநிய ரூப சக்தி யம்சத்தின் மிகுதியால் விஷ்ணு, சிவன், கணேசன், சூரியன் என்னும் இவர்க ளுடைய மகிமை பிரசித்தமா யிருக்கின்றது. சக்தி யின்றி யிருப் பின், பிராண னின்றிய சரீரம் அமங்களமாவது போல், சக்தியின் றிய சகல தேவர்களும் அமங்கள ஸ்வரூபிக ளாவார்கள். ஆதலால், எந்தச் சக்தியின் மிகுதியால் தேவர்களுடைய மகிமை பிரசித்தமா யிருக்கின்றதோ அம் மகிமை சக்தியினதாம். தேவர்களின தன்று. விஷ்ணு சிவன் முதலியோர் பகவதியின் சாமாநிய ரூப சக்தியை விசேஷமா யுபாசித்தமையின், அவர்களிடத்தில் சக்தியின் அம்சம் அதிமா யிருக்கின்றது.

பகவதியினுடைய நிராகார ரூப சக்திக்கு அநேக அம்சங்க ளிருப்பது போல ஸாகார ரூப சக்திக்கும் அநேக அம்சங்க ளுள; அச்சாகார அம்சங்களில் காளி ரூபம் பிரதாநமாம். மாகேசுவரீ,

வைஷ்ணவீ, கௌரீ, கணேசீ முதலியனவும் பிரதாந அம்சங்களாம். விஷ்ணுவிற்குப் பகவதியின் உபாஸநையால் வைஷ்ணவி யென்னும் பகவதியின் அம்சங் கிடைத்தது. அங்ஙனமே, ஏனைய தேவதைகளுக்கும் பகவதியின் உபாஸநையால் தத்தம் மாகேசுவரி முதலிய அம்சங்கள் கிடைத்திருக்கின்றன. அவர்களுள்ளும் விஷ்ணுவும் சிவனும் பகவதியின் முக்கிய பக்தர்களா யிருக்கின்றார்கள். ஏனெனின், தியாநஞ் செய்வோனுக்குத் தியே யரூபத்தை யடைவதே உபாஸநையின் பரம அவதியாகும். விஷ்ணுவிற்கும் சிவனுக்கும் உபாஸநையால் தியேய ரூபங் கிடைத்திருக்கின்றது. ஆதலால், இவர்கள் முக்கிய உபாஸகர்க ளாவர்.

மதநத்தினால் அமிர்த முண்டானபோது, சுராசுரர்களுடைய விவாதத்தைத் தீர்க்க விஷ்ணுவிற்குச் சாமர்த்திய மில்லாமற் போயிற்று; அப்போது தன்னுபாஸிய ரூபமான பகவதியின் அம்சத்தைத் தியாநஞ் செய்து தானே யந்த உபாஸிய ரூபத்தை யடைந்தார். அந்த ரூபத்தின் மாகாத்மியத்தால் அசுரர்களும் விஷ்ணுவிற்கு அநுகூலமானார்கள். அங்ஙனமே, சிவனுஞ் சமாதியிற் பகவதியைத் தியாநஞ் செய்தார். அதனால் சிவனது பாதி சரீரம் உபாஸிக்கத் தக்கதாயிற்று. ஒவ்வொரு காலத்து விக்ஷேபத்தால் சமாதி யில்லாமற் போனமையின் சிவனது முழு சரீரமும் உபாஸிக்கத்தக்கதாக வில்லை. இவ்விதத்தால், எல்லாத் தேவர்களும் பகவதியின் உபாசகர்க ளாகின்றார்கள். அவ்வுபாஸநை தக்ஷிண மார்க்கத்தினாலும் உத்தர மார்க்கத்தினாலும் இரண்டு பிரகாரமாகக் கூறப்படுகின்றது. முன் தக்ஷிணமார்க்கம் கூறப்பட்டது. மேல் உத்தர மார்க்கத்தைக் கூறுவாம் :—

பகவதியின் பக்தர்களான ஹரி ஹரர்களைப் போல் பகவதியை யார்தாம் உபாஸிக்கப் போகின்றனர்? அங்ஙனமாயினும், மகா மாயையைத் தியாநிக்கின்றவன் சகல புருஷார்த்தத்தையும் சீக்கிரத்தி லடைவான். ஒருங்கே போக மோக்ஷங்களை யடையத் தக்கதாகிய வேறு சாதநம் ஜகத்தி லில்லை. பகவதி பக்தன் சகல போகங்களையும் அநுபவித்துங் கர்ப்ப வாசத்தை யடைகின்ற தில்லை. சிவனாற் செய்யப்பட்ட தந்திரத்தின் கிரமத்தைக் கூறினோம். பகவதியின் பக்தி, மிகுந்த சுகத்தைத் தரும். முன்னோர்கள் எல்லோரும்

அநுஷ்டித்து வந்த பஞ்ச மகாரங்களையும் ஒருபோதும் விடுதல் கூடாது. கிருஷ்ணதேவர் பல தேவராகிய நல்ல ஞானியும் முதல் மகாரத்தை எப்போதும் ஜலத்தைப் போல் சாப்பிட்டார்கள். மேலும், முன்னோர்களெல்லோரும் மகாரத்தையே சேவித்தார்கள். மகாரங்களைச் சேவிக்கும் விதிகளெல்லாம் பரமசிவனால் பரோபகாரத்தின்பொருட்டுக் கூறப்பட்டிருக்கின்றன. சிவ வசனத்தை மநதில் தரிக்கின்றவன் இந்தச் சரீரத்திலேயே போக மோக்ஷங்களை யடைகின்றான். வியாசஸர் பாகவதத்தைச் செய்திருக்கின்றார்; உப புராணத்திற் காளியை வர்ணித் திருக்கின்றார்; பகவதியின் பக்திதான் மேலாகக் கூறப்பட்டிருக்கின்றது; பூஜா விதிகள் எல்லாவற்றையும் அறிவித்திருக்கின்றார். ஹரி ஹரன் சூரியன் கணேசன் முதலியோர் பகவதியைத் தியானஞ் செய்கின்றவர்களாய் ஜீவிக்கின்றார்கள். மதியுடையோர் யாவரும் முதல் மகாரத்தைக் குடித்து மூழ்கிய மநத்தினை யுடையவராய்ப் பகவதியைப் பூஜிக்கின்றனர். ஜகத் ஜநநியாகிய தேவியே விழிப்புள்ளவளா யிருக்கின்றாள். இவளைச் சேவிப்பவன் பரமாநந்தத்தை யடைகின்றான்.

## 505. சூரிய பக்தனது உத்தரம்.

சூரிய பக்தன் பகவதியின் மாகாத்மியத்தைக் கேட்டுக் கோபங்கொண்டு கூறுகின்றான். அரசனே! என் னுண்மையான வசநத்தைக் கேட்பீராக; நான் கூறுவது பொய்யன்று. கோடி சபதம் செய்கின்றேன். அவர்களுடைய மதங்களெல்லாம் மிகவும் பாப முள்ளனவாயும், இழிவானவையாயும் இருக்கின்றன. ஜகத்திற் கூறப்படும் கெட்ட குணங்களெல்லாம் தேவி மார்க்கத்தில் உத்தமமாகக் கூறப்பட்டிருக்கின்றன; மலின மத்தியம் தீர்த்த மென்றும், மாமிசம் சுத்த மென்றும் கூறப்பட்டிருக்கின்றன. விபரீதத்தினைக் கூறும் சம்பு தந்திரம் அநுஷ்டிக்கத் தக்கதன்று. தக்ஷிண சம்பிரதாயம் சிரேஷ்டமாகையால், அஃது எல்லோராலும் அநுஷ்டிக்கத் தக்கதா யிருப்பினும், இவர்களுடைய மநது எதில் கட்டுப்படுகின்றதோ அந்தச் சூரிய னில்லையாயின் எல்லோரும் அந்தகராவர். எல்லாவற்றையும் பிரகாசிப்பிக்கின்றவன் சூரியன். அவன் இல்லாவிட்டால் எங்கும் இருள் சூழ்ந்து கொள்ளும். பிரகாசங் கொடுக்கும் ஜகத்தி லுள்ள ஏனைய வஸ்துக்களெல்லாம் சூரிய

னுடைய அம்சங்களே. சூரியனைப்போல் ஒருவனும் ஹிதஞ் செய்கின்றவனில்லை. பிறருடைய ஹிதத்தின் பொருட்டுத் தான் ஆகாயத்தில் ஓயாமல் அலைகின்றான்; சகல காரியங்களும் காலாதீனமாயிருக்கின்றன. அதனையே சென்ற காலம், நிகழ் காலம், வருங் காலமென்று மூவகையாக விவேகிகள் கூறுகின்றார்கள். ஆச்சரியம்! இந்தச் சூரியன் சூக்ஷ்மமாய்க் கிரியைகளைச் செய்கின்றார். இவ்விதியாக எல்லாம் சூரியனிலிருந்தே உண்டாகின்றன. அவர் கோபத்தால் எல்லாம் பஸ்மமாகின்றன. இவர்க்கு ஸாகாரம் நிராகாரமென்று இரண்டு ரூபங்களுள. அவ்விரண்டனுள் நிராகாரப் பிரகாசம் சகல நாம ரூபங்களிலும் வியாபித் திருக்கின்றது. எதை வேதாந்தி பாதி விளங்குகின்றது என்னும் சப்தத்தால் வியவகரிக்கின்றானோ அது நிராகாரப் பிரகாச ரூபமான சூரியனுடைய சாமாநிய ரூபமாம். அது ஜகத்திற்கெல்லாம் அதிஷ்டானமாம். அதனையறியாததனால் ஜகத்வடிவ விவர்த்தமுண்டாகின்றது. அந்த நிராகாரப் பிரகாசமே அந்தக்கரணவிருத்தியிலுள்ள பிரதிபிம்பத்தோடு ஞானமென்று கூறப்படும். "அகம் பாநு (யான் சூரியன்)" என்று அந்தக்கரண விருத்தி பிரகாசத்தின் பிரதிபிம்பத்தோடுண்டாகும்போது அஞ்ஞான நிவிருத்தி வாயிலாக ஜகத்தின் நிவிருத்தியுண்டாகின்றது.

சூரியனுடைய ஸாகார ரூபத்தைக் கூறுகின்றேன் கேட்பீராக:—பகற் காலத்தில் அவருடைய தேஜசு பிரகாசிக்கின்றது. சந்திரன், நக்ஷத்திரம், தீப முதலிய அநேகம் அதன் அம்சமே. நிராகார ஸாகார பேதத்தால் சூரியனுக்கு இரண்டு ரூபமுள. அவற்றுள், நிராகார ரூபம் ஞேயமாம்; ஸாகார ரூபம் தியேயமாம். இதுவே வேதாந்தங்களில் நிர்க்குண சகுண பேதத்தால் இருவகைப் பிரஹ்மமாகக் கூறப்பட்டிருக்கின்றது. எந்தச் சூரியனிடத்தில் ஒருகாலத்திலும் அந்தகாரம் லேசமுமில்லையோ அவரைப் பார்த்தே எல்லோரும் தங்கள் கர்மத்தைச் செய்கின்றார்கள்; ஒருபோதும் தூங்காது விழித்திருக்கின்றார்கள். அவரைத் தியானஞ் செய்வதனால் அந்தகாரம் ஒழிந்துபோம். ஏனைய தேவதைகள் விழிப்புள்ளவர்களென்று கூறினது மித்தையென்று அறிதல் வேண்டும்.

506. முற்கூறிய மதத்தின் அநுவாதத்தோடு ஸ்மார்த்த மதம்.

ஐந்து உபாஸகர்களும் பரஸ்பரம் விருத்த வசநங்களைக் கூறினதுபோல் அநேக பண்டிதர்களும் தங்கள் தங்கள் புத்தியின் அநுசாரமாய் விருத்தமாகவே கூறினார்கள்.

இவ்வைவர் மதமும் ஒன்றற்கொன்று விரோதமா யிருப்பது போல் ஸ்மார்த்த பண்டிதன் மேற்கண்ட ஐந்து தேவதைகளிடத்திலும் பேத புத்தி கொள்ளாவிட்டாலும் அவனுடைய மதமும் இவர்கள் மதங்களெல்லாவற்றோடும் விரோதமா யிருக்கின்றது. ஏனெனின்,

வைஷ்ணவனுடைய மதம் இதுவாம்: விஷ்ணுவிற்குச் சமாநமான வேறு தெய்வ மில்லை. எல்லோரும் விஷ்ணு பக்தரே. விஷ்ணுவின் ராம கிருஷ்ண நாராயணன் முதலிய நாமங்களுக்குச் சமாநமாய்ப் பிற தெய்வங்களின் நாமங்களை எவன் நினைக்கின்றானோ அவன் நாமாபராதியாவன். அவனுக்கு ராமாதி நாமோச்சாரணங்களின் யதார்த்த பல னுண்டாகின்றதில்லை.

அங்ஙனமே, சைவ மதத்திலும் சிவனுக்குச் சமாநமான வேறு தெய்வ மில்லை. சிவனுடைய நாம உச்சாரணத்தின் பலன் விஷ்ணு நாம உச்சாரணத்தா லுண்டாகின்றதில்லை. இவ்விதமாக எல்லோருடைய மதங்களிலும் அவரவர்களின் உபாஸிய தெய்வத்திற்குச் சமாநமாய் வேறு தெய்வ மில்லை. ஸ்மார்த்த மதத்திலோ எல்லாத் தேவர்களும் சமமே. ஆதலால், ஸ்மார்த்த மதமும் மேற்கூறிய ஐந்து மதங்களோடும் விருத்தமா யிருக்கின்றது.

507. ஆறு சாஸ்திரங்களும் ஒன்றற் கொன்று விரோதமாதல்.

சாங்கியம், பாதஞ்சலம், நியாயம், வைசேஷிகம், பூர்வ மீமாம்சை, உத்தர மீமாம்சை என்னும் ஆறு சாஸ்திரங்களின் மதங்களும் பரஸ்பரம் விருத்தமாம். ஏனெனின்,

சாங்கிய சாஸ்திரத்தில் ஈசுவரன் அங்கீகரிக்கப்பட வில்லை. சமாதிவடிவ (11) யோகத்தில் அபேக்ஷை யின்றிய பிரகிருதி புருஷர்களின் விவேக ஞாநத்தினால் மோக்ஷ முண்டாவதாகக் கூறப்பட்டிருக்கின்றது.

பாதஞ்சல சாஸ்திரத்தில் ஈசுவரனும், சமாதியால் மோக்ஷமும் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால், சாங்கியமும் பாதஞ்சலமும் ஒன்றற் கொன்று விருத்தமாம்.

நியாய மதத்தில் நான்கு பிரமாணம், வைசேஷிக மதத்தில் இரண்டு பிரமாணம் என்பன விருத்தமாம். அவ்வாறே நியாய வைசேஷிகங்களுக்குத் தம்முள் மற்றும் அநேக விரோத முள. ஜிஞ்ஞாசுவால் அவை விரும்பப்படுவன வாகாமையின் அவற்றை ஈண் டெழுத வில்லை.

பூர்வ மீமாம்சையில் ஈசுவரனும் மோக்ஷரூப நித்திய சுகமும் அங்கீகரிக்கப்பட வில்லை. ஆனால், கர்மத்தா லுண்டாகும் விஷய சுகமே புருஷார்த்தமா யிருக்கின்றது.

உத்தர மீமாம்சையில் மோக்ஷமும் ஈசுவரனும் அங்கீகரிக்கப் பட்டிருக்கின்றன. விஷய சுகம் புருஷார்த்த மன்று. உத்தர மீமாம் சையின் மதம் இக்கிரந்தத்தில் வியக்தமாகக் கூறப்பட்டிருக்கின் றது. ஆகையால், சர்வ சாஸ்திரங்களின் மதங்களும் இதற்கு விரு த்தமாம். வேறு சாஸ்திரங்களிலும் பேத வாதம் கூறப்பட்டிருக் கின்றது. இதிலோ, பேதம் கண்டிக்கப்பட்டும், அபேதம் கூறப் பட்டு மிருக்கின்றன.

இவ்வாற்றால், சகல சாஸ்திரங்களின் சித்தாந்தமும் பரஸ் பரம் விருத்தமாம்.

### 508. தர்க்க திருஷ்டி பிதாவைச் சந்தித்தல்.

இவ் விருத்த வசனங்களைக் கேட்டு அரசனுக்கு நூதந சம் சயங்க ளுண்டாயின. இவர்களுள், யார் கூறுவ துண்மை; எல் லோரும் யுக்திப் பிரமாணங்களுடன் பேசுகின்றார்கள். இவ்வித சம்சயமாகிய சோகத்தினால் துக்க முற்ற அரசன் மநத்தில் உபா சிக்கத்தக்க தெய்வம் இன்ன தென்று தோன்றாமற் போயிற்று. இந்தச் சந்தேகத்தை எவனிடத்திற் கூறுவது? ஜகத்தி லுள்ள சாஸ்திர நிபுண பண்டிதர்கள் கூறும் விருத்த வசனங்களைக் கேட்டு நெடுங்காலம் யோசனையில் முழுகி யிருந்தான். இப்படி யிருக் கும்போது தர்க்க திருஷ்டி தகப்பனிடம் வந்தான். இருவரும் பரஸ்பர மாலிங்கநஞ் செய்து கொண்டனர். புத்திரன் தகப்பனை விதிப்படி நமஸ்கரித்தான்; தகப்பன் பிரியத்துடன் ஆசீர்வதித்து ஆசநங் கொடுத்தான்.

## தர்க்க திருஷ்டி பிதாவை நோக்கி உபதேசித்தல்.

### 509. காரண ரூபத்தின் உபாசியத் தன்மையும், காரிய ரூபத்தின் நிக்ருஷ்டத் தன்மையும்.

தகப்பன் சிந்தையில் மூழ்கி யிருப்பதைக் கண்டு, ஐயா! தங்கள் சித்தத்தி லுள்ள வியாகூலம் யாது? என்ன யோசனை? முகம் பிரசந்நமா யில்லையே? என்று தர்க்கதிருஷ்டி வினவினன்.

புத்திரன் வசநத்தைக் கேட்டுத் தன் கவலைக்குக் காரணமான சகல விருத்தாந்தங்களையும் சுபசந்ததி மகாராஜன் அவனுக்குக் கூறினன்; எந்தத் தெய்வம் உபாசிக்கத் தக்கதென்று தெரியவில்லை யெனக் கூறினன்.

தர்க்க திருஷ்டி தகப்பன் வார்த்தையைக் கேட்டு அவனுக்குச் சுப முண்டாகக் கருதிக் கூறுகின்றான். காரண ரூபம் உபாஸ்யமென்றும், காரிய ரூபம் துச்சமென்றும் அறிக. காரண ரூபத்தின் நாமங்கள் பல. இது வேதத்தின் முக்கிய சித்தாந்தமாம். இதிஹாச புராணங்களில் வியாசர் கூறிய சித்தாந்தம் இதுவேயாம்; நாநா வன்று. இந்த மர்மத்தைப் பண்டிதர்க ளறியாமல் பிறர் மதத்தைக் கண்டிக்கின்றார்கள். பாரதத்திற்கு வியாக்கியாநமெழுதின நீலகண்ட பண்டிதர் அவ்வியாக்கியாநத்தின் ஆரம்பத்தில் இப்பிரசங்கத்தைச் செய்திருக்கின்றார். அவ்விடத்திலேயே உத்தமமான சுருதி சித்தாந்தங்களையு முள்ளபடி கூறி யிருக்கின்றார்.

### 510. புராணத்திற் கூறிய ஸ்துதி நிந்தைகளில் வியாசர் அபிப்பிராயம்.

சகல புராணங்களின் கர்த்தா வியாசர் ஒருவரே. அவர் ஸ்கந்த புராணத்திற் சிவனுக்கு ஸ்வதந்திராதி ஈசுவா தர்மங்க ளுளவென்று கூறியிருக்கின்றார்; ஏனைய தேவதைகளுக்குச் சிவ கிருபையால் எல்லா விபூதிகளுங் கிடைக்கின்றனவென்று கூறியிருக்கின்றார். ஆகையால், இவர்களுக்கு ஜீவதர்மம் கூறப்பட்டது. அங்ஙனமே, விஷ்ணுபுராண பத்ம புராணங்களில் விஷ்ணுவிற்கு ஈசுவரத் தன்மை கூறப்பட்டிருக்கின்றது. அவ்வாறே, சிலரைப் புராணங்களிலும், சிலரை உப புராணங்களிலுமாக விஷ்ணு சிவன் என்ப

வர்களுக்கு வேறான கணேசாதி தேவதைகளுக்கு ஈசுவரத்தன்மை கூறப்பட்டிருக்கின்றது. இவ்விதத்தால், வியாசர் வாக்கியத்தில் விரோதம் காணப்படுகின்றது.

அதற்குச் சமாதானம் இதுவாம்:—எல்லோரும் ஈசுவரர்களே யாவர். எந்தப் பிரகரணத்தில் பிற தெய்வம் நிந்திக்கப்பட்டிருக்கின்றதோ அதன் நிந்தையால் அதன் உபாஸனையை விடுதலில் வியாஸருக்கு அபிப்பிராய மில்லை. ஆனால், வைஷ்ணவ புராணத்திற் சிவாதி தேவதைகளின் நிந்தை விஷ்ணுவின் ஸ்துதியினால் விஷ்ணு வுபாசனையிற் பிரவிருத்தித்தற்கு ஹேதுவாம். அவ்வாறே, சிவ புராணத்திற்செய்த விஷ்ணுவாதிகளின் நிந்தையும் அவற்றின் உபாசனைகளை விட்டுவிட வேண்டுமென்னும் கருத்தன்று. ஆனால், அந்த நிந்தை சிவ உபாஸனையிற் பிரவிருத்தியுண்டாகும் பொருட்டாம். ஒரு பிரகரணத்தில் பிற தேவதையின் நிந்தை அதன் உபாஸனையைத் தள்ளுவதற்கா யிருக்கும் பக்ஷத்தில் எல்லாத் தேவதைகளி னுபாஸனைகளையுந் தள்ளும்படி நேரிடும். ஆகையால், அந்நிய தேவதையின் நிந்தை ஒன்றனது ஸ்துதியின் பொருட்டாம்; மற்றவற்றி னுபாஸனையை விட்டுவிடுவதன் பொருட்டன்று.

திருஷ்டாந்தம்:— வேதத்தில் அக்கினிஹோத்திரத்திற்கு இரண்டு காலங்கள் கூறப்பட்டிருக்கின்றன. ஒன்று சூரியோதயத்திற்கு முன்னும், மற்றொன்று சூரியோதயத்திற்குப் பின்னுமாம். அங்கு முற்காலப் பிரசங்கத்தில் பிற்காலம் நிந்திக்கப்பட்டிருக்கின்றது; பிற்காலப் பிரசங்கத்தில் முற்காலம் நிந்திக்கப்பட்டிருக்கின்றது. அங்கு அக்கினிஹோத்திரத்தை விட்டுவிட வேண்டுமென்னும் அபிப்பிராயம் நிந்தைக் கிருக்குமாயின், இவ்விரண்டு காலங்களிலும் ஹோமத்தை விட்டுவிடும்படி நேரிடும். நித்திய கர்மத்தை விடுதல் பொருந்தாது. ஆகையால், முற்காலத்தினது ஸ்துதியின் பொருட்டுப் பிற்கால நிந்தையும், பிற்கால ஸ்துதியின்பொருட்டு முற்கால நிந்தையுஞ் செய்யப்பட்டிருக்கின்றன. அங்ஙனமே, ஒரு தெய்வத்தி னுபாஸனாப் பிரசங்கத்தில் பிறதேவதையின் நிந்தைக்குத் தாற்பரியம் அத்தெய்வத்தின் ஸ்துதியிலாம்; பிற தெய்வத்தின் நிந்தையில் தாத்பர்ய மன்று

511. ஐந்து தேவதைகளி னுபாஸகரும் ஒரே (பிரஹ்மலோக) பலனை யடைதல்.

சாகார பேதத்தால் சிலர் உதயத்திற்கு முன் ஹோமஞ்செய்கின்றனர்; சிலர் உதயத்திற்குப் பின் செய்கின்றனர். இருவருக்கும் பலன் ஒன்றும். அதுபோல், இச்சா பேதத்தால் ஐந்து தேவதைகளுக்குள் எதை யுபாஸித்தாலும் ஐந்துபாஸனைகளாலும் பிரஹ்ம லோகமே யடையப்படும். அவ்விடத்தில் போகங்கள் அநுபவிக்கப்பட்டு விதேக மோக்ஷம் சித்திக்கின்றது. விஷ்ணு முதலிய தேவதைகளி னுபாஸனையால் வைகுண்டாதி லோகங்கள் அடையப்படு மென்று புராணங்களிற் கூறப்பட்டிருக்கின்றது. பிரஹ்ம லோகம் அடையப்படுவதாகக் கூறப்பட வில்லையாயினும், உத்தம உபாஸர்கள் விதேக முக்திக்கு அதிகாரிகளா யிருக்கின்றமையின், தேவ யாந மார்க்கமாக அவர்கள் பிரஹ்ம லோகத்திற்கே போகின்றார்கள். ஆனால், ஒரே பிரஹ்ம லோகம் விஷ்ணு உபாஸகனுக்கு வைகுண்டரூபமாயும், அங்குள்ளவர்கள் சதுர்ப்புஜபார்ஷத் ரூபங்களோடு கூடினவர்களாயும் பிரதீதியாகின்றார்கள்; தானுஞ் சதுர்ப்புஜ மூர்த்தியாகவே யாகின்றான். அங்ஙனமே, சிவோபாஸகனுக்குப் பிரஹ்ம லோகமே சிவ லோகமாகவும், அங்குள்ளோர் திரிநேத்திர ஸ்வரூபிகளாகவும் பிரதீதியாகின்றார்கள்; தன்னையும் அப்படியே காண்கின்றான். இவ்விதமாக எல்லா உபாஸகர்களுக்கும் பிரஹ்ம லோகமே தமது உபாஸ்யத்தின் லோகமாகக் காணப்படுகின்றது. ஏனெனின், இது நியமமாம்.—தேவ யாந மார்க்கமின்றி வேறு மார்க்கத்தாற் செல்லுகின்றவன் மீண்டும் சம்சாரத்திற்கு வருகின்றான். தேவ யாந மார்க்க மொன்றே பிரஹ்மலோகத்திற்குச் செல்லும் மார்க்கமாம். ஆகையால், விதேக மோக்ஷத்திற்கு யோக்கியர்களாகிய உபாசகர்க ளெல்லாம் பிரஹ்ம லோகத்திற்குப் போகின்றார்கள். அந்தப் பிரஹ்ம லோகத்தில், உபாஸகனுடைய இச்சாநுசாரமாகச் சகல சாமக்கிரிகளுடன் கூடியதாக அவனுக்குப்பிரதீதியாகும்படியான இத்தன்மைய அற்புத மகிமை இருக்கின்றது.

இவ்விதத்தால், ஐந்து தேவதைகளின் உபாஸனைகளுக்கும் பல னொன்றே யாம்.

512. ஒரே பரமாத்மாவினிடத்தில் நாநா நாம ரூபங்கள் சம்பவிக்கின்றன.

அதில் இந்தச் சங்கை யுண்டாகின்றது:—ஐந்து தேவதைக ளுக்கும் நாம ரூபங்கள் வெவ்வேறாய்க் கூறப்பட்டிருக்கின்றன. ஈசுவரனோ ஒருவன். ஒரு ஈசுவரனுக்கு நாநா ரூபங்கள் சம்பவியா.

அதற்குச் சமாதானம் இதுவாம்:—பரமார்த்தமாக நாம ரூபங் கள் எவையும் பரமாத்மாவினிடத்தி லில்லை. மந்த புத்தி யுள்ளவர் களது உபாஸனையின் பொருட்டு நாம ரூப ரகித பரமாத்மாவிற்கு மாயையினு லாக்கப்பட்ட கற்பித நாம ரூபங்கள் கூறப்படுகின் றன. ஆகையால், ஒரே பரமாத்மாவினிடத்தில் மாயையாற் கற்பிக்கப்பட்ட நாம ரூபங்கள் அநேகம் பொருந்துகின்றன. இவ் விதத்தால் சர்வ புராண வாக்கியங்களின் விரோதமும் நிவிருத்தி யாய் விடுகின்றது.

513. எல்லாப் புராணங்களுக்கும் காரண காரியப் பிரஹ்மங்களினது உபாஸனையின் கிரமத்தால் கொள்ளப்படுந் தன்மையிலும் தள்ளப்படுந் தன்மையிலும் தாற்பரிய மாதல்.

புராண வாக்கியங்களி லுண்டாம் விரோத சங்கைக்கு முக்கிய சமாதானம் இதுவாம்:—விஷ்ணு, சிவன், கணேசன், தேவி, சூரியன் முதலிய ஒவ்வொன்றன் நாமம் யாவும் காரணப் பிரஹ்மத்தினதும், காரியப் பிரஹ்மத்தினது மாம். மாயா விசிஷ்ட காரணத்தைப் பிரஹ்ம மென்கின்றார்கள். காரியமான ஹிரண்யகர்ப்பனையும் பிரஹ்ம மென்கின்றார்கள். இவ்விதமாகக் காரணப் பிரஹ்மத்தையும் காரியப் பிரஹ்மத்தையும் விஷ்ணு, சிவன், கணேசர், தேவி, சூரியன் என்னும் பதங்கள் அறிவிக்கின்றன. இவ்வாறே, இவ்வைந்து பதங்களுக்கும் நாராயணன், நீலகண்டன், விக்கிநேசன், சக்தி, பாநு முதலிய அநேகம் பரியாய பதங்க ளுள. அவை யாவும் காரண காரியப் பிரஹ்மங்க ளிரண்டையும் போதிக்கின்றன. சிலவிடத்துக் கார ணப் பிரஹ்மத்தையும், சிலவிடத்துக் காரியப் பிரஹ்மத்தையும் சந்தர்ப்பத்திற்குத் தகுந்தபடி போதிக்கின்றன. எங்ஙனம்:— ஸைந்தவ பதம், குதிரையையும் உப்பையும் அறிவிக்கின்றது; போஜந சந்தர்ப்பத்தில் அது உப்பையும், நடை சந்தர்ப்பத்தில்

குதிரையையும் அறிவிக்கின்றது. அதுபோல், வைஷ்ணவ புராணத்தில் விஷ்ணு - நாராயணன் முதலிய பதங்கள் காரணப் பிரஹ்மத்தையும், சிவன் - கணேசன் - சூரியன் முதலிய பதங்கள் காரியப் பிரஹ்மத்தையும் போதிக்கின்றன.

514. ஆதலால் வைஷ்ணவ கிரந்தங்களில் விஷ்ணுவின் ஸ்துதிக்கும் சிவாதிகளின் நிந்தைக்கும் வியாஸர் அபிப்பிராயம் இதுவாம்:— காரணப் பிரஹ்மம் உபாஸிக்கத் தக்கது; காரியப் பிரஹ்மம் உபாஸிக்கத் தக்க தன்று.

அங்ஙனமே, ஸ்கந்த புராணாதி சைவ கிரந்தங்களில் சிவன் மகேசன் முதலிய பதங்கள் காரணப் பிரஹ்மத்தையும், விஷ்ணு - கணேசன் - தேவி - சூரியன் முதலிய பதங்கள் காரியப் பிரஹ்மத்தையும் போதிக்கின்றன. ஆகையால், இந்தப் புராணங்களிலும் காரணப் பிரஹ்மத்தின் ஸ்துதியும், காரியப் பிரஹ்மத்தின் நிந்தையும் இருக்கின்றன.

அங்ஙனமே, கணேச புராணத்தில் கணேச பதம் காரணப் பிரஹ்மத்திற்கும், விஷ்ணு சிவன் முதலிய பதங்கள் காரியப் பிரஹ்மத்திற்கும் வாசகங்களாயின. ஆகையால், காரணத்தின் ஸ்துதியும், காரியத்தின் நிந்தையும் இருக்கின்றன.

அங்ஙனமே, காளி புராணத்தில் காளி தேவி முதலிய பதங்கள் காரணப் பிரஹ்மத்தையும், விஷ்ணு - சிவன் - கணேசன் - சூரியன் முதலிய பதங்கள் காரியப் பிரஹ்மத்தையும் போதிக்கின்றன. ஆகையால், காளி பதத்தி னறிவிக்கும் காரணத்தின் ஸ்துதியும், விஷ்ணு, சிவாதி பதங்களி னறிவிக்கும் காரியத்தின் நிந்தையு மிருக்கின்றன.

அங்ஙனமே, ஸௌர புராணத்தில் சூரிய பாநு முதலிய பதங்களால் காரணப் பிரஹ்மத்தின் ஸ்துதியும், விஷ்ணு - சிவன் முதலிய பதங்களால் காரியப் பிரஹ்மத்தின் நிந்தையும் போதிக்கப்படுகின்றன.

இவ்விதமாகச் சகல புராணங்களிலும் காரிய காரணங்களின் பெயர் வடிவ சங்கேத பேத மிருக்கின்றது; கொள்ளும்படியாயும் தள்ளும்படியாயு மிருக்கின்ற அர்த்தத்தில் பேத மில்லை. சகல புராணங்களிலும் காரணப் பிரஹ்மத்தி னுபாஸனை கொள்ளத்தக்க

தாம், காரியப் பிரஹ்மத்தி னுபாஸனை தள்ளத்தக்கதாம். ஆகையால், சகல புராணங்களும் ஒரே காரணப் பிரஹ்மத்தி னுபாஸியத் தன்மையினைப் போதிக்கின்றன. இவற்றிற்குத் தம்முள் விரோத மில்லை.

515. மூர்த்திப் பிரதிபாதநத்தின் அபிப்பிராயம்.

சதுர்ப் புஜ, திரி நேத்திர, ஸதுண்ட, அஷ்ட புஜாதி மூர்த்திகள் மாயையின் பரிணாமமாயும் சேதநத்தின் விவர்த்தமாயும் இருப்பதால், காரியங்களா யிருக்கின்றன. அவற்றிற்கும் உபாஸனை கூறப்பட்டிருக்கின்றதா மாயினும், அந்தச் சதுர்ப் புஜாதி மூர்த்திகளுக்கு மாயா விசிட்ட காரணத் தோடு விசாரிக்கு மிடத்துப் பேத மில்லை. ஆகையால், அவ் வாகாரங்களைப் பாதித்துக் காரண ரூபத்தால் அவற்றை உபாசிப்பதில் கருத்தாம். ஏனெனின், ஆகாரம் காரியமாம்; ஆகையால், அது துச்சமாம். காரணம் சத்தியமாம். எவனுடைய மந்தப் பிரஞ்ஞை ஆகாரத்திலேயே ஸ்திரமா யிருக்கின்றதோ அவன் சாஸ்திரத்திற் கூறப்பட்ட ஆகாரத்தையே உபாஸித்தல் வேண்டும். அதனாலும் பிரஞ்ஞை நிச்சலமாகிக் காரணப் பிரஹ்மத்தி னுபாஸனையில் ஸ்திரப்படுகின்றது.

516. காரணப் பிரஹ்ம உபாஸனை இவ்வாறு கூறப்பட்டிருக்கின்றது:- பிரஹ்மம் ஜகத்தின் காரணன், சத்திய காமன், சத்திய சங்கற்பன், சர்வஞ்ஞன், சுதந்திரன், சர்வப் பிரேரகன், கிருபாளு என் றிவ்வாறு ஈசுவர தர்மங்களைத் தியானித்தல் வேண்டும். மூர்த்தியைத் தியானித்தல் வேண்டு மென்பது சாஸ்திரத்தின் கருத் தன்று. சாஸ்திரத்தில் அநேக மூர்த்திகளைக் கூறியது உபாஸனையின்பொருட் டன்று. ஆனால், எல்லா மூர்த்திகளுங் காரணப் பிரஹ்மத்தி னுபலக்ஷணங்களே. எந்த வஸ்து எதன் ஏக தேசத்திலும், ஏககாலத்திலும் வியாவர்த்தகமாயு மிருக்கின்றதோ அது உபலக்ஷண மெனப்படும்.

எங்ஙனம் "காகமுடையது தேவதத்தன் வீடு" என்னும் வாக்கியத்தில் தேவதத்தன் வீட்டிற்குக் காகம் உபலக்ஷணமா யிருக்கின்றது. ஏனெனின், வீட்டின் ஒரு பக்கத்திலும் எப்போதாவதொரு காலத்திலும் காகம் உட்கார்ந்திருக்கின்றது, எப்போதும் உட்கார்ந்திருக்கின்ற தில்லை. மற்றக் கிரகங்களினின்றும் தேவதத்தனது கிரகத்தை வேறுபிரித் தறிவிக் கின்றதோ, அங்ஙனமே

ஜகத்தின் காரணம் பிஹ்மமாம். அதன் ஏகதேசத்தில் எப்போதாவது மூர்த்தி யிருக்கின்றது. சதுர்ப் புஜாதி மூர்த்திகள் காரணப் பிரஹ்மத்திலேயே இருக்கின்றன; வேறிடத்தில் இல்லை. ஆகையால், வியாவர்த்தகங்களா யிருத்தலால் உபலக்ஷணங்களா யிருக்கின்றன.

உபலக்ஷணத்தின் பிரயோஜநம் இதுவாம்:—விசேஷிய வஸ்துவினது ஸ்வரூபத்தின் ஞாந முண்டாம். எங்ஙனம், காகத்தால் தேவதத்தன் வீடு அறியப்படுகின்றதோ, காகத்தினுல் வேறு பிரயோஜன மில்லையோ, அங்ஙனமே சதுர்ப் புஜாதி ஆகாரங்களால் நிராகாரமான காரணப் பிரஹ்மத்தின் ஞாநமே உபாஸனையின் பொருட்டு மூர்த்தியைக் கூறுதலின் பிரயோஜநமாம்; வே றில்லை.

517. ஆகாரங்களில் ஆக்கிரக முள்ள சைவராதியர்க்குத் துக்கத்தி னடைவு.

மந்தப் பிரஞ்ஞை யுள்ளவர்கள் சாஸ்திரத்தின் கருத்தை யறியாமல் அந்த ஆகாரங்களில் ஆக்கிரகஞ் செய்கின்றூர்கள்; சியால ஸாரமேய நியாயத்தால் பரஸ்பரம் கலகஞ் செய்கின்றூர்கள்.

மனைவியின் சகோதரனைச் சியால னென்பர். நாயினை ஸாரமேய மென்பர். திருஷ்டாந்தத்தினை நியாய மென்பர். ஒருவனுடைய சியாலனுக்குப் பெயர் உத்பாலகன். அவன் விரோதியின் பெயர் தாவகன். அப்புருடன் வீட்டிலிருந்த நாய்க்குப் பெயர் தாவகன். மற்றொருவன் வீட்டிலிருந்த நாய்க்குப் பெயர் உத்பாலகன். அங்கு அப்புருஷனுடைய ஸ்திரீ முதல் முதல் வீட்டுக்குவந்தாள். அப்போது இரண்டுநாய்களும் பரஸ்பரம் எப்போதும் சண்டை செய்துகொள்ளும். அங்கு அந்த ஸ்திரீயின் பதி, மாமியார் முதலியோர் உத்பாலகனை வைது தம் தாவகனைப் பெருமைப் படுத்துவார்கள். அப்போது அந்த ஸ்திரீக்கு என் சகோதரனை வைது அவன் சத்துருவைப் பெருமைப் படுத்துகின்றூர்கள் என்னும் மயக்க முண்டாயிற்று. அதனுல், தூஷிக்கப்பட்டவளாய்க் கணவனேடு பிணங்கினுள். எங்ஙனம் அவர்களது அபிப்பிராயத்தை யறியாமல் சமமான பெயராற் பிரமித்து ஸ்திரீ துக்கமடைந்தனளோ, அங்ஙனமே வைஷ்ணவக் கிரந்தத்தில் சிவன் முதலிய பெயர்களால் காரியப் பிரஹ்மம் நிந்திக்கப்பட்டிருக்கின்ற

தென்னும் அபிப்பிராயத்தை யறியாமல் சைவர் முதலியோர் துக்கிக்கின்றனர். அங்ஙனமே, விஷ்ணு நாமத்தால் காரியப் பிரஹ்மம் நிந்திக்கப்பட் டிருக்கின்ற தென்பதை யறியாமல் வைஷ்ணவர்கள் துக்கிக்கின்றூர்கள். சகல புராணங்களுக்கும் அபிப்பிராயம் காரணப் பிரஹ்மம் உபாசிக்கத் தக்கது, காரியப் பிரஹ்மம் தள்ளத் தக்கது என்பதாம்.

மாயா விசிஷ்ட சேதநம் காரணப் பிரஹ்மமாம். மாயையா லுண்டான காரிய விசிஷ்ட சேதநம் காரியப் பிரஹ்மமாம் இவ்வர்த்தமே பாரத வியாக்கியாநத்தின் ஆரம்பத்தி லெழுதப்பட் டிருக்கின்றது. சகல வேதாந்தங்களின் சித்தாந்தமும் இதுவேயாம்.

518. உத்தர மீமாம்சையின் பிரமாணத் தன்மையும் மற்றவற்றின் அப்பிரமாணத் தன்மையும்.

சுபசந்ததி தன் குமாரன் வார்த்தையைக் கேட்டுப் புராணங்களின் விரோத சங்கைக்குச் சமாதாந மடைந்து மநத்திற் சுகமடைந்தான். ஆறு சாஸ்திரங்களின் பரஸ்பர விரோத சங்கை நீங்காமையால் அற்ப சுக முண்டாயிற்று; விசேஷ சுக முண்டாகவில்லை. அதனுல், எந்தச் சாஸ்திரார்த்தத்தை யங்கீகரிக்கலாமோ, அந்தச் சத்தியமான சாஸ்திரம் பாதென்று மைந்தனை வினுவினன்.

519. தர்க்க திருஷ்டி தன் தகப்பன் வார்த்தையைக் கேட்டுப் பரமப் பிரமாணமான வார்த்தையைக் கூறினுன். உத்தர மீமாம்சையி னுபதேசம் சிறிதும் வேத விருத்த மல்லவென்று கூறினுன். ஏனைய ஐந்து சாஸ்திரங்களும் வேத விருத்தங்களா யிருக்கின்றமையின், அவற்றை அசுத்த மென் றறிதல் வேண்டும். அவற்றுள், சில அம்சங்கள் வேதாநுசாரிகளா யிருக்கின்றமையின், மந்தாதிகாரிகள் அவற்றை யநுஷ்டிக்கின்றூர்கள்.

ஆறு சாஸ்திரங்களின் கர்த்தா சர்வஞ்ஞ ரெனப்படுவர். சாங்கியத்தின் கர்த்தா கபில ராவர்; பாதஞ்சலத்தின் கர்த்தா பதஞ்சலி யாவர்; இவர் சேஷாவதாரமாம். நியாய சாஸ்திரத்தின் கர்த்தா கௌதம ராவர்; வைசேஷிக சாஸ்திரத்தின் கர்த்தா கணுத ராவர்; பூர்வ மீமாம்சையின் கர்த்தா ஜைமினி யாவர்; உத்தர மீமாம்சையின் கர்த்தா வியாச ராவர்.

இவ்வெல்லோரது மாகாத்மியமும் பிரசித்தமாம். ஆதலால், இவர்களுடைய வசநவடிவ சாஸ்திரங்கள் முற்றும் சமாநப் பிரமாண மாதல் வேண்டுமா மாயினும், சகல வாக்கியங்களினும் வேத வாக்கியம் பிரபலப் பிரமாணமா யிருக்கின்றது. ஏனெனின்,

வேதத்தின் கர்த்தா சர்வஞ்ஞன ஈசுவரன். அவரிடத்தில் பிராந்தி, சந்தேகம், விப்ரலிப்ஜை (வஞ்சகத் தன்மை) முதலிய தோஷங்கள் பொருந்தா. இந்தச் சாஸ்திரங்களின் கர்த்தாக்கள் ஜீவர்கள். இவர்களிடத்திற் பிராந்தி முதலிய தோஷங்கள் பொருந்தும்.

சாஸ்திரகாரர்களும் சர்வஞ்ஞர்களென்று கூறப்பட்டிருப்பினும், அவர்களுடைய சர்வஞ்ஞத் தன்மை யோக மாகாத்மியத்தா லுண்டா யிருக்கின்றது. ஆதலால், அவர்கள் யுஞ்ஜாந யோகிக ளாவர்.

ஈசுவரனுடைய சர்வஞ்ஞத் தன்மை ஸ்வபாவ சித்தமா யிருக்கின்றது. ஆகையால், ஈசுவரன் யுக்த யோகி யாவர்.

சிந்தனை செய்வதால் பதார்த்த ஞாந முண்டாகின்றவனுக்கு யுஞ்ஜாந யோகி யென்று பெயர்.

எவனுக்கு எப்போதும் ஏகரசமாய் எல்லாப் பதார்த்தங்களும் அபரோக்ஷமாய்ப் பிரதீதி யாகின்றனவோ அவனுக்கு யுக்த யோகி யென்று பெயர். இத்தன்மையன் ஈசுவரனவன்.

யுக்த யோகியாற் செய்யப்பட்ட வேத வசநம் பிரபலமாம்.

யுஞ்ஜாந யோகிகளாற் செய்யப்பட்ட சாஸ்திர வசநம் துர்ப்பலமாம்.

**520.** ஆகையால், வேதாநுசாரமான சாஸ்திரம் பிரமாணமாம்; வேத விருத்தம் அப்பிரமாணமாம். ஐந்து சாஸ்திரங்கள் எங்ஙனம் வேத விருத்தமோ, அங்ஙனமே, சாரீரகாதி கிரந்தங்களில் ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டிருக்கின்றது. உத்தர மீமாம்ஸை எந்த அம்சத்திலும் வேத விருத்த மன்று. ஆகையால், அது பிரமாணமாம். ஏனைய சாஸ்திரங்களும் சில அம்சங்களில் வேதாநுசாரியா யிருக்கின்றன வென்பதனைப் பார்த்து மந்த புத்தியுள்ளவர்கள் அவற்றில் விசுவாசஞ் செய்கின்றார்கள். ஆனால் அநேக அம்

சங்களில் (அவை) வேத விருத்தங்களா யிருக்கின்றமையின், தள்ளத் தக்கனவாம்; சில அம்சங்களில் வேதாநுசாரிகளா யிருப்பதால் கொள்ளத்தக்கனவா மாயின், ஜைந சாஸ்திரமும் அஹிம்சாம்சத்தில் வேதாநுசாரியா யிருக்கின்றது; அதுவும், அங்கீகரிக்கத் தக்கதாகும். ஆனால், ஜைந சாஸ்திரமோ தள்ளத்தக்கதே; அங்கீகரிக்கத் தக்க தன்று.

சுகதர் ஈசுவர அவதாரராவார். அவரைப் புத்தரென்று கூறுகின்றனர். அவருடைய வசநமும் வேதத்திற்குச் சமாநமான பிரமாண மாதல் வேண்டும். அங்ஙனமாயினும், விப்ரலிப்ஜையாகிய நிமித்தத்தால் சுகதர் புத்தரானார். ஆதலால், அவருடைய வசநம் எவ்விதத்தினும் அப்பிரமாணமேயாம். வஞ்சிக்கும் இச்சையினை விப்ரலிப்ஜை யென்பர். ஆகையால், எல்லா அம்சங்களினும் வேதத்தை அநுசரித்திருக்கின்ற உத்தர மீமாம்சையே எவ்விதத்தாலும் முமுக்ஷுவால் அங்கீகரிக்கத் தக்கதாம்.

உத்தர மீமாம்சை வியாசரால் சூத்திர ரூபமாகச் செய்யப்பட்டு அதன் வியாக்கியாநமும் அநேகரால் அநேகவிதமாய்ச் செய்யப்பட்டிருப்பினும், பூஜ்யபாதரான சங்கரராற் செய்யப்பட்ட வியாக்கியாநமே வேதாநுசாரியா யிருக்கின்றது; மற்றவையன்று. இது ஐந்தாவது தரங்கத்திற் பிரதிபாதநஞ் செய்யப்பட்டிருக்கின்றது. ஆதலின், ஏனைய ஐந்து சாஸ்திரங்களும் அப்பிரமாணங்களாம்.

### 521. அந்நிய சாஸ்திரங்களை விடுதலில் திருஷ்டாந்தமும் ஏதுவும்.

இந்தத் தரங்கத்தில் முன் சகல சாஸ்திரங்களும் மோக்ஷத்திற் குபயோகங்களென்று கூறியது தர்க்க திருஷ்டியின் சாரத்தைக் கிரகிக்கும் விவேகத்தாற் கூறியதாம். ஒருவனைச் சத்துரு கத்தியால் வீசினான்; அதனால் இரத்தம் வெளிப்பட்டுத் தெய்வகதியால் அவனது ரோகம் நிவர்த்தியாயிற்று. அப்போது சாரத்தைக் கிரகிக்கும் புருஷன் கத்தியை வீசினது தனக்கு உபகாரஞ் செய்ததாக நினைக்கின்றான். அதுபோல, அந்நிய சாஸ்திரங்களாலும் எவ்விதத்திலாவது அந்தக்கரணத்தின் சுத்தியும் நிச்சலத்தன்மையும் உண்டாய்ப் புருஷன் நிவிருத்தி யடைந்து வேதாநுசாரமான நிச்சயம் செய்யின் மோக்ஷ முண்டாகும். முற்றும்

அவற்றிலேயே ஆக்கிரகஞ் செய்யின், அந்தகோலாங்கூலநியாயத்தினுல் அவன் அநர்த்தத்தை யடைவான். ஆகையால், சகல சாஸ்திரங்களையும் விட்டு அத்வைத வியாக்கியாநத்தின்படி உத்தர மீமாம்சை அங்கீகரிக்கத் தக்கதாம்.

**522.** அந்தகோ லாங்கூல நியாயம் இதுவாம்:—ஒரு தநிகனது ஆபரணம் பூண்ட புத்திரனைத் திருடர்கள் காட்டிற்குக் கொண்டுபோய் ஆபரணங்களைக் கழற்றிக்கொண்டு அவன் கண்ணைக் குத்தி விட்டுப்போய்விட்டார்கள். அப்பொழுது அழுது கொண்டிருந்த பாலகனைத் தயையற்றவனும் வஞ்சனை யுற்றவனுயு முள்ள ஒருவன் சந்தித்து, பலமும் உன்மத்தமு முள்ள ஒரு காளையின் வாலை அவனைப் பிடிக்கச் செய்து நீ இதன் வாலை விடாது பிடித்துக்கொண்டு போனுல் உனது கிராமத்தில் இது கொண்டுபோய் விடும் என்று கூறினுன். துயருற்ற பாலகன் அவன் வசநத்தில் விசுவாசம் வைத்துத் துக்கத்தினை அநுபவித்து நஷ்டமானுன். அங்ஙனமே, விஷய ரூப சோரன் விவேக ரூப நேத்திரத்தைக் கெடுத்துச் சம்சார ரூப வநத்தில் கொண்டுபோய் விடுகின்றுன். அப்போது தயையற்றவனும் வஞ்சகனுயு மிருக்கின்ற பேதவாதி அந்நிய சாஸ்திரங்களின் சித்தாந்தத்தில் அவனுக்கு விசுவாசம் வரும்படி செய்து என்னுடைய உபதேசமே உனக்குப் பரமசுகப் பிராப்திக்குக் காரணமாகும், அதனை விடாதே யென்று கூறுகின்றுன். அவன் வாக்கியத்தில் விசுவாசம் வைத்துப் புருஷார்த்த சுக மின்றியவனுய் ஜநந மரண ரூப மகத்தான துக்கத்தை யநுபவிக்கின்றுன். ஆகையால், அந்நிய சாஸ்திரங்கள் தள்ளத் தக்கனவாம்.

**523.** இராஜா இறத்தலும், பிரஹ்ம லோக மடைதலும்.

இவ்விதமாகச் சுபசந்ததி யென்னும் அரசன் தர்க்க திருஷ்டியின் வசநத்தைக் கேட்டுச் சகல சந்தேகங்களும் துக்கங்களு மற்றவனுய்ப் பூரணுநந்தத்தை யடைந்தான். காரணப் பிரஹ்ம வுபாசனை செய்து சித்தத்தை ஸ்திரப்படுத்தினுன். தர்க்க திருஷ்டியைத் தன்னுண்மையான குருவாகப் பாவித்து ராஜ்ய முழுமையும் அவனுக்குக் கொடுத்தான். தர்க்கதிருஷ்டி புத்திரனுயினும், உத்தமமான உபதேசத்தைச் செய்தமையின், அவன் குரு பதவியை யடைந்தான். இது பிரஹ்ம வித்தையின் மாகாத்மியமாம்.

524. சில காலஞ் சென்ற பின் அரசன் தன் பிராணனை விட்டு முநிக ளடையும் பிரஹ்ம லோகத்தை யடைந்தான். அரசனுடைய மரணத்திற்குத் தேச காலங்கள் கூறப்பட வில்லை. அதற்கு அபிப்பிராயம் இதுவாம்:—உபாசகனுடைய மரணத்தில் தேச காலங்களின் அபேக்ஷை யில்லை. பகலி லிறந்தாலும், இரவி லிறந்தாலும், தக்ஷிணாயநத்தி லிறந்தாலும், உத்தராயணத்தி லிறந்தாலும், சுத்தமான இடத்தில் அல்லது அசுத்தமான விடத்தி லிறந்தாலும், எவ்விதத்தினாலும் உபாசனையின் பலத்தால் (உபாசகனுக்கு) தேவயாந மார்க்க வாயிலாகப் பிரஹ்ம லோகத்தின் அடைவுண்டாகின்றது. அதிருஷ்டியின் பிரசங்கத்தில் முன் எந்தத் தேச காலங்களின் அபேக்ஷை கூறப்பட்டதோ அது யோகத்தோடு கூடிய உபாசகனுக்குக் கூறியதாம். கேவலம் ஈசுவரனைச் சரண மடைந்த உபாசகனுக்குத் தேச காலங்களின் அபேக்ஷை யில்லை. இந்த அர்த்தத்தைச் சூத்திரகாரரும் பாஷ்யகாரரும் பிரதிபாதநஞ் செய்திருக்கின்றார்கள்.

### 525. தர்க்க திருஷ்டியின் தேகம் விழுதலும், பரமாத்மாவோடு அபேத மாதலும்.

அப்போது தர்க்க திருஷ்டி இராஜ்ய காரியங்களெல்லாவற்றையுங் கவனமாய்ச் செய்தான்; அவற்றிற் சிறிதும் பற்று வைக்கவில்லை; பிரஹ்ம நிச்சயத்தினையே கொண்டிருந்தான்; பிராரப்தம் முடியவே நிச்சல வீட்டை யடைந்தான். ஆத்மா அஃதாவது கூடஸ்த சாக்ஷி பரமாத்மாவி லைக்கிய மடைந்தது, தேகம் சாம்பலாய் விட்டது. கூடஸ்தனுக்குப் பரமாத்மாவுடன் எப்போதும் அபேதமிருப்பினும், உபாதியினாலாகிய பேத மிருக்கின்றது; உபாதி லயத்தால் அதனாலாகிய பேதத்தி னபாவ முண்டாகின்றது.

பரமாத்மாவோடு அபேதம் கூறியதன் அபிப்பிராயம் இதுவாம்:—விதேக முக்தியில் ஈசுவரனோடு அபேதஞ் சித்திக்கின்றது; சுத்த சேதநமாகிய பிரஹ்மத்துடன் அபேதஞ் சித்திக்கின்றதில்லை. இது சாரீரக பாஷ்யத்தின் 4-வது அத்தியாயத்தில் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது. ஆண்டு இது பிரசங்கமாம்:—

விதேக முக்தியில் சத்திய சங்கற்பாதிகளின் அடைவு ஜைமிநி மதத்திற் கூறப்பட்டிருக்கின்றது; ஔடுலோமி மதத்தில் சத்திய சங்கற்பாதிகளின் அபாவம் கூறப்பட்டிருக்கின்றது.

சித்தாந்த மதத்தில் சத்திய சங்கற்பாதிகளின் பாவாபாவங்களிரண்டும் கூறப்பட்டிருக்கின்றன. அதற்கு அபிப்பிராயம் இதுவாம்:—(விதேக முக்தியில்) ஈசுவரனோடு அபேத முண்டாகின்றது. ஈசுவரனது சத்திய சங்கற்பாதிகள் முக்தனிடத்து அந்நிய ஜீவர்களால் வியவகரிக்கப்படுகின்றன. அந்த ஈசுவரன் பரமார்த்த திருஷ்டியாற் சுத்தர்; அவரிடத்தில் ஒரு குணமு மில்லை; ஆனல், அவர் நிர்க்குணர்; ஆகையால், சத்திய சங்கற்பாதிக ளில்லை.

சம்சார தசையிலும் ஜீவன் பரமார்த்தமாக நிர்க்குணமும் சுத்தமுமா மாயினும், அவனுக்குச் சம்சார தசையில் அவித்தையால் கர்த்திருத்துவ போக்திருத்துவங்கள் பிரதீதியாகின்றன.

ஈசுவரனுக்கு எக்காலத்திலும் தன்னிடத்திலாவது வேறிடத்திலாவது சம்சாரம் பிரதீதியாகின்ற தில்லை. ஆகையால், ஈசுவரன் எப்போதும் அசங்கனும், நிர்க்குணனும், சுத்தனு மாகின்றான். ஆகவே, ஈசுவரனோடுள்ள அபேதமே சுத்தப் பிரஹ்மத்தோ டுள்ள அபேதமாம்.

ஈசுவரனோடுள்ள அபேதத்தினைச் சுத்தப் பிரஹ்மத்தோடுள்ள அபேத மென்று கொள்ளாவிடின், ஈசுவரனுக்குச் சுத்தப் பிரஹ்மத்தின் பிராப்தி ஒருகாலத்து முண்டாக மாட்டாது; ஏனெனின், ஜீவனைப் போல் ஈசுவரனுக்கு உபதேசத்தா லுண்டாகும் ஞானமும், விதேக மோக்ஷமும் ஒருகாலத்திலு முண்டாகமாட்டா. எப்போது மடைந்துள்ள அவருடைய ரூபம் சுத்த மன்று; ஆதலால், ஜீவனிலும் குறைவாக ஈசுவரனும் சதா பத்த (கட்டுண்டோ) னென்று சித்திக்கும். ஆகையால், இது கொள்ளத்தக்கதாம்:—

ஈசுவரனுக்கு ஆவரண மில்லை; ஆகையால், உபதேச ஞானங்களின் அபேக்ஷை யில்லை; ஆவரண மில்லாமையாற் பிராந்தி யில்லை; ஆதலால், ஈசுவரன் நித்திய ஸர்வஞ்ஞன்; நித்தியமுக்தன். மாயையும் அதன் காரியமும் ஆத்மாவினிடத்திற் பிரதீதியாகின்ற தில்லை; ஆகையால், சதா அசங்கன்; இதனாலேயே சுத்தன்.

இவ்வாற்றால், ஈசுவரனோ டுண்டாம் அபேதமே சுத்த சேதனத்தோ டுண்டாம் அபேதமாம்.

திருஷ்டாந்தத்தினாலும் ஈசுவரனோடே அபேதஞ் சித்திக்கின்றது. எங்ஙனம் மடத்திற் கடாபாவ முண்டாகுமாயின், மடாகாசத்தில் கடாகாசம் லயமாகின்றது, மகாகாசத்தில் லயமாகின்ற தில்லையோ, அங்ஙனமே, வித்துவானுடைய சரீரம் ஈசுவரனாற் செய்யப்பட்ட பிரஹ்மாண்டத்தில் நஷ்டமாகின்றது. பிரஹ்மாண்டமெல்லாம் ஈசுவர சரீரமாகிய மாயையில் அந்தர்ப் பூதமா யிருக்கின்றது. வித்துவானுடைய ஆத்மா விதேக மோக்ஷத்தில் பிரஹ்மாண்டத்திற்கு வெளியிற் செல்லுவ தில்லை. ஆதலால், ஈசுவர

னோடு அபேதஞ் சித்திக்கின்றது. ஆனால், எங்ஙனம் மடாகாசத்தோடு கடாகாசத்திற்கு அபேதஞ் சித்திக்கின்றதோ அந்த மடாகாசம் மகாகாச ரூபமாகவே இருக்கின்றதோ, அங்ஙனமே ஈசுவரனோடு அபேத முண்டாகின்றது. இந்த ஈசுவரன் சுத்தப் பிரஹ்மமே யாவன். ஆதலால், சுத்தப் பிரஹ்மத்தின் பிராப்தி யுண்டாகின்றது.

526. இந்தப் பாஷா நூலைச் செய்ததன் பிரயோஜநம்.

இவ்விதமாக அநேக இரத்திநங்கள் அடங்கியதும் இரகசியமான வேத சித்தாந்தங்கள் அடங்கியதுமான விசாரசாகரஞ் செய்யப்பட்டு விவேகத்துடன் பிரகடநஞ் செய்யப்பட்டது.

வியாகரண சாஸ்திரம் முழுமையும் படித்தேன்; சாங்கிய நியாய சாஸ்திரங்களையும் மிகு சிரமப்பட்டுப் படித்தேன்; அத்வைதக் கிரந்தங்கள் முழுமையும் படித்தேன்; படிக்காத கிரந்தமொன்று மில்லை; கடிநமான அந்நிய மதஸ்தர்களுடைய சித்தாந்தங்களையும் பிரயாசத்துடன் ஆராய்ந்து பார்த்தேன்; வேதங்களையும் முழுகிப் பார்த்தேன்; அப்படிப்பட்ட நிச்சல தாசனாகிய என்னால் இந்தப் பாஷா கிரந்தம் செய்யப்பட்டது. இதை எழுதியதற்காக நான் வெட்கப்பட வில்லை. பரோபகார சிந்தையே இதனை எழுதியதற்குக் காரணமாம். வியாகரண மின்றி ஸ்மஸ்கிருத கிரந்தங்களைப் படிக்கச் சக்தி யற்ற மந்த புத்தி யுள்ளவர்கள் இந்தக் கிரந்தத்தை அநாயாசமாகப் படித்துப் பரமாநந்தத்தை யடைவார்கள்.

527. மங்கலாசரண பூர்வகமான கிரந்த சமாப்தி.

தில்லிமா நகரத்தின் மேற் றிசையில் பதினெட்டுக் குரோசதூரத்திலுள்ள கிஹடௌலி யென்னும் ஊரில் இந்நூல் முற்றுப்பெற்றது.

* அரிய ஞாநி விதேக முக்தியி லபேதப் படுவ னெதனோடு
பெரிய வந்தத் தாது ரூபப் பெயரை நான்கு வேதமுந்
தெரியத் துதிக்கு நாம ரூபஞ் செறிவெபி சாரி யுட்கலந்
தரிய வத்தி பாதிப் பிரியந் தாது பதத்தி னிலக்கியமாம்.

ஜீவந் முத்தி விதேக முத்தி வர்ணன மென்னும் பெயருள்ள

ஏழாந் தரங்கம் முற்றுப் பெற்றது.

**விசாரசாகரம் முற்றுப் பெற்றது.**

---

* ஞாநிகள் விதேக முத்தியில் எதனோடு அபேத மாகின்றார்களோ அந்தத் தாதுவின் ஆத்ம ஸ்வரூபத்தினை நான்கு வேதங்களும் துதிக்கின்றன. நாம ரூபமான வியபிசாரியில் உட்கலந்துள்ள ஏகமான உவமையற்ற அஸ்தி பாதிப் பிரிய வடிவம் தாது பதத்தின் இலக்ஷியமாம்.

# திருக்குறள்

## பரிமேலழகருரை

தெளிபொருள் விளக்கம், கருத்துரை, குறிப்புரை.

திருத்தமான 2 - வது பதிப்பு

இங்கிலீஷ் மொழிபெயர்ப்புடன்

பண்டிதர் - ஸ்ரீமத் கோ. வடிவேலு செட்டியாரவர்களாலியற்றப்பட்டது.

இரண்டுவால்யம்

ரூபாய் 8—0—0.

---

## கைவல்லிய நவநீத வசனம்

**வினாவிடை ரூபமாயுள்ளது;**

விரைவுரையுடன் கூடியது;

பண்டிதர் ஸ்ரீமத் கோ. வடிவேலு செட்டியாரவர்களா
லியற்றப்பட்டது.

**ரூபாய் 2-8-0.**

---

## சிவப்பிரகாசப் பெருந்திரட்டு

(குறுந்திரட்டுடன்)

இது சொரூபாநந்தரால் திரட்டப் பட்டது;

இதுகாறும் வெளிவாராதது; சாஸ்திரரூபமாயுள்ளது.

**விலை ரூபாய் 3-0-0.**

---

## சர்வதரிசன சங்கிரகம்.

**ரூபாய் 2.8-0.**

இது ஸ்ரீ சங்கரபீடத் தாசிரியரா யெழுந்தருளியிருந்த ஸ்ரீவித்யா ரண்ய சுவாமிகளாலருளிச் செய்யப்பட்டது. இதில் உலகாயத முதல் அத் வைத வேதாந்த மீறாக 16-மத சித்தாந்தங்க ளடங்கியிருக்கின்றன. இது பிரஹ்மஸ்ரீ விஷ்ணுபுரம் ராமச்சந்திர சாஸ்திரிகளவர்களால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது; மதங்களின் சொரூபங்களையறிய விரும்பு வோர்க்குப் பெருங் கருவியாயுள்ளது.

சுவாமி விவேகாநந்தர்

## இராஜயோகம்.

இதுகாறும் தமிழில் வெளிவாராதது. நுபாய் ஒன்று.

இதில் ஸ்வாமி விவேகாநந்தர் 1893-வது வருஷத்தில் அமெரிக்காவில் செய்த அடியிற் குறிப்பிட்டிருக்கும் 8 உபந்யாசங்க ளடங்கி யிருக்கின்றன. குருமுகமாக அறிய வேண்டிய பல அரிய விஷயங்கள் மிகத் தெளிவாக விளக்கப்பட் டிருக்கின்றன.

(அவதாரிகை, முதற் சோபானங்கள், பிராணன், அத்யாத்மப் பிராணன், அத்யாத்மப் பிராண நியமனம், பிரத்யாகாரம்-தாரணை, தியாந-சமாதி, இராஜயோகச் சுருக்கம்).

---

## மெய்ஞ்ஞான போதம்.

இது 1911-வது வருடத்து லோகோபகாரியின் முதற்பக்கத்திற் பிரசுரமான வேதாந்த விஷயங்கள் அடங்கிய புத்தகம். இதில் 52 வேதாந்த உபந்யாசங்க ளிருக்கின்றன; இஃது உபசாந்தத்திற் கேதுவான ஆத்மாநாத்ம விவேகத்தை யுண்டாக்குவதற்குப் பரமசாதனமாயுள்ளது. 0-12-0.

---

## தர்க்கபரிபாஷை.

இது நியாய சாஸ்திரத்தை யநுசரித்துப் பிரமாண முதல் நிக்கிரக ஸ்தான மீறாகப் பதினாறு பாதார்த்தங்களை நிரூபிப்பது. பண்டிதர் - ஸ்ரீமத் கோவடிவேலு செட்டியா ரவர்களா லியற்றப்பட்ட விரிவான குறிப்புரையுடன் கூடியது. ராயல் 16 பக்க அளவில் 420 பங்கங்கொண்டது. 1-0-0.

---

## திருவாசகம்.

இது பிழையறப் பரிசோதித்து,

கிளேஸ் கடிதத்தில் அச்சிடப் பட்டுள்ளது.

பாக்கெட் சைஸ் $5\frac{1}{2}$X$3\frac{1}{2}$ அங்குல அளவு.

காலிகோ பைண்ட் - அணா பன்னிரண்டு.

---

## வேதாந்த பரிபாஷை.

இது வேதாந்த வித்வத் சிரோமணி யென்று மிகப் பிரசித்தி பெற்றுள்ள தர்மராஜ தீக்ஷிதரா லியற்றப்பட்டது. இஃதெட்டுப் பரிசேதமுடையது. இதனால் வேதாந்தத்திற்குரிய பிரமாணங்க ளிவ்வளவென்பதும் அவற்றின் பயனும் தெளிவாயறிந்து கொள்ளலாம். 0-10-0.

---

## வியாச தாத்பர்ய நிர்ணயம்.

சம்ஸ்கிருதத்தில் அய்யண்ண தீக்ஷிதரென்னும் பெயரிய வித்வானால் வசந வடிவமாக இயற்றப்பட்டுள்ளது. இதன் முதற் பரிச்சேதத்தில் சகல வாதிகளையும் பக்ஷபாத மின்றி வாதி பிரதிவாதி மத்தியஸ்த

பூர்வகம் கண்டித்து வியாச பகவானது தாத்பர்யம் அத்வைதமே என ஸ்தாபிக்கப்பட் டிருக்கின்றது. இரண்டாம் பரிச்சேதத்தில் பிரஹ்மப் பிராப்தி அமூர்த்தரூப சுகுணப் பிரஹ்மத்தானேயே ஆகும் என மற்றை யோர்களைக் கண்டித்து நன்கு ஸ்தாபிக்கப்பட் டிருக்கின்றது. இது கோவிலூர் ஸ்ரீ காசிகாநந்த சுவாமிகளால் தமிழில் வசந வடிவமாக மொழி பெயர்க்கப்பட் டிருக்கின்றது. வேதாந்திகள் பிற மதஸ்தரைக் கண்டித்தற்கு இந்நூல் இன்றி யமையாததாகும். 0—8—0.

---

## நைஷ்கர்ம்ய சித்தி.

இது சர்வ தர்சனங்களுக்கும் வியாக்யானஞ் செய்த சுரேஸ்வராச்சாரியா ரவர்களால் செய்யப்பட்டது. இந்நூலில் மோட்சத்திற்குக் கர்மம் சாதகம் அன்று என்பதை நான்கு அத்தியாயங்களால் கத்திய பத்திய வடிவமாக நன்கு நிரூபிக்கப் பட்டிருக்கின்றது. இக் கிரந்தந்தான் சம்ஸ் கிருதத்திலுள்ள பஞ்சசித்திகளுள் (நைஷ்கர்ம்ய சித்தி, இஷ்ட சித்தி, அத்வைதப் பிரஹ்ம சித்தி, அத்வைத சித்தி, சுவாரஜ்ய சித்தி) முதன் முதல் செய்ததாம். இது சம்ஸ்கிருதத்தில் மிகு பிரசித்தமும் கம்பீரமுமா யிருப்பதை நோக்கித் தமிழ் மக்கட் குபயோகமாமாறு ஸ்ரீ கோவிலூர் காசிகாநந்த சுவாமிகளால் வசநவடிவமாக மொழிபெயர்க்கப்பட் டிருக் கின்றது. இதுகாறும் தமிழில் வெளிவந்திருக்கும் விசாரசாகர முதலிய லட்சண கிரந்தங்கட் கெல்லாம் இதுவே மூலமாம். 0—8—0.

---

## சுவராஜ்ய சித்தி.

இந்நூல் பெரிய ஞாந வாசிட்டம் 32000 சுலோகங்களுக்கும் அரும்பெரும் வியாக்யாநஞ் செய்த ஸ்ரீ ஆநந்த போதேந்திர சரஸ்வதி சுவாமிகளினால் மூன்று பிர்கரண ரூபமாக வியற்றப்பட்டது. இதில் வேதாந்த விஷயங்கள் மந்தரு முணருமாறு நன்கு பிரதிபாதிக்கப்பட் டிருக்கின்றன. இதற்குக் கல்பத்ருமம் என்னும் பெரிய வியாக்கியாநமும் மற்றொரு சிறிய வியாக்யாநமு மிருக்கின்றன. இதனை வாங்கி வாசிப் போர் அடிமைத் தன்மையினின்றும் நீங்கி, சுதந்தரத் தன்மையினை யடைவர். இதனருமை கருதி ஸ்ரீ கோவிலூர் - காசிகாநந்த சுவாமிக ளவர்களால் இது மிக லலிதமான வசந நடையில் மொழிபெயர்க்கப்பட் டிருக்கின்றது. இந்நூ லிச்சமயம் மறந்துங் கைவிடாது வாசித்தற்குரிய தாம். 0—8—0.

---

## சித்தாந்த பிந்து.

இது ஸ்ரீ சங்கரபகவத் பாதாசாரிய சுவாமிகள் அருளிச் செய்த தச சுலோகியின் வியாக்கியாநமாம். இவ்வியாக்கியானஞ் செய்தவர் ஆரிய பாஷையில் மகாக்கியாதிபெற்ற மதுசூதன சரஸ்வதி சுவாமிகளாவர். இந்நூல் ஆத்மா இன்னது அநாத்மா இன்னது என்பது பற்றிச் சுருதியாதிப் பிரமாணங்களுடன் யுக்தி சகிதமாக நன்கு விளக்கிக் கூறு கின்றமையின் வேதாந்த சாஸ்திரத்திற்கு ஒரு திறவுகோல் போல்வதாம்.

விலை அணா எட்டு.

## வேதாந்த டிண்டிமம்-(வேதாந்தப் பேரிகை).

இது சம்ஸ்கிருதத்திலிருந்து கோவிலூர் ஸ்ரீ சுப்பய்ய சுவாமிகளால் மூலஞ் செய்யுள் வடிவமாயும் அதை விளக்கத் தெளிவான உரையு மியற்றப்பட் டிருக்கின்றது; வேதாந்த அப்பியாசிகள் ஒவ்வொருவரிடத்தும் அவசிய மிருதத்தற் குரியதாம். இதுகாறும் தமிழில் வாராதது. 0-4-0.

---

(சுக்ல யஜுர்வேதத்திலுள்ள)

## மண்டலப் பிராஹ்மணோபநிஷத்தும்

## ராஜயோக பாஷ்யமும்.

இதன் கண் ஐந்து பிராஹ்மணங்க ளிருக்கின்றன; ராஜயோக சம்பந்தமான விஷயங்கள் மிகத் தெளிவாகக் கூறியிருக்கின்றமை நோக்கி ஸ்ரீ சதாநந்த அவதூதரால் இதற்கு அதி லலிதமான பாஷ்யம் ஒன்றியற்றப்பட் டிருக்கின்றது. இதன்கண் ராஜயோக தத்துவங்களோடு வேதாந்த தத்துவங்களும் அதி வெளிப்படையாக விளக்கப்பட் டிருக்கின்றன. இதனருமையை நோக்கித் தமிழ் மக்கள் யோக தத்துவத்தை அநாயாசமாக உணருமாறு மண்டலப் பிராஹ்மணோப நிஷதமும், அதன் வியாக்யானமாய ராஜயோக பாஷ்யமும் செவ்விய வசன வடிவமாக ஸ்ரீ கோவிலூர் காசிகானந்த சுவாமிகளவர்களால் மொழி பெயர்க்கப்பட் டிருக்கின்றன. யோகாப்பியாசிகட்கு இந்நூல் போல் எந்நூலும் பயன் தாராதாம். 0—4—0

---

## வேதாந்த சஞ்ஞா.

இந்நூல் ஹிந்தி பாஷையிலுள்ள பதார்த்த மஞ்சூஷாவின் மூலமாம்; தமிழில் வசந வடிவமாக மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இதில் வேதாந்தத்தின் பிரக்கிரியைகளெல்லாம் செவ்வனே விளக்கப்பட் டிருக்கின்றன. வேதாந்த சூடாமணி முதலிய நூல்களை வாசிப்பதற்குச் சிறந்த கருவியா யிருப்பது. விலை அணா இரண்டு.

---

## தேசிங்கு ராஜன்.

உயிரைத் திரணமென மதித்து, சாகும் வரையில் தன் பத்நி முகத்தையும் பாராது வீர தீரங் காட்டிப் போர்புரிந்த பாரத புத்திரனின் உண்மைச் சரித்திரம். கடைகளில் கிடைக்கும் நங்கைப் பாட்டைப் போன்ற தன்று. எப்-ஏப் பரீக்ஷைக்குப் பாட புத்தகமாக வைக்கப்பட்டது. விலை அணா எட்டு.

